بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ



## சூரத்து அன்ஆம் -ன் சிறப்புகள் :-

இந்த சூரத்து அன்ஆம் முழுவதும் மக்கமா நகரில் ஒரே ஓர் இரவில் மொத்தமாக அருளப்பட்டது. இதனுடன் 70 ஆயிரம் மலக்குகள் வானம் பூமி ஆகிய இரண்டிலும் நிரம்பியவர்களாகவும் தஸ்பீஹ் , தஹ்மீது தம்ஜீது ஆகியவற்றைச் சப்தமிட்டு ஓதுபவர்களாகவும் வந்தார்கள். இவர்களது சப்தத்தால் பூமியும் கூட தழும்பியது. மேலும் அடிவானத்தை அடைத்து கொள்ளுமளவிற்கு மலக்குகள் வருகை தந்தார்கள்' அப்பொழுது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சுப்ஹான றப்பியில் அலீம், சுப்ஹான றப்பியில் அலீம் என்று கூறி இறைவனுக்கு சுஜூது செய்தார்கள். என்று நபி (ஸல்) கூறினார்கள். அறிவிப்பாளர் : இப்னு உமர் ரலி அவர்கள் ( நூல்: தப்ரானீ )

எவர் சூரத்துல் அன்ஆமை ஓதுகிறாரோ அவருக்காக அந்த 70 ஆயிரம் மலக்குகளும் அந்த இரவிலும் பகலிலும் ஸலவாத்துச் சொல்கிறார்கள் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறி, பின்னர் வஹியை எழுதிவைப்பவர்களை அழைத்து, அது அருளப்பட்ட அதே இரவில் அந்த அன்ஆம் சூரா முழுவதும் எழுதும்படி கட்டளையிட்டார்கள் என்று கூறப்படுகிறது.

எவர் சூரத்துல் அன்ஆமின் முதல் மூன்று ஆயத்துகளை ஓதுகிறாரோ, அவர் ஓதிய அன்றைய காலையில் அவரைச் சகல தீங்குகளையும் விட்டுக் காக்க 70ஆயிரம் மலக்குகளை அல்லாஹுத்தஆலா அவர் மீது நியமிக்கிறான். கியாமத்துநாள் வரை அந்த மலக்குகள் செய்யும் அமல்களைப்போல்,அவருக்கு நன்மையை எழுதுகிறான். தவிர, அவரது இருதயத்தில் ஷைத்தான் ஒரு தீங்கைப்போட நாடினால், அவர் போடும் போதெல்லாம் ஏழாவது வானத்திலிருந்து ஒரு மலக்கு இரும்பு வலயங் கொண்டு வந்து ஷைத்தானை அடித்து, அந்த ஷைத்தானுக்கும் அவருக்குமிடையில் 70 ஆயிரம் திரைகளை ஏற்படுத்துகிறான்,
பின்னர், கியாமத்து நாளில் அவரை நோக்கி நாயன் "ஆதமுடைய மகனே! நீ எனது நிழலின் கீழில் நட, எனது சுவர்க்கத்துக் கனிகளைப் புசித்து, ஹௌதுல் கௌதரின் தண்ணீரை அருந்தி, ஸல் ஸபீல் என்னும் சுனையில் குளிக்கவும் செய்து கொள்ளலாம்.

நீ என்னுடைய அடிமை. நான் உனது நாயன். உனக்குக் கேள்வி கணக்குமில்லை வேதனையுமில்லை" என்று சொல்வான் என்று இமாமுல் வாஹிதீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தமது வஸீத் என்ற கிரந்தத்தில் கூறி இருக்கிறார்கள்.
அல்ஹம்துலில்லாஹ் - அல்லாஹ்வின் புகழைக் கொண்டு ஆரம்பிக்கும் 5 சூராக்களில் இரண்டாவது சூரா அல் அன்ஆம் சூராவாகும். இவ்வத்தியாயமான ஸூரத்து அன்ஆம் தொடக்கத்தில் தனக்குரிய புகழைக் கொண்டு (அல்ஹம்துலில்லாஹ்) ஆரம்பித்து, இதன் முடிவில் தன்னுடைய கிருபையின் உயர்வைக் கூறி முடிப்பது இவ்வத்தியாயத்தின் தனிச் சிறப்பாகும்.

கால்நடைகள் குறித்து அன்றைய அரபுகளிடம் பலவிதமான மூட நம்பிக்கைகள் இருந்தன. அவை இந்த அத்தியாயத்தின் 136, 138, 139, 143, 144 ஆகிய வசனங்களில் கண்டிக்கப்படுகிறது. எனவே இந்த அத்தியாயத்திற்கு அன்ஆம் (கால்நடைகள்) என்று பெயர் வந்தது

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள்:- அரபுகளின் மடமைத்தனத்தை நீங்கள் பார்க்க வேண்டும் என்று விரும்பினால் அன்ஆம் சூராவின் 130 ம் வசனத்திற்கு மேல் இருந்து 140 ம் வசனம் வரை படித்துப் பார்த்துக் கொள்ளுங்கள் ".

**ரஹ்மத்** ராஜகுமாரன்

+919360181033 +919486909903

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 84
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 1

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَجَعَلَ الظُّلُمٰتِ وَالنُّوْرَ ثُمَّ الَّذِيْنَ كَفَرُوْا بِرَبِّهِمْ يَعْدِلُوْنَ

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அவனே வானங்களையும், பூமியையும் படைத்தான்; இருள்களையும், ஒளியையும் அவனே உண்டாக்கினான்; அப்படியிருந்தும் நிராகரிப்பவர்கள் தம் இறைவனுக்கு(ப் பிற பொருட்களைச்) சமமாக்குகின்றனர்.
(குர்ஆன் : 6:1)
வானங்கள் :-
"எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அவனே வானங்களையும், பூமியையும் படைத்தான் " என்று மேற்கண்ட வசனத்தில் அல்லாஹ் வானத்தை ஒன்றுக்கு மேற்பட்ட பன்மையில் "வானங்கள்" என்றே குறிப்பிடுகின்றான். கீழ்க்கண்ட வசனங்களிலும் "வானங்கள் " என்றே குறிப்பிடுகிறான்.
ஏழு வானங்களும் பூமியும் இவற்றிலுள்ள அனைத்தும் அவனைப் புகழ்ந்து கொண்டே இருக்கின்றன. (இவற்றில்) ஒன்றுமே அவனைத் துதி செய்து புகழாதிருக்கவில்லை. எனினும், அவை துதி செய்து புகழ்வதை நீங்கள் அறிந்து கொள்வதில்லை. (குர்ஆன் : 17:44)
மனிதர்களே! இவ்வாறு நாம் உங்களை மட்டுமா படைத்திருக்கின்றோம் நிச்சயமாக உங்களுக்கு மேலுள்ள ஏழு வானங்களையும் நாமே படைத்தோம். (குர்ஆன் : 23:17)

அன்றி "ஏழு வானங்களுக்கும், மகத்தான அர்ஷுக்கும் சொந்தக்காரன் யார்?" என்று கேளுங்கள். (குர்ஆன் : 23:86)
அ(வ்விறை)வன் எத்தகையவன் என்றால் அவனே உலகத்திலுள்ள அனைத்தையும் உங்களுக்காகப் படைத்தான்; பின் அவன் வானத்தின் பக்கம் முற்பட்டான்; அவற்றை ஏழு வானங்களாக ஒழுங்காக்கினான். அன்றியும் அவனே ஒவ்வொரு பொருளையும் நன்கறிபவனாகவும் இருக்கிறான். (குர்ஆன் : 2:29)
பிறகு அவன் வானம் புகையாக இருந்தபோது (அதைப்) படைக்க நாடினான்; ஆகவே அவன் அதற்கும் பூமிக்கும்: “நீங்கள் விருப்புடனாயினும் அல்லது வெறுப்பிருப்பினும் வாருங்கள்” என்று கூறினான். (அதற்கு) அவையிரண்டும் “நாங்கள் விருப்புடனேயே வருகின்றோம்” என்று கூறின.
ஆகவே, இரண்டு நாட்களில் அவற்றை ஏழு வானங்களாக அவன் ஏற்படுத்தினான்; ஒவ்வொரு வானத்திற்கும் அதற்குரிய கடமை இன்னதென அறிவித்தான்; இன்னும், உலகத்திற்கு சமீபமான வானத்தை நாம் விளக்குகளைக் கொண்டு அலங்கரித்தோம்; இன்னும் அதனைப் பாதுகாப்பாகவும் ஆக்கினோம்; இது யாவரையும் மிகைத்தவனும், ஞானம் மிக்கோனுமாகிய (இறை)வனுடைய ஏற்பாடேயாகும். (குர்ஆன் : 41:11,12)

குர்ஆனில் பல வசனங்களில் கூறப்பட்டுள்ள ஸமாஉ (வானங்கள்) என்பது பூமிக்கு மேலுள்ள வானத்தையும் அதே நேரம் முழு பிரபஞ்சத்தையும் குறிக்கும். இடத்திற்கேற்ப அதன் பொருள் மாறும். இங்கு பூமியின் வளிமண்டலம் ஏழு அடுக்குகளாக படைக்கப்பட்டுள்ளதை குறிக்கிறது என்பது குர்ஆன் விஞ்ஞான ஆய்வாளர் ஹாரூன யஹ்யா குறிப்பிடுகிறார்.(அல்லாஹ்வே நன்கு அறிந்தவன்).
இன்று நவீன விஞ்ஞானம் பூமியின் வளிமண்டலம் ஒன்றன் மேல் ஒன்றாக வெவ்வேறு அடுக்குகளை கொண்டுள்ளதாக கூறுகிறது. அதில் காணப்படும் இரசாயனம் அல்லது காற்றின் வெப்பநிலைகளை கருதில் கொண்டு பூமியின் வளிமண்டலத்தை ஏழு மண்டலங்கள் அல்லது அடுக்குகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளது விஞ்ஞானம்
48 மணித்தியாளங்களுக்கான வானிலை முன்னறிவிப்பை கணிக்க பயன்படும் 'லிமிடட் பைன் மெஷ் மொடல்' (Limited Fine Mesh Model [LFMMII]) வளிமண்டலம் ஏழு அடுக்குகளை கொண்டுள்ளது என்று கூறுகிறது. நவீன தொழிநுட்பம் வளிமண்டலத்தை ஏழு அடுக்குகளாக பின்வருமாறு வகைப்படுத்தியுள்ளது.

1வது அடுக்கு : அயன மண்டலம் (Troposphere)
2வது அடுக்கு : படை மண்டலம் (Stratosphere)
3வது அடுக்கு : இடை மண்டலம் (Mesosphere)
4வது அடுக்கு : வெப்ப மண்டலம் (Thermosphere)
5வது அடுக்கு : புற மண்டலம் (Exosphere)
6வது அடுக்கு : அயன மண்டலம் (Ionosphere)
7வது அடுக்கு : காந்த மண்டலம் (Magnetosphere)
ஒவ்வொரு வானத்திற்கும் அதற்குரிய கடமை இன்னதென அறிவித்தான் என்று மேலுள்ள குர்ஆன் வசனம் கூறுகிறது. வேறு வகையில் கூறுவதென்றால் ஒவ்வொரு வானத்திற்கும் வெவ்வேறு கடமைகளை அல்லாஹ் கட்டளையிட்டுள்ளான்.
உண்மையில் பின்வரும் அத்தியாயங்களில் உலகிலுள்ள மனிதன் மற்றும் இதர உயிரினங்களுக்கும் பயன்தரக்கூடிய மிக முக்கிய கடமைகளை இவ்அடுக்குகள் செய்கின்றன என்பதை தெளிவாக விளங்கி கொள்வீர்கள்.

மழை உருவாவதிலிருந்து, பயங்கரமான கதிரியக்கங்களை தடுப்பது வரையும், வானொலி அலைகளை திரும்பி அனுப்புவது முதல் விண்கற்களால் ஏற்படும் பாதிப்புகளை தவிர்ப்பது வரையான ஒவ்வொரு அடுக்கிற்கும் தனித்துவமான செயற்பாடுகள் இருக்கின்றன
கீழுள்ள வசனங்களில் வளிமண்டலத்தின் அடுக்குகளின் தோற்றம் பற்றி கூறுகிறது:
ஏழு வானங்களை அல்லாஹ் எவ்வாறு அடுக்கடுக்காய் படைத்துள்ளான் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? (குர்ஆன் 71:15)

அவனே ஏழு வானங்களையும் அடுக்கடுக்காக படைத்தான் (குர்ஆன் 67:3)
இவ்வசனங்களில் பயன்படுத்தப்பட்டுள்ள 'திபாக்' என்ற சொல்லிற்கு 'அடுக்குகள்' என்பது பொருளாகும். அதாவது 'பொருத்தமான திரை' அல்லது 'ஒரு பொருளை மூடுவதை' குறிக்கும். இது மேலுள்ள அடுக்கு கீழுள்ள அடுக்கில் எவ்வாறு பொருந்தி வருகிறது என்பதை சுட்டிக் காட்டுகிறது.
மேலும் இங்கு 'அடுக்குகள்' என்று பன்மையாக பயன் படுத்தப்பட்டுள்ளதை நன்கு சிந்திக்க வேண்டும்.
மேற்கூறப்பட்ட வசனங்களிலுள்ள குறிப்பிடப்பட்டுள்ள ஏழு வானங்கள் என்பது எவ்வித சந்தேகமுமின்றி வளிமண்டலத்தை குறிக்கும் மிக பொருத்தமான சொல்லாக கருதப்படுகிறது.
20ம் நூற்றாண்டில் நவீன தொழிநுட்ப உதவியுடன் கண்டுபிடிக்கப்பட்ட இந்த உண்மையை 1400 வருடங்களுக்கு முன்னர் எவ்வித தொழிநுட்ப வசதிகளுமின்றி கூறுவதென்றால் அது நிச்சயமாக இறைவனின் சொல்லாகத்தான் இருக்க வேண்டும்.
ஆகவே, நீங்கள் இரு சாராரும் உங்கள் (இரு சாராருடைய) இறைவனின் அருட்கொடைகளில் எதைப் பொய்யாக்குவீர்கள்? (55:13)

....என்று பிரபல விளம்பரதாரர் ஹாருன் யஹ்யா பூமியின் வளி மண்டல 7 அடுக்குகளை யெல்லாம் ஒன்று கூட்டி 7 வானங்களாக உருவகப்படுத்தி கட்டுரை எழுதியிருக்கிறார்.மேலும் அவர் ...
குர்ஆனின் பல வசனங்களில் காணப்படும் "வானம்" என்ற சொல் முழு பிரபஞ்சத்தையும் வெளிப்படுத்தவும், பூமிக்கு மேலே உள்ள வளிமண்டலமாக சொர்க்கம் என்ற கருத்தை விவரிக்கவும் பயன்படுத்தப்படுகிறது.
இருப்பினும், வசனங்களின் விஷயத்தில் 41:11,12 இரட்டைச் சிந்தனை உள்ளது: ஏழு அடுக்கு வளிமண்டலத்தை நிரூபிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டால், ஹாருன் யாஹ்யா பூமியின் வளிமண்டலத்தை வானமாக புரிந்து கொள்ள வைக்கிறார்,

மேலும் "சூடான புகை" யிலிருந்து பிரபஞ்சத்தின் தோற்றத்தை நிரூபிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டால், ""
வானம்" என்பது ஒரு பரந்த பொருளாக உருவகப்படுத்துகிறார்.
"பிரபஞ்சம்", "அற்புதங்கள்" இரண்டிலும் ஒரே வசனம் பயன்படுத்தப்பட்டிருப்பதாக வசனத்தை 41:11
குறிப்பிடுகிறார்
எனவே ஹாரூன் யஹ்யாவின் கூற்றுப்படி ஒரு "அதிசயம்" மற்றொன்றின் அவரின் அதிசயத்தை விலக்குகிறது.
இந்த வழக்கில், வளிமண்டலத்தின் ஏழு அடுக்குகளைப் பற்றிய "அதிசயம்" "சூடான புகை" யிலிருந்து
பிரபஞ்சத்தை உருவாக்குவது பற்றிய "அதிசயம்" உடன் பொருந்தாது, ஏனெனில் அதே வசனம் அதே
வார்த்தையுடன் ஹாரூன் கட்டுரையில் பயன்படுத்தப்படுகிறது, மேலும் அதன் அர்த்தத்தை மாற்ற முடியாது.
இவரின் கருத்து ஹதீஸ் மற்றும் பிற வசனங்களுடன் முரண்பாடுகிறது. ஏழு வானங்களையும் பூமியின்
வளிமண்டலத்தின் ஏழு அடுக்குகளாகப் புரிந்துகொள்வது பின்வரும் உண்மையான ஹதீஸுக்கு முரணானது:
அப்துல்லாஹ் இப்னு மசூது (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

பூமியுடைய வானத்திற்கும், அதற்கடுத்து உள்ள வானத்திற்கும் 500 வருடங்கள் (தொலைவு ) உள்ளது, ஒவ்வொரு
வானத்திற்கும் மத்தியில் 500 வருடங்கள் உள்ளன, ஏழாவது வானத்திற்கும், குர்ஸிக்கும் மத்தியில் 500 வருடங்கள்
உள்ளன, குர்ஸிக்கும் தண்ணீருக்கும் மத்தியில் 500 வருடங்கள் உள்ளன.
அர்ஷ் தண்ணீரின் மீது இருக்கின்றது, அல்லாஹ் அர்ஷின் மீது இருக்கின்றான், நீங்கள் செய்யும் அனைத்து
காரியங்களையும் இறைவன் அறியாமலில்லை. நூல் -பைஹகீ பக்கம் -401
இது அல்-அப்பாஸ் இப்னு அப்துல்-முத்தலிப் என்பவரிடமிருந்து விவரிக்கப்பட்டது: "ஒருமுறை அல்லாஹ்வின்
தூதர் எங்களிடம் கேட்டார்கள் :" வானத்திற்கும் பூமிக்கும் இடையே உள்ள தூரம் என்னவென்று உங்களுக்குத்
தெரியுமா?

"நாங்கள் பதிலளித்தோம். :"அல்லாஹ்வும் அவனது தூதரும் அது சிறந்தது என்பதை அறிவார்கள்".
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். "அவற்றுக்கு இடையிலான தூரம் ஐநூறு ஆண்டுகள், ஒவ்வொரு
வானத்திலிருந்தும் அடுத்தது ஐநூறு ஆண்டுகள். ஒவ்வொரு வானமும் ஐந்நூறு வருட தூரம் வரை நீண்டுள்ளது
(உயர்ந்துள்ளது )
ஏழாவது வானத்திற்கும் சிம்மாசனத்திற்கும் இடையில் ஒரு கடல் உள்ளது, அதன் அடிப்பகுதியிலிருந்து
மேற்பரப்பு வரையிலான தூரம் வானத்திற்கும் பூமிக்கும் இடையில் உள்ளது. சர்வ வல்லமையுள்ள அல்லாஹ்
இதற்கும் மேலாக இருக்கிறான், ஆதாமின் மகன்களின் செயல்களிலிருந்து அவனிடமிருந்து எதுவும்
மறைக்கப்படவில்லை!
நூல்கள்: அஹ்மத் 1/206, அபு தாவூத் 4723, அத்-திர்மிசி 3320, இப்னு மாஜா 193, அல்-பஸார் 1310
வெளிப்படையாக, இஸ்லாமிய ஏழு வானங்களுக்கு இடையிலான தூரம் மிகவும் அதிகமாக உள்ளது, ஏனெனில்
இது "ஐநூறு ஆண்டுகள்" என மதிப்பிடப்பட்டுள்ளது, இது பூமியின் வளிமண்டலத்தின் ஒப்பீட்டளவில் மிக சிறிய
அளவிற்கு (பிரபஞ்சத்துடன் ஒப்பிடும்போது) முரண்படுகிறது.
அடுத்து நபி (ஸல்) அவர்களின் விண்ணேற்றத்தை நினைவில் கொள்ள வேண்டும் ( மிராஜ்) இந்த விண்ணுலக
பயணத்தில் நபி (ஸல்) அவர்கள் விவரிப்பது :
பிறகு என் கையைப் பிடித்து (என்னை அழைத்து)க் கொண்டு ஜிப்ரீல் விண்ணில் ஏறினார். முதல் வானத்திற்கு
நாங்கள் வந்தபோது முதல் வானத்தின் காவலரிடம் ஜிப்ரீல், "திறப்பீராக!" என்று கூறினார். அதற்கு அக்காவலர்
"யார் அது?" எனக் கேட்டார். அவர் "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார்.
"உம்முடன் யாரேனும் வந்திருக்கிறார்களா?" என்று அக்காவலர் கேட்டார். அவர், "என்னுடன் முஹம்மத் (ஸல்)
வந்திருக்கிறார்" என்று பதிலளித்தார்.

"(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று அவர் கேட்க, ஜிப்ரீல் "ஆம்" என்று பதிலளித்தார். (முதல் வானத்தின் கதவை அதன்) காவலர் திறந்தார்.
இப்படியாக ஏழு வானத்தின் கதவுகள் அந்தந்த காவலர்கள் கேள்வி கேட்டு திறக்கப்படுகிறது
( முஸ்லிம் 263)
முதல் வானத்தில் ஆதம் (அலை) அவர்களைச் சந்தித்தார்கள்,
இரண்டாவது வானத்தில் யஹ்யாவையும் இயேசுவையும்,
மூன்றாவது வானத்தில் யூசுப்பையும் சந்தித்தார்கள்.
எனவே, இந்த சந்திப்புகள் அனைத்தும் ட்ரோபோஸ்பியர், ஸ்ட்ராடோஸ்பியர், மீசோஸ்பியர் மற்றும் பிற அடுக்குகளில் நடந்தனவா? ஹாரூன் சொல்ல வேண்டும். வளிமண்டலம் பூமி ?
நான் கீழ் வானத்தை அடைந்தபோது, ஆதாமை அங்கே கண்டேன்.
நான் இரண்டாவது வானத்தை அடைந்தபோது, அங்கு யஹ்யாவையும் ஈஸாவையும் கண்டேன்.
நான் மூன்றாம் வானத்தை அடைந்தபோது, அங்கு யூசுபைக் கண்டேன்.
நான் நான்காவது வானத்தை அடைந்தபோது, அங்கு இத்ரீஸைக் கண்டேன்.
நான் ஐந்தாவது வானத்தை அடைந்தபோது, அங்கு ஹாரூனைக் கண்டேன்
நான் ஆறாவது வானத்தை அடைந்தபோது, அங்கு மூஸாவைப் பார்த்தேன்.
நான் ஏழாவது வானத்தை அடைந்தபோது, இப்ராஹீமை அங்கே கண்டேன். -
ஸஹிஹ் அல்-புகாரி (அபு அப்துல்லாஹ் முஹம்மது இப்னு இஸ்மாயில் அல்-புகாரி
இவ்வாறான வானங்களுக்கு வாயில் கதவுகள் இருப்பதாக ஹதீஸில் சொல்லப்பட்டிருப்பதை குர்ஆனும் கூறுவதைப் பாருங்கள்.
"எவர்கள் நம் வசனங்களை பொய்ப்பித்து இன்னும் (அவற்றைப் புறக்கணித்து) பெருமையடித்தார்களோ நிச்சயமாக அவர்களுக்கு வானத்தின் வாயில்கள் திறக்கப்பட மாட்டாது - மேலும் ஊசியின் காதில் ஒட்டகம் நுழையும் வரையில் அவர்கள் சுவனபதியில் நுழைய மாட்டார்கள் - இவ்வாறே குற்றம் செய்பவர்களுக்கு கூலி கொடுப்போம். (குர்ஆன் : 7:40)
இந்த வானத்தின் வாயில் கதவுகளையோ, காவலர்களையோ பூமியின் வளிமண்டலத்தில் எதிர்ப்பார்க்க முடியாது.
வானங்கள் ஏழாக இருக்கின்றன. அவற்றில் முந்தின வானத்திற்கு வக்கீஃ என்று பெயர். இது பச்சை மரகதத்தால் சிருஷ்டிக்கப்பட்டது.
இரண்டாவது வானத்திற்கு அர்பலூன் என்று பெயர். இது சுத்தக் கட்டி வெள்ளியினால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.
மூன்றாவது வானத்திற்கு கைதூம் என்று பெயர். இது சிவந்த மாணிக்கத்தால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.
நான்காவது வானத்திற்கு மாஊன் என்று பெயர். இது வெண் முத்தினால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.
ஐந்தாம் வானத்திற்கு தப்காஉ என்று பெயர். இது சிவந்த தங்கத்தினால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.
ஆறாவது வானத்திற்கு வஃப்னாஉ என்று பெயர். இது மஞ்சள் மாணிக்கத்தால் சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறது.
ஏழாவது வானத்திற்கு அரூபாஉ என்று பெயர். இது இலங்கும் படியான ஒளியினால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது"...என்று ஸல்மான் ரலியல்லாஹுு தஆலா அன்ஹுு ரிவாயத்துச் செய்திருக்கிறார்கள்.
குர்ஆனின் கூற்றுப்படி, அருகிலுள்ள வானம் மட்டுமே நட்சத்திரங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது, அதாவது நபி (ஸல்) அவர்கள் விண்ணேற்றத்தின் படி, ஆதாமைச் சந்தித்த வானம்:
அருகிலுள்ள வானத்தை நட்சத்திரங்களின் (அல்லது நட்சத்திரங்களின்) அழகுடன் அலங்கரித்துள்ளோம். - ( குர்ஆன் 37:6 )

நிச்சயமாக நாம் அருகில் உள்ள வானத்தை விளக்குகளால் அலங்கரித்து ஷைத்தான்கள் மீது எறிவதற்காக அவற்றை அமைத்துள்ளோம். அவர்களுக்காக நாம் நெருப்பில் வேதனையை தயார் செய்துள்ளோம்.
- குர்ஆன், 67:5
குர்ஆன் உண்மையில் ஏழு அடுக்கு வளிமண்டலத்தைக் கணித்திருந்தால், நட்சத்திரங்களும் மேகங்களின் அதே மட்டத்தில் இருக்கும்.

ஏழு அடுக்கு வானத்தைப் பற்றிய குறிப்பு குர்ஆனில் மட்டுமல்ல, யூத மத நூல்களிலும் காணப்படுகிறது:
ஷெக்கினா முதலில் கீழ் உலகில் இருந்தாள், ஆதாமின் பாவம் அவளை முதல் வானத்தில் தள்ளியது, காயீனின் பாவம் இரண்டாவதாக, ஏனோஷின் தலைமுறை மூன்றாவது, வெள்ளத்தின் தலைமுறை நான்காவது, கோபுரத்தின் தலைமுறை ஐந்தாவது, சோதோமின் மக்கள் ஆறாவது, ஆபிரகாமின் காலத்தின் எகிப்தியர்கள் ஏழாவது. ஆபிரகாம் எழுந்து ஷெக்கினாவை ஆறாவது வானத்திற்கு கொண்டு வந்தார், மோசே எழுந்து ஷெக்கினாவை பூமிக்கு கொண்டு வந்தார். - ஆதியாகமம் ரப்பா 19.7
"பெரேஷீத் ரப்பா" தொகுப்பு குர்ஆனுக்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தொகுக்கப்பட்டது - கி.பி 5 ஆம் நூற்றாண்டில். அதாவது குர்ஆன் ஏழு வானங்களைப் பற்றிய முதல் புத்தகம் அல்ல.
இந்த கட்டுரையில் பகுப்பாய்வு செய்யப்பட்ட வசனங்கள் ( 2:29 மற்றும் 41:10–12 ) ஒரு அதிசயத்தைக் கொண்டிருக்கவில்லை என்பது மட்டுமல்லாமல், அறிவியல் தரவுகளுடன் முரண்படுகிறது. இந்த வசனங்களின்படி, பூமி முதலில் உருவாக்கப்பட்டது, பின்னர் வானம் (பிரபஞ்சம்). இந்த கருத்து பல தஃப்சீர்களால் ஆதரிக்கப்படுகிறது:

( 41: 9–12 ) வசனத்தில் அல்லாஹ் பூமியிலிருந்து படைப்பைத் தொடங்கினான், அதன் படைப்பு முடிந்ததும், அவன் ஏழு வானங்களைப் படைத்தான்.ஒரு கட்டிடம் கட்டும் போது இதைக் காணலாம், கட்டுமானம் கீழே அஸ்திவாரத்தில் இருந்து தொடங்குகிறது.
அதாவது அல்லாஹ் பூமியை வானங்களுக்கு முன் படைத்தான்.அவன் பூமியைப் படைத்த போது, அதைப் பற்றி அவன் கூறியது போல், அதிலிருந்து புகை வெளியேறியது:
“பின்பு அவன் புகையாக இருந்த வானத்தை நோக்கித் திரும்பினார். பின்னர் அவர் வானத்தின் பக்கம் திரும்பி அதை ஏழு வானங்களாக ஆக்கினார்.

அதாவது ஒன்றன் மேல் ஒன்றாக, ஒன்றின் கீழ் மற்றொன்றாக ஏழு நிலங்களையும் படைத்தார். என்பதை இந்த வசனம் நிரூபிக்கிறது பூமி வானத்திற்கு முன் படைக்கப்பட்டது தெளிவுபடுத்தப்பட்ட" சூராவில் கூறப்பட்டுள்ளது (மேலே மேற்கோள் காட்டிய வசனங்களை கவனிக்கவும் ).
இப்னு அப்பாஸ் (ரழி) அவர்களிடம் இது பற்றிக் கேட்கப்பட்டதாக அல்-புகாரி அறிவிக்கும் ஹதீஸில் , " வானங்கள் படைக்கப்படுவதற்கு முன் பூமியின் உருவாக்கம் குறிப்பிடப்பட்டுள்ளது அவர் பதிலளித்தார், பூமி வானங்களுக்கு முன் படைக்கப்பட்டது, ஆனால் அது இருந்தது சாஷ்டாங்கமாக சொர்க்கம் உருவாக்கப்பட்ட பிறகு. பல ஆரம்ப மற்றும் பிற்கால தஃப்சீர் நிபுணர்களின் கருத்து இதுவாகும். அல்லாஹ்வே அறிவான்.
புவி வளி மண்டலங்கள் வான் மண்டலங்கள் ஆகாது

**Rahmath Rajakumaran**
மிஃராஜ் எனும் விண்வெளிப்பயணத்திலே நபி ஸல்லல்லாஹூ அலைஹி வஸல்லம் 7 வானங்களில் 8 நபிமார்களை சந்தித்த காரணம்:
முதல் வானத்தில் நபி ஆதம் [அலை] அவர்கள் நபிமார்களில் முதல் நபி என்பதினாலும்,ஆதம் [அலை]அவர்கள் பிறந்த இடமான சுவனத்திலிருந்த வெளி யேற்றப்பட்டதைப் போல்

முஹம்மது நபியாகிய தாங்களும் ஹிஜ்ரி 1 -ம் ஆண்டு மக்காவிலிருந்து வெளியேற்றப்படுவீர்கள். அந்த சுவனத்தைப் பிரிவால் அவர்கள் சங்கடப்பட்டதைப் போல் உங்களுக்கு மக்காவின் பிரிவு சிரமத்தைத் தரும்.
பின்பு அவர்கள் சுவனத்திற்கு திரும்பியதைப் போன்று நீங்கள் மக்காவிற்கு திரும்புவீர்கள்.
ஆதம் சுவனத்தை விட்டு வெளியேறிய காரணத்தினால் தான் மக்கள் பல்கிப் பெருகினார்கள். அதுபோல நீங்கள் மதீனா சென்ற பிறகு தான் இஸ்லாம் பல்கிப் பெருகும் போன்ற அறிவிப்புகள் உள்ளன.
இரண்டாவது வானத்தில் நபி ஈஸா,யஹ்யா [அலை] அவர்கள்...
யூதர்கள் ஈஸா நபியை பொய்யாக்கி அவர்களுக்கு நோவினை கொடுத்தனர். இறுதியாக அவர்களை கொல்வதற்கு திட்டமிட்டனர். அதுபோல் உங்களுக்கு ஏற்படும்.
யஹ்யா நபியை அவர்களை கொலை செய்து விட்டார்கள். அவர்கள் ஷஹீதானார்கள். இதுபோன்று நபிக்கும் ஷஹாதத் கிடைக்கும் என்ற அறிவிப்பு இருக்கிறது. விஷம் வைக்கப்பட்ட உணவை சாப்பிட்டு அதன் பாதிப்பு நபியின் மரண வேளை வரை நீடித்தது என்று ஹதீஸ் கூறுகிறது.
யஹ்யா நபிக்கு முன்பு வேறு யாருக்கும் அந்த பெயர் வைக்கப்பட வில்லை. அது போன்று நபிக்கு முன்பு வேறு எவருக்கும் முஹம்மது என்ற பெயர் வைக்கப்பட வில்லை.
மூன்றாவது வானத்தில் நபி யூசுப்[அலை] அவர்கள்.
யூசுப் நபி அவர்களை அவர்களது சகோதரர்கள் தங்களை விட்டும் வெளியேற்றினர். ஆனால் யூசுப் நபி அவர்களை வெற்றி கொண்டு அவர்களை மன்னித்தார்கள். அதுபோல் உங்களை வெளியேற்றிய
மக்களை நீங்கள் வெற்றி கொண்டு அவர்களை மன்னிப்பீர்கள்.
யூசுப் அவர்கள் இறந்து விட்டார்கள் என்று யஃகூப் [அலை] அவர்கள் எண்ணி சங்கடப்பட்டதைப் போல் ஹிஜ்ரி 3-ம் ஆண்டு உஹது போர் களத்தில் நீங்கள் இறந்து விட்டீர்கள் என்று மக்கள் பீதி அடைவார்கள் என்ற அறிவிப்பு உள்ளது.

**Rahmath Rajakumaran**

நான்காவது வானத்தில் இத்ரீஸ்[அலை] அவர்கள்.
முதன் முதலாக பேனா கொண்டு எழுதி எழுத்துக்கலையை உருவாக்கியது இத்ரீஸ்[அலை] அவர்கள்தான். அதுபோன்று எல்லா மன்னர்களும் பார்த்து பயப்படும் அளவுக்கு நபியின் அந்தஸ்து உயரும். அந்நேரத்தில் எல்லாருக்கும் கடிதம் மூலம் இஸ்லாத்தின் பக்கம் அழைப்பு விடுப்பார்கள் என்ற அறிவிப்பு உள்ளது.
ஐந்தாவது வானத்தில் நபி ஹாரூன்[அலை] அவர்கள்.
ஆறாவது வானத்தில் மூஸா நபி அவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு நெருக்கமானவர்களாக இருந்த காரணத்தினால் ஹாரூன் நபி அவர்கள் ஐந்தாவது வானத்தில் இருந்தார்கள்.
ஒரு கட்டத்தில் ஹாரூன்[அலை]அவர்கள் மீது கோபம் கொண்ட மக்கள் பின்பு அவர்களை நேசிக்க ஆரம்பித்தனர். அதுபோல் நபியை விரோதம் கொண்டவர்கள் பின்பு நேசம் கொள்வார்கள் என்ற அறிவிப்பு உள்ளது.
அல்லாஹ்வுடன் உரையாடுவதற்காக சென்ற மூஸா நபி அவர்கள் அந்நேரத்தில் ஹாரூன் நபியை தனக்குப் பகரமாக மக்களிடம் விட்டுச் சென்றார்கள். ஆனால் அம்மக்கள் ஒப்பந்தத்தை மீறி ஹாரூன் [அலை] அவர்களை கொல்ல முயற்சித்தனர். காளைக் கன்றை தெய்வமாக்கி
வணங்க ஆரம்பித்தனர்.
அதுபோல் யூதர்கள் அனைவரும், நபிக்கு உதவி புரிவோம் என்ற ஒப்பந்தத்தை மீறி ஒன்று திரண்டு குறைஷிகளையும் தங்களுடன் இணைத்துக் கொண்டு நபியடன் போர் செய்ய முனைந்தனர்
ஹாரூன்[அலை] அவர்களை கொல்ல முயற்சித்தனர்.காளைக் கன்றை தெய்வமாக்கி வணங்க ஆரம்பித்தனர்.
அதுபோல் யூதர்கள் அனைவரும், நபிக்கு உதவி புரிவோம் என்ற ஒப்பந்தத்தை மீறி ஒன்று திரண்டு குறைஷிகளையும் தங்களுடன் இணைத்துக் கொண்டு நபியுடன் போர் செய்ய முனைந்தனர்.
அப்போது அவர்களைத் தடுப்பதற்காகத் தான் நபி [ஸல்] அவர்கள் அகழ் தோண்டும் படி உத்தரவிட்டார்கள் இது ஹிஜ்ரி 5-ம் ஆண்டு நடந்தது.
ஆறாவது வானத்தில் நபி மூஸா[அலை]அவர்கள
மூஸா [அலை]அவர்கள் பைத்துல்முகத்தஸை கைப்பற்றுவதற்காக அங்கே சென்று போரிடுவதற்கு தன் சமூகத்தை அழைத்தார்கள். அப்போது அவர்கள்,நாங்கள் வர மாட்டோம், வேண்டு மென்றால் நீங்களும் உங்கள் இறைவனும் சேர்ந்து போரிடுங்கள் என்று கூறி மறுத்து விட்டனர். உள்ளே செல்ல வில்லை. அதுபோன்று

நபி[ஸல்]அவர்களும் ஹிஜ்ரி 6 -ம் ஆண்டு மக்காவிற்குள் நுழைய முற்படும் போது தடுக்கப்படுவார்கள் என்பதை அறிவிக்கிறது.
ஏழாவது வானத்தில் இப்ராஹீம்[அலை]அவர்கள்.
நபி [ஸல்] அவர்கள் ஹபீபுல்லாஹ் இப்ராஹீம் [அலை] அவர்கள் கலீலுல்லாஹ். கலீலுல்லாஹ் என்பது ஹபீபுல்லாஹ் விற்கும் அடுத்த அந்தஸ்தாகும். எனவே நபி [ஸல்] எல்லாவற்றையும் கடந்து அல்லாஹ்வை தரிசித்த போது அதற்கு அடுத்த நிலையில் இப்ராஹீம் நபியை அல்லாஹ் வைத்தான்.
ஹிஜ்ரி 7 -ம் ஆண்டு தான் நபியவர்கள் இப்ராஹீம் நபியின் சுன்னத்தான உம்ராவை நிறைவு செய்வதற்காக மக்காவுக்கு சென்றார்கள்.இந்த அறிவிப்பும் இதில் உண்டு.

**Rahmath Rajakumaran**

வானங்கள் ஏழாக இருக்கின்றன. அவற்றில் முந்தின வானத்திற்கு வக்கீஃ என்று பெயர். இது பச்சை மரகதத்தால் சிருஷ்டிக்கப்பட்டது.
இரண்டாவது வானத்திற்கு அர்பலூன் என்று பெயர். இது சுத்தக் கட்டி வெள்ளியினால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.
மூன்றாவது வானத்திற்கு கைதூம் என்று பெயர். இது சிவந்த மாணிக்கத்தால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.
நான்காவது வானத்திற்கு மாஊன் என்று பெயர்.
இது வெண் முத்தினால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.
ஐந்தாம் வானத்திற்கு தப்காஉ என்று பெயர். இது சிவந்த தங்கத்தினால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது.
ஆறாவது வானத்திற்கு வஃப்னாஉ என்று பெயர். இது மஞ்சள் மாணிக்கத்தால் சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறது.
ஏழாவது வானத்திற்கு அரூபாஉ என்று பெயர். இது இலங்கும் படியான ஒளியினால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது"
....என்று ஸல்மான் ரலியல்லாஹு தஆலா அன்ஹு ரிவாயத்துச் செய்திருக்கிறார்கள்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 85
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 2

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَجَعَلَ الظُّلُمٰتِ وَالنُّوْرَ ثُمَّ الَّذِيْنَ كَفَرُوْا بِرَبِّهِمْ يَعْدِلُوْنَ

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. அவனே வானங்களையும், பூமியையும் படைத்தான்; இருள்களையும், ஒளியையும் அவனே உண்டாக்கினான்; அப்படியிருந்தும் நிராகரிப்பவர்கள் தம் இறைவனுக்கு(ப் பிற பொருட்களைச்) சமமாக்குகின்றனர்.
(குர்ஆன் : 6:1)
இருள்கள் :-
திருக்குர்ஆனில் ஒளியைப் பற்றிக் கூறும் அனைத்து இடங்களிலும் ஒளி (நூர்) என்று ஒருமையில் கூறப்படுகிறது. ஆனால் இருளைப் பற்றிக் கூறும் அனைத்து இடங்களிலும் 'இருள்கள்' ( ழுலுமாத் ) என்று பன்மையாகத் திருக்குர்ஆன் கூறுகின்றது.
2:17, 2:19, 2:20, 2:257, 5:16, 6:1, 6:39, 6:59, 6:63, 6:97, 6:122, 10:27, 13:16, 14:1, 14:5, 17:78, 21:87, 24:40, 27:63, 33:43, 35:20, 39:6, 57:9, 65:11 இவையே அனைத்தும் இருள்களைப் பற்றிய வசனங்களாகும்.
இருள் என்று ஒருமையாகப் பேசுவதை மக்கள் வழக்கமாகக் கொண்டிருக்கும் போது, மக்களின் பேச்சுவழக்கிற்கு மாற்றமாக பன்மையாகக் கூறியிருப்பதில் மிகப்பெரிய அறிவியல் உண்மை அடங்கியுள்ளது !
ஒளியின் வேகம் நொடிக்கு 3 லட்சம் கி.மீ நமக்குத் தெரியும். ஆனால் இருட்டின் வேகம் என்ன? இருள் ஒளியின் வேகத்திலேயே தான் பயணிக்கும். ஆனால் மிகச்சரியாக சொல்லவேண்டும் என்றால் இருள் ஒன்று இல்லை என்பதே இயற்பியலின் கோட்பாடு, இருளுக்கு என்று வரையறைகள் ஏதுமில்லை. ஒளி/வெளிச்சம் இல்லா நிலையே இருள் என குறிப்பிடுகின்றோம்.

ஒளியை ஒரே நிறத்தில் நாம் பார்த்தாலும் அது ஏழு வண்ணங்களின் தொகுப்பாகும். இந்த வண்ணங்களின் ஊடுருவும் ஆற்றல் ஒன்றுக்கொன்று வேறுபட்டதாகும். அலை நீளமும் மாறுபட்டதாகும்
நாம் காணும் சூரிய வெள்ளோளியில் பார்க்கக் கூடிய ஏழு வர்ணக் கதிர்கள் உள்ளன .
இக்கதிர்கள் அலை நீளங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை. சிவப்புக் கதிரின் நீளம் 0.00007 செ மீ. ஊதாக் கதிரின் அலை நீளம் 0.00004செ மீ இவ்விரு கதிர்களுக்கும் இடையேயுள்ள அலை நீளத்தை நம் கண்களால் காண முடியும் .
சிவப்புக் கதிருக்கு மேலயுள்ள இன்ஃபரா சிவப்பு கதிரின் நீளம் 0.00008 செ மீ அதைப் போல் ஊதாக் கதிருக்கு கீழேயுள்ள அல்ட்ரா வயலட் அலை நீளம் 0.00003 செ மீ இக்கதிர்களை நம் கண்களால் காண முடியாது .
இதே ஒளியில்தான் ரேடியத்திலிருந்து வீசும் காமா கதிர்கள், எக்ஸ்ரே கதிர்கள் காஸ்மிக் கதிர்கள் மற்றும் அறியப்படாத கதிர்கள் இவைகளையும் நம் கண்களால் காண முடியாது.
அதேப்போல இன்ஃபரா சிவப்புக் கதிருக்கு மேலே உள்ள கதிர்களான
வெப்பக் கதிர்கள் , மின்பொறி கதிர்கள் , ராடார் கதிர்கள் . டெலிவிஷன் கதிர்கள் , குட்டையான ரேடியோ அலைக்கதிர்கள் , நீளமான ரேடியோ அலைக்கதிர்கள் மற்றும் அறியப்படாத கதிர்கள் .
மலக்குமார்களை ஒளியில் படைத்திருப்பதாக நபிமொழி கூறுகிறது.
இத்தனை பார்க்க முடியாத ஒளி நிறக்கதிர்களில் மலக்குமார்களை எந்த ஒளிக்கதிரில் படைத்திருப்பான் என்று யாருக்குத் தெரியும் ?
நமது கண்களுக்கு எக்ஸ் ரே கதிர்கள் புலப்படுவதாக வைத்துக் கொண்டால் நாம் இப்போது பார்த்துக் கொண்டிருக்கும் பிரபஞ்சத்தின் தோற்றம் முற்றிலும் மாறுபட்டிருக்கும் பிரபஞ்சத்தைப் பற்றிய நமது சிந்தனையும் வேறுபட்டிருக்கும் .
ஒளியின் மூலப் பொருள் " போட்டான்" என்கிற துகள் . மலக்குமார்களை போட்டான் என்ற ஒளி துகள்களால் படைக்கப்பட்டிருக்கலாம். அவர்களும் படைப்பினங்கள்தானே ....!
இந்த வெள்வொளி கதிர்களில் நாம் பார்க்கக் கூடிய , பார்க்க முடியாத கதிர்களான ஒளிகள் , ஒலிகள் கதிர்வீச்சுகள் எல்லாவற்றிற்கும் மூலம் அந்த வெள்ளொளிதான் .
அலை நீளம் குறைவாக உள்ள ஒளி, ஊடகத்தினால் அதிகமாகச் சிதறடிக்கப்படுகிறது. அலை நீளம் அதிகமாக உள்ள ஒளி, ஊடகத்தினால் குறைவாகச் சிதறடிக்கப்படுகிறது.
அலை நீளத்தைப் பொருத்து சில வண்ணங்கள் குறுகிய தொலைவுடன் நின்று விடும். இன்னும் சில வண்ணங்கள் அதை விட சற்றுத் தொலைவுடன் நின்று விடும்.
ஒவ்வொரு நிறமும் அதன் அலை நீளத்திற்கேற்ப ஊடுருவாமல் தடுக்கப்படும் போது அந்த நிறத்தைப் பொறுத்த வரை அந்த நிறம் இருளாகின்றது. மூன்று நிறங்கள் தடுக்கப்பட்டு மற்ற நிறங்கள் நம்மை வந்தடைந்தால் அங்கே மூன்று இருள்கள் ஏற்பட்டுள்ளன என்று பொருள்.
ஒரு அறிவிப்புப் பலகையில் சிவப்பு, மஞ்சள், நீலம் மூன்று நிறங்களில் எழுதப்பட்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். அந்தப் பலகையின் அருகில் நின்று பார்க்கும் போது மூன்று நிறங்களில் எழுதப்பட்டதையும் நம்மால் வாசிக்க முடியும்.
ஒரு குறிப்பிட்ட தொலைவுக்கு அப்பால் சென்று பார்க்கும் போது நீல நிற எழுத்தை நம்மால் பார்க்க முடியாது. அந்த இடத்தில் வெளிச்சம் இருந்தாலும் நீல நிறத்தைப் பொறுத்த வரை இருளாகி விடுகின்றது.
இன்னும் சற்றுச் தொலைவுக்குச் சென்றால் மஞ்சள் நிறமும் தடுக்கப்பட்டு, சிவப்பு நிற எழுத்து மட்டுமே கண்களுக்குத் தெரியும். அந்த இடத்தில் வெளிச்சம் இருந்தாலும் நீலம், மஞ்சள் ஆகிய இரண்டு நிறங்களைப் பொறுத்த வரை இரண்டு இருள்கள் ஏற்பட்டு விடுகின்றன.
இவ்வாறு நிறங்களின் அலை நீளத்திற்கு ஏற்ப, அவை ஊடுருவுவது தடுக்கப்படுவதால் ஒவ்வொரு நிறத்திற்கும் ஒவ்வொரு இருள் ஏற்பட்டு, பல இருள்கள் ஏற்படுகின்றன.

எனவே இருள் என்று ஒருமையில் கூறாமல், இருள்கள் என்று பன்மையாகத் திருக்குர்ஆன் கூறுவது மிகப் பெரிய அறிவியல் சான்றாக உள்ளது.
அது போல் ஆழ்கடலில் ஏற்படும் இருள்களைப் பற்றியும் குர்ஆன் 24:40 வசனத்தில் திருக்குர்ஆன் விளக்கமாகக் கூறுகிறது.
ஒருவன் கடலுக்குள் மூழ்கும் போது ஆழம் செல்லச் செல்ல இருள்கள் அதிகரித்துக் கொண்டே சென்று முடிவில் தன் கையையே கண் முன்னால் கொண்டு வந்தால் அதை அவனால் காண முடியாத அளவுக்குக் கடுமையான இருள்கள் இருக்கும் என்று இவ்வசனம் கூறுகின்றது.
பட்டப்பகலில் கடல் மீது விழும் சூரிய ஒளி, சிறிது சிறிதாகக் குறைந்து காரிருள் ஏற்படுகின்றது என்று விஞ்ஞானிகள் இன்று கண்டறிந்துள்ளனர்.
சூரியனின் வெளிச்சத்தில் ஊதா, கருநீலம், நீலம், பச்சை, மஞ்சள், ஆரஞ்சு, சிவப்பு ஆகிய ஏழு வண்ணங்கள் உள்ளன.
சூரிய ஒளியின் ஒவ்வொரு நிறத்தின் அலை வேகம் வேறுபடுவதால் கடலில் ஒவ்வொரு குறிப்பிட்ட தொலைவில் ஒவ்வொரு நிறமாகத் தடுக்கப்படுகிறது.
சிவப்புக் கதிர் கடலில் 15 மீட்டர் வரை தான் செல்லும். 15 மீட்டர் ஆழத்திற்கு மேல் சென்றால் சூரியனின் ஆறு வண்ணங்கள் தான் தெரியும். அங்கே சிவப்பான பொருட்களை மட்டும் காண முடியாத அளவுக்கு ஒரு இருள் ஏற்படுகின்றது.
இப்படி ஒவ்வொரு தொலைவிலும் ஒவ்வொரு வண்ணம் தடுக்கப்படும் போது, தடுக்கப்படும் நிறத்தில் உள்ள பொருட்களை நாம் காணமுடியாது. அந்த ஒளியைப் பொறுத்த வரை இருள் ஏற்படுகிறது. எந்த இடத்தில் அனைத்து வண்ணங்களும் முழுமையாகத் தடுக்கப்படுகின்றதோ அந்த இடத்துக்கு நிகரான இருள் வேறு எதுவும் இருக்க முடியாது என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.
"கடலுக்குள் ஆயிரம் மீட்டர் செல்லும் போது கண்கள் தடுமாறுகின்றன. இறுதியில் நிறங்கள் அடியோடு மறைந்து விடுகின்றன. பூமியின் மேற்பரப்பில் வரும் இரவுகளை என்னால் கருப்பு என்று கூற முடியாது. அந்த அளவுக்கு இருளைக் கடல் அடைந்து விடுகிறது'' என அமெரிக்க ஆய்வாளர் பீப் என்பவர் கூறுகிறார்.
இருள்களில் பல படித்தரங்கள் உள்ளன என்பதும், பூமியின் மேற்பரப்பில் இரவில் ஏற்படும் இருளை விட, பட்டப்பகலில் 1000 மீட்டர் ஆழத்தில் கடலுக்குள் சென்றால் கடுமையான இருள் ஏற்படும் என்றும் கண்டறியப்பட்டுள்ளது.
தமது வாழ்நாளில் கடல் பயணமே செய்யாத நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் 1000 மீட்டர் ஆழத்திற்குச் சென்று அந்த இருள்களை அனுபவித்து உணர்ந்தவர் போல் இந்த வசனத்தைக் கூறியிருப்பது, திருக்குர்ஆன் இறைவேதம் என்பதற்குச் சான்றாக அமைந்துள்ளது.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 86
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 3

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَجَعَلَ الظُّلُمٰتِ وَالنُّوْرَ ثُمَّ الَّذِيْنَ كَفَرُوْا بِرَبِّهِمْ يَعْدِلُوْنَ

வானங்களையும் பூமியையும் கிருஷ்டித்து. இருள்களையும், பிரகாசத்தையும் சிருஷ்டித்தானே அவனாகிய அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும் (உரியன), பின்னர், காஃபிராகி விட்டார்களே அவர்கள் தங்களது றப்புக்கு (மற்றவைகளை)ச் சமமாக்குகிறார்கள்.
( குர்ஆன் 6:01)
ஆன்மிக ரீதியில் இருளும் ஒளியும்.
அல்லாஹுத்தஆலா பிரகாசத்தை சிருஷ்டித்தான் என்றும் ஷைத்தான் இருள்களை சிருஷ்டித்தான் என்றும் மஜூலியர் கூறுகிறார்கள். ஆதலால், அவர்களுக்கு மறுப்பாக இந்த ஆயத்து அருளப்பட்டது என்று சொல்லப்பட்டிருக்கிறது.
தவிர, யஸ்தான் என்பவன் பிரகாசத்தையும், அஹ்ரமன் என்பவன் இருள்களையும் சிருஷ்டித்தான் என்றும், இவ்வாறே, சகல நன்மைகளையும் தீமைகளையும் முறையே இவ்விருவரும் சிருஷ்டித்தார்கள்.என்றும் 'தஷெய்யா' என்ற கூட்டத்தினர் கூறுகிறார்கள்.
இவ்வகுப்பாருக்கு மறுப்பாக இந்த ஆயத்து அருளப் பட்டது என்று தைஸீர் என்ற கிரந்தத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.
அல்லாஹுத்தஆலா வானங்களென்னும் இருதயங்களைச் சிருஷ்டித்தான். நஃப்ஸென்னும் பூமியையும் சிருஷ்டித்தான். அந்த நஃப்ஸிலே இருள்களை அதாவது அதன் மிருக உணர்ச்சிகளையும் தன்மைகளையும் உண்டாக்கினான்.
வானங்களாகிய இருதயங்களில் மலக்குகளின் தன்மைகள் ஒழுக்கங்கள் ஆகிய பிரகாசத்தை உண்டாக்கினான். ஆகவே, இப்பிரகாசம் எவரில் மிகைக்கிறதோ அவர் அல்லாஹு தஆலாவை வணங்கும் விஷயத்தில் சார்ந்து, நபிமார்களது அழைப்பை ஏற்றுக் கொண்டு, அல்லாஹ்வையும். ரசூலையும் ஈமான் கொண்டு, ஷரீஅத் என்கிற ஆபரணத்தை அணிந்து கொள்கிறார். ஆகவே, அல்லாஹ் அவருக்குக் காரியஸ்தனாக இருக்கிறான்.
தவிர, எவருக்கு நஃப்ஸுகளிலுள்ள இருள்கள் மிகைத்து அவா என்கிற ஷைத்தானைப் பின்பற்றி, இவ்வுலகத்தின் மனோ இச்சைகளை இன்புறுகிறாரோ அவருக்குத் தாகூத் என்னும் ஷைத்தான்தான். காரியஸ்தனாக இருக்கிறான் என்ற சமிக்ஞைகள் இந்த ஆயத்தில் இருக்கின்றன வென்று தாவீலாத்துன்னஜ்மிய்யா என்ற கிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.
'இருள்' என்றால் 'ஒளி புலப்படாதது'. 'ஒளி புலப்படாதது' என்பது 'நித்திய'மானது அல்ல. 'ஒளி புலப்படாதது' தாற்காலிக நிகழ்வு.
"இருளும் ஒளியும் ஒருக்காலும் தீரா..." - திருமூலர்
"வேரறியாமல் பேரறியாமல் விளம்புகின்றேனே பேரொளியை"
- திருமூலர்
"விளக்கினைப் பிளந்து விளக்கினுக்குள் இருக்கும் விளக்கினை விளக்கவல்லார்க்கு விளக்குடையான் கழல் விளங்கலுமாமே."
- திருமூலர்
இருளும் ஒளியும் சம அளவில் இருக்கிறது. இது பிரபஞ்சத்திற்கு பொதுவாயும் அதிலுள்ள எல்லா உயிர்களுக்கும், அணுக்களுக்கும் பொருந்தும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 87**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 4**

هُوَ الَّذِىْ خَلَقَكُمْ مِّنْ طِيْنٍ ثُمَّ قَضٰۤى اَجَلًا‌ وَاَجَلٌ مُّسَمًّى عِنْدَهٗ‌ ثُمَّ اَنْتُمْ تَمْتَرُوْنَ

அவன்தான், உங்களைக் களிமண்ணிலிருந்து படைத்துப் பின்னர் (உங்களுக்கு ஒரு குறிப்பிட்ட) தவணையையும் ஏற்படுத்தியுள்ளான்; இன்னும், (உங்களைக் கேள்விகணக்கிற்கு எழுப்புவதற்காகக்) குறிக்கப்பட்ட தவணையும் அவனிடமே உள்ளது; அப்படியிருந்தும் நீங்கள் சந்தேகப்படுகிறீர்கள். (குர்ஆன் : 6:2)

வரலாற்று ஆய்வாளர்கள், ஒரு மனிதனுடைய வரலாறுகளை எழுதும்போது அதை அவனுடைய பிறப்பிலிருந்து ஆரம்பிப்பார்கள். காரணம் பிறப்பு என்பது மகிழ்ச்சியானது. வரலாற்றை மகிழ்ச்சியிலிருந்து ஆரம்பிக்க வேண்டும் என்பதற்காக பிறப்பிலிருந்து எழுதுவார்கள்.

ஆனால் ஆதம் ( அலை ) அவர்களுடைய வரலாற்றை அவர்களுடைய பிறப்பிலிருந்து துவங்கக்கூடாது. ஏனெனில் ஆதம் (அலை) அவர்களை யாரும் பெற்றெடுக்கவில்லை. அவர்கள் பிறக்கவில்லை. மாறாக ஆதம் நபியின் வரலாற்றை அவர்களுடைய படைப்பிலிருந்து துவங்குவதுதான் சரியாக இருக்கும். ஏனெனில் ஆதம் அலை அவர்கள் மனிதர்களில் முதலாமவர்களாக, மனித தோற்றத்தின் ஆரம்பமாக இருக்கிறார்கள்.

மிகப்பெரும் படைப்பாளனாகிய அல்லாஹ், ஆதம் (அலை) அவர்களை மண்ணால் படைத்தான். அல்லாஹ் கூறுவதைப் பாருங்கள்...

அவரை (ஆதமை) மண்ணால் படைத்து "ஆகு' என்று அவரிடம் கூறினான். உடனே அவர் (உயிருடைய மனிதராக) ஆகி விட்டார். திருக்குர்ஆன் 3:59, 6:2

களிமண் எங்கிருந்து பெறப்பட்டது :-

இஸ்றாயீல் (அலை) அவர்கள் பூமியின் பல்வேறு பாகங்களிலிருந்து மண்ணை எடுத்து சிவப்பு கருப்பு வெள்ளை ஆகிய மணல் நிறங்களை கலந்து உவர்ப்பு, கைப்பு, இனிப்பு தண்ணீரை கொண்டு பிசைந்து ஒன்று சேர்த்ததால், ஆதம் (அலை ) அவர்களது சந்ததியினர் நிறத்தில் கருப்பராகவும், வெள்ளையராகவும், இன்னும் பலவித நிறங்கள் உள்ளவராகவும் ஆயினர். அவர்களது ஒழுக்கங்களும் தன்மைகளும் வெவ்வேறு விதமாய் ஆயின.

''அல்லாஹ் ஆதமை ஒரு பிடி மண்ணிலிருந்து படைத்தான். பூமியின் எல்லாப் பகுதியிலிருந்தும் அதை எடுத்தான். பூமியின் தரத்திற்கேற்ப ஆதமுடைய மக்கள் உருவானார்கள். இதனால் தான் சிவப்பு நிறமுடையவர், வெண்மை நிறமுடையவர், கருப்பு நிறமுடையவர் இவற்றுக்கு இடைப்பட்ட நிறத்தவர், நளினமானவர், திடமானவர், கெட்டவர் மற்றும் நல்லவர் உருவாயினர்'' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர் அபூமூஸா அல்அஷ்அரீ (ரலி)

(நூல்கள் - திர்மிதீ 2879, அபூதாவூத், அஹ்மத், ஹாகீம், பைஹகீ )

அவன் ஒவ்வொரு பொருளின் படைப்பையும் அழகுபடுத்தினான். (அதேபோல்) மனிதனின் படைப்பைக் களிமண்ணிலிருந்து துவக்கி (அழகு படுத்தி)னான். (குர்ஆன் 32:7)

ஆதம் அலை அவர்களை அழகாகப் படைப்பதற்காக களிமண்ணை இறைவன் தேர்ந்தெடுக்கிறான்.

எப்படிப்பட்ட களிமண் ?

நுணுக்கமான படைப்பாளனாகிய அல்லாஹ் ஆதம் (அலை) அவர்களையும் நுணுக்கமாக படைத்திருக்கிறான். ஆதம் அலை அவர்களை படைப்பதற்காக மணலைத் தேரந்தெடுத்து அந்த மணலிலே சிறந்த வகையான களிமண்ணைத் தேர்ந்தெடுத்ததைப் போன்று களிமண்ணிலே சிறந்த களிமண்ணை தேர்ந்தெடுத்திருக்கிறான். அதை அல்லாஹ் தன்னுடய திருமறையில் வருணித்துக் கூறியுள்ளான். அல்லாஹ் தேர்ந்தெடுத்த களிமண்ணின் தன்மைகள் :

1) மணல் கலந்த கருப்பு களிமண் :- சாதாரண களிமண்ணைத் தேர்ந்தெடுக்காமல் மணலோடு கலந்திருக்கக்கூடிய, கருப்பு நிறத்தில் அமைந்த களிமண்ணை அல்லாஹ் தேர்நதெடுத்திருக்கிறான்.

وَلَقَدْ خَلَقْنَا الْإِنسَانَ مِن صَلْصَالٍ مِّنْ حَمَإٍ مَّسْنُونٍ

மணல் கலந்த கருப்புக் களிமண்ணில் இருந்து மனிதனைப் படைத்தோம். குர்ஆன் 15:26
2) பிசுபிசுப்பான களிமண் :- அதேபாேன்று மணல் கலந்த கருப்புக் களிமண்ணிலும் பிசுபிசுப்பான களிமண்ணாக தேர்ந்தெடுத்து அதிலிருந்து ஆதம் நபியை படைத்திருக்கிறான்.ஆதம் ( அலை ) அவர்களை பிசுபிசுப்பான களிமண்ணால் படைத்ததற்கு காரணம் வலிமையானவர்களாக இருக்க வேண்டும் என்பதற்குத்தான்.
فَاسْتَفْتِهِمْ أَهُمْ أَشَدُّ خَلْقًا أَم مَّنْ خَلَقْنَا ۚ إِنَّا خَلَقْنَاهُم مِّن طِينٍ لَّازِبٍ
இவர்கள் வலிமையான படைப்பா? அல்லது நாம் படைத்த (மற்ற)வைகளா? என்பதை இவர்களிடம் கேட்பீராக! இவர்களைப் (வலிமை மிக்க படைப்பாக ஆக்குவதற்காக) பிசுபிசுப்பான களிமண்ணால் நாம் (மனிதர்களைப் ) படைத்தோம். ( குர்ஆன் 37:11)
3) சுட்ட களிமண் :- மணல் கலந்த கருப்பு நிறத்தாலான பிசுபிசுப்பான களிமண்ணை வெப்பமூட்டி சூடாக்கி மண்பாண்டம் போல் சுட்ட களிமண்ணாக மாற்றிய பிறகு ஆதம் அலை அவர்களை அல்லாஹ் படைத்தான்.
خَلَقَ الْإِنسَانَ مِن صَلْصَالٍ كَالْفَخَّارِ
மண்பாண்டம் போல் சுட்ட களிமண்ணால் மனிதனைப் படைத்தான். ( குர்ஆன் 55:14)
இன்னொரு வசனத்தில், களிமண்ணின் சத்துக்கள் அமையப் பெற்றவராக ஆதம் அலை படைக்கப்பட்டார்கள் என்பதை இறைவன் கூறுகிறான்.
وَلَقَدْ خَلَقْنَا الْإِنسَانَ مِن سُلَالَةٍ مِّن طِينٍ
களிமண்ணின் சத்திலிருந்து மனிதனைப் படைத்தோம்.(குர்ஆன் 23:12)
ஆதம் நபியின் படைப்பு பற்றிய சுருக்கம் :-
அழகான படைப்பாக ஆதம் இருக்க வேண்டும் என்பதற்காக களிமண் தேர்ந்தெடுக்கப்படுகிறது.
வலிமைமிக்க படைப்பாக ஆவதற்காக பிசுபிசுப்பான களிமண் தேர்ந்தெடுக்கப்படுகிறது.
பல்வேறுபட்ட மக்களை உருவாக்க வேண்டும் என்பதற்காகத்தான் பூமியின் பல பகுதிகளிலிருந்தும் மணலை தேர்வு செய்திருக்கிறான்.
ஆகவே மனிதர்கள் அழகும் வலிமையும் பெற்றவர்களாக, பலதரப்பட்டவர்களாக படைக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகவே இதற்காக நாம் அல்லாஹ்விற்கு நன்றி செலுத்த வேண்டும். அதேபோன்று அனைத்து மனிதர்களும் அழகானவர்கள்தான். தான்தான் அழகு. மற்றவர்கள் அழகில் குறைவானவர்கள் என்று நினைப்பது மிகப்பெறும் தவறு.
" உங்களைக் களிமண்ணிலிருந்து படைத்து "-மனிதர்களின் தந்தையான ஆதி மனிதர் ஆதம் அலை அவர்களை குறிக்கும் அவர் மூலமே கிழக்கு மற்றும் மேற்கு என உலகின் எல்லா பகுதிகளிலும் மனிதர்கள் பரவினர்.
பின்னர் உங்களது வாழ்நாளை தீர்மானித்தான். அவனிடம் மறுமைக்காக குறிப்பிட்ட காலம் ஒன்றும் உள்ளது என அடுத்த தொடர் அறிவிக்கின்றது.
இங்கு "வாழ்நாள்" (அஜல்) என்பது இறப்பையும், குறிப்பிட்ட காலம் ( அஜலும் முசம்மா ) என்பது மறுமையும் குறிக்கும் என இப்னு அப்பாஸ் ( ரலி )அவர்கள் கூறியுள்ளார்கள்
மேற்கண்ட வசனத்தில் இரண்டு குறிப்பிட்ட தவணைகள் கூறப்படுகிறது .அதாவது ஹசன் அல்பஸ்ரி (ரஹ்) அவர்கள், 'வாழ்நாள்' என்பது மனிதனின் பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்பட்ட காலத்தையும், 'குறிப்பிட்ட காலம் என்பது அவன் இறந்தது முதல் மீண்டும் உயிர் கொடுத்து எழுப்பப்படுவது வரையிலான காலத்தையும் குறிக்கும் என்று கூறுகிறார்கள். இது முந்தைய கருத்தையே பிரதிபலிக்கிறது.
ஆக, முந்தியது ஒவ்வொரு மனிதனின் தனிப்பட்ட வாழ்நாளையும், பிந்தியது ஒட்டுமொத்த உலகத்தின் ஆயுளையும் குறிக்கும். உலக முடிவு, அதன் அழிவு, பின்னர் மறுவுலகம் தோன்றுவது ஆகியவை எல்லாம் இதில் அடங்கும்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 88**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 5**

وَهُوَ اللّٰهُ فِى السَّمٰوٰتِ وَفِى الْاَرْضِ يَعْلَمُ سِرَّكُمْ وَ جَهْرَكُمْ وَيَعْلَمُ مَا تَكْسِبُوْنَ

இன்னும் வானங்களிலும் பூமியிலும் அவனே (ஏக நாயகனாகிய) அல்லாஹ்; உங்கள் இரகசியத்தையும், உங்கள் பரகசியத்தையும் அவன் அறிவான்; இன்னும் நீங்கள் (நன்மையோ தீமையோ) சம்பாதிப்பதை எல்லாம் அவன் அறிவான்.(குர்ஆன் : 6:3)

இன்னும் வானங்களிலும் பூமியிலும் அவனே (ஏக நாயகனாகிய) அல்லாஹ்;

இந்த பேரண்ட பெருவெளியில் இருப்பவை அனைத்தும் ஓர் இறையாற்றல் கொண்டே வெளியாகி இருக்கின்றது. அந்த இறையாற்றல் இல்லாமல் எதுவும் எங்கும் இல்லை. நுண்ணறிவு கொண்டு ஒவ்வொன்றையும் ஆராய்ந்து பார்க்கும் போது, இந்த இறையாற்றல் இல்லாமல் எதனாலும் இயங்க முடியாது. அது அசையும் பொருளாக இருந்தாலும் சரி, அசையாத பொருளாக இருந்தாலும் சரி, அவனது ஆற்றலின்றி எதுவும் இயங்காது.

நபிகளார் வலியுறுத்தும் ஓர் இறைக்கொள்கை மிகவும் போற்றத்தக்க ஒன்றாகும். ‘உருவமற்ற ஏக நாயகனாகிய இறைவனுக்கு நீங்கள் உண்மையாக நடந்து கொள்ளுங்கள்’ என்று மக்களுக்கு போதனை செய்தார்கள்.

‘தொடக்கமும் முடிவும் இல்லாத பேராற்றல் ஒன்றே. அனைத்தையும் உருவாக்கியதும் அந்த பேராற்றலே. எல்லா ஆற்றல்களுக்கும் மூல ஆதாரமாக இருப்பதும் அவ்வாற்றலே. கூடுதல் குறைவின்றி என்றும் நிலையாக நிலைத்து இருப்பதுவும் அந்த பேராற்றலே’ என்றார்கள்.

அந்த பேராற்றலுக்கு உருவமே இல்லை என்கிறபோது அதற்கு பிறப்பும் இல்லை. பிறப்பே இல்லை என்கின்றபோது அதற்கு பெற்றோர்களும் இல்லை. பிறவாமல் நின்று அனைத்தையும் பிறக்கச் செய்கின்றது. அனைத்தின் தேவைகளையும் அந்த பேராற்றலே அளிக்கின்றது அந்த இறையாற்றலுக்கோ எந்த தேவையும் இல்லை. அதனை குர்ஆன் இவ்வாறு கூறுகின்றது:

‘நபியே! நீர் கூறுவீராக: இறைவன் ஒருவனே! அவன் (எவரிடத்திலும்) தேவையற்றவன், அவன் (எவரையும்) பெறவுமில்லை, (எவராலும்) பெறப்படவுமில்லை, (அத்தனித்தவனுக்கு) ஒப்பாக எதுவும் இல்லை’ (112:1-4).

‘நான்’ என்ற அகங்காரமே, இப்பிரபஞ்ச பேராற்றலின் நுண் இயக்கத்தை உணர விடாமல் மனிதனை தடை செய்கிறது. அவனது நுண்ணறிவு செயல்படும்போது, எங்கும் ஏகமாய் நிரம்பி இயங்குவது இறையாற்றல் ஒன்றே என தெரிந்து கொள்ள முடியும்."

ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலீ ( ரஹ்) அலைஹி அவர்களது ஆசிரியரான இமாமுல் ஹறமைனி (ரஹ்) அவர்கள் ஒரு ஊரில் ஒரு பெரியாரிடம் விருந்தினராக இறங்கினார்கள்.

இமாம் அவர்களது வருகையைக் கேள்விப்பட்ட போது, அங்குள்ள உலமாக்களும், பெரிய மனிதர்களும் இமாம் ஹறமைனி (ரஹ்) அவர்களைப் பேட்டி காண வந்தனர். அப்பொழுது, அங்குள்ள ஒருவர்.

"றஹ்மான் அர்ஷின் மீது இருக்கிறான்" என்ற ஆயத்தை ஓதி, இந்த ஆயத் இவ்வாறு இருக்கும் போது "அல்லாஹுத் தஆலாவிற்குக் குறிப்பிட்ட ஒரு இடமில்லை, அவ்வாறிருப்பதை விட்டும் அவன் தூயவன் என்று கூறுவதற்கு ஆதாரம் என்ன?'' என்று கூறினார்.

அதற்கு, இமாமுல் ஹறமைனி (ரஹ் )அவர்கள் "ஹளரத் யூனுஸ் (அலை) அவர்கள் மீன் வயிற்றினுள் இருக்கும் போது,

لَّاۤ اِلٰهَ اِلَّاۤ اَنْتَ سُبْحٰنَكَ اِنِّىْ كُنْتُ مِنَ الظّٰلِمِيْنَ

"உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறொருவனும் இல்லை. நீ மிகப் பரிசுத்தமானவன். நிச்சயமாக நானோ அநியாயக்காரர்களில் ஒருவனாகிவிட்டேன். (என்னை மன்னித்து அருள் புரிவாயாக!)" என்று பிரார்த்தனை செய்தார்.(குர்ஆன் : 21:87)

....என்று கூறிய வாக்கியங்கள்தான் "அவன் எங்குமில்லை” என்பதற்குரிய ஆதாரம் என்று கூறினார்கள். அதனைக் கேட்டவுடன் அங்கிருந்தவர்கள் அனைவரும் ஆச்சரியமடைந்தனர்.

இமாம் அவர்களை உபசரிப்பவர் "இதனை விவரித்துக் கூற வேண்டும் என்று இமாம் அவர்களைக் கேட்டார்.
அப்பொழுது இமாம் அவர்கள் அவரை நோக்கி “அங்கு ஒரு ஏழைக் கடன் காரர் இருக்கிறார். அவருக்கு ஆயிரம் வெள்ளிக் காசு (திர்ஹம்) கடனிருக்கிறது. அவரது கடனைத் தீர்த்து வைப்பதாக நான் வாக்களித்திருக்கிறேன். ஆகவே, அவரது கடனைத் தீர்த்து வைப்பதாயின் நான் விபரித்துக் கூறலாம்'' என்று கூறினார்கள்.
அதற்கு, அவ்விருந்து உபசாரக்காரர், அக்கடனைத் தான் தீர்த்து வைப்பதாகக் கூறினார். உடனே, இமாமுல் ஹறமைனி ( ரஹ் ) அவர்கள் :
"நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மிஅராஜுக்குச் சென்றிருந்த போது,
"உன்னை நீ புகழ்ந்தது போல் உன்னை நான் புகழ்ந்து முடிக்க இயலாது" என்று கூறி இருக்கிறார்கள்.
ஹளரத் யூனுஸ் (அலை) அவர்கள் மீன் வயிற்றில் கடலுக்குள்ளிருந்த போது,
"(வணக்கத்திற்குரிய) இறைவன் உன்னைத் தவிர (வேறு யாரும்) இல்லை. நிச்சயமாக நான் அநியாயக் காரர்களில் உள்ளவனாயிருக்கிறேன்'' என்று கூறி இருக்கிறார்கள்.
ஆகவே. இவ்விரு நபிமார்களும் இறைவனை "நீ" என்று கூறி
இருக்கிறார்கள். அவன் குறிப்பிட்ட ஒரு இடத்தில் இருந்திருப்பானாயின், அவனை "நீ" என்று முன்னோக்கி இருவரும் கூற சந்தர்ப்பம் வாய்த்திருக்காது. ஆகவே, எந்த ஒரு இடத்திலும் குறிப்பாக இல்லை என்பது இதிலிருந்து தெரியவருகிறது என்று கூறினார்கள்.
" இதனை இன்னும் விவரித்துக் கூற வேண்டும் " என்றதற்கு ,
ஹளரத் யூனுஸ் (அலை) அவர்கள் மீன் வயிற்றினுள் இருந்தது இம்மண்ணுலகில், ஆகவே, இம்மண்ணுலகில் அவன் இருந்தால்தான் அவனை "நீ" என்று அழைக்கலாம். அவ்வாறு இம்மண்ணுலகில் இருக்கிறவனை நபி ( ஸல் ) அவர்கள் விண்ணில் சென்று, மிஅராஜுக்குப் போய் அங்கிருந்து கொண்டு "நீ" என்று கூற முடியாது.
அவன் அங்கு அர்ஷின் மீது இருந்தால் ஹளரத் யூனுஸ் (அலை) அவர்கள் "நீ" என்று இம்மண்ணுலகில் இருந்து கொண்டு கூற முடியாது. ஆகவே, அவன் அர்ஷிலோ, விண்ணிலோ, மண்ணிலோ எங்கும் குறிப்பான ஓர் இடத்திலோ இல்லை காரணம் அவன் ஏகன்" என்று தெரியவருகிறது என்பது இமாமுல் ஹறமைனி ( ரஹ் ) அவர்கள் கூறியதன் கருத்தாகும்.
இந்த வசனத்தில் 'வானங்களிலும் பூமியிலும் எனும் சொற்றொடருடன் சம்பந்தப் பட்டதாகும். இதன்படி, "அவனே வானங்களிலும் பூமியிலும் உங்களது இரகசியத்தையும் பராசியத்தையும் அறிகின்ற, நீங்கள் தேடிக்கொண்டிருப் பவற்றை அறிகின்றர் இறைவன் ஆவான்" எனப் பொருள் அமையும்.
இன்னொரு கருத்து :"வானங்களில் அவனே இறைவன்" என்பதோடு வாக்கியத்தை நிறைவு செய்துவிட்டு. பின்வருவதைத் தனி வாக்கியமாக்கி, "பூமியில் உங்களது இரகசியத்தையும் பராசியத்தையும் அவன் அறிகின்றான்" எனப் பிரிக்க வேண்டும். இதுவே விரிவுரையாளர் இப்னு ஜரீர் (ரஹ்) அவர்க ளால் தேர்ந்தெடுக்கப்பட்ட கருத்தாகும்.
"நீங்கள் தேடிக்கொண்டிருப்பவற்றையும் அவன் அறிகின்றான்" என்று இவ்வசனத்தின் இறுதித் தொடர் தெரிவிக்கின்றது. அதாவது நீங்கள் புரிகின்ற நற்செயல்கள், தீய செயல்கள் அனைத்தையும் அவன் அறிகின்றான்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 89
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 6

وَمَا تَاْتِيْهِمْ مِّنْ اٰيَةٍ مِّنْ اٰيٰتِ رَبِّهِمْ اِلَّا كَانُوْا عَنْهَا مُعْرِضِيْنَ

மேலும் அவர்களுடைய றப்பின் ஆயத்துக்களிலிருந்து எந்த ஆயத்து அவர்களுக்கு வந்தாலும் அதனை புறக்கணிப்பவர்களாகவே அவர்கள் இல்லாமல் இல்லை (குர்ஆன் : 6:4)

فَقَدْ كَذَّبُوْا بِالْحَـقِّ لَـمَّا جَآءَهُمْ فَسَوْفَ يَاْتِيْهِمْ اَنْۢـبٰٓؤُا مَا كَانُوْا بِهٖ يَسْتَهْزِءُوْنَ

எனவே, சத்திய (வேத)ம் அவர்களிடம் வந்திருக்கும் போதும் அதனைப் பொய்ப்பிக்கின்றனர்; ஆனால், எந்த விஷயங்களைப் (பொய்யென்று) பரிகசித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவை அவர்களுக்கு வந்தே தீரும். (குர்ஆன் : 6:5)

"ஆயத்" என்ற இவ்வார்த்தைக்கு இங்கு திருக்குர்ஆனின் வசனங்கள் என்றும், முஃஜிஸாக்கள் என்றும் பொருள் கொள்ளலாம்

திருக்குர்ஆனின் வசனங்கள் என்று கருத்துக் கொள்ளும்போது "திருக்குர்ஆனின் ஆயத்துகளிலிருந்து ஏதேனும் ஒரு ஆயத் அருளப்படும் போதெல்லாம் திருமக்காவிலுள்ள காஃபிர்கள் அதனைக் குறித்து குதர்க்க வாதம் செய்வதும், பரிகாசம் செய்வதும் என்பது கருத்து.

முஃஜிஸாக்கள் என்று கருத்துக் கொள்ளும்போது "அல்லாஹுத் தஆலாவுடைய ஏகத்துவத்தை அறிவிக்கும்படியான அற்புதங்கள் நாயகம் அவர்களிடம் வெளியாகும் போதெல்லாம் அதனை அவர்கள் பார்த்து அங்கீகரிப்பதில்லை" என்பது கருத்து.

மக்கத்து நிராகரிப்பாளர்கள் மறுத்த அற்புதங்கள்:

நபி (ஸல்) அவர்கள் நிகழ்த்திய அற்புதங்கள் என்பது இஸ்லாமிய நம்பிக்கையின்படி தனது வாழ்நாளில் நபி(ஸல்) அவர்களால் நிகழ்த்தப்பட்ட இயற்கைக்கு மீறிய நிகழ்வுகளாகும். இவற்றில் பெரும்பாலான அற்புதங்கள் குர்ஆனில் அல்லது ஹதீஸ்கள் மூலம் எடுத்து காட்டப்படுகின்றன.

நபி (ஸல்) அவர்களின அற்புதங்கள், உணவை அதிகரிக்க வைத்தல், மறைந்திருக்கும் நீரை வெளிப்படுத்தல், மறைவானவை குறித்த அறிவு, தீர்க்கதரிசனங்கள், மருத்துவ சிகிச்சைமுறைகள், இயற்கை நிகழ்வுகள் மீதான ஆற்றல் எனப் பரந்த அளவில் அமைந்திருந்தன.

வரலாற்றாசிரியர் டெனிஸ் கிரில் கூற்று படி, அல் குர்ஆன் மூலம் மட்டுமே தெளிவாக நபி (ஸல்) அவர்களின் அற்புதங்களை விவரிக்க முடியாது. எனினும், பல அற்புதங்கள் குர்ஆனில் கூறப்பட்டு பின் அதனுடைய மேலதிகத் தகவல்கள் ஹதீஸ்கள் மூலம் விவரிக்கப்பட்டுள்ளன. ஹதீஸ்கள் நபி (ஸல்) அவர்களின் அற்புதங்கள் விளக்குவதில் இன்றியமையாததாக உள்ளது.

முஸ்லிம்களின் நம்பிக்கையின் படி குர்ஆனே மிகப்பெரும் அற்புதமாகும். ஏனெனில் மற்ற இறைத்தூதர்கள் நிகழ்த்திய அற்புதங்கள் போலல்லாமல் குர்ஆன் நபி(ஸல்) அவர்களின் வாழ்நாளைக் கடந்தும் நிலைபெற்றுள்ளது.

நபி(ஸல்) அவர்கள் நிலவை பிளந்த நிகழ்வு

இஸ்ரா மற்றும் மிஃராஜ் பயணம் - ஒரே இரவில் புராக் வாகனம் மூலம் மக்காவில் இருந்து ஜெருசலேம் அல்-அக்ஸா பள்ளிவாசல் சென்று அங்கிருந்து விண்ணுலகம் சென்ற இரவுப் பயணம்

அலி இபின் சகல் ரப்பான் அல் தபரி அவர்கள் கூற்றுப்படி நபி (ஸல்) அவர்கள் தனது எதிரிகள் அனைவரையும் வென்றது அற்புதங்களில் ஒன்றாகும்.

இதைப் போன்ற பல நவீன முஸ்லிம் வரலாற்றாசிரியர்கள், நபி (ஸல்) அவர்கள் குறுகிய காலத்தில் மதம், சமூகம், அரசியல், இராணுவம் மற்றும் இலக்கியம் போன்ற பல்வேறு உலகியல் துறைகளில் மாற்றங்களை

நிகழ்த்தியதும், "நாடோடி குழுக்களாகவும் கல்வியறிவற்றவர்களாவும் இருந்த அரேபியர்களை உலகை வென்றவர்களாக நபி (ஸல்) அவர்கள் மாற்றியதும் அற்புதமாகக் கருதப்படுகின்றது.
பல சந்தர்ப்பங்களில் இறைவன் அருளால் உணவு மற்றும் தண்ணீர் வழங்கியது.
'அஸர் தொழுகையின் நேரம் நெருங்கியபோது நபி(ஸல்) அவர்களை பார்த்தேன். மக்கள் உளூச் செய்வதற்குத் தண்ணீரைத் தேடினார்கள். தண்ணீர் கிடைக்கவில்லை. நபி (ஸல்) அவர்களிடம் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வரப்பட்டது.

தண்ணீர் உள்ள பாத்திரத்தில் நபி (ஸல்) அவர்கள் தங்களின் கையை வைத்து அப்பாத்திரத்திலிருந்து உளூச் செய்யுமாறு மக்களுக்குக் கட்டளையிட்டார்கள். நபி (ஸல்) அவர்களின் விரல்களின் கீழேயிருந்தது அங்கிருந்த கடைசி நபர் உளூச் செய்து முடிக்கும் வரை தண்ணீர் சுரந்து கொண்டிருந்ததை பார்த்தேன்" என அனஸ் இப்னு மாலிக் (ரலி) அறிவித்தார்.புஹாரி :169
நபி(ஸல்) உரை நிகழ்த்தும் போது தங்கள் திருக்கரங்களை ஈச்ச மரம் மிம்பரில் வைப்பார்கள். அதை நீக்கி புது மிம்பர் செய்தபோது அழுத ஈச்ச மரம் அழுதது. நபித்தோழர்கள் அனைவரும் அதன் அழு குரலைக் கேட்டனர். பின்னர் மீது நபியவர்களின் திருக்கரம் பட்டதும் ஆறுதல் அடைந்தது.
நபி (ஸல்) அவர்களது கட்டளையை ஏற்று இரண்டு மரங்கள் நகர்ந்தது.
மக்காவிலிருந்து மதீனா சென்ற ஹிஜ்ரா பயணம் செய்தது.
நபி (ஸல்) அவர்கள் தபுக் யுத்தத்தின் ஆயிரக்கணக்கான வீரர்களின் தாகம் தணிக்கவும் உளூச் செய்யவும் நீர் சுரக்கச் செய்த நிகழ்வு.
நபி (ஸல்) அவர்கள் ஹுதைபியா உடன்படிக்கை போது மக்களின் தாகம் தணிக்கவும் உளூச் செய்யவும் வறண்ட கிணற்றை ஊற்றெடுக்கச் செய்தது.
பத்ர் யுத்தம் போது அவர் கையினால் எறிந்த தூசியினால் சில எதிரிகளைக் குருடாக்கினார். இந்நிகழ்வு குர்ஆனில் சூரா அல்-அன்ஃபால், வசனம் 8:17 இல் கூறப்பட்டுள்ளது.
பத்ரு போர் ஆரம்பிக்கும் முன்பே எதிரிப்படையின் தலைவன் எவ்விடத்தில் கொல்லப்படுவான் என சுட்டிக்காட்டினார். அதேபோல அவர் சுட்டிக்காட்டிய இடத்தில் எதிரிப்படையின் தலைவர்கள் கொல்லப்பட்டார்.
நபி (ஸல்) அவர்கள் தோழர் உஸ்மானுக்கு பிற்காலத்தில் பேராபத்து ஏற்படும் எனக் கூறினார். அதே போல் உஸ்மான் அவர்கள் கலிபா பதவி ஏற்றபின் அவருக்கு பேராபத்து ஏற்பட்டது.

நபி (ஸல்) அவர்கள் தோழர் அம்மார் இப்னு யாசிர் பிற்காலத்தில் நீதியில்லா குழுவால் கொல்லப்பட நேரும் எனக் கூறினார். அதே போல் அம்மார் இப்னு யாசிர் பிற்காலத்தில் கொல்லப்பட்டார்.
நபி (ஸல்) அவர்கள் பிற்காலத்தில் இறைவன் அவரது பேரன் ஹசன் மூலம் இரண்டு பெரிய முஸ்லீம் குழுக்கள் இடையே சமாதானம் ஏற்படச் செய்வார் என முன்னறிவிப்புக் கூறினார்.

பிற்காலத்தில் ஹசன்-முஆவியா குழுக்களுக்கிடையே ஒப்பந்தம் நடைபெற்றது.அவர் முஸ்லிம்களின் எதிரிகளின் பிரபலமான ஒருவரை கொல்வேன் என்று கூறினார். அதே போல் உஹது போரில் உபை இப்னு கலப் கொல்லப்பட்டார்.
அரேபிய பாலைவனத்தில் வாழ்ந்த அவர்கள் பிற்காலத்தில் தமது நாட்டில் கடல் பகுதியும் இருக்கும் எனக்கூறினார். அதே போல் கலிபாக்கள் ஆட்சியில் நாட்டின் எல்லைகள் விரிந்து கடல் பகுதியும் நாட்டின் எல்லையில் வந்தது.
நபி (ஸல்) அவர்கள் தமது மனைவிகளிடம் தாம் இறந்த பிறகு மனைவிகளில் அதிகத் தொண்டு செய்யும் ஒருவரே விரைவில் இறப்பார் எனக்கூறினார். அதே போல் அவர் இறந்த பிறகு அதிக தொண்டுள்ளம் கொண்ட அவரது மனைவியான ஜைனப் இறந்தார்.

அப்துல்லா இப்னு மஸ்ஊத் அவர்களின் பால் வற்றிய ஆடு நபி (ஸல்) அவர்கள் நிகழ்த்திய அற்புதத்தால் அதிகமாக பால் கொடுத்தது.
கைபர் போரில் நோயுற்ற அலீ(ரலி அவர்களின் கண்ணைக் குணப்படுத்தினார்.
வறண்டு கிடந்த மதீனா நகரில் மழை பொழிய காரணமாக இருந்தார்கள். அவரது விரல்களுக்கு இடையே இருந்து தண்ணீர் வரச் செய்தது அற்புதமாகக் கருதப்படுகிறது.
நபி (ஸல்) அவர்கள் தபுக் போரில் கையளவு பேரித்தம் பழங்கள் மூலம் பல வீரர்களின் பசியைத் தணிக்க வைத்தார்கள்.
நபி (ஸல்) அவர்கள் தான் இறந்த பிறகு எனது குடும்ப உறவினர்களில் தனது மகள் பாத்திமா தான் முதலில் இறப்பார் எனக்கூறினார். அதே போல் முகம்மது நபி இறந்த பிறகு அவரது மகள் பாத்திமா தான் முதலில் இறந்தார்.
ஹுனைன் போரில் அயத் பின் அம்ரு என்பவருக்கு தலையில் காயம் ஏற்பட்டு இரத்தம் வழிந்தது முகம்மது நபி அவர்கள் தன் கையால் இரத்தத்தைத் துடைத்து இறைவனிடம் பிரார்த்தனை செய்ய அவர் காயம் ஆறி நெற்றி பளபளப்பாக மாறியது.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 90**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 7**

اَلَمْ يَرَوْا كَمْ اَهْلَـكْنَا مِنْ قَبْلِهِمْ مِّنْ قَرْنٍ مَّكَّنّٰهُمْ فِى الْاَرْضِ مَا لَمْ نُمَكِّنْ لَّـكُمْ وَاَرْسَلْنَا السَّمَآءَ عَلَيْهِمْ مِّدْرَارًا وَّجَعَلْنَا الْاَنْهٰرَ تَجْرِىْ مِنْ تَحْتِهِمْ فَاَهْلَكْنٰهُمْ بِذُنُوْبِهِمْ وَاَنْشَاْنَا مِنْ بَعْدِهِمْ قَرْنًا اٰخَرِيْنَ
அவர்களுக்கு முன்னர் நாம் எத்தனையோ தலைமுறையினரை அழித்திருக்கிறோம் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா?
பூமியில் நாம் உங்களுக்கு செய்து தராத வசதிகளையெல்லாம் அவர்களுக்குச் செய்து கொடுத்திருந்தோம்; அவர்கள் மீது நாம் வானம் தாரை தாரையாக மழை பெய்யுமாறு செய்து, அவர்களுக்குக் கீழே ஆறுகள் செழித்தோடும்படிச் செய்தோம்;
பிறகு அவர்களின் பாவங்களின் காரணத்தால் அவர்களை அழித்து விட்டோம்; அவர்களுக்குப் பின் வேறு தலைமுறைகளை உண்டாக்கினோம்.(குர்ஆன் : 6:6)
ஒரு தலைமுறை என்பதை அறுபது ஆண்டு முதல் ஒரு நூறு ஆண்டுகள் வரையுள்ள காலம் என்று அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் பிஷ்ரு (ரலி) அவர்களை நோக்கி பெருமானார் (ஸல்) அவர்கள், நீர் ஒரு தலைமுறை வாழ்வீர்" என்று கூறினார்கள். அவர் சரியாக ஒரு நூறாண்டு காலம் வாழ்ந்திருக்கிறார். இதன்படி ஒரு தலைமுறைக்கு சரியாக நூறு ஆண்டுகள் என்பது தெரிகிறது.

எத்தனை ஆண்டுகளாயினும் ஒவ்வொரு தலைமுறையிலும் ஏதாவதொரு முக்கிய சம்பவம் நடந்தே முடிகிறது. அது பின்னவர்களுக்கு நன்மையாகவும் இருக்கலாம், அல்லது தீமையாகவும் இருக்கலாம்.
இவற்றினைக் கவனிப்போர் நன்மையாயின், அதனைப் பயன்படுத்திப் பெருக்க வேண்டும். தீமையாயின் அதனை ஒழித்து விட வேண்டும். இது தான் படிப்பினையாகும். இம்முறையில் 'முந்தையத் தலைமுறையினரை நீங்கள் கூர்ந்து நோக்கவில்லையா?" என்பது வசனத் துவக்கத்தின் கருத்தாகும்.
சிலர், தங்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் நீண்ட ஆயுள், உடல் வலிமை, பொருளாதார வளம், மக்கள் பாக்கியம் ஆகியவற்றினால் மதி மயங்கி நல்லவைகளைப் புறக்கணிப்பர்; பரிகசிப்பர்; நிராகரிப்பர்; நல்லவற்றைப் போதிப்போரை எள்ளி நகையாடுவர்.
இத்தகையோரும் முந்தைய தலைமுறையினரின் வரலாற்றினை சிறிது சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இதனைக் குறித்து இவ்வசனத்தில், உங்களுக்கு நாம் செய்து கொடுத்திராத பெரும் பெரும் வசதிகளையெல்லாம் அவர்களுக்கு நாம் செய்து கொடுத்திருந்தோம் எனக் கூறப்பட்டுள்ளது.
உதாரணமாக: நூஹ் நபியின் கூட்டத்தினர் நீண்ட காலம் (1000 வயது) உலகில் வாழ்ந்தனர். அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களைப் பொய்யாக்கி அவனுடைய நபியைப் பரிசுசித்துக் கொண்டேயிருந்தனர் முடிவில் கொடூரமான வெள்ளத்தால் அழிக்கப்பட்டனர்.

'ஆது' வர்க்கத்தினர் உடல் வலிமை பெற்றிருந்தனர். அவர்களுடைய நபியாகிய ஹூது (அலை) அவர்களை நிராகரித்து நையாண்டி செய்தனர். முடிவென்ன? கொடிய புயற்காற்றினால் அழிக்கப்பட்டனர்.
"தமூது" வர்க்கத்தினருக்கு எல்லா வகையான நிலவளமும் இருந்ததால் பெருஞ் செல்வந்தர்களாக இருந்தனர். அதன்மீது கொண்ட மமதையால் அவர்களுடைய நபியாகிய எளிய ஸாலிஹ் (அலை) அவர்களை நிராகரித்துத் துன்புறுத்திப் பரிகசித்தனர். முடிவில் பயங்கரமான பேரிடிச் சப்தத்தால் அழிந்தனர்.
ஆட்சியில் தன்னை மிஞ்சுவதற்கு யாரும் இல்லை என்ற மமதையில், ஹஜ்ரத் மூஸா நபியைக் சேவலமாக நினைத்து அவர்களது நற்போதனையை மறுத்த ஃபிர்ஔனும் அவனுடைய கூட்டத்தினரும் தண்ணீரில் மூழ்கடிக்கப்பட்டனர்.

இப்படி ஒவ்வொரு காலத்தவரின் வரலாறுகளைப் பார்த்தீர்களாயின், உங்களை விட எத்தனையோ மடங்கு அவர்கள் வசதி பெற்றிருந்தனர். அதன் மமதையில் நல்லவர்களைப் புறக்கணித்துக் கேலியும் செய்தனர். அழிவு வந்த போது அவர்களுடைய வசதியைக் கொண்டு அதனைத் தடுத்து நிறுத்தி விட முடியவில்லை.
இத்தனைக்கும் அவர்களுடைய நாடு செழிக்கப் போதிய மழையை வானிலிருந்து அவர்கள் மீது தொடராகப் பொழியுமாறு செய்தோம். ஆறுகளும் வாய்க்கால்களும் அவர்களுக்குக் கீழ் நிரந்தாமா ஓடிக் கொண்டிருக்குமாறு செய்தோம்.
ஆனால் அவர்கள் உங்களைப் போன்றே நம்மையும், தமது தூதர்களையும், நமது வசனங்களையும் நிராகரித்தனர்; பரிகசித்தனர். நாம் கொடுத்திருத்த வசதிகளைப் பயன்படுத்திக் கொண்டுப் பலவித அக்கிரமங்களைப் புரித்தனர்.

முடிவில், அவர்களுடைய எல்லைமீறிய பாவங்களின் காரணத்தால் கொடூரமான வேதனைகளைக் கொண்டு அவர்களை அழித்து விட்டு அவர்களுக்குப் பின்னர் மற்றொரு தலைமுறையினரை உண்டாகி விட்டோம் என்பதை நீங்கள் உணரவில்லையா?
மற்றொரு தலைமுறையினர் என்று குர்ஆன் குறிப்பிடுவது அலெக்ஸாண்டிரியா ( அல் இஸ்கந்திய்யா ) நகரமாக இருக்கலாம் என்று வரலாற்று ஆய்வாளர்கள் ஆதாரங்களோடு குறிப்பிடுகின்றனர்.
இந்நகரை மசிடோனியப் பேரரசன் அலெக்சாந்தர் தோற்றுவித்து, இதற்குத் தன் பெயரை இட்டதாகக் கூறப்படுகிறது. இது எகிப்திலேயே இரண்டாவது பெரிய நகரம் ஆகும். இதன் பரப்பளவு 1,034.4 சதுர கி.மீ. ஆகும். இதன் மக்கள்தொகை ஏறத்தாழ 4.1 மில்லியன் ஆகும்
அலெக்ஸாண்டிரியா என்பது எகிப்தின் வடக்கு மத்திய தரைக்கடல் கடற்கரையில் அமைக்கப்பட்ட ஒரு துறைமுகமாகும். கிமு 332 இல் சிரியாவைக் கைப்பற்றியதைத் தொடர்ந்து, கிரேட் அலெக்சாண்டர் எகிப்தை ஆக்கிரமித்து அடுத்த ஆண்டு கிமு 331 இல் இந்நகரத்தை நிறுவினார்.
அலெக்ஸாண்டிரியா உலகப்புகழ் பெற்ற நூலகத்திற்காகவும், செராபிஸ் கோயிலுக்காகவும் பண்டைய உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்றான பண்டைய ஏழு அதிசயங்களில் ஒன்றான பெரிய ஃபரோஸ் கலங்கரை விளக்கம் உள்ளது
மற்றும் அலெக்ஸாண்டிரியாவின் அருங்காட்சியகம் பண்டைய உலகில் கற்றல் மற்றும் அறிவின் புகழ்பெற்ற மையமாக உருவானது, உலகம் முழுவதிலுமிருந்து அறிஞர்களை ஈர்க்கிறது

டோலமிக் வம்சம் அலெக்சாண்டர் தி கிரேட் இறந்த பிறகு அலெக்ஸாண்டிரியாவை தலைநகராக மாற்றி 300 ஆண்டுகள் எகிப்தை ஆட்சி செய்தது
இன்று, ஃபரோஸ் கலங்கரை விளக்கத்தின் எச்சங்கள் மற்றும் அரச காலாண்டு கிழக்கு துறைமுகத்தின் நீரில் மூழ்கியுள்ளது
அரச குடியிருப்பு நகரின் வடக்குப் பகுதியில் அமைந்திருந்தது. துரதிர்ஷ்டவசமாக, அரச குடும்பம் இப்போது கிழக்கு துறைமுகத்தின் நீரின் கீழ் மூழ்கியுள்ளது.
அலெக்சாண்டர் தி கிரேட் கல்லறை அலெக்ஸாண்ட்ரியாவில் இருந்தது, இருப்பினும், தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் அதை இன்னும் கண்டுபிடிக்கவில்லை
"தங்களுக்குக் கிடைத்த வசதிகளைப் பாவங்களில் பயன்படுத்தினால் நாம் அவைகளைப் பெருக்கொண்டே இருப்போம் என எண்ணாதீர்கள், நீங்கள் எதிர்பாராத விதத்தில் நமது கொடிய வேதனை உங்களை அழித்து விடும்" என்பது இவ்வசனத்தில் பொதுக்கருத்தாகும்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 91
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 8

وَلَوْ نَزَّلْنَا عَلَيْكَ كِتٰبًا فِىْ قِرْطَاسٍ فَلَمَسُوْهُ بِاَيْدِيْهِمْ لَقَالَ الَّذِيْنَ كَفَرُوْۤا اِنْ هٰذَاۤ اِلَّا سِحْرٌ مُّبِيْنٌ
காகிதத்தில் (எழுதப்பட்ட) ஒரு வேதத்தையே நாம் உம் மீது இறக்கி வைத்து, அதனை அவர்கள் தம் கைகளால் தொட்டுப் பார்த்தபோதிலும், “இது பகிரங்கமான சூனியத்தைத்தவிர வேறில்லை“ என்று அந்நிராகரிப்போர் நிச்சயமாக சொல்வார்கள்.(குர்ஆன் : 6:7)

وَقَالُوْا لَوْلَاۤ اُنْزِلَ عَلَيْهِ مَلَكٌ وَلَوْ اَنْزَلْنَا مَلَـكًا لَّقُضِىَ الْاَمْرُ ثُمَّ لَا يُنْظَرُوْنَ
(இவர் உண்மையான தூதர் என்று சாட்சி கூற) இவர் மீது ஒரு மலக்கு இறக்கப்பட வேண்டாமா? என அவர்கள் கூறுகின்றனர்; (அவ்வாறு) நாம் ஒரு மலக்கை இறக்கி வைப்போமானால் (அவர்களுடைய) காரியம் முடிக்கப்பட்டிருக்கும்; பிறகு அவர்களுக்குச் சிறிதும் அவகாசம் கொடுக்கப்படமாட்டாது. (குர்ஆன் : 6:8)

وَلَوْ جَعَلْنٰهُ مَلَـكًا لَّجَـعَلْنٰهُ رَجُلًا وَّلَـلَبَسْنَا عَلَيْهِمْ مَّا يَلْبِسُوْنَ
நம் தூதரை ஒரு மலக்காகவே அனுப்புவதாயினும் (அவர்கள் மலக்கை காணுஞ் சக்தியில்லாதவர்கள்; ஆதலால்) அவரையும் நாம் மனித உருவத்திலேயே ஆக்கி (அனுப்பி)யிருப்போம், (அப்பொழுதும்,) அந்த இடத்தில் அவர்கள் (இப்பொழுது) குழம்பிக் கொள்வது போல் (அப்பொழுதும்) நாம் குழப்பத்தை ஏற்படுத்தியிருப்போம்.(குர்ஆன் : 6:9)
இவ்வசனங்கள் இறக்கப்பட்ட வரலாறு
நள்ருபின் ஹாரிஸ் அப்துல்லாஹ் பின் உமய்யா, நவ்பல்பின் குவைலித் ஆகிய மூவரும் ஒரு தினம் பெருமானார் (ஸல்) அவர்களிடம், "முஹம்மதே! அல்லாஹ்விடமிருந்து நீர் ஒரு கடிதம் கொண்டு வரவேண்டும், அத்துடன் நான்கு மலக்குகளும் வர வேண்டும். இந்த வேதம் உண்மையென்றும், நீர் அல்லாஹ்வின் தூதரென்றும் எங்களுக்கு அவர்கள் சாட்சி கூற வேண்டும். இவ்வாறு நீர் செய்யாதவரை நாங்கள் உம்மை ஒருபோதும் விசுவாசம் கொள்ள முடியாது" என்று கூறினர்.
அப்பொழுது அவர்களது அறியாமையை விளக்கி இவ்வசனங்கள் இறக்கப்பட்டன. (அறிவித்தவர்: கலபி நூல்கள்: காஜின், ரூஹுல்ம ஆனி முதலியன.)
அவர்கள் கேட்கிறபடி காகிதத்தில் எழுதப்பட்ட ஒரு வேதத்தை நாம் உம்மீது இறக்கி வைக்க, அதனை அவர்கள் தங்களது கரங்களால் தொட்டுப் பார்த்தாலும் நாம் விரும்பிய படித்தானே கிடைத்திருக்கிறது என்று உடனேயே

அதை நம்பிட மாட்டார்கள். ஏதாவதுபுதிய அற்புதம் தோன்றினால் அவர்கள் வழக்கமாக கூறுகிறபடியே இதைக் குறித்தும்,"இது தெளிவான சூனியமேயல்லாமல் வேறு இல்லை" என்றே அந்த நிராகரிப்போர் கூறுவர்.
அத்தூதுவர் மீது ஒருமலக்கு இறக்கப்பட்டு அவரின் நபித்துவம் உண்மைதான். அவர் அல்லாஹ்லின் தூதர் தான் என சாட்சி கூறக் கூடாதா என்றும் கூறுகின்றனர்.
அவர்கள் கூற்றுப்படி ஒரு மலக்கை அவரது சுய ரூபத்தில் தாம் இறக்கியிருந்தால் அவர்களது காரியம் அத்துடன் முடிக்கப்பட்டிருக்கும். அம்மலக்கின் பயங்கரமான உருவத்தைப் பார்த்து அப்படியே மயங்கி விழுந்து செத்து மடிந்து விடுவர். அப்பால் அவர்கள் இப்படியெல்லாம் பேசுவதற்கு எத்தகைய அவகாசமும் கொடுக்கப்பட மாட்டார்கள்

மனித சக்தியால் மலக்கிள் சுய ரூபத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. ஆகையால் அத்தூதுவரை ஒரு மலக்காகவே அவர்கள் பால்அனுப்ப முடியாது. அப்படியே அவரை ஒரு மலக்காகவே நாம் ஆக்கியிருந்தாலும் அவரை ஒரு மனிதராக மனித ரூபத்தில் தான் நாம் அனுப்பியிருப்போம்.
அவ்வாறு அனுப்பி அவர் மலக்கு தான் என்றால் அவர்கள் நம்பவே மாட்டார்கள். மீண்டும் அவர்கள் குழம்பிக் கொண்டிருக்கும் ஒன்றையே அவர்கள் மீது நாம் குழப்பியவர்களாவோம். திரும்பவும் அதே பிரச்சினை தான். எம்முறையிலும் அவர்கள் விசுவாசம் கொள்ளவே மாட்டார்கள் என்பன இவ்வசனங்களின் கருத்துரையாகும். மலக்குகளின் அசல் வடிவத்தை நேருக்கு நேராகப் பார்க்க மனித சக்தியால் இயலாது. ஆதலின், நபிமார்களிடம் மலக்குகள் வரும்போது சாதாரண மனித உருவத்திலேயே வந்திருக்கிறார்கள்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் திஹ்யத்துல் கல்பீ ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களது வடிவத்தில் வந்து கொண்டிருந்தார்கள்.
ஹளரத் தாவூத் அலைஹிஸ் ஸலாம் அவர்களிடம் இரண்டு மலக்குகள், கட்சிக்காரர்களின் வடிவத்தில் வந்தார்கள்.

ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம், விருந்தினர்களின் வடிவத்தில் வந்தார்கள். ஆனால், நபிமார்கள் அவர்களை இக்கோலத்தில் கண்டு, மலக்குகள் என்று தெரிந்து கொண்டது அவர்களது நபித்துவத்தின் பரிசுத்த சக்தியினாலே யாகும்.
ஆனால் மலக்குமார்கள் நம்மைப் போன்ற சாதாரணர் கண்களுக்கு ஏன் தெரியவது இல்லை ? சொல்றேன்.
என்னுடைய டேபிள் நீளம், அகலம், உயரம் கொண்ட முப்பரிமாணம் அதே மாதிரி டேபிள் மேல் இருக்கும் புத்தகம் Einstein : The life and Times , Ronald W. Clark என்ற புத்தகம் 7 அங்குல நீளமும் , 5 அங்குல அகலமும் , 2 அங்குல உயரமும் கொண்ட முப்பரிமாணங்களைக் கொண்டது சரியா ?
பிரபஞ்சத்தின் எல்லா இடங்களிலும் , ஒவ்வொரு புள்ளியிலும் மூன்றுக்கும் மேற்பட்ட பல பரிணாமத்தின் நிலைகள் ஊடறுத்துக் கொண்டு செல்கின்றன. ஒவ்வொரு புள்ளியிலும் பல பரிமாணங்களினால் சூழப்பட்டு காணப்படுகின்றன .
சரி, எத்தனை பரிமாணங்கள்தான் பிரபஞ்சத்தில் இருக்கிறது?
சுமார் 16 பரிமாணங்கள் வரை இருக்கலாம்.
சில பரிமாணங்கள் உங்கள் வீட்டுக்குள்ளே புகுந்து வெளிப்புறம் வழியாக சென்று இரண்டாவது வானத்தை அடையலாம். உங்களுக்குத் தெரிவது இல்லை .( உ-ம்)
" இறுதி நாள் அவர்களை நெருங்கிய சமயத்தில், அவர்களுக்காகப் பூமியில் இருந்து ஒரு கால்நடையை (தாப்பத்துல் அர்ளு ) நாம் வெளிப்படுத்துவோம். அது அந்தெந்த மனிதர்கள் நம்முடைய வசனங்களை நம்பிக்கை கொள்ளவில்லை என்பதை அவர்களுக்குச் சொல்லிக் காண்பிக்கும்" குர்ஆன் (27 : 82 )
அந்த கால்நடை எந்த பரிமாணத்தில் மறைத்து வைக்கப்பட்டிருக்கிறது ? தெரியவில்லை

முப்பரிணாமத்தைக் கொண்டு வாழும் நாம், நாம் இருக்கும் இதே தெருக்களில் அதே திசையில் 8 வது பரிணாமத்தின் சொந்த வீடுகள், அவர்களுடைய உயிரினங்கள் கூட இருக்கலாம். அது இருப்பதும் உங்களுக்கும் எனக்கும் தெரிவதில்லை .
நபி (ஸல்) அவர்கள் முப்பரிமாணத்திற்கும் அப்பாற்பட்ட வேறொரு பரிமாணத்திலுள்ள வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களைக் கண்டதாக குர் ஆனில்
"நிச்சயமாக ஜிப்ரயீல் தெளிவான வானத்தின் கடைக்கோடியில் மெய்யாகவே கண்டார்" குர்ஆன் (81 : 23)
மேலும் ஜிப்ரயீல் (அலை) அவர்களை 600 இறக்கைகளுடன் சுய ரூபத்தில் நபியவர்கள் பார்த்திருக்கிறார்கள்.
அதே ஜிப்ரயீல் (அலை) மூன்றாம் பரிணாமத்திற்குள் வந்து "யா ரசூல்லாஹ் , இஸ்லாம் என்றால் என்ன ? கேள்வி கேட்டு விட்டு ஜிப்ரயீல் போன பிறகு சுற்றி இருந்த நபித்தோழர்களிடம் " வந்தது யார் தெரியுமா என்று கேட்க அவர்கள் தெரியாது என்றதும் வந்தவர் வானவர் ஜிப்ரயீல் (அலை) என்கிறார்கள் நபியவர்கள்

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 92
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 9

وَلَقَدِ اسْتُهْزِئَ بِرُسُلٍ مِّنْ قَبْلِكَ فَحَاقَ بِالَّذِيْنَ سَخِرُوْا مِنْهُمْ مَّا كَانُوْا بِهٖ يَسْتَهْزِءُوْنَ
(நபியே!) உமக்கு முன்னர் வந்த தூதர்களும் நிச்சயமாக (இவ்வாறே) பரிகசிக்கப்பட்டனர்; முடிவில் அவர்கள் எதைப் பரிகசித்துக் கொண்டிருந்தனரோ அதுவே பரிகசித்தவர்களை வந்து சூழ்ந்துகொண்டது. (குர்ஆன் : 6:10)
பரிகாசம் என்றால் இகத்தாளம். இகத்தாளம் சொல்லே பேச்சு வழக்கில் 'எகத்தாளம்' எனப்படுகிறது.இகழ்தல் - ஏளனம், கிண்டல், நக்கல், மனம் நோகும்படி பரிகாசம் செய்வது எனப் பொருள்படும்.
நபி ( ஸல்) அவர்களது நபித்துவத்தைக் குறித்து நிராகரிப்பாளர்கள் கூறிய வினாக்களுக்குப் பதில் கூறிய பின், இந்த ஆயத்தில் நபி ( ஸல்) அவர்களுக்கு ஆறுதல் சொல்லப்பட்டிருக்கிறது.
நபி (ஸல்) அவர்களுக்கு முன்னிருந்த நபிமார்களையும் அக்காலத்திலிருந்த நிராகரிப்பாளர்கள் பரிகசிக்கத்தான் செய்தனர். இறுதியாக, அவர்களது பரிகாசத்திற்குரிய தீமைப் பயனை அவர்கள் அடைந்தனர். அது போல, இந்நிராகரிப்பாளர்கள் தங்கள் பரிகசிப்பிற்குரிய தண்டனையை நிச்சயம் அனுபவிப்பர் என்பது இந்த ஆயத்தின் கருத்து.

இதில் சொல்லப்பட்டதற்கேற்ப பத்ருப்போரில் நிராகரிப்பாளர்கள் தண்டனையடைந்தனர்.
ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் ஹளரத் பிலால் ( ரலி) அன்ஹு, ஸுஹைப் ( ரலி) அம்மார் ( ரலி ) முதலிய சில ஏழை ஸஹாபாக்களுடன் திருமக்காவிலுள்ள ஹரம் ஷரீபில் இருந்தார்கள்.
அது சமயம் சில குறைஷிகளுடன் சென்று கொண்டிருந்த அபூஜஹ்ல், இவர்களைப் பார்த்து "இவர்கள்தான் சுவர்க்கத்து ராஜாக்கள் என்று முஹம்மது எண்ணிக் கொண்டிருக்கிறார்" என்று கூறிப் பரிகாசமாக இகத்தாளமாக நக்கல் செய்து சிரித்து விட்டுப் போனான்.

பின்னர், அல்லாஹுத்தஆலா பத்ருப்போரில் அவனைச் செய்ய வேண்டியதை யெல்லாம் செய்தான். அபூஜஹ்ல் தனது பரிகசிப்பிற்குரிய தண்டனையைப் பெற்றுக் கொண்டான்.அதாவது
"அபூ ஜஹ்ல் என்ன ஆனான் என்று பார்த்து வருபவர் யார்?' என்று நபி (ஸல்) அவர்கள் (பத்ருப் போர் முடிந்த போது) கேட்டார்கள். உடனே இப்னு மஸ்ஊத் (ரலி) (அவனைப் பார்த்து வரச்) சென்றார்கள்.
அப்போது அவனை அஃப்ராவின் இரண்டு புதல்வர்கள் (முஆத், முஅவ்வித் ஆகிய அன்ஸாரி சிறுவர்கள் ) இருவரும் பலமாகத்) தாக்கி விடவே, அவன் குற்றுயிராக இருக்கக் கண்டார்கள்.

அப்போது இப்னு மஸ்ஊத் (ரலி) அவனுடைய தாடியைப் பிடித்துக் கொண்டு, 'அபூ ஜஹ்ல் நீ தானே!” என்று கேட்டார்கள்.
“நீங்கள் கொன்றுவிட்ட ஒரு மனிதனுக்கு மேலாக... அல்லது தன்னுடைய (சமுதாயத்து) மக்களாலேயே கொல்லப்பட்டுவிட்ட ஒரு மனிதனுக்கு மேலாக... ஒருவன் உண்டா?' என்று (தன்னைத் தானே பெருமைப்படுத்தியபடி) அவன் கேட்டான்.( புஹாரி : 3962 அனஸ் (ரலி)
ஆதுக் கூட்டத்திலுள்ள ஒரு வர்க்கத்தார் தங்களது நபியின் உடல் அமைப்பைக் குறித்து பரிகசித்தனர். ஆதலின் அவர்கள் உருமாற்றப்பட்டனர்.

மேற்கண்ட வசனத்தில் கூறப்பட்ட மாதிரி, "அவர்கள் எதைப் பரிகசித்துக் கொண்டிருந்தனரோ அதுவே பரிகசித்தவர்களை வந்து சூழ்ந்துகொண்டது"
ஆமாம், அவர்களில் ஒவ்வொருவருக்கும் ஒரு பக்கம் ஒரு காலும் மறுபக்கம் ஒரு கையும்மாக உருமாற்றி, பறவையை போல் தத்தித் தத்தி நடப்பது போல் நடந்து, மிருகங்கள் மேய்வது போல் மேய்வார்கள் என்றும் அவர்களுக்கு "நஸ்னாஸ்" என்று பெயர் என்று கூறப்படுகிறது.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 93
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 10

قُلْ سِيْرُوْا فِى الْاَرْضِ ثُمَّ انْظُرُوْا كَيْفَ كَانَ عَاقِبَةُ الْمُكَذِّبِيْنَ
“பூமியில் நீங்கள் சுற்றி வந்து, (அல்லாஹ்வின் வசனங்களைப்) பொய்ப்பித்தவர்களின் முடிவு என்ன ஆயிற்று என்பதை நீங்கள் கவனித்துப் பாருங்கள்” என்று (நபியே!) நீர் கூறுவீராக. (குர்ஆன் : 6:11)
புவியைச் சுற்றிப் பார்
இப்பூமியில் பல ஊர்கள் இருக்கின்றன. அவற்றில் எத்தனை எத்தனையோ ஞாபகச் சின்னங்கள். அவையனைத்தும் ஒவ்வொரு வரலாற்றினைக் கூறிக் கொண்டே இருக்கின்றன.
அவற்றில் அழித்து நாசமாக்கப்பட்ட கூட்டத்தினரின் (ஞாபகார்த்த) சின்னங்களும் சில இடங்களில் தென்படுகின்றன. ஏன் அழிக்கப்பட்டார்கள்? அங்குள்ள வரலாறு பதில் கூறும்.
அல்லாஹ்வுக்கு முரணாக நடந்தனர். அவனது திருவாக்கைப் புறக்கணித்தனர்; அதனைக் கூறியோரைப் பொய்யாக்கிப் பரிசுசித்தனர். சில காலம் விட்டு வைக்கப்பட்ட அவர்கள் மாபெரும் வேதனை செய்யப்பட்டு அழிக்கப்பட்டனர். இது தான் அவர்களது முடிவு. அதனை அறிவிக்கும் சில (ஞாபகச்) சின்னங்கள்.
இவற்றையெல்லாம் பூமியைச் சுற்றிப் பார்க்கும்போது தான் புரியும். அவ்வாறு தெரிந்து கொள்வதனால் மனத் தெளிவு பிறக்கும். அப்பொழுது இறைவனின் வசனங்களைப் பொய்யாக்குவதின் (விபரீத) விளைவு பற்றி அறிந்து திருந்திக் கொள்ள முடியும்.
இதற்காகவே இவ்வசனத்தில் இப்பூமியைச் சுற்றிப் பாருங்கள். பின்னர் உங்களைப் போல் பொய்யாக்கியோரின் முடிவு எப்படி இருந்தது என்பதைக் கவனித்துப் பார்த்துத் திருந்திக் கொள்ளுங்கள் என்று கூறப்பட்டிருக்கிறது.
1) மெஸபடோமியா / சுமேரியர்களின் நாகரிகம் - நபி இத்ரீஸ்(அலை)
2) உர் நாகரிகம் - நபி இப்ராஹீம் (அலை)
3) ஆது நாகரிகம் - நபி ஹூது (அலை)
4) தமூது நாகரிகம் - நபி ஸாலிஹ் (அலை)
மற்றும் அநேக நாகரிகங்கள்

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 94**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 11**

قُلْ لِّمَنْ مَّا فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ قُلْ لِّلّٰهِ كَتَبَ عَلٰى نَفْسِهِ الرَّحْمَةَ لَيَجْمَعَنَّكُمْ اِلٰى يَوْمِ الْقِيٰمَةِ لَا رَيْبَ فِيْهِ اَلَّذِيْنَ خَسِرُوْۤا اَنْفُسَهُمْ فَهُمْ لَا يُؤْمِنُوْنَ

“வானங்களிலும், பூமியிலுமுள்ளவை யாருக்குச் சொந்தம்” என்று (நபியே!) நீர் (அவர்களைக்) கேளும்; (அவர்கள் என்ன பதில் கூறமுடியும்? எனவே) “எல்லாம் அல்லாஹ்வுக்கே சொந்தம்” என்று கூறுவீராக; அவன் தன் மீது கருணையை கடமையாக்கிக் கொண்டான்;
நிச்சயமாக இறுதி நாளில் உங்களையெல்லாம் அவன் ஒன்று சேர்ப்பான்; இதில் எவ்வித சந்தேகமும் இல்லை; எவர்கள் தமக்குத் தாமே நஷ்டத்தை உண்டுபண்ணிக் கொண்டார்களோ, அவர்கள் ஈமான் கொள்ளமாட்டார்கள். (குர்ஆன் : 6:12)
தங்களிடமிருக்கும் பொருள்கள் அனைத்தும் தங்களுக்கே சொந்த மென சிலர் நினைத்துக் கொண்டு மனம் போன படியெல்லாம் செயல்படுகின்றனர். துணிச்சலுடன் அல்லாஹ்வையே நிராகரிக்கின்றனர்.அவனுடைய வசனங்களைப் பொய்ப்பிக்கின்றனர்.
மனிதனுக்கு எதுவும் சொந்தமில்லை.
இத்தகையவர்களை நோக்கி, வானங்களிலும், பூமியிலும் உள்ளவை யாருக்கு உரியன? என்று நீர் கேளும், அவர்கள் தங்களுக்கே சொந்தம் என்று வாதிக்கலாம். அப்படியானால், அவை அவர்களுக்குக் கட்டுப்பட்டு நிரந்தரமாக அவர்களிடமேயல்லவா இருக்க வேண்டும்.
அப்படி ஏதாவதொரு பொருள் யாரிடமாவது நிரந்தரமாகத் தங்கியிருந்ததுண்டா? இல்லவேயில்லை. அவை கை மாறிக்கொண்டே செல்கின்றன. முடிவில் அவற்றிற்குரியவனிடம் போய்ச்சேர்ந்து விடுகின்றன.
இவைகளை அவர்கள் சிந்தித்துப் பார்த்தார்களானால், இதற்கு ஒழுங்கான பதிலைக் கூறுவர். ஆனால் அவர்கள் அப்படியெல்லாம் சிந்திக்க மாட்டார்கள். தக்க பதிலும்தர மாட்டார்கள்.
ஆகவே, அவையனைத்தும், "அல்லாஹ்விற்கே உரியன” அவன் அவற்றை, தான் நாடியவர்களிடம் சில காலம் ஒப்புவிப்பான். அப்பால் அவர்களிடமிருந்து அவற்றைப் பறித்து வேறு சிலரிடம் ஒப்புவிப்பான். அவனுக்குத் தான் அவைகள் கட்டுப்பட்டவை என நீரே பதிலையும் கூறிவிடும்.
அவனால் கொடுக்கப்படும் பொருள்களை அனுபவிக்கும் அவர்கள், அவனுக்கு மாறான செயல்களைப் புரிகின்றனர். அவனுடைய ஆணைகளைக் கொண்ட வசனங்களை நிராகரிக்கின்றனர். உடனுக்குடன் அவன் அவர்கள் மீது நடவடிக்கை எடுத்து அழித்து விட்டாலும் அவனை யாரும் கேட்க முடியாது.
அப்படி அவன் அவசரமாக நடவடிக்கை எடுத்துவிடுவதில்லை. காரணம், அவன் தன் மீது கிருபையை விதித்துக் கொண்டான். அக்கிருபையிலிருந்து ஏற்படும் இரக்கமானது அவர்களை உடனுக்குடன் தண்டிக்காமல் விட்டு வைக்கிறது.
கோபத்தை விட கிருபை முந்தியது
தனது படைப்புகளைப் படைத்த பொழுது தனது அர்ஷின் மேலுள்ள தனது பதிவேட்டில், 'எனது கிருபை எனது கோபத்தை மிகைத்துவிடும்' என்பதாக பதிவு செய்து வைத்துள்ளான்" என்று நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (அறிவித்தவர் ஹஜரத் அபூஹுரைரா(ரலி), நூல்கள் புகாரி, முஸ்லிம் )
உங்களை மறுமைநாளில் விசாரிக்கும் பொருட்டு அவன் நிச்சயமாக ஒன்று சேர்ப்பான். அதில் எல்லோரையும் விசாரித்துத் தீர்ப்பு வழங்குவதில் அவன் மிகப் பெரிய நீதிபதியாவான். அந்தநாள் வருமென்பதில் எத்தகைய சந்தேகமுமில்லை.
ஆனால் அல்லாஹ்வை நிராகரித்துக் கொண்டும், மறுமை நாளை மறுத்துக் கொண்டும் இருக்கிற கூட்டத்தினர் தங்களுக்குத் தாங்களே நஷ்டத்தை உண்டாக்கிக் கொண்டார்கள். ஆகையால், அவர்கள் எதனையும் விசுவாசம் கொள்ளவே மாட்டார்கள். இவர்கள் இம்மை. மறுமை இரண்டிலும் நற்பலனை இழந்து நஷ்டமடைந்தவர்கள்.

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 95**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 12**

وَلَهٗ مَا سَكَنَ فِى الَّيْلِ وَالنَّهَارِ‌ وَهُوَ السَّمِيْعُ الْعَلِيْمُ
இரவிலும் பகலிலும் வசித்திருப்பவை எல்லாம் அவனுக்கே சொந்தம்; அவன் (யாவற்றையும்)
செவியுறுவோனாகவும், நன்கறிபவனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 6:13)
வானங்களிலும், பூமியிலும் இரவிலும், பகலிலும் குடியிருக்கிறவை வாழ்கிறவை அசைகிறவை அசையாதவை அனைத்தும் அவனுக்கே உரியன. அவன் நாடியபடியும் உத்திரவிட்ட படியுமே அவைகள் இயங்கும். எல்லாம் அவனுடைய சக்திக்குட்பட்டவை நிராகரிப்போர் இதனை உணர்ந்து திருந்திக் கொள்ள வேண்டும். அவனோ யாவற்றின் ஒலிகளையும் யாவரின் சொற்களையும் நன்கு செவியுறுகிறவன். எல்லாவற்றின் இரகசியங்களையும் நன்கு அறிகிறவன்.
மேற்கண்ட வசனத்தில் "வானங்களிலும், பூமியிலும் இரவிலும், பகலிலும் குடியிருக்கிறவை வாழ்கிறவை அசைகிறவை அசையாதவை அனைத்தும் அவனுக்கே உரியன. அவன் நாடியபடியும் உத்திரவிட்ட படியுமே அவைகள் இயங்கும்"
-எனக் குறிப்பிடும்போது உயர்திணை, அஃறிணை பற்றி இறைவன் கூறுகிறான் என்பது விளங்குகிறது.
அஃறிணை என்பது தமிழ் இலக்கணத்தில் பகுத்தறிவில்லாத உயிரினங்களையும் உயிரற்ற பொருட்களையும் வகைப்படுத்தும் சொல்லாகும்.இது அல்+திணை என்று பிரிக்கப்படும்; உயர்திணை அல்லாதது என பொருள்படும்.
தேவர், மாந்தர், நரகர் என்பவர்களைச் சுட்டும் பெயர்கள் உயர்திணையாக வகுக்கப்பட்டன.
"யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும் " (திருக்குறள் 1094)
காமத்துப்பாலில் இந்த குறள் தரும் அர்த்தம் அப்படியே முழுமையாகக் குவாண்டம் நிலையில் நடைபெறும் செயல் ஒன்றுடன் ஒத்துப் போகிறது என்று நான் சொன்னால் நிச்சயம் நீங்கள் ஆச்சர்யப்படுவீர்கள் !
"நான் பார்க்கும்போது அவள் நிலத்தைப் பார்த்து , நான் பார்க்காத நேரத்தில் அவள் என்னைப் பார்த்து தனக்குள் மெல்லச் சிரிப்பாள்" என்பதுதான் இந்தக் குறளின் பொருள்.
இதில் பார்ப்பவரும் , பார்க்கப்படுவரும் காதலர்கள். இருவரும் உயிருள்ளவர்கள். ஆனால் குவாண்டம் நிலையிலுள்ள துகள்கள் கூட இப்படியான செயல்பாட்டிலேயே இயங்குகின்றன என்பது உங்களுக்கு தெரியுமா ?
அதாவது குவாண்டம் நிலையில் இருக்கும் ஒரு எலக்ட்ரான், அதை கவனிக்கும்போது ஒருவிதமாகவும் , அதை கவனிக்காத போது அதற்கு எதிரான வேறொரு விதமாகவும் இயங்குகிறது. அந்த எலக்ட்ரானுக்கு நாம் அவன் கவனிப்பது ஏதோ வகையில் தெரிகிறது.
என்ன நம்ப முடியவில்லையா ?
குறளில் சொன்னது போல உயிருள்ள ஒருவரால், பார்க்கும்போது பார்க்காமல் இருக்கவும் , பார்க்காதபோது பார்க்கவும் செய்ய முடியும் . அது எப்படி உயிர் இல்லாத எலக்ட்ரான்கள் பார்க்கும்போது ஒரு விதமாகவும் பார்க்காதபோது வேறு விதமாகவும் இருக்க முடியும் ?
விஞ்ஞானிகளே ஆச்சரியத்துடன் நிமிர்ந்து உட்கார வைத்த ஒரு செயல்பாடு . இது இதனால் உயிரில்லாத அஃறிணை பொருளுக்கும் உயிர் உண்டோ என்று எண்ணத் தோன்றியது விஞ்ஞானிகளுக்கு !
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
பனூ இஸ்ராயீல் சமுதாயத்தார் பிறந்த மேனியுடன் ஒருவர் மற்றவரது மறைக்க வேண்டிய உறுப்பைப் பார்த்துக்கொண்டே குளிப்பார்கள்.

மூஸா (அலை) அவர்கள் தனியாகவே குளிப்பார்கள். (அன்னாரைக் கொச்சைப்படுத்த விரும்பிய) அந்த மக்கள் "அல்லாஹ்வின் மீதாணையாக! மூஸா குடலிறக்க நோயாளியாய் இருப்பதனால்தான் அவர் நம்முடன் சேர்ந்து குளிப்பதில்லை" என்று கூறினர்.
ஒரு முறை மூஸா (அலை) அவர்கள் குளிக்கப் போனார்கள். அப்போது அவர்கள் தமது ஆடையை(க் களைந்து) ஒரு கல்லின் மீது வைத்தார்கள். அந்தக் கல் அவர்களது துணியுடன் ஓடியது !
மூஸா (அலை) அவர்கள் அதைப் பின்தொடர்ந்து, "கல்லே, எனது துணி! கல்லே, எனது துணி! " என்று கூறியவாறு அதனைப் பின் தொடர்ந்து விரைந்து ஓடினார்கள்.
இறுதியாக (பனூ இஸ்ராயீல் மக்கள் பகுதிக்கு வந்தபோது அவர்கள்) மூஸா (அலை) அவர்களின் மறைக்க வேண்டிய உறுப்பைப் பார்த்துவிட்டு, "அல்லாஹ்வின் மீதாணையாக! மூஸாவிற்கு எந்தக் குறையுமில்லை" என்று கூறினர்.
மூஸா (அலை) அவர்கள் (நன்கு) பார்க்கப்படும்வரை (ஓடிய) அந்தக் கல் (பின்பு) நின்றுவிட்டது. உடனே மூஸா (அலை) அவர்கள் தமது ஆடையை எடுத்துக்கொண்டு அந்தக் கல்லை (தமது கைத்தடியால்) அடிக்கலானார்கள்.
"அல்லாஹ்வின் மீதாணையாக! மூஸா (அலை) அவர்கள் (தமது கையிலிருந்த தடியால்) கல்லின் மீது அடித்த காரணத்தால் ஆறு அல்லது ஏழு தழும்புகள் அந்தக் கல்லில் பதிந்துவிட்டன" (அறிவிப்பாளர் ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள்
ஸஹீஹ் முஸ்லிம் : 566 )
اِنَّا سَخَّرْنَا الْجِبَالَ مَعَهٗ يُسَبِّحْنَ بِالْعَشِىِّ وَالْاِشْرَاقِ
"நிச்சயமாக நாம் மலைகளை அவருக்கு வசப்படுத்திக் கொடுத்தோம்; மாலை வேளையிலும், காலை வேளையிலும் அவை அவருடன் சேர்ந்து (நம்மைத் துதித்து) தஸ்பீஹு செய்தன"
(குர்ஆன் : 38:18)

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 96
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 13

பகுதி 1
قُلْ اَغَيْرَ اللّٰهِ اَتَّخِذُ وَلِيًّا فَاطِرِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَهُوَ يُطْعِمُ وَلَا يُطْعَمُ قُلْ اِنِّىْۤ اُمِرْتُ اَنْ اَكُوْنَ اَوَّلَ مَنْ اَسْلَمَ وَلَا تَكُوْنَنَّ مِنَ الْمُشْرِكِيْنَ
“வானங்களையும் பூமியையும் படைத்த அல்லாஹ்வையன்றி வேறு எவரையும் என் பாதுகாவலனாக எடுத்துக் கொள்வேனா? (குர்ஆன் : 6:14)
வானங்களையும், பூமியையும் படைத்து அவற்றின் மூலமாக பல வகையான நன்மைகளைச் செய்து கொண்டிருப்பவன் அல்லாஹ் ஒருவனேயாவான். அவனே தனது படைப்புகள் அனைவருக்கும் அப்போதைக்கப்போது ஏற்படும் தேவைகளை நிறைவேற்றி அருள் புரிகிறவன். இவ்வாறெல்லாம் கணக்கிலடங்காத உதவிகளைச் செய்து வருபவனாகிய அல்லாஹ் அல்லாத வேறு ஒருவனையா நான் உதவியாளனாக எடுத்துக் கொள்வேன்? அது ஒருபோதும் நடவாது என்று நபியே கூறுவீராக !
“அறிவிலிகளே! நான் அல்லாஹ் அல்லாதவற்றை வணங்க வேண்டுமென்று என்னை நீங்கள் ஏவுகிறீர்களா?” என்று (நபியே!) நீர் கூறுவீராக. (குர்ஆன் : 39:64)
பிரபஞ்சத்தின் விதிகளே கடவுள் :-
இயற்பியல் உலகில் மாற்ற முடியாத விதிகள் சிலவற்றால் இந்தப் பிரபஞ்சம் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது என்னும் கோட்பாட்டை முன்வைத்தவர் விஞ்ஞானி நியூட்டன். விண்ணில் இயங்கும் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலியவை சில விதிகளுக்கு உட்பட்டு அறிவு பூர்வமாக இயங்குவதாக அந்த அறிவாளி குறிப்பிட்டார்.
இந்த ஆராய்ச்சியை முன்னெடுத்துச் சென்ற பின்னர் வந்த பல கல்விமான்கள் பூமியிலும், விண்ணிலும் நிகழ்பவை அனைத்தும் மாற்ற முடியாத இயற்கை விதிகளால் இயங்குவதாக நிரூபித்தனர்.

குறைந்தபட்சம் இந்தப் பிரபஞ்சத்தை இயங்கச் செய்தவர் கடவுள் என்பதையாவது இந்தக் கண்டுபிடிப்பு தொடக்கத்தில் அனுமதித்தது. இந்தக் கண்டுபிடிப்பிற்குப் பிறகு சர்வ வல்லமை வாய்ந்த சக்தியான கடவுளே அனைத்தையும் இயக்குபவர் என்னும் கருதுகோள் பொருளற்றுப் போனது.
கிரகங்களின் இயக்கம் கடவுளின் கட்டுப்பாட்டில் இல்லை என நியூட்டன் தெரிவித்தார். 'வானியலில் கடவுள்' என்ற கருத்தியலின் தேவை இல்லை என விஞ்ஞானி லாப்ளஸின் புகழ்பெற்ற ஒரு முதுமொழி கூறுகிறது. உயிரியலிலும் இதனையே டார்வினும், பாஸ்டரும் கூறினர்.
இன்று சூரிய உதயமும்,மறைவும் அனைவராலும் புரிந்து கொள்ளப்படும் பொதுவான விஷயமாகி விட்டன. ஆனால் முந்தைய காலத்தில் இந்த நிகழ்வுகள் விளங்கிக்கொள்ள முடியாதவையாக இருந்தன. அதனால் அதற்குப் பொறுப்பாளராகக் கடவுள் என ஒருவர் நிச்சயம் இருக்க வேண்டும் என்பதாக மனிதன் ஊகம் செய்தான்.

இயற்கைக்கு மீறிய சக்தி ஒன்று இருப்பதை இது ஏற்றுக் கொள்ளும்படி செய்தது. மனித அறிவுக்கு அப்பாற்பட்ட இது போன்ற நிகழ்வுகள் அனைத்தும் அந்தச் சக்தியால் நிகழ்த்தப்படும் அதிசயம் என்பதாக மனிதன் அன்று எண்ணினான்.
ஆனால், பூமி அதன் அச்சில் சுழலும் காரணத்தால் சூரிய உதயமும், மறைவும் நிகழ்கின்றன என்பது இப்போது நமக்குத் தெரியும். எனவே சூரிய உதயத்தையும் மறைவையும், நிகழ்த்துபவர் கடவுளே என நம்பிக்கை கொள்வதற்கான தேவை இன்று இல்லை.
அதாவது விஞ்ஞானிகள் ''கொள்கையை தலைவனாக''ஏற்றுக்கொண்ட ஓர் இயக்கம் மாதிரி "பிரபஞ்ச விதிகளே கடவுளாக " ஏற்றுக் கொண்டனர்.
நவீன விஞ்ஞானமும், வேதாந்தமும் :-
இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் நவீன விஞ்ஞானிகள் மாக்ஸ் ப்ளாங்க் என்பவரின் க்வாண்டம் தத்துவமும், 1905ல் மேதை ஐன்ஸ்டைனின் ரிலேட்டிவிட்டி தத்துவமும் பௌதிகத்தின் புதிய சிந்தனைகளைத் துவக்கி வைத்தன.
இவை மூலம் விஞ்ஞானிகளால் பிரபஞ்சத்தின் புற நிலையில் நிகழும் பற்பல விஷயங்களைத் தெளிவாக விளக்க முடிந்தது. இந்த விளக்கங்களுக்காக அவர்கள் ஆதாரமாக அமைத்துக்கொண்ட கோட்பாடுகளில்தான் சில முரண்பாடுகள் தெரிந்தன.

முரண்பாடுகள் நம் தின வாழ்க்கையின், பகுத்தறிவின் நம்பிக்கைகளுடன் அவைகள் ஒத்துப்போகாததால் ஏற்பட்டன. இப்போது நீங்கள் இந்த கட்டுரையைப் படிக்கிறீர்கள். இப்படிப் படிப்பதால் உங்களுக்கும் எனக்கும் ஒருவிதமான தொடர்பு ஏற்படுகிறது. படிக்கும் செயல் மற்றவர்களையோ நம்முடைய சுற்றுபுறத்தையோ எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. இதுதான் பகுத்தறிவு.
ஆனால், பதிலாக நீங்கள் இந்தக் கட்டுரையைப் படிப்பது இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் ஏதோ ஒரு வகையில் மாற்றிவிடுகிறது என்று சொன்னால், அது நம் பகுத்தறிவுக்கு ஒத்துவராது. ஆனால் நவீன விஞ்ஞானத்தில் எந்த ஒரு தனிப்பட்ட செயலும் பிரபஞ்சத்தையே பாதிப்பதை நிரூபிக்க முடியும்.
இப்படிப்பட்ட முடிவுகள் எல்லாம் விஞ்ஞானிகளுக்கு ஒருவிதத்தில் அதிர்ச்சியளித்தன. நினைப்பதில் தப்பா, ஆதார நம்பிக்கைகளே தப்பா என்று புரியாமல் விழித்தார்கள். அணுக்கருவின் உள்ளுக்குள் இருக்கும் துகள்களின் (ப்ரோட்டான், எலக்ட்ரான் போன்றவை) இயற்கையை மேலும் மேலும் அவர்கள் கண்டறிய முயற்சித்த போது இந்த ஆச்சரியங்கள் அவர்களுக்கு அதிகரித்தன.
மேலும் பிரபஞ்சத்தின் உண்மை என்ன என்று அவர்கள் அறிய ஆசைப்பட்ட போது ஒருவிதமான விளிம்புக்கு வந்து தவித்தார்கள். ஒரு எல்லைக்கு மேல் பிரபஞ்சத்தின் உண்மையைக் கண்டறிய முடியாது என்பதை அவர்கள்

ஒப்புக்கொள்ளக் கஷ்டப்பட்டார்கள். அப்படி அறிந்து கொள்ள நம் அறிவுக்கும் ஞானத்திற்கும் ஒரு புதிய சுதந்திரம் தேவை என்பது வெளிப்படையாயிற்று.
ஒரு எல்லையைக் கடந்தபின் விஞ்ஞானமும் வேதாந்தமும் (metaphysics) ஒரே இலக்கை நோக்கிச் செல்கின்றன. ஞானம் என்பது புலன் அறிவிற்கு அப்பாற்பட்டது என்பதை பல மேற்கத்திய விஞ்ஞானிகள் இப்போது தயக்கத்துடன் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 97
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 14

பகுதி 2

قُلْ اَغَيْرَ اللّٰهِ اَتَّخِذُ وَلِيًّا فَاطِرِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَهُوَ يُطْعِمُ وَلَا يُطْعَمُ قُلْ اِنِّىْۤ اُمِرْتُ اَنْ اَكُوْنَ اَوَّلَ مَنْ اَسْلَمَ وَلَا تَكُوْنَنَّ مِنَ الْمُشْرِكِيْنَ

......அவனே (யாவருக்கும்) உணவளிக்கிறான்; அவனுக்கு எவராலும் உணவளிக்கப்படுவதில்லை" என்று (நபியே!) நீர் கூறுவீராக:
இன்னும் (அல்லாஹ்வுக்கு வழிபடுபவர்களில் முதன்மையானவனாக, இருக்கும்படி நான் கட்டளையிடப்பட்டுள்ளேன்) என்று கூறுவீராக. இன்னும் நீர் ஒருக்காலும் இணைவைப்போரில் ஒருவராகிவிட வேண்டாம். ( குர்ஆன் 6:14 )

அனைவரும் ஏகனான அல்லாஹ்வையே உதவியாளனாக ஆக்கிக் கொள்ள வேண்டும். அவனுக்கு முரண்படுதல் கூடாது. ஏனெனில், அவனே அனைவருக்கும் உணவளிக்கிறான். அவன் உணவுக்குரிய வழிகளை அடைத்து விட்டால், அவற்றை எவரும் தமது சக்தியினால் கொண்டு வந்து தமது உணவுத் தேவையைப் பூர்த்தி செய்து விட முடியாது. அவனுக்குப் பிறர் எவராலும் உணவு வழங்கப்படுவதில்லை. அது அவனுக்குத் தேவையுமில்லை. உணவு இன்றி எந்த ஒரு உயிரினமும் வாழ முடியாது! உணவு என்பது ஓர் உயிரினத்திற்குத் தேவையான ஊட்டச்சத்து கிடைப்பதற்காக உண்ணப்படும் எந்தவொரு பொருளையும் குறிக்கும்

இறைவன் படைத்த எல்லா உயிரினத்திற்கும் உணவு என்பது அவசியமான ஒன்றாகும். வரலாற்று ரீதியாக மனிதன் இரண்டு வழிகளில் உணவைப் பெற்றுக்கொண்டான். ஒன்று விவசாயம், மற்றொன்று வேட்டையாடுதல். முந்தைய காலங்களில் மனிதனின் பெரும்பாலான உழைப்பு தனது உணவுக்காகவும் தனது ஆடைக்காகவுமே இருந்தது. இன்று மனிதன் நகையை, பணத்தை, வாகனத்தைத் திருடுவதைப் போன்று பண்டைய காலத்தில் உணவையும் ஆடையையும் திருடியதுமுண்டு. அவர்கள் வளமிக்க வாழ்வாதாரங்களைக் கற்பனை செய்தும் பார்க்கமுடியாது.

மனிதனை மனிதன் அடிமைப்படுத்தி மிருகத்தனமான வாழ்க்கை வாழ்ந்த காலத்தில்தான் அல்லாஹ் முஹம்மது (ஸல்) அவர்களைத் தனது தூதராக அனுப்பி வைத்தான். அவர்களுக்கும் உண்ண உணவும் உடுத்த ஆடையும் கிடைப்பது அரிதாகவே இருந்தது. இதனால்தான் வணக்க வழிபாடுகளில் ஏற்படும் பிழைகளுக்கான பரிகாரமாகவும், சத்தியத்தை முறிப்பதற்கான குற்றப்பரிகாரமாகவும் மிஸ்கீன்களுக்கு (வறியவர்) உணவும் – ஆடையும் வழங்கவேண்டும் என்று அல்லாஹ் திருமறையில் விளக்குகின்றான். (பார்க்க: அல்குர்ஆன்:05:89, 02:184)

வாழ்வில் உணவுக்கு ஏராளமான பிரச்சினைகள் இருந்தபோதிலும் மக்கத்து இறைநிராகரிப்பாளர்கள் உட்பட தங்களுக்கு உணவு வழங்குவது அல்லாஹ்தான் என்பதை நன்கு விளங்கியிருந்தனர்.

قُلْ مَنْ يَّرْزُقُكُمْ مِّنَ السَّمَآءِ وَالْاَرْضِ اَمَّنْ يَّمْلِكُ السَّمْعَ وَالْاَبْصَارَ وَ مَنْ يُّخْرِجُ الْحَـىَّ مِنَ الْمَيِّتِ وَيُخْرِجُ الْمَيِّتَ مِنَ الْحَـىِّ وَمَنْ يُّدَبِّرُ الْاَمْرَ فَسَيَـقُوْلُوْنَ اللّٰهُ فَقُلْ اَفَلَا تَتَّقُوْنَ
“உங்களுக்கு வானத்திலிருந்தும், பூமியிலிருந்தும் உணவளிப்பவன் யார்?
(உங்கள்) செவிப்புலன் மீதும், (உங்கள்) பார்வைகளின் மீதும் சக்தியுடையவன் யார்?
இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும், உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் யார்?
(அகிலங்களின் அனைத்துக்) காரியங்களையும் திட்டமிட்டுச் செயல்படுத்துபவன் யார்?”
என்று(நபியே!) நீர் கேழும். உடனே அவர்கள் “அல்லாஹ்” எனப் பதிலளிப்பார்கள்; “அவ்வாறாயின் அவனிடம் நீங்கள் பயபக்தியுடன் இருக்க வேண்டாமா?” என்று நீர் கேட்பீராக. (குர்ஆன்: 10:31)
நிச்சயமாக எவன் உயிரினங்களைப் படைத்தானோ அவன்தான் இவ்வளவு திட்டமாகக் கூறமுடியும். உணவிற்கு இறைவன் பொறுப்பேற்றுக் கொள்ளாத எந்த உயிரினமும் இல்லை! இப்போது இங்கு ஒரு கேள்வி எழும்!
அப்படியானால் உணவு கிடைக்காமல் ஏன் தற்கொலைகள் நிகழ்கின்றன? என்று ஒரு கேள்வி எழும்!
சரி..உணவு கிடைக்காமல் எப்போதாவது ஒரு பறவை வானத்திலிருந்து கீழே விழுந்து தற்கொலை செய்து கொண்டதுண்டா?
அல்லது மனிதன் வளர்க்கக்கூடிய ஆடு மாடு கால்நடைகள் உணவு கிடைக்காமல் என்றாவது தன்னைத்தானே மாய்த்துக் கொண்டதுண்டா?
மனிதனைப் போன்றே 60 முதல் 70 ஆண்டுகள் வரை உயிர் வாழக்கூடியது யானை! யானை ஒரு நாளைக்கு 150 கிலோ உணவையும் 200 லிட்டர் நீரையும் குடிக்கின்றது. இந்த யானைக் கூட்டம் என்றாவது தனக்கு உணவுவோ தண்ணீரோ இல்லாமல் தற்கொலை செய்து கொண்டதுண்டா?
இறைவனின் இன்னொரு பிரமாண்டமான படைப்பான திமிங்கிலத்தை எடுத்துக்கொள்வோம் திமிங்கிலத்தில் ஒரு வகை உண்டு அது 100 அடி நீளமும் 150 டன் எடையும் கொண்டது.
திமிங்கிலம் நாள் ஒன்றுக்கு 3000 கிலோ உணவை உட்கொள்கின்றது. இதன் நாவில் 50 நபர்கள் உட்காரும் அளவுக்கு இடவசதி கொண்டது. அவ்வளவு பெரிய பிரம்மாண்டமான படைப்பு, இறைவனின் படைப்புகளில் அதிக உணவை உண்ணக்கூடியது திமிங்கிலம்தான். இது என்றாவது உணவு இல்லாமல் தன்னைத்தானே தற்கொலை செய்து கொண்டதுண்டா?
அல்லது நமது கழிப்பிடங்களில் வசிக்கின்றதே பூச்சி, வண்டு அவைகள் என்றைக்காவது உணவு கிடைக்காமல் தற்கொலை செய்து கொண்டதுண்டா? இறைவனின் படைப்பில் உணவு கிடைக்கவில்லை என்று தற்கொலை செய்துகொள்வது பகுத்தறிவு வழங்கப்பட்ட முட்டாள் மனித இனம் மட்டும்தான்.

அல்லாஹ் திருக்குர்ஆனில் இவ்வாறு குறிப்பிடுகின்றான்:

كَاَيِّنْ مِّنْ دَآبَّةٍ لَّا تَحْمِلُ رِزْقَهَا اللّٰهُ يَرْزُقُهَا وَاِيَّاكُمْ وَهُوَ السَّمِيْعُ الْعَلِيْمُ
"எத்தனையோ உயிரினங்கள் தம் உணவைச் சுமந்துகொண்டு திரிவதில்லை! அவற்றுக்கும் உங்களுக்கும் அல்லாஹுவே உணவளிக்கின்றான். அவன் நன்கு செவியுறுவோனும் நன்கு அறிந்தோனுமாவான் " (அல்குர்ஆன்: 29;60)
எந்த உயிரினமும் தன் உணவைத் தானே சுமந்துகொண்டு திரிவதில்லை! மனிதர்களுக்கும் மற்ற எல்லா உயிரினங்களுக்கும் அல்லாஹ்தான் உணவளிக்கின்றான் ஆனால் மனிதன் தன் உணவைப்பற்றி கவலைப்படுவதைப் போல மற்ற உயிரினங்கள் கவலைப்படுவதில்லை.
மேலும், அவனுடைய சட்ட திட்டங்களுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து நடந்து கொள்பவர்களில் நான் முதன்மையானவனாக இருக்க வேண்டும் என்பதாகவும் ஏவப்பட்டுள்ளேன்.
இவ்வாறே நீங்கள் அனைவரும் அவனுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதுடன் அவனுக்கு விரோதமாக நடப்பவர்களின் கூட்டத்திலும் இணை வைத்துக் கொண்டிருப்பவர்களின் கூட்டத்திலும் ஒருபோதும் இணைந்துவிடாதீர்கள் என

உங்களுக்கும் எடுத்துரைக்குமாறு நான் கட்டளையிடப்பட்டுள்ளேன் என்றும் கூறுமாறு பெருமானார் (ஸல்) அவர்கள் இவ்வசனத்தின் மூலம் கோரப்படுகிறார்கள்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 98
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 15

قُلْ اِنِّىْۤ اَخَافُ اِنْ عَصَيْتُ رَبِّىْ عَذَابَ يَوْمٍ عَظِيْمٍ
"நான் என் இறைவனுக்கு மாறு செய்தால், மகத்தான நாளில் (ஏற்படும்) வேதனையை நான் நிச்சயமாக பயப்படுகிறேன்" என்று கூறுவீராக. (குர்ஆன் : 6:15)

مَنْ يُّصْرَفْ عَنْهُ يَوْمَٮِٕذٍ فَقَدْ رَحِمَهٗ ‌ؕ وَ ذٰ لِكَ الْـفَوْزُ الْمُبِيْنُ
"அந்நாளில் எவரொருவர் அந்த வேதனையை விட்டும் விலக்கப்படுவாரோ, நிச்சயமாக (அல்லாஹ்) அவர்மீது கிருபை புரிந்துவிட்டான். இது மிகத் தெளிவான வெற்றியாகும்"(என்று கூறுவீராக). (குர்ஆன் : 6:16)
அல்லாஹ்வுக்கு இணை வைத்துக் கொண்டும் மாறு செய்து கொண்டுமிருக்குட கூட்டத்தினர் தங்கள் நிலையே சரியென்று கூறி அதன்பால் வருமாறு பெருமானா (ஸல்) அவர்களையும், இதர முஸ்லிம்களையும் அழைத்தனர். அப்பொழுது இவ்விரு வசனங்களிலும் கூறப்படும் செய்திகளை அவர்களுக்கு அறிவித்து விடுமாறு கூறப்பட்டது.
வசனங்களின் கருத்துரை:-
நீங்கள் கூறுகிறபடி என்னுடைய இரட்சகனுக்கு நான் மாறு செய்து இணை வைத்தால் என்னை அவன் மறுமை நாளில் கடினமாகத் தண்டித்து விடுவான். ஆகையால் மகத்தான அந்நாளின் வேதனைக்கு நிச்சயமாக நான் பயப்படுகிறேன் ஆகையால், உங்கள் வழி தவறானதாகும்.
நான் கூறும் ஏகத்துவத்தின் பால் நீங்கள் வருவீர்களாயின் அப்பொழுது தான் அல்லாஹ்வின் கிருபை உங்களுக்கு கிடைக்கும். வேதனையிலிருந்தும் அகற்றப்படுவீர்கள்.
எவர் அவ்வேதனையை விட்டு அகற்றப்பட்டுத் திருப்பப்படுகிறாரோ அவருக்கு நிச்சயமா அல்லாஹ் கிருபை செய்து விட்டான். இதைவிட வேறு என்ன பாக்கியம் அவருக்கு வேண்டும் இதுவே தெளிவான வெற்றியாகும். இதனைப் பெறுவதற்கு முயற்சி செய்தல் அவசியமாகும். அல்லாஹ் நடவடிக்கை எடுக்க ஆரம்பித்து விட்டால் அதனை எவராலும் அகற்ற முடியாது.

மூன்று விதமான அநீதங்கள் :-
இஸ்லாம் மனித வாழ்க்கைக்குத் தேவையான அத்தனை வழிகாட்டுதல்களையும் வாழ்வியல் நெறிமுறைகளை தெளிவாக வழங்கியிருக்கிறது. மனிதன் எதை செய்ய வேண்டும் எதை செய்யக்கூடாது, எதைப் பெற வேண்டும் எதைப் பெறக்கூடாது, எப்படி நடக்க வேண்டும் எப்படி நடக்கக் கூடாது, எப்படி வாழ வேண்டும் எப்படி வாழக் கூடாது, இப்படி அத்தனை விஷயங்களையும் தெளிவாக சுட்டிக் காட்டியிருக்கிறது.
அந்த அடிப்படையில் இஸ்லாமியப் பார்வையில் மனிதன் செய்யக் கூடாத விஷயங்களின் வரிசையில் அநியாயமும் ஒன்று. ஒருவன் எப்போதும் எந்த சூழ்நிலையிலும் யாருக்கும் எந்த அநீதத்தையும் செய்து விடக் கூடாது.
ஹதீஸே குதுஸி ஒன்றில் அல்லாஹ் கூறுகின்றான் ; என் அடியார்களே அநீதத்தை என் மீது நான் தடை செய்து விட்டேன். உங்களிடையேயும் அதை நான் தடுத்திருக்கிறேன். எனவே நீங்கள் ஒருவருக்கொருவர் அநீதம் செய்யாதீர்கள். (முஸ்லிம் : 2577)
அநீதம் என்று வருகின்ற போது இஸ்லாம் அதை மூன்று வகையாக வகைப்படுத்துகிறது.

1) மனிதன் இறைவனுக்குச் செய்கின்ற அநீதம்.
2) மனிதன் தனக்குத் தானே செய்து கொள்கின்ற அநீதம்.
3) மனிதன் பிற மனிதர்களுக்கு செய்கின்ற அநீதம்.
1) இறைவனுக்கு செய்கின்ற அநீதம் என்பது இறைவனுக்கு இணை கற்பிக்கும் காரியங்களைச் செய்வது, இறைவனுக்கு இணை வைக்கும் செயல்களில் ஈடுபடுவது.
“யார் ஈமான் கொண்டு பின்பு தங்கள் ஈமானை அநீதத்தைக் கொண்டு களங்கப்படுத்த வில்லையோ அவர்களுக்கே பாதுகாப்பு உண்டு.மேலும் அவர்கள் தான் நேர்வழி பெற்றவர்கள்” என்ற (6 : 82)
இறை வசனம் இறங்கிய போது ஸஹாபாக்களுக்கு அது கவலையை ஏற்படுத்தியது.
எங்களில் யார் தான் தனக்கு அநீதம் செய்யாமல் இருக்கிறார்? (அதாவது எங்களில் யார் தான் பாவம் புரியாமல் இருக்கிறார்? இந்த வசனத்தின் படி எங்களில் யாருமே நேர்வழி பெற்றவர்கள் இல்லையா என்ற சந்தேகம் அவர்களுக்கு ஏற்பட்டு நபியிடம் அதற்கான விளக்கத்தைக் கேட்டார்கள்)
அதற்கு நபி ﷺ அவர்கள் இந்த வசனத்தில் நீங்கள் நினைப்பதைப் போன்ற அநீதத்தை அல்லாஹ் கூற வில்லை. நிச்சயமாக இணை வைத்தல் பெரும் அநீதமாகும் என்று லுக்மான் அலை அவர்கள் தன் மகனைப் பார்த்துக் கூறிய இணை வைப்பைத்தான் குறிப்பிடுகிறான் என்றார்கள். (முஸ்லிம் : 124)
2) மனிதன் தனக்குத் தானே அநியாயம் செய்து கொள்வது என்பது இறைக் கட்டளையை மீறுவது, இறைவனுக்கு மாறு செய்வது. பாவமான காரியங்களில் ஈடுபடுவது.
ஒருவன் இறைக்கட்டளையை மீறுகின்றபோது இறைவனுக்கு மாறு செய்கின்றபோது பாவமான காரியங்களில் தன்னை ஈடுபடுத்திக் கொள்கின்றபோது இறைவனின் கோபத்திற்கும் அதிருப்திக்கும் ஆளாகிறான், அதனால் இறைவனிடம் தண்டனையையும் பெறுகிறான். அந்த அடிப்படையில் தான் தனக்கு தானே அநீதம் செய்து கொண்டான் என்று சொல்லப்படுகிறது.
இந்த கருத்தைக் குறிப்பிடுகின்ற வசனங்கள் குர்ஆனில் நிறைய உண்டு.
وَتِلْكَ حُدُودُ اللَّهِ وَمَن يَتَعَدَّ حُدُودَ اللَّهِ فَقَدْ ظَلَمَ نَفْسَهُ
அவைகள் அல்லாஹ்வின் வரம்புகள். அல்லாஹ்வின் வரம்புகளை எவர் மீறுகிறாரோ அவர் தனக்குத் தானே அநீதம் இழைத்து விட்டார். (65 : 1)
وَلَا تَقْرَبَا هَٰذِهِ الشَّجَرَةَ فَتَكُونَا مِنَ الظَّالِمِينَ
நீங்கள் இருவரும் இந்த மரத்தின் பக்கம் நெருங்காதீர்கள். அப்படி நெருங்கினால் அநீதம் செய்தவர்கள் நீங்கள் ஆகி விடுவீர்கள். (2 : 35)
ربنا ظلمنا انفسنا وان لم تغفر لنا لنكونن من الخاسرين.
ஆதம் ஹவ்வா இருவரும் எங்களுக்கு நாங்களே அநீதம் செய்து விட்டோம் என்று கூறினார்கள். (7 : 23)
3) பிற மனிதர்களுக்கு செய்கின்ற அநீதம் என்பது அவர்களின் உரிமைகளை பறிப்பது. அவர்களின் மான மரியாதைகளில் கை வைப்பது. அவர்களது பொருட்களை அபகரிப்பது,குறிப்பாக அநாதைகளின் பொருட்களை கையாடல் செய்து அவர்களின் வாழ்க்கையை கேள்விக்குறியாக்குவது.
பிற மனிதர்களின் நிலங்களை கைப்பற்றுவது, முதலாளியிடத்தில் விசுவாசம் இல்லாமல் நடந்து கொள்வது, தொழிலாலர்களுக்கு சரியான ஊதியம் கொடுக்காமல் மோசடி செய்வது, அநியாயக் காரர்களுக்கு உதவுவது,ஒரு நாடு தன்னை நம்பி தன்னிடத்தில் நாட்டை ஒப்படைத்த மக்களுக்கு துரோகம் செய்வது. இப்படி அநீதத்தின் பட்டியல் நீண்டு கொண்டே செல்கிறது.
இந்த மூன்று வகை அநீதங்களில் எதுவாக இருந்தாலும் இஸ்லாம் அதை தடுக்கிறது. கூடாது என்று சொல்கிறது. அதை வன்மையாக கண்டிக்கிறது.

**Rahmath Rajakumaran**

பத்ர் பயணத்தின் போது ஒட்டகங்கள் குறைவாக இருந்ததினால் மூன்று நபர்களுக்கு ஒரு ஒட்டகம் என்று பிரித்து கொடுக்கப்பட்டது.மூவரும் முறை வைத்து அதில் பயணிக்க வேண்டும். அதனடிப்படையில் அபூலுபாபா ரலி, அலி ரலி, நபி ﷺ அவர்கள் ஆகிய மூவருக்கும் ஒரு ஒட்டகம் ஒதுக்கப்பட்டது.இருவர் ஒட்டகத்தின் மீது அமர வேண்டும். ஒருவர் ஒட்டகத்தை வழிநடத்த வேண்டும். இது தான் முறை. ஆனால் அந்த இரு ஸஹாபாக்களும் யாரசூலல்லாஹ்! நீங்கள் இறங்க வேண்டாம். நாங்கள் இருவர் மட்டும் மாறி மாறி இறங்கிக கொள்கிறோம் என்று சொன்னார்கள். அதைக் கேட்ட நபி ﷺ அவர்கள் நீங்கள் இருவரும் என்னை விட பலசாலிகள் அல்ல.மேலும் நன்மையைப் பெறுவதில் நான் தேவையற்றவனும் அல்ல என்று கூறினார்கள். (முஸ்னத் அஹ்மது : 841)
ஏதாவது நன்மையான காரியம் குறித்து ஆர்வப்படுத்தினால் பிறகு பார்த்துக் கொள்ளலாம். நன்மை தானே போனா போயிட்டு போகுது என்று நாம் சொல்வோம். ஆனால் மிக உயர்ந்த அந்தஸ்தில் இருக்கிற, அல்லாஹ்வின் உற்ற நண்பராக இருக்கிற, யார் இல்லையென்றால் இந்த வானங்களையும் பூமியையும் படைத்திருக்க மாட்டேன் என்று இறைவன் சொன்னானோ அத்தகைய நபி ﷺ அவர்கள் நன்மையைப் பெறுவதில் உங்களுக்கு இருக்கிற தேவையை விட எனக்கு அதிகமாகவே தேவை இருக்கிறது என்று அவர்கள் சொன்ன வார்த்தை இங்கே கவனிக்கத்தக்கது.நன்மை என்பது ஒரு காரணமாக இருந்தாலும் பிறரின் உரிமையைப் பறித்து அவருக்கு அநீதம் செய்து விடக்கூடாது என்பதும் இங்கே முக்கியமான காரணமாக இருக்கிறது.
மூன்று நபர்கள் முறைவைத்து பயனிப்பதற்கு ஒரு வாகனம் இருக்கிறது. அதில் இரண்டு நபர்கள் தங்கள் முறையை விட்டுக் கொடுப்பதற்கு முன் வருகிறார்கள். அவர்களின் முறைகளையும் சேர்த்து எடுத்துக் கொண்டு தொடர்ந்து பயணிப்பதற்கு நபி ﷺ அவர்களுக்கு எல்லா தகுதிகளும் உண்டு. இருந்தாலும் அதில் கூட நியாயம் தவறிவிடக்கூடாது அநியாயமாக அவர்களது முறையைப் பாதித்து விடக் கூடாது என்று யோசிக்கிறார்கள் என்றால் யாருக்கும் எந்த அநீதத்தையும் செய்து விடக்கூடாது என்பதில் எந்தளவுக்கு கவனம் செலுத்தி இருக்கிறார்கள் என்பதை இந்த வரலாறு கோடிட்டுக் காட்டுகிறது.

**Rahmath Rajakumaran**

. .
(கூஃபாவில் அதிகாரியாக இருந்த) ஸஃது இப்னு அபீ வக்காஸ்(ரலி) மீது கூபா வாசிகளில் சிலர் உமர்(ரலி) அவர்களிடம் புகார் கூறினார்கள். அவர் முறையாகத் தொழுகை நடத்துவதில்லை என்பதும் அவர்களின் புகார்களில் ஒன்றாக இருந்தது. உடனே உமர்(ரலி) அவரை நீக்கிவிட்டு அம்மார்(ரலி)ஜ அதிகாரியாக நியமித்தார்கள். ஸஃதை (மதீனாவுக்கு) வரவழைத்து 'அபூ இஸ்ஹாக்! நீங்கள் முறையாகத் தொழுகை நடத்துவதில்லை என்று கூஃபா வாசிகளில் சிலர் கூறுகின்றனரே! என்று கேட்டார்கள்.
அதற்கு ஸஃது(ரலி) 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி(ﷺ) அவர்கள் தொழுது காட்டிய முறைப் படியே தொழுகை நடத்தினேன். அதில் எந்தக் குறையும் வைக்கவில்லை. இஷாவுடைய முதல் இரண்டு ரக்அத்களில் நீண்ட நேரம் ஓதியும் பின் இரண்டு ரக்அத்களில் சுருக்கமாக ஓதியும் தொழுகை நடத்துகிறேன்' என்று பதிலளித்தார்கள். 'உம்மைப் பற்றி நம்முடைய கருத்தும் அதுவே' என்று உமர்(ரலி) கூறினார்.
அதன்பின்னர் ஒரு நபரை அல்லது சில நபர்களை ஸஃது(ரலி) உடனே கூஃபாவுக்கு அனுப்பி, ஸஃதைப் பற்றிக் கூஃபா வாசிகளிடம் விசாரிக்கச் சொன்னார்கள். விசாரிக்கச் சென்றவர் ஒரு பள்ளிவாசல் விடாமல் அவரைப் பற்றி விசாரித்தபோது அனைவரும் ஸஃதைப் பற்றி நல்ல விதமாகவே கூறினார்கள். 'பனூஅபஸ்' கூட்டத்தாரின் பள்ளி வாசலில் விசாரித்தபோது, அந்தக் கூட்டத்தைச் சேர்ந்த அபூ ஸஃதா எனப்படும் உஸாமா இப்னு கதாதா என்பவர் எழுந்து, 'நீங்கள் விசாரிப்பதால் நான் சொல்கிறேன். ஸஃது அவர்கள் தம்து படையிலுள்ளவர்களிடம் எளிமையாக நடப்பதில்லை; (பொருட்களை) சமமாகப் பங்கிடுவதில்லை; தீர்ப்பு வழங்குவதில் நீதியாக நடப்பதில்லை' என்று புகார் கூறினார். இதைக் கேட்ட ஸஃது(ரலி) 'அல்லாஹ்வின் மேல் ஆணையாக! மூன்று பிரார்த்தனைகளை (உமக்கெதிராக) நான் செய்யப் போகிறேன்' என்று கூறிவிட்டு, 'இறைவா! உன்னுடைய இந்த அடியார் (அவரின் புகாரில்) பொய்யராகவும் புகழ் விரும்பிப் புகார் கூறுபவராகவும் இருந்தால் அவரின் ஆயுளை அதிகப் படுத்துவாயாக! அவரின் வறுமையையும் அதிகப் படுத்துவாயாக! அவரைப் பல சோதனைகளுக்கு ஆளாக்குவாயாக!' என்று பிரார்த்தனை செய்தார்கள்.
இதன் பிறகு அந்த மனிதரிடம் எவரேனும் நலம் விசாரித்தால் 'சோதனைக்காளான முதுபெரும் வயோதிகனாம் விட்டேன். ஸஃதின் பிரார்த்தனை என் விஷயத்தில் பலித்துவிட்டது' எனக் கூறக் கூடியவராம்விட்டார். ஜாபிர்(ரலி) வழியாக இதை அறிவிக்கும் அப்துல் மலிக் இப்னு உமைர் 'அதன் பிறகு நானும் அவரைப் பார்த்திருக்கிறேன்; முதுமை யினால் அவரின் புருவங்கள் அவரின் கண்களை மறைத்திருந்தன. பாதைகளில் நடந்து செல்லும் பெண்களின் மீது (பார்வை பறி போனதால்) மோதிக் கொள்வார்; இந்த நிலையில் அவரை பார்த்திருக்கிறேன்' என்று குறிப்பிட்டார். (புகாரி : 755)

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 99**
**( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 16**

وَاِنْ يَّمْسَسْكَ اللّٰهُ بِضُرٍّ فَلَا كَاشِفَ لَهٗۤ اِلَّا هُوَ وَاِنْ يَّمْسَسْكَ بِخَيْرٍ فَهُوَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ
“(நபியே!) அல்லாஹ் உமக்கு ஏதாவதொரு துன்பத்தை ஏற்படுத்திவிட்டால் அவனைத் தவிர (வேறு யாரும்) அதை நீக்க முடியாது. இன்னும் அவன் ஒரு நன்மையை உண்டாக்கிவிட்டால், (அதை எவரும் தடுக்க முடியாது.) அவன் எல்லாப் பொருட்கள் மீதும் பேராற்றலுடையவனாக இருக்கின்றான். (குர்ஆன் : 6:17)

وَهُوَ الْقَاهِرُ فَوْقَ عِبَادِهٖ وَهُوَ الْحَكِيْمُ الْخَبِيْرُ
அவனே தன் அடியார்களை அடக்கியாள்பவன், இன்னும் அவனே பூரண ஞானமுள்ளவன்; (யாவற்றையும்) நன்கறிந்தவன். (குர்ஆன் : 6:18)
நபியே! உம்மையும், மற்றவரையும் காப்பாற்றுகிறவன் அல்லாஹ் ஒருவனே தான். நன்மையோ, தீமையோ எதனை அவன் கொடுத்தாலும் அவனை யாரும் ஆட்சேபிக்க முடியாது.
ஏதாவதொரு துன்பத்தைக் கொண்டு உம்மையே அல்லாஹ் பிடித்தாலும் இவ்வுலகினர் அனைவரும் ஒன்றுகூடி அதனை அகற்ற முயன்ற போதிலும் அதனை அகற்றி விட முடியாது. அவனைத் தவிர அதனை நீக்குகிறவர் எவருமில்லை. விட்டவனே தான் நீக்க வேண்டும்.
இவ்வாறே, ஏதாவதொரு நன்மையைக் கொண்டு அவன் உம்மைப் பிடித்து உமக்கு எல்லா வகையான உதவிகளையும் செய்ய அவன் செய்ய நினைத்தால் அவனை அவ்வாறு செய்ய விடாமல் எவரும் தடுத்து விட முடியாது. ஏனெனில்அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றலுள்ளவன் என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.
ஹள்ரத் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) கூறினார்கள்: நான் ஒரு தினம் பெருமானார்(ஸல்) அவர்களுடன் (ஒட்டகத்தில்) பின்னால் அமர்ந்துசென்றேன். அப்பொழுதுஅவர்கள் என்னை தோக்கி, "சிறுவனே, உனக்குச் சில வாக்குகளைக் கற்பிக்கிறேன்; அவற்றை கவனத்தில் வைத்துக் கொள்; அல்லாஹ் உன்னைப்பாதுகாப்பான்.''
"நீ எதையாவது வேண்டிக் கொள்ள நினைத்தால் அல்லாஹ்விடமே வேண்டிக் கொள். நீ உதவி தேடுவதாக இருந்தால் அல்லாஹ்விடமே உதவிதேடிக் கொள்."
"(உலகின்) சமுதாயத்தினர் அனைவரும் ஒன்று திரண்டு உனக்கு நன்மை செய்ய நினைத்தாலும் அல்லாஹ் விதித்ததைத் தவிர எந்த ஒரு பலனையும் உனக்குச்செய்து விட முடியாது. அவ்வாறே இக்கூட்டத்தினர் அனைவரும் உனக்குத் தீங்கு செய்ய நினைத்து ஒன்று திரண்டாலும் அல்லாஹ் விதித்ததைத் தவிர்த்து எந்தத்தீங்கும் உனக்குச் செய்து விட முடியாது" என்று கூறினார்கள். ( திர்மிதி)
எல்லாம் அல்லாஹ்வின் சக்தி கொண்டு தான் நடக்குமென்பதை இவ்வாக்கும் நன்கு விளக்கிக் காட்டுகிறது. அவனை மீறி எதுவும் யாரும்செய்து விட முடியாது. காரணம் அவன் தனது அடியார்களை அடக்கியாள்கிறவன்; மிகைத்தவன். அவர்களுக்கு எந்தெந்த சமயத்தில் எதனெதனைச் செய்ய வேண்டுமென்பதில் நுட்ப ஞானமுடையவன்; அவர்களது செயல்களை நன்கறிந்து அவர்களுக்குப் பொருத்தமானவற்றைச் செய்வதில் நுண்ணறிவுடையவன்.

مَا يَفْتَحِ اللّٰهُ لِلنَّاسِ مِنْ رَّحْمَةٍ فَلَا مُمْسِكَ لَهَا وَمَا يُمْسِكْ ۙ فَلَا مُرْسِلَ لَهٗ مِنْ بَعْدِهٖ وَهُوَ الْعَزِيْزُ الْحَكِيْمُ
மனிதர்களுக்கு அல்லாஹ் தன் ரஹ்மத்தில் (அருள் கொடையில்) இருந்து ஒன்றைத் திறப்பானாயின் அதைத் தடுப்பார் எவருமில்லை, அன்றியும் அவன் எதைத் தடுத்து விடுகிறானோ, அதன் பின், அதனை அனுப்பக் கூடியவரும் எவரும் இல்லை; மேலும் அவன் யாவரையும் மிகைத்தவன்; ஞானம் மிக்கவன். (குர்ஆன் : 35:2)
இதையே வள்ளுவர் தமது திருக்குறளில் ஒரு கோடி பொருளை சேர்த்து ஒழுங்குப்படுத்தி வைத்திருந்தாலும் இறைவன் விதித்த வகையால் அல்லாமல் அவற்றை அனுபவிக்க முடியாது என்ற கருத்தை
வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கு துய்த்தல் அரிது   என்ற குறளால் விளக்கப்படுகிறது

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 100
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 17

قُلْ اَىُّ شَىْءٍ اَكْبَرُ شَهَادَةً قُلِ اللّٰهُ ۙ شَهِيْدٌ بَيْنِىْ وَبَيْنَكُمْ وَاُوْحِىَ اِلَىَّ هٰذَا الْـقُرْاٰنُ لِاُنْذِرَكُمْ بِهٖ وَمَنْ بَلَغَ اَٮِٕنَّكُمْ لَـتَشْهَدُوْنَ اَنَّ مَعَ اللّٰهِ اٰلِهَةً اُخْرٰى قُلْ لَّاۤ اَشْهَدُ قُلْ اِنَّمَا هُوَ اِلٰـهٌ وَّاحِدٌ وَّاِنَّنِىْ بَرِىْٓءٌ مِّمَّا تُشْرِكُوْنَ‌
(நபியே!) "மிக வலுவான சாட்சியம் எது?" என்று (அவர்களிடம்) நீர் கேட்பீராக. "அல்லாஹ்வே (வலுவான சாட்சி ஆவான். அவனே) எனக்கும் உங்களுக்கும் இடையே சாட்சியாக இருக்கின்றான்" என்று நீர் கூறுவீராக.
இந்தக் குர்ஆன் மூலம் உங்களையும், இது யாரையெல்லாம் எட்டுகிறதோ அவர்களையும் நான் எச்சரிப்பதற்காகவே இது எனக்கு வேத அறிவிப்பாக அருளப் பெற்றது.
அல்லாஹ்வுடன் வேறு கடவுள்களும் உள்ளனர் என்று நீங்கள் சாட்சியம் அளிக்கிறீர்களா? நான் (அவ்வாறு) சாட்சியம் கூற மாட்டேன் என்று (நபியே!) நீர் கூறுவீராக! அவன் மட்டுமே ஏக இறைவன். உங்களது இணைவைப்பிலிருந்து நான் விலகிக்கொண்டவன் என்றும் (நபியே!) நீர் கூறுவீராக! ( குர்ஆன் 6 : 19)
மக்காலிலிருந்த இஸ்லாத்தின் விரோதிகள் ஒரு தினம் பெருமானார்(ஸல்) அவர்களிடம் வந்து, 'முஹம்மதே! உம்மைத் தவிர வேறு எந்த தூதரையும் அல்லாஹ் உண்டாக்கவில்லையா? நீர் சொல்வதெல்லாம் சரி தான் என்று உம்மை மெய்ப்பிப்பதற்கு எவரையும் எம்மால் காண முடியவில்லையே,
உம்மைப் பற்றி யூதர்களிடம் கேட்டோம்; கிறிஸ்தவர்களிடம் கேட்டோம். உம்மைப் பற்றிய எத்தகைய ஞாபகார்த்தக் குறிப்பும் அவர்களிடம் இல்லை என்று கூறுகின்றனர். ஆகையால், நீர் அல்லாஹ்வின் தூதர் தாம் என்பதற்குச் சாட்சி கூறுகிற எவரையாவது எங்களுக்குக் காட்டும்' என்று கேட்டனர். அப்பொழுது தான் இவ்வசனம் இறக்கப்பட்டது.
(ஆதார நூல்கள்: தப்ஸீர் காஜின், குஹுல்மஆனி, தஸ்தாவீ )

வசன விளக்கம்:
சாட்சியத்தில் மிகப் பெரியது எது? என்று அவர்களிடமே நீர் கேளும், அவர்கள் என்ன பதில் கூறுகின்றனரெனக் கவனித்துப் பாரும். ஏதாவது பதில் கூறினால் சரி, இல்லையெனில் அல்லாஹ் எனக்கும் உங்களுக்குமிடையில் சாட்சியாளனாக இருக்கின்றான்.அவன் எனது சத்தியத் தன்மையின் மீதும், உங்களுடைய அசத்தியத்தின் மீதும் தக்கவாறு சாட்சியம் கூறுவான். இதை விட மிகப்பெரிய சாட்சி வேறு என்ன வேண்டும் ?
நான் அவனுடைய உண்மையான நபிதான் என்பதற்கும் அவனே சாட்சியாளனாக இருக்கின்றான்.
எப்படியென்றால் இந்த குர்ஆன் எனக்கு அவன் மூலம் வஹியாக அருளப்பட்டிருக்கிறது. அது ஓர் அற்புதமான வேதமாகும். நீங்கள் இலக்கியத்தில் மிக்க உயர்வானவர்களாக இருந்தும், அந்த குர்ஆனைப் போல் எதனையும் உண்டாக்கிக் கொண்டு வர உங்களால் முடியவில்லை. அது அல்லாஹ்வின் வேதந்தான் என நீங்களே ஏற்கிறீர்கள்.
அந்த வேதத்தில் தான் எனது நபித்துவம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதைவிட வேறு என்ன ஆதாரம் வேண்டும்?
ஆகவே நான் இறைவனின் தூதர் என்பதற்கு அவனே சாட்சியாக இருப்பதுடன் அவனால் அருளப்பட்ட திருகுர்ஆனும் சாட்சியாக இருக்கிறது. உங்களுக்கும், அந்த குர்ஆன் யார் யாரிடமெல்லாம் சென்று அடைகிறதோ அவருக்கும் நான் அந்தக் குர்ஆனைக் கொண்டே அச்சமூட்டி எச்சரிப்பதற்காகவே அது எனக்கு அருளப்பட்டிருக்கிறது.
உலக முடிவு வரை குர்ஆன் தான் வேதம்
உங்களோடு மட்டும் இந்த குர்ஆன் நின்றுவிடாது. இறுதிநாள் வரை தோன்றுகிற அனைவரிடமும் இந்த குர்ஆன் சென்றடையும். நான் இதனைக் கொண்டு அச்சமூட்டி எச்சரிப்பது போல் இது சென்றடைபவரெல்லாம் இப்பணியைச் செய்தாக வேண்டும். அல்லாஹ் ஒருவன் என்பதற்கு நான் அவனுடைய உண்மையான தூதராக இருக்கிறேன் என்பதற்கு உலகம் முடியும்வரை இது சாட்சி பகர்ந்து கொண்டே இருக்கும்.

நீங்கள் அல்லாஹ்வுக்கு இணை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள், அவனுக்குரிய சக்தி அவைகளுக்கும் உண்டு என்பதை உங்களால் நிரூபிக்க முடியுமா? இந்த அடிப்படையில் அல்லாஹ்வுடன் வேறு தெய்வங்களும் உண்டு என நீங்கள் நிச்சயமாக சாட்சி கூறுவீர்களா ? எனவும் அவர்களிடம் கேளும்.
தாங்கள் வணங்கும் விக்கிரகங்களின் தன்மை அவர்களுக்குத் தெரிந்தே இருக்கிறது. அதனால் அவர்கள் உமது கேள்விக்கு எந்த பதிலையும் சொல்ல முடியாது.
ஆகையால் நீர் தான் இவ்வாறு பதில் சொல்ல வேண்டும்; அல்லாஹ்வுடன் இதர தெய்வங்கள் உண்டு என்பதை வன்மையுடன் நான் மறுக்கிறேன். அவனுக்குரிய சக்தி அவனுடைய படைப்புகளில் எதற்கும் உண்டு என்பதாக நான் ஒரு போதும் சாட்சி கூற மாட்டேன். அவன் ஒரே நாயன் தான். அவனே அல்லாஹ். அவனுக்கு இணை எதுவும் கிடையாது. அவனே வணக்கத்திற்கு உரியவன்' என்பதாகவே நான் சாட்சி கூறுவேன்.
அன்றியும், அந்த ஏகனான அல்லாஹ்வுக்கு நீங்கள் இணை வைத்துக் கொண்டிருப்பவற்றை விட்டு நிச்சயமாக நான் விலகியே இருக்கிறேன் என்றும் கூறிவிடும் என்பது இவ்வசனத்தின் விளக்கமாகும்.
பெருமானார் (ஸல்) அவர்களையோ, அவர்களுக்கு அருளப்பட்ட திருகுர்ஆன் வேதத்தையோ இதர மதத்தவர் உணராமலில்லை. பிடிவாதத்தின் காரணத்தால் தான் உணர்ந்த உண்மையை
வெளிப்படுத்த மறுக்கின்றனர்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 101
## ( விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 18

اَ لَّذِيْنَ اٰتَيْنٰهُمُ الْـكِتٰبَ يَعْرِفُوْنَهٗ كَمَا يَعْرِفُوْنَ اَبْنَآءَهُمْ‌ۘ اَ لَّذِيْنَ خَسِرُوْۤا اَنْفُسَهُمْ فَهُمْ لَا يُؤْمِنُوْنَ
எவரும் தம் குழந்தைகளை (சந்தேகமில்லாமல் அறிவதைப் போல், வேதங் கொடுக்கப் பெற்றவர்கள், (நம் தூதராகிய இவரை, இறைவனுடைய தூதர் தாம்) என்று நன்கறிவார்கள். எவர்கள் தமக்குத் தாமே நஷ்டமிழைத்துக் கொண்டார்களோ அவர்கள் தாம் இவரை
நம்பமாட்டார்கள். (குர்ஆன் : 6:20)

இக்கருத்தை வலியுறுத்தி குர்ஆனில் இன்னொரு இடத்தில்

اَلَّذِيْنَ اٰتَيْنٰهُمُ الْكِتٰبَ يَعْرِفُوْنَهٗ كَمَا يَعْرِفُوْنَ اَبْنَآءَهُمْ وَاِنَّ فَرِيْقًا مِّنْهُمْ لَيَكْتُمُوْنَ الْحَـقَّ وَهُمْ يَعْلَمُوْنَ‏
எவர்களுக்கு நாம் வேதங்களைக் கொடுத்தோமோ அவர்கள் தம் (சொந்த) மக்களை அறிவதைப் போல் (இந்த உண்மையை) அறிவார்கள்: ஆனால் அவர்களில் ஒரு பிரிவினர், நிச்சயமாக அறிந்து கொண்டே உண்மையை மறைக்கின்றனர். (குர்ஆன் : 2:146)
தாம் அல்லாஹ்வின் தூதர் என்பதற்குச் சாட்சியம் கூறும்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறைஷியர் கேட்ட மேற்கண்ட கேள்வியில் யூதர்களும் கிறிஸ்துவர்களும் உம்மைப் பற்றித் தங்களுக்குத் தெரியாது என்று கூறிய முந்தைய வசன வாக்கியத்திற்கு இந்த ஆயத்தில் பதில் சொல்லப்பட்டிருக்கிறது.
பெருமானார் (ஸல்) அவர்கள் உண்மையான நபி என்பதை, மனிதன் உணருவதற்கு அவனையே உதாரணமாகக் காட்டாமல், அவன் பெற்றெடுத்த மக்களை இங்கு உவமை காட்டப்படுகிறது. இவ்வசன கருத்தை விளக்குவதற்கு இதைவிடச் சிறந்த உதாரணம் வேறொன்றிருக்க முடியாது.
ஏனெனில், விஞ்ஞான உளவியல் ரீதியாக மனிதனுக்கு தன்னை அறிய முடியாத சில காலமுண்டு. அதுதான் தான் பிறந்து குழந்தைப் பருவம் எய்த இக்காலத்தில் தன்னைப் பற்றி எதனையும் உணர்ந்து ஞாபகப்படுத்தும் சக்தி அவனுக்கு கிடையாது.

ஆனால், தான் பெற்றெடுத்த மக்களை அறிய முடியாத காலம் ஒன்றுண்டு எனக் கூற முடியாது. பெற்றவன் அவனே. அவன் தனது குழந்தையின் பிறப்பு முதல் நன்கு அறிந்தவன் அவனாத்தான் இருக்க முடியும். இவ்வாறே பெருமானார் (ஸல்) அவர்களை உண்மையான நபி என்பதாக எதிரிகள் நன்கறிந்திருந்தனர். ஆனால் அதை வெளிக் காட்டினால், தங்களது கௌரவம் அழிந்து விடுமேயென அஞ்சி அறிந்த உண்மையை மறைக்கின்றனர்

பெருமானாரின் நபித்துவம் பற்றி முந்தைய வேதக்காரர்கள் நன்கறிந்திருப்பதற்கு கீழ்வரும் சம்பவம் ஒன்றே சான்றாகும்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மதீனாவிற்கு வந்தபோது,"அப்துல்லாஹ் பின் ஸலாம் என்ற பெருமானாரின் தோழர், இவர் ஆதியில் ஒரு யூதராகயிருந்து வேதங்களை நன்கு கற்றுணர்ந்தவர். அந்த வேதங்களில் கூறப்பட்ட அடையாளங்களைப் பெருமானார் (ஸல்) அவர்களிடத்தில் இருப்பதை கண்ணுற்றதும் அவர் இஸ்லாத்தைத் தழுவி விட்டார்.
ஒரு சமயம் பெருமானார் சம்பந்தமாக அவர்கள் அறிவிக்கும் பொழுது, "எனது புதல்வனை விட அவர்களை நான் நன்கறிவேன்" என்றார்.
அருகிலிருந்த ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்கள், "எவ்வாறு" என்று வினவினார்கள்.
"முஹம்மது, நபி என்பதில் எனக்கு நிச்சயமாக ஐயமே கிடையாது. ஆனால், என் புதல்வன் சம்பந்தமாக அவன் எனக்குத்தான் பிறந்தான் என்பதை நான் சந்தேகிக்க இடமுண்டு. ஏனெனில் அவனது அன்னை துரோகமும் செய்திருக்கலாம். ஆனால் நபி (ஸல்) அவர்கள் நபிதான் என்பதற்கு எல்லா வேதங்களும் அறிவித்துள்ள அடையாளங்கள் சந்தேகத்திற்கிடமின்றி அவரில் காணப்படுகின்றன" என்று அப்துல்லாஹ் பின் ஸலாம் விளக்கினார்கள்.
அதற்கு உமர் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள், "இப்னு ஸலாமே, உமக்கு இறைவன் தௌஃபீக் செய்யட்டும்" என்று கூறினார்கள்.
ஆதார நூல்கள்: தப்ஸீர் அல்ஜவாஹிர், தன்தாவீ, ரூஹுல்மஆனீ )

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 102
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 19)

وَمَنْ اَظْلَمُ مِمَّنِ افْتَرٰى عَلَى اللّٰهِ كَذِبًا اَوْ كَذَّبَ بِاٰيٰتِهٖ اِنَّهٗ لَا يُفْلِحُ الظّٰلِمُوْنَ
அல்லாஹ் மீது பொய்யைக் கற்பனை செய்கிறவனை விட, அல்லது அவனுடைய வசனங்களைப் பொய்யாக்குகிறவனை விட அநியாயக்காரன் யார்? நிச்சயமாக அநியாயக்காரர்கள் வெற்றி பெறவே மாட்டார்கள். (குர்ஆன் : 6:21)
1) அல்லாஹ்வின் மீது பொய்யைக் கற்பனை செய்தல் என்பது.
அல்லாஹ்விற்கு இணைகள் உண்டு என்பதாக கற்பனை செய்தல்
“நிச்சயமாக அல்லாஹ் தனக்கு இணை கற்பிப்பதை மன்னிக்க மாட்டான். அதற்கு கீழ் நிலையில் உள்ள (மற்ற பாவத்)தை தான் நாடியவர்களுக்கு மன்னிப்பான். யார் அல்லாஹ்வுக்கு இணை வைக்கிறார்களோ அவர்கள் நிச்சயமாக மிகவும் பெரிய பாவத்தையே கற்பனை செய்கின்றார்கள். (குர்ஆன் : 4:48)
“அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பவர் (உண்மையை விட்டும்) தூரமான வழி கேட்டில் விழுந்து விட்டார்.” (குர்ஆன்,4:116)
லுக்மான் தம் புதல்வருக்கு, நல்லுபதேசம் செய்யும் போது ” என் அருமை மகனே! அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்காதே! இணை கற்பித்தல் மாபெரும் அநீதியாகும்” என்று கூறியதை நினைவூட்டுவீராக! (குர்ஆன், 31:13)

”அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்போருக்கு சொர்க்கத்தை அல்லாஹ் விலக்கப்பட்டதாக ஆக்கி விட்டான்.” (குர்ஆன்,5:72)

2) அல்லாஹ்விற்கு மனைவி மக்கள் உண்டு என்று கூறி மலக்குமார்களை அல்லாஹுத்தஆலாவின் புதல்விகள் என்றும் அவர்கள் தங்களுக்காக பரிந்து பேசுவார்கள் என்றும் கூறுவது

"அன்றியும், அர் ரஹ்மானின் அடியார்களாகிய மலக்குகளை அவர்கள் பெண்களாக ஆக்குகிறார்கள்; அவர்கள், படைக்கப்பட்ட போது இவர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்களா? அவர்களுடைய சாட்சியம் பதிவு செய்து வைக்கப்பட்டு, அவர்கள் கேள்வி கேட்கப்படுவார்கள்.

(குர்ஆன் : 43:19)

3) ஒருவரை அல்லாஹ் என் தூதராக அனுப்பாத நிலையில் அவர் அல்லாஹ்வின் மீது கற்பனை செய்து தம்மை அவன் தூதராக அனுப்பி உள்ளதாக பொய் உரைத்தல்

முஸைலமா என்ற பொய்யன்

"இறைத்தூதர் (ஸல்) அவர்களுடைய தூதுத்துவத்தில் தனக்கும் பங்கு இருப்பதாக வாதிட்டான். யமாமாப் பகுதி மக்களுக்கு இஸ்லாத்தின் தூதை தெளிவாக எடுத்துரைக்க எடுக்கப்பட்ட முயற்சிகளையும் இந்த முஸைலமா தனது வாதத்திறமையினால் முறியடித்தான்.

மேலும், தொழுகைகக்காக அழைக்கப்படும் அதானிலும் இவன் மாற்றம் செய்தான். இன்னும் மதுபானத்தையும், விபச்சாரத்தையும் ஆகுமானவைகளாக அறிவித்தான். இதன் காரணமாக, கவரப்பட்ட மக்கள், இந்த வழிகேடனைப் பின்பற்ற ஆரம்பித்தார்கள்,

இன்னும் இவ்வாறு பின்பற்றுபவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே சென்றது.இன்னும் இவன் பெண் தூதுவராகத் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்ட சஜாவை மணந்து கொண்ட பின், தன்னுடைய தூதுத்துவம் முன்னைக் காட்டிலும் வலுவடைந்திருப்பதாகவும் இவன் கூற ஆரம்பித்து விட்டான்.

யமாமா போரில் அபீசீனியா அடிமையான வஹ்ஸி (ரலி) அவர்கள்,தன் கையிலிருந்த வேல் கம்பை முஸைலமாவை நோக்கி வீசினார். அதனை சமாளிக்க இயலாத முஸைலமா வேல் கம்பால் குத்தப்பட்டு கீழே வீழ்ந்த பொழுது, அன்ஸாரிகளில் உள்ள இளைஞரொருவர், அவனது கழுத்தை வெட்டி சாய்த்தார்.

வஹ்ஸி (ரலி) அவர்களின் கரங்களால், முஸைலமா கொல்லப்பட்டு விட்டான் என்ற செய்தி காட்டுத் தீ போல போர்க்களத்தில் பரவ ஆரம்பித்தது. இந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட முஸைலமாவின் ஆட்கள் நாலா பக்கமும் சிதறி ஓட ஆரம்பித்தார்கள். இத்துடன், முஸ்லிம் படை முஸைலமாவிற்கு எதிரான போரில் மிகப் பெரும் வெற்றியைப் பெற்றது.

4) திருக்குர்ஆனையும், முஃஜிஸாக்களையும் அங்கீகரிக்க மறுத்து அவற்றை சூனியம் என்று கூறுவது அவனது வசனங்களை பொய்ப்பிப்பதாகும்.

5) யூதர், கிறிஸ்தவர் தங்கள் வேதங்களில் நபி (ஸல்) அவர்களை குறித்து கூறப்பட்டுள்ள வர்ணனைகளை மறைத்து வேறு விதமாக கூறி வருவது

சாதாரண காரியங்களுக்காக பொய் கூறுகிறவனை விட தனக்கு எல்லா உதவிகளையும் செய்கிற அல்லாஹ்வின் மீது பொய் கூறுகிறவன் மிகப்பெரிய அநியாயக்காரன்.

நிச்சயமாக இத்தகைய அநியாயக்காரர்கள் ஒருபோதும் வெற்றியடைய மாட்டார்கள். இவ்வுலகிலும் மறு உலகிலும் நஷ்டமே அடைந்து கடும் வேதனைக்குள்ளாவர். இத்தகைய பொய்களும் அவர்களுக்கு துணை நிற்பவர்களும் மறுமையில் விசாரிக்கப்படும்

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 103
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 20)

وَيَوْمَ نَحْشُرُهُمْ جَمِيْعًا ثُمَّ نَقُوْلُ لِلَّذِيْنَ اَشْرَكُوْۤا اَيْنَ شُرَكَاۤؤُكُمُ الَّذِيْنَ كُنْتُمْ تَزْعُمُوْنَ

அவர்கள் அனைவரையும் நாம் ஒன்று சேர்க்கும் நாளில் நமக்கு இணைவைத்தவர்களை நோக்கி, ”நீங்கள் (அல்லாஹ்வுக்கு இணையாக வைத்த) உங்களுடைய அந்தக் கூட்டாளிகள் எங்கே” என்று கேட்போம். (குர்ஆன் : 6:22)

ثُمَّ لَمْ تَكُنْ فِتْنَـتُهُمْ اِلَّاۤ اَنْ قَالُوْا وَاللّٰهِ رَبِّنَا مَا كُنَّا مُشْرِكِيْنَ

“எங்கள் ரப்பாகிய அல்லாஹ்வின் மீது ஆணையாக, நாங்கள் இணைவைப்பவர்களாக இருந்ததில்லை” என்று கூறுவதைத் தவிர வேறு அவர்களுடைய பதில் எதுவும் இராது. (குர்ஆன் : 6:23)

اُنْظُرْ كَيْفَ كَذَبُوْا عَلٰٓى اَنْفُسِهِمْ وَضَلَّ عَنْهُمْ مَّا كَانُوْا يَفْتَرُوْنَ

(நபியே!) அவர்கள் தங்களுக்கு எதிராக எவ்வாறு பொய் கூறிக் கொண்டார்கள் என்பதைப் பாரும்; ஆனால் (இறைவனுக்கு இணையானவை என்று அவர்கள் பொய்யாகக்) கற்பனை செய்ததெல்லாம் (அவர்களுக்கு உதவிடாது) மறைந்துவிடும்.(குர்ஆன் : 6:24)

மேற்கண்ட குர்ஆன் 6:22 வசனத்தின் கருத்தையொட்டி இன்னொரு இடத்தில் குர்ஆனில்,

" இன்னும், (அல்லாஹ்) அவர்களை அழைக்கும் நாளில்: “எனக்கு இணையானவர்கள் என்று நீங்கள் எண்ணிக்கொண்டிருந்தீர்களே அவர்கள் எங்கே” என்று கேட்பான்". (குர்ஆன் : 28:62)

அதற்கு அவர்களின் மறுமொழி எங்கள் இறைவனாகிய அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் இணை வைப்போராக இருந்ததில்லை(யே!)' என்று கூறுவதைத் தவிர (வேறொன்றாக இருக்காது' என அடுத்த வசனத்தில் (23) அல்லாஹ் தெரிவிக்கின்றான்.

சயீத் பின் ஜுபைர் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:

ஒரு மனிதர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வந்து, "இப்னு அப்பாஸ் அவர்களே! மறுமை நாளில் இணை வைப்பாளர்கள் 'எங்கள் இறைவனாகிய அல்லாஹ்வின் மீதாணையாக! நாங்கள் இணைவைப்போராக இருந்ததில்லை' என்று கூறுவார்கள் எனும் இறை வசனத்தை நான் செவியுற்றேன். இதற்கு என்ன விளக்கம்?” என்று கேட்டார்.

அப்போது இப்னு அப்பாஸ் (ரலி அவர்கள் பின்வருமாறு
விளக்கமளித்தார்கள்.

மறுமை நாளில் இறைநம்பிக்கை கொண்ட தொழுகையாளிகள் மட்டுமே சொர்க்கத்திற்குள் செல்வதை இணை வைப்பாளர்கள் காண்பார்கள். அப் போது அவர்கள் தங்களுக்கிடையே வாருங்கள்! நாம் அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்கவில்லை என்று மறுப்போம்' என்று கூறி இணை கற்பித்ததை மறுப்பார்கள்.

அப்போது அவர்களின் வாய்கள் மீது அல்லாஹ் முத்திரையிடுவான். அவர்களின் கைகளும் கால்களும் சாட்சியமளிக்கும். அவர்களால் அல்லாஹ்விடம் எதையும் மறைக்க முடியாது.

பின்னர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அந்த மனிதரிடம் "தற்போது உமது உள்ளத்தில் சந்தேகம் ஏதேனும் உண்டா? குர்ஆனின் ஒவ்வொரு வசனமும் ஏதேனும் ஒரு காரணத்துக்காகவே அருளப்பெற்றுள்ளது. எனினும், அதன் நோக்கத்தை நீங்கள் அறியமாட்டீர்கள்" என்று கூறினார்கள்.

எனவேதான். அடுத்த வசனத்தில் (24) இந்த இணைவைப்பாளர்கள் குறித்து, "(நபியே!) அவர்கள் தமக்கு எதிராகவே எவ்வாறு பொய்யுரைக்கிறார்கள் என்பதையும், அவர்கள் புனைந்துரைத்துக் கொண்டிருந்தவை அவர்களை விட்டு எவ்வாறு மறைந்து போகும் என்பதையும் கவனிப்பீராக” என்று அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.

வேறொரு வசனத்தில், “பின்னர் அவர்களிடம், நீங்கள் அல்லாஹ்வை விட்டுவிட்டு (அவனுக்கு) இணை கற்பித்து வந்தவை எங்கே என்று அவர்களிடம் கேட்கப்படும்.

அதற்கு அவர்கள், எங்களை விட்டு மறைந்து சென்று விட்டனர் என்று கூறுவார்கள்” குர்ஆன் (40:73,74) என அல்லாஹ் தெரிவிக்கின்றான்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 104
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 21)

اُنْظُرْ كَيْفَ كَذَبُوْا عَلٰٓى اَنْفُسِهِمْ وَضَلَّ عَنْهُمْ مَّا كَانُوْا يَفْتَرُوْنَ

(நபியே!) அவர்கள் தங்களுக்கு எதிராக எவ்வாறு பொய் கூறிக் கொண்டார்கள் என்பதைப் பாரும்; ஆனால் (இறைவனுக்கு இணையானவை என்று அவர்கள் பொய்யாகக்) கற்பனை செய்ததெல்லாம் (அவர்களுக்கு உதவிடாது) மறைந்துவிடும். (குர்ஆன் : 6:24)
உலகில் "வஸனிய்யத்" என்னும் சிலை வழிபாட்டை கடைப்பிடிப்பவர்கள் அதிகம் உள்ளனர். இந்த கட்டுரையில் சிலை வணக்கம் குறித்து விரிவாக ஆய்வு செய்வது மட்டுமல்லாமல், சிலை வணக்கத்திற்கு ஆதரவாக சொல்லப்படும் காரணிகளையும் ஆய்வு செய்வோம்.

சிலை வணக்கமுறைக்கு சொல்லப்படும் காரணங்கள் ::
1) சிலை இறைவன் அல்ல! சிலை இறைவனின் சின்னம்/அடையாளம் மட்டும்தான்.(symbol of god)
2) சிலை, மனதை ஓர்மைப் படுத்துவதற்குதான், அச்சிலையையே இறைவனாக நாங்கள் நம்பவில்லை. எப்படி காந்திஜி படம் காந்தி இல்லையோ அப்படி !
3) நாங்கள் சிலையை வணங்கவில்லை, சிலை மூலமாக இறைவனை வணங்குகிறோம்.
4) எங்கள் தலைவர்களையும், முன்னோர்களையும் மதிப்பதற்காக அவர்களின் புகைப்படங்களையும், சிலையையும் வைத்து மதிப்பது போல, இறைவனை சிலையாக வடித்து வணங்குகிறோம்.
5) இறைவன் எங்கும் இருக்கிறார். அந்த சிலையிலும் இருக்கிறார். எனவே, சிலையை வணங்குவது தவறல்ல!
6) சிறு உதாரணங்களை வைத்து தான் குழந்தைகளுக்கு விளக்க முடியும். ஆன்மீகத்தில் சாதாரண மக்களும் குழந்தைகள் போல தான். அதனாலேயே வணக்கத்திற்கு சிலையை வைத்திருக்கிறோம்.
நினைவில் கொள்க: இறைவனுடைய உருவம், ஒரு அனுமானம் தான். யாரும் இறைவனைப் பார்த்ததில்லை. ஆக வணங்கப்படும் இறைவனுடைய உருவம் அவனுடையதல்ல என்பதை விளங்கி அவையெல்லாம் மனிதனின் அனுமானங்கள் தான் என்பதை அறிவோம்.
மனிதன் அவனுடைய அனுபவங்களை வைத்து, அதாவது அவனுடைய அன்றாட வாழ்வில் பார்த்தவற்றை, கேள்விப்பட்டவற்றை வைத்து இறைவனுக்கு உருவத்தை கொடுத்துள்ளான்.அவ்வளவே .
சிலைவணக்கம் ஒரு பெரும் பாவம். அது ஏன்?
"சிலை வணக்கம் தவறல்ல, சிலை வணங்கப்படுவதே இறைவனை வணங்க வேண்டும் என்று நோக்கத்திற்காக தானே! நம்முடைய நோக்கத்தையும் எண்ணத்தையும் இறைவன் அறிவார் அல்லவா..? ஆக இதில் எந்த தவறுமில்லை " என்று மக்கள் நினைக்கிறார்கள்.
என்னதான் நல்ல எண்ணத்துடன் சிலை வணக்கம் செய்தாலும், கீழ்காணும் காரணங்களால், சிலை வணக்கம் ஒரு பெரும்
பாவம் ஆகிறது.

1) இறைவன் , சிலைவழிப்பாட்டை அனுமதிக்கவில்லை:
மனிதர்கள் சிலை வணக்கம் மூலம் இறைவனை வணங்க இறைவன் அனுமதிக்கவில்லை. உதாரணத்திற்கு உங்களையே எடுத்துக் கொள்ளுங்கள். உங்களைக் காணாத ஒருவர் , உங்களை நினைவு கூறுவதற்காக ஒரு யானை அல்லது ஒரு குரங்கை போன்ற உருவம் வடித்து, இது தான் நீங்கள் என்று கூறுவார்களேயானால் அதை ஏற்றுக் கொள்வீர்களா?

தம்முடைய முகத்தை சற்று மெருகேற்றி ஒரு சிலைவடித்தால் அதை மகிழ்வுடன் ஏற்றுக் கொள்ளும் மனிதன், தன்னைவிட தரத்தில் தாழ்ந்த இனத்தோடு அவனை ஒப்பிடும் போது, அதை ஏற்றுக் கொள்வதில்லை. காரணம் அந்த ஒப்பீடு தன்னை அவமானப்படுத்துவதாக கருதுகின்றான்.

இப்பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தையும் படைத்த இறைவனுக்கு, இவ்வுலகத்தில் உள்ள எல்லா வஸ்துகளும் அவனுடைய தரத்திற்கு கீழ் தான். படைப்பினங்கள் அனைத்தும் படைத்தவனை விட தரம் தாழ்ந்தவையாகும். அப்படியிருக்க, தரம் தாழ்ந்த வஸ்துக்களைக் காட்டி இப்படித்தான் இறைவன் இருப்பான் என்று கருதுவது இறைவனை அவமானப்படுத்துதல் அல்லவா ?
உங்களுக்கென்று வரும்போது, ஏற்று கொள்ள முடியாத ஒரு ஒப்பீட்டை இறைவனுக்கு செய்வது எப்படி சரியாகும்? இந்த ஒப்பீடு, எப்படி இறைவனுக்கு ஏற்புடையதாக இருக்கும்?

2) இறைவனுக்கு கொடுக்கப்படும் உருவங்கள் இறைவனை இழிவுபடுத்துகின்றன:
இறைவனை வணங்குவதற்காக ஏற்படுத்தப்பட்ட உருவங்களினால், இறைவனுக்கு இழிவு தான் ஏற்படுகிறது. உதாரணமாக , இறைவனுக்கு கொடுக்கப்படும் உருவங்கள், காலண்டரிலும், பைகளிலும், வெடிகளிலும், லாட்டரி டிக்கட்டிலும், திருமண அழைப்பிதழ்களிலும், ஏன் பீடியிலும் கூட பார்க்க முடிகிறது.
போன வருட காலண்டர்களின் நிலை என்ன? "இறைவனுடைய உருவம்" கொண்ட காலண்டர் குப்பையில் வீசப்படுகிறது. கிழித்து எறியப்படுகிறது. லாட்டரி டிக்கட்டுகளுக்கும், புத்தகங்களுக்கும், பைகளுக்கும், திருமண அழைப்பிதழ்களுக்கும் இதே நிலை தான். இறைவனுடைய உருவத்தை கொண்ட பீடிகளோ, மண்ணில் பலரிடம் மிதிபபடுவதும், கழிப்பறையில் போடப்படுவதும் வழக்கமானதாகிவிட்டது. இதனால் அறிந்தோ, அறியாமலோ இறைவனுக்கு உருவம் கொடுப்பதன் மூலம், அவனை நாம் இழிவு தான் செய்கிறோம்.
இது போன்ற செயல்கள், நமது புகைப்படத்திற்கு ஏற்பட்டாலோ அல்லது நமது பெற்றோரின் புகைப்படத்திற்கு ஏற்பட்டாலோ, அதை நாம் ஏற்போமா..? ஏற்க மாட்டோம் தானே. ஆனால் இறைவன் விசயத்தில் எப்படி ஏற்றுக்கொண்டுள்ளோம்? அந்த உருவம் உண்மையில் இறைவனின் உருவம் தான் என்று நாம் நம்பியிருந்தால், நாம் இவ்வாறு செய்வோமா? இதை நாம் சிந்திக்க வேண்டும்.

3) இறைவனுக்கு கொடுக்கப்படும் உருவங்களின் நிலை என்ன?
இறைவனுக்கு கொடுக்கப்படும் சில உருவங்களை நம்மால் கூட ஏற்றுக்கொள்ள முடிவதில்லை.
உதாரணத்திற்கு: கோரமான முகம், முன்பக்கம் நீட்டிக் கொண்டிருக்கும் பற்கள்..இது போன்ற தோற்றமுடையவரை, நீங்கள் திருமணம் செய்ய விரும்புவீர்களா ? அல்லது உங்களின் பிள்ளைக்கு திருமண முடிக்க விரும்புவீர்களா?
உலகில் உள்ள அழகை கண்டு நாம் வியக்கிறோம். அந்த அழகை படைத்த கடவுள், எவ்வளவு அழகாக இருப்பார்? நமக்கே ஏற்றுக்கொள்ளாத ஒரு உருவத்தை இறைவனுக்கு கொடுப்பது, அநீதி இல்லையா ?

4) இறைவனுக்கு கொடுக்கப்படும் உருவங்கள், இறைவனின் இலக்கணத்தை சிதைக்கிறது::
மனிதன் தனது அனுபவத்தை கற்பனையை வைத்து உருவம் கொடுக்க முற்பட்டால், கடவுளும் மனிதரை போன்றவர் தான் என்ற எண்ணத்தில், கடவுளுக்கும் , மனிதனுடைய பல பலகீனங்களை (குடும்பம், மனைவி, தூக்கம், துக்கம், மறதி போன்றவற்றை) சாட்டுவான். இது இறைவனின் இலக்கணத்தை சிதைக்கிறது; அதனால் கடவுளை மனிதன் குறைத்து மதிப்பிட, அவனது செயல்களில் கவனக்குறைவு ஏற்படுகிறது.
இறைவனுக்கு உருவம் கொடுத்து, தலையில் இருந்து பிறந்தவன் உயர் சாதிக்காரன், காலில் இருந்து இருந்து பிறந்தவன் தாழ்ந்த சாதிக்காரன் என்றெல்லாம் சொல்பவர்களை நாம் பார்க்கிறோம். இப்படி மனிதனை

பிறப்பால் தாழ்ந்தவன், உயர்ந்தவன் என்று பிரிக்கும் தவறான கொள்கையை சொல்வதற்கு கூட இறைவனுக்கு உருவம் கொடுக்கப்பட்டது தான் காரணமாக உள்ளது என்பதை சிந்திப்பவர்கள் உணரலாம்.
மனதை ஓர்மைபடுத்துவதற்கு சிலைகள் தேவையா?
இல்லை! தேவையில்லை. ஏனென்று கீழ்கண்ட காரணங்கள் விளக்கும்
.
1) சிலை முன்பாக நின்றுகொண்டு கண்களை மூடி பிரார்த்தனை செய்பவர்களை நாம் பார்த்திருப்போம்! மனதை ஓர்மைபடுத்துவதற்கு சிலைகள் தேவையெனில் பின்பு ஏன் கண்களை மூடி பிரார்த்தனை செய்ய வேண்டும்?
2) ஒரு அவசர தேவைக்காக இறைவனிடம் பிரார்திக்கும் போதுதான் மனதை ஓர்மைபடுத்துவது மிக மிக அவசியம்.
உதாரணத்திற்கு: பைக்கில் பயணம் செய்கிறீர்கள் , பிரேக் (brake) பிடிக்கவில்லை, பதற்றத்தோடு இறைவனிடம், "கடவுளே என்னைய காப்பாத்து" என பிரார்த்திப்பீர்கள். அச்சமயத்தில் மனதை ஓர்மைபடுத்த சிலையையோ அல்லது புகைப்படத்தை தேடுவீர்களா.? நேரடியாக பிரார்த்திப்பீர்களா ? இது போன்ற ஒரு சிலையில்லாமல் அவசர தேவைக்காக இறைவனிடம் நேரடியாக முடியுமென்றால் ஏன் மற்ற நேரங்களில் முடியாது?
3) மனதை ஓர்மைபடுத்துவதற்கு தான் சிலைகள் என்றால், மனதை ஓர்மைபடுத்த எந்த பொருளை வேண்டுமானாலும் உபயோகப்படுத்தலாமே ? உதாரணமாக ஒரு பல்பை பற்றி சிந்தித்துக் கூட மனதை ஓர்மைபடுத்தலாம். ஆனால் யாரும் அவ்வாறு செய்வதில்லை. ஆக மனதை ஓர்மைபடுத்துவதற்கு தான் சிலைகள் என்று சொல்லப்படும் காரணமும் உண்மையல்ல!
4) மனதை ஓர்மைபடுத்துவதற்கு மட்டும் தான் சிலைகள் என்றால், அந்த சிலைகள் மற்ற பொருள்கள் போல் நடத்தப்பட வேண்டும். அந்த சிலைகளுக்கு பூஜைகள் செய்வதும், அதற்கு அபிஷேகம் செய்வதும் அந்த சிலைகள் கடவுள்களாகவே பார்க்கப்படுகின்றன என்பது தெளிவாகிறது.
உருவ வழிபாட்டினர் மனதில் இறைவனை நினைத்தால், குறிப்பிட்ட உருவம் தான் நினைவில் வரும் ;அது தான் இறைவன் என மனதிலும் பதிவாகிவிட்டது. எனவே சிலையை தான் இறைவன் என நினைக்கிறார்கள்..
சிலை வணக்கமுறைக்கு சொல்லப்பட்ட காரணங்களான,
1) அந்த சிலை இறைவன் அல்ல! இறைவனின் சின்னம் / அடையாளம் தான். (symbol of god)
2) சிலை, மனதை ஓர்மைப்படுத்துவதற்கு தான், அச்சிலையையே இறைவனாக நாங்கள் நம்பவில்லை.
3) நாங்கள் சிலையை வணங்கவில்லை, சிலை மூலமாக வணங்குகிறோம். இவையனைத்தும் உண்மையல்ல என்பதே தெளிவு.
(நபியே!) அவர்கள் தங்களுக்கு எதிராக எவ்வாறு பொய் கூறிக் கொண்டார்கள் என்பதைப் பாரும்; ஆனால் (இறைவனுக்கு இணையானவை என்று அவர்கள் பொய்யாகக்) கற்பனை செய்ததெல்லாம் (அவர்களுக்கு உதவிடாது) மறைந்துவிடும்.
(குர்ஆன் : 6:24)

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 105
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 22)

("சிந்திப்பது மூளையா ? அல்லது இதயமா ?")
பகுதி – 1

وَمِنْهُمْ مَّنْ يَّسْتَمِعُ اِلَيْكَ وَجَعَلْنَا عَلٰى قُلُوْبِهِمْ اَكِنَّةً اَنْ يَّفْقَهُوْهُ وَفِىْٓ اٰذَانِهِمْ وَقْرًا ‌ وَاِنْ يَّرَوْا كُلَّ اٰيَةٍ لَّا يُؤْمِنُوْا بِهَا‌ حَتّٰٓى اِذَا جَآءُوْكَ يُجَادِلُوْنَكَ يَقُوْلُ الَّذِيْنَ كَفَرُوْۤا اِنْ هٰذَاۤ اِلَّاۤ اَسَاطِيْرُ الْاَوَّلِيْنَ
மேலும், அவர்களில் சிலர் உம்மை (உமது போதனைகளை) செவியேற்(பவர்கள் போல் நடிப்)பார்கள். ஆனால், அவர்கள் அதனை விளங்கிக் கொள்ள முடியாதபடி அவர்களுடைய இருதயங்களில் திரைகளையும், அவர்களுடைய செவிகளில் செவிட்டுத் தனத்தையும் நாம ஆக்கிவிட்டோம்.
(ஆகவே) அத்தாட்சி ஒவ்வொன்றையும் அவர்கள் பார்ப்பார்களாயினும், அவற்றை நம்ப மாட்டார்கள். முடிவில் உம்மிடம் அவர்கள் வந்தார்களானால் உம்மிடம் குதர்க்கமாகப்பேசுவார்கள். "இவை முன்னோர் களின் கட்டுக்கதைகளேயல்லாமல் (வேறு) இல்லை” என்று (அவர்களில்) நிராகரித்துக் கொண்டிருப்போர் கூறுவர்.(குர்ஆன் : 6:25)
மேற்கண்ட வசனத்தில் "அவர்கள் அதனை விளங்கிக் கொள்ள முடியாதபடி அவர்களுடைய இருதயங்களில் திரைகள்- இருதயங்களில் திரைகளா ? அப்படியென்றால் " சிந்திப்பது மூளையா ? அல்லது இதயமா ? குர்ஆன் மற்றும் அறிவியல் பார்வையில் ஆழமான ஓர் ஆய்வு.

அதற்கு முன் நப்fஸ் (soul/ ego), ரூஹ் (spirit), அக்ல் (intellect/ reason/ mind) மற்றும் கல்ப்b (heart) பற்றிய ஒரு சிறிய விளக்கம் தெரிந்தால்தான் சிந்திப்பது மூளையா அல்லது இதயமா ( உள்ளமா ?) (Intelligence or heart?) என்பது நமக்கும் வெகு சுளுவாக விளங்கும்

1) நப்fஸ் (Soul) என்பது ஒரு மனிதனின் சுத்திகரிக்கப்படாத நிலையிலுள்ள உள்ளார்ந்த இருப்பு (inward existence). ஒரு மனிதனை பாவம் செய்யத் தூண்டுவது நfப்ஸ். நfப்ஸ் என்பது உலக கவர்ச்சிகளாலும் சைத்தனாலும் இலகுவாக்கக் கவரப்படக்கூடியது. சைத்தானிய பண்புகளும், மிருக குணங்கள் கொண்ட ஒரு மனிதன் (உ+ம்: கோபம், அகந்தை, பேராசை, ஆடம்பரம், பொய் பேசுதல், ஏமாற்றுதல், புறங்கூறுதல், ஷிர்க், etc.). மிருகங்கள் இன்பம் அடைய அவை எவற்றை எல்லாம் செய்கின்றன? (உ+ம்: ஆசை, காமம், சூறையாடல், etc.). அதேபோலத் தான், நப்fஸுக்கு சைத்தானிய மற்றும் மிருக இயல்பு இருக்கின்றது. இருப்பினும், இது மிகக்குறைந்த (சைத்தானிய/ மிருக) நிலை முதல் மிக உயர்ந்த (தூய/ களங்கமற்ற/ மலக்கானிய) நிலை வரை செயல்படும் திறனைக் கொண்டுள்ளது.
அல்குர்ஆனில் 67 ஆம் சூரா 2 ஆம் ஆயத்தில் அல்லாஹ் கூறுகின்றான்: “உங்களில் எவர் செயல்களால் மிகவும் அழகானவர் என்பதைச் சோதிப்பதற்காக அவன், மரணத்தையும் வாழ்வையும் படைத்தான்..."
இவ்வுலக வாழ்க்கை என்பது மரணத்தின் பின்னர் இருக்கும் ஒரு நிரந்தர வாழ்க்கைக்கான சோதனை என்பதால் மனிதனை அல்லாஹ் சோதனை செய்ய உலக ஆசைகளால் கவரப்படக்கூடிய நப்fஸ் என்ற ஒரு உள்ளார்ந்த இருப்பை அல்லாஹ் மனிதனுக்கு வழங்கி இருக்கின்றான்.
நப்fஸுடைய மூன்று முக்கிய நிலைகளைப்பற்றிப் பார்ப்போம்.
முதல் கட்டம் – (பாவம் செய்ய) தூண்டும் நப்fஸ் (அன்-நப்fஸ் அல்-அம்மாரா)

நப்fஸ் இயல்பாகவே நம்மைப் பாவம் செய்யத் தூண்டுகிறது.

குர்ஆனில் 12 ஆம் சூராவில் 53 ஆம் ஆயத்தில் இவ்வாறு வருகின்றது. "நப்ஃஸ் என்பது தீமையைத் தூண்டக்கூடியதாக இருக்கிறது". நப்fஸுக்கு எதிராகப் போராடுவது தான் மிகப்பெரிய போராட்டம் என்று ஒரு ஹதீஸில் வந்திருக்கின்றது. நப்fஸுடன் போராடுவது உண்மையிலேயே ஒரு மிகவும் கஷ்டமான விடயம் தான்.

இரண்டாம் கட்டம் - சுய குற்றம் சாட்டும் நப்fஸ் (நப்fஸ் அல்-லவ்வாமா)
அல்குர்ஆனில் 75 ஆம் சூராவில் 2 ஆம் ஆயத்தில் இவ்வாறு வருகின்றது, "நிந்தித்துக் கொண்டிருக்கும் நப்ஃஸின் மீதும் நான் சத்தியம் செய்கின்றேன்". நப்ஃஸ் எவ்வாறு ஒருவனைப் பாவம் செய்யத் தூண்டுகிறதோ, அதேபோல் ஒருவரை மனந்திரும்பி மன்னிப்புக்கேட்க வேண்டும் என்ற உணர்வை உணர்த்தும் பண்பும் அதனிடம் இருக்கின்றது.
இதற்காக அக்ல் என்று சொல்லப்படக்கூடிய அறிவாற்றல் (intelligence) அந்த நப்fஸுக்கு நல்ல மற்றும் கெட்ட செயல்களை/ பண்புகளை அடையாளம் காண உதவியாக இருக்கும்.
அந்த மனிதன் நப்fஸிடம் கட்டுப்பட்டதற்காக அந்த நப்fஸே அவனைக் குற்றம் சாட்டும். எல்லா மனிதர்களும் சைத்தானிய/ மிருக செயல்களிலிருந்து/ பண்புகளிலிருந்து மீளுவதில்லை. ஏனென்றால் அவை அழகாகவும் கவர்ச்சிகரமானதாகவும் இருக்கும்.

மூன்றாம் கட்டம் சாந்தியடைந்த நப்fஸ் (அன்-நப்fஸ் அல்-முத்மஇன்னா)
அல்குர்ஆனில் 89 ஆம் சூராவில் 27 ஆம் ஆயத்தில் இவ்வாறு வருகின்றது, "சாந்தியடைந்த நப்fஸே!" இந்த நிலையில்தான் ஒருமனிதன் அவனது நம்பிக்கையில் உறுதியாக இருக்கிறான், கெட்ட பழக்கவழக்கங்களை விட்டுவிடுகிறான். நப்fஸ் அமைதியாகிறது சாந்தியடைகிறது. இந்த நிலையில், ஒருமனிதன் அல்லாஹ்வின் விருப்பத்தில் திருப்தி அடைகின்றனர்.
இந்த நிலையில் இருப்பவனுக்குக் கடந்த காலத்தைப் பற்றிய கவலையோ எதிர்காலத்தைப் பற்றிய பயமோ இருக்காது. அவன் அல்லாஹ்விடமிருந்து வந்ததை ஏற்றுக்கொள்வான், மகிழ்ச்சியடைவான். தொடர்ச்சியான ஆன்மீகப் பயிற்சிகள் இவனது நப்fஸை ஒரு தூய/ களங்கமற்ற நப்fஸாக மாற்றும்.
அல்குர்ஆனில் 91:7-10 – "நப்ஸின் மீதும், அதை ஒழுங்குபடுத்தியவன் மீதும் சத்தியமாக; அவன் (அல்லாஹ்) அதற்கு அதன் தீமையையும், அதன் நன்மையையும் உணர்த்தினான்; அதை (நப்ஸை)ப் பரிசுத்தமாக்கியவர் திடமாக வெற்றியடைந்தார்; ஆனால் எவன் அதை (நப்ஸைப் பாவத்தில்) புகுத்தினானோ அவன் திட்டமாகத் தோல்வி அடைந்தான்."

2) ரூஹு (spirit) மனிதனுக்கு அல்லாஹ் ரூஹையும் (spirit) நப்fஸையும் (soul) கொடுத்திருக்கின்றான். நப்fஸ் உடல் ஆசைக்கு உட்படக்கூடியது. ஆனால் ரூஹ் என்பது மனித மிருக உணர்ச்சிகள் மற்றும் உள்ளுணர்வுகளுக்கு அப்பாற்பட்ட ஒரு இருப்பு. ரூஹ் என்பது தெய்வீகமானது. இஸ்லாமிய நம்பிக்கையின்படி, அனைத்து உயிரினங்களின் ரூஹ்களையும் அல்லாஹ் முதல் படைப்பு நேரத்திலே உருவாக்கிவிட்டான். அவை வேறு உலகில் தங்கி இந்த உலகிற்கு வருவதற்குக் காத்துக்கொன்றிருக்கின்றன.
இஸ்லாமிய அறிஞர்களின் கருத்துப்படி, ஒரு பெண் கருத்தரித்து சுமார் 120 நாட்களுள் அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட ஒரு மலக்கால் ரூஹ் அந்தப்பெண்ணின் கருவினில் நுழைக்கப்படுகின்றது. ரூஹ் மனிதனின் ஆன்மீக உள்ளத்தில் வீற்றிருப்பதாக சில இஸ்லாமிய அறிஞர்கள் கருதுகின்றனர், (சிலர் அது முழு உடலிலும் பரவி இருக்கின்றதாகக் கருதுகின்றனர்).

ஒரு மனிதன் பிறக்கும்போது ரூஹ் தூய்மையாகவே இருக்கின்றது. ஆன்மீக சூழலிலிருந்து வந்த ரூஹிற்கு நல்ல விடயங்கள் மாத்திரமே செய்யப்படவேண்டும் என்று ஏவப்பட்டிருக்கின்றது. ரூஹ் அல்லாஹ்விடம் இருந்து

வந்ததால் அதற்கு எல்லா ரகசியங்களையும் தெரியும். அதனுடைய நோக்கம் நற்காரியங்கள் செய்து சுவர்க்கத்தை அடைய வேண்டும் என்பது தான்.
ஆனால் மனிதனில் இருக்கும் நப்fஸ் ரூஹை நல்ல விடயங்கள் செய்யவிடாமல் தடுக்கும். இந்த உலகத்திற்குச் சொந்தமான நப்fஸ் எப்போதும் கவர்ச்சிகரமாக இருக்கும், மனிதனைப் பாவம் செய்யத் தூண்டும், மனிதன் எப்போதும் நப்fஸின் பின்னால் செல்ல ஆசைப்படுவான்.
மனிதன் இறக்கும் போது நப்fஸும் இறந்துவிடும் (அல்குர்ஆன் 3:185 "ஒவ்வோர் நப்fஸும் மரணத்தைச் சுகித்தே ஆகவேண்டும்."). ரூஹிற்கு இறப்பு இல்லை. அது கைப்பற்றப்பட்டு அடுத்த உலகிற்கு இடம் மாற்றப்படும். ரூஹ் நப்fஸிடம் தோற்றுப்போன நிலையில் ஒருவன் மரணித்தால், அவனது இறுதி முடிவு மோசமாக இருக்கும். மனித நடத்தைகளும் செயல்களும் தான் ரூஹின் இறுதி இருப்பை தீர்மானிக்கின்றது - அது சுவர்க்கமாகவோ நரகமாகவோ இருக்கலாம்.

3) அக்ல் (Intellect/ reason/ mind)
அக்ல் என்பது புத்தியை, புத்திசாலித்தனத்தை அல்லது புத்திசாலித் தனமான வழியில் புரிந்துகொள்ளும் திறனைக் குறிக்கும். ஒரு மனிதன் புத்தியைப் பாவித்து வேதத்தின் போதனைகளுக்கமைய நீதியைச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறான். வேதத்தை பின்பற்றாத புத்தி நப்fஸு க்கு இலகுவாக கட்டுப்படும்.
ரூஹின் நம்பகமான ஆலோசகர்தான் அக்ல் ஆகும். ரூஹிற்கு நற்காரியங்களை செய்வதற்கு உதவியாகவும் பக்கபலமாகவும் இருப்பது அக்ல் என்றழைக்கப்படும் புத்தி அல்லது அறிவுத்திறன்தான். அக்ல் அடிப்படையிலேயே உலகத்தின் மாயைகள் மற்றும் நப்fஸுடைய கவர்ச்சிகளால் ஈர்க்கப்படக்கூடியது.
அக்ல் நப்fஸிடம் கட்டுப்பட்டு நேர்மையில்லாமல் நடந்தால் அதாவது பாவங்களைச் செய்யத் துணை போனால் ரூஹ் பலவீனமாகும். உணர்வு உறுப்புகளின் (கண், காது, மூக்கு, நாவு, கை/கால்) தலைவராக அக்ல் இருக்கும். அக்ல் மனிதனின் உணர்வு உறுப்புகளிருந்து தகவல்களைச் சேகரித்து அவற்றை ரூஹிற்கு அனுப்பும்.
மனிதனின் ரூஹ் பலமாக இருந்தால் இந்த உணர்வு உறுப்புகளை அவனால் கட்டுப்படுத்த முடியும். நமது புலன்கள் ஒரு விஷயத்தை உணரும்போது (உ+ம்- பார்த்தல்) அது அக்கிலிற்கு தகவலைக் கொடுக்கும். அக்ல் அனுப்பும் தகவலை ரூஹும் நப்fஸும் கவனிக்கும். அது நற்செயலாக இருந்தால் ரூஹ் அதனைச் செய்யும்படி அக்ல் இடம் சொல்லும் அல்லது தீமையான செயலாக இருந்தால் அதனைச் செய்யவிடாமல் தடுக்க முயற்சிக்கும். நப்fஸ் கட்டுப்பாட்டில் இல்லாவிட்டால் நப்fஸ் நற்செயலைச் செய்யவிடாமல் தடுக்க முயற்சிக்கும் அல்லது தீமையான செயலை செய்யத்தூண்டும். இந்தப்போராட்டத்தில் ரூஹ் வென்றால் நமது புலன்கள் அந்த நற்செயலைச் செய்யும் அல்லது தீமையான செயலை செய்யாமல் தடுக்கும்.
ஆனால் நப்fஸ் வென்றால் எமது புலன்கள் அந்த நற்செயலைச் செய்யாது அல்லது அந்த தீமையான செயலை செய்யும்.
அக்ல் கட்டுப்பாட்டுக்குள் வந்தால், புலன்கள் (கண், காது, கை/ கால் etc.) கட்டுப்பாட்டுக்குள் வரும். புலன்கள் கட்டுப்பாட்டுக்குள் வந்தால், செயல்களைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கலாம்.

4) கல்ப் (Heart) - இதயம் (Qalb) என்பது ஆன்மீக உள்ளம் (spiritual heart), அது இதயத்தினுள் இருந்தாலும் அது உடல் உறுப்பு இதயம் அல்ல என்று சூபிகள் சொல்வார்கள். ஒரு மனிதன் தீமைகளைச் செய்யும் போது அவனது உள்ளம் கெட்டுப்போகின்றது. நற்காரியங்கள் செய்யும் போது அது தூய்மை அடைகின்றது. ஒரு தூய/ களங்கமற்ற நப்fஸ் இருப்பவனின் உள்ளமும் தூய்மையாகத்தான் இருக்கும். உள்ளத்தினுள் தான் ரூஹ் உட்கார்ந்திருக்கும்.
கல்ப் என்ற போர்க்களத்தில் கல்பை கைப்பற்றுவதற்கு ரூஹும் நப்fஸும் எப்போதும் போராடிக்கொன்றே இருக்கும். எவர் கட்டுப்பாட்டில் கல்ப் இருக்கின்றதோ அவர்தான் அந்த மனிதனைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பார்.

ரூஹ் வலிமையாக இருக்கும் போது கல்ப் ரூஹின் கட்டுப்பாட்டில் இருக்கும். ரூஹ் பலவீனமாக இருக்கும் போது கல்ப் நப்ஃஸின் கட்டுப்பாட்டில் இருக்கும்.
நப்ஃஸ் வென்றுகொண்டே போகும் போது அக்ல் ரூஹின் கட்டுப்பாட்டிலிருந்து வெளியே போய்க்கொண்டே இருக்கும். ரூஹ் பலவீனமாகிக் கொண்டே அழுது கொண்டே இருக்கும். அந்நிலையில் கல்ப் முற்றாக நப்ஃஸின் கட்டுப்பாட்டுக்குள் இருக்கும்.
திர்மிதியில் பதிவாகியுள்ள இந்த ஹதீஸின்படி, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) கூறினார்: 'நிச்சயமாக, (அல்லாஹ்வின்) அடிமை ஒரு பாவத்தைச் செய்யும்போது, அவன் இதயத்தில் ஒரு கரும்புள்ளி தோன்றும். அவர் அதிலிருந்து விலகி, மன்னிப்பு கோரி, மனந்திரும்பும்போது, அவருடைய இதயம் சுத்தமாக மெருகூட்டப்படுகிறது.
ஆனால் அவர் திரும்பி அந்த பாவத்தில் நுழைந்தால், கரும்புள்ளிகள் அவரது முழு இருதயத்தையும் உள்ளடக்கும் வரை அதிகரிக்கிறது.'

புகாரி மற்றும் முஸ்லிமில் வரும் ஹதீஸின் படி, நபியவர்கள் (ஸல்) கூறினார்கள்: 'நிச்சயமாக உடம்பில் ஒரு சதைப்பிண்டம் இருக்கின்றது, அது சீர் பெறுமானால், உடம்பு முழுவதும் சீர் பெற்றுவிடும், அது கெட்டுவிட்டால் உடம்பு முழுவதும் கெட்டுவிடும், அதுவே கல்ப் (உள்ளம்) ஆகும்.'
கல்ப் எப்போது ரூஹின் கட்டுப்பாட்டில் இருக்குமோ அப்போது அது சீரான உள்ளமாக இருக்கும், அல்லாஹ் அதைப்பார்த்துச் சந்தோசப்படுவான். இல்லாவிட்டால் அந்த உள்ளம் மரணித்த உள்ளமாக அல்லது நோய்வாய்ப்பட்ட உள்ளமாக இருக்கும்.
அல்குர்ஆனில் 26 ஆம் சூரா 89 ஆம் ஆயத்தில் அல்லாஹ் கூறுகின்றான்: "எவரொருவர் பரிசுத்த இருதயத்தை அல்லாஹ்விடம் கொண்டு வருகிறாரோ அவர் (கண்ணியம் அடைவார்)." எனவே கல்ப் என்பது மிகவும் முக்கியமான ஒன்று. கல்பை பரிசுத்தப் படுத்திடுவதனாலேயே வெற்றியை அடையலாம்
சிந்திப்பது மூளையா அல்லது இதயமா ( உள்ளமா ?) (Intelligence or heart?) அடுத்தப் பதிவில் சொல்றேன் இன்ஷா அல்லாஹ்

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 106
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 23)

சிந்திப்பது மூளையா அல்லது இதயமா? (Intelligence or heart?)
பகுதி - 2
وَمِنْهُمْ مَّنْ يَّسْتَمِعُ اِلَيْكَ وَجَعَلْنَا عَلٰى قُلُوْبِهِمْ اَكِنَّةً اَنْ يَّفْقَهُوْهُ وَفِىْٓ اٰذَانِهِمْ وَقْرًا  وَاِنْ يَّرَوْا كُلَّ اٰيَةٍ لَّا يُؤْمِنُوْا بِهَا حَتّٰٓى اِذَا جَآءُوْكَ يُجَادِلُوْنَكَ يَقُوْلُ الَّذِيْنَ كَفَرُوْۤا اِنْ هٰذَاۤ اِلَّاۤ اَسَاطِيْرُ الْاَوَّلِيْنَ
மேலும், அவர்களில் சிலர் உம்மை (உமது போதனைகளை) செவியேற்(பவர்கள் போல் நடிப்)பார்கள். ஆனால், அவர்கள் அதனை விளங்கிக் கொள்ள முடியாதபடி அவர்களுடைய இருதயங்களில் திரைகளையும், அவர்களுடைய செவிகளில் செவிட்டுத் தனத்தையும் நாம ஆக்கிவிட்டோம்.
(ஆகவே) அத்தாட்சி ஒவ்வொன்றையும் அவர்கள் பார்ப்பார்களாயினும், அவற்றை நம்ப மாட்டார்கள். முடிவில் உம்மிடம் அவர்கள் வந்தார்களானால் உம்மிடம் குதர்க்கமாகப்பேசுவார்கள். "இவை முன்னோர் களின் கட்டுக்கதைகளேயல்லாமல் (வேறு) இல்லை" என்று (அவர்களில்) நிராகரித்துக் கொண்டிருப்போர் கூறுவர்.(குர்ஆன் : 6:25)
'இல்ம்' அல்லது அறிவு (knowledge, علم) என்பது ஒரு மனிதனுக்குக் கல்வி (education) அல்லது அனுபவம் (experience) மூலம் கிடைப்பது.

‘அக்ல்’ (عقل) என்பது ‘புத்திசாலித்தனம்’ (intellect, reason, mind) அக்லை சுருக்கமாகப் ஒரு விஷயத்தைப் பார்த்து விளங்கிக்கொள்ளல் ஆகும். /

1. இஸ்லாமியப் பார்வை (Islamic View) :
'இல்ம்' (அறிவு) ஐ புத்திசாலித்தனமாக முறையில் பாவிப்பதால் 'அக்ல்' (புரிதல்/ விளக்கம்) கிடைக்கின்றது. அக்லின் முக்கியத்துவம் இஸ்லாத்தில் வலியுறுத்தப்பட்டுள்ளது.
மூளை உணர்த்திய உணர்வை உள்ளத்தால் ஆன்மீக ரீதியில் புரிந்து ஒரு தீர்மானத்தை எடுத்தல் - இது ஒரு ஆன்மீக வேலை (spiritual job).
ஒரு தீர்மானத்தை எடுக்கும்போது அல்குர்ஆனிய வசனங்களைப் பார்த்து அதனை உணர்ந்து உள்ளத்தால் இது நீதியான முறையில் எடுக்கப்பட வேண்டும் என்று அல்லாஹ் எதிர்பார்க்கின்றான். இது SQ (Spiritual Quotient, ஆன்மீக எண்) சம்பந்தப்பட்டது. IQ அளவு போலன்றி, ஒரு மனிதனின் SQ அளவு இற்கு ஏற்ற இறக்கம் இருக்கும். ஆன்மீக சூழலில் இருக்கும் போது அது கூடலாம், அந்த சூழலில் இருந்து வெளியே வந்ததும் சில வேளைகளில் அது குறையலாம். ஆன்மீகத்தை நம்பாதவனை ஒரு நாஸ்திகன் என்று அழைப்போம். அற்புதங்கள் நிறைந்த அல்குர்ஆனையும் ஏனைய வேதங்களையும் அல்லது மதங்களையும் ஒப்பீடு செய்யும் ஒருவன் நீதியாக நடந்தால், அவன் நாஸ்திகனாக இருந்தாலும் அவனது உள்ளம் அல்குர்ஆன் அல்லாஹ்வின் வேதம்தான் என்ற முடிவுக்கு நிச்சயமாக வருவான். உள்ளத்தால் முடிவு எடுக்கும் போது உள்ள சிக்கல்களை பிறகு (கீழே) பார்ப்போம்.
அக்ல் சம்பந்தமாக அல்குர்ஆனில் அதிகமான வசனங்கள் காணப்படுகின்றன. கீழே உள்ள குர்ஆனிய வசனங்களைப் பார்க்கும் போது இங்கே அக்ல் (புரிதல்) என்ற பதம் கல்புடன் (உள்ளம்) சம்பந்தப்படுத்தப்படாமல் தனியாகவே காணப்படுகின்றது. இதிலிருந்து ஒருவருக்கு அக்ல் என்ற பதம் மூளையுடன் சம்பந்தப்பட்டதாக இருக்கலாம் என்ற முடிவுக்கு வந்தாலும் அது மூளையுடன் சம்பந்தப்பட்டதாக மட்டும்தான் இருக்க வேண்டும் என்ற முடிவுக்கு அவர் வர முடியாது.
ஏனென்றால் அக்ல் (புரிதல்) அல்லது பஹ்ம் (புரிதல்) என்ற பதம் கல்ப் (உள்ளம்) என்ற சொல்லோடு சேர்ந்து சில குர்ஆனிய வசனங்கள் இருக்கின்றன. விளக்கத்தை பிறகு (கீழே) பார்ப்போம். இப்போது அக்லுக்கு சில குர்ஆனிய வசன உதாரணங்களைப் பார்ப்போம். குறிப்பு: அடைப்புக்குறிக்குள் இருக்கும் சொற்றொடர்கள் குரானில் நேரடியாக வந்தவை அல்ல. விளக்கத்துக்காகச் சேர்க்கப்பட்டவை.
அல்குர்ஆன் 2:44 - "اَتَاْمُرُوْنَ النَّاسَ بِالْبِرِّ وَتَنْسَوْنَ اَنْفُسَكُمْ وَاَنْتُمْ تَتْلُوْنَ الْكِتٰبَ‌ؕ اَفَلَا تَعْقِلُوْنَ" - "நீங்கள் வேதத்தையும் ஓதிக் கொண்டே, (மற்ற) மனிதர்களை நன்மை செய்யுமாறு ஏவி, தங்களையே மறந்து விடுகிறீர்களா? நீங்கள் சிந்தித்துப் புரிந்து கொள்ள வேண்டாமா?"

அல்குர்ஆன் 2:73 -"فَقُلْنَا اضْرِبُوْهُ بِبَعْضِهَا‌ ؕ كَذٰلِكَ يُحْىِ اللّٰهُ الْمَوْتٰى ۙ وَيُرِيْكُمْ اٰيٰتِهٖ لَعَلَّكُمْ تَعْقِلُوْنَ" - “'(அறுக்கப்பட்ட அப்பசுவின்) ஒரு துண்டால் அ(க்கொலையுண்டவனின் சடலத்)தில் அடியுங்கள்' என்று நாம் சொன்னோம். இவ்வாறே அல்லாஹ் இறந்தவர்களை உயிர்ப்பிக்கிறான்; நீங்கள் (நல்ல) அறிவு பெறும் (புரிந்துகொள்ளும்) பொருட்டுத் தன் அத்தாட்சிகளையும் அவன் (இவ்வாறு) உங்களுக்குக் காட்டுகிறான்."
அல்குர்ஆன் 2:242 - "كَذٰلِكَ يُبَيِّنُ اللّٰهُ لَـكُمْ اٰيٰتِهٖ لَعَلَّكُمْ تَعْقِلُوْنَ" - "நீங்கள் தெளிவாக உணர்ந்து (புரிந்து, அதன்படி நடந்து வருமாறு) அல்லாஹ் உங்களுக்குத் தன்னுடைய வசனங்களை இவ்வாறு விளக்குகிறான்."
அல்குர்ஆன் 3:65 - "يٰۤـاَهْلَ الْكِتٰبِ لِمَ تُحَآجُّوْنَ فِىْۤ اِبْرٰهِيْمَ وَمَاۤ اُنْزِلَتِ التَّوْرٰٮةُ وَالْاِنْجِيْلُ اِلَّا مِنْۢ بَعْدِهٖ‌ؕ اَفَلَا تَعْقِلُوْنَ" - "வேதத்தையுடையோரே! இப்ராஹீமைப் பற்றி (அவர் யூதரா, கிறிஸ்தவரா என்று வீணாக) ஏன் தர்க்கித்துக் கொண்டிருக்கிறீர்கள்? அவருக்குப் பின்னரேயன்றி தவ்ராத்தும், இன்ஜீலும் இறக்கப்படவில்லையே; (இதைக்கூட) நீங்கள் விளங்கி (புரிந்து) கொள்ளவில்லையா?"

அல்குர்ஆன் 6:32 - "وَ مَا الْحَيٰوةُ الدُّنْيَاۤ اِلَّا لَعِبٌ وَّلَهْوٌ ؕ وَلَـلدَّارُ الْاٰخِرَةُ خَيْرٌ لِّلَّذِيْنَ يَتَّقُوْنَ‌ؕ اَفَلَا تَعْقِلُوْنَ" - "உலக வாழ்க்கை வீணும் விளையாட்டுமேயன்றி வேறில்லை; பயபக்தியுடையவர்களுக்கு நிச்சயமாக மறுமை வீடே மிகவும் மேலானதாகும்; நீங்கள் இதைப் புரிந்து கொள்ள வேண்டாமா?"

அல்குர்ஆன் 30:24 - "وَمِنْ اٰيٰتِهٖ يُرِيْكُمُ الْبَرْقَ خَوْفًا وَّطَمَعًا وَّيُنَزِّلُ مِنَ السَّمَآءِ مَآءً فَيُحْىٖ بِهِ الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا ؕ اِنَّ فِىْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّعْقِلُوْنَ" - "அச்சமும், ஆசையும் ஏற்படும்படி அவன் உங்களுக்கு மின்னலைக் காட்டுவதும்; பிறகு வானத்திலிருந்து மழை பொழியச் செய்து, அதைக் கொண்டு பூமியை - அது (வரண்டு) இறந்த பின்னர் உயிர்ப்பிப்பதும் அவன் அத்தாட்சிகளினின்றும் உள்ளன; நிச்சயமாக அதில் சிந்தித்துணரும் (புரிந்து கொள்ளும்) சமூகத்திற்கு அத்தாட்சிகள் இருக்கின்றன."
அல்குர்ஆன் 36:68 - "وَمَنْ نُّعَمِّرْهُ نُنَكِّسْهُ فِى الْخَـلْقِ‌ؕ اَفَلَا يَعْقِلُوْنَ" - "மேலும், எவரை நாம் வயோதிகமாக்குகிறோமோ, அவருடைய நிலைமையைப் படைப்பில் (பலஹீனமான நிலைக்கு) மாற்றிவிடுகிறோம்; அவர்கள் (இதை) அறிந்து (புரிந்து) கொள்ள வேண்டாமா?"
அல்குர்ஆன் 37:138 - " وَبِالَّيْلِ‌ؕ اَفَلَا تَعْقِلُوْنَ" - "இன்னும் இரவிலும் கூட (செல்கிறீர்கள். இதைக்கொண்டு) நீங்கள் நல்லறிவு பெற (புரிந்து கொள்ள) மாட்டீர்களா?"
அல்குர்ஆன் 45:5 - "وَاخْتِلَافِ الَّيْلِ وَالنَّهَارِ وَمَاۤ اَنْزَلَ اللّٰهُ مِنَ السَّمَآءِ مِنْ رِّزْقٍ فَاَحْيَا بِهِ الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا وَ تَصْرِيْفِ الرِّيٰحِ اٰيٰتٌ لِّقَوْمٍ يَّعْقِلُوْنَ" - "மேலும் இரவு பகல் மாறி மாறி வருவதிலும், வானத்திலிருந்து அருள் மாரியை அல்லாஹ் இறக்கி வைத்து, இறந்து போன பூமியை அதைக் கொண்டு உயிர்ப்பிப்பதிலும்; காற்றுகளை மாறி மாறி வீசச்செய்வதிலும் அறிவுடைய (புரிந்துகொள்ளக் கூடிய) சமூகத்தாருக்கு அத்தாட்சிகள் இருக்கின்றன."
அல்குர்ஆன் 57:17 - "اِعْلَمُوْۤا اَنَّ اللّٰهَ يُحْىِ الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا‌ ؕ قَدْ بَيَّنَّا لَـكُمُ الْاٰيٰتِ لَعَلَّكُمْ تَعْقِلُوْنَ" - "அறிந்து கொள்ளுங்கள்; நிச்சயமாக அல்லாஹ் பூமியை அதன் இறப்பிற்குப்பின், உயிர்ப்பிக்கிறான்; நீங்கள் விளங்கி (புரிந்து) கொள்வதற்காக நாம் இவ்வசனங்களை உங்களுக்கு தெளிவாக விவரிக்கிறோம்."
அல்குர்ஆன் 67:10 - "وَقَالُوْا لَوْ كُنَّا نَسْمَعُ اَوْ نَعْقِلُ مَا كُنَّا فِىْۤ اَصْحٰبِ السَّعِيْرِ" - "இன்னும் அவர்கள் கூறுவார்கள்: 'நாங்கள் (அவர் போதனையைச்) செவியுற்றோ அல்லது சிந்தித்தோ (புரிந்துகொண்டோ) இருந்திருந்தோமானால் நாங்கள் நரகவாசிகளில் இருந்திருக்க மாட்டோம்.'"

அல்குர்ஆனில் கல்ப் சம்பந்தமாகவும் நிறைய வசனங்கள் இருக்கின்றன. கல்ப் என்பது உள்ளம் (heart) என்பதை குறிக்கும். உள்ளம் தூய்மையாக இருப்பதைத்தான் அல்லாஹ் ஒரு மனிதனிடம் எதிர்பார்க்கின்றான். வேதத்தின் வழிகாட்டுதலைச் சரியாகப் புரிந்து கொள்வோருக்குத் தூய்மையான உள்ளம் இருக்கும். இங்கே இதயத்துடன் சேர்த்து "புரிந்து கொள்ளக்கூடிய" என்ற சொல் எல்லா இடங்களிலும் இல்லை.
அதாவது "புரிந்து கொள்ளக்கூடிய உள்ளம்" என்ற சொற்றொடர் எல்லா இடங்களிலும் இல்லை. கீழே உள்ள சிலவசனங்கைப் பார்க்கும் போது ஒருவர் உள்ளத்தால் உணர்ந்துகொள்ள முடியும் என்று ஒரு முடிவுக்கு வரலாம். அது எவ்வாறு? அதற்குரிய விளக்கத்தை பிறகு (கீழே) பார்ப்போம். இப்போது கல்புக்கு சில குர்ஆனிய வசன உதாரணங்களைப் பார்ப்போம். குறிப்பு: அடைப்புக்குறிக்குள் இருக்கும் சொற்றொடர்கள் குரானில் நேரடியாக வந்தவை அல்ல. விளக்கத்துக்காகச் சேர்க்கப்பட்டவை.

அல்குர்ஆன் 2:7 - "خَتَمَ اللّٰهُ عَلٰى قُلُوْبِهِمْ وَعَلٰى سَمْعِهِمْ‌ؕ وَعَلٰٓى اَبْصَارِهِمْ غِشَاوَةٌ وَّلَهُمْ عَذَابٌ عَظِيْمٌ " - "அல்லாஹ் அவர்களின் இதயங்களிலும் (புரிந்து கொள்ளாமல் இருப்பதற்கு), அவர்கள் செவிப்புலன்களிலும் (கேட்காமல் இருப்பதற்கு) முத்திரை வைத்துவிட்டான் இன்னும் அவர்களின் பார்வை மீது ஒரு திரை கிடக்கிறது; மேலும் அவர்களுக்கு கடுமையான வேதனையுமுண்டு."
அல்குர்ஆன் 2:225 - "لَا يُؤَاخِذُكُمُ اللّٰهُ بِاللَّغْوِ فِىْٓ اَيْمَانِكُمْ وَلٰـكِنْ يُّؤَاخِذُكُمْ بِمَا كَسَبَتْ قُلُوْبُكُمْ‌ؕ وَاللّٰهُ غَفُوْرٌ حَلِيْمٌ" - "(யோசனையின்றி) நீங்கள் செய்யும் வீணான சத்தியங்களுக்காக அல்லாஹ் உங்களைக் குற்றம் பிடிக்க மாட்டான்; ஆனால் உங்களுடைய இதயங்கள் (புரிந்துகொண்ட பின்னரும் அதை பொருட்படுத்தாது வேண்டுமென்றே) சம்பாதித்துக் கொண்டதைப் பற்றி

உங்களைக் குற்றம் பிடிப்பான்; இன்னும் அல்லாஹ் மன்னிப்போனாகவும்; மிக்க பொறுமையுடையோனுமாகவும் இருக்கின்றான்."
அல்குர்ஆன் 6:43 - "فَلَوْلَآ اِذْ جَآءَهُمْ بَاْسُنَا تَضَرَّعُوْا وَلٰـكِنْ قَسَتْ قُلُوْبُهُمْ وَزَيَّنَ لَهُمُ الشَّيْطٰنُ مَا كَانُوْا يَعْمَلُوْنَ" - "நம்மிடமிருந்து அவர்களுக்கு வேதனை வந்தபோது அவர்கள் பணிந்திருக்க வேண்டாமா? அதற்கு மாறாக அவர்களுடைய இருதயங்கள் (புரிந்து கொள்ளாததன் காரணமாக) இறுகிவிட்டன; அவர்கள் செய்து கொண்டிருந்ததையே, ஷைத்தான் அவர்களுக்கு அழகாகக் காட்டிவிட்டான்."

அல்குர்ஆன் 9:8 – "كَيْفَ وَاِنْ يَّظْهَرُوْا عَلَيْكُمْ لَا يَرْقُبُوْا فِيْكُمْ اِلًّا وَّلَا ذِمَّةً ؕ يُرْضُوْنَـكُمْ بِاَفْوَاهِهِمْ وَتَاْبٰى قُلُوْبُهُمْ‌ۚ وَاَكْثَرُهُمْ فٰسِقُوْنَ‌" - "(எனினும் அவர்களுடன்) எப்படி (உடன்படிக்கை இருக்க முடியும்?) உங்கள் மேல் அவர்கள் வெற்றி கொண்டால் உங்களிடையே உள்ள உறவின் முறையையும், (உங்களிடையே இருக்கும்) உடன்படிக்கையையும் அவர்கள் பொருட்படுத்துவதே இல்லை; அவர்கள் தம் வாய்(மொழி)களைக் கொண்டு(தான்) உங்களைத் திருப்திபடுத்துகிறார்கள்; ஆனால் அவர்களின் உள்ளங்கள் (அதனை புரிந்து கொள்ள) மறுக்கின்றன - அவர்களில் பெரும்பாலோர் பாவிகளாக இருக்கின்றனர்."
அல்குர்ஆன் 10:74 - "ثُمَّ بَعَثْنَا مِنْۢ بَعْدِهٖ رُسُلًا اِلٰى قَوْمِهِمْ فَجَآءُوْهُمْ بِالْبَيِّنٰتِ فَمَا كَانُوْا لِيُؤْمِنُوْا بِمَا كَذَّبُوْا بِهٖ مِنْ قَبْلُ ؕ كَذٰلِكَ نَطْبَعُ عَلٰى قُلُوْبِ الْمُعْتَدِيْنَ" - "அவருக்கு பின், அவ(ரவ)ர் சமூகத்தினருக்குத் தூதுவர்களை அனுப்பிவைத்தோம்; அவர்களும் தெளிவான அத்தாட்சிகளை அ(ச்சமூகத்த)வர்களிடம் கொண்டு வந்தார்கள்; எனினும், முன்னர் இருந்தவர்கள் எந்த (உண்மையைப்) பொய்யெனக் கூறிக் கொண்டிருந்தார்களோ, (அந்த உண்மையை) இவர்களும் நம்பவில்லை - வரம்பு மீறும் இத்தகையவர்களின் நெஞ்சங்கள் மீது இவ்வாறே நாம் (புரிந்து கொள்ளாமல் இருப்பதற்கு) முத்திரையிடுகிறோம்."
அல்குர்ஆன் 22:46 - "اَفَلَمْ يَسِيْرُوْا فِى الْاَرْضِ فَتَكُوْنَ لَهُمْ قُلُوْبٌ يَّعْقِلُوْنَ بِهَاۤ اَوْ اٰذَانٌ يَّسْمَعُوْنَ بِهَا‌ ۚ فَاِنَّهَا لَا تَعْمَى الْاَبْصَارُ وَلٰـكِنْ تَعْمَى الْقُلُوْبُ الَّتِىْ فِى الصُّدُوْرِ" - "அவர்கள் பூமியில் பிரயாணம் செய்து (இவற்றைப்) பார்க்கவில்லையா? (அவ்வாறு பார்த்திருந்தால்) அவர்களுக்கு விளங்கி (புரிந்து) கொள்ளக்கூடிய உள்ளங்களும், (நல்லவற்றைச்) செவியேற்கும் காதுகளும் உண்டாகியிருக்கும், நிச்சயமாக (புறக்) கண்கள் குருடாகவில்லை; எனினும், நெஞ்சுக்குள் இருக்கும் இதயங்கள் (அகக் கண்கள்) தாம் குருடாகின்றன."
அல்குர்ஆனில் சிலவேளைகலில் "பfஹ்ம்" (فَهْم) என்ற சொல்லும் "புரிந்துகொள்ளல்" (understanding) என்ற அர்த்தத்தில் பாவிக்கப்பட்டிருக்கின்றது. இருதயத்துக்கு புரிந்துகொள்ளும் திறன் இருப்பதாகவே இது உணர்த்துகின்றது. உதாரணமாக:
அல்குர்ஆன் 7:179 - "وَلَـقَدْ ذَرَاْنَا لِجَـهَنَّمَ كَثِيْرًا مِّنَ الْجِنِّ وَالْاِنْسِ‌ ۖ لَهُمْ قُلُوْبٌ لَّا يَفْقَهُوْنَ بِهَا وَلَهُمْ اَعْيُنٌ لَّا يُبْصِرُوْنَ بِهَا وَلَهُمْ اٰذَانٌ لَّا يَسْمَعُوْنَ بِهَا ؕ اُولٰٓـئِكَ كَالْاَنْعَامِ بَلْ هُمْ اَضَلُّ‌ ؕ اُولٰٓـئِكَ هُمُ الْغٰفِلُوْنَ" –

"நிச்சயமாக நாம் ஜின்களிலிருந்தும், மனிதர்களிலிருந்தும் அநேகரை நரகத்திற்கென்றே படைத்துள்ளோம்; அவர்களுக்கு இருதயங்கள் இருக்கின்றன - ஆனால் அவற்றைக் கொண்டு அவர்கள் நல்லுணர்வு பெற (புரிந்துகொள்ள) மாட்டார்கள்; அவர்களுக்குக் கண்கள் உண்டு; ஆனால், அவற்றைக் கொண்டு அவர்கள் (இறைவனின் அத்தாட்சிகளைப்) பார்ப்பதில்லை; அவர்களுக்குக் காதுகள் உண்டு. ஆனால் அவற்றைக் கொண்டு அவர்கள் (நற்போதனையைக்) கேட்கமாட்டார்கள் - இத்தகையோர் கால்நடைகளைப் போன்றவர்கள். இல்லை! அவற்றை விடவும் வழி கேடர்கள்; இவர்கள் தாம் (நம்வசனங்களை) அலட்சியம் செய்தவர்களாவார்கள்."
அல்குர்ஆனில் புரிந்துகொள்ளக்கூடிய அல்லது விளங்கக்கூடிய உள்ளம் என்று ஒரு சில இடங்களில் வந்திருக்கின்றன. உதாரணமாக அல்குர்ஆன் 22:46 இல் "புரிந்து கொள்ளக்கூடிய உள்ளம்” ("قُلُوْبٌ يَّعْقِلُوْنَ") என்று அல்லாஹ் குறிப்பிடுகின்றான். அதே போல், அல்குர்ஆன் 7:179 இல் 'விளங்கிக்கொள்ளாத உள்ளம்' ("قُلُوْبٌ لَّا يَفْقَهُوْنَ") என்றும் அல்லாஹ் குறிப்பிடுகின்றான். எனவே மேலுள்ள வசனங்களை எல்லாம் சேர்த்து
கவனிக்கும் போது உள்ளத்தால் புரிந்து கொள்ளக்கூடிய திறன் ஒன்று இருப்பதாகவே நாம் விளங்குகின்றோம். இதை நாம் எவ்வாறு புரிந்து கொள்வோம்?

நாம் முந்தைய பதிவில் பார்த்தது போல் நமது உள்ளம் ரூஹினாலும் நப்ஸினாலும் பாதிக்கப்படுகிறது.
பொதுவாக, உடலில் எங்கிருந்தும் ஒரு செய்தி புலன்கள் மூலம் (கண், காது, கை/கால் etc.) மூளைக்குள் வரும்போது, மூளை உடலுக்கு எவ்வாறு செயல்பட வேண்டும் என்று சொல்கிறது.
உதாரணமாக, ஒரு சூடான அடுப்பைத் ஒருவர் தொட்டால், அவரது சருமத்தில் உள்ள நரம்புகள் அவர் மூளைக்கு வலியின் செய்தியைச் சொல்லும். மூளை பின்னர் அவரது கையில் உள்ள தசைகளை இழுக்கச் சொல்லி ஒரு செய்தியை அனுப்புகிறது. இது ஒரு நொடியில் நடக்கிறது.
ஆனால், ஒரு நன்மையான அல்லது பாவச் செயலை ஒருவர் புலன்கள் மூலம் உணரும் போது, அங்கே ரூஹுக்கும் நப்ஸுக்கும் இடையில் போராட்டம் நிகழும். ரூஹிற்கும் நப்ஸுக்கும் இடையில் போராட்டம் நடக்கும் போது அந்தப்போராட்டத்தில் ரூஹ் வென்றால், அந்த உள்ளம் ரூஹுடையா கட்டுப்பாட்டுக்குள் வரும், நப்ஸ் வென்றால், அந்த உள்ளம் நப்ஸுடையா கட்டுப்பாட்டுக்குள் வரும்.

இதயத்தைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும் ரூஹ் அல்லது நப்ஸ் சொல்லுவதை மூளை உணர்ந்து புலனுறுப்புகளுக்கு தகவல்களை அனுப்பும் போது புலனுறுப்புகள் அவற்றைச் செய்யும். சுருக்கமாக சொன்னால், இதயம் சொல்லும், புலனுறுப்புகள் (கண், காது, கை/கால் etc.) செய்யும்.
மூளையால் புரிந்த அல்லாஹ் பற்றிய ஒரு விடயத்தை உள்ளத்தில் இருக்கும் ரூஹிற்க்கு அக்ல் உணர்த்தும் என்பதைப் பார்த்தோம். இதனைத்தான் அல்லாஹ் ஆன்மீக ரீதியில் "புரிந்து கொள்ளக்கூடிய உள்ளம்" என்று மேலே சொன்னான்.

ஒரு மனிதனைப் பாவம் செய்யத் தூண்டுவது நப்ஸ் என்று பார்த்தோம். ஒருவரிடம் சைத்தானால் கவரப்பட்ட நப்ஸ் இருந்தால் அது ரூஹிற்கு எதிராகவே செயற்படும். மூளையால் புரிந்த அல்லாஹ் பற்றிய ஒரு விடயத்தை, சைத்தானால் சிதைந்த நப்ஸுடைய உள்ளம் அதை புரிந்துகொள்ள மறுக்கும். இதனைத்தான் அல்லாஹ் ஆன்மீகரீதியில் "புரிந்து கொள்ளாத உள்ளம்" என்று மேலே சொன்னான்.
இது IQ (நுண்ணறிவு எண்) பிரச்சினை அல்ல, இது SQ (ஆன்மீக எண்) பிரச்சினை. ரூஹுடையா கட்டுப்பாட்டுக்குள் இருக்கும் நல்ல உள்ளத்தில் நன்மைகள் இருக்கும், நப்ஸுடையா கட்டுப்பாட்டுக்குள் இருக்கும் கெட்ட உள்ளத்தில் தீமைகள் இருக்கும். நல்ல/ தூய உள்ளத்தை அல்லாஹ் விரும்புகின்றான். மூளையால் புரிந்த பிறகும் ஆன்மீகரீதியில் உள்ளத்தால் நீதமான முறையில் புரிந்து கொள்ளாதவர்களை அல்லாஹ் அவர்களின் 'உள்ளத்தில் முத்திரை வைத்துவிட்டான்' என்று கூறுகின்றான்.
எனவே அல்லாஹ் அல்குர்ஆனில் "புரிந்து கொள்ளக்கூடிய உள்ளம்" அல்லது "புரிந்து கொள்ளாத உள்ளம்" என்று சொல்வதை நாம் ஆன்மீகரீதியில் தான் புரிந்துகொள்ள வேண்டும்.

2. அறிவியல் பார்வை (Scientific View)
மூளை நியூரோன்களால் (neurons/ nerve cells, நரம்பு உயிரணுக்களால்) ஆனவை. மூளையில் சுமார் 100 பில்லியின் நியூரோன்கள் இருப்பதாக சொல்லப்படுகின்றது. ஒருவரின் மூளையிலிருந்து சமிக்ஞைகளை (signal) அனுப்புவதும் பெறுவதும் நியூரோன்கள் தான். இதயத்திலும் நியூரோன்கள் இருக்கின்றன என்பதாக அறிவியல் சொல்கின்றது. இதயத்தில் உள்ள நியூரோன்கள் (neurons) சிந்தனை, உணர்வு மற்றும் அதன் செயல்பாட்டைப் பராமரிக்கும் திறனைக் கொண்டிருப்பதாக சில ஆய்வாளர்கள் கருதுகின்றார்கள்.
இதயமும் மூளையும் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொள்வதாகப் பல ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். 25 ஆண்டுகளுக்கும் மேலாக, அமெரிக்காவின் கலிபோர்னியா மாநிலத்தில் உள்ள ஹார்ட்மெத் (HeartMath) கல்வி ஆராய்ச்சி மையம், அவர்களின் ஆய்வுகளின் இரண்டாவது தொகுதியில் (1993 முதல் 2016 வரை), இதயமும் மூளையும் தொடர்பு கொள்ளும் முறைகளையும் (mechanisms by which the heart and brain communicate) மற்றும்

இதயத்தின் செயல்பாடு நம் உணர்வுகள், உணர்ச்சிகள், உள்ளுணர்வு மற்றும் ஆரோக்கியத்தை எவ்வாறு பாதிக்கிறது என்பதைப் பற்றியும் ஆராய்ந்துள்ளது.

இதயம் மற்றும் மூளை தொடர்பாடல் எப்படி என்பதை விளக்கும் போது, டாக்டர் ரோலின் மெக்கிரேட்டி (Rollin McCraty, PhD) கூறுகின்றார்: "இதயத்திலிருந்து மூளைக்குச் செல்லும் தகவல்கள் உள்ளன, இந்த தகவல் மூளையில் உள்ள பகுதிகளைப் பாதிக்கிறது, மேலும் இந்த தகவல்களில் பெரும்பகுதி இதயத்திலிருந்து வருகிறது."
1991 ஆம் ஆண்டில் டாக்டர் ஜே ஆண்ட்ரூ ஆர்மர் (Dr J Andrew Armour, a neuro-cardiologist) நடத்திய ஒரு ஆய்வின்படி, இதயத்தில் ஒரு சிக்கலான நரம்பு மண்டலமொன்று இருக்கின்றது என்பதாகவும் இதயத்தில் இருக்கும் சுமார் 40,000 நியூரான்கள் ஒரு மூளையைப் போல் உணர்வு மற்றும் நினைவாற்றல் திறன் மிக்கவை என்பதாகவும் சொன்னார். இதயத்தை அவர் முதன் முதலில் ஓர் இதயமூளை (heart-brain) என்று அழைத்தார்.
ஒருவரின் உணர்ச்சிகள் மற்றும் ஆளுமைகள் (உ+ம்: அனுபவம், நம்பிக்கைகள், அன்பு மற்றும் கருத்துக்கள்) இதய மாற்றுச் சிகிச்சையின் விளைவாக மாற்றப்படுகின்றன என்பது இப்போது நன்கு நிறுவப்பட்ட உண்மை.
பேராசிரியர் போல் பியஸோல் (Professor Paul Pearsall, PhD) என்பவர் 150 இதயம் மற்றும் பிற உறுப்புகள் மாற்று அறுவை சிகிச்சை பெறுநர்களை பேட்டி கண்டதன் பின் மாற்று அறுவை சிகிச்சையின் பின்னர் நன்கொடையாளரிடம் இருந்த நினைவை பெறுநர் பெறுவார் என்ற முடிவுக்கு வந்தார்.
இதனை அவர் உயிரணு நினைவுகள் (cellular memories) என்று அழைத்தார். ஒரு சந்தர்ப்பத்தில் ஒரு மாற்று அறுவை சிகிச்சை மூலம் இதயத்தை பெற்றவர் நன்கொடையாளரின் உணவு விருப்பம் முதல் அவரது கொலைகாரன் பற்றிய அறிவு வரை அனைத்தையும் மரபுரிமையாகப் பெற்றதாகக் கூறியுள்ளார். இது ஒரு வழக்கில் கொலையாளியின் கைதுக்கு வழிவகுத்ததாக குறிப்பிட்டுள்ளார்.

இன்னொரு உதாரணம். மகிழ்ச்சியான திருமணமான 69 ஆண்டு ஜார்ஜியாவில் வசித்த முதியவர், இதய மாற்று அறுவை சிகிச்சை பெற்றபின் நன்கொடையாளரின் முற்றிலும் ஒத்த சூழ்நிலையில் தன்னைத்தானே சுட்டுக் கொண்டு தற்கொலை செய்து கொண்டார் (Daily Mail, 2008).
இன்னொரு உதாரணம். கவிதை எழுதிய, இசை வாசித்த, பாடல்களை இயற்றிய 18 வயது சிறுவன் ஒருவன் இருந்தான். அவன் ஒரு கார் விபத்தில் இறந்தான், மற்றும் அவனுக்குப் பிறகு அவனது இதயம் ஒரு 18 வயது பெண் டேனியல்லாவுக்கு இடமாற்றம் செய்யப்பட்டது, அவனது சில இசை வரிகள் அவளது முன்னிலையில் இசைக்கப்பட்ட போது இதற்கு முன்பு கேள்விப்படாத போதிலும், திடீரென்று அவளால் பாடல் வரிகளை படிக்க முடிந்தது (Penman, 2008).

கேள்வி இப்போது என்னவென்றால் நம் சிந்தனைக்கும் அறிவுக்கும் மூளை மட்டுமே பொறுப்பு என்றால், மாற்று அறுவை சிகிச்சையின் போது பெறுநர்கள் நன்கொடையாளரின் நினைவுகள் மற்றும் குணங்கள் அவர்களின் இதயத்துடன் இடமாற்றம் செய்யப்படும் நிகழ்வுகளுக்கு என்ன அறிவியல் விளக்கம் கொடுக்கப் போகின்றனர்? எனவே மூளைக்கும் இதயத்திற்கும் அறிவியல் மற்றும் தொலைத் தொடர்பு இருப்பதாகவே உணர்கின்றோம். முக்கியமாக மனதில் வைத்துக்கொள்ள வேண்டியது என்னவென்றால், மனித உடலில் இதயத்தின் பங்கு வெறுமனே இரத்தத்தைச் செலுத்துகிறது என்பதாக இதுவரை அறிவியல் பூர்வமாக நிரூபிக்கப்படவில்லை. அதே போல், அறிவாற்றல் நடவடிக்கைகளுக்கும் இதயத்துக்கும் எந்த சம்பந்தமும் இல்லை என்பதாகவும் அறிவியலில் இதுவரை நிரூபிக்கப்படவில்லை.

ஒரு மனிதனைச் சிந்தனை செய்யத்தூண்டுவது அவனது மூளை தான் என்று விஞ்ஞானம் சொல்கின்றது. இதை இஸ்லாம் மறுக்கவில்லை. இதயத்துக்கும் சிந்தனைக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை என்பதை அறிவியல்

இதுவரை நிறுவவில்லை. இதயத்துக்கும் மூளைக்கும் இடையில் தொடர்பு இருப்பதாக சில ஆராய்ச்சியாளர்கள் நிறுவியுள்ளதாகப் பார்த்தோம்.
எது எப்படி இருந்தாலும், ஆன்மீகம் என்பது இதயம் சம்பந்தப்பட்டது, அதிலிருக்கும் ரூஹ் மற்றும் அதைக் கைப்பற்றப் பார்த்துக் கொண்டிருக்கும் நப்ஸ் சம்பந்தப்பட்டது. அல்குர்ஆனில் சில வசனங்களைப் பார்க்கும் போது ஆன்மீக விஷயத்தில் முடிவெடுப்பதற்கு ஒரு மனிதனைத் தூண்டுவது அவனது உள்ளம் (இதயம்) என்பதாக வந்திருக்கின்றது.
இதை நாம் எவ்வாறு விளங்க வேண்டும் என்றால், நமது நல்ல அல்லது பாவமான செயல்களுக்கு அடிப்படைக் காரணம் நமது ரூஹ் மற்றும் நப்ஸ் என்று சொல்லப்படக்கூடிய உள்ளார்ந்த இருக்கைகளாகும். மனநலம் சரியாக இருக்கும் ஒரு மனிதனுக்கு, அவனது மூளை அறிவிக்கும் ஒரு நல்ல அல்லது தீய செயலை உள்ளத்தில் இருக்கும் அவனது ரூஹ் மற்றும் நப்ஸ் அதனைப் புரிந்து கொள்ளும். இது ஆன்மீக தீர்மானங்களை எடுக்க விளங்கக்கூடிய உள்ளம்.
வேதத்தின் வழிகாட்டுதலுடன் ஒருவன் நீதியாகச் சிந்தனை செய்தால் அவன் ரூஹிற்கு கட்டுப்பட்டு நற்செயலை செய்வான் அல்லது தீமையான செயலை செய்யாமல் இருப்பான். உள்ளம் ரூஹின் கட்டுப்பாட்டிலிருந்தால் அது தூய உள்ளம். அது நப்ஸின் கட்டுப்பாட்டில் இருந்தால் அது சிதைந்த உள்ளம்.
ஒரு மனிதன் அல்லாஹ்வின் வசனங்களை கேட்கும் போது நீதியாக சிந்தனை செய்தால் அவன் உள்ளத்தால் சரியான முடிவை எடுப்பான்., அவ்வாறு சரியான முடிவை எடுக்காத உள்ளம் நப்ஸுக்கு கட்டுப்பட்ட உள்ளம் - இந்த உள்ளத்தை அல்லாஹ் முத்திரை வைத்துவிட்டதாக அல்குர்ஆனில் குறிப்பிடுகின்றான். அல்குர்ஆன் 26:89 – “எவரொருவர் பரிசுத்த இருதயத்தை அல்லாஹ்விடம் கொண்டு வருகிறாரோ அவர் (கண்ணியம் அடைவார்).” அல்லாஹ் மிக அறிந்தவன்.
" மேலும், அவர்களில் சிலர் உம்மை (உமது போதனைகளை) செவியேற்(பவர்கள் போல் நடிப்)பார்கள். ஆனால், அவர்கள் அதனை விளங்கிக் கொள்ள முடியாதபடி அவர்களுடைய இருதயங்களில் திரைகளையும், அவர்களுடைய செவிகளில் செவிட்டுத் தனத்தையும் நாம ஆக்கிவிட்டோம்". ( குர்ஆன் 6:25 )

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 107
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 24)

பகுதி 3
...(ஆகவே) அத்தாட்சி ஒவ்வொன்றையும் அவர்கள் பார்ப்பார்களாயினும், அவற்றை நம்ப மாட்டார்கள். முடிவில் உம்மிடம் அவர்கள் வந்தார்களானால் உம்மிடம் குதர்க்கமாகப்பேசுவார்கள். "இவை முன்னோர் களின் கட்டுக்கதைகளேயல்லாமல் (வேறு) இல்லை” என்று (அவர்களில்) நிராகரித்துக் கொண்டிருப்போர் கூறுவர்.(குர்ஆன் : 6:25)

அபூஸுப்யான் பின் ஸக்ரு, அபூஜஹ்ல் பின் ஹிஷாம், வலீது பின் முகிறா, நள்ரு பின் ஹாரிது,உத்பா, ஷைபா, உமய்யா பின் கலப், ஹாரித் பின் ஆமிர் ஆகிய இஸ்லாமிய விரோதிகள். ஒரு தினம் ஒன்று கூடி (பெருமானார் (ஸல்) அவர்கள் ஓதிக் கொண்டிருந்த) திருக்குர்ஆனைச் செவியேற்றனர்.
இந்த நள்ரு பின் ஹாரிது என்பவன் கடந்த காலப் பழங்கதைகளை அதிகமாகத் தெரிந்து வைத்திருந்தான். அவற்றை அடிக்கடி பொது மக்களுக்கு இராக் கதைகளாக கூறுவான்.

அவர்களில், சிலர், நள்ரு என்பவரை நோக்கி, "முஹம்மது என்ன கூறுகிறார்? என்று கேட்டனர். அதற்கு நள்ரு, "அவர் என்ன கூறுகிறார் என்பது எனக்கு சரியாக விளங்கவில்லை; ஆனால் அவருடைய நா அசைவதை மட்டும்

நான் காண்கின்றேன். நான் உங்களுக்கு முற்காலக் கதைகளில் சுவை பட சிலவற்றைத் தெரிவிப்பது போல் அவரும் முன்னோர்களின் கட்டுக்கதைகளைத் தெரிவிக்கின்றார்" என்று கூறினான்

இந்த நள்ருவைப் பற்றி சுஹைலீ ( ரஹ் ) அவர்கள் கூறியதாவது, குர்ஆனில் எங்கெல்லாம் முன்னோர்களின் கட்டுக்கதைகள் எனும் சொற்றோடர் வருகிறதோ, அங்கெல்லாம் அவற்றைக் கூறியவன் நள்ர் பின் அல்ஹாரிஸ் பின் கல்தா என்பவனாகவே இருப்பான். அவ்வளவு அழகான கதை சொல்லி அவன்
அவன் பாரசீகம் சென்று ருஸ்தும் மற்றும் ஸ்ஃபாண்டியர் போன்றோர் தொடர்பான செய்திகளைக் கேட்டறிந்து வந்து, "முஹம்மத் உங்களுக்குச் சொல்லும் செய்திகளை விட மிக அழகான செய்திகளை நான் சொல்வேன்" என்பான். இது மாதிரி குர்ஆனில் முன்னோர்களின் கட்டுக்கதைகள்தான் உள்ளன என்றும் அவன் கூறுவான்.
இவன் தொடர்பாகவே அல்லாஹ் அருளியதைப் போன்று நானும் (வேத வசனங்களை அருளுவேன் என்று கூறுபவரை விடவும் பெரிய அநீதியாளர் வேறு யார் இருக்க முடியும்? இது பற்றி தனி வசனமாக (குர்ஆன் 6:93) ல்...
"அல்லாஹ்வின் மீது பொய்க் கற்பனை செய்பவன், அல்லது வஹீயின் மூலம் தனக்கு ஒன்றுமே அறிவிக்கப்படாமலிருக்க, “எனக்கு வஹீ வந்தது” என்று கூறுபவன்; அல்லது “அல்லாஹ் இறக்கிவைத்த இ(வ்வேதத்)தைப் போல் நானும் இறக்கிவைப்பேன்” என்று கூறுபவன், ஆகிய இவர்களை விடப் பெரிய அநியாயக்காரன் யார் இருக்க முடியும்?

இந்த அநியாயக்காரர்கள் மரண வேதனையில் இருக்கும் போது நீங்கள் அவர்களைப் பார்த்தால், மலக்குகள் தம் கைகளை நீட்டி (இவர்களிடம்) “உங்களுடைய உயிர்களை வெளியேற்றுங்கள்; இன்றைய தினம் நீங்கள் இழிவுதரும் வேதனையைக் கூலியாகக் கொடுக்கப்படுவீர்கள். ஏனெனில், நீங்கள் உண்மையல்லாததை அல்லாஹ்வின் மீது கூறிக் கொண்டிருந்தீர்கள்; இன்னும், அவனுடைய வசனங்களை (நம்பாது நிராகரித்துப்) பெருமையடித்துக் கொண்டிருந்தீர்கள்” (என்று கூறுவதை நீர் காண்பீர்).(குர்ஆன் : 6:93)
எனும் இவ்வசனம் அருளப்பெற்றது.
இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த அபூஸுப்யான், "அவர் (முஹம்மது) சொல்வதில் சிலவற்றை உண்மையென்றே கருதுகிறேன்" என்றார்.
இது அபூஜஹ்லுக்குப் பிடிக்கவில்லை. உடனேயே அவன், "ஒரு போதும் இம்மாதிரிக் கூறாதீர். இதை விட நாம் சாவது மிகவும் எளிதாகும்." என்றான்.
அச்சமயத்தில் தான் மேற்கண்ட இவ்வசனம் இறக்கப்பட்டது.
(ஆதார நூல்கள்: தப்ஸீர் காஜின், ஹக்கானி, அஹ்ஸன், ரூஹஹுல் ம ஆனி முதலியன.)
பின்னர் நன்ரு பின் ஹாரிது உஹுதுப் போரின் போது
கொல்லப்பட்டான்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 108
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 25)

وَهُمْ يَنْهَوْنَ عَنْهُ وَيَنْــــْـَٔوْنَ عَنْهُ وَاِنْ يُّهْلِكُوْنَ اِلَّاۤ اَنْفُسَهُمْ وَمَا يَشْعُرُوْنَ

"( உண்மையை ஏற்க விடாமல் ) அதிலிருந்து (மக்களை) அவர்கள் தடுக்கிறார்கள். அதிலிருந்து தானும் தூர விலகிக் கொள்கிறார்கள் (இதனால்) அவர்கள் தம்மையே அழித்துக் கொள்கிறார்கள்.(ஆனாலும்) அவர்கள் இதை உணர்வதில்லை" (குர்ஆன் : 6:26)
இதற்கு இரண்டு வகையான விளக்கங்கள் அளிக்கப்பட்டுள்ளன:

1. உண்மையைப் பின்பற்றுதல் முஹம்மத் (ஸல்) அவர்களை இறைத் தூதராக ஏற்றல், குர்ஆனின் கட்டளைக்குக் கட்டுப்படுதல் ஆகியவற்றிலிருந்து மக்களை அவர்கள் தடுக்கிறார்கள். மேலும் தாமும் அவற்றிலிருந்து தூர விலகிக்கொள்கிறார்கள்.
கீழ்த்தரமான இவ்விரு செயல்களிலும் ஒரே சமயத்தில் அவர்கள் ஈடுபடுகிறார்கள். தாமும் பயன்பெறாமல் பிற மக்களையும் பயன்பெற விடாமல் தடுக்கிறார்கள்.

முஹம்மத் (ஸல்) அவர்கள்மீது நம்பிக்கை கொள்ள விடாமல் மக்களை அவர்கள் தடுக்கிறார்கள் என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இதற்கு விளக்கமளித்தார்கள். குறைஷி குலத்தைச் சேர்ந்த இறை மறுப்பாளர்கள் நபி (ஸல்) அவர்களைச் சந்திப்பதைத் தவிர்த்து வந்ததுடன், பிற மக்களையும் அவர்களிடம் செல்ல விடாமல் தடுத்து வந்தார்கள் என்று முஹம்மத் பின் அல் ஹனஃபிய்யா (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.
2. ஹளரத் அபூதாலிப் அவர்கள் இஸ்லாத்தில் சேராமல் இருந்து கொண்டும், மற்ற ஜனங்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தொந்தரவு செய்ய வந்தால், அவர்களை விலக்கிக் கொண்டு இருந்தார்கள். இதனை குறித்து இந்த ஆயத்து அருளப்பட்டது என்று தஃப்ஸீர் ஃபத்ஹுல் கரீமில் எழுதப்பட்டிருக்கிறது
ஒரு நாள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹளரத் அபூதாலிப் அவர்களை ஈமான் கொண்டு இஸ்லாத்தில் சேர்ந்து கொள்ளும்படி கூறியதற்கு, "குறைஷியர் என்னைப் பழிக்காதிருக்கும் பட்சத்தில் ஈமான் கொண்டு விடுவேன். என்றாலும், உயிருள்ள வரை உமக்கு வரும் சங்கடங்களையும் நோவினைகளையும் உம்மை விட்டு விலக்கிக் கொண்டிருப்பேன்'' என்று பதிற் கூறியதுடன், சில செய்திகளைக் கவிதைகளாக் கூறினார்கள். அக்கவிதை வருமாறு:
" மகனே. என்னை மண்ணில் புதைத்து, மண்ணால் எனக்குத் தலையணை வைக்கப்படும் வரையில் குறைஷிக் கூட்டத்தினர்கள் அல்லாஹுத்தஆலாவின் மீது ஆணையாக, உம்மைத் தொடமாட்டார்கள்".
"உமது நாயனின் ஏவலை,மனிதருக்கு முகம் பழிக்க நீர் கூறும், உன் மீது கண்ணை மூடிக் கொண்டு இருந்திடப்படுகிறதில்லை. நீர் சோபனம் பெறும். இன்னும், (நாயனுடைய ஏவலாகிய) அதகை கொண்டு நீர் கண் குளிர்ந்தவராயிருந்து கொள்ளும்".
"இன்னும் (சன்மார்க்கத்தின் பால்) என்னை நீர் அழைத்தீர். இன்னும் நீர் எனக்கு நல்லுபதேசம் செய்.பவர் என்பதை நான் உணர்ந்தேன். (உமது காரியமனைத்திலும்) நீர் உண்மையுரைத்தீர். பின்னர், நீர் அமீனாக (நம்பத்தகுந்தவராக)வும் இருக்கிறீர்.
இன்னும், எனக்கு ஒரு (சன்) மார்க்கத்தை எடுத்துக் காண்பித்தீர். அது சிருஷ்டிகளிலுள்ள மார்க்கங்கள் அனைத்திலும் சிறந்த சன்மார்க்கம் என்பதைத் திட்டமாக நான் அறிந்து கொண்டேன்.
பழிப்பு அல்லது மனிதர் என்னை ஏசுவார்களென்ற பயம் எனக்கில்லாதிருப்பின் அந்த மார்க்கத்தை மிக எளிதில் பகிரங்கமாக ஒப்புக் கொள்பவனாக என்னை நீர் கண்டிருப்பீர்.
இவ்வாறாக, அவர் இந்தக் கவிதைகளைக் கூறினார்.
ஆயினும், அப்போது இஸ்லாம் மார்க்கத்தை அவர் தழுவவில்லை. ஆனாலும், அவர் ஈமான் கொண்டு முஸ்லிமாகி விட்டதாகச் சில இமாம்கள் உறுதியாகக் கூறுகிறார்கள். பெரும்பாலானவர்கள் அவர் ஈமான் கொள்ளவில்லை என்று கூறுகிறார்கள். ஆகவே, இவ்விஷயத்தில் இமாம்களுக்கிடையில் ஏகமனதாக அபிப்பிராயம் இல்லை. (தஃப்ஸீர் ஃபத்ஹுல் கரீம்).

اِنَّكَ لَا تَهْدِىْ مَنْ اَحْبَبْتَ وَلٰـكِنَّ اللّٰهَ يَهْدِىْ مَنْ يَّشَآءُ وَهُوَ اَعْلَمُ بِالْمُهْتَدِيْنَ

(நபியே!) நீர் நேசிப்பவர்களை(யெல்லாம்) நிச்சயமாக நேர்வழியில் செலுத்திவிட உம்மால் முடியாது; ஆனால், அல்லாஹ் தான் நாடியவர்களை நேர்வழியில் செலுத்துகிறான் - மேலும் நேர்வழி பெற்றவர்களை அவன் நன்கறிகிறான். (குர்ஆன் : 28:56)

தவிர, திருக்குர்ஆனை அல்லது அதனை ஈமான் கொள்வதை விட்டு ஜனங்களை அக்காஃபிர்கள் தடுக்கின்றனர். தாங்களும் அதனை விட்டு விலகுகிறார்கள். இவ்வாறு விலகுவதாலும் மற்ற ஜனங்களைத் தடுத்து விலக்குவதாலும் தங்களுக்குத்தான் அழிவை உண்டாக்கிக் கொள்கிறார்கள். ஆனால், தங்களுக்கு அழிவு வருவதை அவர்கள் உணர்வதில்லை என்பது இந்த ஆயத்தின் கருத்தென்பதாக தஃப்ஸீர் ரூஹுல் பயானில் சொல்லப்பட்டிருக்கிறது.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 109
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 26)

وَلَوْ تَرٰٓى اِذْ وُقِفُوْا عَلَى النَّارِ فَقَالُوْا يٰلَيْتَنَا نُرَدُّ وَلَا نُكَذِّبَ بِاٰيٰتِ رَبِّنَا وَنَكُوْنَ مِنَ الْمُؤْمِنِيْنَ
நரக நெருப்பின்முன் அவர்கள் நிறுத்தப்படும்போது (நபியே!) நீர் அவர்களைப் பார்ப்பீராயின், "எங்கள் கேடே! நாங்கள் திரும்ப (உலகத்திற்கு) அனுப்பட்டால் (நலமாக இருக்குமே) அப்பொழுது நாங்கள் எங்களின் இறைவனின் அத்தாட்சிகளைப் பொய்ப்பிக்க மாட்டோம்; நாங்கள் முஃமின்களாக இருப்போம்" எனக் கூறுவதைக் காண்பீர். (குர்ஆன் : 6:27)
மேலும், "நீர் பார்த்தால் " என்ற இவ்வாக்கியம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை முன்னோக்கிக் கூறியதாகும். மேலும், அதனை நேரடியாக (முஷாஹதாவாக)ப் பார்க்கிற ஒவ்வொருவரையும் முன்னோக்கிக் கூறியதாகும் என்றும் கொள்ள வேண்டும்.
உணர வேண்டிய காலத்தில் உணராமல் அகம்பாவ மிகுதியால் அல்லாஹ்வின் வசனங்களைப் புறக்கணித்துக் கொண்டு இருந்து விட்டு அதற்குரிய கொடிய தண்டனை அனுபவிக்க வேண்டிய நிலை வந்ததும் வீண் கூக்குரலிடுவதில் என்ன பயன்? இதையே இவ்வசனம் எடுத்துரைக்கிறது.
நிராகரித்துக் கொண்டிருப்போருக்கு நரக வேதனைப் பற்றி எச்சரிக்கப்பட்ட போதெல்லாம், அதனைப் பரிகசித்தனர். அகம்பாவத்துடன் அவ்வேதனையைக் கொண்டு வருமாறு கூறினர்.
இப்பொழுது அவர்கள் நரக நெருப்பின் மீது நிறுத்தப்பட்டு வேதனை செய்யப்படுவதை நபியே! நீர் பார்ப்பீராயின் பயங்கரமான நிலையையே அங்கு காண்பீர்.
அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார், இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'உங்கள் (உலக) நெருப்பு, நரக நெருப்பின் எழுபது பாகங்களிலிருந்து ஒரு பாகமேயாகும்' என்று கூறினார்கள்.
உடனே, 'இறைத்தூதர் அவர்களே! இந்த (உலக) நெருப்பே (பாவம் செய்தவர்களை எரித்து வேதனைப்படுத்த) போதுமான தாயிற்றே' என்று கேட்கப்பட்டது.
நபி(ஸல்) அவர்கள், '(அப்படியல்ல.) உலக நெருப்பை விட நரக நெருப்பு அறுபத்தொன்பது பாகங்கள் அதிகப்படுத்தப்பட்டுள்ளன.இவற்றில் ஒவ்வொரு பாகமும் உலக நெருப்பின் வெப்பத்திற்குச் சமமானதாகும்' என்றார்கள்.புகாரி 3265
அந்நாளில் அவர்கள் நரகத்தின் சங்கிலிகளையும், விலங்குகளையும், கொடும் வெப்பத்தால், வியர்வையும் சீழ்களும் ஆறாய் ஓடி அவர்களுக்கு உணவாக வழங்கப்பட்டு, அந்த அதிபயங்கரமான அமளிகளையும் கண்கூடாகக் காணும்போது, வேதனையைத் தாங்க முடியாத அவர்கள்,
''நாங்கள் மீண்டும் முன்பு வசித்த உலகுக்குத் திருப்பி அனுப்பப்படமாட்டோமா? அவ்வாறு அனுப்பப் பட்டோமாயின், அப்பொழுது எங்களுடைய இரட்சகனின் வசனங்களை நாங்கள் அப்படியே ஏற்றுக் கொண்டு செயல்படுவோமே, அவற்றைப் பொய்யாக்க மாட்டோமே, ஏனைய உண்மை விசுவாசிகளைப் போன்று நாங்களும் ஆகி விடுவோமே' என்றெல்லாம் கூக்குரலிடுவார்கள்.

ஆனால் உலகில் இருக்கும்பொழுது இவர்கள் எந்த வாக்குறுதியைக் காப்பாற்றினர்! வாக்குறுதி அளிப்பதும் அதற்கு மாறு செய்வதும் தான் இவர்களது தொழில், இந்நிலையில் மீண்டும் உலகுக்கு மாற்றப்பட்டால் மட்டும் சரியாக நடந்து கொள்வார்களா? மாட்டார்கள்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 110 (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 27)

بَلْ بَدَا لَهُمْ مَّا كَانُوْا يُخْفُوْنَ مِنْ قَبْلُ وَلَوْ رُدُّوْا لَعَادُوْا لِمَا نُهُوْا عَنْهُ وَاِنَّهُمْ لَـكٰذِبُوْنَ

எனினும், எதை இவர்கள் முன்பு மறைத்திருந்தார்களோ அது இவர்களுக்கு வெளிப்பட்டு விட்டது; இவர்கள் (உலகத்திற்குத்) திருப்பி அனுப்பப்பட்டாலும் எதை விட்டு அவர்கள் தடுக்கப்பட்டார்களோ அதற்கே மீளுவார்கள்; நிச்சயமாக அவர்கள் பொய்யர்களே. (குர்ஆன் : 6:28)

وَقَالُوْۤا اِنْ هِىَ اِلَّا حَيَاتُنَا الدُّنْيَا وَمَا نَحْنُ بِمَبْعُوْثِيْنَ

அன்றியும், “இவ்வுலகத்தில் நாம் வாழ்ந்திருப்பதைத் தவிர (அப்பால் மறுமை வாழ்வு என்று) ஒன்றும் இல்லை; நாம் (மரணத்திற்குப் பின் மறுபடியும்) எழுப்பப் பட மாட்டோம்” என்றும் அவர்கள் கூறுகின்றனர். (குர்ஆன் : 6:29)

وَلَوْ تَرٰٓى اِذْ وُقِفُوْا عَلٰى رَبِّهِمْ قَالَ اَلَـيْسَ هٰذَا بِالْحَـقِّ قَالُوْا بَلٰى وَرَبِّنَا قَالَ فَذُوْقُوا الْعَذَابَ بِمَا كُنْتُمْ تَكْفُرُوْنَ

இவர்கள் (உயிர்ப்பிக்கப்பட்டு) இவர்களுடைய இறைவனின் முன் நிறுத்தப்படும்போது இவர்களை நீர் காண்பீராயின் (அது சமயம் இறைவன் கேட்பான்) இது உண்மையல்லவா? என்று; ”ஆம்! எங்களுடைய ரப்பின் மீது ஆணையாக (மெய்தான்)” என்று இவர்கள் கூறுவார்கள்; அப்போது, “நீங்கள் நிராகரித்துக் கொண்டிருந்த காரணத்தால் வேதனையை அனுபவியுங்கள்” என்று அல்லாஹ் கூறுவான். (குர்ஆன் : 6:30)

நிராகரித்துக் கொண்டிருந்தோர் உலகில் மறைத்து வைத்துக் கொண்டிருந்தவை அனைத்தும் மறு உலகில் வெளிப்பட்டு விடும். வெளியில் ஒன்றைப்பேசுவது, மனத்தில் வேறொன்றை மறைத்து வைத்துக்கொள்வதுபோன்ற அவர்களின் வஞ்சக எண்ணங்கள் அனைத்தையும் மறுமையில் அவர்களுடையஅங்கங்களே வெளிப்படுத்தி விடும்.

அவர்கள் உலகில் குற்றங்களை மறைத்தது போல் மறு உலகில் மறைக்க முடியாது அவ்வாறு மறைத்தாலும் அவர்களுடைய அங்கங்கள் அவர்களுக்கு விரோதமாக சாட்சி கூறிவிடும். இதனைக் குறித்தே 28ம் வசனத்தின் ஆரம்பத்தில் முன்னர் அவர்கள் உலகில் மறைத்து வைத்துக் கொண்டிருந்தது (மறுமையில்) அவர்களுக்கு வெளிப்பட்டு விட்டது எனக் கூறப்படுகிறது.

எதனையும் இனி மறைக்க முடியாது என்ற நிலை வந்தவுடன் அவர்கள், முந்தைய பதிவு 27ம் வசனத்தில் கூறப்பட்டது போல் மீண்டும் உலகத்திற்கு அனுப்பப்பட்டால் உண்மை விசுவாசிகளாக மாறி விடுவோம் என்னும் சுருத்தை வெளியிடுவர்.

ஆனால் மீண்டும் உலகுக்கு திருப்பியனுப்பப் படவே மாட்டார்கள். அப்படியே அவர்கள் திருப்பியனுப்பப் பட்டாலும் அவர்கள் வாக்கைக் காப்பாற்றுகிறவர்களல்லர். அவர்கள் எதனைச் செய்யக் கூடாது எனத் தடுக்கப்பட்டார்களோ அதனைச் செய்யவே முனைவார்கள். மீண்டும் பழைய நிலை தான். ஏனெனில், நிச்சயமாக அவர்கள் பொய்யையே கூறுகிறவர்களாக இருக்கின்றனர் என்பது 28ம் வசனத்தின் கருத்தாகும்.

அவர்கள் இவ்வுலகில் இருந்த பொழுது இவ்வுலக வாழ்வு தான் சதமென்று எண்ணிக் கொண்டிருந்தனர். ஒரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் மறுமையைப் பற்றி அவர்களுக்கு அறிவித்த பொழுது, இவ்வுலகில் எங்களுடைய வாழ்க்கையைத் தவிர வேறு எதுவும் கிடையாது. நாங்கள் மரித்து விட்டாலும் நாங்கள் மீண்டும் எழுப்பப்படுகிறவர்களல்லர் என்று கூறிக் கொண்டிருந்தனர்.

ஆனால், இப்பொழுது அவர்கள் மீண்டும் எழுப்பப்பட்டு தங்களுடைய இரட்சகனின் முன்னிலையில் நிறுத்தப்பட்டு விட்டனர். அப்பொழுது நபியே! அவர்களுடைய பரிதாபகரமான நிலையை நீர் பார்ப்பீராயின், அது மிகப் பயங்கரமானதாக இருக்கும்.
அவர்களை நோக்கி இரட்சகன், "நீங்கள் உலகில் இருந்தபொழுது மறுத்து வந்தீர்களே அந்த நாள் இப்பொழுது வந்து விட்டதே. இப்பொழுது கூறுங்கள்; "இது உண்மையல்லவா?" என்று கேட்பான் எங்ஙனம் அவர்களால் மறுக்க முடியும்? "ஆம்! எங்களுடைய இரட்சகனின் மீது ஆணையாக உண்மை தான், நாங்கள் உலகிலிருந்த பொழுது இதனை மறுத்தது தவறு தான்" எனக் கூறுவர்.
"அப்படியாயின், நீங்கள் இதனை உலகில் நிராகரித்துக் கொண்டிருந்ததன் காரணத்தால் நரகின் வேதனையை இப்பொழுது அனுபவியுங்கள்" என அல்லாஹ் தீர்ப்புக் கூறுவான் அதிலிருந்து அவர்கள் மீளப் போவதில்லை என்பன இவ்வசனத்தின் கருத்துரையாகும்.

வஞ்சக எண்ணங்கள் குறித்து விஞ்ஞானம்
ஜப்பான் நாட்டை சேர்ந்த விஞ்ஞானி டாக்டர் மாசறு எமோட்டோ(Masaru Emoto) என்பவர் ,நம் எண்ணங்களுக்கு அதிக சக்தி இருக்கிறது என்றும் ,நம் எண்ணங்களின் மூலமாக நமக்கு ஏற்படும் உணர்வு மற்றும் நாம் பேசும் வார்த்தைகள் தான் நம் வாழ்வை வடிவமைக்கிறது என உறுதியாக இருந்தார்.
இதை நிரூபிக்க அவர் எடுத்துக்கொண்ட கருவி "நீர் "
நீர் இன்றி அமையாது உலகு ,நம் பூமி 70 சதவிகிதம் தண்ணீரால் சூழப்பட்டது .நீர் இன்றி அமையாது உடல்,நம் உடலும் 60 சதவிகிதம் தண்ணீரால் உண்டானதே .
நீருக்கு நாம் நினைப்பதை விட சக்தி அதிகம் என்பதாக எண்ணி எமோட்டோ தண்ணீரை அடிப்படையாய் வைத்து ஒரு ஆய்வை மேற்கொண்டார்.
இரண்டு கண்ணாடி நீர் குடுவையில் அன்பு(Love) ,நன்றி(Thank you) போன்ற நேர்மறை வார்த்தைககளை எழுதும்போது மிகவும் அன்பாய் பரிவாய் குடுவையின் உட்புறத்தில் எழுதி ஒட்டி ,.
அதே போல் "நீ ஒரு முட்டாள்"," உன்னால் முடியாது " போன்ற எதிர்மறை வார்த்தைகளை எழுதும் சற்று இறுக்கமான மனநிலையில் இருக்கும் போது எழுதி மற்றோரு குடுவையின் உட்புறத்தில் ஒட்டி,..
அவைகளில் நீரை நிரப்பி ,சில மணி நேரம் கழித்து அந்த தண்ணீரை உறைய வைத்து,அதை மைக்ரோஸ்கோப் வழியாக பார்க்கும்போது ,

நேர்மறை எழுத்துக்களை எழுதிய குடுவையின் நீர் படிகள் (Water Crystals) அழகிய Symmetrical வடிவத்தோடும் ,எதிர்மறை எழுத்துக்களை எழுதிய குடுவையின் நீர் அகோரமாக unsymmetrical வடிவத்தை பெற்றிருந்தன.
அதே போல் நேர்மறை மற்றும் எதிர்மறை வார்த்தைகளை நீரின் முன்பு வெளிப்படுத்தும் போதும்,நேர்மறை வார்த்தைகளுக்கு அழகிய வடிவமும் ,எதிர்மறை வார்த்தைகளுக்கு கோர வடிவமும் மைக்ரோஸ்கோப்பில் காணப்பட்டது.
நம் எண்ணங்கள் மற்றும் உணர்வுகளை நீரால் கிரகிக்க முடிகிறது, நம் எண்ணங்களால் நீரின் மூலக்கூறுகளில் (Water Molecules) தாக்கத்தை ஏற்படுத்த முடியும் என்பதைக் கொண்டு தண்ணீருக்கு உணர்வு உண்டு என மிக முக்கியமான கண்டுபிடிப்பை டாக்டர் எமோட்டோ கண்டுபிடித்தார்.
மனிதனின் எண்ணங்கள், தன்னை மட்டும் அல்லாமல் தன்னை சுற்றிருப்பவர்களையும், சுற்றுசூழலிலும் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தும் என எமோட்டோ தான் எழுதிய "Hidden Messages in Water","The Miracle of Water","Water Crystal Healing" புத்தகங்களின் மூலம் தெரிவித்தார்.
இம்மையிலுள்ள தண்ணீரே மனிதனின் எண்ணங்களை பிரதிபலிக்கும்போது, மறுமையில் அதுவும் இறைவனின் முன்னாள் மனிதனின் எண்ணங்கள் வெளிப்படாமல் போகுமா ?

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 111**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 28)**

( நம் ஒவ்வொரு செயலும் ஒவ்வொரு உருவம் எடுக்கும் )
قَدْ خَسِرَ الَّذِيْنَ كَذَّبُوْا بِلِقَآءِ اللّٰهِ حَتّٰٓى اِذَا جَآءَتْهُمُ السَّاعَةُ بَغْتَةً قَالُوْا يٰحَسْرَتَنَا عَلٰى مَا فَرَّطْنَا فِيْهَا ۙ وَهُمْ يَحْمِلُوْنَ اَوْزَارَهُمْ عَلٰى ظُهُوْرِهِمْ اَلَا سَآءَ مَا يَزِرُوْنَ
ஆகவே, (மறுமை நாளில்) அல்லாஹ்வைச் சந்திப்பதைப் பொய் என்று கூறியவர்கள் நிச்சயமாக நஷ்டம் அடைந்தவர்களாகி விட்டனர்; அவர்களிடம் மறுமை நாள் திடீரென வரும்பொழுது உலகில் நாங்கள் அலட்சியமாய் இருந்ததற்காக எங்களுக்கு ஏற்பட்ட கை சேதமே என்று கூறுவார்கள். மேலும் அவர்கள் தங்கள் (பாவச்) சுமைகளை தங்கள் முதுகுகளின் மேல் சுமப்பார்கள்; அவர்கள் சுமப்பது மிகவும் கெட்டது என்பதை அறிந்துக் கொள்ளுங்கள்.(குர்ஆன் : 6:31)
மூமின் தனது கப்ரிலிருந்து உயிர்ப்பிக்கப்பட்டு வெளியேறும்போது தோற்றத்தில் மிக அழகானதும், நல்ல மணமுள்ளதுமான ஒன்று அவரை எதிர் கொண்டு அழைத்து "என்னை நீர் அறிவீரோ?" என்று வினவும்.
அதற்கு அவர் “இல்லை” என்பார். அப்பொழுது, அது அவரை நோக்கி "நான் உமது நற்செயல். என் மீது ஏறிக் கொள்வீராக. உலகில் என்னை நீண்டகாலம் நீர் சுமந்தீர்" என்று அது கூறும்.
இதனைக் குறித்துத்தான்

يَوْمَ نَحْشُرُ الْمُتَّقِيْنَ اِلَى الرَّحْمٰنِ وَفْدًا ۙ
அர்ரஹ்மானாகிய நம்மிடத்தில் முத்தக்கீன்களை ( பயபக்தியுடையவர்களை) சவாரியானவர்களாக நாம் கூட்டமாக ஒன்று சேர்க்கும் நாளில்; (குர்ஆன் : 19:85) என்று சொல்லப்பட்டிருக்கிறது.
காஃபிர்கள் அவர்களது கப்ருகளை விட்டு வெளியேறும் போது மிக அவலட்சணமுள்ளதும் துர்நாற்றம் உள்ளதுமான ஒன்று அவர்கள் முன்னின்று ''என்னை நீர் அறிவீரா?" என்று வினவும்.
அதற்கவர் "இல்லை" என்பார். அப்பொழுது அது "நான்தான் உனது தீயசெயல் உலகில் நீண்ட நாள் என் மீது சவாரி செய்வீர்.. இன்றைய தினம் நான் உன் மீது சவாரி செய்கின்றேன்" என்று அது கூறும்.
இதனைக் குறித்துத்தான் மேலும், அவர்கள் தங்களுடைய முதுகுகளின் மீது தங்கள் பாவங்களைச் சுமந்தவர்களாக என்று சொல்லப்பட்டிருக்கிறது என்று மேற்கண்ட வசனத்தில் (6:31)-ல் சொல்லப்பட்டிருக்கிறது என்பதாக ஸதீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறி இருக்கிறார்.
நல்லடியார்களின் கபருக்குள்ளே ஓதிய குர்ஆன் நண்பர் ரூபத்தில், "தைரியமாக கூடவே நானிருக்கிறேன்" என்று கூறும் என்பதாக ஹதீஸில் கூறப்பட்டிருக்கிறது
"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று ஜாபிர் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கிறார்கள் :
"யார் சுப்ஹானல்லாஹ் இல் அஸீம் வ பி ஹம்திஹி (மகிமையும் புகழும் எல்லாம் வல்ல அல்லாஹ்வுக்கே) என்று கூறுகிறாரோ, அவருக்காக சொர்க்கத்தில் பேரீச்சை மரம் நடப்படும்."
அல்-திர்மிதி (3464) "

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "இரண்டு வாக்கியங்கள் நாவுக்கு எளிதானவை ஆகும்; (நன்மை, தீமை நிறுக்கப்படும்) தராசில் கனமானவை ஆகும்; அளவற்ற அருளாளனின் பிரியத்திற்குரியவை ஆகும். (அவை:) சுப்ஹானல்லாஹி வ பிஹம்திஹி; சுப்ஹானல்லாஹில் அழீம்.(பொருள்: அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்ந்து துதிசெய்கிறேன்; கண்ணியமிக்க அல்லாஹ்வைத் துதிக்கிறேன்) " என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார் புஹாரி 6682

ஆக சுப்ஹானல்லாஹ் இல் அஸீம் வ பி ஹம்திஹி - சுவனத்தில் மரமாகவும் , மீஸான் தராசில் கனமானவைகளாகவும் உருமாறும்.
மனிதர்கள் எண்ணக் கூடிய எண்ணங்கள் மற்றும் செய்யக்கூடிய செய்கைகள் உருவம் அடைகின்றன அதுவும் இவ்வுலக வாழ்க்கைக்குப் பிறகு நல்ல / தீய செயல்களுக்கு தக்க அவைகள் உருவம் கொள்வது குறித்து நவீன விஞ்ஞானம் சொல்வது நம்மை வியப்புக்குள்ளாக்குகிறது !

பிரபஞ்சம் ஒன்றல்ல. ஒவ்வொரு முறை நாம் சிந்திக்கும்போதும், புதியதொரு பிரபஞ்சத்தை உருவாகிக்கொண்டு தானிருக்கிறது. இதைத்தான் பல்லண்டக் (Multi universe) கோட்பாடு என்கிறார்கள் குவாண்டம் இயற்பியல் விஞ்ஞானிகள்.
அறிவியல் புனைகதை எழுத்தாளரான ஹெச்.ஜி. வெல்ஸ் என்பவர்தான் முதலில் இந்தக் கருத்தை முன்வைத்தார்; 1895-ல் அவர் எழுதிய ``தி டோர் இன் தி வால் (The Door in the Wall)" என்ற நாவலில். அது வெளியாகி 62 ஆண்டுகள் கழித்து ஹூக் எவெரெட் (Hugh Everett) என்பவர் தனது ஆய்வுக் கட்டுரையில் இதே கோட்பாட்டை முன்வைத்தார்.
"ஒவ்வொரு கணத்தின்போதும் ஒரு புதிய பிரபஞ்சம் உருவாகிக் கொண்டிருக்கிறது என்பதுதான் அவரது கட்டுரை குறிப்பிட்ட விளக்கம். அதாவது மேலே குறிப்பிட்டது போல. நீங்கள் இந்தக் கட்டுரையைப் படிக்கலாமா என்ற சிந்தனையில் ஊசலாடியபோது இரண்டு வகையான சிந்தனைகளையும் நிகழ வைக்கும் இருவேறு பிரபஞ்சங்களாக நமது பிரபஞ்சம் பிரிந்திருக்கும்.

அதற்கடுத்த கணமே அந்தப் புதிய பிரபஞ்சமும் தன் பங்குக்கு அதிலிருந்து பல்வேறு பிரபஞ்சங்களைத் தோற்றுவிக்கத் தொடங்கும். அப்படிப் பிரியும் பிரபஞ்சங்களில் பலவற்றில் உங்கள் பிரதி இருக்கலாம், சிலவற்றில் இல்லாமலும் போகலாம்.
இந்தத் தோற்றங்கள் நடைபெறுவதற்குத் தூண்டுதலாக இருப்பது நமது செயல்களே. நாம் ஒரே செயலுக்குப் பல்வேறு எண்ணங்களால் சிந்தனைகளைச் செய்யும்போது அந்த ஒவ்வொரு சிந்தனையையும் நிகழ வைப்பதற்கான பிரபஞ்சங்கள் தோன்றும்.
உதாரணமாக ஒரு செயலைச் செய்வதற்கு முன் அதுகுறித்து நீங்கள் எட்டு முடிவுகளைச் சிந்தித்து இறுதியில் ஒரு முடிவைத் தீர்மானித்தால், மீதி ஏழு முடிவுகளுக்காக ஏழு புதிய பிரபஞ்சங்கள் தோன்றும். ஆக அந்த எட்டுச் சிந்தனைகளுக்கான விளைவுகளையும் நீங்கள் அனுபவிப்பீர்கள்.
2009-ம் ஆண்டு குவாண்டம் இயற்பியல் விஞ்ஞானியான ராபர்ட் லான்ஸா (Robert Lanza) எழுதிய ஒரு புத்தகம் சமீபத்தில் இணையத்தில் வைரலாகி வருகிறது. படிக்க சுவராஸ்யமாக இருக்கும்.
"பயோசென்ட்ரிஸம்" - வாழ்வும் ஆன்மாவும் பிரபஞ்சத்தைப் புரிந்துகொள்வதற்கான மூலக்கூறுகள் (Biocentrism: How Life and Consciousness are the keys to understanding the nature of the Universe)" என்ற அவரது புத்தகத்தில் பேசப்பட்ட விஷயமே அதற்குக் காரணம்.

உயிரை மையமாகக் கொண்டு மானிட மூலத்தைத் தேடுவதையே பயோசென்ட்ரிஸம் என்பார்கள். குவாண்டம் விசையியல் (Quantum mechanics), இயற்பியல், வான் இயற்பியல் (Astro Physics) போன்ற துறைகளில் காட்டிய ஆர்வம் இறுதியாக அவரை பயோ சென்ட்ரிஸத்தில் கொண்டு சேர்த்துள்ளது.
சொல்லப்போனால், இந்தத் துறைகள் கூட்டாக இணைந்ததில் உருவானதுதான் இந்தப் புதிய கோட்பாடே. வாழ்வும் ஆன்மாவுமே பிரபஞ்சத்தைப் புரிந்துகொள்ள அடிப்படையென்று போதிப்பதே பயோசென்ட்ரிஸம். அதைப் பின்பற்றுபவர்களைப் பொறுத்தவரை பொருள்களாலான பிரபஞ்சத்தை உருவாக்கியது எண்ணங்களான உள்ளுணர்வுகளே.
லான்ஸாவைப் பொறுத்தவரை விண்வெளியும், காலமும் ஏதோ பொருளோ விஷயமோ இல்லை. மாறாக நமது புரிதலுக்கான அளவுகோல்கள். நாம் நம்மோடு அவற்றைக் கொண்டு செல்கிறோம், ஓட்டைச் சுமந்துகொண்டு

சுற்றும் ஆமையைப் போல. விண்வெளி, காலமென்ற ஓடுகளை அகற்றினாலும், நமது இருப்பு இருக்கவே செய்யும். என்னே வேறு பிரபஞ்சத்தில் வேறு வடிவத்தில்.
லான்ஸா கோட்பாட்டில் ஆன்மாவுக்கு இறப்பே கிடையாது என்கிறார். உடல் அழிந்தபிறகு அது வெறும் நினைவுகளாக இருக்கின்றன. மனிதர்கள் அவர்களை உடலை வைத்தே அடையாளம் கண்டுகொள்வதால்தான் அந்த நினைவுகள் தெரிவதில்லை என்கிறார்.
உடல் அழியும்போதோ அது அழிந்த பிறகோ ஆன்மாவும் அழிந்து விடுகிறதென்று மனிதர்கள் தவறாகப் புரிந்துகொண்டுள்ளனர். உடல்தான் ஆன்மாவை உருவாக்கியதென்றால் உடலோடு அதுவும் அழிந்துவிடும். ஆனால் உடல்தான் அழிகிறது.அந்த அழிவு ஆன்மாவுக்கு இல்லை என்பதை நவீன விஞ்ஞானமும் இப்போது ஒத்துக் கொண்டுள்ளது.
விண்வெளி காலம் போன்ற எல்லைகளைக் கடந்தது ஆன்மா. ஒரு உடலிலோ அல்லது அண்டவெளியிலோ, அதனால் எங்கு வேண்டுமானாலும் பிழைத்திருக்க முடியும். பல்லண்டக் கோட்பாடும் உண்மையென்று லான்ஸா நம்புகிறார்.

ஒரு பிரபஞ்சத்துக்கு அருகிலேயே மற்ற பிரபஞ்சங்களும் இருக்கின்றன. ஒரு பிரபஞ்சத்தில் உடல் அழிந்துவிட்டால் மற்றொரு பிரபஞ்சத்தில் அதைப் போலவே இருக்கும் வேறு உடலில் சென்று கலந்துவிடும். அதிலும் இறந்துவிட்டால், வேறொரு பிரபஞ்சத்திலிருக்கும் உடலில் கலந்துவிடும். இப்படியே....
சரீரத்தைக் கொண்டே சொர்க்க இன்பங்களோ.நரக துன்பங்களோ ஏற்படுகிறது. ஆனால் எந்த ஒரு ஆத்மாவையும் உடலைக் கொண்டே அல்லாஹ் தண்டிக்கிறான் காரணம் அந்த உடலைக் கொண்டே அந்த ஆத்மா கெட்ட சுகங்களான பொன்னாசை, பெண்ணாசை, மண்ணாசை போன்றவற்றில் தவழ்ந்து சீரழிந்தது. எனவேதான் அவன் அந்த ஆத்மாவை உடலைக் கொண்டு தண்டிக்கிறான்!
அவன் முதலில் படைக்கிறான். மீண்டும் படைக்கிறான்.(குர்ஆன் 85:13)

அவ்வாறில்லை! அவனது விரல் நுனிகளையும் சீராக்க நாம் ஆற்றலுடையவர்கள்.(குர்ஆன் 75:4)
அதாவது நாம் இறக்கும்போது வேறு பிரபஞ்சத்தில் வாழும் நமது பிம்பம் கேபிள் சிக்னலை ஈர்ப்பதுபோல் நமது ஆன்மாவை ஈர்த்துக்கொள்ளும். இப்படியாகத் தொடர்ச்சியாக ஒரு பாதையில் அது பயணித்துக் கொண்டேயிருக்கும். அதனால், ஆன்மாவுக்கு இறப்பு என்பதே கிடையாது என்கிறார்.
இறைவிசுவாசியான அடியான் ஒருவன் உலகத் தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டு மறுமையை எதிர்நோக்கி கொண்டிருக்கையில் (சக்கராத்தின் நேரத்தில்) சூரிய ஒளிக்கு ஒப்பான பிரகாசம் கொண்ட முகத்துடன் வானத்திலிருந்து வானவர்கள் சிலர் அவரிடம் வருவார்கள்.
இவர்கள் தங்களது சுவர்க்கத்துக்கு கபன் துணிகளிலிருந்து ஒரு கபன் துணியையும் சுவர்க்கத்தின் நறுமணத்திலிருந்து ஒரு நறுமணத்தையும் வைத்து கொண்டு அவருடைய பார்வைக்கு எட்டும் தூரமளவு அமர்ந்திருப்பார்கள்.

அப்பொழுது உயிரை கைப்பற்றும் வானவர் வந்து அவரருகில் அமர்வார். அவரை நோக்கி "நல்ல ஆத்மாவே! ஏக இறைவனுடைய மன்னிப்பை நோக்கியும் அவனுடைய திருப்தியை நோக்கியும் இந்த உடலிலிருந்து வெளியேறி விடு" என கூறுவார்.
தோல் பையிலிருந்து (அதனை வளைத்தால்) நீர் வழிந்து விழுவது போல அந்த (ஆத்மா உடலிலிருந்து இலகுவாக) வெளியேறிவிடும்.
அந்த உயிரை எடுத்தவுடன் கொஞ்சநேரம் கூட கையில் வைத்து கொள்ளாமல் அந்த கபனில் கொண்டு வந்த நறுமணத்தோடு வைத்து விடுவார்கள். (பின்பு அந்த உயிரை) அல்லாஹ்விடம் கொண்டு செல்வார்கள்)

வானவர்கள் இருக்கும் கூட்டத்திற்கு அருகாமையில் அந்த உயிரை கொண்டு போகும் போதெல்லாம் இது யாருடைய நல்ல உயிர்? என அவ்வானவர்கள் கேட்பார்கள். அதற்கு இவருக்கு சொல்லப்பட்ட நல்ல பெயரைக் கொண்டு இன்னாருடைய மகன் இன்னார் என்று சொல்லப்படும்.
இவருக்காக முதல் வானத்தை திறக்கும் படி அவ்வானவர் கூறுவார். வானம் திறக்கப்படும். இப்படி ஏழு வானம் திறக்கப்படும். அப்போது அல்லாஹ் என் அடியானுடைய செயல்களை நல்லவர்களுடைய ஏடான இல்லியீனிலே பதிவு செய்யுங்கள், பின் அந்த ஆத்மாவை மீண்டும் பூமிக்கு கொண்டு வந்து அவனுடைய கப்ரில் சேருங்கள் என்று கூறுவான்.( நூல்: அஹ்மத் 17803)
நிராகரிப்பவன் மரண வேளையை நெருங்கிவிட்டால், கருத்த முகத்துடன் சில வானவர்கள் வந்து கண் பார்வை எட்டும் தூரத்தில் அமர்ந்துவிடுவார்கள். அவர்களிடத்தில் ஒரு கம்பளி இருக்கும்.
உயிரைக் கைப்பற்றக்கூடிய மலக்கு வந்து அவனை நோக்கி "கெட்ட ஆத்மாவே! அல்லாஹ் கொடுக்க இருக்கும் இழிவை நோக்கியும் அவனுடைய கோபத்தை நோக்கியும் நீ வெளியேறி வா! " என்று கூறுவார்.
அப்பொழுது அவ்வுயிர் ஒளிந்து கொள்வதற்காக உடல் முழுவதும் ஒட ஆரம்பித்துவிடும். நனைத்த கம்பளியிலிருந்து முள் கம்பியை பிடுங்கி எடுப்பது போல் அவனுடைய உடலிலிருந்து உயிர் கைப்பற்றப்படும். கொஞ்ச நேரம் கூட (அவ்வானவர்) தன் கையில் வைக்க மாட்டார். உடனே கம்பளிதுணியில் வைத்துவிடுவார். பின்பு அந்த உயிர் முதல் வானத்திற்கு எடுத்துச் செல்லப்படும்.
இவ்வுலகில் வீசும் துர்நாற்றத்தை விட அதிகமாக துர்நாற்றம் அதிலிருந்து வீசும். பின்பு அந்த உயிரை முதல் வானத்திற்கு கொண்டு செல்வார். வானவர்கள் இருக்கும் கூட்டத்திற்கு அருகில் கொண்டு செல்கின்ற போது எவனுடைய கெட்ட உயிர்? என அங்குள்ள வானவர்கள் கேட்டார்கள். இன்னாருடைய மகன் இன்னார் என்று சொல்லப்படும்.

முதல் வானத்தை திறக்கும் படி அவ்வானவர் கேட்பார். அவனுக்காக வானம் திறக்கப்படாது என்று கூறிவிட்டு பின்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.
நமது வசனங்களைப் பொய்யெனக் கருதி, அதைப் புறக்கணிப்போருக்கு வானத்தின் வாசல்கள் திறக்கப்பட மாட்டாது. ஊசித் துவாரத்தில் ஒட்டகம் நுழையும் வரை அவர்கள் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள். இவ்வாறே குற்றவாளிகளைத் தண்டிப்போம்.(குர்ஆன் 7:40)
ஏக இறைவன் உயிரைச் சுமந்து வந்த வானவரைப் பார்த்து அவனுடைய செயல்களை பூமியின் அடிப்பாகத்திலுள்ள ஸிஜ்ஜீன் என்ற இடத்திற்கு எறியப்படும். பிறகு பின்வரும் வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.
அல்லாஹ்வுக்கு அர்ப்பணித்து, அவனுக்கு இணை கற்பிக்காதோராக (ஆகுங்கள்!) அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பவன் வானத்திலிருந்து விழுந்து பறவைகள் தூக்கிச் சென்றவனைப் போல், அல்லது காற்று தூரமான இடத்தில் கொண்டு போய் வீசிய ஒருவனைப் போல் ஆவான். (குர்ஆன் 22:31)
இவ்வாறு (கெட்டவர்களின் ஏடான) ஸிஜ்ஜீனில் அவனுடைய செயல்கள் பதியப்படும் (நூல் : அஹ்மத் 17803)
இந்தக் பயோசென்ட்ரிஸக் கோட்பாடு பல முரண்பாடுகளைக் கொண்டிருந்தாலும் இதைப் பலரும் முழுமையாக நம்புகிறார்கள். பல்லண்டக் கோட்பாடு உண்மையென்று ஏற்றுக்கொண்ட பல இயற்பியல், வானியல் விஞ்ஞானிகளும் கூட நம்புகிறார்கள்.

அவர்களைப் பொறுத்தவரை இந்த இணை உலகங்களின் இருப்பைப் பொய்யாக்கும் எந்த இயல்விதிகளும் இல்லையென்பதே இதை உறுதியாக நம்புவதற்குப் போதுமான காரணம்.
"ஒவ்வொருவரும் தத்தமது எண்ணங்களின்{வழிமுறைப்} படி செயலாற்றுகின்றனர்" {அல்குர்ஆன்:17:84}
நம் ஒவ்வொரு செயலும் ஒவ்வொரு உருவம் எடுக்கும்.

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 112
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 29)

وَ مَا الْحَيٰوةُ الدُّنْيَاۤ اِلَّا لَعِبٌ وَّلَهْوٌ وَلَـلدَّارُ الْاٰخِرَةُ خَيْرٌ لِّـلَّذِيْنَ يَتَّقُوْنَ اَفَلَا تَعْقِلُوْنَ

உலக வாழ்க்கை வீணும் விளையாட்டுமேயன்றி வேறில்லை; பயபக்தியுடையவர்களுக்கு நிச்சயமாக மறுமை வீடே மிகவும் மேலானதாகும்; நீங்கள் இதைப் புரிந்து கொள்ள வேண்டாமா?
(குர்ஆன் : 6:32)
மறுமையைப் பார்க்கினும் இம்மை மிகச் சுருக்கமாகவும். அற்பமாகவும் இருப்பதால், இவ்வுலகத்திற்கு "துன்யா" என்ற பெயர் வந்தது.
இம்மையைப் பார்க்கினும் மறுமை ஆக பிந்தி வருவதால், மறுமைக்கு "ஆகிரத்" என்ற பெயர் வந்தது.
இவ்வுலகத்தின் வாழ்வானது நிலையற்றது. விளையாடிக் கலைவது போல், அல்லது வீணாகப் பொழுது போக்குவது போல் தான் இருக்கிறது. எதுவுமே இதில் நிலைப்பதில்லை.
ஆனால் மனிதன் இந்த வீணானதற்காகவே பல பாவங்களைச் செய்கிறான். சற்று உணர்ந்து பார்த்தானாயின், இது விளையாட்டும் வீணுமேயல்லாமல் வேறில்லை என்பதை நன்கு உணர்ந்து கொள்வான். ஆயினும் இவ்வாறு உணருகிறவர்கள் தாம் மிகக் குறைவு.
அல்லாஹ்வுக்குப் பயந்து நடந்து கொள்பவர்களுக்கு இது நன்கு புலனாகிறது. நிரந்தரமான நல்வாழ்வு எதில் இருக்கிறது என்பதை அவர்கள் சீர்தூக்கிப் பார்த்து அறிந்து வைத்திருக்கின்றனர். மறுமை வீடு என்னும் நிரந்தர வாழ்வு தான் இவ்வுலக வாழ்வை விட மிகச் சிறந்ததாகும் என்பதனை நன்கறிந்த அவர்கள், அல்லாஹ் விரும்பும் பாதையில் செல்லுகின்றனர். இதனை நீங்களும் உணர்ந்து நடந்து கொள்ள வேண்டாமா? என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.
ஆனால் இவ்வுலகையே நம்பி வாழ்பவர்கள் இதற்குத் தான் முக்கியத்துவம் கொடுப்பார்கள். அதனால் விளையும் கெடுதல்களைப் பற்றி உரைப்பவர்களை மறுப்பதுடன் ஏளனம் செய்து பொய்யாக்கிக் கொண்டே இருப்பார்கள்.
அல்கபருல் குதுஸி:- "உலகமே, எனக்குத் தொண்டு செய்பவருக்கு நீ தொண்டு செய். உனக்குத் தொண்டு செய்பவருக்கு நீ கஷ்டத்தைக் கொடு" என்று அல்லாஹுத்தஆலா இவ்வுலகைப் படைத்த போது அதனிடம் கூறினான்.

பகுதாதிலுள்ள ஒரு காஜீ (நீதிபதி) மிகவும் செல்வந்தராகவும் செல்வாக்குள்ளவராகவும் இருந்தார். அங்குள்ள ஒரு யூதர் ஒருநாள் அவர் குதிரையில் ஏறிச் செல்லும் போது வழிமறித்து, அவரது குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு
"காஜியே, (நீதிபதியே) 'இவ்வுலகம் மூமின்களுக்குச் சிறைக் கூடம், காஃபிர்களுக்குச் சுவர்க்கம்" என்று ஹதீஸில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், மூமினாகிய நீர் செல்வந்தராகவும் சௌகரியமாகவும் இருக்கிறீர். நானோ தரித்திரனாகவும் கஷ்டத்துடன் வாழ்பவனாகவும் இருக்கிறேன். இந்நிலை ஹதீஸுக்கு நேர்மாறாக இருக்கிறதே. இதற்கு என்ன காரணம்" என்று கேட்டார்.
அதற்கு காஜீ (நீதிபதி ) அந்த யூதரை நோக்கி, "ஹதீஸில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை கூறியது உண்மைதான். அதற்குத் தக்கவாறே காரியமும் இருக்கிறது. மறுமையில் எனக்குக் கிடைக்கக்கூடிய பாக்கியங்களை கவனித்துப் பார்க்குமிடத்து, இவ்வுலகில் நான் அடைந்திருப்பது சிறைக் கூடமேயாகும். மறுமையில் உனக்குக் கிடைக்கக் கூடிய நரக வேதனையைக் கவனித்துப் பார்க்குமிடத்து, இவ்வுலகில் நீ இப்பொழுது அடைந்திருப்பது சுவர்க்கானந்தமே யாகும்" என்று பதில் கூறினார்.
எவரேனும், இவ்வுலக வாழ்க்கையையும், அதன் அலங்காரத்தையும் (மட்டும்) விரும்பினால், அவர்கள் செயலுக்குரிய பலனை இ(வ்வுலகத்) திலேயே நாம் முழுமையாக அவர்களுக்குக் கொடுத்திடுவோம், அதில் அவர்கள் குறைவு செய்யப்பட மாட்டார்கள்".(அல்குர்ஆன் 11: 15)

“(எனினும்) மறுமையிலோ, இத்தகையோருக்கு (நரக) நெருப்பைத் தவிர வேறொன்றுமில்லை; அவர்கள் செய்தவை யாவும் இங்கு அழிந்துவிட்டன. அவர்கள் செய்து கொண்டிருப்பவையும் வீணானவையே”.(அல்குர்ஆன் 11: 16)

**அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 113**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 30)**

قَدْ نَـعْلَمُ اِنَّهٗ لَيَحْزُنُكَ الَّذِىْ يَقُوْلُوْنَ فَاِنَّهُمْ لَا يُكَذِّبُوْنَكَ وَلٰـكِنَّ الظّٰلِمِيْنَ بِاٰيٰتِ اللّٰهِ يَجْحَدُوْنَ

(நபியே!) அவர்கள் (உம்மைப் பொய்யரெனக்) கூறுவது நிச்சயமாக உம்மைக் கவலையில் ஆழ்த்துகிறது என்பதை நாம் அறிவோம்; அவர்கள் உம்மைப் பொய்யாக்கவில்லை; ஆனால் இந்த அநியாயக்காரர்கள் அல்லாஹ்வின் வசனங்களையல்லவா மறுத்துக் கொண்டிருக்கிறார்கள். (குர்ஆன் : 6:33)

فَلَعَلَّكَ بَاخِعٌ نَّـفْسَكَ عَلٰٓى اٰثَارِهِمْ اِنْ لَّمْ يُؤْمِنُوْا بِهٰذَا الْحَـدِيْثِ اَسَفًا

(நபியே!) இந்த (வேத) அறிவிப்பில் அவர்கள் நம்பிக்கை கொள்ளாவிட்டால், அவர்களுக்காக ( வருந்தி) நீர் உம்மையே அழித்துக் கொள்வீர்கள் போலும்! (அல்குர்ஆன் : 18:6)

அலீ (ரலி ) அவர்கள் கூறியதாவது: " அபுஜஹில் நபி( ஸல் ) அவர்களிடம் நாங்கள் உம்மை பொய்யர் எனக் கூறவே இல்லை. மாறாக நீர் கொண்டு வந்துள்ள வேதம் பொய் என்று கூறுகிறோம் என்று சொன்னான் அப்போதுதான் குர்ஆன் : 6:33 வசனம் அருளப்பட்டது" நூல் : திர்மிதீ , ஹாகிம்
அபூயஸீத் அல்மதனீ (ரஹ்) அவர்கள் கூறியதாலது: ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் அபூஜஹ்லைச் சந்தித்தபோது அவனுடன் கை குலுக்கினார்கள். அப்போது ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், "இந்த விரோதியுடன் நீங்கள் கை குலுக்கியதை நான் காண்பதா?" என்று கூறினார்.
அப்போது அபூஜஹ்ல்,"அல்லாஹ்வின் மீதாணையாக! இவர் இறைத்தூதர் என்பதை நான் அறிவேன். எனினும், அப்து மனாஃபின் மக்களை நாங்கள் எப்போது பின் பற்றக்கூடியவர்களாக இருந்திருக்கிறோம்?" என்று கூறினான். பின்னர் அபூயஸீத் (ரஹ்) அவர்கள் ( குர்ஆன் 6:33 ) இந்த வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.
அபூஜஹ்லின் காழ்ப்புணர்ச்சி
ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது: ஒரு நாள் இரவு அபூஜஹ்ல், அபூசுஃப்யான், அக்னஸ் பின் ஷரீக் ஆகியோர் நபி (ஸல்) அவர்கள் குர்ஆன் ஓதுவதைச் செவியுறுவதற்காக வந்தார்கள். அம்மூவரில் எவருக்கும் மற்ற இருவர் வந்திருப்பது தெரியாது. காலை நேரம் வரை
அவர்கள் குர்ஆனைச் செவியுற்றார்கள்.

நன்றாக விடிந்தபோது பிரிந்து சென்ற அம்மூவரும் வழியில் சந்தித்துக் கொண்டனர். அப்போது நீ எதற்காக இங்கு வந்தாய்?" என்று அவர்களில் ஒவ்வொருவரும் மற்ற இருவரிடம் கேட்டனர். அவர்கள் ஒவ்வொரு வரும் மற்ற இருவரிடம் வந்த நோக்கத்தைக் கூறினார்கள்.
பின்னர் அவர்கள் இங்கு மீண்டும் வரக் கூடாது என்று ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வருவது குறைஷி இளைஞர்களுக்குத் தெரிந்தால் அவர்கள் குழப்பமடையக்கூடும் என அஞ்சி இவ்வாறு உறுதிமொழி எடுத்துக் கொண்டார்கள்.
இரண்டாம் நாள் இரவில் அவர்கள் மூவரும் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். ஏற்கெனவே ஒப்பந்தம் செய்து கொண்டதால் மற்ற நண்பர்கள் வரமாட்டார்கள் என்று ஒவ்வொரு வரும் எண்ணினார். பின்னர் விடிந்ததும் வழியில் சந்தித்துக்கொண்டனர். அப்போது ஒப்பந்தத்தை மீறியதற்காக ஒருவரையொருவர் பழித்துக்கொண்டனர். பின்னர் இனி இங்கு வரக் கூடாது என்று இரண்டாவது முறையாக உறுதி மொழி எடுத்துக்கொண்டனர்.

ஆனால், மூன்றாவது நாள் இரவிலும் அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்தனர். காலை நேரம் வந்ததும் முன்பு போலவே ஒப்பந்தம் செய்து கொண்டு பிரிந்து சென்றனர்.
இந்த மூன்றாவது நாள் காலையில் அக்னஸ் பின் ஷரீக் ஊன்றி நடப்பதற்காகத் தமது கைத்தடியை எடுத்துக்கொண்டு, அபூசுஃப்யான் பின் ஹர்பின் வீட்டிற்குச் சென்றார். அப்போது அக்னஸ், "அபூஹன்ழலா ! முஹம்மதிடம் நீங்கள் செவியுற்றது குறித்து உங்கள் கருத்து என்ன? என்று கேட்டார்.
அதற்கு அபூசுஃப்யான், "அபூ ஸஅலபா! அல்லாஹ்வின் மீது சத்திய மாக! நான் அவரிடம் செவியுற்றதில் சிலவற்றின் பொருளும் கருத்தும் எனக்குப் புரிந்தது. சிலவற்றின் பொருளும் கருத்தும் எனக்குப் புரியவில்லை" என்று பதிலளித்தார்.

"நீங்கள் சத்தியமிட்டுக் கூறியதைப் போன்றுதான் எனது நிலையும் உள்ளது" என்று அக்னஸ் கூறினார்.
பின்னர் அபூசுஃப்யானிடமிருந்து விடைபெற்று அபூஜஹ்லின் வீட்டிற்கு அக்னஸ் சென்றார். அவரிடம் "அபுல் ஹிகம்! முஹம்மதிடம் நீங்கள் செவியுற்றது குறித்து உங்கள் கருத்து என்ன?" என்று கேட்டார். அதற்கு அபூ ஜஹ்ல், "நீங்கள் எதைச் செவியுற்றீர்கள் ?" என்று கேட்டுவிட்டுச் சொன்னார்.
நாங்களும் (நபி (ஸல்) அவர்களின் பரம்பரையான) அப்து மனாஃபின் மக்களும் உயர்வுக்கு உரிமை கொண்டாடுவோம். அவர்களும் ஏழைகளுக்கு உணவளிப்பார்கள், நாங்களும் உணவளிப்போம். அவர்கள் (பிறர் சுமைகளைச்) சுமப்பார்கள், நாங்களும் சுமப்போம். அவர்கள் தர்மம் செய்வார்கள். நாங்களும் தர்மம் செய்வோம். நாங்களும் அவர்களும் சமநிலையில் இருக்கிறோம். நாங்கள் இரண்டு பந்தயக் குதிரைகளைப் போன்றவர்கள்
இந்நிலையில் அவர்கள்."எங்களில் ஓர் இறைத்தூதர் தோன்றியுள்ளார். வானிலிருந்து அவருக்கு வேத அறிவிப்பு வருகிறது" என்று கூறுகின்றனர். இச்சிறப்பை நாங்கள் எப்போது அடைய முடியும்? எனவே, அல்லாஹ்வின் மீதாணையாக! ஒருபோதும் அவரை நாங்கள் நம்பமாட்டோம்; உண்மைப்படுத்தமாட்டோம்" என்று கூறினார்.பின்னர் அக்னஸ் அவரிடமிருந்து எழுந்து சென்றுவிட்டார்.
சுத்தி ( ரஹ் ) அவர்கள் இவ்வசனத்திற்கு விளக்கமளிக்கையில் கூறியதாவது பத்ருப் போரின்போது அக்னஸ் பின் ஷரீக், பனூ ஸஹ்ரா மக்களிடம் (பின்வருமாறு) கூறினார்.
ஸஹ்ராவின் மக்களே! முஹம்மத் உங்கள் சகோதரியின் மகன் ஆவார். சகோதரியின் மகனைப் பாதுகாக்க நீங்கள்தான் மிகவும் தகுதியானவர்கள். அவர் இறைத்தூதராக இருந்தால் இன்று அவரை நீங்கள் கொல்லக் கூடாது.

அவர் பொய்யராக இருக்கும் பட்சத்தில் சகோதரர் மகனுக்கு ஏற்படும் ஆபத்தைத் தடுக்க நீங்கள்தான் மிகவும் பொருத்தமானவர்கள். நான் அபுல்ஹிகமை (அபூஜஹ்லைச்) சந்திக்கும் வரை நீங்கள் இங்கேயே இருங்கள் (போரில் கலந்து கொள்ளாதீர்கள்). முஹம்மத் தோல்வி கண்டாலும். நீங்கள் பாதுகாப்புடன் திரும்பலாம். முஹம்மத் வெற்றி பெற்றால், உங்கள் சமூகத்தாரான அவர்கள் உங்களுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்கமாட்டார்கள்.
பின்னர் அக்னஸும் அபூஜஹ்லும் சந்தித்துக்கொண்டார்கள். அப்போது அக்னஸ் அபூஜஹ்லைத் தனியாக அழைத்துச்சென்று. அபுல்ஹிகம்! இங்கே நாம் பேசுவதைக் கேட்க குறைஷியரில் என்னையும் உம்மையும் தவிர வேறு எவருமில்லை நாம் மட்டும்தான் உள்ளோம்..முஹம்மத் உண்மையானவரா பொய்யரா என்பது குறித்து என்னிடம் தெரிவியுங்கள்" என்று கேட்டார்.
அப்போது ஆஜஹ்ல், "உங்களுக்குக் கேடு உண்டாகட்டும்! அல்லாஹ்வின் மீதாணையாக! முஹம்மத் உண்மையானவர்தான். அவர் ஒருபோதும் பொய்யுரைத்ததே இல்லை. ஆயினும், ஹாஜிகளுக்குத் தண்ணீர் வினியோகித்தல். கஅபாவிற்குத் திரை அணிவித்தல், கொடி, தூதுத்துவம் ஆகிய அனைத்துச் சிறப்புகளையும்

பனூ குசை குலத்தாரான அவர்களே கொண்டு சென்றுவிட்டால், மற்ற குறைஷியருக்கு வேறு என்ன இருக்கிறது?" என்று கேட்டார்.
இது தொடர்பாகவே "அவர்கள் உம்மை -அதாவது முஹம்மத் பின் அப்தில்லாஹ்வை- பொய்யாக்க வில்லை. மாறாக, இந்த அநீதியாளர்கள் அல்லாஹ்வின் சான்றுகளையே மறுக்கின்றனர்" என்று அல்லாஹ் இவ்வசனத்தில் குறிப்பிடுகின்றான். இறைத் தூதரான முஹம்மத் (ஸல்) அவர்களே அல்லாஹ்வின் 'சான்று' ஆவார்கள். ( நூல் : தஃப்சீர் இப்னு அபீஹாத்திம் )
( நபியே!) அவர்கள் (உம்மைப் பொய்யரெனக்) கூறுவது நிச்சயமாக உம்மைக் கவலையில் ஆழ்த்துகிறது என்பதை நாம் அறிவோம்; அவர்கள் உம்மைப் பொய்யாக்கவில்லை; ஆனால் இந்த அநியாயக்காரர்கள் அல்லாஹ்வின் வசனங்களையல்லவா மறுத்துக் கொண்டிருக்கிறார்கள். (குர்ஆன் : 6:33)

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 114
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 31)

وَلَقَدْ كُذِّبَتْ رُسُلٌ مِّنْ قَبْلِكَ فَصَبَرُوْا عَلٰى مَا كُذِّبُوْا وَاُوْذُوْا حَتّٰٓى اَتٰٮهُمْ نَصْرُنَا وَلَا مُبَدِّلَ لِكَلِمٰتِ اللّٰهِ وَلَقَدْ جَآءَكَ مِنْ نَّبَاِى الْمُرْسَلِيْنَ
உமக்கு முன்னிருந்த (நம்) தூதர்களும் பொய்ப்பிக்கப்பட்டனர் அவர்களுக்கு நம் உதவி வரும்வரை, தாம் பொய்ப்பிக்கப் பட்டதையும், துன்புறுத்தப்பட்டதையும், அவர்கள் பொறுத்துக் கொண்டனர்; அல்லாஹ்வின் வாக்குகளை யாராலும் மாற்ற முடியாது; (உங்களுக்கு முன்னிருந்த) தூதர்களின் இத்தகைய ( வரலாற்றுச்) செய்திகள் உம்மிடம் வந்தேயிருக்கின்றன. (குர்ஆன் : 6:34)
இந்த ஆயத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு ஆறுதல் சொல்லப்பட்டிருக்கிறது "இதற்கு முன்னரும் பல நபிமார்கள் பொய்ப்பிக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் தங்களது சன்மார்க்க விரோதிகளால் செய்யப்பட்ட தொந்தரவுகளையும் பொய்ப்பித்தலையும் சகித்துக் கொண்டனர். இறுதியில் இறைவன் உதவி அவர்களுக்குக் கிடைத்தது என்ற வரலாறும் உண்டு
ஆகவே, பகைவர்கள் ஒழிந்தனர். இதுபோல நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் பொறுமையுடன் இருந்தால், இறைவனது உதவி கிடைக்கும். இறைவனது வாக்குறுதியை மாற்ற ஒருவராலும் முடியாது (உங்களுக்கு முன்னிருந்த) தூதர்களின் இத்தகைய ( வரலாற்றுச்) செய்திகள் உம்மிடம் வந்தேயிருக்கின்றன.
ஏன் நாம் வரலாறு படிக்க வேண்டும் ?
வரலாறு என்பது கடந்த காலத்தின் பதிவேடு. அவற்றை நாம் கவனமாக ஆராய்ந்தால் அவற்றில் இருந்து நாம் பல பாடங்களைக் கற்றுக் கொள்ளலாம்.
எழுத்தாளரும் தத்துவவாதியுமான ஜார்ஜ் ஸாந்தயானாவின் (George Santayana) ஒரு புகழ்பெற்ற மேற்கோள் நினைவுக்கு வருகிறது -
"வரலாற்றைப் படிக்காதவர்கள் அதை மீண்டும் சந்தித்தாக வேண்டுமென்பது வரலாற்றுச் சாபம்" - அவர் சொல்ல வருவது என்னவென்றால், வரலாறு போன்ற சிறந்த ஆசிரியரிடமிருந்து நாம் சரியாகப் பாடம் கற்றுக்கொள்ளவில்லையென்றால், மீண்டும் மீண்டும் செய்த தவறுகளையே செய்துவருவோம்" என்பதுதான். வரலாற்றுத் தவறுகளை நாமும் செய்யாமல் தவிர்க்கலாம். (உ-ம்)
(நெப்போலியன் செய்த அதே தவறினையே(கடுங் குளிர் காலத்தில் ரஷ்யா மீது படையெடுத்தது), ஹிட்லரும் செய்து, நெப்போலியனைப் போலவே வீழ்ச்சி அடைந்தான்.)

இந்த உலகில் ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒவ்வொரு நாடும், இனமும் மிகப்பெரும் வல்லரசாக விளங்கி, பின் மாபெரும் வீழ்ச்சி அடைந்துள்ளன.'மாற்றம் என்பதே மாறாதது' எனும் கோட்பாடு, நிலையாமை தத்துவம் போன்றவற்றை வரலாறு நமக்கு நன்கு விளக்கும்.
அறிவியலின் மகத்துவத்தை நமக்கு மனித வரலாறு அழகாக எடுத்துச் சொல்லும். (அதே நேரத்தில் அதன் தீமையையும் எடுத்துச் சொல்லும் !)

நம் முன்னோர்களின் வரலாறு, நமக்குப் பெருமையும், வலிமையும், அற உணர்வும் சேர்க்கும்.அனைத்திற்கும் மேலாக, வரலாற்றை நன்கு புரிந்து கொண்டவர்களால், எதிர்காலத்தை சிறப்பாக வடிவமைக்க முடியும்.
வரலாற்றைப் பற்றிய ஓர் இஸ்லாமிய வரலாறு :
ஹஜரத் உமர் (ரலி) அவர்களின் கட்டளைப்படி பாலஸ்தீனம் முஸ்லிம்களால் கைப்பற்றப்பட்டது. அவ்விதம் கைப்பற்றப்பட்டபோது பாலஸ்தீனத்தை ஆண்டவர்கள் ரோமானியர்கள் ஆவார்கள்.
பாலஸ்தீனத்தின் தலைநகரான ஜெருசலம் முஸ்லிம் வீரர்களால் முற்றுகையிடப் பட்டது. தலைநகர் ஜெருசலம் அவ்வளவு இலகுவாக வீழ்ந்து விடவில்லை. முற்றுகை நீடித்ததே தவிர அந்த முற்றுகையை தனது முழுபலத்துடன் எதிர்த்து நின்றது ரோம சாம்ராஜ்யத்தின் கிருத்தவப் படை.
ஆனாலும் இறுதியில், நான்கு மாதங்களுக்குப் பிறகு ஒருநாள் நடைபெற்ற ஒரு வீராவேசப் போருக்குப் பின் ஜெருசலம் வீழ்ந்தது. அன்றைய நாள் இஸ்லாமியப் படைக்குத் தலைமை தாங்கிய தளபதி அபூ உபைதா (ரலி) அவர்கள் ரோமானியப் படைகளை தன்னிடம் சரணடைந்து முஸ்லிம்களுடைய ஆட்சியை நிறுவ சம்மதிக்க வேண்டுமென்று உத்தரவிட்டார்.
அந்த நேரம் ஜெருசலத்தின் பிரதான பாதிரியாராகவும் நகரத்தின் தலைவராகவும் இருந்தவரின் பெயர் (Sophranius) சோப்ரனியூஸ் என்பவராவரார். அவர் படைத்தளபதி அபூ உபைதா (ரலி) அவர்களுக்கு ஒரு செய்தி அனுப்பினார்.
" நீங்கள் வெற்றி கொள்ளப்பட்ட ஜெருசலத்தை படைத்தளபதியான உங்களிடம் ஒப்படைக்க முடியாது. இஸ்லாமிய உலகின் கலீபாவான ஹஜரத் உமர் (ரலி) அவர்களின் முன்னிலையிலே தர முடியுமென்றும் இதற்காக கலீபா உமர் (ரலி) அவர்களை ஜெருசலத்துக்கு நேரடியாக வரச் சொல்லுங்கள் என்றும் கேட்டுக் கொண்டார்.
கலீபா உமர் (ரலி) அவர்களோ தொலைதூரத்தில் - மதீனாவில் இருந்தார்கள். இந்தத் தகவல் கலீபா உமர் (ரலி) அவர்களுக்கு அறிவிக்கப்பட்டதும் உடனே உயர்மட்ட ஆலோசனைக் குழு தலைநகர் மதீனாவில் கூடியது. அந்தக் கூட்டத்தில் ஹஜரத் அலீ (ரலி) அவர்களின் ஆலோசனையை ஏற்று கலீபா உமர் (ரலி) அவர்கள் ஜெருசலத்துக்குப் புறப்பட்டார்கள்.

பாலைவனப் பயணம் – நெடுந்தொலைவு ஆனாலும் தனது கஷ்டங்களை பொருட்படுத்தாமல் கலீபா உமர் (ரலி) அவர்கள், 'தேவை இல்லாமல் இன்னும் ஒரு சொட்டு இரத்தம் கூட சிந்துவதற்கு இடம் தர மாட்டேன்' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டு ஜெருசலம் வந்தடைந்தார்கள்.
ஜெருசலம் நகரத்தின் நுழைவாயிலில் கலீபா அவர்களுக்காக காத்திருந்த பாதிரியார், கோதுமை நிற ஒட்டகத்தில் வந்திறங்கிய அந்த மனிதரைக் கண்டதும், ஆச்சரியத்தால் வியந்து போனார். மேலே நான் குறிப்பிட்டு இருக்கிற வரலாற்றாசிரியரின் கூற்றுப்படி பனிரெண்டு இடங்களில் ஒட்டுப் போட்டுத் தைத்த மேலங்கி மற்றும் தோலறுந்த காலணியும் அணிந்து வந்த இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் கலீபா அவர்களைக் கண்டு மலைத்துப் போனார் பாதிரியார்.
பெருமானார் (ஸல்) அவர்கள் மீதும் அவரது சீடரான கலீபா உமர் (ரலி) அவர்கள் மீதும் அங்கு திரண்டிருந்த மக்களுக்கு மரியாதை கூடியது. இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் தன்னிரகற்ற மன்னரின் எளிமை, எதிரிகளை வாயடைக்கச் செய்தது. முதல் பார்வையிலேயே அந்நகர மக்களின் நெஞ்சம் கவர்ந்தார் ஹஜரத் உமர் (ரலி) அவர்கள்.

ஜெருசலம் கை மாற்றப்பட்டது. அதன் அடையாளமாக நகரத்தின் சாவி கலீபா உமர் (ரலி) அவர்களிடம் ஒப்புக் கொடுக்கப்பட்டது. அவர்கள் அந்தக் காட்சியை வர்ணிக்கும் போது நமது விழிகள் வியப்பால் விரிகின்றன. சமூக நல்லிணக்கத்துக்கான சான்று அந்தக் காட்சி.
அதாவது, பாதிரியாருடன் ஹஜரத் உமர் (ரலி) அவர்கள் அங்குள்ள கிருத்துவ தேவாலயங்களைப் பார்வையிட்டுக் கொண்டிருக்கும் பொது அசர் தொழுகைக்கான பாங்கு ஒலித்தது. தொழத் தயாரான உமர் (ரலி) அவர்களை தேவாலயத்திலேயே தொழுது கொள்ளும்படி பாதிரியார் வேண்டினார். ஆனால், கலீபா ஹஜரத் உமர் (ரலி) அவர்கள் சொன்னது என்ன தெரியுமா?

“இறைவனை நாங்கள் அவனால் படைக்கப்பட்ட எந்த இடத்தில் வேண்டுமானாலும் தொழலாம். அது உங்கள் தேவாலயமாக இருந்தாலும் சரி ஆனால், எனது செயல், எதிர்காலத்தில் ஒரு முன்மாதிரியாகி எனது தோழர்கள் உங்கள் தேவாலயத்தில் தொழுவதற்கு திரண்டு வந்துவிடக் கூடுமென்று நான் அஞ்சுகிறேன்" என்று கூறினார். கலீபா தொழுத இடம் என்று முஸ்லிம்கள் நாளைக்கு உரிமை கொண்டாடி அதனால் சிறுபான்மையினராகிய கிருத்துவர்களுக்குப் பாதிப்பு வரக்கூடாது என்று கலீபா உமர் (ரலி) அவர்கள் அன்றே கவனமாக இருந்து வேறொரு இடத்தில் தனது தொழுகையை நிறைவேற்றினார்கள்.
இன்றைய செய்தி நாளைய வரலாறு அல்லவா ?

## அறிவியல் ரீதியாக அல் குர்ஆனின் விரிவாக்கம் 115
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 32)

وَاِنْ كَانَ كَبُرَ عَلَيْكَ اِعْرَاضُهُمْ فَاِنِ اسْتَطَعْتَ اَنْ تَبْتَغِىَ نَفَقًا فِى الْاَرْضِ اَوْ سُلَّمًا فِى السَّمَآءِ فَتَاْتِيَهُمْ بِاٰيَةٍ وَلَوْ شَآءَ اللّٰهُ لَجَمَعَهُمْ عَلَى الْهُدٰى فَلَا تَكُوْنَنَّ مِنَ الْجٰهِلِيْنَ
(நபியே!) அவர்களின் புறக்கணிப்பு உமக்கு பெருங் கஷ்டமாக இருந்தால், உம்மால் முடியுமானால் பூமியில் சுரங்கம் வைத்து அல்லது வானத்திலே ஓர் ஏணி வைத்து (ஏறிச்சென்று அவர்கள் விருப்பப்படி) ஓர் ( உண்மையை ) அத்தாட்சியை அவர்களிடம் கொண்டுவாரும்; (அப்பொழுதும் அவர்கள் உம்மை நிராகரித்துக் கொண்டு தானிருப்பார்கள்.)
அன்றியும் அல்லாஹ் நாடினால் அவர்கள் அனைவரையும் நேர் வழியில் ஒன்று சேர்த்து விடுவான்; ஆகவே அறிவில்லாதவர்களில் ஒருவராக நீர் ஆகிவிடவேண்டாம். (குர்ஆன் : 6:35)
நபியே! அவர்கள் உம்மைப் புறக்கணிப்பது உமக்குப் பெரும்பாரமாக இருக்கிறது. இதனால் அவர்கள் கேட்கும் அற்புதங்களையெல்லாம் காட்டியாவது அவர்களை விசுவாசிகளாக ஆக்கி விடலாம் என நீர் கருதுகிறீர், நாம் கூறுவது என்னவென்றால்.
நீர் சக்தி பெறுவீராயின், பூமியில் ஒரு சுரங்கத்தைத் தோண்டி அதன் வழியாகச் சென்று அவர்கள் விருப்பப்படி ஓர் உண்மை அற்புதத்தை தேடியோ, அல்லது வானில் ஏறுவதற்கு ஏற்றாற்போல் ஓர் ஏணியை வைத்து அதில் ஏறிச் சென்றோ மேலிருந்து ஓர் ஆதாரத்தைக் கண்டு பிடித்தோ கொண்டு வாரும். இதனைச் சிரமம் எடுத்துக் கொண்டு வருகிறீரே என்று அவர்கள் உம்மை நம்பிவிட மாட்டார்கள். சூனியம், மாயை என்று அப்பொழுதும் உம்மை புறக்கணிக்கவே செய்வார்கள்.
ஆதலால், கவலையை விட்டொழித்து அல்லாஹ்வின் உதவியையே எதிர்பார்த்துக் கொண்டிரும். அவன் நாடினால் நேர்வழியின் மீது அவர்களை அவன் ஒன்று கூட்டிவிடுவான். அதற்குரிய காலம் எப்பொழுது என்பது அவன் ஒருவனுக்கே தெரியும்.
பொறுமையிழந்த அறிவிலிகளில் ஒருவராய் நீர் ஆகிவிட வேண்டாம். அவர்கள், எதையும் சொல்லிக் கொண்டிருக்கட்டும், உம்மைப் புறக்கணிக்கட்டும். அல்லாஹ் ஒரு குறிப்பிட்ட காலத்தில் அதற்கு ஒரு

முடிவைச்செய்து விடுவான், அதுவரை நீர் பொறுமையுடன் இருந்து அவனது கட்டளையை எடுத்துக் கூறிக் கொண்டிரும் என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.
மேற்கண்ட வசனத்தில் " ஓர் ( உண்மையை ) அத்தாட்சியை அவர்களிடம் கொண்டுவாரும்; (அப்பொழுதும் அவர்கள் உம்மை நிராகரித்துக் கொண்டுதானிருப்பார்கள்.) காரணம் உண்மை என்பது மாயை.
உண்மை என்பது மாயை ?
உண்மை என்றால் என்ன ? இந்த கேள்வியை பற்றி எப்போது சிந்தித்திருக்கிறீர்களா ? " அட...! இது என்ன அபத்தமானதொரு கேள்வி. நமக்கு கண்ணுக்கு காட்சியளிக்கும் அனைத்தும் உண்மைதானே ? நமக்கு முன்னால் நிகழும் ஒவ்வொன்றும் உண்மைதானே ?

நான் உண்மை,நீங்கள் உண்மை , சூரியன் உண்மை. சந்திரன் உண்மை என்று நீங்கள் அடிக்கிக் கொண்டேயிருப்பீர்கள்.அது தவிர்த்து உண்மை என்பதற்கு பல விதமான அர்த்தங்களையும் நீங்கள் கற்று வைத்திருக்கலாம் . அந்த உண்மைகள் எப்போதும் உண்மைதான் என்று நீங்கள் நம்புகிறீர்கள் .
ஆனால் நீங்கள் நம்பும் எதுவுமே உண்மை இல்லை என்பதுதான் உண்மையான உண்மை என்பது உங்களுக்கு தெரியுமா ? என்ன குழப்பமாக இருக்கிறதா ? சரி உண்மைகள் பற்றி கொஞ்சம் விரிவாக அறிவியல் சார்ந்து ஆய்வோம் .

கண்ணாடி உங்களைப் பார்த்திருக்கிறீர்களா ? தெரிவது 100 சதவீதம் நீங்கள்தானா ? கண்ணாடி உங்கள் முகத்தை இடம் வலமாக மாற்றி காண்பிக்கிறது. முகத்தின் வலது கண் உங்கள் இடது கண்ணாக இருக்கும் . நீங்கள் வலது கையை உயர்த்தும் போது கண்ணாடியில் தெரியும் உங்கள் உருவத்தில் இடதுகை உயர்த்தப்படும். எனவே கண்ணாடியில் பார்க்கும் உங்கள் முகத்தை உங்கள் உண்மையான முகம் என்று நினைப்பதே தவறு ! அது உண்மையல்ல.

அடுத்து நாம் ஒரு பொருளை எப்படிப் பார்க்கிறோம் என்று தெரிந்து இருக்கிறீர்களா ? ஒரு பொருளில் இருந்து வரும் ஒளி நமது கண்ணில் உள்ள லென்ஸினூடே சென்று விழித்திரையில் பிம்பமாக விழுகின்றது . எப்படி விழுகிறது தெரியுமா ? மிகச் சிறியதாகவும் தலைகீழாகவும் விழுகிறது. விழித்திரையில் விழுந்த பின்பும் பார்வை நரம்புகள் மூலம் மூளைக்கு அனுப்பப்படுகிறது. பின்னர் நமது மூளை தான் அந்த தலைகீழ் சிறிய பிம்பத்தை நிமிர்த்தி சரியான அளவு பரிமாணங்களைக் கொடுத்து , நாம் பார்க்கும் பொருள் இதுதான் என்று அறிவிக்கிறது.
வானம் நீல நிறம் என்கிறோம். உண்மையில் வானம் நீல நிறமா ? பூமியின் காற்று வளி மண்டலத்தின் ஊடாகத் சூரிய ஒளியின் எல்லா நிறமும் ஊடுருவி வர , நீல நிறம் மட்டும் அங்கே சிதறுகிறது. அதனால் வானம் நீலமாக தெரிகிறது. மேலே சென்றால் அங்கே வானம் நீல நிறமாக இருக்காது. ஒளியில்லாத வானம் நீலமாகக் காட்சியளிக்கும் .

சூரியனுக்கும் பூமிக்கும் இடையேயான தூரம் 150 மில்லியன் கிலோமீட்டர்கள். அதாவது 150,000,000 கிலோமீட்டர்கள். ஒளியின் வேகம் ஒரு நொடிக்கு 3,00,000 கிலோமீட்டர்கள். அப்படியென்றால் 150,000,000/300000=500 நொடிகள். அதாவது 500/60 =8 நிமிடங்கள், 20 நொடிகள் நேரத்தில் சூரிய ஒளி பூமியை வந்தடையும்.
4 ஒளி ஆண்டு தொலைவில் உள்ள ஒரு நட்சத்திரத்தை நீங்கள் பார்க்கும்போது அந்தப் பார்வை 4 ஆண்டுக்கு முன்னாள் உள்ள அந்த நட்சத்திரத்தின் நிலையைத்தான் பார்க்கிறீர்கள். இப்போது உள்ள நிலை அல்ல. தவிர இப்போது அந்த நட்சத்திரம் அங்கே இருக்குமா ? என்று யாராலும் சொல்ல முடியாது.

ஆக, நம் மீது படும் சூரிய ஒளி 8 நிமிடத்திற்கு முன்னாள் அதாவது கடந்த காலத்திலுள்ள ஒளியே தவிர நிகழ்காலத்தில் இந்த நொடியில் உதித்த வந்த ஒளி அல்ல. அதே மாதிரிதான் நீங்கள் இப்போது பார்க்கும் சூரியன் 8 நிமிடத்திற்கு முன்னாள் உள்ள சூரியனின் நிலையைத் தான் பார்க்கிறீர்கள்.
எனவே உண்மை என்பது நம் புலன் அறிவுக்கும் அப்பாற்பட்டும் இருக்கிறது . அந்த உண்மையை அந்த ஞானத்தை நம்மில் யாராலும் விளங்கிக் கொள்ள முடியாது. நம் புலன்களால் அறியப்படும் உண்மை என்பது முழுமையான உண்மை அல்ல. உதாரணமாக

وَمَا تِلْكَ بِيَمِيْنِكَ يٰمُوْسٰى

“மூஸாவே! உம்முடைய வலது கையில் இருப்பது என்ன?” (என்றும் அல்லாஹ் கேட்டான்.)
قَالَ هِىَ عَصَاىَ اَتَوَكَّؤُا عَلَيْهَا وَاَهُشُّ بِهَا عَلٰى غَنَمِىْ وَلِىَ فِيْهَا مَاٰرِبُ اُخْرٰى

(அதற்கவர்) “இது என்னுடைய கைத்தடி; இதன் மீது நான் சாய்ந்து கொள்வேன்; இதைக் கொண்டு என் ஆடுகளுக்கு இலைகள் பறிப்பேன் இன்னும் இதில் எனக்கு வேறு தேவைகளும் நிறைவேறுகின்றன” என்று கூறினார்.
قَالَ اَلْقِهَا يٰمُوْسٰى

அதற்கு (இறைவன்) “மூஸாவே! அதை நீர் கீழே எறியும்” என்றான்.
فَاَلْقٰٮهَا فَاِذَا هِىَ حَيَّةٌ تَسْعٰى

அவ்வாறே அவர் அதனைக் கீழே எறிந்தார்; அப்போது அது ஊர்ந்து செல்லும் ஒரு பாம்பாயிற்று.
قَالَ خُذْهَا وَلَا تَخَفْ سَنُعِيْدُهَا سِيْرَتَهَا الْاُوْلٰى

(இறைவன்) கூறினான்: “அதைப் பிடியும்; பயப்படாதீர்; உடனே நாம் அதை அதன் பழைய நிலைக்கே மீட்டுவோம்.” (அல்குர்ஆன் : 20: 17 - 21)
இப்போது நீங்கள் சொல்லுங்கள் நபி மூஸா (அலை) அவர்கள் கையில் இருந்தது கைத்தடியா ? பாம்பா ?
பதில் : அல்லாஹ் எது நாடிகிறானோ அது.
ஆகையால் எந்த உண்மை அத்தாட்சியும் எங்கிருந்தும் யாராலும் எப்போதும் கொண்டு வர முடியாது. அவன் நாடாத பட்சத்தில்...

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 116
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 33)

اِنَّمَا يَسْتَجِيْبُ الَّذِيْنَ يَسْمَعُوْنَ ؕ وَالْمَوْتٰى يَبْعَثُهُمُ اللّٰهُ ثُمَّ اِلَيْهِ يُرْجَعُوْنَ

(சத்தியத்திற்கு) செவிசாய்ப்போர் தாம் நிச்சயமாக உம் உபதேசத்தை ஏற்றுக் கொள்வார்கள்; (மற்றவர்கள் உயிரற்றவர்களைப் போன்றோரே!) இறந்தவர்களை அல்லாஹ் உயிர்ப்பித்து எழுப்புவான்; பின்னர் அவனிடமே அவர்கள் மீட்டப்படுவார்கள். (குர்ஆன் : 6:36)
சகல மக்களும் அநுசரிக்க வேண்டிய சாமானிய தர்மங்களில் முதலாவது அன்பு (அஹிம்ஸை). அடுத்தது உண்மை (சத்தியம்).
"சத்தியம்" என்றால் வாக்கும் மனசும் ஒன்றாக இருப்பதுதான்; மனசில் ஒன்றும் வாக்கில் வேறொன்றுமாக இருந்தால், அதுவே அசத்தியம் என்று பெரியவர்கள் லட்சணம் சொல்லியிருக்கிறார்கள்.
மனத்தில் உள்ளதை வெளியிட்டுச் சொல்வதற்கென்றே பகவான் மனிதனுக்குப் பேசும் சக்தியைத் தந்திருக்கிறார். மனத்தில் ஒன்றும் வாக்கில் வேறொன்றுமாக நாம் நடந்து கொண்டோமானால் அடுத்து உயிர்பிக்கும்போது, நமக்குக் கொடுத்த பேச்சுத் சக்தியைப் பறித்துக் கொண்டு விடுவார். அதாவது மிருகமாக ஆக்குவார என்கிறது ஹிந்து சாஸ்திரம்.

ஆனால் குர்ஆனோ ஒரு படி மேலே போய் சத்தியத்திற்கு செவி சாய்ப்போர் உயிருள்ளவர் என்றும், சத்தியத்தை மீறி அசத்தியவாதிகளை உயிரற்றவர்கள். அதாவது பிணம் என்கிறது.

மேற்கண்ட வசனத்தில் "அல்மௌத்தா" அதாவது மரணித்தவர்கள் என்பது இறை நிராகரிப்பாளர்களைக் குறிக்கும். மரணித்தவர்களுக்கு காது கேட்காதது போல இறை நிராகரிப்பவர்களுக்கும் சன்மார்க்க அழைப்பு காதில் விழுவது இல்லை. அதனால் நிராகரிப்பாளர்கள் மரணித்தவர்களுக்கு ஒப்பாக கூறப்பட்டிருக்கிறார்கள்.

கடவுள் இருக்கிறாரா? என்பது தொடர்பாக ஒரு ஆசிரியருக்கும்,

மாணவருக்கும் உண்மையாக நடந்த விவாதம்:

நிராகரிப்பவரான (நாத்திகவாதியான) ஒரு தத்துவப் பேராசிரியர் கடவுளின் இருப்பைப் பற்றி வகுப்பறையில் விளக்கிக் கொண்டிருந்தார்.

கடவுளை அறிவியல் ஆணித்தரமாக மறுப்பதைப் பற்றிய பேசிய அவர் ஒரு மாணவரை எழுப்பி கேள்வி கேட்கலானார்.

"நீ கடவுள் இருப்பதாக நம்புகிறாயா?"

'நிச்சயமாக ஐயா' மாணவன் சொன்னான்.

'கடவுள் நல்லவரா?'

''ஆம் ஐயா'

'கடவுள் அளப்பரிய சக்தி படைத்தவரா?'

'ஆம்'

'என்னுடைய சகோதரர் புற்றுநோய் காராணமாக இறந்துவிட்டார். தன்னைக் காப்பாற்ற கடவுளிடம் அவர் மனமுருகிப் பிரார்த்தனை செய்தபோதும் கடவுள் கைவிட்டு விட்டார்.

நாம் எல்லோருமே நோய் வாய்ப்பட்டோர்களுக்கு நம்மால் இயன்ற உதவியைச் செய்கிறோம். ஆனால் கடவுள் அவர்களைக் காப்பாற்றுவதில்லை. பின் எப்படிச் கடவுள் இருக்கின்றார் எனச்சொல்கிறாய்?

(மாணவர் அமைதியாய் இருக்கிறார்)

'உன்னால் பதில் சொல்ல முடியவில்லை. இல்லையா?'

'சரி..நாம் மீண்டும் ஆரம்பிப்போம்'

'கடவுள் நல்லவரா?'

'ஆம் ஐயா'

'சாத்தான் நல்லவரா?'

'இல்லை'

'எல்லாரும் கடவுள் படைப்புதான் என்றால் சாத்தான் எங்கிருந்து வந்தார்'?

கடவுளிடமிருந்துதான்'

'சரி இந்த உலகத்தில் கெட்டவை இருக்கின்றனவா'?

'ஆம்'

'அப்படியனெ;றால் அவற்றை உருவாக்கியது யார்'?

(மாணவர் பதில் சொல்லவில்லை)

'இவ்வுலகதில் பசி இருக்கிறது, பஞ்சம் இருக்கிறது, மூடநம்பிக்கைகள் இருக்கின்றன. இவையெல்லாம் எங்கேயிருந்து வந்தன?'

(மாணவர் மௌனமாய் நிற்கிறார்)

விஷயங்களைச் சரியாகப் புரிந்து கொள்வதற்கு நமக்கு ஐம்புலன்கள் இருக்கின்றன என்று அறிவியல் சொல்கிறது. இப்போது சொல், கடவுளை கண்ணால் கண்டிருக்கிறாயா? அவர் பேசுவதைக் காதால் கேட்டிருக்கிறாயா? அல்லது கடவுளின் வாசனையை நுகர்ந்திருக்கிறாயா? வேறு எப்படித்தான் அவரது இருப்பை உணர்ந்திருக்கிறாய்?'

(மாணவர் மௌனம்)
'ஆனாலும் நீ கடவுளை நம்புகிறாய். அப்படித்தானே?'
'ஆம் ஐயா'
'நம் நடைமுறை வாழ்க்கையிலும் சரி. பரிசோதிக்கத் தக்க வகைகளிலும் சரி. ஆதாரங்களுடன் விளக்கக்கூடிய வழிமுறைகளிலும் சரி. எல்லாவற்றிலுமே அறிவியல் சொல்கிறது. கடவுள் இல்லை என்று இதற்கு நீ என்ன பதில் சொல்லப் போகிறாய்?'
'ஒன்றுமேயில்லை, எனக்கு நம்பிக்கை மட்டுமே உள்ளது'
'ஹம்ம்...நம்பிக்கை...அதுதான் இப்போது பிரச்சனையே...'என்று
ஆசிரியர் பெருமூச்செறிகிறார்.
(இப்போது மாணவர் தன் வாதத்தை ஆரம்பிக்கிறார்)
'ஐயா...வெப்பம் அல்லது சூடு என்ற ஒன்று உள்ளதா?'
'நிச்சயமாக உள்ளது.'
'அதே போல் குளிர் என்ற ஒன்றும் உள்ளதா?'
'நிச்சயமாக.'
'இல்லை ஐயா, நிச்சயமாக குளிர் என்ற ஒன்று இல்லை.'
(வகுப்பறையில் நிசப்தத்தில் ஆழ்கிறது)
'ஐயா...வெப்பத்தில் பல வகைகள் உள்ளன. ஒவ்வொரு நிலை வெப்பத்திற்கும் ஒவ்வொரு பெயர் உள்ளது. மனித உடல் தாங்குவதற்கு ஒரு குறிப்பிட்ட வெப்ப நிலையும், தண்ணீர் ஆவியாவதற்கு ஒரு வெப்ப நிலையும், இரும்பு குழம்பாவதற்கு ஒரு வெப்பநிலையும் இருக்கின்றன.
ஆனால், இதுபோல குளிரை அளக்க முடியுமா? வெப்பம் என்பது ஓர் ஆற்றல். குளிர் என்பது வெப்பத்திற்கு எதிர்பதம் அல்ல. வெப்பம் எனும் ஆற்றலின் இல்லாமையே குளிர் என்பது .
வெப்பம் இல்லை என்பதைத்தான் குளிர் என்று சொல்கிறோம். பூஜ்யம் டிகிரியும் குளிர்தான். பூஜ்யத்திற்குக் கீழே – 240 டிகிரியும் குளிர்தான். இரண்டிற்கும் வித்தியாசம் கிடையாது.
(குண்டுசி விழும் சப்தம்கூட கேட்குமளவிற்கு அமைதியாயிருக்கிறது வகுப்பறை)
'சரி, இருட்டென்றால் என்னவென்று சொல்லுங்கள் ஐயா, அப்படி ஒன்று உண்மையிலேயே இருக்கிறதா?'
'ஆமாம் தம்பி, இரவில் இருட்டாகத்தானே இருக்கிறது.'
'நீங்கள் மறுபடியும் தவறாகக் கூறுகிறீர்கள் ஐயா, இருட்டு என்பதே வெளிச்சத்தின் இல்லாமைதான்.
நீங்கள் வெளிச்சத்தை அளக்க முடியும். குறைந்த ஒளி, நிறைந்த ஒளி, கண்ணை கூச்ச செய்யும் ஒளி என பற்பல வகைகளில் வெளிச்சத்தைப் பிரிக்க முடியும். அளக்கவும் முடியும்.
ஆனால் ஒளி என்பதே இல்லாவிட்டால் அதற்குப் பெயர்தான் இருட்டு. அதை அளக்க முடியாது, இல்லையா?'
'சரி தம்பி, நீ என்னதான் கூற வருகிறாய்?'
'ஐயா...நான் கூறுகிறேன்,
கடவுளைப்பற்றிய உங்கள் கருத்து பிழையானது.'
'பிழையா? எப்படி என்று விளக்கிக் கூற முடியுமா?'
'ஐயா, நீங்கள் எதிலுமே இரட்டை நிலைப்பாடு கொண்டிருக்கிறீர்கள்.
ஒன்று இருந்தால், அதற்கு எதிரிடையான ஒன்றும் இருக்கிறது என்பது உங்கள் வாதம்.
உதாரணத்திற்கு நல்ல கடவுள், கெட்ட கடவுள், இருட்டு – வெளிச்சம், வெப்பம் - குளிர். நீங்கள் கடவுள் என்பவருக்கு ஒரு முடிவு அல்லது எல்லை என்ற ஒன்று உண்டு என்பதாகக் கருதுகிறீர்கள்.
அதை நம்மால் அளக்க முடியவேண்டும் எனவும் வாதிடுகிறீர்கள். அறிவியல் மூலம் எண்ணங்கள் எப்படி உருவாகின்றன என்பதை உங்களால் விளக்க முடியாது.
எண்ணங்கள் உருவாவதே உடலினுள் கலக்கும் மின் மற்றும் காந்தத் தூண்டல்களினால்தான்.

மின்சாரத்தை அளக்க முடிந்த உங்களால் காந்தத் தன்மையை விவரிக்க முடிந்த உங்களால் எண்ணங்களின் தோற்றத்தை அளக்க முடியவில்லை.
இறப்பு என்பதை வாழ்வதின் எதிர்பதமாகக் கருதுகிரீர்கள்
உண்மையில் 'வாழ்வு இனி இல்லை' என்ற தன்மையே இறப்பு என்பதை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை.
சரி, இப்பொழுது சொல்லுங்கள் ஐயா,
குரங்கிலிருந்து மனிதன் உருவானான் என்கிறீர்களா?' – கேட்டான் மாணவன்
இயற்கையான பரிணாம வளர்ச்சியைப் பற்றி நாம் பேசுவோமோனால், ஆம் அதுதான் உண்மை, குரங்கிலிருந்து மனிதன் உருவானான்' பேராசிரியர் பதிலுரைத்தார்.
'உங்கள் கண்களால் மனிதப் பரிணாம வளர்ச்சியை கண்டிருக்கிறீர்களா– மடக்கினான் மாணவன்.
(பேராசிரியர் தன் தலையை இல்லை தன் தலையை இல்லை என அசைத்தவாறே, புன்முறுவல் பூக்கலானார், விவாதம் செல்லும் போக்கை அறிந்தவராய்)
மாணவன் தொடர்ந்தான், 'அப்படியென்றால். யாருமே மனிதப் பரிணாம வளர்ச்சியை தத்தமது கண்களால் கண்டதில்லை. எல்லாமே ஒரு வகையான அனுமானம்தான்.
இன்னும் சரியாகச் சொல்லப்போனால் குரங்கிலிருந்து மனிதன் உருவானான் என்பது உங்கள் கருத்து. அதை நிரூபிப்பதற்கு உங்களிடம் ஆதாரம் ஏதுமில்லை என்பதே உண்மை. சரி, உலகில் இதுவரை எந்த ஒரு குரங்காவது மனித பரிணாமம் அடைந்திருப்பதை அறிவியல் அடையாளம் காட்டியிருக்கிறதா ? இல்லை.
உங்களுக்குச் சரியெனப்படும் ஒன்றை எங்களுக்கு போதிக்கிறீர்கள் இல்லையா? அப்படியானால், நீங்கள் ஒரு விஞ்ஞானியா அல்லது போதகரா?
(மாணவர்கள் சீட்டின் நுனிக்கே வந்து விடுகிறார்கள்)
'இங்கே யாராவது நம் பேராசிரியரின் மூளையைப் பார்த்திருக்கிறீர்களா?'
(வகுப்பறை கொல்லெனச் சிரிப்பொலியால் அதிர்கிறது)
'மாணவர்களே யாரவாது நமது பேராசிரியரின் மூளையைத் தொட்டுப் பார்த்திருக்கிறீர்களா? அது இருக்கிறதென உணர்ந்திருக்கிறீர்களா? அதன் வாசனையாவது நுகர்ந்திருக்கிறீர்களா?
உங்கள் ஐம்புலன்களும் நமது பேராசிரியரின் மூளையை தொட்டதோ, பார்த்ததோ, நுகர்ந்ததோ இல்லை அல்லவா, அப்படியென்றால் நம் நடைமுறை வாழ்க்கையிலும் சரி, பரிசோதிக்கத்தக்க வகைகளிலும் சரி, ஆதாரங்களுடன் விளக்கக்கூடிய வழிமுறைகளிலும் சரி, எல்லாவற்றிலுமே அறிவியல் சொல்கிறது, உங்களுக்கு மூளை இல்லை! என்று.
மூளையே இல்லாத நீங்கள் நடத்தும் பாடங்களை நாங்கள் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும் ஐயா?
(மாணவரின் சரமாரிக் கேள்விகளால் வகுப்பறையில் அமைதி நிலவுகிறது. ஆசிரியரின் முகமோ வெளிறிப் போகிறது)
'நீ எனக்கு மூளை இருக்கிறதென நம்பித்தான் ஆகவேண்டும் தம்பி' என்றார் பேராசிரியர்.
'அதுதான் ஐயா...இவ்வளவு நேரம் நான் சொல்ல வந்தது. பார்க்க முடியவில்லை என்றாலும், தொடமுடியவில்லை என்றாலும் உணர முடிந்த கடவுளை நம்பித்தான் ஆகவேண்டும்.
மனிதனையும் கடவுளையும் இணைக்கும் ஊடகத்தின் பெயர்தான் நம்பிக்கை (ஈமான்) என்பது.இதுதான் உலகத்தில் சகலமானவற்றையும் இயங்கிக்கொண்டிருப்பது. நம்பிக்கை இல்லையேல் வாழ்க்கை இல்லை'
இவ்வாறாக விவாதம் நிறைவுற்றது. இது ஒரு உண்மைச் சம்பவம்!
இறுதி வரை பின்வாங்காமல் விவாதித்த அந்த மாணவர், வேறு யாருமல்ல.
ஏ.பி.ஜெ.அப்துல் கலாம் -நமது முன்னாள் குடியரசுத்தலைவர்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 117**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 34)**

وَ قَالُوْا لَوْلَا نُزِّلَ عَلَيْهِ اٰيَةٌ مِّنْ رَّبِّهٖ قُلْ اِنَّ اللّٰهَ قَادِرٌ عَلٰٓى اَنْ يُّنَزِّلَ اٰيَةً وَّلٰـكِنَّ اَكْثَرَهُمْ لَا يَعْلَمُوْنَ

(நமது விருப்பம் போல்) ஓர் அத்தாட்சி அவருடைய இறைவனிடமிருந்து அவர் மீது இறக்கப்பட வேண்டாமா? என்று அவர்கள் கேட்கிறார்கள்;

(நபியே!) நீர் கூறும்: “நிச்சயமாக அல்லாஹ் (அத்தகைய) ஓர் அத்தாட்சியை இறக்கி வைக்க வல்லமையுடையவனே; எனினும் அவர்களில் பெரும்பாலோர் அதை அறிந்து கொள்வதில்லை”

(குர்ஆன் : 6:37)

நிமிடத்திற்கு நிமிடம் எதையாவது கேட்டுக்கொண்டிருப்பதே இஸ்லாமிய விரோதிகளின் கொள்கைகளாக இருந்தது.

நபி மூஸா (அலை), நபி ஸாலிஹ் (அலை), நபி ஈஸா ( அலை ) ஆகியோர்களுக்கு அஸா என்னும் தடி , ஒட்டகம், மாயிதா என்னும் உணவுத்தட்டு ஆகியவைகள் அந்தந்த நபிமார்களுக்கு நபித்துவத்திற்கு அடையாளமாக இறக்கி வைக்கப்பட்டது போல் நபி (ஸல்) அவர்களுக்கும் ஓர் அத்தாட்சி இறக்கி வைக்கப்படலாகாதா ? என்று குறைஷித் தலைவர்கள் கூறுகிறார்கள்.

எத்தனையோ ஆதாரங்கள் வந்துவிட்டன. அவர்கள் கேட்டுக் கொண்ட அற்புதங்களும் நடத்திக் காண்பிக்கப்பட்டன. அவற்றைக் கண்டதும் வாக்களித்தபடி விசுவாசம் கொண்டு விட்டனரா? இல்லவேயில்லை.

وَقَالُوْا لَنْ نُّـؤْمِنَ لَـكَ حَتّٰى تَفْجُرَ لَنَا مِنَ الْاَرْضِ يَنْبُوْعًا ۙ

இன்னும், அவர்கள் கூறுகிறார்கள்: “நீர் எங்களுக்காகப் பூமியிலிருந்து ஒரு நீர் ஊற்றைப் பீறிட்டு வரும்படி செய்யும் வரையில், உம் மீது நாங்கள் நம்பிக்கை கொள்ள மாட்டோம். (குர்ஆன் : 17:90)

இதனால் சில பொருத்தமற்ற கேள்விகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவ்வாறு எழுந்த கேள்விகளுள் ஒன்று தான் (6 : 37) இவ்வசனத்திலும் கூறப்படுகிறது.அல்லாஹ்வுக்கு அவ்வாறு இறக்கியருள சக்தி இல்லை என்று நினைத்துக் கேட்கின்றனரா?

இப்படித்தான் ஸமூது மக்கள் கேட்னர் என்பதாக குர்ஆனில்,

وَمَا مَنَعَنَاۤ اَنْ نُّرْسِلَ بِالْاٰيٰتِ اِلَّاۤ اَنْ كَذَّبَ بِهَا الْاَوَّلُوْنَ وَاٰتَيْنَا ثَمُوْدَ النَّاقَةَ مُبْصِرَةً فَظَلَمُوْا بِهَا وَمَا نُرْسِلُ بِالْاٰيٰتِ اِلَّا تَخْوِيْفًا

(நம்முடைய அத்தாட்சிகளை இவர்களுக்கு) முந்தியவர்களும் பொய்ப்பித்ததைத் தவிர (வேறு எதுவும் இவர்கள் கோரும்) அத்தாட்சிகளை அனுப்ப நம்மைத் தடுக்கவில்லை; (இதற்கு முன்) நாம் “ஸமூது” கூட்டத்தாருக்கு ஒரு பெண் ஒட்டகத்தைக் கண்கூடான அத்தாட்சியாகக் கொடுத்திருந்தோம்; அவர்களோ (வரம்பு மீறி) அதற்கு அநியாயம் செய்தனர்; (மக்களை) அச்சமூட்டி எச்சரிப்பதற்காவே அன்றி நாம் (இத்தகைய) அத்தாட்சிகளை அனுப்புவதில்லை.(குர்ஆன் : 17:59)

அப்படியாயின், அல்லாஹ் அத்தகைய ஆதாரத்தை இறக்கி வைக்க சக்தியுடையவனே தான். ஆனால் அதனைக் கண்ட பின்பு அவர்கள் விசுவாசம் கொள்ளா விட்டால் மிகக்கொடிய வேதனையால் அவர்களை அவன் தண்டித்து விடுவதற்குச் சம்மதிக்கின்றனரா என்று கேளும்.

اِنْ نَّشَاْ نُنَزِّلْ عَلَيْهِمْ مِّنَ السَّمَآءِ اٰيَةً فَظَلَّتْ اَعْنَاقُهُمْ لَهَا خٰضِعِيْنَ'

நாம் நாடினால் வானிலிருந்து ஓர் அத்தாட்சியை அவர்களுக்கு இறக்க முடியும். அப்போது அவர்களின் கழுத்துகள் அதற்கு பணிந்தவைகளாக மாறிவிடும் (குர்ஆன் : 26:4)

அவன் அவர்கள்மீது நடவடிக்கை எடுக்க ஆரம்பித்து விட்டால் அதில் இருந்து அவர்கள் தங்களைத் தற்காத்துக் கொள்ள முடியுமா? முடியவே முடியாது. இங்ஙனம் இருக்க, ஆதாரம் எங்கே என அனாவசியமாகக் கேட்கின்றனர். சற்று சிந்தித்துப் பார்த்திருப்பார்களாயின் இப்படி யெல்லாம் கேட்க மாட்டார்கள் அவர்களில் அநேகர் இதனை அறிவதில்லை.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 118
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 35)

وَمَا مِنْ دَآبَّةٍ فِى الْاَرْضِ وَلَا طٰٓـِٕرٍ يَّطِيْرُ بِجَنَاحَيْهِ اِلَّاۤ اُمَمٌ اَمْثَالُـكُمْ‌ؕ مَا فَرَّطْنَا فِى الْـكِتٰبِ مِنْ شَىْءٍ‌ ثُمَّ اِلٰى رَبِّهِمْ يُحْشَرُوْنَ

பூமியில் ஊர்ந்து திரியும் பிராணிகளும், தம் இரு இறக்கைகளால் பறக்கும் பறவைகளும் உங்களைப் போன்ற இனமேயன்றி வேறில்லை; (இவற்றில்) எதையும் (நம் பதிவுப்) புத்தகத்தில் நாம் குறிப்பிடாமல் விட்டு விடவில்லை; இன்னும் அவை யாவும் அவற்றின் இறைவனிடம் ஒன்றுசேர்க்கப்படும். (குர்ஆன் : 6:38)

படைப்பினங்கள் அனைத்துக்கும் மூலம் - ஒரே இறைவனே!

(Unity of Origin / Unity of Creation)

Universal Laws of the Quran : குர்ஆன் கூறுவது

இறைவனின் வழிமுறைகளைக் குறித்திடும் "இறை நியதிகளுள்" முதன்மையானது - எல்லாப் படைப்பினங்களையும் படைத்தவன் அந்த இறைவன் ஒருவனே என்பது தான்!

சில திருமறை வசனங்களைப் பார்ப்போம்:

"அவன்தான் அல்லாஹ் - உங்கள் இறைவன்; அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை; எல்லாப் பொருட்களின் படைப்பாளன் அவனே ஆவான்; ஆகவே, அவனையே வழிபடுங்கள் - இன்னும் அவனே எல்லாக் காரியங்களையும் கண்காணிப்பவன்." (குர்ஆன் 6:102)

"..அவர்கள் இணையாக்கிக் கொண்டிருக்கும் (தெய்வங்கள்) அல்லாஹ் படைத்திருப்பதைப் போல் எதையும் படைத்திருக்கின்றனவா? (அப்படியிருந்தால் இது யார்) படைப்பு என்று அவர்களுக்குக் குழப்பம் ஏற்பட்டிருக்கலாம்!" (நபியே! நீர்) கூறும்: "அல்லாஹ்வே எல்லாப் பொருட்களையும் படைக்கிறவன்; அவன் ஒருவனே; (அனைத்தையும்) அடக்கி ஆள்பவன்" என்று.(குர்ஆன்13:16)

அல்லாஹ்தான் அனைத்துப் பொருட்களையும் படைப்பவன்; இன்னும், அவனே எல்லாப் பொருட்களின் பாதுகாவலனுமாவான். (குர்ஆன் : 39:62)

அவன் தான் உங்கள் அல்லாஹ் - உங்கள் இறைவன் - எல்லாப் பொருட்களையும் படைப்பவன் - அவனைத் தவிர வேறு நாயனில்லை; எனவே நீங்கள் (சத்தியத்தை விட்டும்) எங்கு திருப்பப்படுகிறீர்கள்?
(குர்ஆன் : 40:62)

எல்லாவற்றையும் படைத்தவன் அந்த ஒரே இறைவன் தான் என்பது - நமக்கெல்லாம் உணர்த்துகின்ற பாடம் என்ன தெரியுமா?

படைப்பினங்கள் அனைத்துமே ஒன்றோடொன்று "இணைக்கப்பட்டிருக்கின்றன"என்கின்ற மகத்தான உண்மைதான் அந்தப்பாடம்! - Yes, all the creations of God are connected together!

ஒரு எளிமையான உதாரணம் கொண்டு இதனை நாம் புரிந்து கொள்வோம். ஒரு தாய் பல குழந்தைகளைப் பெற்றெடுக்கிறாள். அந்த ஒரே தாய் பெற்றெடுத்த அனைத்துக் குழந்தைகளுமே - சகோதரன் சகோதரிகளாக ஆகி விடுகிறார்கள் அல்லவா? ஆம்! சகோதரத்துவம் எனும் ஒன்று அவர்கள் அனைவரையும் ஒன்றிணைத்து விடுகிறது தானே?

அது போலத்தான்! இறைவனின் படைப்பினங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியே பிரித்துப் பார்த்திட முடியாத அளவுக்கு அவை அனைத்தும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைக்கப்பட்டிருக்கின்றன!

மற்ற படைப்பினங்களும் மனித இனத்தைப் போலவே அதனதன் அளவில் சமூகங்கள் தாம் என்கிறது திருமறை.இதைத்தான் மேற்கண்ட வசனம் (குர்ஆன் 6:38)

அது மட்டுமல்ல! எல்லாவற்றின் படைப்பாளன் இறைவன் தான் என்ற முறையில், ஒவ்வொரு படைப்பினமும் இறைவனோடும் இணைந்திருக்கின்றன! எவ்வாறு?

1) படைப்பினங்கள் அனைத்தும் இறைவனுக்கே சிரம் பணிகின்றன!
வானங்களிலுள்ளவையும், பூமியிலுள்ளவையும் - ஜீவராசிகளும், மலக்குகளும் அல்லாஹ்வுக்கே ஸுஜூது செய்து (சிரம் பணிந்து) வணங்குகின்றன. அவர்கள் பெருமையடிப்பதில்லை. (குர்ஆன் 16:49)

2) படைப்பினங்கள் அனைத்தும் இறைவனைத் துதித்து தஸ்பீஹ் செய்கின்றன!
ஏழு வானங்களும், பூமியும், அவற்றில் உள்ளவர்களும் அவனைத் துதி செய்து கொண்டிருக்கின்றனர்; இன்னும் அவன் புகழைக் கொண்டு துதி செய்யாத பொருள் (எதுவும்) இல்லை. எனினும் அவற்றின் துதி செய்வதை நீங்கள் உணர்ந்து கொள்ளமாட்டீர்கள், (குர்ஆன் 17:44)

3) படைப்பினங்கள் அனைத்தின் "மார்க்கம்" இஸ்லாம் தான்!
படைப்பினங்கள் அனைத்தும், இறைவனுக்கே அடிபணிகின்றன எனும் அடிப்படையில், அவை அனைத்தின் "மார்க்கம்" இஸ்லாம் தான்! அதாவது - படைத்த இறைவனுக்கு அடிபணிந்து விடுகின்ற மார்க்கம் தான் அனைத்துப் படைப்பினங்களின் மார்க்கமாகும் என்பதை குர்ஆன்
அல்லாஹ்வின் மார்க்கத்தைவிட்டு (வேறு மார்க்கத்தையா) அவர்கள் தேடுகிறார்கள்? வானங்களிலும் பூமியிலும் உள்ள (அனைத்துப் படைப்புகளும்) விரும்பியோ அல்லது வெறுத்தோ அவனுக்கே சரணடைகின்றன; மேலும் (அவை எல்லாம்) அவனிடமே மீண்டும் கொண்டு வரப்படும். (குர்ஆன் 3: 83)
இன்னொன்றையும் நாம் கவனித்திட வேண்டும். அதாவது - மற்ற படைப்பினங்களுக்கும் நம்மைப் போன்றே "உணர்வுகளும்" ''சுய உணர்வும்'' இருக்கின்றன!
தாவரங்களை இங்கே உதாரணமாக எடுத்துக் கொள்வோம். தாவரங்களுக்கும் சுய உணர்வு (Conscience) உண்டு! தாவரங்களுக்கும், மகிழ்ச்சி, கவலை எல்லாம் இருக்கின்றன!
இன்னும், நீங்கள (தரிசாய்க் கிடக்கும்) வரண்ட பூமியைப் பார்க்கின்றீர்கள்; அதன் மீது நாம் (மழை) நீரைப் பெய்யச் செய்வோமானால்,அது பசுமையாகி, வளர்ந்து, அழகான (ஜோடி ஜோடியாகப்) பலவகைப் புற்பூண்டுகளை முளைப்பிக்கிறது.(குர்ஆன் 22:5)
அரபி மூலத்தில் "ஸவ்ஜின் பஹீஜ்" (Zawjin Baheej) - என்ற சொற்றொடர் வருகின்றது! இதனை "அழகான ஜோடி" என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளது! ஆனால், ஆங்கிலத்தில் Happy couple என்றும் மொழிபெயர்க்கிறார்கள்!
அது போலவே - தாவரங்களின் கவலையைக் குறித்தும் திருமறை எடுத்துச் சொல்கிறது!
(ஒரே விதமான மழையைக் கொண்டே) வளமான பூமி தன் இறைவன் கட்டளையைக் கொண்டு (செழுமையாகப்) பயிர் (பச்சை)களை வெளிப்படுத்துகிறது;ஆனால் கெட்ட களர் நிலம் சொற்பமான விளைச்சலையே வெளிப்படுத்துகிறது; நன்றி செலுத்தும் மக்களுக்கு இவ்வாறே நாம் வசனங்களை விவரிக்கின்றோம்.
(குர்ஆன் 7:58)

இந்த வசனத்தில் - களர் நிலம் ஒன்றிலிருந்து வெளிப்படும் தாவரம் - கவலையை வெளிப்படுத்துகிறது என்பதைக் குறித்திட "நகிதா" என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது! நகிதா என்பதனை - they come out miserably - என்று ஆங்கிலத்தில் குறிக்கின்றார்கள்!
இந்தப் பார்வை கொண்டு வரும் மாற்றங்கள்:
திருமறை குர்ஆன் கற்றுத்தரும் - ''படைப்பினங்கள் அனைத்துக்கும் மூலம் - ஒரே இறைவனே!" என்ற இந்த இறை நியதியையும், படைப்பினங்கள் அனைத்துமே ஒன்றோடொன்று "இணைக்கப்பட்டிருக்கின்றன" என்கின்ற இந்த ஒரு பார்வையும், - நம்மைச் சுற்றியுள்ள "உலகத்தை" நாம் பார்க்கும் பார்வையை அப்படியே புரட்டிப் போட வல்லது!
தலையை உயர்த்தி வானத்தைப் பார்க்கிறீர்கள். எல்லையில்லாத விண்வெளி நம் இறைவன் படைத்தது. ஆம்! வானமும் நாமும் இணைக்கப் பட்டிருக்கின்றோம்!

சூரியனும் சந்திரனும் விண்மீன்களும் நம் இறைவன் படைத்தவை தான்! ஆம்! நாம் அனைவருமே சூரியனுடனும், சந்திரனுடனும், விண்மீன்களுடனும் பிணைக்கப் பட்டிருக்கின்றோம்.
இவ்வாறே - நாம் பூமியுடனும், காடு, மலைகளுடனும், தாவரங்கள் மற்றும் மிருகங்களுடனும், இன்னும் ஏன் - புழு பூச்சிகளுடனும் கூட நான் இணைக்கப் பட்டிருக்கின்றோம் தான்! வியப்பாக இல்லை ?
எல்லாப் படைப்புகளையும் ஓர் ஒழுங்கமைவுக்குள் இணைத்து வைக்கப்பட்டிருப்பது ஓர் இறை நியதி! இறை நியதிகளுள் எந்த ஒன்றுமே மாறாதது என்பதை நாம் முன்னரே பார்த்தோம். எனவே இந்த இணைப்பும் ஓர் இறை நியதி தான்!
அப்படியானால், நமது பொறுப்பு என்ன? படைப்பினங்களுக்குள் இருக்கின்ற இந்த இணைப்பை நாம் உடைத்து விடக்கூடாது என்பது தான் - நாம் கற்றுக் கொள்ள வேண்டிய மிக முக்கியமான பாடம்! ஏற்றுச் செயல்படுத்த வேண்டிய மகத்தானதொரு பொறுப்பு!
குடும்ப உறவுகளோடு சேர்ந்து வாழுங்கள் என்கிறது நபிமொழி!
கணவன் மனைவியைப் பிரித்து வைப்பது ஷைத்தானுக்கு மிக விருப்பமான செயல் என்கிறது இன்னொரு நபிமொழி!

மனித உறவுகளைச் சீர்திருத்திக் கொள்வது - தொழுகை, நோன்பு, தர்மம் இவை எல்லாவற்றையும் விட மிகவும் சிறந்தது என்கிறது பிரிதொரு நபிமொழி!
பிரிந்து நின்று கொண்டு - ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டு இன அழிவில் ஈடுபட்டுக் கொண்டிருந்த இனக் குழுக்களை - சகோதரர்களாக ஆக்கிக் காட்டியது இந்த ஒரு இறை நியதி!
ஒன்றைத் தேர்வு செய்திடும் சுதந்திரம் கொடுக்கப்பட்ட ஒரே காரணத்தினாலேயே, ஒரு மனிதன் வந்து இந்த இணைப்பை உடைக்கின்றான் என்று வைத்துக் கொள்வோம்! இதனைத் தான் "மாபெரும் குழப்பம்" என்கிறான் இறைவன்!

மனிதர்கள் ஒரு புறம் இருக்கட்டும். மிக மிக பலவீனமான படைப்பு ஒன்றை எடுத்துக் கொள்வோம். அதனுடன் நாம் எப்படி நடந்து கொள்வோம் ? எறும்பு !
நீங்கள் உங்கள் நண்பர்கள் புடை சூழ, நகரை வலம் வந்து கொண்டிருக்கிறீர்கள். வழியில் - எறும்புகளின் அணிவகுப்பு ஒன்றைப் பார்வை இடுகின்றீர்கள்! உங்களுக்கு என்ன தோன்றும்? நீங்கள் என்ன செய்வீர்கள்!
இதோ இறைத்தூதர் சுலைமான் (அலை) அவர்களைப் பாருங்கள்:
"இறுதியாக, எறும்புகள் நிறைந்த இடத்திற்கு அவர்கள் வந்த போது ஓர் எறும்பு (மற்ற எறும்புகளை நோக்கி:) “எறும்புகளே! நீங்கள் உங்கள் புற்றுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள்; ஸுலைமானும் அவருடைய சேனைகளும், அவர்கள் அறியாதிருக்கும் நிலையில் உங்களை நசுக்கி விடாதிருக்கும் பொருட்டு (அவ்வாறு செய்யுங்கள்)” என்று கூறிற்று.

அப்போது அதன் சொல்லைக் கேட்டு, அவர் புன்னகை கொண்டு சிரித்தார். இன்னும், “என் இறைவா! நீ என் மீதும், என் பெற்றோர் மீதும் புரிந்துள்ள உன் அருட்கொடைகளுக்காக, நான் நன்றி செலுத்தவும், நீ பொருந்திக் கொள்ளும் விதத்தில் நான் நன்மைகள் செய்யவும், எனக்கு அருள் செய்வாயாக! இன்னும் உம் கிருபையைக் கொண்டு என்னை உன்னுடைய நல்லடியார்களில் சேர்த்தருள்வாயாக!” என்று பிரார்த்தித்தார். (குர்ஆன் 27: 18-19)
அந்த எறும்புகளுக்கு அவரோ அவரது படை வீரர்களோ எந்த ஒரு தீங்கும் இழைத்திடவில்லை! ஆனாலும் இந்தப் பண்பைத் தான் இறைவன் நம்மிடம் எதிர்பார்க்கிறான்!
மரம் செடி கொடிகளைப் பார்க்கிறீர்கள். தேவையின்றி ஒரு இலையைப் பறிப்பதற்குக் கூட உங்களுக்கு மனம் வராது!

இந்த ஒரே ஒரு இறை நியதியை நாம் உளமாற ஏற்றுக் கொண்டால், நம்மைப் போன்ற மற்ற மனிதர்களை நாம் எவ்வாறு நோக்குவோம்? இனவெறிச் சிந்தனைக்கு இது ஒன்றே தீர்வு அல்லவா?
நம்மைச் சுற்றி வளர்கின்ற தாவரங்களை எவ்வாறு நோக்குவோம்? மிருகங்களை எவ்வாறு நோக்குவோம்? நமது சுற்றுப்புறச் சூழலை நாம் எவ்வாறு நோக்குவோம்?
ஆம்! அனைத்துப் படைப்பினங்களையும் இணைத்துப் பார்ப்பது - இஸ்லாத்தின் உயர் இலக்குகளுள் ஒன்று! இந்த சிந்தனை அளப்பரிய மாற்றங்களை நமக்குள் கொண்டு வர வல்லது! ( MAQASID UNIVERSAL LAWS என்ற குர்ஆன் ஆய்வு நூலிருந்து )

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 119
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 36 )

وَالَّذِيْنَ كَذَّبُوْا بِاٰيٰتِنَا صُمٌّ وَّبُكْمٌ فِى الظُّلُمٰتِ‌ مَنْ يَّشَاِ اللّٰهُ يُضْلِلْهُ وَمَنْ يَّشَاْ يَجْعَلْهُ عَلٰى صِرَاطٍ مُّسْتَقِيْمٍ
நம்முடைய வசனங்களைப் பொய்ப்பிப்பவர்கள் (குஃப்ரு என்னும்) இருள்களில் செவிடர்களாகவும், ஊமையர்களாகவும் இருக்கின்றனர்; அல்லாஹ் தான் நாடியவர்களைத் தவறான வழியில் செல்ல விட்டு விடுகிறான்; இன்னும் அவன் நாடியவரை நேர்வழியில் செலுத்துகின்றான். (குர்ஆன் : 6:39)
நவீன தத்துவத்தின் தந்தை டெஸ்கார்ட்ஸ், "நான் நினைக்கிறேன். அதனால், நான் இருக்கிறேன்" என்று தனது புகழ்பெற்ற அறிக்கையை வெளியிட்டபோது, இதனால் மனிதர்களின் தனித்துவமான பண்பு மற்றும் மனிதர்களின் மிகப்பெரிய சாபம் ஆகிய இரண்டையுமே சுட்டிக் காட்டினார்.
வேறு வார்த்தைகளில் கூறுவதானால், பௌத்த துறவி மாத்தியூ ரிக்கார்ட் போல "எண்ணங்கள்- நம்முடைய சிறந்த நண்பர்களாகவும் இருக்கலாம். நம்முடைய மோசமான எதிரிகளாகவும் இருக்கலாம்." என்கிறார்.
உளவியல் ரீதியில் நம் ஆழ்மனதில் ஒரு கருத்தைப் பற்றிய அபிப்பிராயங்களை முடிவு செய்தபின் அந்த முடிவின்படி வெளிப்படுத்தவே பலவாறு முயற்சிக்கிறோம்.

நம்முடைய வசனங்களைப் பொய்யாக்கிட முனைபவர்கள், வேண்டுமென்றே தான் அவ்வாறு செய்கின்றனர். அவை உண்மையானவை என்பதற்கு எத்தனையோ ஆதாரங்கள் அவர்கள் முன்னிலையிலேயே இருக்கின்றன. அற்புதமான எத்தனையோ பிராணிகள், நூதனமான பறவையினங்கள், புற்பூண்டுகள், செடி, கொடிகள், விருட்சங்கள், மற்றும் கடலிலும், கரையிலும் இருக்கின்ற பொருள்கள் அனைத்தையும் அவர்கள் பார்க்கின்றனர். அவற்றின் அமைப்பு முறைகளும், அவற்றில் இருக்கக் கூடிய இயக்க தத்துவங்களும் பிரமிக்கத் தக்கவையாக இருக்கின்றன.
அவற்றில் ஏதாவதொன்றை மனிதனால் செய்து விட முடியுமா? முடியவே முடியாது. ஒவ்வொன்றும் அதனைப் படைத்தவனைப் பற்றி நன்கு உணர்த்திக் கொண்டே இருக்கிறது. அவனே சர்வசக்தன் என்பதையும் அறிவிக்கிறது.

இவற்றையெல்லாம் கண்களால் காண்கின்ற சில மனிதர்கள் தாம் அதனைப் படைத்த அல்லாஹ்வை மறுக்கின்றனர். அவனுடைய வசனங்களைப் பொய்யாக்குகின்றனர். செவிகளால் அவ்வசனங்களைக் கேட்கின்றனர். ஆனால், உடனேயே அவற்றைப் பொய்யாக்குகின்றனர். மனதார அவ்வசனங்களின் உண்மையை அறிந்தும் நாவினால் அவ்வுண்மையைக் கூற மறுக்கின்றனர்.
இத்தகையோர் கடும் இருள்களில் தடுமாறிக் கொண்டிருப்பவர்கள் போன்றே நிலைகுலைந்து இருக்கின்றனர்.

(அவர்களின் நிலை) ஆழ்கடலில் (ஏற்படும்) பல இருள்களைப் போன்றதாகும்; அதனை ஓர் அலை மூடுகிறது. அதற்கு மேல் மற்றோர் அலை; அதற்கும் மேல் மேகம். (இப்படி) பல இருள்கள். சில சிலவற்றுக்கு மேல் இருக்கின்றன. (அப்பொழுது) அவன் தன் கையை வெளியே நீட்டினால் அவனால் அதைப் பார்க்க முடியாது; எவனுக்கு அல்லாஹ் ஒளியை ஏற்படுத்தவில்லையோ அவனுக்கு எந்த ஒளியுமில்லை. (குர்ஆன் : 24:40)
இத்தகையோருக்கு ஓர் உதாரணம் நெருப்பை மூட்டிய ஒருவனின் உதாரணத்தைப் போன்றது. அ(ந் நெருப்பான)து அவனைச் சுற்றிலும் ஒளி வீசியபோது, அல்லாஹ் அவர்களுடைய ஒளியைப் பறித்துவிட்டான்; இன்னும் பார்க்க முடியாத காரிருளில் அவர்களை விட்டு விட்டான். (அவர்கள்) செவிடர்களாக, ஊமையர்களாக, குருடர்களாக இருக்கின்றனர். எனவே அவர்கள் (நேரான வழியின் பக்கம்) மீள மாட்டார்கள். (குர்ஆன் : 2: 17,18)

பேசும் சக்தியிருந்தும் உண்மையை வெளிப்படுத்த முடியாத ஊமையர்களாகவும், செவிகளிருந்தும் சத்தியதைக் கேட்க முடியாத செவிடர்களாகவும் இருக்கின்றனர். இவர்களைக் குறித்தே இறைவன் பிறிதோர் இடத்தில், "பார்வைகள் குருடாகவில்லை; ஆனால் நெஞ்சங்களிலுள்ள இருதயங்கள் குருடாகிவிட்டன" எனக் கூறியுள்ளான்.(குர்ஆன் 22:46)

எவரை அல்லாஹ் நாடுகிறானோ அவரை இவ்வாறு வழிதவறிச் செல்ல விட்டு விடுகின்றான். எவரை நாடுகிறானோ அவரை நேரான வழியின் மீது நடந்து செல்லுமாறு ஆக்கி விடுகின்றான்.இதற்கு மேல் அவனை எவரும் எது பற்றியும் கேட்க முடியாது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 120
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 37 )

قُلْ اَرَءَيْتَكُمْ اِنْ اَتٰىكُمْ عَذَابُ اللّٰهِ اَوْ اَ تَتْكُمُ السَّاعَةُ اَغَيْرَ اللّٰهِ تَدْعُوْنَ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ
(நபியே! அவர்களிடம்) நீர் கூறும்: “அல்லாஹ்வுடைய வேதனை உங்களிடம் வந்து விட்டால், அல்லது (நீங்கள் அஞ்சும்) அந்த (விசாரணைக்) காலம் வந்துவிட்டால் (அதிலிருந்து உங்களைக் காப்பாற்ற) அல்லாஹ்வையன்றி (வேறு யாரையாவது) நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் - அழைப்பீர்களா?” என்பதை (நீங்கள் சிந்தித்துப்) பார்த்தீர்களா? (குர்ஆன் : 6:40)

بَلْ اِيَّاهُ تَدْعُوْنَ فَيَكْشِفُ مَا تَدْعُوْنَ اِلَيْهِ اِنْ شَآءَ وَتَنْسَوْنَ مَا تُشْرِكُوْنَ
“அப்படியல்ல! - அவனையே நீங்கள் அழைப்பீர்கள்; அப்போது அவன் எதற்காக அவனை அழைத்தீர்களோ அ(த் துன்பத்)தை தான் நாடினால் நீக்கிவிடுவான், இன்னும் (அவனுடன்) இணை வைத்திருந்தவற்றை நீங்கள் மறந்து விடுவீர்கள். (குர்ஆன் : 6:41)

இணை வைத்துக் கொண்டும், அல்லாஹ்வின் வசனங்களைப் 'பொய்யாக்கிக் கொண்டும் இருப்பவர்களின் கவனத்திற்கு சில எச்சரிக்கைகளை இவ்விரு வசனங்களிலும் கூறப்படுகின்றது.
உங்களின் விக்கிரகங்கள் வேதனையை தடுத்து விடுமா? அல்லாஹ்வுடைய வேதனையானது முந்தைய கூட்டத்தினருக்கு கூறப்பட்டது போல் பேரிடியாகவோ, பெரும் புயலாகவோ. வெள்ளப் பிரளயமாகவோ, பூமி அதிர்ச்சியாகவோ, வேறு வகையாகவோ, உங்களுக்கு வந்து விட்டால், உங்களுடைய வணக்கத்திற்குரிய விக்கிரகங்கள் இந்த வேதனையை அகற்றி விட முடியுமா?

அல்லது விசாரணைக்காகக் குறிப்பிட்ட காலமான இறுதி நாள் திடீரென வந்து விட்டால், அந்நாளின் விசாரணையிலிருந்து உங்களை அவை நீக்கிவிட முடியுமா?
இம்மாதிரியான பேராபத்தில் அல்லாஹ் அல்லாதவற்றையா நீங்கள் அழைத்து உங்களைப் பாதுகாக்குமாறு கேட்டுக்கொண்டிருப்பீர்களா ? நீங்கள் எவற்றையெல்லாம் வணங்கிக் கொண்டு அவை உங்களுக்கு உதவும் என்பதாக வாதித்துக் கொண்டிருந்ததில் நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் இக்கேள்விக்குப் பதில் கூறுங்கள். நீங்களே சிந்தித்துப் பார்த்தீர்களா?
அடுத்த வசனத்தில் (41) அதாவது அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் நீங்கள் அழைக்க மாட்டீர்கள் ஏனெனில் அந்த வேதனையை அவனைத் தவிர வேறு யாராலும் அகற்ற முடியாது என்பது உங்களுக்கு நன்றாகவே தெரியும் அவை உங்களைக் காப்பாற்றாது என நீங்கள் நன்றாக அறிந்தே இருக்கிறீர்கள், அத்தகைய பேராபத்தான நிலையில் அந்த அல்லாஹ் ஒருவனையே அழைப்பீர்கள்.
எதற்காக அவனை நீங்கள் அழைக்கிறீர்களோ அத்தகைய வேதனையை அவன் நாடினால் நீக்கிவிடுவான் என்ற ஒரே உறுதியைத் தவிர வேறொன்றும் உங்களுக்கு அப்போதிருக்க முடியாது. உண்மை நிலையும் அது தான் என அறியும் நீங்கள், இணை வைத்துக் கொண்டிருந்தவைகளை உபயோகமற்றவை என்று மறந்து ஒதுக்கியும் விட்டு விடுவீர்கள். காரணம்...
மனம் மூன்று பிரிவுகளாக உள்ளது.
மேல்மனம் ( கான்சியஸ் மைண்ட் ) நடுமனம் ( சப்-கான்சியஸ் மைண்ட் )
ஆழ்மனம் ( சூப்பர் கான்சியஸ் மைண்ட்)
நம்மிடம் மூன்று விடயங்கள் இருக்கின்றன.1) நமது உடல், 2) நமது மனம், 3) நமது உயிர்.
இதில் மனம் என்பது உடலுக்கும், உயிருக்கும் நடுவில் ஊசலாடக்கூடியது. அந்த மனமானது உடலின் பக்கம் சார்ந்திருந்தால் அது மேல்மனம் ( கான்சியஸ் மைண்ட் )
அதுவே உயிரின் பக்கம் சார்ந்திருந்தால் அது ஆழ்மனம் ( சூப்பர் கான்சியஸ் மைண்ட்)
இரண்டும் பக்கம் பேலன்ஸ் செய்தபடி இருந்தால் அது நடுமனம் ( சப்-கான்சியஸ் மைண்ட் )
எந்தப்பக்கம் எவ்வளவு தீவிரமாக சார்ந்து இருக்கிறதோ அந்த அளவிற்கு அதன் செயல்பாடுகள் இருக்கும்.
மேல்மன எடுத்துக்காட்டுகள்:-
நாம் இருக்கும் அனைத்து நேரமும் மேல்மனதில்தான் இருக்கிறோம். உதாரணமாக வகுப்பறையில் பாடங்களை கவனிக்கும் மாணவன், கேமராவின் முன் நடிக்கும் நடிகன், மேடையில் பேசும் பேச்சாளர்கள், போர்களத்தில் நிற்கும் வீரன், சமையல் செய்யும் கலைஞர் என்று பலப்பல சொல்லாம்.
நடுமன எடுத்துக்காட்டுகள்:-
இதில் மனமானது உடலையும் உயிரையும் ஏறத்தாழ சம அளவில் சார்ந்து இருக்கும். எ.கா. சாலையில் வாகனங்களை செலுத்துபவர், மிக முக்கியமாக சைக்கிள் ஓட்டுபவர், சாப்பிடுபவர், குளித்துக் கொண்டிருப்பவர், முக்கியமாக பற்கள் தேய்த்துக்கொண்டிருப்பவர், இதுபோல நிறைய இருக்கிறது. இதில் மனம் சப்-கான்சியஸ் நிலையில் இருக்கும்.

ஆழ்மன எடுத்துக்காட்டுகள்:-
அடுத்தது சூப்பர் கான்சியஸ் (ஆழ்மனம்) இது பெயருக்கு ஏற்றார்போல் உண்மையிலேயே சூப்பரோ சூப்பர் கான்சியஸ். இந்நிலைக்கு நாம் தினந்தோறும் செல்கிறோம், வருகிறோம், அது பேசுவதையும் கேட்கிறோம். ஆனால் கண்டு உணர்வதில்லை.
இந்த ஆழ்மனம் எப்போதும் உண்மையை சொல்லிக்கொண்டே இருக்கும். சின்னதாக பொய் சொன்னாலும், அடே நீ இப்போ பொய் சொல்ற' என்று சொல்லும்.
"டேய், நெருக்கடியான இடம் கவனமாக போ என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே, முன்னாள் நிற்கும் வண்டி மீது இவன் வாகனம் மோதி நிற்கும். சொன்னேனே கேட்டியாடா " என்று ஆழ்மனம் பேசும்.

அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் நீங்கள் அழைக்க மாட்டீர்கள் ஏனெனில் அந்த வேதனையை அவனைத் தவிர வேறு யாராலும் அகற்ற முடியாது என்பது உங்கள் ஆழ்மனதிற்கு மிக நன்றாகவே தெரியும். நீங்கள் வணங்கியவைகள் உங்களைக் காப்பாற்றாது எனவும் உங்கள் ஆழ்மனம் நன்றாகவே அறிந்தே இருக்கிறது, அத்தகைய பேராபத்தான நிலையில் அந்த அல்லாஹ் ஒருவனையே அழைப்பீர்கள். அப்படி அழைக்கும்படி சொன்னது உங்களது ஆழ்மனம்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 121
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 38 )

وَلَقَدْ اَرْسَلْنَاۤ اِلٰٓى اُمَمٍ مِّنْ قَبْلِكَ فَاَخَذْنٰهُمْ بِالْبَاْسَآءِ وَالضَّرَّآءِ لَعَلَّهُمْ يَتَضَرَّعُوْنَ

(நபியே!) உமக்கு முன்னர் இருந்த சமூகத்தாருக்கும் நாம் (நம்) தூதர்களை அனுப்பினோம்; அச்சமூகத்தாரை நோயைக் கொண்டும் வறுமையைக் கொண்டும் பிடித்தோம் அவர்கள் பணிந்து வரும் பொருட்டு.(குர்ஆன் : 6:42)

இரண்டு சம்பவங்கள் :-

1) நோயைக் கொண்டும் :-

வாஸித்தைச் சேர்ந்த தாவர்தான் என்னும் கிராமத்தில் அம்மை நோய் உண்டாயிற்று - வாந்திபேதி என்பதாகவும் சிலர் கூறுவர். அங்குள்ளவர்களில் செல்வந்தர்களாகவும், பிரபலமானவர்களும் இருந்தார்கள். மரணத்திற்கு பயந்து அவ்வூரை விட்டுச் சென்றனர் . .. என்பதாக. (இப்னு கஸீர், தப்ஸீர் ஹமீதியா போன்ற கிதாபுகளில் மேற்கண்ட குறிப்பு காணப்படுகிறது )

ஆனால்... மற்றும் ஒரு குறிப்பில்..

ஹஜ்ரத் தாவூத் (அலை) அவர்கள் காலத்திற்கு முன்னர் பாலஸ்தீனத்தைச் சேர்ந்த இவர் பனீ இஸ்ரவேலர்கள் மீது படையெடுத்து வந்தனர்.அவ் எதிரிகளை திருப்பித் தாக்குமாறு இஸ்ரவேல் மக்களின் மன்னரால் கட்டளையிடப்பட்டது .

இதில் ஆயிரக்கணக்கானோர் யுத்த மரணத்திற்குப் பயந்து அவ்வூரை விட்டு குடிபெயர்ந்தனர். இதனால் இஸ்ரவேலரின் மன்னர் இவ்வாறு சதி செய்த அவர்களைப் பற்றி இறைவனிடம் முறையிட்டார் (என்று காஜின், தன்தாவீ கிதாபுகளில் காணக் கிடக்கிறது ) எது எப்படியோ நோயுக்காகவோ , யுத்தத்திற்காகவோ பயந்து ஊரை காலி செய்தனர் .அவ்வளவே.

நோயோ அல்லது எதிரிகளோ அந்த ஊரை விட்டு விலகியதும் மரணத்திற்குப் பயந்து தப்பியவர்கள் மீண்டும் அவ்வூருககுத் திருப்பினர் , இதைக் கண்ணுற்ற பாதிக்கப்பட்டு தங்கி இருந்தவர்கள் இனியொரு முறை இந்நிகழ்வு நமதூருககு மீண்டும் வருமாயின் நாமும் அவர்களைப் போல் ஊரை விட்டு வெளியேறி விட வேண்டுமென்று முடிவு செய்தனர்.

அடுத்த வருடத்தில் அதே நிகழ்வு (நோய் அல்லது எதிரியின் தாக்குதல்) நிகழ்ந்த போது, மொத்த மக்களும் வெருண்டோடி ஓர் அகன்ற பள்ளத்தாக்குப் பகுதியின் இருபுறங்கிலும் குடியேறினர் .

இறைக் கட்டளைப்படி அவர்களுக்கு மேல்புறம் ஒரு மலக்கும் . கீழ்புறம் ஒரு மலக்கும் நின்று விநோதமான கடுமையான ஓர் ஓசையை எழுப்பினர் .அவர்களில் ஒருவர் கூட பாக்கி இல்லாமல் அனைவரும் இறந்தனர் .

இம் மக்கள் 8000 பேர்கள் என்றும் 6000 பேர்கள் என்றும் இரு குறிப்பு காணப்படுகிறது. அந்தப் பள்ளத்தாக்கில் பல குழிகளில் அவர்களை ஒன்றாக போட்டு , அவ்விடத்தைச் சுற்றி சுவர்களும் எழுப்பட்டன. அவர்கள் அழிந்து மண்ணோடு மண்ணாக மக்கிப் போயினர்.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு ( 25 வருடம் அல்லது அதை விட அதிகமான வருடம் ) ஹஜ்ரத் ஹஸ்கீல் (அலை) இந் நபியை "எசேக்கியல் " என்று விவிலியம் பழைய ஏற்பாடு கூறுகிறது . இஸ்ரவேலர்களுக்கு அனுப்பப்பட்ட நபி.இவருக்கு இன்னொரு பெயர் :

"துல் கிஃப்ல் (அலை) கி.மு (593 - 571)
நபியவர்கள் இறைவனிடம் மன்றாடி அவர்களை மீண்டும் தம் கண் முன்னே உயிர்ப்பிக்கும்படி வேண்டினார்.இறைவனும் நபியின் கண் முன்னே ஒவ்வொரு நபரின் எலும்புகளும் அவரவர் எலும்புகளுடனும் நரம்புகள் தசைகள் தோல்கள் ஒவ்வொன்றும் இணைந்ததை நபியவர்கள் நேரடியாகவே பார்த்தார்கள்.
" (நபியே) மரணத்திற்குப் பயந்து தங்கள் வீடுகளை விட்டு ஆயிரக்கணக்கில் வெளியேறியவர்களை நீங்கள் கவனித்தீர்களா ? அல்லாஹ் அவர்களை இறக்கும் படிச் செய்து பின்னர் அவர்களை உயிர்ப்பித்தான் ."குர்ஆன் ( 2 : 243 )
உயிர் பெற்றவர்கள் "நாயனே! உன்னையே நாங்கள் வணங்குகிறோம் : துதிக்கிறோம் . உன்னைத் தவிர வேறு நாயன் இல்லை " என்று மொழிந்தவர்களாக உயிர் பெற்றனர்.
மக்கள் உயிருடனிருப்பதும், மரணிப்பதும் அவனின் கட்டளையே இன்றி நோயோ, யுத்தங்களோ அல்ல.ஒருவர் மரணத்திறகுப் பயந்து எங்கு சென்றாலும் மரணம் அவரை அது விடாது.
2) நோயைக் கொண்டும் வறுமையைக் கொண்டும் :-
கறுப்புச் சாவு (Black Death)
சில நூற்றாண்டுகளுக்கு முன்பு வரை இந்த பேரை கேட்டாலே பலருக்கும் மரண பயம் கண்ணில் தெரிய ஆரம்பித்து விடும். ஒரே நேரத்தில் கோடிக்கணக்கான மக்களை கொன்று குவித்த கொடூர தொற்று நோயாகவே அது பல நூற்றாண்டுகளாக கருதப்பட்டு வந்தது.
கறுப்புச் சாவு (Black Death) ஒரு தொற்று நோய். இது மனித வரலாற்றிலே மிகவும் கெடுதியாக அமைந்த தொற்று நோய்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இது பாக்டீரியாத் தொற்றினால் ஏற்பட்ட பிளேக் என்றே பரவலாக நம்பப்படுகிறது.
கி.பி 1347-ம் ஆண்டில் தொடங்கி 1352 வரையிலான ஐந்து ஆண்டுகளில் இந்தக் கொள்ளை நோய்க்குப் பலியான ஐரோப்பிய மக்களின் எண்ணிக்கை மட்டுமே 25 மில்லியனைத் தாண்டும்.
19-ம் நூற்றாண்டின் தொடக்கம் வரையிலும் அவ்வப்போது ஐரோப்பிய கண்டத்தைத் தாக்கிய இந்தத் தொற்று, ஐரோப்பிய கலாசாரத்தில் மிக நீண்ட தாக்கத்தை ஏற்படுத்தியது.
புபோனிக் பிளேக், பாக்டீரியாக்களால் ஏற்படும் தொற்று நோய் ப்ளேக் என்று அழைக்கப்படுகிறது. பொதுவாக இதனை சிலர் கொள்ளை நோய் என அழைக்கும் வழக்கமும் உள்ளது. யெர்சினியா பெஸ்டிஸ் என்ற பாக்டீரியா மூலம் ப்ளேக் தொற்று உருவாகிறது.
இந்த வகை பாக்டீரியா விலங்குகளில் வாழும். குறிப்பாக அணில் போல காட்சியளிக்கும் ரோடண்ட் என்ற வகை விலங்குகளிலும், அதன் உடலில் உள்ள உண்ணிகளிலும் இந்த பாக்டீரியா அதிகம் காணப்படும்.
இந்த நோயால் பாதிக்கப்பட்டவர்களின் பாதங்கள்,விரல்கள் போன்ற உடல் பாகங்கள் கருப்பாக மாறிவிடும் என்பதால், இதனை `தி பிளாக் டெத்` அதாவது கருப்பு மரணம் என வரலாற்றாசிரியர்கள் அழைத்தனர்.
சமீப காலங்களில் இந்த தொற்று பாதிப்பு மிக குறைவாக பதிவாகியிருந்தலும், வரலாற்றில் இந்த நோய் ஏற்படுத்தியுள்ள சுவடுகள் வலி மிகுந்தவை என்பதால் அது குறித்த அச்சம் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.
இது சீனாவில் தோன்றி பட்டுப்பாதை வழியாக கிரிமியாவை சுமார்
1346 இல் அடைந்து, பின்னர் அங்கிருந்து இலண்டன் மற்றும் நண்ணிலப் பகுதிகளுக்கு பயணிக்கும் கப்பல்களில் மறைந்திருந்த கறுப்பு எலிகள் மூலம் அந்த தொற்றுநோய் செயற்பட்டமையால் ஐரோப்பாவில் உருப்பெறத் தொடங்கிற்று.
கறுப்புச் சாவு ஐரோப்பிய மக்கள்தொகையில் 30 விழுக்காட்டிற்கும் 60 விழுக்காட்டிற்கும் இடைப்பட்ட மக்களைக் கொன்றுள்ளது. ஐரோப்பிய வரலாற்றை சமூக, சமய, பொருளியல் தளங்களை வறுமையின் கோரப்பிடி மற்றியமைத்ததில் இக்கறுப்புச் சாவுக்கு பெரும் பங்கு உண்டு.

இச்சாவிலிருந்து தேற 150 ஆண்டுகளுக்கு மேல் எடுத்தது. மீளவும் இது அவ்வப்போது தலையெடுத்த போதும், பத்தொன்பதாம் நூற்றாண்டில் முற்றாக அழிக்கப்பட்டது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 122
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 39 )

فَلَوْلَاۤ اِذْ جَآءَهُمْ بَاْسُنَا تَضَرَّعُوْا وَلٰـكِنْ قَسَتْ قُلُوْبُهُمْ وَزَيَّنَ لَهُمُ الشَّيْطٰنُ مَا كَانُوْا يَعْمَلُوْنَ

நம்மிடமிருந்து அவர்களுக்கு வேதனை வந்தபோது அவர்கள் பணிந்திருக்க வேண்டாமா? அதற்கு மாறாக அவர்களுடைய இருதயங்கள் இறுகிவிட்டன; அவர்கள் செய்து கொண்டிருந்ததையே, ஷைத்தான் அவர்களுக்கு அழகாகக் காட்டிவிட்டான். (குர்ஆன் : 6:43)

1) ஒரு மனிதன் தனது இதயம் கடினமாகி அதனுள் எதுவும் புக முடியாத அளவு பாறை போல் இறுகி விட்டதாக உணர்வது. அல்லாஹ் தனது திருமறையிலே கூறுகின்றான் :

இதன் பின்னரும் உங்கள் இதயங்கள் இறுகி விட்டன. அவை கற்பாறையைப் போல் ஆயின் அல்லது, (அதை விடவும்) அதிகக் கடினமாயின் (ஏனெனில்) திடமாகக் கற்பாறைகள் சிலவற்றினின்று ஆறுகள் ஒலித்தோடுவதுண்டு.

இன்னும், சில பிளவுபட்டுத் திடமாக அவற்றினின்று தண்ணீர் வெளிப்படக் கூடியதுமுண்டு. இன்னும், திடமாக அல்லாஹ்வின் மீதுள்ள அச்சத்தால் சில(கற்பாறைகள்) உருண்டு விழக்கூடியவையும் உண்டு. மேலும், அல்லாஹ் நீங்கள் செய்து வருவது பற்றி கவனிக்காமல் இல்லை. (2:74)

எவனது இதயம் கற்பாறையைப் போல் இறுகி விட்டதோ, அவனது இதயத்தில் மரணத்தைப் பற்றியோ அல்லது இறந்த மனிதர்களைப் பார்ப்பதனாலோ அல்லது மண்ணறையைப் பார்ப்பதனோலோ அவனுக்கு அந்த மரணத்தைப் பற்றிய பயம் தோன்றாது. இன்னும் மரணத்திற்குப் பின் சந்திக்கவிருக்கின்ற மறுமையைப் பற்றிய அச்சமும் தோன்றாது.

மேலும் அவன் தனது தோளில் மைய்யித்தைச் சுமந்து சென்றாலும் சரியே! அவன் அந்த மையித்தை மண்ணறையில் போட்டு மூடி விட்டு, அந்த மண்ணறைகளுக்கு ஊடே நடந்து சென்றாலும் கூட பாறை போல இறுகி விட்ட அவனது மனதில் மரணத்தைப் பற்றிய சிந்தனையையோ, மரணத்திற்குப் பின் உள்ள வாழ்க்கை பற்றியோ எந்தவித சிந்தனையையும், அதன் மூலம் கிடைக்கக் கூடிய படிப்பினையையும் அவனால் பெற்று விட இயலாது."

விதிக்கப்பட்ட கடமைகளை அல்லது வணக்க வழிபாடுகளைச் செய்யாமல் அவனது மனது அலைபாயக் கூடியதாகவும், தொழுகை, குர்ஆன் ஓதுதல் மற்றும் பிரார்த்தனை புரியும் பொழுதும் அவனது மனது ஒர்மையாக இல்லாமல், அவன் எந்த வழிபாடுகளைச் செய்கின்றானோ அதன் மீது முழுமையான கவனத்தைச் செலுத்த இயலாமல் ஆகி விடும். அவன் என்ன கூறிக் கொண்டிருக்கின்றான் என்பதைப் பற்றி அவனுக்கு ஞாபகமே இருப்பதில்லை.

எவன் இறைவனைப் பற்றி அச்சமற்றிருக்கின்றானோ, இத்தகையவர்களுடைய துஆக்களை இறைவன் அங்கீகரிப்பதில்லை. (திர்மிதி 3479, அல் சில்சிலாஹ் ஸஹீஹ் 594)

2) அவர்கள் செய்து கொண்டிருந்ததையே, ஷைத்தான் அவர்களுக்கு அழகாகக் காட்டிவிட்டான்:-

இறைவன் படைத்த மனிதனை அந்த இறைவனிடமிருந்து பிரித்து அந்த மனிதனது மனம் அல்லது உள்ளத்தில் தீய செயல்களை ஆசை வார்த்தைகளால் தூண்டி அவனை தன்பால் ஈர்த்து நரகப் படு குழிக்குள் தள்ள அலங்கரித்து அந்த மனிதனை இறைகட்டளைகளுக்கு கட்டுப்படாமல் நிர்மூலமாக்கும் செயலையே ஆட்டிப்படைத்தல் என்கிறோம்

அந்த ஷைத்தான் எனும் படைப்பினம் மனித உள்ளங்களில் வஸ்வஸா (وَسْوَسَة) எனும் தீய எண்ணங்களை விதைத்து இறைவழியிலிருந்து மனிதனை தடுக்கும் செயலை செய்கிறது.
ஷைத்தான் அவர்களுக்கு வாக்களிக்கிறான்; அவர்களுக்கு வீணான எண்ணங்களையும் உண்டாக்குகிறான்; மேலும் அந்த ஷைத்தான் ஏமாற்றுவதைத் தவிர வேறு (எதனையும்) அவர்களுக்கு வாக்களிக்கவில்லை. (குர்ஆன்4:120)
இதோ இப்லீஸின் ஒப்புதல் வாக்குமூலம் :
“இன்னும் நிச்சயமாக நான் அவர்களை வழி கெடுப்பேன்; அவர்களிடம் வீணான எண்ணங்களையும் உண்டாக்குவேன்; (ஆடு, மாடு, ஒட்டகை போன்ற) கால்நடைகளின் காதுகளை அறுத்து விடும்படியும் அவர்களை ஏவுவேன்.
இன்னும் அல்லாஹ்வின் படைப்புகளையுடைய கோலங்களை மாற்றும்படியும் ஏவுவேன்” என்றும் ஷைத்தான் கூறினான்; எனவே எவன் அல்லாஹ்வை விட்டு ஷைத்தானை உற்ற நண்பனாக ஆக்கிக் கொள்கிறானோ, அவன் நிச்சயமாக பகிரங்கமான பெரு நஷ்டத்தை அடைந்தவன் ஆவான். (குர்ஆன் 4:119)
இதோ இப்லீஸ் பற்றி அல்லாஹ்வின் எச்சரிக்கை:
ஷைத்தான் அவர்களுக்கு வாக்களிக்கிறான்; அவர்களுக்கு வீணான எண்ணங்களையும் உண்டாக்குகிறான்; மேலும் அந்த ஷைத்தான் ஏமாற்றுவதைத் தவிர வேறு (எதனையும்) அவர்களுக்கு வாக்களிக்கவில்லை. (குர்ஆன்4:120)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 123
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 40 )

فَلَمَّا نَسُوْا مَا ذُكِّرُوْا بِهٖ فَتَحْنَا عَلَيْهِمْ اَبْوَابَ كُلِّ شَیْءٍ حَتّٰۤى اِذَا فَرِحُوْا بِمَاۤ اُوْتُوْۤا اَخَذْنٰهُمْ بَغْتَةً فَاِذَا هُمْ مُّبْلِسُوْنَ
அவர்களுக்கு நினைவூட்டப்பட்ட நற்போதனைகளை அவர்கள் மறந்துவிட்ட போது, அவர்களுக்கு (முதலில்) எல்லாப் பொருட்களின் வாயில்களையும் நாம் திறந்து விட்டோம் - பின்னர், அவர்களுக்கு கொடுக்கப்பட்டதைக் கொண்டு அவர்கள் மகிழ்ச்சியடைந்து கொண்டிருந்த வேளை (நம் வேதனையைக் கொண்டு) அவர்களை திடீரெனப் பிடித்துக் கொண்டோம்; அப்போது அவர்கள் நம்பிக்கை இழந்தவர்களாக ஆகிவிட்டனர். (குர்ஆன் : 6:44)
فَقُطِعَ دَابِرُ الْقَوْمِ الَّذِيْنَ ظَلَمُوْا وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ
எனவே, அக்கிரமம் செய்து கொண்டிருந்த அக்கூட்டத்தார் வேரறுக்கப்பட்டனர்; “எல்லாப் புகழும் உலகங்கள் யாவற்றுக்கும் இரட்சகனான அல்லாஹ்வுக்கே ஆகும்.” (குர்ஆன் : 6:45)
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : "ஓர் அடியான் பாவங்கள் புரிந்தும் கூட அவன் விரும்புகின்ற இம்மைச் செல்வங்களை அல்லாஹ் அவனுக்கு வாரி வழங்குவதை நீர் கண்டால் அவனை படிப்படியாக தண்டிப்பதற்காகவே அவற்றை அல்லாஹ் அவனுக்கு வழங்குகின்றான் என்பதே புரிந்து கொள். பின்னர் அல்லாஹ்வின் தூதர் (ஸல் ) அவர்கள் மேற்கண்ட வசனத்தை ஓதி காட்டினார்கள் - உக்பா பின் ஆமிர் (ரலி) - முஸ்னது அஹ்மத்
இங்கு நல்லுபதேசங்களை அவர்கள் மறந்தபொழுது, அவர்கள் போக்கிலேயே ஒவ்வொருபொருளின் வாயில்களையும் அவர்கள் மீது நாம் திறந்து விட்டோம் எனக் கூறப்படுகிறது.
விவசாயம் செழித்தது. வியாபாரம் பெருகிற்று. தொழில் துறைகள் அதிகரித்தன. உலகில் எல்லா பக்கங்களிலிருந்தும் அவர்களுக்கு எல்லா வகையான பொருள்களும் தாராளமாக வந்து குவிய ஆரம்பித்தன. அவர்கள் எங்கு வேண்டுமானாலும் தடையின்றிச் செல்லலாம்.

இந்நிலையில் அவர்கள் அல்லாஹ்வை முற்றிலும் மறந்து விட்டனர். சில சமயம் அல்லாஹ்வையே மறுத்தனர். இன்னுமதிகமாக அக்கிரமங்கள் புரிய ஆரம்பித்தனர். தங்களுக்கு வழங்கப்பட்டிருப்பவைகளைக் கொண்டு மகிழ்ந்து கொண்டிருந்தனர்.
நம்மை எந்த சக்தியாலும் எதுவும் செய்ய முடியாது என இறுமாந்திருந்தனர். தங்களுடைய மனத்தில் என்ன தோன்றுகிறதோ அதைச் செய்தனர். அது அனுமதிக்கப்பட்டதா அனுமதிக்கப்படாததா என்பதைப் பற்றி எல்லாம் அவர்களுக்குக்கவலை இல்லை.

இவ்வாறு சுகபோகத்தில் அவர்கள் மூழ்கிக் கொண்டிருந்த பொழுது திடீரென அவர்களை நாம் பிடித்து விட்டோம். மழையைத் தடுத்து விட்டோம். விவசாயம் கருகி விட்டது. வியாபாரம் நட்டமடைந்தது. விரோதிகள் பெருகி விட்டனர். தொழில் துறைகள் அனைத்தும் நசிந்து விட்டன. அல்லது வலிமை வாய்ந்தவர்கள் கைக்கு மாறிவிட்டன. உலகின் எல்லாப் பக்கங்களிலிருந்தும் வந்து கொண்டிருந்த பொருட்கள் தடுக்கப்பட்டு விட்டன.
எங்கு வேண்டுமானாலும் செல்லலாம் என்ற நிலைமாறி நினைத்த நேரத்தில் எங்கும் செல்ல முடியாதபடி கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டு விட்டன. எல்லாவித வாயில்களும் அடைப்பட்டு விட்டன. மாடமாளிகைகள் கைம்மாறி விட்டன. கண்ணியம் கௌரவம் எல்லாம் பறிபோய் விட்டன.
சுகபோகமாக வாழ்ந்த காலத்தில் அக்கிரமமாக யார், யாரை வஞ்சித்தனரோ அவர்களனைவரும் இப்பொழுது வலுப்பெற்று பழிவாங்க ஆரம்பித்து விட்டனர்.
மனத்தில் தோன்றியவாறெல்லாம் செய்து கொண்டிருந்த நிலைமாறி வயிற்றுப் பசியைத்தீர்த்தால் போதும் என்ற நிலைக்கு வந்து விட்டனர்.

அல்லாஹ்வினால் அனுமதிக்கப்படாததையெல்லாம் அனுபவித்ததால் ஏற்பட்ட விபரீத விளைவுகள், இப்பொழுது பல நோய்கள் கொடூரமாகத் தாக்க ஆரம்பித்து விட்டன.
இப்போதைய நிலை என்ன ? அவர்கள் நிராதரவாகி விட்டனர். மேற்கண்ட சுகபோகங்களின் ஏதாவது இப்போது மீண்டும் கிடைக்கும் என்ற நம்பிக்கையையே இழந்து விட்டனர். எந்த உதவியுமின்றிப் பரிதாபகரமான நிலைக்கு ஆகிவிட்டனர்.
ஹசன் பஸ்ரி (ரஹ்) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ் யாருக்கு நல்ல வசதி வாய்ப்பை வழங்கியுள்ளானோ அவர் அதன் மூலம் தாம் சோதிக்கப்படலாம் என்பதை உணரா விட்டால் அவர் அறிவில்லாதவர் என்று பொருள்.
அல்லாஹ் யாருக்குக் குறைவான செல்வத்தை வழங்கியுள்ளானோ அவர், பின்னால் தமக்கு வாய்ப்பு வழங்கப்படலாம் என்பதை உணரா விட்டால் அவரும் அறிவில்லாதவர் என்று பொருள்.
தஃப்சீர் இப்னு அபீஹாத்திம்.

மேற்கண்ட வசனம் ( 6:45 )-ல் அக்கிரமம் செய்து கொண்டிருந்த அக்கூட்டத்தார் வேரறுக்கப்பட்டனர்;
மேலும் உலகில் இறைவனின் நியதி ஒன்று உள்ளது. அநியாயம் தலை தூக்கினால் அடியார்களில் சிலர்களை வைத்து அநியாயக் காரர்களை அழிப்பது.அவ்வாறில்லை என்றால் உலகில் அநீதங்கள் குழப்பங்கள் மேலோங்கி விடும்.
وَلَوْلَا دَفْعُ اللَّهِ النَّاسَ بَعْضَهُمْ بِبَعْضٍ لَفَسَدَتِ الْأَرْضُ وَلَٰكِنَّ اللَّهَ ذُو فَضْلٍ عَلَى الْعَالَمِينَ
(இவ்விதமாக) அல்லாஹ் மக்களில் (நன்மை செய்யும்) ஒரு கூட்டத்தினரைக் கொண்டு (தீமை செய்யும்) மற்றொரு கூட்டத்தினரைத் தடுக்காவிட்டால், (உலகம் சீர்கெட்டிருக்கும்.) ஆயினும், நிச்சயமாக அல்லாஹ் அகிலத்தார் மீது பெருங்கருணையுடையோனாக இருக்கிறான்.
(குர்ஆன் -2:251)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 124**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 41 )**

قُلْ اَرَءَيْتُمْ اِنْ اَخَذَ اللّٰهُ سَمْعَكُمْ وَ اَبْصَارَكُمْ وَخَتَمَ عَلٰى قُلُوْبِكُمْ مَّنْ اِلٰـهٌ غَيْرُ اللّٰهِ يَاْتِيْكُمْ بِهِ اُنْظُرْ كَيْفَ نُصَرِّفُ الْاٰيٰتِ ثُمَّ هُمْ يَصْدِفُوْنَ

“அல்லாஹ் உங்களுடைய செவிப்புலனையும், பார்க்கும் சக்தியையும் எடுத்துவிட்டு, உங்கள் இருதயங்களின் மீது முத்திரையிட்டு விடுவானானால் - அதை உங்களுக்கு அல்லாஹ்வையன்றி வேறு எந்த இறைவன் கொடுப்பான்? என்று நீங்கள் (சிந்தித்துப்) பார்த்தீர்களா?” என்று (நபியே!) நீர் கேட்பீராக; (நம்) அத்தாட்சிகளை எவ்வாறு விவரிக்கின்றோம் என்பதை (நபியே!) நீர் கவனிப்பீராக; (இவ்வாறு இருந்தும்) பின்னரும் அவர்கள் புறக்கணித்தே வருகின்றனர்.(குர்ஆன் : 6:46)

மேற்கண்ட வசனத்தில் மூன்று முக்கிய உறுப்புகளை பற்றி கூறப்படுகிறது மூன்றும் ஒருவனுக்கு கெட்டுவிட்டால் அவனுடைய உலக வாழ்க்கையே பாழாகி அவனுடைய காரியங்கள் அனைத்தும் கெட்டுவிடும்.
உலக,ஆன்மீக காரியங்கள் யாவும் இம்மூன்று உறுப்புகளைக் கொண்டே நடைபெறுகின்றன. செவியேறும் சக்தி போய்விட்டால் செவிடனாகி விடுகிறான்.பார்க்கும் சக்தியை இழந்துவிட்டால் குருடனாகி விடுகிறான். உணரும் சக்தியை இழந்துவிட்டால் சித்தம் இழந்தவனாகி விடுகிறான்.

செவிப்புலன்யும் பார்வைகளையும் பறித்தல் என்பதற்குஅவற்றின் மூலம் மார்க்க ரீதியான பலன்களைப் பெற முடியாதவாறு தடுத்தல் என்றும் பொருள் கொள்ளலாம்.
இப்பூவுலகில் மனிதனைத் தவிர மற்ற அனைத்து ஜீவராசிகளுக்கும் அல்லாஹ் ஐயறிவைக் கொடுத்துள்ளான். மனிதனுக்கு பகுத்தறிவுடன் சேர்த்து ஆறு அறிவுகளை வழங்கியுள்ளான். பார்த்தல், கேட்டல், சுவைத்தல், முகர்தல், தொடுதல் என்பனவே மற்ற ஐந்து அறிவுகளுமாகும். இவற்றுடன் தொடர்பான உறுப்புகளை புலணுறுப்புகள் என்போம்.
நமது புலணுறுப்புகளில் மிக அவசியமானது எது என்று கேட்டால் யாரும் கண் என்றுதான் கூறுவர். கண்கள் உண்மையில் மிக அவசியமானவைதான். என்றாலும் கண்களைவிடவும் மிக மிக அவசியமான ஒரு உறுப்புதான் நமது காதுகள்.
அமெரிக்க பிரௌன் பல்கலைகழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் SETH HOROWITZ அவர்கள் "THE UNIVERSAL SENSE: HOW HEARING SHAPE THE MIND" என்ற ஆய்வு நூல் கடந்த சில மாதங்களுக்கு முன் வெளியாகி அறிஞர்கள் மத்தியில் பரபரப்பை ஏற்படுத்தியது.

அதில் அவர் மனிதனின் பார்வைப் புலனை விட செவிப்புலனே மிக மிக முக்கியமானது. அதன் செயல்பாடுகள் பார்வைத் திறனை விட பல மடங்கு சிறப்பிற்குரியவை என்று அறிவியல் ரீதியாக ஏராளமான சான்றுகளை காட்டி நிரூபிக்கிறார். பார்வையை விட செவி ஒரு மனிதனுக்கு மிக மிக முக்கியம் என்று ஆய்வு செய்து கூறுகிறார்.
எந்தளவு என்றால், அப்பேராசிரியர் தான் செவிடனாக இருப்பதை விட குருடனாக இருப்பதையே விரும்புவதாக கூறுகிறார். அந்நூலை வாசிப்போரும் அதனையே விரும்புவர். அந்த அளவு செவிப்புலன் மிக முக்கியமான ஒன்றாகும்.
பார்வையிழந்த ஒருவரால் நன்றாகப் பேச முடியும். ஆனால் கேள்விப்புலனை சிறுவயதிலே இழக்கும் குழந்தை வளரும்போது பேசவும் இயலாமல் வளர்வதைக் காணமுடியும். செவிப்புலன் இல்லாவிட்டால் பேச்சாற்றல் தானாகவே இல்லாதுபோகிறது.

'நாம் ஓர் அறைக்குள் இருந்தால் நமது பார்வை அவ் அறைச் சுவர்களுக்குள் வறையறுக்கப்படுகின்றன. ஆனால் நமது காதுகளோ அவ் அறைக்கு வெளியே தொலைவில் நடைபெறும் சப்தங்களையும் கேட்கும் ஆற்றல் படைத்தது.

இருளுக்குள் என்ன நடக்கின்றது என்பதை அறிய முடியாவிட்டாலும் செவிகளைப் பயன்படுத்தி என்ன நிகழ்கின்றது என்பதை அறிந்துகொள்ள முடியும். இவ்வாறு பல விடயங்களை வைத்துப் பார்க்கையில் செவிதான் புலணுறுப்புகளில் பிரதாணமானது என்பதை விளங்களாம்.
ஏனைய உறுப்புகளை விட செவிதான் பிரதானமானது என்பதை பேராசிரியர் கடந்த சில மாதங்களுக்கு கூறுவதற்கு 1400 வருடங்களுக்கு முன்பே, திருமறையும் திரு நபியின் கூற்றுகளும் செவியின் முக்கியத்துவத்தை அல்குர்ஆனில் குறைந்தது 20 இடங்களுக்கு மேல் செவியையும் பார்வையையும் பற்றிய வசனங்கள் வருகின்றன. இந்த இடங்களில் எல்லாம் அல்லாஹ் செவிக்கு முதல் இடம் கொடுத்து பின்புதான் பார்வையைப் பற்றிக் கூறுகின்றான்.

"அல்லாஹ் நாடினால் அவர்களுடைய கேள்விப் புலனையும், பார்வைகளையும் போக்கிவிடுவான்" (2:20)
"அல்லாஹ் உங்களுடைய செவிப்புலனையும், பார்க்கும் சக்தியையும் எடுத்துவிட்டு, உங்கள் இருதயங்களின் மீது முத்திரையிட்டு விடுவானானால்..." (6:46)
"உங்கள் செவிக்கும், பார்வைக்கும் உரிமையாளன் யார்?" (10:31)
"உங்களுக்குச் செவிப்புலனையும், பார்வைகளையும், இதயங்களையும் -நீங்கள் நன்றி செலுத்தும் பொருட்டு அவனே அமைத்தான்." (16:78)

இவ்வசனங்களையும் பாருங்கள். (17:36 / 23:78 / 32:9 / 41:20,22 / 41:44 / 45:23 / 43:40 / 46:26 / 47:23 / 67:23 / 76:2 / 16:78 / 32:9 / 76:2) 2 ஏராளமான வசனங்களில் அல்லாஹ் காதுக்கு முதல் இடம் கொடுத்துவிட்டு இரண்டாவதாகத்தான் கண்களை கூறுகிறான்.
அதனால்தான் தனது படைப்பாகிய மனிதனின் புலன்களில் செவிக்கு முக்கியத்துவம் கொடுத்த அல்லாஹ், தன்னைப் பற்றிக் கூறும்போதும் செவியையே முதன்மைப்படுத்தியுள்ளான்.
அல்குர் ஆனில் 49 இடங்களில் "அல்லாஹ் (தான்) அனைத்தையும் செவியுறுவோனும், அறிபவனுமாயிருக்கிறான்." என்று கூறுகிறான். அதில் 8 இடங்களில் "அல்லாஹ் அனைத்தையும் செவியுறுவோனும், பார்ப்பவனாகவும் இருக்கிறான்." என்று கூறுகின்றான். இவ்வாறு எல்லா வசனங்களிலும் அல்லாஹ் தன்னை செவியுறுவோன் என்று செவிக்கு முதலிடம் கொடுத்துள்ளான்.
செவி மடலால் காதுக்கு அழகும் பாதுகாப்பும் கிடைப்பதோடு ஒலி வரும் திசையையும் அதனால் அறிய முடிகிறது. பெண்கள் தோடு அணிவதும் இதில்தான். ஆடு,மாடு, மான் போன்ற பிற உயிரினங்கள், தங்கள் காது மடலைத் திருப்பியும் வளைத்தும் வரும் ஒலியைச் சேகரித்து உள்ளே அனுப்புகின்றன.
20 HZ (ஹேட்ஸ்) இதற்குக் குறைந்த ஒலியலைகள் Infrasonic என்றும் 20,000 HZ (ஹேட்ஸ்) இற்கு க் மேலுள்ள அதிர்வெண் ஒலியலைகள் Ultrasonic என்றும் அழைக்கப்படுகின்றன.
மனிதர்களுக்கு கேட்கக்கூடிய ஒலி அளவு 20 Hz முதல் 20,000 Hz வரை மட்டும்தான். இதற்கு மேலோ அல்லது கீழோ நம்மால் செவியேற்க முடியாது. ஆனால் சில மிருகங்களால் 20 HZ இற்கும் குறைந்த அதிர்வெண் ஒலிகளையும் 20,000 Hz இற்கும் மேலுள்ள ஒலியலைகளையும் செவியுற முடியும். இது அல்லாஹ் அமைத்து வைத்துள்ள ஒரு அருளாகும்.

உதாரணமாக யானைகள் மிகக்குறைந்த அதிர்வெண் ஒலியலைகளை 5 Hz-12,000 Hz கேட்கமுடியும். புறாவால் மிக மிக குறைந்த 1 Hz ஒலியலைகளையும் கேட்க முடியும். நாய் 50-45,000 Hz, பூனை 45-65,000 Hz அதிர்வெண்

ஒலியலைகளை கேட்க முடியும். மொட்டுக்கள் மலரும் சப்தம் 20,000 Hz ஐ விடவும் அதிகமான ஒலியலைகளைக் கொண்டது என்றால் ஆச்சரியப்படுவீர்கள். இவற்றை மனிதனால் கேட்க முடியாது.
இங்கு ஒரு அற்புதம் உள்ளது. மனிதனின் ரூஹ் கைப்பற்றப்படும் போதும், சுமந்துசெல்லும்போதும், ஜனாஸாவைத் தோளில்வைத்து மண்ணறையில் வேதனை செய்யப்படும்போதும் அவன் எழுப்பும் அலறல் ஓலத்தை மனிதர்களையும் ஜின்களையும் தவிர மற்ற ஜீவராசிகள் கேட்பதாக நபியவர்கள் கூறுகின்றார்கள் (புஹாரி).

அப்படியாயின் நம்மால் கேட்கமுடியாத அதிகூடிய சப்தத்தில் (20,000 Hz க்கு மேல்) அவர்கள் ஓலமிடுவதாகவும் இருக்கலாம். அல்லாஹ்வே அறிந்தவன்.
மிகப் பெரும் அருளாக செவியைத் தந்து அதில் பல அத்தாட்சிகளையும் வைத்த அல்லாஹ் நாம் அவனுக்கு நன்றி செலுத்த வேண்டும் என்றே விரும்புகின்றான்.
"உங்களுக்குச் செவிப்புலனையும், பார்வைகளையும், இதயங்களையும் -நீங்கள் நன்றி செலுத்தும் பொருட்டு அவனே அமைத்தான்." (16:78)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 125**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 42 )**

قُلْ اَرَءَيْتَكُمْ اِنْ اَتٰٮكُمْ عَذَابُ اللّٰهِ بَغْتَةً اَوْ جَهْرَةً هَلْ يُهْلَكُ اِلَّا الْقَوْمُ الظّٰلِمُوْنَ
"திடீரென்றோ, அல்லது முன் எச்சரிக்கையாகவோ அல்லாஹ்வின் வேதனை உங்களிடம் வந்துவிட்டால், (என்ன நிலை ஏற்படும் என்பதை நீங்கள் சிந்தித்தீர்களா?) அச்சமயம் அக்கிரமக்காரர்கள் தவிர வேறு யாரும் அழிக்கப்படுவார்களா? என்று (நபியே!) நீர் கேளும்.(குர்ஆன் : 6:47)
திருக்குர்ஆனில் இன்னொரு இடத்தில் ,
"நீங்கள் அறியாத நிலையில் திடீரென்று உங்களிடம் வேதனை வருவதற்கு முன்னரும், "அல்லாஹ் வின் கடமையில் நான் குறை வைத்ததற்காக எனக்குக் கேடு தான்; நான் கேலி செய்தவனாகி விட்டேனே" என்று எவரும் கூறுவதற்கு முன்னரும்,
"அல்லாஹ் எனக்கு நேர்வழி காட்டியிருந்தால் (அவனை) அஞ்சுவோரில் ஆகியிருப்பேனே" என்று கூறுவதற்கு முன்னரும், வேதனையைக் காணும் நேரத்தில்
"திரும்புதல் எனக்கு இருந்தால் நல்லோரில் ஆகியிருப்பேனே" என்று கூறுவதற்கு முன்னரும் உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு அருளப்பட்ட அழகானதைப் பின்பற்றுங்கள்!" ( குர்ஆன் 39:55-57)
அல்லாஹ் அவனுடைய அடியார்கள் மீது மாபெரும் அருள் உடையவன்; கருணை உடையவன். தன்னைத் தானே ارحم الراحمين-"அர்ஹமுர் ராஹிமீன்" -கருணையாளருக்கெல்லாம் மாபெரும் கருணையாளன் என்று புகழ்ந்து கொள்கிறான். அந்த புகழ்ச்சிக்கு வேறு யாரும் தகுதியுடையவர்கள் இல்லை.
"என் கோபத்தை விட எனது அன்பு,கருணை,அருள் தான் மிகைத்து நிற்குமென்று " தன் ஷிஃபத்துகளைப் பற்றி அல்லாஹ்சொல்கிறான்.

نَبِّئْ عِبَادِي أَنِّي أَنَا الْغَفُورُ الرَّحِيمُ
அல்லாஹ்தஆலா, தன் தூதருக்கு தன்னைப்பற்றி தன் அடியார்களுக்கு அறிமுகப்படுத்தும்படி கூறும்போது, நிச்சயமாக நான்தான் மகா மன்னிப்பாளன்,மகா கருணையுடையவன், மிக அன்புடையோன் என்று கூறுகிறான். (குர்ஆன் 15 : 49)

இப்படியெல்லாம் அல்லாஹ் தனது அருளைப் பற்றி,தனது அன்பைப் பற்றி,தனது கருணையைப் பற்றி,பாசத்தைப் பற்றி,இரக்கத்தைப் பற்றி,தனது மன்னிப்பை பற்றி,தயாளத் தன்மையைப் பற்றிச் சொல்கிறவன்.
அதே நேரத்தில் அவனது சட்ட வரம்புகள் மீறப்பட்டால், அவனுடைய கட்டளைகளுக்கு மாற்றமாக அடியார்கள் நடந்து கொண்டால், அல்லாஹ்வுடைய ஷரீஆவை மீறினால், அல்லாஹுு தஆலா வெறுத்த, சபித்த பாவங்களை மக்கள் செய்தால் அவர்களை தண்டிப்பதிலும் அல்லாஹ் மிகக் கடுமையானவன்.

وَأَنَّ عَذَابِي هُوَ الْعَذَابُ الْأَلِيمُ

நபியே! எனது மன்னிப்பு, கருணையைப் பற்றி சொல்கின்ற அதே நேரத்தில் எனது அடியார்களுக்கு இதையும் சொல்லி வையுங்கள் : எனது தண்டனை மாபெரும் கடுமையான தண்டனை ஆகும். (குர்ஆன் 15 : 50)
குர்ஆனில் அல்லாஹ் தன்னைப்பற்றி சொல்லும்போது, شديد العقاب-" ஷதீதுல் இகாப், شديد العذاب-ஷதீதுல் அதாப்" -தண்டனை கடுமையானவன். அல்லாஹ்வுடைய தண்டனையைப் போன்று வேறு யாரும் தண்டனை கொடுக்க முடியாது.ஸரீயுல் ஹிசாப்" அவன் விசாரிக்க வந்துவிட்டால் سريع الحساب-" விட விரைவாக தீவிரமாக வேறு யாரும் விசாரிக்க முடியாது

உளவியல் ரீதியாக அல்லாஹ் சுப்ஹானஹுு தஆலா மனித உணர்விலே சில மாற்றங்களை வைத்திருக்கிறான். எப்போது அந்த மாற்றங்களுக்கு தடை, அந்த மாற்றங்களுக்கு கண்டிப்பு, அந்த மாற்றங்களுக்குண்டான சட்டம் கடுமையாக இல்லை என்று சொன்னால் மனிதன் அதன் பக்கம் சாய்வது அவனது நஃப்ஸுுடைய இயல்பு ஆகும். அல்லாஹ் தஆலா அதிலிருந்து தடுக்கக் கூடியவர்களாக தான் முஸ்லிம்களை அமைத்திருக்கிறான்.
அல்லாஹ் தஆலா சில பாவங்களை தடுத்திருக்கிறான் என்றால் அது முஸ்லிம்கள் மீது மட்டும் அல்ல,மொத்த சமுதாயத்தின் மீதும் அந்த பாவத்தை அல்லாஹ் தடுத்திருக்கின்றான். உதாரணமாக ...
லூத் (அலை) எப்போது தனது சமுதாயத்தை அந்தத் தவறை செய்யக் கூடியவர்களாக பார்த்தார்களோ, அந்த சமுதாயம் ஈமான் கொண்டவர்களாக இல்லை.

லூத் (அலை) அவர்களை ஈமான் கொண்டவர்களாக இருந்திருந்தால் அந்த பாவத்தை அவர்கள் செய்திருக்க மாட்டார்கள். நீங்கள் என்னைக் கொண்டு நம்பிக்கைக் கொள்ளவில்லையே! என்னைக் கொண்டு ஈமான் கொள்ளவில்லையே! முதலிலே நீங்கள் ஈமான் கொள்ளுங்கள் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று லூத் (அலை) அவர்கள் அமைதியாக இருக்கவில்லை.
உடனடியாக அந்த சமுதாயம் செய்துக் கொண்டிருந்த தன் பாலின இச்சை (ஹோமோ செக்ஸ்) என்ற மோசமான செயலை அந்த சமுதாய மக்களுக்கு எடுத்துச் சொல்லி அதிலிருந்து அவர்களை திருத்த முயற்சிக்கிறார்கள். அதற்காக எவ்வளவு வேதனைப்பட்டார்கள் தெரியுமா? ஈமான் கொள்ளாத அந்த சமுதாயம் இவ்வளவு பயங்கரமான அசிங்கமான செயலை செய்கிறது.
ஒன்றுக்கு பலமுறை லூத் (அலை) அந்த சமுதாய மக்களிடம் செல்கிறார்கள்:

وَلُوطًا إِذْ قَالَ لِقَوْمِهِ أَتَأْتُونَ الْفَاحِشَةَ مَا سَبَقَكُمْ بِهَا مِنْ أَحَدٍ مِنَ الْعَالَمِينَ

லூத்தையும் (நம் தூதராக அவருடைய மக்களுக்கு நாம் அனுப்பி வைத்தோம்.) அவர் தம் மக்களை நோக்கி ‘‘உங்களுக்கு முன்னர் உலகத்தில் எவருமே செய்திராத மானக்கேடானதொரு காரியத்தையா நீங்கள் செய்கிறீர்கள்? (அல்குர்ஆன் 7 : 80)

إِنَّكُمْ لَتَأْتُونَ الرِّجَالَ شَهْوَةً مِنْ دُونِ النِّسَاءِ بَلْ أَنْتُمْ قَوْمٌ مُسْرِفُونَ

நிச்சயமாக நீங்கள் பெண்களை விட்டு (விட்டு) ஆண்களிடம் காம இச்சையைத் தணித்துக் கொள்ளச் செல்கிறீர்கள். நீங்கள் மிக்க வரம்பு மீறிய மக்களாக இருக்கிறீர்கள்'' என்று கூறினார். (அல்குர்ஆன்7 : 81)

எப்போது அந்த மக்கள் ஈமான் கொள்ளாமல் இந்த பாவத்திலிருந்தும் திருந்தவில்லையோ அல்லாஹ் ரப்புல் ஆலமின் மிகப்பெரிய வேதனையை அவர்கள் மீது இறக்கினான். அந்த வேதனை சாதாரணமான தண்டனை அல்ல.
மற்ற சமுதாய மக்கள் ஈமான் கொள்ளாதபோது அல்லாஹ் ரப்புல் ஆலமின் அவர்களையும் தண்டித்தான்; அவர்கள் மீதும் தன் கோபத்தை இறக்கினான்.
ஆனால்,யார் இந்த அசிங்கமான அநாகரிகமான செயலை செய்தார்களோ அவர்களின் மீது அல்லாஹ்வை நிராகரித்தவர்களின் மீது மட்டும் இறக்கப்படுகிற வேதனையைவிட பன்மடங்கு வேதனையை அல்லாஹ் இறக்கினான்.

ஒரு மனிதன் குஃப்ரிலே மட்டும் இருந்தால் அவன் மீது என்ன வேதனை இறக்கப்படுமோ அதைவிட பன்மடங்கு வேதனையை அல்லாஹ் ரப்புல் ஆலமின் இந்த ஒழுங்கீனமான செயலை செய்தவர்கள் மீது இறக்கினான்.
فَلَمَّا جَاءَ أَمْرُنَا جَعَلْنَا عَالِيَهَا سَافِلَهَا وَأَمْطَرْنَا عَلَيْهَا حِجَارَةً مِنْ سِجِّيلٍ مَنْضُودٍ
நம் கட்டளை(யின் நேரம்) வந்ததும் அவர்களுடைய ஊரை தலைக்கீழாக கவிழ்த்து விட்டோம். (அதற்கு முன்னர்) அவர்கள் மீது சுடப்பட்ட செங்கற்களை (மழையைப் போல்) பொழியச் செய்தோம். (குர்ஆன்11 : 82)
مُسَوَّمَةً عِنْدَ رَبِّكَ وَمَا هِيَ مِنَ الظَّالِمِينَ بِبَعِيدٍ
(எறியப்பட்ட செங்கல் ஒவ்வொன்றிலும்) உங்கள் இறைவனால் அடையாளமிடப் பட்டிருந்தது. (புரட்டப்பட்ட) அவ்வூர் இவ்வக்கிரமக்காரரர்களுக்கு வெகு தூரமுமல்ல; (விரும்பினால் அதை இவர்கள் நேரில் சென்று பார்த்துக் கொள்ளலாம்.) (குர்ஆன் 11 : 83)
ஜினாவில் இருந்து உருவாகக் கூடிய இன்னொரு பாவம் தான் இந்தப் ஹோமோ செக்ஸ் என்கிற பாவம்.
லூத் (அலை)அவர்களின் சமுதாயத்திலே பெண்களிலே இந்த பாவம் பரவியது.பிறகு ஆண்களிலே இந்த பாவம் பரவியது. லூத் நபியவர்களின் மனைவி சிலையாக மாற்றப்பட்டாள்.
அதைத்தான் ரப்புல் ஆலமீன் குர்ஆனிலே நமக்கு எச்சரிக்கை செய்து சொல்கிறான். இந்தப் பாவத்தை அவர்கள் செய்தால் அவர்களுக் மட்டும்தான் என்று இருந்து விடக்கூடாது.
وَمَا كُنَّا مُهْلِكِي الْقُرَى إِلَّا وَأَهْلُهَا ظَالِمُونَ
எந்த ஊராரையும் அவர்கள் அநியாயம் செய்து கொண்டிருக்கும் நிலையிலேயே தவிர நாம் அழிக்கவில்லை. (குர்ஆன் 28 : 59)
இறைத்தூதர் அவர்கள் ஒருமுறை பிரசங்கம் செய்து கொண்டிருந்த போது சொன்னார்கள் :
ரஸூல் (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: "அரபுகளுக்கு நாசம் உண்டாகட்டும். மிகப்பெரிய தீமை அவர்களை எதிர்நோக்கி இருக்கிறது. யஃஜுஜ் மஃஜுஜ் உடைய அந்த தடுப்பிலிருந்து இந்த அளவு இப்போது திறக்கப்பட்டிருக்கிறது என்று (ஸல்)அவர்கள் தனது கட்டைவிரலையும் அதற்கு அடுத்துள்ள விரலையும் வளையமாக வைத்துச் சொல்லிக் காட்டினார்கள்.
அப்போது ரஸூல் (ஸல்)அவர்களுடைய மனைவிமார்களில் ஒருவர் கேட்கிறார், அல்லாஹ்வின் தூதரே! எங்களில் நல்லவர் இருக்கும்போதும் எங்களுக்கு அழிவு வருமா?
(ரஸூல் (ஸல்) அவர்களின் பதிலை பாருங்கள், எவ்வளவு பயப்பட வேண்டிய விஷயத்தைச் சொல்கிறார்கள்:) ஆம். வரும். அல்லாஹ்வின் தண்டனை வரும், அல்லாஹ்வின் அழிவு வரும், அல்லாஹ்வின் சாபம் இறங்கும்.தீமை, பாவம் மிகைத்துவிட்டால் கண்டிப்பாக வரும். அறிவிப்பாளர் : ஜைனப்( ரலி ), புகாரி 3346.
அல்லாஹ்வும் அப்படித்தான் சொல்கிறான் :
وَاتَّقُوا فِتْنَةً لَا تُصِيبَنَّ الَّذِينَ ظَلَمُوا مِنْكُمْ خَاصَّةً وَاعْلَمُوا أَنَّ اللَّهَ شَدِيدُ الْعِقَابِ
நீங்கள் ஒரு வேதனையை பயந்துகொள்ளுங்கள். அது உங்களில் அநியாயக் காரர்களை மட்டுமே பிடிக்குமென்பதல்ல; (முடிவில் அது உங்களையும் சூழ்ந்து கொள்ளலாம்.) நிச்சயமாக அல்லாஹ் வேதனை செய்வதில் கடுமையானவன் என்பதையும் நீங்கள் உறுதியாக அறிந்து கொள்ளுங்கள். (குர்ஆன் 8 : 25)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 126
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 43 )

وَمَا نُرْسِلُ الْمُرْسَلِيْنَ اِلَّا مُبَشِّرِيْنَ وَمُنْذِرِيْنَ فَمَنْ اٰمَنَ وَاَصْلَحَ فَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ

(நன்மையைக் கொண்டு) நன்மாராயம் கூறுவோராகவும், (தீமையை விட்டு) எச்சரிக்கை செய்வோராகவுமேயன்றி நாம் தூதர்களை அனுப்பவில்லை; எனவே எவர் நம்பி, சீர்திருந்தி நடந்தார்களோ, அவர்களுக்கு அச்சமுமில்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்.

(குர்ஆன் : 6:48)

وَالَّذِيْنَ كَذَّبُوْا بِاٰيٰتِنَا يَمَسُّهُمُ الْعَذَابُ بِمَا كَانُوْا يَفْسُقُوْنَ

ஆனால் எவர் நம் திருவசனங்களைப் பொய்ப்பிக்கிறார்களோ அவர்களை அவர்கள் செய்து வரும் பாவங்களின் காரணமாக வேதனைப் பிடித்துக் கொள்ளும். (குர்ஆன் : 6:49)

" அல்முர்ஸலீன " என்பதற்கு நபிமார்கள் என்பது கருத்து. அதாவது இறைநம்பிக்கை கொண்ட அல்லாஹ்வின் அடியார்களுக்கு நற் பலன்கள் கிடைக்கும் என நற்செய்தி கூறுவோராகவும், அல்லாஹ்வை மறுக்கின்றவர்களுக்குத் தண்டனைகள் கிடைக்கும் என எச்சரிக்கை செய்வோராகவும்தான் இறைத்தூதர்களை நாம் அனுப்பினோம்.

எனவே இறைநம்பிக்கை கொண்டு (தம்மைச்) சீர்த்திருத்திக் கொள்வோருக்கு - அதாவது இறைத்தூதர்கள் கொண்டு வந்ததை உள்ளத்தால் ஏற்று. இறைத் தூதர்களைப் பின்பற்றி தம் செயல்களைச் செம்மைப் படுத்திக் கொள்வோருக்கு எவ்வித அச்சமும் இல்லை - அதாவது வருங்காலம் குறித்து அவர்கள் அஞ்சமாட்டார்கள் - அவர்கள் துயரப்படவும் மாட்டார்கள்" என்று அந்த வசனம் அறிவிக்கின்றது.

அதாவது கடந்த காலங்களில் அவர்கள் இழந்ததைக் குறித்தும், அவர்கள் உலகில் விட்டுச்சென்ற பணிகள் குறித்தும் கவலைப்பட மாட்டார்கள் -. ஏனெனில், , அவர்கள் விட்டுச் சென்ற பணிகளுக்கு அல்லாஹ் பொறுப்பாளனாகவும், பாதுகாவலனாகவும் இருக்கின்றான்

அடுத்த வசனம் (49), "நம் வசனங்களைப் பொய் எனக் கூறியோரை, அவர்கள் புரிந்த பாவங்களின் காரணத்தால் வேதனை தீண்டும் என்று எச்சரிக்கின்றது.

இறைத்தூதர்கள் கொண்டு வந்ததை ஏற்க மறுத்ததாலும், அல்லாஹ்வின் கட்டளைகளை மீறி தடை செய்யப் பட்ட செயல்களில் ஈடுபட்டு. எல்லை மீறி நடந்ததாலும் வேதனை அவர்களை அடையும் என்று இவ்வசனம் எச்சரிக்கின்றது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 127
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 44 )

قُلْ لَّاۤ اَقُوْلُ لَـكُمْ عِنْدِىْ خَزَآئِنُ اللّٰهِ وَلَاۤ اَعْلَمُ الْغَيْبَ وَلَاۤ اَقُوْلُ لَـكُمْ اِنِّىْ مَلَكٌ‌ اِنْ اَتَّبِعُ اِلَّا مَا يُوْحٰٓى اِلَىَّ‌ قُلْ هَلْ يَسْتَوِى الْاَعْمٰى وَالْبَصِيْرُ‌ اَفَلَا تَتَفَكَّرُوْنَ

(நபியே!) நீர் கூறும்: "என்னிடத்தில் அல்லாஹ்வின் பொக்கிஷங்கள் இருக்கின்றன என்று நான் உங்களிடம் கூறவில்லை. மறைவானவற்றை நான் அறியமாட்டேன்; நிச்சயமாக நான் ஒரு மலக்காக இருக்கின்றேன் என்றும் நான் உங்களிடம் சொல்லவில்லை; எனக்கு (வஹீயாக) அறிவிக்கப்பட்டதைத் தவிர (வேறு எதையும்) நான் பின்பற்றவில்லை." இன்னும் நீர் கூறும்: "குருடனும் பார்வையுடையவனும் சமமாவாரா? நீங்கள் சிந்திக்க வேண்டாமா?"

(குர்ஆன் : 6:50)

பெருமானார் (ஸல்) அவர்களிடம் ஒரு சமயம் எதிரிகள் வந்து, "நீர் அல்லாஹ்வின் தூதராக இருக்கிறீர்; அவனிடம் நீர் கேட்பதை அவன் கொடுப்பான் ஆகையால், எங்களைப் பெரும் செல்வந்தர்களாக ஆக்கிவிடுமாறு கேளும், எந்த அளவு எங்களது பொருளாதாரம் பெருக வேண்டுமென்றால் நாங்கள் யாரிடமும் எதற்கும் தேவைப்பட்டுக் கையேந்தக் கூடாது.
இவ்வுலகக் காரியங்களில் எதில் எங்களுக்கு நன்மையுண்டு. எதில் நஷ்டமுண்டு என்பதை முற்கூட்டியே நீர் எங்களுக்குத் தெரிவித்து விட வேண்டும். அப்பொழுது நாங்கள் பலனுள்ளதைத் தேடிக் கொள்வோம். நஷ்டமளிப்பதை அகற்றிக் கொள்வோம்.
நீர் அல்லாஹ்வின் தூதர் என்றால் மற்றைய மனிதர்களைப் போல் நீர் சாப்பிடுகிறீர்; தண்ணீர் அருந்துகிறீர்; பெண்களை மணம் முடித்துக் கொள்கிறீரே!" என்று கிண்டலாகவும் கூறினர்.அச்சமயம் தான் இவ்வசனம் இறக்கப்பட்டது. (காஜின், தன்தாவி முதலியன.)
வசன விளக்கம் :-
என்னிடம் அல்லாஹ்வின் பொக்கிஷங்கள் இருக்கின்றன என்று நான் எத்தச் சமயத்திலும் உங்களுக்குக் கூறமாட்டேன். அதெல்லாம் அல்லாஹ்விடமே இருக்கின்றன. அவன் நாடியோருக்கு அவற்றை வழங்குகிறான். நாடியோருக்குக் கொடுக்காமல் நிறுத்திக் கொள்கிறான். ஆகவே, இது அவனது அதிகாரத்தில் உள்ளதாகும். இதில் எனக்கு எத்தகைய சக்தியும் கிடையாது.
மறைவானவற்றை நான் அறியவும் மாட்டேன். அப்படி அறிந்திருந்தால் அல்லவா உங்களுக்கு எதில் நன்மையுண்டு; எதில் நட்டமுண்டு என்பதை முற்கூட்டியே நான் தெரிவிக்க முடியும்? அந்த அறிவு என்னிடம் இல்லை. மறைவானவற்றை அறிகிறவன் அல்லாஹ் ஒருவனேயாவான் எதில் நன்மையுண்டு; எதனை எப்போது செய்ய வேண்டுமென்பதை அவனே நன்கறிகிறவன்.
நான் ஒரு மலக்கு என்று உங்களுக்குக் கூறவும் மாட்டேன். நான் உங்களைப் போன்று ஒருமனிதனே மனிதனுக்குரிய தேவைகள் எனக்கும் இருக்கின்றன. நான் சாப்பிடுகிறேன், தண்ணீர் அருந்துகிறேன்; பெண்களை மண முடிக்கிறேன்; அத்துடன் நான் அல்லாஹ்வின் தூதராக இருப்பதால் எனக்கு அவன் வஹீ மூலம் சிலவற்றை அறிவிக்கிறான். அவற்றை உலகுக்கு நான் அறிவிக்கிறேன்.அம்முறையில் இறைவனால் எனக்கு வஹீ {தெய்வத்தூது) மூலம் அறிவிக்கப்பட்டதையல்லாமல் வேறு எதனையும் பின்பற்ற மாட்டேன்.
அவன் எனக்கு எதை அறிவிக்கிறானோ அதனை நான் கடைப்பிடித்து உங்களுக்கும் தெரிவிக்கிறேன்.
மறைவானவற்றை பற்றியோ கடந்த காலத்தைப் பற்றியோ, எதிர்காலத்தைப் பற்றியோ எதுவாயினும் அவன் **#அறிவித்தாலன்றி** எனக்குத் தெரியாது எனக் கூறுமாறு அறிவிக்கப்பட்டிருக்கிறது.
இவ்வசனத்தின் இறுதியில் இதனைப் பகுத்துணரும் பொருட்டு பொதுவாகக் குருடனும், பார்வையுடையவனும் சமமாவார்களா ? ஆகவே, நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா? அவ்வாறு நீங்கள் சிந்தித்துப் பார்க்கும் போது யார் அகக்கண் குருடர், யார் அகக் கண் பார்வையுடையவர் என்பதை நன்கு தெரிந்து கொள்வீர்கள்' எனக் கூறுமாறு அறிவிக்கப்படுகிறது.

இந்த வசனத்தை வஹ்ஹாபிகள் குர்ஆன் ஞான விளக்கமில்லாமல், நபி (ஸல்) அவர்கள் மறைவான ஞானம் இல்லை என்று தவறாக புரிந்து அதை ஒன்றும் தெரியாத மக்களிடம் ஆதரமாக காட்டுவார்கள்.
"என்னிடம் இறைவனின் பொக்கிஷங்கள் உள்ளன என்று நான் உங்களுக்குச் சொல்லவில்லை, நான் ஒரு மலக்கு என்று சொல்லவில்லை, நான் எனக்கு வெளிப்படுத்தப்பட்டதை மட்டுமே பின்பற்றுகிறேன்" என்று சொல்லுங்கள் மற்றும் பார்ப்பவர்களை நீங்கள் கருத்தில் கொள்ள மாட்டீர்களா?
(நபியே!) நீர் கூறும்: "என்னிடத்தில் அல்லாஹ்வின் பொக்கிஷங்கள் இருக்கின்றன என்று நான் உங்களிடம் கூறவில்லை. மறைவானவற்றை நான் அறியமாட்டேன்; நிச்சயமாக நான் ஒரு மலக்காக இருக்கின்றேன் என்றும் நான் உங்களிடம் சொல்லவில்லை; எனக்கு (வஹீயாக) அறிவிக்கப்பட்டதைத் தவிர (வேறு எதையும்) நான்

பின்பற்றவில்லை." இன்னும் நீர் கூறும்: ''குருடனும் பார்வையுடையவனும் சமமாவாரா? நீங்கள் சிந்திக்க வேண்டாமா?"
(அல்குர்ஆன்: 6:50)
= இறைவன் சகலவற்றையும் அறிந்தவன். இறைவனுக்கு தெரியாத எந்த ஒன்றுமில்லை.அந்த வசனத்தில் நான் மறைவானவற்றை அறியமாட்டேன் என்றால், **#நன்குகவனிக்கவும்** அதன் விளக்கம் நானாகவே அறிந்து கொள்ளமுடியாது. மாறாக அல்லாஹ் எனக்கு பிரத்தியேகமாக அறிவித்து தந்தே அந்த மறைவான விஷயத்தை அறிந்து கொள்வேன்.
= இந்த வசனத்தை தெளிவுபடுத்தித்தான் குர்ஆனில் மற்றுமொரு இடத்தில் பின்வருமாறு இப்படி அல்லாஹ் கூறுகிறான்.
= கீழ்கண்ட வசனத்தில் அவன் பொருந்திக் கொண்ட ரஸூல்மார்களுக்கும் மறைவான ஞானம் உண்டு என்பதை அல்லாஹ்வே கூறுகிறான்.
= (அவன் தான்) மறைவானாவற்றை அறிந்தவன்; எனவே, தான் மறைத்திருப்பவற்றை அவன் எவருக்கும் வெளியாக்கமாட்டான். தான் பொருந்திக் கொண்ட தூதருக்குத் தான் வெளிப்படுத்துவேன் என்று இறைவன் கூறுவதாக குர்ஆன் கூறுகிறது (குர்ஆன்: 72:26)
சான்று 1
கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அன்னவர்கள் கூறினார்கள்:
"மண்ணறையின் வேதனைக் குரலை நான் என் செவிகளால் கேட்பதே போன்று நீங்களும் கேட்பீர்களாயின், இனிமேல் எந்த ஜனாசாவையும் நல்லடக்கம் செய்யாதிருந்து விடுவீர்களோ என நான் அஞ்சுகிறேன் அத்தகைய அச்சம் எனக்கு இல்லையாயின், உங்களுக்கும் புதைகுழிகளில் இருப்பவர்களின் அவலக்குரலைச் செவியேற்க வைக்குமாறு பிரார்த்தனை செய்திருப்பேன்' என உத்தம நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அன்னவர்கள் உரைத்தார்கள். ( ஸைத் பின் ஸாபித் (ரலியல்லாஹு அன்ஹு) முஸ்லிம், மிஷ்காத்)
சான்று 2
நபி (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அவர்கள் (ஒருமுறை) எங்களிடையே மிம்பரில் எழுந்து நின்று, படைப்பின் ஆரம்பத்தைக் குறித்து எங்களுக்குச் செய்தி அறிவித்தார்கள்.
(எதுவரை என்றால் படைப்பின் தொடக்கம் முதல் மறுமை வாழ்வு வரை) சொர்க்கவாசிகள் (சொர்க்கத்தில்) தாம் தங்குமிடங்களில் புகும் வரையும் நரகவாசிகள் (நரகத்தில்) தாம் தங்குமிடங்களில் புகும் வரையும் நரகவாசிகள் (நரகத்தில்) தாம் தங்குமிடங்களில் புகும் வரையும் அறிவித்தார்கள். அதை நினைவில் வைத்தவர் நினைவில் வைத்துக் கொண்டார். அதை மறந்தவர் மறந்துவிட்டார். ( உமர் (ரலியல்லாஹு அன்ஹு) புகாரி மிஷ்காத்)
சான்று 3;
அனஸ் (ரலி) அறிவித்தார்கள், (ஒரு முறை) நபி(ஸல்) அவர்களும் அபூபக்ர், உமர், உஸ்மான்(ரலி) ஆகியோரும் உஹுது மலை மீது ஏறினார்கள். அது அவர்களுடன் நடுங்கியது. அப்போது நபி(ஸல்) அவர்கள், "உஹதே! அசையாமல் இரு! ஏனெனில், உன் மீது ஓர் இறைத்தூதரும் (நானும்), ஒரு சித்தீக்கும், இரண்டு உயிர்த் தியாகிகளும் உள்ளனர்" என்று கூறினார்கள். ( ஷஹீஹ் புஹாரி )
குறிப்பு:நபிகள் நாயகம் அவர்களின் மறைவிற்கு பின்னால்.இரு ஸஹாபாக்களும் ஷஹீதாக்கப்படுவார்கள் என்று உயிருடன் இருக்கும் போதே அறிவித்து விட்டார்கள்.
சான்று 4
நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மதீனாவின் கோட்டைகளில் ஒரு கோட்டையின் மீதிருந்து நோட்டமிட்டார்கள்.
பிறகு, நான் பார்ப்பதை நீங்கள் பார்க்கிறீர்களா? நான் உங்கள் வீடுகள் நெடுகிலும் (வருங்காலத்தில்) குழப்பங்கள் விளையக் கூடிய இடங்களை மழைத்துளிகள் விழும் இடங்களைப் (பார்ப்பதைப்) போன்று பார்க்கிறேன்!" என்று கூறினார்கள். உஸாமா (ரலியல்லாஹு அன்ஹு) ( புகாரி )

இதெல்லாம் நபி(ஸல்) அவர்களுக்கு வழங்கப்பட்ட மறைவான ஞானம்தானே !

## **அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 128**
## **(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 45 )**

وَاَنْذِرْ بِهِ الَّذِيْنَ يَخَافُوْنَ اَنْ يُّحْشَرُوْۤا اِلٰى رَبِّهِمْ لَـيْسَ لَهُمْ مِّنْ دُوْنِهٖ وَلِىٌّ وَّلَا شَفِيْعٌ لَّعَلَّهُمْ يَتَّقُوْنَ
இன்னும் எவர் தங்கள் இறைவன் முன் (மறுமையில்) கொண்டு வரப்படுவது பற்றி பயப்படுகிறார்களோ அவர்களுக்கு (இவ்வேதத்தைக் கொண்டு) எச்சரிக்கை செய்யும் - (பாவத்திலிருந்து நீங்கி) அவர்கள் பயபக்தியுடையோராகும் பொருட்டு; அவனைத் தவிர அவர்களுக்குப் பாதுகாப்பளிப்பவரோ, பரிந்து பேசுபவரோ வேறு யாரும் இல்லை. (குர்ஆன் : 6:51)
உண்மை விசுவாசிகள் இறுதிநாள் பற்றியும், அதில் நடைபெறும் பயங்காமான நிகழ்ச்சிகள் பற்றியும் அதில் தங்களது நிலை என்னவாகுமோ என சதா சிந்தித்துக் கொண்டே இருப்பர்.
அவர்களுக்கு இந்தத் திருக்குர்ஆனைக் கொண்டு அந்நாள் பற்றி மீண்டும் வலியுறுத்திக் கூறி எச்சரிக்குமாறு இவ்வசனத்தில் அறிவிக்கப்படுகிறது.
இவ்வாறு எச்சரிக்கும் பொழுது அந்த விசுவாசிகளுக்கு மீண்டும் அதிக அளவு அந்நாளைப் பற்றி அறிந்துகொள்ளவும், பாவங்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் சந்தர்ப்பம் கிடைக்கிறது.
அத்துடன் மற்றவர்களுக்கும் இவ்வெச்சரிக்கை மூலம் திருந்துவதற்குரிய வாய்ப்புக் கிட்டுகிறது.
ஆகவே தான், இவ்வசனத்தில் எவர் தங்களுடைய இரட்சகனிடம் மறுமைநாளில் ஒன்று கூட்டப்படுவோம் என்று பயப்படுகின்றனரோ அவர்கள் பாவங்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துப் பரிசுத்தம் செய்து கொள்ளும் பொருட்டு அவர்களுக்கு இவ்வேதத்தின் போதனைகளைக் கொண்டு நபியே! நீர் எச்சரிக்கை செய்யும் என்று கூறப்படுகிறது.
அப்படி யாரும் ஷபாஅத் பரிந்துரை பேச முன்வருவது என்றாலும் **#அவனுடையஅனுமதியின்றிவரமுடியாது**, மறுமை நாளில் யார் யார் ஷபாஅத் பரிந்துரை செய்வார்கள் என்பது பற்றிய தெளிவு
மறுமை நாளில் ஷபாஅத் எனும் பரிந்துரையானது, அல்லாஹ்வின் அனுமதி பெற்று அவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட அடியார்களும், அது அல்லாத அமல்களும் ஏகத்துவ கலிமாவை மொழிந்த அடியார்களுக்காக வேண்டி அல்லாஹ்விடம் பரிந்து பேசுவதாகவும். இவை ஷபாஅத் குப்ரா என்றும் ஷபாஅத் ஷுஹ்ரா என்றும் இரு விதமாக பார்க்கப்படுகிறது.
ஷபாஅத் குப்ரா எனும் மாபெரும் பரிந்துரை இறைதூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டுமே பிரயோத்திகமாக கொடுக்கப்பட்டது.
ஷபாஅத் ஷுஹ்ரா எனும் சிறிய பரிந்துரை ஏனைய நபிமார்கள், நல்லடியார்கள், மலக்குகள், அது அல்லாத சாலிஹான நல்லமல்கள் என்பனவும் அல்லாஹ்வின் அனுமதி கொண்டு மறுமை நாளில் செய்யும் பரிந்துரையாகும்.
அவனுடைய அனுமதியின்றி அவனிடம் பரிந்து பேசுபவன் அவன்.
குர்ஆன் கூறுகிறது அவன் அனுமதியின்றி அவனிடம் யார் பரிந்துரை செய்ய முடியும்? ( குர்ஆன் 2: 255) يومية لا تنفع الشفاعة إلا من أذن له الرحمن ورضى له قولا
குர்ஆன் கூறுகிறது அந்நாளில் அர்ரஹ்மான் எவரை அனுமதித்து, எவருடைய பேச்சை உவந்து கொள்கிறானோ, அவர்களைத் தவிர வேறு எவருடைய ஷபாஅத்து (பரிந்துரையும்) பலனளிக்காது.(குர்ஆன் 20 :109)
அவன் அனுமதித்தவர்களைத் தவிர அவனிடம் பரிந்துரை செய்வதால் எந்தப் பயனும் இல்லை

குர்ஆன் கூறுகிறது அன்றியும், அவன் எவருக்கு அனுமதி கொடுக்கிறானோ அவர்களைத் தவிர, அவனிடத்தில் எந்த பரிந்துரையும் பயனளிக்காது. (குர்ஆன் 34 : 23)
மேலும் அவர்கள் திருப்தியடைந்தவரைத் தவிர பரிந்துரை செய்ய மாட்டார்கள்
குர்ஆன் கூறுகிறது: "அவர்கள் யாருக்கும் பரிந்துரை செய்வதில்லை; எவருக்காகப் பரிந்துரை செய்வதை அல்லாஹ் விரும்புகின்றானோ அவர்களுக்காகத் தவிர! "(குர்ஆன் 21: 28)
மறுமை நாளில் சுயமாக எவர்களும் பரிந்துரை செய்ய மாட்டார்கள், இருப்பினும் எவர்களுக்கு அல்லாஹ் பரிந்துரை செய்ய நாடுகிறானோ அவர்களை தவிர என்ற மேற்கூறிய இறைவசனங்களின் கூற்று அல்லாஹ்வினால் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலர்கள் அவனின் அனுமதி கொண்டு ஷபாஅத் பரிந்துரை செய்வார்கள் என்ற கருத்தை உறுதிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 129
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 46 )

وَلَا تَطْرُدِ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدٰوةِ وَالْعَشِىِّ يُرِيْدُوْنَ وَجْهَهٗ مَا عَلَيْكَ مِنْ حِسَابِهِمْ مِّنْ شَىْءٍ وَّمَا مِنْ حِسَابِكَ عَلَيْهِمْ مِّنْ شَىْءٍ فَتَطْرُدَهُمْ فَتَكُوْنَ مِنَ الظّٰلِمِيْنَ
(நபியே!) தங்கள் இறைவனுடைய திருப் பொருத்தத்தை நாடி, எவர் காலையிலும் மாலையிலும், அவனை(ப் பிரார்த்தித்து) அழைத்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்களை நீர் விரட்டி விடாதீர்; அவர்களுடைய கேள்வி கணக்குப் பற்றி உம்மீது பொறுப்பில்லை, உம்முடைய கேள்வி கணக்குப் பற்றி அவர்கள் மீதும் யாதொரு பொறுப்புமில்லை - எனவே நீர் அவர்களை விரட்டி விட்டால், நீரும் அநியாயம் செய்பவர்களில் ஒருவராகி விடுவீர். (குர்ஆன் : 6:52)
இறக்கப்பட்ட வரலாறு:-
(1) ஹள்ரத் ஸஅது பின் அபீவக்காஸ் (ரலி) கூறியதாவது: "நான், அப்துல்லாஹ் பின் மஸ்ஊது மற்றும் ஹுஜைல் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர், ஹள்ரத் பிலால், பெயர் தெரியாத மற்றிருவர், ஆக, நாங்கள் அறுவர் பெருமானார் (ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம்."
"அப்பொழுது அங்கு வந்த எதிரிகள், பெருமானார் (ஸல்)அவர்களை நோக்கி, "நாங்கள் உம்மிடம் பேசுவதென்றால் இவர்கள் எங்களுடன் சமமாக இருக்கக் கூடாது. இவர்களை அகற்றி விடும்" என்று கூறினர்.
பெருமானார்(ஸல்) அவர்கள் மனத்தில் ஏதோ தோன்றிற்று. இது ஒரு சம்பவம்.(நூல்: முஸ்லிம்)
2) ஹளரத் சுஹைப் ( ரலி), அம்மார் (ரலி), கப்பாப் (ரலி), பிலால் (ரலி), ஸல்மான் (ரலி) போன்ற சில ஸஹாபாக்கள் மிகவும் ஏழைகளாக இருந்தார்கள். நபி (ஸல்) அவர்களிடம், இவர்கள் இருக்கும் போது, குறைஷித் தலைவர்கள் அங்கு வரவிரும்பி, "இந்த அடிமைகளைத் தூத்தி விடுங்கள். அப்படியானால்தான் நாங்கள் உங்களிடம் வர முடியும்" என்றனர்.
அதற்கு நபி ( ஸல்) அவர்கள் "மூமின்களை நாம் துரத்தி விட மாட்டேன்" என்று கூறினார்கள்.
அதற்கவர்கள்"அவ்வாறாயின், தங்களிடம் அறபித் தூதுவக் கூடத்தினர் வருகிறார்கள். அவர்கள் வரும்போது, நாங்களும் இவர்களும் ஒன்று சேர்ந்திருந்தால், எங்களது கௌரவத்தை
அத்தூதுவர்கள் உணர மாட்டார்கள். அவர்களுடன் எங்களையும் அத்தூதுவர்கள் பார்ப்பதை நாங்கள் வெட்கப்படுகிறோம். ஆதலால்.நாங்கள் வரும் சமயத்தில் அவர்களை அகற்றி விடுங்கள். நாங்கள் வந்து விட்டுப்போன பிறகு, உங்களுக்கு விருப்பமிருந்தால்,அவர்களைத் திரும்பவும் அழைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள்.
குறைஷித் தலைவர்கள் ஈமான் கொண்டு விட வேண்டும் என்ற விருப்பம் நபி (ஸல்) அவர்களுக்கு அதிகமிருந்ததால், அவர்களது இவ்வேண்டுகோளை அங்கீகரித்து, ஏழை ஸஹாபாக்களைக் கொஞ்ச நேரத்திற்கு

விலகி இருக்கும்படி கூற விரும்பினார்கள். அப்போது இந்த ஆயத்து அருளப்பட்டது. ( அறிவித்தவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊது (ரலி) - காஜின், ஹக்கானி, ரூஹுல் மஆனி, தன்தாவி)
அவர்களுடைய கணக்கிலிருந்து எந்த ஒன்றும் உம்மீது இல்லை. அவர்கள் ஏன் ஏழைகளாக இருக்கின்றார்கள் என நீர் விசாரிக்கப்பட மாட்டீர். அவர்களுடைய கணக்கை நீர் காட்ட வேண்டியதுமில்லை. அவர்களுக்கு நீர் உணவளிக்க வேண்டிய பொறுப்பும் இல்லை
இவ்வாறே உம்முடைய கணக்கிலிருந்துஅவர்கள் மீது எந்த ஒன்றுமில்லை. எல்லோருக்கும் உணவளித்துக் காப்பாற்றுகிறவன் அல்லாஹ் ஒருவனேயாவான்.
இந்நிலையில் ஒரு சில செல்வந்தர்களின் விருப்பத்திற்காக அவர்களைத் திருப்திப் படுத்துவதற்காக நீர் அவர்களை உமது சபையிலிருந்து அகற்றினால் அப்பொழுது நீர் அநியாயக்காரர்களில் ஒருவராக ஆகிவிடுவீர்.
பெருமானார் (ஸல்) அவர்கள் அந்த ஏழைகளை விரட்டி விடவில்லை. ஆயினும். அல்லாஹ்வின் உத்தரவு என்னவென்றால், அவனுடைய நபியாக இருந்தாலும், தூதராக இருந்தாலும், அவனுடைய நேசச் செல்வத்தர்களாக இருந்தாலும் ஏழைகளிடமே முதல் அன்பு செலுத்தி அவர்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். குறிப்பாக அல்லாஹ்வின் பக்தர்களாக அவ் ஏழைகள் இருப்பின் இன்னும் அதிக அளவு அவர்களை கௌரவிக்க வேண்டும்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 130
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 47 )

وَكَذٰلِكَ فَتَنَّا بَعْضَهُمْ بِبَعْضٍ لِّيَقُوْلُوْٓا اَهٰٓؤُلَاۤءِ مَنَّ اللّٰهُ عَلَيْهِمْ مِّنْ بَيْنِنَا اَلَيْسَ اللّٰهُ بِاَعْلَمَ بِالشّٰكِرِيْنَ
அவ்வாறே "நம்மை விட (ஏழைகளாகிய) இவர்கள் மீதா அல்லாஹ் உபகாரம் செய்து விட்டான்?" என்று (செல்வந்தர்களாகிய) அவர்கள் கூறுவதற்காக அவர்களில் சிலரை சிலரைக் கொண்டு நாம் சோதித்தோம். நன்றி செலுத்துகிறவர்களை அல்லாஹ் நன்கு அறிகிறவனில்லையா? (குர்ஆன் : 6:53)
500 ரூபாய் மினிமம் பேலன்ஸ மெயிண்ட்டெய்ன் பண்ண முடியாமல் மாசக் கடைசில எடுத்து அதை கொண்டு போய் கல்யாண வீட்டுக்கு மொய் எழுதுறான் பாருங்க அவன் தான் lower மிடில் கிளாஸ்.
"யக்கா நீங்க ரேசன்ல அரிசி வாங்க மாட்டியல்லா? கார்ட தாரியலாக்கா? பிள்ளைளுக்கு மூணு நேரமும் ரேசன் அரிசிய தானக்கா ஆக்கி போட வேண்டியது இருக்கு? வாங்குற 35 கிலோ அரிசி காண மாட்டேங்குதுக்கா, வளர்ற பிள்ளைல் பார்த்தியலா?"- அப்படினு நம்ம வீட்டுக்கும் ஒருத்தங்க கேட்டு வர்றாங்க பாருங்க அந்த அக்கா ஏழை. அப்படினா தர்மம் எடுக்குறவங்க? மேலே சொன்ன அக்கா அப்பர் (upper) ஏழை, தர்மம் எடுக்குறவங்க அடிமட்ட ஏழை.
அதே ரேசன் கடையில "நாய்க்கு ரேசன் அரிசி வாங்க வந்தேன்" அப்படினு பார்க்குறவங்ககிட்ட எல்லாம் சொல்லிட்டு, ஒருத்தர் வெள்ளையும் சொல்லையுமா நிப்பாரே அவர் தான் நம்ம மிஸ்டர். அப்பர் மிடில் கிளாஸ்.
இது பரிதாப்பட்ட ஜனம். வெளியே தன்னை பணக்காரனா காமிச்சிக்கணும் அதுக்காகவாவது கதர் வெள்ளை சட்டையை பத்து வாங்கி வச்சிக்கணும் அதே நேரம் பேங்க்ல பேலன்ஸூம் காலியாகிடக் கூடாது.
எழுபதாயிரம் சம்பளம், 5 EMI ஓடுது, மாசக்கடைசியில கையை தான் பிசைய வேண்டியது இருக்கு, பேசாமல் இமயமலை, பனிமலைனு எங்கேயாச்சும் ஓடி போயிடலாம் போல இருக்குனு எவர் ஒருவர் அதிகம் புலம்புறாரோ அவர் தான் அப்பர் மிடில் கிளாஸ்.
டீ கடையில் ஒரு பெருங்கூட்டம் நிக்குதே? அந்த கூட்டம் வேற யாரும் இல்லை இந்த ரெண்டு மிடில் கிளாஸூம் தான்.
அப்புறம் பணக்காரன் யாருனு கேட்கலாம்?

பேங்க்கில் வேலை செய்யும் மேலாளர்களுக்கு மட்டுமே தெரிஞ்ச சிதம்பர ரகசியம் இது. ஊருக்குள்ள எவர் ஒருவர் அடிக்கடி பேங்க் மேனஜரை பார்க்க போயிட்டு அவங்க கூட ஒரு நல்லுறவில் இருக்கணும்னு நினைக்கிறாரோ அவர் தான் அந்த ஊருக்குள்ள கை உசந்த பார்ட்டி.
நீங்க நம்புங்க நம்பாம போங்க, ஆனால் நிஜமா அந்த அரசாங்க வங்கி மேலாளரை அடிக்கடி வந்து சந்திக்கிற அந்த ஒருவனிடம் இருக்குற பணம் அந்த ஸ்ட்டேட் பேங்க் மேனேஜரிடம் கூட இருக்காது.
அப்படினா பொருளாதார பார்வையில் இங்கிலாந்து எலிசபெத் மகாராணி போன்றோர் எல்லாம் யாருனு கேட்டீங்கனா, அவங்க எல்லாம் ராயல் ஃபேமிலி.
அப்படினா அம்பானி அதானி போன்றவர்கள் எல்லாம் ராயல் இல்லையா அப்படினு கேட்டால், அவர்கள் ராயல் இல்லை ஆனால் செல்வந்தர்கள். ஓஹோ!!! ஆங்கிலத்தில் சொன்னா மட்டும் வேற அர்த்தம் ஆகிடுமாக்கும் அப்படினு கேட்காதீங்க, புரிஞ்சிக்கோங்கப்பா ப்ளிஸ்.
இப்படி ஏழை, பரம ஏழை, அப்பர் மிடில் கிளாஸ், லோயர் மிடில் கிளாஸ், பணக்காரன், செல்வந்தர், ராயல் அப்படி இப்படினு ஏகப்பட்ட வெரட்டி மனிதர்களில் இருக்கு.
அப்படினா அந்த துபாய், சௌதி போன்ற அரேபிய நாடுகளில் உட்கார்ந்துட்டு ஆளுக்கொரு தனி விமானம் வச்சிகிட்டு அங்கேயும் இங்கேயும் ஸ்வைங் ஸ்வைங்னு பறந்துகிட்டே டீல் பேசுறாங்களே அவங்க யாரு?
பேரம் பேசுறவங்க. நாம கீரைக்கார அக்காகிட்ட பத்து ரூபாய்க்கு பேரம் பேசுவோம், அவங்க மில்லியன் ட்ரில்லியன்ல பேரம் பேசுவாங்க. சோ அவங்களுக்கு மில்லியனர்ஸ் அப்படினு ஒரு பெயரை வச்சி விட்டுட்டாங்க.
இப்படி எல்லாம் உலகம் ஒரு கால்குலேஷன் போட்டாலும் ,எவன் ஒருவன் போதும் என்ற மனதுடன் வாழ்கிறானோ அவன் பணக்காரன், எவன் ஒருவன் தன்னிடம் 2000 ரூபாய் கடன் கேட்கும் தோழனுக்கு 500 ரூபாயாச்சும் குடுத்து உதவுவோம்னு நினைக்கிறானோ அவன் மிடில் கிளாஸ்,
எவன் ஒருவன் எவ்வளவு பணம் வந்தாலும் புலம்பிகிட்டும் முறுமுறுத்துகிட்டும், "ச்சே இதெல்லாம் என்ன வாழ்க்கைனு " கசந்து கிட்டும் இருக்கானோ அவன் பரம ஏழை. அவ்வளவு தான்.
சரி, இப்போ மேற்கண்ட வசனத்தின் விளக்கத்திற்கு வருவோம்.
உலகில் ஒரு நிலையிலுள்ளவத்தளை வேறொரு நிலையிலுள்ளவர்களைக் கொண்டு அல்லாஹ் சோதிக்கிறான்.
இவர்களில் நன்றியுள்ளவர்கள் யார் என்பதை உலகினருக்கு அறிவிப்பதே அவனது சோதனையின் நோக்கமாகும்.
சோதனை :- செல்வந்தரை ஏழையைக் கொண்டும், ஏழையை செல்வந்தரைக் கொண்டும், மேல் மட்டத்திலுள்ளவரை கீழ்மட்டத்திலுள்ள வரைக் கொண்டும், கீழ் மட்டத்திலுள்ள வரை மேல் மட்டத்திலுள்ள வரைக் கொண்டும் அல்லாஹ் சோதிப்பது நிதர்சனமானது.
ஒவ்வொரு தன்மையுடையவரும் அவருக்கு மாறான தன்மையுடையவர் மூலம் சோதிக்கப்படுகின்றனர்.
செல்வந்தர்கள், மேல் மட்டத்தில் உள்ளவர்கள், ஏழைகள் மீதும், கீழ்மட்டத்தில் உள்ளவர்கள் மீதும் பொறாமை கொண்டு கெடுதல்கள் செய்கின்றனர். இது எதிரிடையானவர்களுக்குப் பலத்த சோதனையாக அமைகிறது.
நிலைமை மாறி ஏழையும், தாழ்ந்தவரும் செல்வந்தருக்கும் மேல் மட்டத்தாருக்கும் தொல்லை விளைவிக்கவோ புரட்சி செய்து கவிழ்க்கவோ முற்பட்டு விடுகின்றனர். இது மற்றவர்களுக்கு பெரும் சோதனையாக மாறிவிடுகிறது.
தன்னைப்பற்றி உயர்வாக நினைத்துக் கொண்டிருக்கும் ஒருவர். சாதாரண ஒரு மனிதனால் கவிழ்க்கப் பட்டு விடுகிறார். சாமானிய ஒருவன், அந்தஸ்துள்ள ஒருவரால் பழிவாங்கவும் பட்டு விடுகிறான்.
இத்தகைய சோதனைகளையெல்லாம் உள்ளடக்கியே இவ்வசனத்தில் அவர்களில் சிலரை சிலரைக் கொண்டு சோதித்தோம் என்கிறான்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 131**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 48 )**

وَاِذَا جَآءَكَ الَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِاٰيٰتِنَا فَقُلْ سَلٰمٌ عَلَيْكُمْ كَتَبَ رَبُّكُمْ عَلٰى نَفْسِهِ الرَّحْمَةَ ۙ اَنَّهٗ مَنْ عَمِلَ مِنْكُمْ سُوْٓءًا بِجَهَالَةٍ ثُمَّ تَابَ مِنْ بَعْدِهٖ وَاَصْلَحَ ۙ فَاَنَّهٗ غَفُوْرٌ رَّحِيْمٌ
நம் வசனங்களை நம்பியவர்கள் உம்மிடம் வந்தால், "ஸலாமுன் அலைக்கும் (உங்கள் மீது சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக)" என்று (நபியே!) நீர் கூறும், உங்கள் இறைவன் கிருபை செய்வதைத் தன் மீது கடமையாக்கிக் கொண்டான்; உங்களில் எவரேனும் அறியாமையினால் ஒரு தீமையைச் செய்து விட்டு அதற்குப் பின், பாவத்தை விட்டும் திரும்பி, திருத்திக் கொண்டால், நிச்சயமாக அவன் (அல்லாஹ்) மன்னிப்பவனாகவும், மிக்க கருணையுடையவனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 6:54)
முன்னருள்ள வசனத்தில் அல்லாஹ்வின் நல்லடியார்களான ஏழைகளை விரட்டக்கூடாது என உத்தரவிடப்பட்டது. அத்தகையோர் உங்களிடம் வந்தால் நீங்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை விளக்கி இவ்வசனம் இறக்கப்பட்டுள்ளது.
இத்தகைய நல்லடியார்கள் நம்முடைய வசனங்களை உண்மையாகவே விசுவாசம் கொண்டவர்கள். இவர்கள் அடிக்கடி நபியே உம்மிடம் வருவார்கள். அப்படி அவர்கள் உம்மிடம் வந்தார்களானால் (''அஸ்ஸலாமு அலைக்கும்") "உங்கள் மீது சாந்தியுண்டாவதாக" என்று கூறி முகமலர்ந்து அவர்களை நீர் வரவேற்க வேண்டும். அவர்கள் அல்லாஹ்வின் அன்பர்களாகையால் அவர்களை நோக்கி, உங்களுடைய இரட்சகன் உங்களுக்குக் கிருபை செய்வதைத் தன்மீது விதியாக்கிக் கொண்டான் என்று அவர்களுக்கு நல்லாசி கூற வேண்டும்.
சிற்சில சந்தர்ப்பங்களில் உணர்ச்சி வசப்பட்டு உங்களிலிருந்து எவராவது அறியாமையின் காரணத்தால் தீமையையும், பாவத்தையும் செய்துவிட்டு அதன் பின்னர் உணர்ந்து வருந்தி பாவமன்னிப்புக் கோரிக்கொண்டால், நிச்சயமாக அல்லாஹ் அவற்றை மிகவும் மன்னிக்கிறவன் அவன் தன்மீது கிருபையை விதித்துக் கொண்டிருப்பதால் உங்கள் மீது நிகரற்ற அன்பு உள்ளவன் என்று அவர்களுக்கு நற்செய்தி கூறும் என்பதும் இவ்வசனத்தின் கருத்தாகும்.
ஹஜ்ரத் அபூஸாத் அல் குத்ரிய்யி (ரலி) அவர்கள் அறிவித்ததாவது:
''(மக்காவிலிருந்து மதீனாவுக்கு வந்து குடியேறிய ஏழை முஸ்லிம்களான) 'முஹாஜிரீன்'களுடன் நான் அமர்ந்திருந்தேன். அவர்களுக்குப் போதிய உடை இல்லாத காரணத்தால் சிலர் சிலரைக் கொண்டு மறைத்துக் கொண்டிருந்தனர். ஒருவர் குர்ஆனிலிருந்து சில வசனங்கள ஓதிக்கொண்டிருந்தார்.
"அச்சமயம் பெருமானார் (ஸல்) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். அவர்களைக் கண்ட குர்ஆன் ஓதுபவர் நிறுத்திக் கொண்டார். பெருமானார் (ஸல்) அவர்கள் எங்களுக்கு ஸலாம் கூறிவிட்டு, "என்ன செய்து கொண்டிருந்தீர்கள் ? " என்று கேட்டார்கள்.
"ஒருவர் ஓதிக் கொண்டிருந்தார். அல்லாஹ்வின் வேதமான அதை நாங்கள் செவியேற்று கொண்டிருந்தோம்" என்று கூறினோம்.
"நான் எனது கூட்டத்தினரில் எவருடனும் பொறுமையாக அமர்ந்திருக்க வேண்டுமென்று என உத்தாவிட்ட அல்லாஹ்விற்கே எல்லாப்புகழும் உரியன " என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறிக்கொண்டே எங்களுக்கு நடுவில் அமர்ந்து கொண்டார்கள்.
பின்னர் தங்களுக்கு அருகில் வருமாறு அனைவரையும் தங்கள் திருகரத்தால் சைகை காட்டினார்கள் தாங்கள் எவ்லோரும் ஒன்றாக இணைத்து அமர்ந்து கொண்டோம்.
எல்லோரின் முகங்களும் மலர்ந்திருந்தன.
அப்பால் பெருமானார் (ஸல்) அவர்கள், "ஏழை முஹாஜிர்களே ! இறுதி நாளில் சம்பூரண ஒளி உங்களுக்கு உண்டு எனும் நற்செய்தியைப் பெற்றுக் கொள்ளுங்கள். செல்வந்தர்களுக்கு அரை நாள் முன்னதாக நீங்கள் சுவனம் புகுந்துவிடுவீர்கள். அ(ரை நாள் என்ப)து (இவ்வுலகின் கணக்குப்படி ) ஐநூறு ஆண்டுகளாகும் என்று கூறினார்கள்"

( அல்ஹதீது நூல் : அபூதாவூது )
அல்லாஹ்வை உண்மையாகவே விசுவாசம் கொண்ட ஏழைகளின் சிறப்பைப் பெருமானாரின் இவ்வாக்கும் நன்கு எடுத்துக்காட்டுகிறது

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 132
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 49 )

وَكَذٰلِكَ نُفَصِّلُ الْاٰيٰتِ وَلِتَسْتَبِيْنَ سَبِيْلُ الْمُجْرِمِيْنَ

குற்றவாளிகளின் வழி (இன்னதென்று சந்தேகமின்றித்) தெளிவாகுவதற்காக நாம் (நம்) வசனங்களை இவ்வாறு விவரிக்கின்றோம்.(குர்ஆன் : 6:55)

قُلْ اِنِّىْ نُهِيْتُ اَنْ اَعْبُدَ الَّذِيْنَ تَدْعُوْنَ مِنْ دُوْنِ اللّٰهِ قُلْ لَّاۤ اَ تَّبِعُ اَهْوَآءَكُمْ‌ۙ قَدْ ضَلَلْتُ اِذًا وَّمَاۤ اَنَا مِنَ الْمُهْتَدِيْنَ

“நீங்கள் அல்லாஹ்வையன்றி வேறு எவர்களை(க் கடவுளர்களாக) அழைக்கின்றீர்களோ அவர்களை வணங்கக் கூடாதென்று நான் நிச்சயமாக தடுக்கப்பட்டு உள்ளேன்” (என்று நபியே!) நீர் கூறுவீராக: “உங்களுடைய மன இச்சைகளை நான் பின்பற்ற மாட்டேன்; (நான் அப்படிச் செய்தால்) நான் நிச்சயமாக வழி தவறி விடுவேன்; மேலும் நான் நேர்வழி பெற்றவர்களிலும் இருக்கமாட்டேன்” என்றும் (நபியே!) நீர் கூறுவீராக. (குர்ஆன் : 6:56)
(6:56) வசனத்தின் கருத்துரை அல்லாஹ்வையன்றி அவனுடைய படைப்பு பொருள்களான கற்களையும் உலோகங்களையும், மரங்களையும், சில ஜீவ ஐந்துக்களையும் வானிலுள்ள சில கிரகங்களையும் நீங்கள் அழைக்கிறீர்கள், அவைகளை நானும் வணங்குமாறு அழைக்கிறீர்கள். ஒருபோதும் அவற்றை நான் வணங்கமாட்டேன். அவ்வாறு வணங்கக் கூடாதென ஏக நாயனான அல்லாஹ்வினால் நிச்சயமாக நான் தடுக்கப்பட்டுள்ளேன் என்று நபியே! அவர்களுக்கும் கூறிவிடும். இது நேரடியான இணை வைப்பு செயல் இன்னொரு வகை இணை வைப்பு செயலானது "மனிதன், தன்னுடைய கீழான மனோ இச்சைக்கு வழிப்பட்டு நடப்பதன் மூலம் மனோ இச்சையை அவனுடைய ‘இலாஹ்’ ஆக ( இறைவனாக ) ஆக்கிவிட்டதாக இறைவன் திருமறையில் குறிப்பிடுகிறான்.
அதாவது வழிப்படப்படும் (அடிபணியப்படும்) ஒன்றை இறைவன் ‘இலாஹ்’ என்ற பெயரால் சுட்டிக்காட்டுகின்றான் என்பது இங்கு கவனிக்கவேண்டிய விடயமாகும்.

الفرقان]أَرَأَيْتَ مَنِ اتَّخَذَ إِلَٰهَهُ هَوَاهُ:

தன் (இழிவான) மனோ இச்சையையே தன் இலாஹாக எடுத்துக் கொண்டவனை (நபியே!) நீர் பார்த்தீரா? (25:43)
இத்திரு வசனத்தில் தன் 'மனோ இச்சை' மனிதனால் வணங்கப் படாவிட்டாலும் அது மனிதனால் அடிபணியப்படும். அதாவது மனிதன் அதன் கட்டளைக்கு அடிபணிந்து நடக்கும் ஒரு ‘இலாஹ்’ ஆகும் என அல்லாஹ் தெளிவாக குறிப்பிட்டுள்ளான்.
எனவே வணங்கப்படாமல் அடிபணியப்படும் வஸ்துக்களும் இலாஹ் என்ற பெயரை ஏற்கின்றன. அந்த அடிப்படையிலேயே இலாஹ் என்ற சொல்லை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.
கீழ்க் குறிப்பிடப்படும் ஹதீத் இணைவைப்பைப் பற்றி குறிப்பிடுகிறது.
நபி (ﷺ) அவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன்,வெளிப் பகட்டுக்காகவே தொழுதவன் இணை வைத்தவன் ஆவான். வெளிப் பகட்டுக்காகவே நோன்பு நோற்றவனும் இணை வைத்தவன் ஆவான். வெளிப் பகட்டுக்காகவே கொடை அளித்தவன் இணை வைத்தவன் ஆவான்.
(அறிவிப்பாளர்: ஷத்தாத் பின் அவ்ஸ் (ரழி), 5331 முஸ்னத் அஹ்மத்)

இந்த ஹதீதை சற்றுக் கவனியுங்கள். இது இணை வைக்கப்படுவது பற்றியே சொல்கிறது. அதாவது அல்லாஹ்வுடன் எந்த விதத்தில் இன்னொரு வஸ்து இலாஹாக கொண்டு வரப்படுகின்றது என்பதை குறிப்பிடுகின்றது.

ஒருவர் வணக்க மொன்றைப் புரிகின்றார் அல்லது நற்கரும மொன்றைச் செய்கின்றார். ஆனால் அவர், தான் செய்த காரியத்திற்காக (நன்மதிப்பு, பாராட்டு, புகழ்ச்சி போன்ற ஏதாவதொரு) பிரதிபலனை மனிதரிடத்தில் தேடுகின்றார்-எதிர்பார்க்கின்றார்.

இந்த விஷயத்தில் அவர், தன்னை புகழுகின்ற அம்மனிதர்களை வணக்கத்துக்கு தகுதியானவர்கள் என்றோ அம்மனிதர்களை தெய்வீகத் தன்மையைக் கொண்டவர்கள் என்றோ கருதி அடிபணியவில்லை - வணங்கவில்லை.

ஆயினும் அவர் தனது நற்கருமங்களுக்கான பலனை அல்லாஹ்வை யன்றி வேறொன்றை தரிபடுத்தி அதனிடம் எதிர்பார்க்கக்கூடியவராக இருக்கின்றமையால் அல்லாஹ்வுடன் கூட்டு கற்பிக்கின்றார். அதாவது அவற்றை ( தன்னை புகழுகின்ற அம்மனிதர்களை ) இலாஹாக்குகிறார்.

எல்லாப் புகழ்ச்சியும்; அல்லாஹ்வுக்கே உரித்தானதாக இருக்க, எல்லாச் செயலும்; அல்லாஹ்வே செய்யும் செயலாயிருக்க, எல்லாவற்றினது இருப்பும்; அவனுடைய - அவன் மாத்திரமான- அவன் தானான- அவனை விட்டும் பிரிந்து வேறாகாத இருப்பாயிருக்க, அவனுடன் பிறவற்றை நிலைநிறுத்தி அவற்றிடம் நற்கருமங்களுக்கான பலனை எதிர்பார்த்தவர் ஷிர்க்- கூட்டு கற்பித்தவரன்றி வேறென்ன!

இறைவனை வணங்குவதாக எண்ணி தன் மன இச்சையை தெய்வமாக வணங்குதல் என்பது - இது உளவியல் ரீதியில் மாபெரும் பிரச்சனை ஏற்படுத்திவிடும்

இங்கு பாமரருக்கான இணை, பண்டிதருக்கான இணை என்ற வகைப்படுத்தல்கள் இல்லை. மேற்படி ஹதீதின்படிக்கு எந்த வகையினராயினும் ஒருவர் தான் செய்த கருமங்களின் பலனை அல்லாஹ் அல்லாதது என்ற தரிபடுத்தலின் அடிப்படையில் இன்னொன்றளவில் எதிர்பார்க்கும்போது அவைகளை இலாஹாக்கி அல்லாஹ்வுடன் கூட்டு ஏற்படுத்தியவராகின்றார்.

மனிதர்கள் ஒரு வஸ்துவை இலாஹாக எடுத்துக்கொள்வதற்கான அடிப்படை அம்சம் 'தேவைகளை நிறைவேற்றித்தரும்' என்பதனை காரணமாகக் கொண்டேயாகும்.

'இலாஹ்' - தெய்வம் என்ற சொற் பயன்பாடு இதன் அடிப்படையிலேயே உலகப் பொது வழக்கில் இருந்து வருகின்றது.

எந்தவொரு வஸ்துவும் 'மஃபூத்' -அடிபணியப்படுவதற்கான அடிப்படை அம்சம் 'தேவைகளை நிறைவேற்றித் தரும்' என்ற அம்சமே.

ஒரு வஸ்து; அது யதார்த்தத்தில் தெய்வீகத் தன்மை அற்றதாக இருப்பினும் கூட அதனளவில் தேவையாகுவதை காரணமாகக் கொண்டு அதனை தெய்வம்/ இலாஹ்/ மஃபூத் என்று பல்வேறு சமூகங்களைச் சார்ந்த மக்களும் அழைப்பது இந்த வழக்கிலாகும்

( 6:56 வசனத்தில் ) ஏழைகளை விரட்டி விடுமாறும், கண்ட பொருள்களையெல்லாம் வணங்குமாறும் உங்களுடைய மன இச்சைகள் உங்களைத் தூண்டுகின்றன. அவைகளை நான் ஒரு போதும் பின்பற்ற மாட்டேன் நீங்கள் கூறுகிற பிரகாரம் நான் அவற்றை வணங்கினாலும், உங்கள் விருப்பத்திற்கிணங்க ஏழைகளை நான் விரட்டினாலும் அப்பொழுது நான் நிச்சயமாக உங்களைப் போல் வழி தவறியவனாகி விடுவேன் ஏகத்துவக் கொள்கையிலிருந்து கொண்டு ஒரே அல்லாஹ்வை வணங்கி நேர்வழி பெற்றவகளில் ஒருவனாய் நான் இல்லாமலாகி விடுவேன்

ஆகையால், உங்கள் நோக்கப்படி நான் நடக்க முடியாது என்றும் அவர்களிடம் கூறியிடும் "

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 133
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 50 )

قُلْ اِنِّىْ عَلٰى بَيِّنَةٍ مِّنْ رَّبِّىْ وَكَذَّبْتُمْ بِهٖ مَا عِنْدِىْ مَا تَسْتَعْجِلُوْنَ بِهٖ اِنِ الْحُكْمُ اِلَّا لِلّٰهِ يَقُصُّ الْحَـقَّ وَهُوَ خَيْرُ الْفٰصِلِيْنَ

பின்னும் நீர் கூறும்: "நான் என்னுடைய ரப்பின் தெளிவான அத்தாட்சியின் மீதே இருக்கின்றேன்; ஆனால் நீங்களோ அதைப் பொய்ப்பிக்கின்றீர்கள். நீங்கள் எதற்கு அவசரப்படுகின்றீர்களோ அ(வ்வேதனையான)து என் அதிகாரத்தில் இல்லை; அதிகாரம் அனைத்தும் அல்லாஹ்விடமேயன்றி வேறில்லை; சத்தியத்தையே அவன் கூறுகின்றான், தீர்ப்பு வழங்குவோரில் அவனே மிகவும் மேலானவனாக இருக்கிறான். (குர்ஆன் : 6:57)
வசனத்தின் கருத்து:-
என்னுடைய இரட்சகனான அல்லாஹ்விடமிருந்து எனக்கு வந்துள்ள ஆதாரம் திருகுர்ஆனாகும். அது சத்தியத்தையும், அசத்தியத்தையும் பகுத்துக்காட்டிக் கொண்டிருக்கிறது. அதன் மீதே நான் உறுதியாக இருக்கிறேன்.
ஆனால் அதனைத்தான் நீங்கள் பொய்யாக்க முயன்றீர்கள். அறியாமையின் காரணத்தாலோ, மறுக்க வேண்டுமென்ற பிடிவாதத்தின் காரணத்தாலோ நீங்கள் அதனை மறுத்தாலும், பொய்யாக்க முனைந்தாலும் அதன் சத்தியத்தன்மையை ஒருபோதும் நீங்கள் மறைத்துவிட முடியாது.
காரணம் சொல்றேன்.
இஸ்லாத்தின் வளர்ச்சியும் சட்டங்களும் பிடிக்காத ஏனையோரும் இஸ்லாத்தினை ஒழித்து கட்ட கங்கணம் கட்டிக் கொண்டு அலைகிறார்கள். அதற்காக குர்ஆனைப் பொய்பிக்க முனைந்தார்கள், முனைகிறார்கள், இனியும் முனைவார்கள். ஆனால் இறைவன் உறுதியாக இவர்களுக்கு ஒரு பதிலடி கொடுக்கிறான்
இன்னும், "சத்தியம் வந்தது; அசத்தியம் அழிந்தது. நிச்சயமாக அசத்தியமானது அழிந்தே போகும்" என்று கூறுவீராக (17:81)
இஸ்லாத்தை ஒழித்து கட்ட நினைப்பவர்களே இஸ்லாத்தின் எதிரிகள் அந்த எதிரிகள் என்னதான் சூழ்ச்சி செய்தாலும் இவர்கள் இறுதியில் காண்பது தோல்வியாகத்தான் இருக்கும். அதையும் மீறி அவர்கள் வெற்றி பெறுவார்கள் என்றால் நிச்சயமாக அவர் இந்த இஸ்லாத்தை ஏற்று கொண்டவராக மாறி இருக்க கூடும்.(இஸ்லாத்தை ஏற்று கொண்டதன் மூலம் அவர் சுவர்க்கம் எனும் வெற்றியை அடைவார்).
இந்த குர்ஆனை அன்று தொடக்கம் இன்றுவரை பொய்ப்பிக்க முனைந்தவர்கள் பல பேர். இலக்கணப் பிழை என்றும் சரித்திரப் பிழை என்றும் கருத்துக்கள் பிழை என்றும் பல்லாயிரக்கணக்கான பிழைகளை கண்டு பிடிக்க முனைந்தார்கள். இன்று வரை முனைந்து கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனாலும் என்ன இதுவரை யாரும் தங்கள் முயற்சியில் வெற்றி பெற்றதாக தெரியவில்லை. இறைவன் கொடுத்த வாக்குறுதி அப்படிப்பட்டது
"நாமே அல்குர்ஆனை இறக்கினோம்.நாமே அதை பாதுகாப்போம்" குர்ஆன் (5:9)
அல்குர்ஆனை பொய்ப்பிக்க முனைபவர்களை நோக்கி அல்லாஹ் ஒரு சவாலை விடுகிறான்.
ஏன் சவால்?
ஒருவரால் சவால் விடப்பட்டு அது தோற்கடிக்க பட்டால் அந்த நபர் தோல்வியடைந்தவர். எனவே அல்லாஹ் ஒரு சவால் விடுகிறான்.அது தோற்கடிக்கப் பட்டால் இறைவன் தோற்றவனாகவும் அல்குர்ஆன் பொய்யானதாகவும் இலகுவில் ஆகிவிடும் .எனவே அல்குர்ஆனோடு இறைவனையும் சேர்த்து பொய்ப்பிக்க இஸ்லாத்தின் எதிரிகளுக்கு ஒரு சவால் விடுகிறான்.
யாருக்கு சவால்?
இந்த குர்ஆனை பொய்ப்பிக்க முனையும் அனைவரையும் நோக்கியதாக இந்த சவால். அந்த பொய்ப்பிக்கும் குழுவில் இருக்கும் ஒருவர் அவருக்கு வேண்டிய உதவியாளர்களை எடுத்து கொள்ளலாம்.

அந்த உதவியாளர்கள் இவ்வுலகை சார்ந்தவராகினும் சரி, இன்று பேசப்படுகிற மனிதர்களை விட உயர் தொழில்நுட்பங்களால் நம் கண்களுக்கு இதுவரை தென்படாத யுக்திகளையெல்லாம் கற்ற அறிவு ஜீவிகளான வேற்றுகிரகவாசியாக இருந்தாலும் சரி , இந்த வேற்றுகிரகவாசிகள் துணைக்கு யாரையெல்லாம் அழைக்க முடியுமோ அதாவது ஜின் வர்க்கங்களையும் அழைத்து கொள்ளலாம்.
இந்த ஜின் வர்க்கங்கள் கூட சாதாரணமானவை அல்ல ; "ஂ நிச்சயமாக நாங்கள் வானத்தைத் தடவிப் பார்த்தோம். அது பலமான பாதுகாவலர்களாலும், எரி நட்சத்திரங்களாலும் நிரப்பப்பட்டிருப்பதை நாங்கள் கண்டோம். (குர்ஆன் : 72:8) என்று சொல்லக் கூடிய பலம் வாய்ந்தவைகள்.
என்ன சவால்?
முதலில் "இக்குர்ஆனைப் போன்ற ஒன்றை கொண்டு வருதல்"
1) "இக்குர்ஆனைப் போன்ற ஒன்றை கொண்டு வருவதற்காக மனிதர்களும் (கண்ணனுக்கு புலப்படாத) ஜின்களும் ஒன்று திரண்டாலும் இதை போன்ற ஒன்றை கொண்டு வர முடியாது.(எதுவரை என்றால்) அவர்களில் ஒருவர் மற்றையவருக்கு உதவியாளராக இருந்தாலும் சரியே" குர்ஆன் (17:88)
"இந்த குர்ஆனை போன்றதொன்றை உங்களால் கொண்டுவர முடிய வில்லையா? சரி சவாலின் கடினத்தன்மையை குறைத்து அடுத்த சவால்
2) இரண்டாவது " இந்த குர்ஆணை போன்ற முழுமையான ஒன்றாக இல்லாமல் குறைந்தது பத்து அத்தியாயம் போதும்"
"(நபியான) இவர் இதை இட்டுகட்டி கூறுகிறார் என்று அவர்கள் கூறுகிறார்களா? நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் (நீங்கள் ) இட்டுக்கட்டி ,குர்ஆனில் உள்ளதை போன்று பத்து அத்தியாயங்களை கொண்டு வரட்டும்,உங்கள் துணைக்கு வேண்டியவர்களை அழைத்து கொள்ளுங்கள்(ஒருவரை தவிர ) அவன்தான் இறைவன்.அவனை தவிர. (11:13)
3) பத்து ஆத்தியாயத்தை கூட இவர்களால் கொண்டு வர
முடியவில்லையா சரி சவாலை இன்னும் மிகவும் இலகுவாக்கி இந்த சவால்
மூன்றாவது "பத்து அத்தியாயம் வேண்டாம் .சரி உங்களால் முடிந்தால் ஒரு அத்தியாயத்தையாவது கொண்டு வாருங்கள்
"நமது அடியாரான (முஹம்மதுக்கு) நாம் அருளியதில் நீங்கள் சந்தேகம் கொண்டு (அதில் ) நீங்கள் உண்மையாளர்களாகவும் இருந்தால் இது போன்ற ஓர் அத்தியாத்தை கொண்டு வாருங்கள்.அல்லாஹ்வை தவிர உங்கள் ஏனைய உதவியாளர்களையும் அழைத்து கொள்ளுங்கள். குர்ஆன் (2:23)
ஒரு அத்தியாத்தை கொண்டு வரமுடியவில்லையா சரி உங்களுக்கு பாவப்பட்டு சவால் மிக மிக இலகு படுத்தப்படுகிறது. இதையாவது செய்யட்டும். ரெடியா ?
4) நான்காவது "ஒரு அத்தியாயம் வேண்டாம் அல்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது போன்று ஒரு செய்தி ஒரே ஒரு செய்தி போதும்.
"அவர்கள் உண்மையாளர்களாக இருந்தால் இது போன்ற ஒரு செய்தியை அவர்கள் கொண்டு வரட்டும்" (52:34)
இதுவும் இவர்களால் செய்ய முடியாது. ஏனென்றால் இவர்களுக்கு அந்தளவு சக்தியில்லை.
இந்த சவால்கள் அனைத்திலும் ''இந்த குர்ஆன் போன்ற'' என்றுதான் கூறுகிறான் .ஏனென்றால் இறைவனால் மனிதனுக்கு வழங்கப்பட்ட தெளிவான ஆதாரம் இது. இது பொய்ப்பிக்கப்பட்டால் இஸ்லாமே பொய்யாகிவிடும். எனவே இஸ்லாத்தினை அழிக்க நினைக்கும் எதிரிகளுக்கு முடிந்தால் குர்ஆனை பொய்பித்து காட்டுங்கள் என்று அல்லாஹ் சவால் விடுகிறான்.
வல்ல ரஹ்மான் அல்லாஹ் தலா ஒரு சூழ்ச்சியை இந்த சவாலில் வைத்துள்ளான் அது என்னவென்று உங்களால் யூகிக்க முடிகிறதா?
சொல்றேன்.

அல்லாஹ் விட்டுள்ள சவாலை ஏற்க முன்வந்தவன் அந்த சவாலை தெளிவாக புரிந்து கொள்ள எத்தனிப்பான். அதாவது இந்த சவால் அனைத்தும் குர்ஆனைப் போல என்றுதான் கூறுகிறது .எனவே குர்ஆனைப் போன்ற ஒன்றை கொண்டு வர வேண்டும் என்றால் எதை கொண்டு வர வேண்டும் என்று யோசிக்க ஆரம்பிப்பான். உதாரணமாக நான் ஒரு காரை தயாரித்து இதைப் போன்ற ஒன்றை உருவாக்கி காட்டுங்கள் என்று நான் சவால் விட்டால், எதை என்று யோசிக்க மாட்டோம் ஏன் என்றால் ஒரு காரில் இருக்கும் எஞ்சின் உறுதி ,வேகம் , வடிவம் , அழகு , சொகுசு ,தயாரிப்பு பாகம் , எரிபொருள் பாவிக்கும் திறன், நிறம் இவ்வாறு அதனுள் அந்த சவால் அடங்கி இருக்கிறது என்று அறிந்து கொள்வோம்.
அதை போன்று குர்ஆனிலும் இதைப் போன்ற ஒன்று என்று குறிப்பிடுகிறான் என்றால், இந்த குர்ஆனில் அடங்கியுள்ள விஷயம் என்னவென்று சவாலை எதிர் கொள்ளத் தயாரானவன் ஆராய எத்தனிப்பான்.
எனவே குர்ஆனில் உண்மையான வரலாறு, இலக்கியம், இலக்கணம், முன் அறிவு ,பின் அறிவு , மறைமுக அறிவு,மனிதனுக்கான இலட்சிய வார்த்தை, இலக்குடைய வார்த்தை சவால்களும் தீர்வுகளும், விஞ்ஞானம், பகுத்தறிவு சிந்தனை,தத்துவம் இசை,ஓசை நயம், உண்மைத்தன்மை,மனிதன் அறிந்த அறிவு, அறியா அறிவு, மனிதனால் விளக்கம் கொடுக்க முடிந்தவை ,விளக்கம் கொடுக்க முடியாதவை, இறைவனை நிரூபிக்கும் தன்மை, பல தெய்வங்களை மறுக்கும் அறிவு, மனிதனுடைய மனப்பாங்கு, அதில் ஏற்படும் நோய்கள், அதற்கான தீர்வுகள்.
....இப்படி பட்டியல் நீண்டு கொண்டே போகும். ஆராய ஆராய ஜம்ஜம் வற்றாத நீர் ஊற்று போல வந்து கொண்டே இருப்பதை அறிவான் எனவே சித்தம் தடுமாறுவான் ,
பின்னர் அல்குர்ஆனில் ஒவ்வொரு துறையாக ஆராய முனைவான் இலக்கியம் சார்ந்து ஆராய முற்படும்போது அதன் உயர்தன்மையை புரிந்து கொள்வான். நம்மால் இந்த அளவு முடியாது என்று ஏற்று கொள்வான்.
பின்னர் இலக்கணம் சார்ந்து ஆராயும்போது, எந்தவித இலக்கண பிழைகள் இல்லாததையும் அந்த இலக்கணங்களில் உள்ள நுண்ணறிவை கூட அவனால் புரிந்து கொள்ள முடியும்.எனவே இது முஹம்மது நபியினால் நிச்சயம் உருவாக்கப்பட்டதல்ல என்பதை உறுதியாக ஏற்று கொள்வான். எனவே இப்போது முஹம்மத் நபி மீது இருந்த சந்தேகம் போகும் .
பின்னர் அடுத்தடுத்த துறைகள் ஒவ்வொன்றாக ஆராய முனையும் போதெல்லாம் இது இறைவனுடைய வார்த்தைதான் என்பதை தெளிவாக அறிந்து கொள்வான்.
எனவே இப்போது அவனுடைய நிலை எப்படியிருக்கும் என்பதை உங்களால் இலகுவாக யூகிக்க முடியும் .ஒன்று இஸ்லாத்தை ஏற்பான் அல்லது இதுதான் உண்மை மார்க்கம் என்றும் அன்றைய காபிர்கள் போல் தெளிவாக அறிந்தும் மறுப்பான்.
குர்ஆன் 2:6.(நபியே !) எவர்கள் (இவ்வேதத்தை மனமுரண்டாக) நிராகரிக்கிறார்களோ அவர்களுக்கு நீர் அச்சமூட்டி எச்சரித்தாலும் (சரி) அல்லது எச்சரிக்காவிட்டாலும் சரியே! அவர்கள் ஈமான் (இறை நம்பிக்கை) கொள்ள மாட்டார்கள்.
2:7. அல்லாஹ் அவர்களின் இதயங்களிலும், அவர்கள் செவிப் புலன்களிலும் முத்திரை வைத்துவிட்டான் இன்னும் அவர்களின் பார்வை மீது ஒரு திரை கிடக்கிறது; மேலும் அவர்களுக்கு கடுமையான வேதனையுமுண்டு.
2:8. இன்னும் மனிதர்களில் "நாங்கள் அல்லாஹ்வின் மீதும், இறுதி(த் தீர்ப்பு) நாள் மீதும் ஈமான் (நம்பிக்கை) கொள்கிறோம்" என்று கூறுவோறும் இருக்கின்றனர்; ஆனால் (உண்மையில்) அவர்கள் நம்பிக்கை கொண்டோர் அல்லர்.
2:9. (இவ்வாறு கூறி) அவர்கள் அல்லாஹ்வையும், ஈமான் (இறை நம்பிக்கை) கொண்டோரையும் ஏமாற்ற நினைக்கின்றார்கள்; ஆனால் அவர்கள் (உண்மையில்) தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்கிறார்களே தவிர வேறில்லை; எனினும் அவர்கள் (இதை) உணர்ந்து கொள்ளவில்லை.

2:10. அவர்களுடைய இதயங்களில் ஒரு நோயுள்ளது; அல்லாஹ் (அந்த) நோயை அவர்களுக்கு இன்னும் அதிகமாக்கி விட்டான்; மேலும் அவர்கள் பொய்சொல்லும் காரணத்தினால் அவர்களுக்குத் துன்பந்தரும் வேதனையும் உண்டு.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 134**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 51 )**

قُلْ لَّوْ اَنَّ عِنْدِىْ مَا تَسْتَعْجِلُوْنَ بِهٖ لَقُضِىَ الْاَمْرُ بَيْنِىْ وَبَيْنَكُمْ‌ وَاللّٰهُ اَعْلَمُ بِالظّٰلِمِيْنَ

(நபியே!) நீர் கூறும்: "நீங்கள் எதற்கு அவசரப்படுகின்றீர்களோ அது என் அதிகாரத்தில் இருந்திருக்குமானால், உங்களுக்கும் எனக்கும் இடையேயுள்ள விவகாரம் உடனே தீர்க்கப்பட்டேயிருக்கும்; மேலும், அல்லாஹ் அநியாயம் செய்வோரை நன்கு அறிந்தவனாக இருக்கின்றான்." (குர்ஆன் : 6:58)
அதாவது நீங்கள் எதிர்பார்க்கும் வேதனையை வழங்கும் அதிகாரம் என்னிடம் இருந்திருந்தால், உங்களுக்கும் அந்த வேதனையை எப்போதோ வழங்கியிருப்பேன்.
அநீதியாளர்களை அல்லாஹ் நன்கறிந்தவன் ஆவான்" என்று அந்த வசனத்தின் இறுதித் தொடர் தெரிவிக்கின்றது.
இங்கு ஒரு கேள்வி எழலாம். பாவிகளுக்கு வேதனை வழங்கும் அதிகாரம் தமக்கு இருக்குமானால், எப்போதோ அதை வழங்கி இருப்பேன் என்று கூறுமாறு நபி (ஸல்) அவர்களுக்கு இந்த வசனம் கட்டளையிடுகின்றது.
ஆனால், பின்வரும் ஒரு ஹதீஸில், பாவிகளுக்கு வழங்கப்படும் வேதனையைத் தாமதப்படுத்துமாறு நபி (ஸல்) அவர்களே வேண்டிக் கொண்டுள்ளார்கள்.
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது நான் நபி (ஸல்) அவர்களிடம் அல்லாஹ்வின் தூதரே! (தாங்கள் காயமடைந்த) உஹுதுப் போர் நாளை விடக் கடுமையானதொரு நாளைத் தாங்கள் சந்தித்ததுண்டா? என்று கேட்டேன்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் உன் சமுதாயத்தாரால் (நிறைய துன்பங்களைச்) சந்தித்துவிட்டேன். அவர்களால் நான் சந்தித்த துன்பங்களிலேயே மிகக் கடுமையானது. (தாயிஃபில் உள்ள) அகபா நாளில் சந்தித்த துன்பமேயாகும்.
ஏனெனில், அன்று நான் என்னை (இறைவனின் தூதராக) ஏற்றுக்கொள்ளும்படி (தாயிஃப் நகரத் தலைவரான கினானா) இப்னு அப்தி யாலீல் பின் அப்தி குலால் என்பவரிடம் எடுத்துரைத்தேன் எனக்கு இசைவான பதிலை அவர் அளிக்கவில்லை.
ஆகவே. நான் கவலையோடு எதிர்ப்பட்ட திசையில் நடந்தேன். 'கர்னுஸ் ஸஆலிப்' எனும் இடத்தை அடையும்வரை நான் சுய உணர்வுக்குத் திரும்பவில்லை. அங்கு வந்து சேர்ந்தவுடன் என் தலையை உயர்த்தினேன். அப்போது அங்கே (வானத்தில்) ஒரு மேகம் என்மீது நிழலிட்டுக் கொண்டிருந்தது. நான் கூர்ந்து கவனித்தபோது, அதில் (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் இருந்தார்கள்.
அவர்கள் என்னை அழைத்து "உங்கள் சமுதாயத்தாரிடம் நீங்கள் சொன்னதையும் அவர்கள் உங்களுக்கு அளித்த பதிலையும் அல்லாஹ் செவியுற்றான். அவர்களை நீங்கள் விரும்பியபடி (தண்டிப்பதற்கு ஆணையிடுவதற்காக மலைகளுக்கான வானவரை அல்லாஹ் உங்களிடம் அனுப்பியுள்ளான்' என்று கூறினார்கள்.
உடனே மலைகளை நிர்வகிக்கும் வானவர் என்னை அழைத்து எனக்கு முகமன் (சலாம்) கூறினார். பிறகு முஹம்மதே! உங்கள் சமுதாயத்தார் உங்களிடம் பேசியதை அல்லாஹ் கேட்டான். நான் மலைகளுக்கான வானவர். (இந்த மக்கள் விஷயத்தில் நீங்கள் விரும்பியபடி கட்டளையிடுவதற்காக உங்களிடம் என்னை அல்லாஹ் அனுப்பியுள்ளான். உங்கள் விருப்பம் என்ன? (இந்த நகரத்தின் இரு மருங்கிலுமுள்ள) இந்த இரு

மலைகளையும் அவர்கள்மீது நான் புரட்டிப் போட்டுவிட வேண்டுமென்று நீங்கள் விரும்பினாலும் (உங்கள் கட்டளைப்படி செயல்பட நான் தயாராக உள்ளேன்" என்று கூறினார்.
அப்போது நான் அவரிடம், வேண்டாம். இந்த நகரத்து மக்களின் வழித்தோன்றல்களில் அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காமல் அவனை மட்டுமே வழிபடுவோரை அல்லாஹ் உருவாக்குவான் என்று நான் நம்புகிறேன்.ஆகவே அவர்களைத் தண்டிக்க வேண்டாம்" என்று கூறிவிட்டேன்
ஆக அந்த மக்களுக்கு வேதனை வழங்கி அவர்களைப் பூண்டோடு அழிக்கலாம் என்று நபி (ஸல்) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டபோது. அவர்கள் அவசரப்படவில்லை. வேதனை வழங்குவதைத் தாமதப்படுத்துமாறே இறைவனிடம் வேண்டினார்கள். அந்த மக்களின் சந்ததிகளில் அல்லாஹ்வுக்கு எதையும் இணை கற்பிக்காத மக்களை அல்லாஹ் உருவாக்கக்கூடும் என்பதே இதற்குக் காரணம்.
அப்படியானால், இந்த ஹதீஸும் நாம் விவாதித்துவரும் இந்த வசனமும் முரண்படவில்லையா என்பதே அந்தக் கேள்வியாகும்.
முரண்படவில்லை என்பதே அதற்கான பதிலாகும். மக்கா இணைவைப்பாளர்கள் நபி (ஸல்) அவர்களிடம் தாமாகவே முன்வந்து வேதனையை விரும்பிக் கோரினர்,
அச்சமயம் அதை வழங்கும் அதிகாரம் நபி (ஸல்) அவர்களிடம் இருந்திருந்தால், அவர்களுக்கு(த் தமது மெய்ப்பாட்டை நிருபிக்கும் வகையில்) நபி (ஸல்) அவர்கள் தண்டனை வழங்கி இருப்பார்கள். இதுவே இவ்வசனத்தின் கருத்தாகும்

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 135
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 52 )

பகுதி – 1

وَعِنْدَهٗ مَفَاتِحُ الْغَيْبِ لَا يَعْلَمُهَاۤ اِلَّا هُوَ وَيَعْلَمُ مَا فِى الْبَرِّ وَالْبَحْرِ وَمَا تَسْقُطُ مِنْ وَّرَقَةٍ اِلَّا يَعْلَمُهَا وَلَا حَبَّةٍ فِىْ ظُلُمٰتِ الْاَرْضِ وَلَا رَطْبٍ وَّلَا يَابِسٍ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ
அவனிடமே மறைவானவற்றின் திறவுகோல்கள் இருக்கின்றன. அவற்றை அவனன்றி எவரும் அறியார். மேலும் கரையிலும் கடலிலும் உள்ளவற்றையெல்லாம் அவன் அறிவான்; அவன் அறியாமல் ஓர் இலையும் உதிர்வதில்லை. பூமியின் (ஆழத்தில் அடர்ந்த) இருள்களில் கிடக்கும் சிறு வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் (எந்தப் பொருளும்) தெளிவான (அவனுடைய) பதிவேட்டில் இல்லாமலில்லை. (குர்ஆன் : 6:59)
1) அவனிடமே மறைவானவற்றின் திறவுகோல்கள் இருக்கின்றன. அவற்றை அவனன்றி எவரும் அறியார்:-
இன்னும் அல்லாஹ்வின் அரு(ட் கொடைக)ளை நீங்கள் கணக்கிட்டால், அவற்றை (வரையறை செய்து) நீங்கள் எண்ணி முடியாது! நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும், மிகக் கருணையுடையோனாகவும் இருக்கின்றான்.(குர்ஆன் : 16:18)
நாம் மூளையின் 10% பகுதியை மட்டும் தான் நம் பலவிதமான செயல்பாடுகளுக்குப் பாவிக்கிறோம். மூளையின் பிறபகுதியினையும் பயன்படுத்தி மூளையின் கலங்களின் எண்ணிக்கையும் பலமடங்காகப் பெருகிவிடும். இதனால் மனிதன் வருங்காலத்தில் ஒரு அபார ஞாபகசக்தியுள்ள அதிசூரனாகத் திகழுவான்.
கடந்த காலங்களிலும் பார்க்க தற்போதைய விஞ்ஞான வளர்ச்சி வீதம் படுபயங்கர வேகத்தில் ஏறிக்கொண்டு போகிறது என்பது மறுக்க முடியாத உண்மை. இதனால் நீங்கள் கற்பனையே செய்து பார்க்க முடியாத அளவிற்கு பல புதுமைகளைக் காண இருக்கிறீர்கள்.
கடந்த 90 வருடங்களாக மின்சாரம் என்னும் ஒரு சக்தியைக் கண்டுபிடித்து அதிலிருந்து மின்காந்தத் தூண்டல், ஒளி, வெப்ப, இரசாயன மற்றும் அணுத்தாக்கம் என்று பலவிதமான முறைகளினால் மின்சாரம் உற்பத்தி செய்து,

அத்தோடு உபயோகிக்கக் கூடிய, X , UV , லேசர் கதிர்களையும், மைக்ரோ, ரேடியோ அலைகளையும் கண்டு பிடித்து தனது சௌகரிய வாழ்வுக்குப் பயன்படுத்திக் கொண்டான்.
இனி வருங்காலங்களில் இந்தப் பரந்த வெளியில் பாரிய அளவிலான, மிகவும் சக்தி வாய்ந்த சில கதிர்கள். அலைகள், வீச்சுகள், அதிர்வுகள், உமிழ்வுகள், தெறிப்புகள்,எரிவுகள், தூண்டல்கள், கவர்வுகள், எதிர்வுகள், ஈர்ப்புகள், சேர்வைகள், சிதைவுகள், அழிவுகள், ஔிர்வுகள் அல்லது இன்னும் வார்த்தையே இல்லாத அவைகள், இவைகள் என்று கோடிக்கணக்கான சக்திகள் இருக்கின்றன. இந்த சக்தியிலிருந்து அபொருளை மனிதன் கண்டிப்பான.
அது என்ன அபொருள் ?
உதாரணமாக இயற்கையில் ஏதோ ஒருவிதத்தில் எல்லாவற்றிற்கும் ஓர் "எதிர்" இருக்கிறது இருட்டு- வெளிச்சம் வெள்ளை-கருப்பு என்பது போல் அணுவிற்குள் இருக்கும் ஒவ்வொரு துகள்களுக்கும ஓர் இரட்டைப் பிறவியாக எதிர் துகள் இருக்கிறது. அணுவிற்குள் புரோட்டனுக்கு எதிர் புரோட்டன் இருக்கிறது.
ஒவ்வொரு பொருளையும் நாம் ஜோடி ஜோடியாகப் படைத்தோம்
( குர்ஆன் 51 49 )
இந்த விதத்தில் நம் பிரபஞ்சத்திற்கு எதிராக ஓர் அபிரபஞ்சம் கண்டிப்பாக இருக்கிறது இங்கே புவி ஈர்ப்பாற்றல் என்றால் அங்கே புவி தள்ளுஆற்றல் இருக்கலாம் இங்கே உள்ள மனிதர்களுக்கு 100 வயது என்றால் அங்குள்ளவர்களுக்கு 1000 வயது இருக்கலாம்
எதிர் பொருளான அபொருளை மனிதன் பயன்படுத்துவான். சுமார் 15 கடலை அளவில் பொருளிலிருந்து எதிர் பொருளை உருவாக்கினால் ஓர் அணு அளவிற்கு கிடைக்கும் அதைக் கொண்டு ராக்கெட் செய்து நீங்கள் குடும்பத்தோடு சந்திர மண்டலம் போய் வரலாம்.
சீனாவில் மாசே துங் வெற்றி பெற்று ஆட்சியைப் பிடித்ததும் ஒற்றர்களிடமிருந்து ஒரு தகவல் "திபெத்தில் மனிதர்கள் நெருங்கமுடியாத கணவாய் ஒன்றிலிருந்து ஒரு ஞானி மாதிரி ஒருவர் வெளிப்பட்டார். அவரைப் பிடித்தோம் அவருக்கு வயது 527 என்கிறார்
அவருடைய தோற்றம் சாதாரண சராசரி நடுத்தர மனிதருடைய தோற்றம்தான் ஏறி வந்த குதிரை அவருடைய வயதைவிட அதிகம். அவரின் பாஷை செய்கரணமாக இருக்கிறது. தன்னைப் போல் பலர் அங்கே இருப்பதாகவும் அங்கே யாருமே போக முடியாது என்றும் கூறுகிறார்.
மாசே துங் தானும் அவரைப் போல் ஆயிரக்கணக்கான வயது வரை வாழ அவரை வேண்டினார். அவர் முடியாது எனக்கூற இறுதியில் அச்சுறுத்தி சிறைச் சாலையில் அடைத்தார்
ஓரிரு நாள் சிறையில் இருந்தார். பின் தன் குதிரை சிறைச்சாலை பக்கம் வந்தது. பூட்டிய சிறையிலிருந்தே வெளியில் வந்தார் சிறைக் காவலாளிகளின் கண்முன்னே பயணம் ஆனார்
சீன விஞ்ஞானிகள் அந்த ஞானி அபொருளின் ஆற்றலை அவர் பயன்படுத்தி உள்ளார் என்றனர்.
ذٰ لِكَ الْـفَضْلُ مِنَ اللّٰهِ وَكَفٰى بِاللّٰهِ عَلِيْمًا
இது அல்லாஹ்வின் மகத்தான அருட்கொடையாகும். அல்லாஹ்வே நிறைவான அறிஞனாக இருக்கின்றான்.(குர்ஆன் : 4:70)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 136
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 53 )

பகுதி – 2

وَعِنْدَهٗ مَفَاتِحُ الْغَيْبِ لَا يَعْلَمُهَاۤ اِلَّا هُوَ وَيَعْلَمُ مَا فِى الْبَرِّ وَالْبَحْرِ وَمَا تَسْقُطُ مِنْ وَّرَقَةٍ اِلَّا يَعْلَمُهَا وَلَا حَبَّةٍ فِىْ ظُلُمٰتِ الْاَرْضِ وَلَا رَطْبٍ وَّلَا يَابِسٍ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ
அவனிடமே மறைவானவற்றின் திறவுகோல்கள் இருக்கின்றன. அவற்றை அவனன்றி எவரும் அறியார். மேலும் கரையிலும் கடலிலும் உள்ளவற்றையெல்லாம் அவன் அறிவான்; அவன் அறியாமல் ஓர் இலையும் உதிர்வதில்லை. பூமியின் (ஆழத்தில் அடர்ந்த) இருள்களில் கிடக்கும் சிறு வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் (எந்தப் பொருளும்) தெளிவான (அவனுடைய) பதிவேட்டில் இல்லாமலில்லை.
(குர்ஆன் : 6:59)

2) மேலும் கரையிலும் கடலிலும் உள்ளவற்றையெல்லாம் அவன் அறிவான்; அதாவது நிலத்திலும், நீரிலிலும் உள்ளவற்றையெல்லாம் அவன் அறிவான். நிலம், நீர் என்பது பூமியும் பூமியைச் சார்ந்த கடலையும் குறிக்கிறது.
"கதிரவனிலிருந்து மூன்றாவதாக உள்ள கோள். விட்டம், நிறை மற்றும் அடர்த்தி கொண்டு ஒப்பிடுகையில் சூரிய மண்டலத்தில் உள்ள மிகப் பெரிய உட் கோள்களில் புவியும் ஒன்று. இதனை உலகம், நீலக்கோள் எனவும் குறிப்பிடுகின்றனர்.
மாந்தர்கள் உட்பட பல்லாயிரக்கணக்கான உயிரினங்கள் வாழும் இடமான இந்தப் புவி, அண்டத்தில் உயிர்கள் இருப்பதாக அறியப்படும் ஒரே இடமாகக் கருதப்படுகின்றது. இந்தக் கோள் சுமார் 4.54 பில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் உருவானது. மேலும் ஒரு பில்லியன் ஆண்டுகளுக்குள் அதன் மேற்பரப்பில் உயிரினங்கள் தோன்றின. அது முதல் புவியின் உயிர்க்கோளம் குறிப்பிடும் வகையில் அதன் வளிமண்டலம் மற்றும் உயிரற்ற காரணிகளை மாற்றியுள்ளது.
அதனால் பல வளி சார்ந்த உயிரினங்கள் பெருகின. ஓசோன் மண்டலம் உருவாகி புவியின் காந்த மண்டலத்தோடு அகிலத்திலிருந்து வரும் தீங்கு விளைவிக்கும் கதிர்களைத் தடுத்து உலகில் உயிர்கள் தழைப்பதற்கு வழி ஏற்பட்டது.
இக்காலகட்டங்களில் புவியின் பௌதிகத் தன்மையினாலும் புவி சூரியனைச் சுற்றி வந்தமையினாலும் உலகில் உயிர்கள் நிலைபெற்றன. உயிர்களுக்கு ஏதுவான தற்போதுள்ள சூழல் மேலும் 1.5 பில்லியன் ஆண்டுகளுக்கு நிலவும் எனவும், பிறகு வளரும் சூரியனின் வெப்ப ஒளிர்வுத் தன்மைகளால் புவியின் உயிர்க்கோளம் அழிக்கப்படும் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது.
கடலை பற்றிச் சொல்ல கடலை விட அதிக செய்திகள் உள்ளன! ஏழு கடல்கள் என்னென்ன? கடலுக்குள் என்னென்ன உள்ளன? கடல் எல்லைகளை நாடுகள் எப்படி வரையறுக்கின்றன! கடலின் அதிசயங்கள், அற்புதங்கள் என்னென்ன..? கடல் ஆராய்ச்சிகள் கண்டடைந்தது என்ன?
கடல் புவியின் அனைத்துப் பெருங்கடல் நீரையும் உடனிணைத்த ஓர் அமைப்பாகும் இவ் வமைப்பில் “பெருங்கடல்கள்” என்று அழைக்கப்படும் அட்லாண்டிக், பசிபிக், இந்தியப் பெருங்கடல், தென்முனைப் பெருங்கடல், ஆர்க்டிக் பெருங்கடல் ஆகிய ஐந்தும் அடங்கும்!
கடல் இந்த உலகின் 71 % மேற்பரப்பினை மூடியுள்ளது. இதனால், மனிதர்களும் தரை வாழ் விலங்குகளும் வாழக்கூடிய இடம் மீதமுள்ள 29% மட்டுமே. பெரும்பாலான மேற்பரப்பினை கடல் முடியுள்ளதால், இந்த பூமியை நாம் ‘நீல கிரகம்’ என்றும் அழைக்கிறோம். இந்தக் கட்டுரையில் கடலைப் பற்றி சில சுவையான தகவல்களை நாம் காண்போம்.
கடல்கள் இயற்கையின் படைப்பில் மிகவும் சுவாரசியமானவை, அற்புதமானவை. கடல்களின் சராசரி ஆழம் 4 கிலோ மீட்டர்கள். கடலின் மிக ஆழமான பகுதி 11 கிலோ மீட்டர்கள். உலகின் மிக ஆழமான கடல் பகுதி பசிபிக்

பெருங்கடலில் உள்ள மரியானா என்று கண்டறியப்பட்டுள்ளது. இந்தப் பகுதியில் கடலின் ஆழம் கடல் மட்டத்திலிருந்து எவரெஸ்ட் சிகரத்தின் உயரத்தை விட அதிகமாகும்.
நாம் வாழுகின்ற இந்தப் புவிக்கோளின் பெரும்பகுதி நீரால் சூழப்பட்டு இருக்கிறது. மண்ணில் எத்தனை விந்தைகள் உள்ளனவோ அதைவிடக் கூடுதலாக ஆழ்கடலுக்கு உள்ளே விந்தைகள் நிறைந்து உள்ளன.
கடல்களைப் பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டிய செய்திகள், கடலை விட அதிகம் என்றே சொல்லலாம்.
உலக நாடுகளின் மொத்தக் கடற்கரை நீளம் 3,15,000 மைல்கள் (ஏறத்தாழ 5,50,000 கிலோ மீட்டர்) ஆகும்.
இந்தியாவின் கடற்கரை 7,517கிலோ மீட்டர்கள் நீளம் கொண்டது. அதில், தமிழ்நாட்டின் கடற்கரை 997 கிலோ மீட்டர்கள் நீளம்.
கடலின் எடை
கடலில் உள்ள தண்ணீரின் மொத்த எடை, 1, 450,00,00,00,00000,0000 மெட்ரிக் டன்கள் ஆகும். எப்படி வாசிப்பது என்று மலைப்பாக இருக்கின்றதா? ஆயினும், இது புவியின் மொத்த எடையில், ஒரு விழுக்காடு கூட இல்லை. வெறும் 0.022 விழுக்காடு தான்.
உலகின் மேற்பரப்பில் மூன்றில் இரண்டு பங்கு கடல் என்றாலும், அந்தக் கடலும், நிலத்துக்கு மேலேதானே அமைந்து உள்ளது! பூமியின் குறுக்கு வெட்டு நீளம் சுமார் 12,700 கிலோமீட்டர்கள் ஆகும். அதில் மேல்பரப்பில் சுமார் ஐந்து முதல் பத்து கிலோ மீட்டர் ஆழத்துக்கு மட்டுமே கடல் நீர் இருக்கின்றது. நிலத்தில் உள்ள கற்கள், பாறைகள், மலைகள், மணலின் எடைதானே நீரை விட அதிகம்.
நமது உடலை மூடி உள்ள தோல் போல, இந்த உலகை கடல் மூடிக்கொண்டு இருக்கிறது. அவ்வளவு தான். அதாவது, உட்புறம் நெருப்புக் குழம்பாகக் கொதித்துச் சுழன்றுகொண்டு இருக்கின்ற இந்தப் புவியின் மேற்பரப்பைக் குளிர்விக்கின்ற ஒரு குளிர்விப்பானாகக் கடல் அமைந்து இருக்கின்றது. எனவே அதை புவியின் தோல் என்றே அழைக்கலாம்.
கடலின் வகைகள் ஏழு !
உலகில் ஐந்து பெருங்கடல்கள் உள்ளன என்று நாம் படித்து இருக்கிறோம். அதை, இப்போது ஏழாகப் பகுக்கிறார்கள். வட, தென் அட்லாண்டிக் பெருங்கடல், வட, தென் பசிபிக் பெருங்கடல், இந்தியப் பெருங்கடல், அண்டார்டிக் பெருங்கடல், ஆர்டிக் பெருங்கடல் என்பவையே அந்த ஏழு பெருங்கடல்கள்.
தமிழ் இலக்கியங்களில், ‘உப்புக்கடல், கரும்பச் சாற்றுக் கடல், மதுக்கடல், நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல், சுத்தநீர்க் கடல்’ என ஏழு கடல்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.
நான்கு புறமும் நீரால் சூழப்பட்ட நிலப்பகுதியை, தீவு என்று அழைக்கிறார்கள். கடல்களின் உள்ளே அமிழ்ந்து கிடக்கின்ற மலைகளின் உச்சிப்பகுதி,கடலுக்கு மேலே நீட்டிக் கொண்டு இருக்கும். அதுதான், தீவுகள் ஆகும்.
மூன்று புறங்களில் நீரால் சூழப்பட்ட பகுதி, தீபகற்பம் என்று அழைக்கப்படுகிறது. இந்தியா ஒரு தீபகற்பம்.
பசிபிக் பெருங்கடல்!
பசிபிக் பெருங்கடல், சீனா, ஜப்பான் ஆகிய நாடுகளுக்குக் கிழக்கே அமெரிக்காவுக்கு மேற்கே இடைப்பட்ட பகுதியில் பரந்து விரிந்து உள்ளது. உலகில் தற்போது உள்ள அனைத்து நாடுகளின் நிலப்பரப்பையும், பசிபிக் கடலுக்கு உள்ளே வைத்தாலும், அதற்கு மேலும், ஆப்பிரிக்கக் கண்டத்தின் நிலப்பரப்பை வைக்கின்ற அளவுக்கு, பசிபிக் கடல் மிகவும் பிரமாண்டமாக உள்ளது. ஆயினும், கடலில் தீவுகள் குறைவு; மிகச்சிறிய தீவுகளே உள்ளன.
இந்தப் புவி கிழக்கு நோக்கிச் சுழல்வதால், காற்று மேற்கு நோக்கி வீசும். இடையில் தடுப்புகள் ஏதும் இல்லாததால், பசிபிக் கடலில் காற்றின் வேகம் அதிகம். எனவே, கிழக்கு நோக்கிக் கப்பலைச் செலுத்துவது கடினம்.
தென் பசிபிக் பகுதியில், மிகப்பெரிய அலைகள் உருவாகின்றன. உலகின் பெரும்பாலான சுனாமி தாக்குதல்கள், பசிபிக் பெருங்கடல் பகுதியில் தான் ஏற்படுகின்றன. அக்கடலுக்கு உள்ளே ஏற்படுகின்ற நில நடுக்கங்களால் பொங்குகின்ற அலைகள், ஜப்பானியக் கடற்கரையைத்தான் தாக்குகின்றன. எனவேதான், கடலின் கோர விளையாட்டுக்கு அடிக்கடி இலக்கு ஆகிறது ஜப்பான்.

அண்டார்டிகா பகுதியில் இருந்து பிரிந்து வருகின்ற பனிப்பாறைகள், பசிபிக் கடலில் மிதந்து கொண்டே பல இடங்களுக்கு நகர்ந்து செல்கின்றன. ஆனாலும், உருகுவது இல்லை. எட்டு மாதங்கள் வரையிலும் உருகாமல் அப்படியே மிதந்து கொண்டே நியூசிலாந்து வரையிலும் வருகின்றன.

ஆழம், அது அளக்கும் ஆழமல்ல!

தரையில் இருந்து கடலுக்கு உள்ளே ஓரிரு மைல்கள் வரை இருக்கும் பகுதியை நாடுகளின் எல்லை என வரையறுத்து இருக்கிறார்கள். இந்தப் பகுதியில் கடலின் ஆழம் சராசரியாக 600 அடி இருக்கலாம். இதற்கு அப்பால்தான், உண்மையான கடலின் ஆழம் தொடங்குகிறது. இதற்கு,'காண்டினென்டல் ஷெல்ப்' என்று பெயர். இந்தப் பகுதியிலும் 3 விழுக்காடு தான் கடல் உள்ளது. அதற்குப் பிறகுதான், 97 விழுக்காடு கடல் இருக்கிறது. இங்கு ஆழம் 13 ஆயிரம் அடியில் இருந்து தொடங்குகிறது. இந்தப் பகுதியை 'அபிஸ்' என்று அழைக்கிறார்கள். இதன் உள்ளே பிரமாண்டமான சமவெளிகள், ஏகப்பட்ட எரிமலைகள், படுகுழிகள், மலைத் தொடர்கள் எல்லாம் இருக்கின்றன.

சூரிய ஒளி, கடலுக்கு உள்ளே 100 அடி ஆழம் வரையிலும்தான் தெளிவாக இருக்கும். அதற்குக் கீழே போகப்போக, சூரிய ஒளி மங்கிக்கொண்டே போகும்; கும்மிருட்டுதான். கடலுக்கு அடியில் என்ன இருக்கிறது? என்ற கேள்வி பல நூற்றாண்டுகளாக மனிதனின் தூக்கத்தைக் கெடுத்தது.

கிரேக்கத் தத்துவமேதை அரிஸ்டாட்டில், 'கடலுக்கு அடியில் ஏதோ இருக்கிறது' என்று சொன்னதைக் கேட்ட அவரது சீடர் அலெக்சாண்டர் என்பவர், ஒரு கண்ணாடி பலூன் வடிவத்தைச் செய்து, அதற்கு உள்ளே உட்கார்ந்து கொண்டு,கடலுக்கு உள்ளே சிறிது ஆழத்துக்குச் சென்று வந்தார். அப்போது அவர் பிரமாண்டமான திமிங்கலத்தைப் பார்த்ததாகச் சொல்லி இருக்கிறார்.

எந்த ஒரு கருவியின் துணையும் இல்லாமல், மூச்சை அடக்கிக் கொண்டு ஒருவர் 285 அடி ஆழம் வரையிலும் இறங்கி இருக்கிறார். ஒரு கயிற்றில் ஒவ்வொரு அடிக்கும் ஒரு சிலேட்டுப் பலகையைக் கட்டி விட்டார்கள். அந்தப் பலகைகளில் கையெழுத்துப் போட்டுவிட்டு வரச்சொன்னார்கள். 285 ஆவது சிலேட்டு வரை கையெழுத்துப் போட்டுவிட்டு,சுயநினைவை இழந்து விட்டார். இதுதான் மூச்சை அடக்கி, கடலில் நீண்ட நேரம் மூழ்கிய சாதனை.

கடல் எல்லையை எப்படி வரையறுக்கிறார்கள்?

1982 ஆம் ஆண்டு, ஐக்கிய நாடுகள் மன்றம், ஒரு அமைப்பை உருவாக்கி, உலக நாடுகளின் கடல் எல்லைகளை வரையறுத்தது. இவர்கள் வரைந்த ஒப்பந்தத்தில், இதுவரையிலும், 158 நாடுகள் கையெழுத்து இட்டு உள்ளன.

கடலில், மூன்று வகையான எல்லைகள் வரையறுக்கப்பட்டு உள்ளன.

கரையில் இருந்து ஆறு நாட்டிகல் மைல் தொலைவுக்கு உட்பட்டது 'கரைக்கடல்.' இதில் கட்டுமர மீனவர்கள் மீன் பிடிக்கலாம். அடுத்த ஆறு நாட்டிகல் மைல், 'அண்மைக் கடல்.' இதில் விசைப் படகு மீனவர்கள் மீன் பிடிக்கலாம். அதன்பின் உள்ளது தான் 'ஆழிக்கடல்.' இதில் கப்பல்களில் மீன் பிடிக்கலாம். இப்போது கரை ஓரங்களில் மீன் வளம் குறைந்து விட்டது. எனவேதான், கட்டு மர மீனவர்கள், அண்மைக்கடலுக்கும், ஆழிக்கடலுக்கும் செல்லுகிறார்கள்.

ஒரு நாட்டின் கடல் எல்லையான 12 நாட்டிகல் மைல் என்பது, தோராயமாக 22.2 கிலோ மீட்டர்கள் ஆகும். அந்த எல்லைக்கு உள்ளே பயணிகள் கப்பல் போகலாம். ஆனால், மீன்பிடிக் கப்பல்கள், போர்க்கப்பல்கள், வணிகக் கப்பல்கள் செல்வதற்கு அந்த நாட்டின் கடலோரக் காவல்படையின் ஒப்புதலைப் பெற வேண்டும். மீன்பிடி படகுகளில், மரக்கலங்களில், கப்பல்களில் அந்தந்த நாட்டின் தேசியக் கொடிகள் பறக்க வேண்டும்.

18 ஆம் நூற்றாண்டில் இருந்து 20 ஆம் நூற்றாண்டு வரையிலும், ஒரு நாட்டின் கடல் எல்லை, ஆறு கிலோ மீட்டர்கள் என்ற அளவில் இருந்தது. ஏனெனில், அப்போது இருந்த பீரங்கிகள் வீசுகின்ற குண்டுகள், ஆறு கிலோ மீட்டருக்கு மேல் பாயாது. எனவேதான், அத்தகைய கட்டுப்பாடு.

ஆனால், இப்போது, கண்டம் விட்டுக் கண்டம் தாவும் ஏவுகணைகள் வந்து விட்டன. இப்போதும், சிங்கப்பூர், ஜோர்டான் போன்ற நாடுகள், தங்களுடைய கடல் எல்லையை, 6 கிலோ மீட்டர்கள் என்ற அளவிலேயே நிறுத்திக் கொண்டு உள்ளன.

கடலோரக் காவல்படையினர், ஒரு நாட்டின் கடல் எல்லைக்கு அப்பால், மேலும், 22 கிலோ மீட்டர் தொலைவுக்கும் சென்று, கண்காணிப்பு, காவல் பணிகளில் ஈடுபடலாம். அதற்கு மேல் 'பொருளாதார எல்லை' என்று ஒன்று உள்ளது. அதன்படி, சுமார் 393 கிலோ மீட்டர் வரையிலும் கடலில் உள்ள எல்லா வளங்களும், அதற்கு அருகில் கரையைக் கொண்டு உள்ள நாட்டுக்கே சொந்தம் ஆகும். மீன் பிடிப்பது, பெட்ரோல் எடுப்பது போன்ற உரிமைகளை அந்த நாடு கொண்டு உள்ளது.

கணக்கில்லா கடல் வாழ் உயிரினங்கள்!

இந்த உலகில்,மனிதன், விலங்குகள், பூச்சிகள், புழுக்கள், நுண்ணுயிரிகள் என எத்தனையோ ஆயிரக்கணக்கான உயிரினங்கள் வாழுகின்றன. உலகில் வாழும் உயிரினங்களுள், தரையில்வாழும் உயிரினங்கள் ஒரு விழுக்காடு மட்டும்தான்; 99 விழுக்காடு உயிரினங்கள் கடலில் தான் வாழுகின்றன.

உலகின் மேற் பரப்பில் முதலில் தோன்றிய உயிரினமே, கடல் பாசிதானே! சுமார் 25 மில்லியின் உயிரினங்கள், கடலுக்கு உள்ளே வாழ்வதாகக் கணிக்கிறார்கள். அவற்றுக்கெல்லாம் பெயர் கொடுத்து முடிக்கவே இன்னும் பல நூறு ஆண்டுகள் ஆகும்.

தமிழில் எத்தனையோ கடல் வாழ் உயிரினங்களின் பெயர்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. எனவே, நீங்கள் ஒரு புதிய கடல் உயிரினத்தைப் பற்றி ஆராய்ந்தால், அதன் உடல் அமைப்பு, குண நலன்களைக் குறிக்கும் வகையில் அதற்குத் தமிழ்ப் பெயரைச் சூட்டுங்கள். கடலில் 4 கிலோ மீட்டர் ஆழம் வரையிலும் உயிரினங்கள் வாழ்கின்றன. அங்கே ஒளிரும் மீன்கள் உள்ளன.

கடலில் கொட்டப்படும் கழிவுகள்

நாம் கடலில் இருந்து பிடிக்கின்ற மீன்களைப் போல மூன்று மடங்கு கழிவுகளைக் கடலில் கொட்டுகிறோம். இப்படியே போனால், நிலைமை என்ன ஆகும்? சென்னை நகரில் ஓடிக் கொண்டு இருந்த கூவம் ஆற்றில் குப்பைகளைக் கொட்டி நிறைத்ததைப் போல, கடலும் குப்பைகளால் பாதிக்கப்படக் கூடிய நிலைமை ஏற்பட்டு உள்ளது. எண்ணிப் பாருங்கள் அப்படி ஒரு நிலைமையை?

அதெல்லாம் நடக்காது என்று சொல்ல முடியாது. எனவே, மனிதர்கள் நிலத்தில் உருவாக்குகின்ற பல குப்பைகளை அழிப்பது எப்படி என்பது தான், இப்போது நம் முன் உள்ள மிகப் பெரிய கேள்வி. அதற்கான வழி காண வேண்டும்.

மனிதர்களாகிய நாம் உயிர் வாழ்வதற்கு கடற்கரையில் உள்ள நண்டு, இறால், பல வகை மீன்கள், கணவாய் போன்ற உயிரினங்களை நாம் சாப்பிடுகிறோம். கடல் பகுதி என்ற ஒன்று இருப்பதால் தான் நம்மால் இது மாதிரியான உணவுகளை சாப்பிட்டு ஆரோக்கியமாய் வாழ முடிகிறது. மனிதர்களின் உணவுத் தேவையில் கணிசமான பங்களிப்பை கடல் தருகிறது.

இவையெல்லாம் கரையிலும் கடலிலும் உள்ளவற்றை நாம் அறிவோம். இவைத் தவிர வேறென்ன உள்ளது என்பது பற்றி அவனே அறிவான்

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 137
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 54 )

பகுதி – 3

وَعِنْدَهٗ مَفَاتِحُ الْغَيْبِ لَا يَعْلَمُهَاۤ اِلَّا هُوَ وَيَعْلَمُ مَا فِى الْبَرِّ وَالْبَحْرِ وَمَا تَسْقُطُ مِنْ وَّرَقَةٍ اِلَّا يَعْلَمُهَا وَلَا حَبَّةٍ فِىْ ظُلُمٰتِ الْاَرْضِ وَلَا رَطْبٍ وَّلَا يَابِسٍ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ

அவனிடமே மறைவானவற்றின் திறவுகோல்கள் இருக்கின்றன. அவற்றை அவனன்றி எவரும் அறியார். மேலும் கரையிலும் கடலிலும் உள்ளவற்றையெல்லாம் அவன் அறிவான்; அவன் அறியாமல் ஓர் இலையும் உதிர்வதில்லை. பூமியின் (ஆழத்தில் அடர்ந்த) இருள்களில் கிடக்கும் சிறு வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் (எந்தப் பொருளும்) தெளிவான (அவனுடைய) பதிவேட்டில் இல்லாமலில்லை. (குர்ஆன் : 6:59)

3) அவன் அறியாமல் ஓர் இலையும் உதிர்வதில்லை.பூமியின் (ஆழத்தில் அடர்ந்த) இருள்களில் கிடக்கும் சிறு வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் (எந்தப் பொருளும்) தெளிவான (அவனுடைய) பதிவேட்டில் இல்லாமலில்லை :-
பொதுவாக மனிதர்களாகி நாம் சிந்தி, சிதறியதை கணக்கில் எடுத்துக் கொள்ள மாட்டோம். "சிந்தியப் பாலைப் பற்றி சிந்திப்பதால் என்ன பயன் என்றும் சொல்லிக்கொள்வோம். "சூடு அடிக்கிற மாடு தின்று போனதுதான் நமக்கு" என்போம்.
அடுத்து, "பழையன கழிதலும், புதியன புகுதலும்" - என்பது வீட்டில் உள்ள பழைய மற்றும் தேவையில்லாத பொருட்களை புறக்கணித்து வீட்டில் புதியன வந்து புகுதல் வேண்டும் என்ற நம்பிக்கையில் போகிப் பண்டிகையைக் கொண்டாடுகிறார்கள்.
தேவையற்ற பொருட்கள் அப்புறப்படுத்தப்பட்டு வீடு சுத்தமாக்கப்படும். பழைய பொருட்களையும், பயனற்றவைகளையும் விட்டெறியும் நாளாகக் கருதப்படும் போகிப் பண்டிகை அன்று, வீட்டை மட்டுமல்ல மனதில் இருக்கும் தீய எண்ணங்களையும் நீக்கவேண்டும் என்பது இதில் உள்ள தத்துவம் என்கிறார்கள்.
இதெல்லாம் எதற்காக என்றால், புத்தாண்டை, புது மனிதனாக வரவேற்கவேண்டும் என்பதற்காகவே. பழையன கழிதலும், புதியன புகுதலும் என்பதுவே இதன் அடிப்படைத் தத்துவம்.
ஆனால், இறைவனோ கழியும் பழையனதையும், புகும் புதியன வற்றையும் அவன் அறியாமல் இல்லை. அவன் அறியாமல் ஓர் இலையும் உதிர்வதில்லை -அதாவது மரத்திலிருந்து பழுத்து உதிர்கின்ற இலைகள் உபயோகப்படாதவை. சாதாரணமாக எவரும் அவற்றை கவனிக்க மாட்டார்கள்.
மனிதர்கள் அலட்சியம் செய்து விடுகிற இக்காரியத்தை கூட அவன் அறிந்தே இருப்பதால், மற்ற எல்லா காரியத்தையும் அவன் தெரிந்து கொண்டே இருக்கிறான் என்பதிலிருந்து இதிலிருந்து தெளிவாகிறது.
அதாவது உயிரற்ற பொருட்களின் அசைவுகளைக் கூட அவன் அறிகிறான். அப்படியானால், உயிரினங்களின் - அவற்றிலும் குறிப்பாக பொறுப்புகள் உள்ள மனிதன், ஜின் ஆகிய இனங்களின் நிலையைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா ?
நிலத்திலும் நீரிலும் உள்ள ஒவ்வொரு மரத்திற்கும் ஒவ்வொரு வானவர் நியமிக்கப்பட்டுள்ளார். அம்மரத்திலிருந்து கீழே விழுகின்ற இலைகளை அவர் பதிவு செய்கிறார் என்று இன்னும் அப்பாஸ் (ரலி) அவர்கள் இதற்கு விளக்கம் அளித்துள்ளார்கள். (நூல் தப்ஸீர் இப்னு அபீஹாத்திம்)
பூமியின் காரிருளில் உள்ள எந்த வித்தும், ஈரமான மற்றும் காய்ந்த எந்த பொருளும் தெளிவான பதிவேட்டில் இல்லாமலில்லை" என்று அந்த வசனத்தின் இறுதித் தொடர் தெரிவிக்கின்றது.
பூமியில் உள்ள ஒவ்வொரு மரத்திற்கும் ஊசி துளையிடும் துவாரத்திற்க்கும் கூட ஒவ்வொரு வானவர் நியமிக்கப்பட்டுள்ளார். மரம் ஈரப் பதத்துடன் இருக்கும்போதும், அது காய்ந்த நிலையில் இருக்கும் போதும் அதன் நிலைகளை அந்த வானவர் அல்லாஹ்விடம் சமர்ப்பிப்பார் என்று அப்துல்லாஹ் பின் அல்ஹாரிஸ் (ரஹ்) அவர்கள் தெரிவிக்கிறார்கள்.( நூல் தப்ஸீர் இப்னு அபீஹாத்திம்)
இலைகள் ஏன் உதிர்கின்றன ? விஞ்ஞானம் கூறுவது :
இலைகள் வழியாகத்தான் மரத்தின் நீர் ஆவியாகி வெளியேறும். கோடைக்காலத்தில் நீராவிப் போக்கினை கட்டுப்படுத்துவதற்காகவே இலைகள் உதிர்கின்றன.
கோடை காலத்தில் அதிக வெப்பம் நிலவும் . எனவே நிலங்கள் அனைத்தும் வறண்டு விடும் , நிலத்தடி நீர் மட்டமும் அப்போது குறைவாகவே காணப்படும், மரங்களுக்கு போதுமான அளவு நீர் கிடைக்காது. கிடைக்கும் சிறிய அளவு நீரினை சரியாக பயன்படுத்திக் கொள்ளவே இலைகளை உதிர்த்து விடுகிறது.
மற்ற பருவ காலங்களில் போதுமான அளவு நீர் கிடைக்கும் . அப்போது அதிகப்படியான நீரினை , நீராவிப் போக்கின் மூலமாக இலையில் உள்ள இலைத்துளைகள் வெளியேற்றிவிடும்.
தேவையற்ற நீராவி போக்கினை கட்டுப் படுத்துவதற்காகவே இலைகளை உதிர்த்து விடுகின்றன இந்த மரங்கள். அவன் அறியாமல் ஓர் இலையும் உதிர்வதில்லை

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 138
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 55 )

وَهُوَ الَّذِىْ يَتَوَفّٰٮكُمْ بِالَّيْلِ وَ يَعْلَمُ مَا جَرَحْتُمْ بِالنَّهَارِ ثُمَّ يَبْعَثُكُمْ فِيْهِ لِيُقْضٰٓى اَجَلٌ مُّسَمًّى ثُمَّ اِلَيْهِ مَرْجِعُكُمْ ثُمَّ يُنَبِّئُكُمْ بِمَا كُنْتُمْ تَعْمَلُوْنَ

மேலும் அவன் எத்தகையன் எனின், இரவில் ( தூக்கத்தின் பெயரால்) உங்களை மரணமாக்குகின்றான். நீங்கள் பகலில் செய்தவைகளையும் அவன் அறிகின்றான்.பின்னர் குறிப்பிட்ட தவணை பூர்த்தி செய்யப்படுவதற்காக அதில் ( பகலில் விழிப்புறச் செய்து) உங்களை எழுப்புகின்றான். பின்னர் ( மறுமையில்) உங்களின் மீட்சி அவனிடமே இருக்கிறது. அப்பால் நீங்கள் செய்து கொண்டிருந்தவை பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான். (குர்ஆன் : 6:60)

இவ்வசனத்தில் அல்லாஹ்வின் மற்றொரு சக்தி குறிப்பிட்டுக் காட்டப்படுகிறது.மனிதன் தூங்குவதும், விழித்து இருப்பதும் அல்லாஹ்வின் சக்திக்கு எடுத்துக் காட்டுகளாக இருக்கின்றன. இவ்விரண்டு நிலைகளும் மனிதனின் முடிவான மரணத்தையும் பின்னர் எழுப்பப்படுவதையும் உணர்த்துகின்றன!

தூக்கம் மரணத்தின் சகோதரன்

நீங்கள் இரவில் நித்திரை புரிகிறீர்கள். அப்பொழுது என்ன நடக்கிறது என்பதை நீங்கள் அறியமுடியாது; ஒருவன் மரித்து விட்டால் எப்படி தன்னைச் சுற்றி நடப்பதை அறிய முடியாதோ அவ்வாறே தூக்கத்திலும் உணர்ந்து கொள்ள முடிவதில்லை. ஒரு வகையில் தூக்கத்தை சிறிய மரணம் என்றே கூறலாம்.

''தூக்கம் என்பது மரணத்தின் சகோதரன்" என்று ஒரு வாக்கும் உண்டு. ஆகவே தான் தூக்கத்தின் பெயரால் இரவில் உங்களை மரணித்தவர்கள் போன்று ஆக்குகின்றான் என இங்கு கூறப்படுகிறது.

அவ்வாறு தூங்கும் பொழுது பகலில் என்ன செய்தீர்கள் ? என்பதை நீங்கள் அறிய முடியாது. சில சமயம் பகலில் நடந்த காரியங்கள் அனைத்தையும் நீங்கள் மறந்தும் விடுகிறீர்கள். ஆனால், அவனோ நீங்கள் பகலில் சம்பாதிக்கிறவைகளையும் அறிகிறான் அப்பொழுதும் நீங்கள் தூங்கிக் கொண்டேயிருக்கிறீர்கள்.

உங்களுக்கு இவ்வுலகில் ஒரு குறிப்பிட்ட தவணை உண்டு, அத்தவணை தான் இறுதி மரணமாகும். அது பூர்த்தி செய்யப்படுவதற்காக இரவுத் தூக்கத்தை முழு மரணமாக்கி விடாமல், குறிப்பிட்ட தவணை வரும்வரை பகலில் உங்களை விழிப்புறச் செய்து

எழுப்புகின்றான். இப்படியே உங்கள் நேரம் குறிப்பிட்ட மரணம் வரும்வரை பகல் இரவு இரண்டும் மாறி மாறி வந்துகொண்டே இருக்கின்றன.

பின்னர் உங்களது உலகத் தவணை முடிந்து நீங்கள் இறுதியில் மரணமாகி விடும்பொழுது அவனிடம் நீங்கள் சென்று விடுகிறீர்கள். இதனைக் குறித்தே "அவனிடமே நீங்கள் திரும்பிச் செல்ல வேண்டியுள்ளது" என இங்கு கூறப்படுகிறது.

அப்பால் மறுமைநாள் தோன்றி அவனிடம் நீங்கள் கொண்டு வரப்படுவீர்கள. அப்பொழுது நீங்கள் இவ்வுலகில் செய்து கொண்டிருந்தவைப் பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான்" என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.

திருக்குர்ஆனில், இன்னொரு இடத்தில், "அல்லாஹ், உயிர்களை அவை மரணிக்கும் போதும், மரணிக்காதவற்றை அவற்றின் நித்திரையிலும் கைப்பற்றி, பின்பு எதன் மீது மரணத்தை விதித்துவிட்டானோ அதை(த் தன்னிடத்தில்) நிறுத்திக் கொள்கிறான்; மீதியுள்ளவற்றை ஒரு குறிப்பிட்ட தவணை வரை (வாழ்வதற்காக) அனுப்பி விடுகிறான் - சிந்தித்துப் பார்க்கும் மக்களுக்கு, நிச்சயமாக அதில் அத்தாட்சிகள் இருக்கின்றன. (குர்ஆன் 39:42)

படுக்கையை உதறி விட்டு,

"என் இறைவனே! உன் பெயரால் எனது உடலைச் சாய்க்கிறேன் (படுக்கிறேன்). உன் பெயரால் தான் அதை உயர்த்துகிறேன் (எழுகிறேன்). என் உயிரை நீ கைப்பற்றிக் கொண்டால், அதற்கு அருள் புரிவாயாக! கைப்பற்றாது அதை நீ விட்டு வைத்தால் உனது நல்லடியார்களைப் பாதுகாப்பது போல் அதையும் பாதுகாப்பாயாக! (புஹாரி 5845)

தூங்கும் போது,

இறைவா! உன் பெயரால் நான் மரணிக்கிறேன் (தூங்குகிறேன்),உன் பெயரால் உயிர் பெறுகிறேன் (விழிக்கிறேன்).(புஹாரி 7395,முஸ்லிம் 4886)

தூங்கும் முன்,

இறைவா! நீயே என் ஆத்மாவைப் படைத்தாய். நீயே அதனைக் கைப்பற்றுகிறாய். அதன் மரணமும், வாழ்வும் உனக்குரியது. நீ அதை உயிர் வாழச் செய்தால், அதனைக் காத்தருள். அதை நீ மரணிக்கச் செய்தால் அதை மன்னித்து விடு! இறைவா! உன்னிடம் மன்னிப்பை வேண்டுகிறேன். (முஸ்லிம் 4887)

தூங்கி எழுந்ததும்,

எங்களை மரணிக்கச் செய்த பின் உயிர்ப்பித்த அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். மேலும் அவனிடமே (நமது) திரும்பிச் செல்லுதல் உள்ளது. (புஹாரி 6312, 6314, 6324, 6325, 7395)

அபூ கதாதா(ரலி) அறிவித்தார்.

நாங்கள் இரண்டு இரவு நபி(ஸல்) அவர்களுடன் பயணம் செய்து கொண்டிருந்தோம். அப்போது சிலர் 'இறைத்தூதர் அவர்களே! எங்களைச் சற்று இளைப்பாறச் செய்யலமே!" என்று கேட்டனர்.

'நீங்கள் தொழுகையைவிட்டும் உறங்கி விடுவீர்களோ என அஞ்சுகிறேன்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அப்போது பிலால் 'நான் உங்களை எழுப்பி விடுகிறேன்' என்று கூறியதும் அனைவரும் படுத்தனர். பிலால்(ரலி) தம் முதுகைத் தம் கூடாரத்தின் பால் சாய்த்தார். அவரையும் மீறி உறங்கிவிட்டார்.

சூரியனின் ஒரு பகுதி உதித்த பின்பே நபி(ஸல்) அவர்கள் விழித்தனர். அப்போது நபி(ஸல்) அவர்கள் 'பிலாலே! நீர் சொன்னது என்னவாயிற்று?' என்று கேட்டார்கள்.

'இது போன்ற தூக்கம் எனக்கு ஒருபோதும் ஏற்பட்டதில்லை' என்று பிலால்(ரலி) கூறினார்.

'நிச்சயமாக இறைவன் உங்கள் உயிர்களை அவன் விரும்பியபோது கைப்பற்றிக் கொள்கிறான்; அவன் விரும்பியபோது திரும்பவும் ஒப்படைக்கிறான்" என்று நபி(ஸல்) அவர்கள் கூறிவிட்டு (பிலாலை நோக்கி) 'பிலாலே! எழுந்து தொகைக்கு பாங்கு சொல்வீராக!" என்றார்கள். (பின்னர்) உளூச் செய்துவிட்டுச் சூரியன் உயர்ந்து பிரகாசம் ஏற்பட்டபோது தொழுதார்கள். புகாரி - 595.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 139
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 56 )

وَهُوَ الْقَاهِرُ فَوْقَ عِبَادِهٖ وَيُرْسِلُ عَلَيْكُمْ حَفَظَةً حَتّٰٓى اِذَا جَآءَ اَحَدَكُمُ الْمَوْتُ تَوَفَّتْهُ رُسُلُنَا وَهُمْ لَا يُفَرِّطُوْنَ

அவன் தன் அடியார்களை அடக்கியாளுபவனாக இருக்கிறான்; அன்றியும், உங்கள் மீது பாதுகாப்பாளர்களையும் அனுப்புகிறான்; இறுதியில் உங்களில் ஒருவருக்கு மரணம் வந்துவிடுமானால், நம் அமரர்கள் அவர் ஆத்மாவை எடுத்துக் கொள்கிறார்கள் - அவர்கள் (தம் கடமையில்) தவறுவதில்லை. (குர்ஆன் : 6:61)

ثُمَّ رُدُّوْۤا اِلَى اللّٰهِ مَوْلٰٮهُمُ الْحَـقِّ اَلَا لَهُ الْحُكْمُ وَهُوَ اَسْرَعُ الْحَاسِبِيْنَ

பின்னர் அவர்கள் தங்களின் உண்மையான பாதுகாவலனான அல்லாஹ்விடம் கொண்டு வரப்படுவார்கள்; (அப்போது தீர்ப்பு கூறும்) அதிகாரம் அவனுக்கே உண்டு என்பதை அவர்கள் அறிந்து கொள்ளட்டும், அவன் கணக்கு வாங்குவதில் மிகவும் விரைவானவன்.

(குர்ஆன் : 6:62)

பின்னர் அடுத்த வசனம் (61) அவன் தன் அடியார்கள்மீது ஆகிக்கம் செலுத்துகின்றவன் ஆவான் என்று கூறுகின்றது. அதாவது அவன் எல்லாவற்றின் மீதும் அதிகாரம் செலுத்துகின்றான். அவனது கண்ணியம், ஆற்றல், உயர்வு ஆகியவற்றுக்கு முன்னால் அனைத்தும் பணிகின்றன.

"அவன் உங்களுக்குப் பாதுகாவலர்களை அனுப்புகின்றான்" என்று அந்த வசனத்தின் அடுத்த தொடர் தெரிவிக்கின்றது. அதாவது மனிதனுக் குத் தீங்கு நேராமல் அவனது உடலைப் பாதுகாப்பதற்காக வானவர்களை இறைவன் அனுப்புகின்றான்.
ஒரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்: மனிதனுக்கு முன்னும் பின்னும் தொடர்ந்து செல்லக்கூடிய (வானவர்கள்) பலர் உள்ளனர். அவர்கள் அல்லாஹ்வின் கட்டளைப்படி அவனைப் பாதுகாக்கின்றனர் குர்ஆன் (13:11)
அதாவது வானவர்கள் மனிதர்களின் செயல்களைக் கண்காணித்து அவற்றைக் கணக்கு எடுக்கின்றனர்.
வேறொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்; உங்களுக்குக் கண் காணிப்பாளர்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளனர் குர்ஆன் (82:10)
மற்றோர் இடத்தில், (வானவர்களில் ஒருவர் அவனது) வலப் பக்கத்திலும் (மற்றொருவர் அவனது இடப் பக்கத்திலும் அமர்ந்து இருவரும் (அவனுடைய செயல்களைக்) குறிப்பெடுக்கின்றனர். அவன் எந்த வார்த்தையைக் கூறினாலும் கண்காணிக்கும் எழுத்தாளர் அவனிடம் இல்லாமலிருப்பதில்லை" குர்ஆன் (50:17.18) என்று அல்லாஹ் கூறுகின்றான்.
அடுத்து உங்களில் ஒருவருக்கு இறப்பு வரும்போது அதாவது இறப்புக்குரிய நேரம் நெருங்கும்போது- நம் தூதர்கள் அவரது உயிரைக் கைப்பற்றுவார்கள்" என்று மேற்கண்ட குர்ஆன் வசனம் (6.61) கூறுகின்றது.
அதாவது மனிதர்களின் உயிர்களைக் கைப்பற்றுவதற்காக நியமிக்கப்பட்டுள்ள வானவர்கள் அவரது உயிரைக் கைப்பற்றுவார்கள்.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் உள்ளிட்ட பலரும் இதற்கு விளக்கமளிக்கையில் கூறியதாவது: உயிரைக் கைப்பற்றும் வானவருக்குப் பல உதவியாளர்கள் உள்ளனர். அவர்கள் உடலின் மற்ற பகுதிகளிலிருந்து உயிரைக் கழற்றிக் கழுத்துப் பகுதிக்குக் கொண்டுவருவார்கள். பின்னர் உயிரைக் கைப்பற்றும் வானவர் உயிரைக் கைப்பற்றுவார். ( நூல்: தஃப்சீர் தபரீ )
"ஒருவருக்கு மரணம் வந்துவிடுமானால், நம் அமரர்கள் அவர் ஆத்மாவை எடுத்துக் கொள்கிறார்கள்" - உயிரை வாங்குபவர் ஒருவர் அல்ல பலர் என்பதாக மேற்கண்ட வசனம் தெரிவிக்கிறது. விஞ்ஞானம் சொல்வதை கவனியுங்கள் ....
ஒரு மனித உடல் அதிகாரப்பூர்வமாக இறந்த பிறகும் விரல் நகங்கள் மற்றும் முடிகள் தொடர்ந்து வளர்கின்றன என்பதை நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள்.
ஏனென்றால், 'மரணம்' மனித உடலின் அனைத்து உடல் செல்களிலும் பரவுவதற்கு சிறிது நேரம் ஆகும். மேலும் முதன்முறையாக, மனிதன் இறக்கும்போது, மரணம் பயணிக்கும் வேகத்தை விஞ்ஞானிகள் பதிவு செய்ய முடிந்தது.
ஸ்டான்போர்ட் பல்கலைக்கழகத்தின் மருத்துவ ஆராய்ச்சியாளர்களுக்கு மரணம் நம் உடலில் எவ்வாறு நிகழ்கிறது என்பதை முதன்முறையாக கணக்கிடப்பட்டது.
அது நிமிடத்திற்கு 30 மைக்ரோமீட்டர்கள் அல்லது ஒரு மணி நேரத்திற்கு 2 மில்லிமீட்டர் ( 0.2 செமீ ) வேகத்தில் நிகழ்கிறது. மரணம் நம் உடலின் செல்கள் வழியாக ஒரு சென்டிமீட்டர் பயணிக்க ஐந்து மணி நேரம் ஆகும்.
அறிவியலில் வெளியிடப்பட்ட ஆராய்ச்சியின் படி, மனித உடலின் செல்லுலார் மட்டத்தில் திட்டமிடப்பட்ட மரணம் நிகழும் விகிதத்தை விஞ்ஞானிகள் அளந்துள்ளனர். விஞ்ஞான ரீதியாக "அப்போப்டொசிஸ்" என அழைக்கப்படும் இந்த செயல்முறை, முதல் முறையாக பதிவு செய்யப்பட்டு, நேரம் ஒதுக்கப்பட்டது.
இறக்கும் செல்கள் மூலம் தூண்டுதல் அலைகளாக அப்போப்டொசிஸ் அல்லது திட்டமிடப்பட்ட செல்லுலார் மரணம் நிகழ்கிறது என்று விஞ்ஞானிகள் கண்டறிந்தனர், மேலும் இந்த தூண்டுதல் அலையின் வேகத்தைத்தான் ஸ்டான்போர்ட் ஆராய்ச்சியாளர்கள் அளவிட முடிந்தது. ஆனால்...

மரணம் நிகழ்ந்து விட்டது என்பதை எந்த உடல் உறுப்பின் செயல் இழப்பிலிருந்து முடிவு செய்யலாம் என்பதை மருத்துவ விஞ்ஞானம் ஆராய்கிறது !
இதயம் ரத்தத்தை உந்தி தள்ளுவதே நிறுத்தும்போது மரணம் ஏற்படுவதாக முன்பு கருதப்பட்டது. மருத்துவர்கள் நாடிப் பிடித்து பார்ப்பார்கள் மூச்சு இருக்கிறதா.. என்று பரிசோதிப்பார்கள். மூக்குக்கு அருகே கண்ணாடியை வைத்து பார்த்து ஈரம் படிகிறதா... என்று சோதித்துப் பார்ப்பார்கள்.
நவீன செயற்கை சுவாச கருவிகளின் ( வெண்டிலேட்டர்) வருகை வாழ்க்கையின் முடிவான மரணம் குறித்த எளிய புரிதல்களை முற்றிலும் ரத்து செய்து விட்டது.
தீவிர சிகிச்சை முறைகள் மரணத்தை வரையறை செய்வதை மேலும் சிக்கலாக்கி விட்டன . மருத்துவ அடிப்படையில் மரணத்தின் வரையறை நரம்பியலின் பிராந்தியத்துக்குள் நுழைந்து விட்டது
நரம்பு மண்டலத்தின் மரணம், மூளைச்சாவு ... போன்ற புதிய வார்த்தைகள் மருத்துவ அகராதிக்குள் நுழைந்து மரண கணப்பொழுதை மேலும் சிக்கலாகி விட்டன.
மூளை சாவு அடைந்த ஒரு நபருக்கு இதயமும் நுரையீரலும் தொடர்ந்து செயல்படும் நிலையில், அவர் இறந்துவிட்டார் என்று சொல்ல முடியுமா ?
உடல் உறுப்பு மாற்று சிகிச்சைகளின் நடைமுறைகள் வெளிப்படையாக இருக்கும் பொருட்டு மூளை சாவு நிகழ்வுகளை உறுதிப்படுத்தும் விதிமுறைகளைக் கடந்த மாதம் கேரளா அரசு வெளியிட்டது.
மருத்துவ அறிவியலில் ஏகப்பட்ட முன்னேற்றங்கள் ஏற்பட்டிருந்தாலும் ( ஒருவேளை அதுவே காரணமாகவும் இருக்கலாம் ) மருத்துவ ரீதியாகவும் அறநெறிகளின் அடிப்படையிலும் எந்த தருணத்தில் ஒருவருக்கு மரணம் ஏற்படுகிறது என்பதை முடிவு செய்வதில் தெளிவில்லாத குழப்பமே மேலும் மேலும் நிலவுவதாக மருத்துவ விஞ்ஞானம் கூறுகிறது
''...ஒரு குறிப்பிட்ட தவணை வரை அவர்களை( மரணம் பிடிக்காது) பிற்படுத்துகிறான் - அவர்களுடைய தவணை வந்து விட்டாலோ ஒரு கணமேனும் அவர்கள் பிந்தவும் மாட்டார்கள்; முந்தவும் மாட்டார்கள்" (குர்ஆன் : 16:61)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 140
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 57 )

قُلْ مَنْ يُّنَجِّيْكُمْ مِّنْ ظُلُمٰتِ الْبَرِّ وَالْبَحْرِ تَدْعُوْنَهٗ تَضَرُّعًا وَّخُفْيَةً لَٮِٕنْ اَنْجٰٮنَا مِنْ هٰذِهٖ لَـنَكُوْنَنَّ مِنَ الشّٰكِرِيْنَ
(நபியே!) நீர் கூறும்: நீங்கள் கரையிலும் கடலிலும் உள்ள இருள்களில் (சிக்கித் தவிக்கும் சமயத்தில்) “எங்களை இதைவிட்டுக் காப்பாற்றிவிட்டால், நிச்சயமாக நாங்கள் நன்றி செலுத்துவோரில் ஆகி விடுவோம் என்று பணிவாகவும், மறைவாகவும் நீங்கள் அவனிடம் பிரார்த்திக்கின்றீர்களே அப்போது உங்களை காப்பாற்றுகிறவன் யார்?”
(குர்ஆன் : 6:63)
قُلِ اللّٰهُ يُنَجِّيْكُمْ مِّنْهَا وَمِنْ كُلِّ كَرْبٍ ثُمَّ اَنْـتُمْ تُشْرِكُوْنَ
“இதிலிருந்தும், இன்னும் மற்றெல்லாத் துன்பங்களிலிருந்தும் உங்களைக் காப்பாற்றுபவன் அல்லாஹ்வே; பின்னர் நீங்கள் (அவனுக்கு) இணை வைக்கின்றீர்களே” என்று கூறுவீராக.
(குர்ஆன் : 6:64)
குர்ஆனில் இன்னொரு இடத்தில்,
"அவனே உங்களைத் தரையிலும், கடலிலும் பயணம் செய்ய வைக்கிறான். (சில சமயம்) நீங்கள் கப்பலில் இருக்கும்போது சாதகமான நல்ல காற்றினால் அவர்களைக் கப்பல்கள் (சுமந்து) செல்லும்போது அவர்கள்

மகிழ்ச்சியடைகிறார்கள், பின்னர் புயல் காற்று வீசி எல்லாப் பக்கங்களிலிருந்தும் அலைகள் மோதும்போது, நிச்சயமாக (அலைகளால்) சூழப்பட்டோம் (தப்ப வழியில்லையே) என்று எண்ணுகிறார்கள், அச்சமயத்தில் தூயஉள்ளத்துடன், நீ எங்களை இதிலிருந்து காப்பாற்றிவிட்டால் மெய்யாகவே நாங்கள் உனக்கு நன்றி செலுத்துபவர்களாக இருப்போம் என்று அல்லாஹ்விடம் பிரார்த்திக்கின்றார்கள். (குர்ஆன் 10:22)
பெரிய செல்வந்தன் வியாபார விஷயமாக வெளிநாடு போனவன் கப்பலில் ஊர் திரும்பிக் கொண்டிருக்கிறான் . கப்பல் நடுக்கடலில் வந்துகொண்டிருக்கிறது . திடீர் என்று கடல் கொந்தளிக்கிறது. கப்பலையே கவிழ்த்து விடும் அளவுக்கு மலை போல் அலைகள் எழும்புகின்றன! சூறாவளி வீசியது !

"ஆண்டவா என்னை நீ பத்திரமாக கரை சேர்த்தால் என் பங்களாவை விற்று ஏழைகளுக்கு தானம் கொடுக்கிறேன் " என்று பதற்றத்தோடு வேண்டிக் கொள்கிறான் செல்வந்தன் .
கொஞ்ச நேரத்தில் எல்லோரும் ஆச்சரியப்படும்படியாக சுத்தமாக புயல் குறைந்து விடுகிறது . கடல் கொந்தளிப்பும் நின்றுவிடுகிறது . எந்தவித மாற்றமும் இல்லாமல் கப்பல் சுகமாய் பயணம் செய்து கரை சேர்க்கிறது .

செல்வந்தன் இப்போது நினைக்கிறான் "நமது பங்களாவே விற்று ஏழைக்கு தானம் கொடுப்பதாகக் அவசரப்பட்டு இறைவனிடம் பிரார்த்தனை செய்துகொண்டு விட்டோமே! என்ன செய்யலாம் ? "
ஊரை அடைந்த செல்வன் தனது பங்களாவை விற்கப் போவதாக அறிவிக்கிறான் . பணம் உள்ளவர்கள் எல்லாம் அந்த பங்களாவை வாங்க போட்டி போட்டுக் கொண்டு வீட்டின் முன் குவிகிறார்கள்.
அப்போது செல்வந்தன் சொல்கிறான் :
"என் பங்களாவின் விலை ஒரு ரூபாய் '' இதைக் கேட்டதும் கூடியிருந்த எல்லோருக்கும் அதிர்ச்சி ஆச்சரியம். அட , கடல் பயணம் இவனை பைத்தியக்காரன் ஆகிவிட்டதோ ?
அப்போது நமது செல்வந்தன் ஒரு நிபந்தனை வைக்கிறான் .
"என் பூனையை யார் வாங்குகிறார்களோ அவர்களுக்கு தான் என் பங்களாவை விற்பேன் "
"பூனை என்ன விலை ? "
"ஒரு கோடி ரூபாய் !
பங்களாவை வாங்க இருந்தவர்கள் குழம்பிப் போகிறார்கள் .ஆனால் பங்களா நிச்சயம் ஒரு கோடி ரூபாய் போதுமானதுதான் என்பதால் வந்திருந்தவர்களில் ஒருவர் பங்களாவை ஒரு ரூபாய்க்கும் பூனையை ஒரு கோடி ரூபாய்க்கும் வாங்கிக் கொள்கிறார்.
பணத்தை வாங்கிக் கொண்ட நமது செல்வந்தன் ஒரு பிச்சைக்காரனுக்கு அந்த ஒரு ரூபாயை தானமாக கொடுத்துவிட்டு,
ஆண்டவனிடம் சொல்கிறான் : "கடவுளே நான் உன்னிடம் வேண்டிக் கொண்டபடி என் பிரார்த்தனையை சரியாக நிறைவேற்றி விட்டேன். பங்களா விற்ற பணத்தை ஏழைக்கு தானம் செய்து விட்டேன் ! "
وَاِذَا غَشِيَهُمْ مَّوْجٌ كَالظُّلَلِ دَعَوُا اللّٰهَ مُخْلِصِيْنَ لَهُ الدِّيْنَ ۚ فَلَمَّا نَجّٰىهُمْ اِلَى الْبَرِّ فَمِنْهُمْ مُّقْتَصِدٌ ؕ وَمَا يَجْحَدُ بِاٰيٰتِنَاۤ اِلَّا كُلُّ خَتَّارٍ كَفُوْرٍ
(கப்பலில் செல்லும்) அவர்களை, மலைமுகடுகளைப் போன்ற அலை சூழ்ந்து கொள்ளுமானால், அல்லாஹ்வுக்கே வழிபட்டு அந்தரங்க சுத்தியுடன் அவனிடம் பிரார்த்திக்கின்றனர்;
ஆனால் அவன் அவர்களைக் காப்பாற்றிக்கரைசேர்த்து விட்டால், அவர்களில் சிலர் நடுநிலையாக நடந்து கொள்கிறார்கள் - எனினும் மிகவும் நன்றி கெட்ட, பெருந்துரோகிகளைத் தவிர வேறு எவரும் நம் அத்தாட்சிகளை நிராகரிப்பதில்லை. (குர்ஆன் : 31:32)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 141**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 58 )**

قُلْ هُوَ الْقَادِرُ عَلٰٓى اَنْ يَّبْعَثَ عَلَيْكُمْ عَذَابًا مِّنْ فَوْقِكُمْ اَوْ مِنْ تَحْتِ اَرْجُلِكُمْ اَوْ يَلْبِسَكُمْ شِيَـعًا وَّيُذِيْقَ بَعْضَكُمْ بَاْسَ بَعْضٍ اُنْظُرْ كَيْفَ نُصَرِّفُ الْاٰيٰتِ لَعَلَّهُمْ يَفْقَهُوْنَ

(நபியே!) நீர் கூறும்: "உங்கள் (தலைக்கு) மேலிருந்தோ அல்லது உங்களுடைய கால்களுக்குக் கீழிருந்தோ உங்களுக்குத் துன்பம் ஏற்படும்படி செய்யவும்; அல்லது உங்களைப் பல பிரிவுகளாக்கி உங்களில் சிலர் சிலருடைய கொடுமையை அனுபவிக்கும்படிச் செய்யவும் அவன் ஆற்றலுள்ளவனாக இருக்கின்றான் " அவர்கள் விளங்கிக் கொள்வதற்காக (நம்)வசனங்களை எவ்வாறு (பலவகைகளில் தெளிவாக்கி) விவரிக்கின்றோம் என்பதை (நபியே!) நீர் கவனிப்பீராக. (குர்ஆன் : 6:65)
வசன விளக்கம்
காடுகளிலும், கரைகளிலுமிருந்துதான் அல்லாஹ்வின் வேதனை இறங்குமென்று எண்ணாதீர்கள். நீங்கள் உட்கார்ந்திருக்கும் இடத்திலிருந்தே பலவகையான வேதனைகள் உங்கள் மீது இறக்கப்பட்டு விடலாம்.
நீங்கள் ஓர் இடத்தில் அமர்ந்து கொண்டிருக்கிறீர்கள். அப்பொழுது உங்களுடைய தலைகளுக்கு மேலிலிருந்து வேதனையை இறக்கிவிடலாம். ஒரு பேரிடியைக் கொண்டோ பளுவான ஒன்றை மேலிருந்து விழச் செய்வதுகொண்டோ பெரும் புயற்காற்றைக் கொண்டோ வேறு வகையான பயங்கரமானவைகளைக் கொண்டோ உங்களை அவன் அழித்து விடலாம்.
உங்களுடைய கால்களுக்கு கீழிருந்து வேதனையை உங்கள் மீது அவன் அனுப்பி விடலாம்.
நீங்கள் நடந்து சென்று கொண்டிருக்கிறீர்கள். திடீரென பூமி பிளந்து நீங்கள் அதனுள் அமிழ்ந்து விடலாம். அல்லது நீங்கள் அறியாத முறையில் ஒருவரைச் சாட்டி உங்கள் காலடியில் ஒருவெடி பொருளை வைத்து வெடிக்கச் செய்து உங்களை அழித்து விடலாம். அல்லது கொடிய விஷ ஜந்து உங்களது காலடியிலிருந்து உங்களைத் தீண்டிவிடலாம். இவை போன்று எத்தனை எத்தனையோ வேதனைகளைக் கொண்டு அவன் உங்களைப் பிடித்து விடலாம்.
அல்லது உங்களைப் பல பிரிவினராகக் குழப்பி வைத்து உங்களிடையே விரோதத்தை உண்டாக்கி விடலாம். அதனால் உங்களில் சிலர் சிலருடைய கொடுமையை அனுபவிக்குமாறு செய்து விடலாம். அது யுத்த ரூபத்திலும் இருக்கலாம், தனிப்பட்ட முறையிலும் இருக்கலாம். இப்படி அவன் எல்லா வகையான வேதனைகளையும் இறக்குவதற்கு சக்தியுடையவனாக இருக்கின்றான்.
இவ்வசனம் இறக்கப்பட்டதும் பெருமானார் (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் இவ்வேதனைகளை யெல்லாம் விட்டுக் காப்பாற்றுமாறு கேட்டதாக ஹஜ்ரத் ஜாபர் (ரலி) அவர்கள் கூறினார்கள். (நூல் : புகாரீ)
ஒரு தினம் பெருமானார் (ஸல்) அவர்கள் பனுமுஆவியா வர்கத்தினரின் பள்ளிவாசலுக்குச் சென்று இரண்டு ரக்கஅத்துக்கள் தொழுதார்கள். தாங்களும் அவர்களுடன் சேர்ந்து தொழுதோம். அல்லாஹ்விடம் நீண்ட நேரம் பிரார்த்தனை புரித்து விட்டு, அப்பால் எங்கள் பக்கம் திரும்பினார்கள்.
"என் இரட்சகனிடம் மூன்று காரியங்களைக் கேட்டேன், இரண்டை எனக்கு வழங்கி விட்டான். மற்றொன்றைத் தரமறுத்து விட்டான் (அவையாவன)
1. என்னுடைய சமுதாயத்தினர் அனைவரையும் பஞ்சத்தால் அழித்து விடக்கூடாது" என்று கேட்டேன். ஏற்றுக் கொண்டு விட்டான்.
2. "எனது சமுதாயத்தினர் அனைவரும் ஏக்காலத்தில் ஒன்றாக வெள்ளத்தில் மூழ்கி அழிந்து விடக்கூடாது"என்று கேட்டேன். ஏற்றுக் கொண்டு விட்டான்.
3. "அவர்களில் சிலர் சிலருடன் சண்டையிட்டுக் கொள்ளக் கூடாது, என்று கேட்டேன். அதைக் கொடுக்க மறுத்து விட்டான்" என்று கூறினார்கள்.
(ஹஜரத் அதுபின் அபீவக்காஸ் (ரலி), நூல்: முஸ்லிம்}

ஒட்டகப் போர்
நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மனைவி ஆயிஷா (ரலி) அவர்களுக்கும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மருமகன் அலீ (ரலி) அவர்களுக்குமிடையே போர் நடக்கும் என்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பல்வேறு வழிகளில் முன்னறிவிப்புச் செய்தனர்.
உஸ்மான் (ரலி) அவர்கள் இஸ்லாமிய அரசின் தலை நகரமான மதீனா நகரில் கலகக்காரர்களால் கொல்லப்பட்டனர். அவர்கள் கொல்லப்பட்ட பின் இக்கொலைப் பழி அலீ (ரலி) அவர்கள் மீது விழுகிறது. தான் ஆட்சிக்கு வருவதற்காக அலீ தான் உஸ்மானைக் கொல்லத் திட்டம் தீட்டினார் என்று சில விஷமிகள் பிரச்சாரம் செய்தனர்.
மற்றும் சிலர் அலீ (ரலி) அவர்களுக்கு இக்கொலையில் தொடர்பு இல்லாவிட்டாலும் கொலையாளிகள் மீது நடவடிக்கை எடுக்காமல் தாமதம் செய்கிறார் என்றும் அவர்களைக் காப்பாற்ற முனைகிறார் என்றும் பிரச்சாரம் செய்தனர்.
உஸ்மான் (ரலி) அவர்களின் கொலைக்கு நியாயம் கேட்டு ஆயிஷா (ரலி) அவர்கள் படை திரட்டினார்கள்.
உஸ்மான் (ரலி) அவர்களின் உறவினரும், ஏற்கனவே அலீ (ரலி) அவர்கள் மீது பகையுணர்வும் கொண்டிருந்த நபித்தோழர் முஆவியா (ரலி) இந்தப் போர் நடக்க வேண்டும் என்று எண்ணினார்.
அலீ (ரலி) அவர்களுக்கும், ஆயிஷா (ரலி) அவர்களுக்கும் இடையே பெரிய அளவில் போர் மூண்டது. இப்போரில் ஆயிஷா (ரலி) அவர்கள் வீற்றிருந்த ஒட்டகத்தின் கால்கள் வெட்டப்பட்டன. அவர்கள் கீழே விழுந்ததும் அவர்களின் படையினர் நிலை குலைந்து தோற்றுப் போனார்கள். இதன் காரணமாக இப்போர் ஒட்டகப் போர்' என்று குறிப்பிடப்படுகிறது.
ஒட்டகப் போருக்காக ஆயிஷா (ரலி) அவர்கள் புறப்பட்ட போது வழியில் ஒரு இடத்தில் தங்கினார்கள். அந்த இடத்தில் நாய்கள் குரைத்தன. இதைக் கண்ட ஆயிஷா (ரலி) அவர்கள் 'இந்த இடத்தின் பெயரென்ன' என்று கேட்டார்கள். அவர்களின் சகாக்கள் ஹவ்அப்' என்று கூறினார்கள். உடனே ஆயிஷா (ரலி) அவர்கள் திரும்பிச் செல்ல முற்பட்டனர்.
தோழர்கள் காரணம் கேட்ட போது '(என் மனைவியராகிய) உங்களில் ஒருவருக்கு எதிராக ஹவ்அப்' என்ற இடத்தில் நாய்கள் குரைக்கும். அப்போது அவரது நிலை மோசமானதாக இருக்கும்' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதை நினைவு கூர்ந்தார்கள்.
( நூல் : அஹ்மத் 24758)
ஆனாலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் முன்னறிவிப்பின் படி தமது நிலை தவறு என்று புரிந்து கொண்டாலும் அவர்களின் சகாக்கள் செய்த நிர்பந்தத்தால் அவர்கள் போருக்குச் செல்லும் முடிவை மாற்றிக் கொள்ள முடியவில்லை.
இந்தப் போரில் அலீ (ரலி) அவர்களின் ஆதரவாளர்கள் ஏறத்தாழ ஆயிரம் பேரும், ஆயிஷா (ரலி) அவர்களின் ஆதரவாளர்கள் ஏறத்தாழ ஒன்பதாயிரம் பேரும் மாண்டனர்.
தமது மனைவிக்கு மட்டுமின்றி மருமகன் அலீ (ரலி) அவர்களுக்கும் இது குறித்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்தார்கள்.
'அலீயே உனக்கும் என் மனைவி ஆயிஷாவுக்கும் இடையே பிரச்சினை ஏற்படும்' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அப்போது அலீ (ரலி) அவர்கள் 'உங்கள் மனைவிக்கும், எனக்கும் இடையே சண்டை ஏற்படுமா? அப்படி நடந்தால் என்னைவிட துர்பாக்கியசாலி இருக்க முடியாது' என்று கூறினார்கள்.
'அந்தச் சம்பவம் நிகழும் போது ஆயிஷாவைப் பாதுகாப்பான இடத்துக்கு அனுப்பி வைத்துவிட வேண்டும்' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
( நூல் : அஹ்மத் 25943 )

இந்த இரண்டு முன்னறிவிப்புகளும் அப்படியே முழுமையாக நிறைவேறின. அலீ (ரலி) அவர்கள் ஆயிஷா (ரலி)அவர்களைக் கன்னியமான முறையில் பாதுகாப்பாக அனுப்பி வைத்தார்கள்.
பின்னர் இருவரும் சமாதானமாகவும், ஆதரவாகவும் ஆகிக்கொண்டனர்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 142**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 59)**

وَكَذَّبَ بِهٖ قَوْمُكَ وَهُوَ الْحَـقُّ‌ قُلْ لَّسْتُ عَلَيْكُمْ بِوَكِيْلٍ
(நபியே! திருக்குர்ஆனாகிய) இது முற்றிலும் உண்மையாக இருந்தும், உம் சமூகத்தார் இதை நிராகரிக்கின்றனர்; எனவே, "நான் உங்கள் மீது பொறுப்பாளான் அல்ல" என்று (நபியே!) நீர் கூறிவிடும்.(குர்ஆன் : 6:66)
(நபியே! திருக்குர்ஆனாகிய) இது முற்றிலும் உண்மையாக இருந்தும், உம் சமூகத்தார் இதை நிராகரிக்கின்றனர்;
காரணம் :
முஹம்மது நபியால் எழுதப்பட்டதே திருக்குர்ஆன் என்று முஸ்லிம் அல்லாதவர்கள் பலர் நினைக்கின்றனர். இது தவறாகும்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சுயமாகக் கற்பனை செய்து, அதை இறைச்செய்தி என மக்களிடம் கூறியிருக்கலாம் என்பது தான் முஸ்லிமல்லாதவர்களின் சந்தேகத்துக்கு அடிப்படை.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தாமாக உருவாக்கி இதைக் கூறியிருக்க முடியாது என்பதற்கு ஏற்கத்தக்க நியாயமான பல காரணங்கள் உள்ளன.
பொதுவாக மனிதர்களின் பேச்சுக்களில் முரண்பாடுகள் காணப்படும். ஒரு நாள், இரண்டு நாட்கள் முரண்பாடு ஏற்படாத வகையில் மிகவும் கவனமாகப் பேசிட இயலும். எவ்வித முரண்பாடும் இன்றி எவராலும் ஆண்டுக் கணக்கில் பேசிட இயலாது.
ஆனால், திருக்குர்ஆனை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சிறிது சிறிதாக 23 ஆண்டுகளாக மக்களிடம் போதித்தார்கள். இது அவர்களின் சொந்தக் கற்பனையாக இருந்திருந்தால், 23 வருடப் பேச்சுக்களில் ஏராளமான முரண்பாடுகள் அவர்களிடம் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால் திருக்குர்ஆனில் முரண்பாடுகள் எள்ளளவும் இல்லை.
மேலே சுட்டிக்காட்டிய பலவீனங்கள் எதுவுமே இல்லாத ஏகஇறைவனின் வார்த்தையாக திருக்குர்ஆன் இருந்தால் மட்டுமே முரண்பாடு இல்லாமல் இருக்க முடியும்.
இறைவனிடமிருந்து வந்ததால் தன்னுள் முரண்பாடு இல்லை என்று குர்ஆன் 4:82 வசனத்தில் மனித குலத்துக்கு திருக்குர்ஆன் அறைகூவல் விடுக்கிறது.
திருக்குர்ஆனை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இறைவனின் செய்திகள் என்று அறிமுகம் செய்தார்கள். இறைவனின் செய்திகள் என்றால் அது மனிதர்களின் செய்திகளைப் போல் அல்லாமல் அனைத்து வகையிலும் அனைத்தையும் மிஞ்சும் வகையில் அமைந்திருக்க வேண்டும்.
திருக்குர்ஆன் இப்படி அமைந்துள்ளதா? என்றால் அரபுமொழி அறிந்த முஸ்லிம் அல்லாதவர் திருக்குர்ஆனை ஆய்வு செய்தால், மனிதனால் எட்ட முடியாத உயர்ந்த தரத்தில் அது அமைந்திருப்பதை அறிந்து கொள்வார்.
அரபுமொழியின் மிக உயர்ந்த இலக்கியமாக திருக்குர்ஆன் 14 நூற்றாண்டுகளாக மதிக்கப்பட்டு வருகிறது.
மாபெரும் இலக்கியங்களில் பொய்களும், மிகையான வர்ணனைகளும் அவசியம் இடம் பெற்றிருக்கும். ஆனால் திருக்குர்ஆனில் பொய் இல்லை! முரண்பாடு இல்லை! ஆபாசம் இல்லை! மிகையான வர்ணனைகள் இல்லை! கற்பனைக் கலவை இல்லை! நழுவுதலும், மழுப்புதலும் இல்லை! மன்னர்களையும், வள்ளல்களையும் மிகைப்படுத்திப் புகழுதல் இல்லை!

இலக்கியத்திற்குச் சுவையூட்டும் இந்த அம்சங்கள் அனைத்தையும் அடியோடு நிராகரித்துவிட்டு, உண்மைகளை மட்டுமே மிக உயர்ந்த இலக்கியத் தரத்துடன் திருக்குர்ஆன் பேசியிருப்பது, அன்றைய இலக்கிய மேதைகளையும் பிரமிப்புடன் பார்க்க வைத்தது. இன்று வரை அந்தப் பிரமிப்பு நீடிக்கிறது.
இவ்வளவு உயர்ந்த இலக்கியத் தரத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரு நூலை இயற்ற வேண்டும் என்றால் அவர் மாபெரும் பண்டிதராகவும், அரபுமொழியில் கரை கண்டவராகவும், முந்தைய இலக்கியங்களைக் கரைத்துக் குடித்தவராகவும் இருந்திருக்க வேண்டும்.
ஆனால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு எழுதவும், படிக்கவும் தெரியாது என்பது ஆச்சரியமான உண்மை. அவர்களுக்கு எழுதவும், படிக்கவும் தெரியாது என்று திருக்குர்ஆன் 29:48, 7:157,158, 62:2 ஆகிய வசனங்கள் கூறுகின்றன.
அரபுமொழிப் பண்டிதராக இல்லாத, முந்தைய இலக்கியங்களை வாசிக்கவும் தெரியாத நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொந்தமாகக் கற்பனை செய்தால் எந்தத் தரத்தில் இருக்குமோ அந்தத் தரத்தில் திருக்குர்ஆன் இல்லை. அரபுமொழிப் பண்டிதர் கற்பனை செய்தால் எந்தத் தரத்தில் இருக்குமோ அந்தத் தரத்திலும் இல்லை. மாறாக அதைவிடப் பல மடங்கு உயர்ந்த தரத்தில் இருக்கிறது. எனவே இது இறைச்செய்தியாகத் தான் இருக்க முடியும்.
பொதுவாக ஒரு நூல் எந்த அளவுக்கு உயர்ந்த இலக்கியத் தரத்துடன் அமைக்கப்பட்டுள்ளதோ அந்த அளவுக்கு சாதாரண மக்களிடமிருந்து அந்நியப்பட்டு விடும்.
மிக உயர்ந்த இலக்கியங்கள் எந்த மொழியில் இருந்தாலும் அந்த மொழியின் பண்டிதர்கள் மட்டுமே அதைப் புரிந்து கொள்ள முடியும். அம்மொழி பேசும் சாதாரண மக்களுக்கு அவை புரியாது.
சாதாரண மக்களுக்கும் புரியும் வகையில் ஒரு நூல் இருந்தால் நிச்சயமாக உயர்ந்த இலக்கியத்திற்குரிய அம்சங்கள் அந்த நூலில் இருக்காது.
ஆனால் அரபுமொழியைப் பேச மட்டுமே தெரிந்த மக்களுக்கும் திருக்குர்ஆன் புரிந்தது. பண்டிதர்களையும் கவர்ந்தது. அரபுமொழியில் உள்ள எண்ணற்ற இலக்கிய நூல்களை இன்றைய அரபுகளில் பலரால் புரிந்து கொள்ள முடியாது. ஆனால் அரபு மொழி பேசும் ஒவ்வொருவரும் திருக்குர்ஆனைப் புரிந்து கொள்கிறார்.
இன்றைக்கும் கூட எந்த மனிதனாலும் இத்தகைய அம்சத்தில் ஒரு நூலை இயற்றவே முடியாது. எந்த மனிதருக்கும் இயற்ற இயலாத ஒரு நூலை மக்களிடம் முன்வைத்து "இது இறைவேதம்'' என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வாதிட்டார்கள்.
திருக்குர்ஆன் முஹம்மது நபியின் கற்பனை அல்ல என்பதற்கு இதுவும் சான்றாக அமைந்துள்ளது.
எந்த இலக்கியமானாலும் அதில் ஓசை அழகும், இசை நயமும் கிடைக்க வேண்டுமானால் அதனுடைய சீர்களும், அடிகளும் ஒழுங்குமுறைக்கு உட்பட்டிருக்க வேண்டும். அவ்வாறு இருப்பதால் தான் அவற்றில் இசை நயத்தை நாம் உணர்கிறோம்.
ஆனால் திருக்குர்ஆனில் ஒழுங்கு முறைப்படுத்தப்பட்ட அடிகள் இல்லை. மாறாக உரைநடை போலவே அதன் வசனங்கள் அமைந்துள்ளன.
அவ்வசனங்களிலும் குறிப்பிட்ட ஒரே அளவிலான சொற்கள் இடம் பெறவில்லை. மாறாக சில வசனங்களில் ஐம்பதுக்கும் மேற்பட்ட வார்த்தைகளும், சில வசனங்களில் பத்து வார்த்தைகளும், சில வசனங்களில் ஐந்து வார்த்தைகளும் இருக்கும். ஒரு வார்த்தையே வசனமாகவும் இருக்கும்.
இப்படி அமைந்துள்ள எந்த நூலிலும் இசைநயம் அறவே இருக்காது. ஆனால் எதில் இசைநயத்தை மனிதனால் கொண்டு வர இயலாதோ அந்த நடையில் மனித உள்ளங்களை ஈர்க்கும் இசைநயம் திருக்குர்ஆனுக்கு மட்டுமே இருக்கிறது. அரபுமொழி தெரியாத மக்களும் அதன் இசைநயத்துக்கு மயங்குகின்றனர்.
இசைநயத்துக்கு எதிரான ஒரு முறையைத் தேர்வு செய்து அதற்குள் இசைநயத்தை அமைத்திருப்பது இது முஹம்மது நபியால் கற்பனை செய்யப்பட்டது அல்ல என்பதற்கு மற்றொரு சான்று.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அவர்கள் கி.பி. 570-ல் பிறந்தார்கள்.

இந்தக் காலகட்டத்தில் உலக மக்கள் அறிவியலில் மிகவும் பின்தங்கிய நிலையில் இருந்தார்கள். உலகம் உருண்டை என்ற சாதாரண அறிவு கூட அன்றைய மக்களுக்கு இருக்கவில்லை.
இத்தகைய காலத்தில் வாழ்ந்தவர் எவ்வளவு பெரிய மேதையாக இருந்தாலும், தனது காலத்து அறிவைக் கடந்து எதையும் அவரால் கூறவே இயலாது. சுமார் நூறு வருடம் கடந்த பின் அவரது நூலை வாசித்தால் அதில் பல தவறுகள் இருப்பதை உலகம் கண்டுபிடித்துவிடும்.
நூறு வருடங்களுக்குப் பின் என்ன நடக்கும்; என்னென்ன கண்டுபிடிக்கப்படும் என்ற விபரங்களை நூறு வருடங்களுக்கு முன் வாழ்ந்தவரால் ஊகம் செய்ய இயலாது என்பதே இதற்குக் காரணம்.
பல அறிஞர்கள் கூட்டாகச் சேர்ந்து உருவாக்கிய நூலாக இருந்தால் கூட நூறு வருடங்களுக்குப் பின் அதில் பல தவறுகள் இருப்பதைக் காண முடியும். சில நேரங்களில் அந்த முழு நூலுமே காலத்திற்கு ஒவ்வாத நூலாகி இருப்பதையும் காணமுடியும்.
ஆனால் எழுதவும், படிக்கவும் தெரியாத, மிகவும் பின்தங்கிய சமுதாயத்தில் வாழ்ந்த ஒருவர் எதை இறைவேதம் என்று அறிமுகம் செய்தாரோ அந்த வேதத்தில் எந்த ஒன்றையும் தவறானது என்று இன்றைக்கும் நிரூபிக்க முடியவில்லை.
திருக்குர்ஆனைப் பொருத்த வரை அது ஆன்மிகத்தைப் பற்றி மட்டும் பேசவில்லை. எல்லாத் துறைகளைப் பற்றியும் ஆங்காங்கே பேசுகிறது.
பூமியைப் பற்றியும், ஏனைய கோள்கள் பற்றியும், வானுலகம் பற்றியும் பேசும்போது, இந்த நூற்றாண்டின் மாமேதையும், வானியல் நிபுணரும் பேசினால் எவ்வாறு இருக்குமோ அதைவிடச் சிறப்பாக திருக்குர்ஆன் பேசுகிறது.
அது போல் மனிதனைப் பற்றியும், மற்ற உயிரினங்களைப் பற்றியும், உயிரினங்கள் உற்பத்தியாகும் விதம் பற்றியும் இன்னும் பல விஷயங்களைப் பற்றியும் திருக்குர்ஆன் பேசுகிறது. 14 நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதன் பேசுவது போல் பேசவில்லை. இந்த நூற்றாண்டின் தேர்ந்த மருத்துவ மேதை பேசுவதை விட அழகாகப் பேசுகிறது.
தாவரங்களைப் பற்றிப் பேசினாலும், மலைகளைப் பற்றிப் பேசினாலும், நதிகளைப் பற்றிப் பேசினாலும் 14 நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர் பேசியது போல் திருக்குர்ஆனின் பேச்சு இல்லை.
அது மட்டுமின்றி சென்ற நூற்றாண்டுக்கு முன்னால் வரை கண்டுபிடிக்கப்படாத, தற்போது கண்டுபிடிக்கப்பட்ட பல விஷயங்களை திருக்குர்ஆன் அன்றே சொல்லியிருக்கிறது.
பல்வேறு துறைகளிலும் தேர்ந்த அறிவுடைய ஒருவர் இன்று எப்படி பேசுவாரோ அதைவிடச் சிறப்பாக திருக்குர்ஆன் பேசுவதையும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலச் சூழ்நிலையையும் ஒருசேரச் சிந்திப்பவர்கள் "இது முஹம்மது நபியின் சொந்த வார்த்தையாக இருக்க முடியாது; முக்காலமும் உணர்ந்த இறைவனின் வார்த்தையாகத் தான் இருக்க முடியும்'' என்ற முடிவுக்குத் தான் வருவார்கள்.
அறிவியல் தொடர்பானவைகளை மட்டுமின்றி திருக்குர்ஆன் கூறுகின்ற அரசியல் சட்டங்களையும், குற்றவியல் சட்டங்களையும், உரிமையியல் சட்டங்களையும் ஒருவர் ஆய்வு செய்தால் இன்று உலகமெங்கும் உள்ள எல்லாச் சட்டங்களையும் விட அது சிறந்து விளங்குவதையும், மனித குலத்துக்கு அதிகப் பயன் தரும் வகையில் அமைந்திருப்பதையும் அறிந்து கொள்வார். முஸ்லிமல்லாதவர்கள் கூட திருக்குர்ஆன் கூறும் சட்டங்களை அமுல்படுத்தக் கோரும் அளவுக்கு திருக்குர்ஆன் கூறும் சட்டங்கள் அமைந்துள்ளன.
ஏராளமான சட்டங்களையும், மரபுகளையும், முன் அனுபவங்களையும் ஆய்வு செய்து பல்வேறு சட்டமேதைகள் உருவாக்கிய சட்டங்களே ஆண்டுதோறும் திருத்தப்பட்டு வரும் நிலையில் இறைச்சட்டங்கள் என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அறிமுகப்படுத்திய சட்டங்கள் பலராலும் வரவேற்கப்படுவது முஹம்மது நபியின் சொந்தக் கூற்றாக திருக்குர்ஆன் இருக்க முடியாது என்பதற்கு மற்றொரு சான்றாக உள்ளது.
அதுபோல் உலகம் சந்திக்கின்ற தீர்க்க முடியாத பல பிரச்சினைகளுக்கு ஏற்கத்தக்க அற்புதமான தீர்வுகளைத் திருக்குர்ஆன் கூறுவதும் இது முஹம்மது நபியின் சொந்தக் கூற்று அல்ல என்பதற்கான சான்றாக உள்ளது.

குலம், கோத்திரம், சாதி இவற்றால் ஏற்படும் தீண்டாமை பல நாடுகளில் பலநூறு ஆண்டுகளாகத் தீர்க்கப்படாத பிரச்சினையாக உள்ளது. இந்தச் சிக்கலான பிரச்சினைக்கும் திருக்குர்ஆன் மிக எளிதான தீர்வை வழங்கி தீண்டாமையை அடியோடு ஒழித்துக் கட்டியதை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம்.

எதிர்காலத்தில் நடக்கவுள்ள பல செய்திகளைத் திருக்குர்ஆன் கூறுகிறது. அது கூறியவாறு அவற்றுள் பல நிகழ்வுகள் நடந்து முடிந்துள்ளன. வார்த்தைக்கு வார்த்தை நிறைவேறிய இத்தகைய முன்னறிவிப்புகள் ஏராளம். முஹம்மது நபியின் சொந்தக் கூற்றாக திருக்குர்ஆன் இருக்கவே முடியாது என்பதற்கு இவை யாவும் சான்றுகளாக உள்ளன.

எழுதப் படிக்கத் தெரியாத ஒருவர் இதைக் கற்பனை செய்தார் என்று நீங்கள் கூறுவது உண்மையானால் இது போல் ஒரு அத்தியாயத்தையாவது கொண்டு வந்து காட்டுங்கள் என்று திருக்குர்ஆன் 2:23, 10:38, 11:13, 17:88, 52:34 ஆகிய வசனங்கள் அறைகூவல் விடுகின்றன.

இந்த அறைகூவல் 14 நூற்றாண்டுகளாக யாராலும் எதிர்கொள்ளப்படவில்லை. யாராலும் எதிர்கொள்ள முடியாது எனவும் 2:23 வசனத்தில் திருக்குர்ஆன் திட்டவட்டமாக அறிவிக்கிறது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இறைவேதம் என்று அறிமுகப்படுத்திய திருக்குர்ஆனை விடப் பல மடங்கு அதிகமாகப் பேசியுள்ளனர். இறைத் தூதர் என்று தம்மை அறிவித்த பின் அவர்கள் வாழ்ந்த 23 வருடங்களில் பேசிய பேச்சுக்கள் பாதுகாக்கப்பட்டுள்ளன.

அந்தப் பேச்சுக்களையும், திருக்குர்ஆனையும் எந்த மொழியியல் அறிஞர் ஆய்வு செய்தாலும் இரண்டும் ஒரே நபரின் கூற்றாக இருக்க முடியாது என்று திட்டவட்டமாகக் கூறுவார். இரண்டுக்குமிடையே இலக்கியச் சுவையிலும், நடையிலும் பெரிய வேறுபாட்டைக் காண்பார்.

முஹம்மது நபியின் வழக்கமான பேச்சுக்கு மாற்றமாகவும், அதைவிடப் பன்மடங்கு உயர்ந்தும் நிற்கின்ற அதன் அழகே இறைவேதம் என்பதை மீண்டும் உறுதிப்படுத்துகின்றது.

"இவர் அவரைப் பெற்றார்; அவர் இவரைப் பெற்றார்'' என்று யூத, கிறித்தவ வேதங்களில் உள்ளது போல் தலைமுறைப் பட்டியல் ஏதும் திருக்குர்ஆனில் இல்லை.

இவ்வாறிருக்க முந்தைய வேதங்களை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காப்பியடித்து விட்டார்கள் எனக் கருத முடியாது.

யூத, கிறித்தவ வேதங்களில் பெருமளவுக்கு வரலாறுகளும், மிகக் குறைந்த அளவுக்கு போதனைகளும் உள்ளன. வாழ்வின் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் அந்த வேதங்களில் எவ்வித வழிகாட்டுதலும் காணப்படவில்லை. ஆனால், திருக்குர்ஆன் மனிதர்கள் படிப்பினை பெறத் தேவையான சில வரலாற்றுத் துணுக்குகளை மட்டுமே குறிப்பிடுகிறது. மேலும், மனிதன் சந்திக்கின்ற அனைத்துப் பிரச்சினைகளிலும் ஏற்கத்தக்க தீர்வையும் கூறுகிறது. இவை யூத, கிறித்தவ வேதங்களில் கூறப்படாதவை. எனவே, அவ்வேதங்களிலிருந்து திருக்குர்ஆன் காப்பியடிக்கப்பட்டது என்று கூறுவது அடிப்படையில்லாத குற்றச்சாட்டாகும்.

மற்ற சமுதாய மக்களைப் போலவே யூத, கிறித்தவ மக்களும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் அதிக அளவில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை இறைத்தூதராக ஏற்றனர். தங்கள் வேதங்களில் உள்ளதையே காப்பியடித்துக் கூறும் ஒருவரைத் தங்கள் வழிகாட்டியாக அம்மக்கள் ஏற்றிருக்க மாட்டார்கள் என்பதும் கவனத்தில் கொள்ளத்தக்கது.

وَكَذَّبَ بِهٖ قَوْمُكَ وَهُوَ الْحَـقُّ قُلْ لَّسْتُ عَلَيْكُمْ بِوَكِيْلٍ

(நபியே! திருக்குர்ஆனாகிய) இது முற்றிலும் உண்மையாக இருந்தும், உம் சமூகத்தார் இதை நிராகரிக்கின்றனர்; எனவே, “நான் உங்கள் மீது பொறுப்பளான் அல்ல” என்று (நபியே!) நீர் கூறிவிடும்.(குர்ஆன் : 6:66)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 143
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 60 )

لِّكُلِّ نَبَاٍ مُّسْتَقَرٌّ وَّسَوْفَ تَعْلَمُوْنَ

ஒவ்வொரு காரியத்திலும் ஒரு குறிப்பிட்ட காலமுண்டு; (அதனை) சீக்கிரமே நீங்கள் அறிந்து கொள்வீர்கள். (குர்ஆன் : 6:67)

குர்ஆனில் இன்னொரு இடத்தில், "ஒவ்வொரு தவணையும் எழுதி பதிவு செய்யப்பட்டுள்ளது (குர்ஆன் 13: 38)

உதாரணத்திற்காக நிச்சயிக்கப்பட்ட தவணை குறித்து சொல்றேன்.

பிரபஞ்ச வெளியில் நீங்களும் நானும் இப்போதும் பயணம் செய்து கொண்டே இருக்கிறோம் என்று நான் சொன்னால் நீங்கள் நம்புவீர்களா ?

" மாட்டேன். உங்கள் கட்டுரையைதான் படித்துக் கொண்டு இருக்கிறேன். எப்படி நான் பயணிக்க முடியும் " என்று நீங்கள் சொன்னாலும், நிச்சயமாக நீங்களும் நானும் இந்த ஆகாய வெட்ட வெளியில் ஒவ்வொரு காரியத்திற்காக ஒரு குறிப்பிட்ட காலத்தில் பயணித்துக் கொண்டு இருக்கிறோம்.

நீங்களும் நானும் நம் பூமியோடு பயணிக்கிறோம். நம் பூமி நொடிக்கு (ஒரு சொடக்கு) 29 புள்ளி 8 கிமீ வேகத்தில் நம் சூரியனை சுற்றிவர பயணிக்கிறோம்.

நம் சூரியன் நொடிக்கு 20 கிமீ வேகத்தில் தன் குடும்பமான 9 கோள்களையும் அவைகளின் துணை கோள்களையும் கூட்டிக் கொண்டு "ஹெர்குலிஸ் " என்னும் நட்சத்திர கூட்டத்தை நோக்கி பயணிக்கிறது .

நமது சூரிய குடும்பம் ஆகாய கங்கை என்னும் " மெட்டா கேலக்ஸி " யில் "பெர்சியஸ் ஓரியன் " என்கிற நட்சத்திர கூட்டத்தின் வளைவில் அமைந்து கொண்டு பயணிக்கிறது .

நமது சூரிய குடும்பமும் அதைச் சார்ந்த மற்ற நட்சத்திரக் கூட்டங்களும் சேர்ந்து நொடிக்கு 220 கிமீ வேகத்தில் "கைனக்ஸ் "என்கிற நட்சத்திர கூட்டத்தை நோக்கி பயணிக்கிறது .

நாமும் நம் சூரியனும் நமது நட்சத்திர கூட்டங்களும் சேர்ந்து நமது கேலக்ஸியில் நொடிக்கு 230 கிமீ வேகத்தில் வலம் சுற்றி பயணிக்கிறோம்.

நமது ஆகாய கங்கை என்கிற மெட்டா கேலக்ஸியில் நம் பூமி ஒரே ஒரு தடவை வலம் சுற்றி முடிக்க 240 மில்லியன் வருடங்கள் ஆகும் .

இதேமாதிரி தவணை குறிக்கப்பட்ட மனிதர்களின் வாழ்வு :

‘யாதொரு ஆத்மாவும் அல்லாஹ்வின் அனுமதி இன்றி இறப்பதில்லை. இது தவணை நிர்ணயிக்கப்பட்ட விதியதாகும்’. (3:145)

‘ஒவ்வொரு வகுப்பாருக்கும் (அவர்கள் வாழவும், அழிவும்) ஒரு காலமுண்டு. அவர்களுடைய காலம் வரும் பட்சத்தில் ஒரு வினாடி பிந்தவும் மாட்டார்கள். முந்தவும் மாட்டார்கள்’குர்ஆன் (07:34)

ஒவ்வொரு மனிதரும் குறிக்கப்பட்ட காலம் பூமியில் வாழ்ந்தேயாக வேண்டும். அதற்கான வாய்ப்பை அல்லாஹ் வழங்கியுள்ளான். அவ்வாழ்வுக் காலத்தை ஒவ்வொருவரும் நிறைவு செய்ய வேண்டும். அதனை எவரும் தவிர்த்துக்கொள்ள முடியாது. இதற்குரிய உதாரணங்களும் அவ்வப்போது பதிவாகிய வண்ணமுள்ளன.

உதாரணத்திற்கு இன்றைய காலகட்டத்தில் அடிக்கடி இடம்பெறக்கூடிய வீதி விபத்துக்களை எடுத்து நோக்கினால் ஒரு சில விபத்துக்களில் வாகனங்கள் மிக மோசமாகப் பாதிக்கப்பட்டிருக்கும். அவ்வாகனத்தில் பயணித்த எவரும் உயிர் தப்பி இருக்க முடியாது என்றே பலரும் கருதுவர்.

ஆனால், அவ்வாகனத்தை செலுத்தியவர் அல்லது அதில் பயணித்தவர்கள் எவ்வித பாதிப்பும் இன்றி உயிர் தப்பி இருப்பர் அல்லது சிறு காயங்களுடன் பாதுகாப்பாக இருப்பர்.

இதேபோன்று இயற்கை அனர்த்தங்களின் போதும் இவ்வாறான உயிர் தப்புதல்கள் பதிவாகவே செய்கின்றன. உதாரணத்திற்கு துருக்கியில் அண்மையில் ஏற்பட்ட பூகம்பத்தின் போது பல மாடிகளைக் கொண்ட குடியிருப்பு கட்டிடமொன்று சரிந்த சமயம் அதன் இடிபாடுகளுக்குள் சிக்குண்டிருந்த சிறுமியொருவர் எவ்வித பாதிப்பும்

இன்றி உயிருடன் மீட்டெடுக்கப்பட்டார். ஆனால் அவ்வனர்த்தத்தில் அச்சிறுமியின் உறவினர்கள் அனைவரும் உயிரிழந்தனர்.
இவ்வாறான உயிர்தப்புதல்கள் ஆரம்ப காலம் முதல் அவ்வப்போது பதிவாகவே செய்கின்றன. அவற்றின் ஊடாக அல்லாஹ் தன் செய்தியை மனித சமூகத்திற்கு வழங்கவே செய்கிறான். அதாவது அல்லாஹ்வின் அனுமதி இன்றி எவரும் மரணிக்க முடியாது என்பதே அந்த செய்தியாகும். இருந்தும் மனிதன் அதனை உரிய ஒழுங்கில் புரிந்து கொள்ள தவறி விடுபவனாகவே இருக்கின்றான்.
அதே நேரம் நீண்ட காலம் உயிர்வாழ வேண்டும் என்ற ஆசை, மரணத்தை தவிர்த்துக் கொள்ளும் நோக்கிலான முயற்சிகள், மரணம் குறித்த அச்சம் போன்ற எதுவொன்றினாலும் அல்லாஹ் வழங்கியுள்ள வாழ்வுக் காலத்திற்கு மேலதிகமாக ஒரு வினாடியை கூட நீடித்துக்கொள்ள முடியாது.
அதேபோன்று வாக்குறுதியை நிறைவேற்றுதல், நற்காரியங்களில் ஈடுபடுதல், தம் கடமைகளை அச்சொட்டாக நிறைவேற்றுதல் போன்ற எதுவொன்றினாலும் அல்லாஹ் வழங்கியுள்ள வாழ்வுக் காலத்தை முன்கூட்டியே நிறைவு செய்து, மரணத்தைத் தழுவிக்கொள்ளவும் முடியாது. அவை எதற்கும் இடமளிக்கப்பட்டு இல்லை. அனைத்துமே நிர்ணயிக்கப்பட்டதாகவே இருக்கின்றது.
இருப்பினும் கடுமையான கஷ்டங்கள், துன்பங்கள், வேதனைகள், சோதனைகளின் போது சிலர் மரணத்தை வேண்டக் கூடியவர்களாக இருக்கின்றனர். ஒரிருவர் தங்களைத் தாங்களே மாய்த்துக் கொள்ளவும் முயற்சிக்கின்றனர். ஆனால் இந்த இரண்டும் இஸ்லாத்தினால் முற்றாக வெறுக்கப்பட்டவையாகும். எந்தவொரு வேதனை, சோதனை, துன்பத்தின் போதும் மரணத்தை வேண்டக்கூடாது என்பதே நபி (ஸல்) அவர்களின் தெளிவான வலியுறுத்தலாகும்.
இது தொடர்பில் அன்னாரின் நபிமொழியொன்று இவ்வாறு பதிவாகியுள்ளது. 'உங்களுக்கு ஏற்பட்டுள்ள சோதனையொன்றின் காரணமாக நீங்கள் மரணத்தை கேட்கவோ, விரும்பாவோ வேண்டாம். அவ்வாறு நீங்கள் கேட்கத்தான் வேண்டுமாயின் வாழ்வது சிறந்ததாயின் வாழச்செய். மரணிப்பது சிறந்ததாயின் மரணிக்கச் செய் என்றே கேளுங்கள்' என்று நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். (ஆதாரம்: புஹாரி, முஸ்லிம்)
அல்லாஹ் எம் மீது கருணை இரக்கம் காட்டி பூமியில் வாழ வழங்கியுள்ள வாழ்வுக் காலத்தை அவனது எதிர்பார்ப்புக்கு ஏற்ப உரிய முறையில் நிறைவேற்ற வேண்டும். அல்லாஹ்வின் படைப்பினரான நாம் ஒவ்வொருவரும் பூமியில் எவ்வளவு காலம் வாழ வேண்டும்? எப்போது மரணமடைய வேண்டும்? அந்த மரணம் எந்த இடத்தில் நிகழ வேண்டும்? போன்ற அனைத்தும் அல்லாஹ்வினால் தெளிவாகவே நிர்ணயிக்கப்பட்டுள்ளன.
இது தொடர்பில் அல்லாஹ் தன் அருள் மறையில், '(இவையன்றி) அவர்கள் உங்களுக்கு வெளியாக்காத பல விஷயங்களையும் தங்கள் மனதில் மறைத்துக் கொண்டு 'நம்மிடம் ஏதும் அதிகாரம் இருந்திருந்தால் இங்கு வந்து (இவ்வாறு) நாம் வெட்டப்பட்டிருக்க மாட்டோம்' எனவும் கூறுகின்றனர்.
(இதற்கு நபியே...அந்நயவஞ்சகர்களை நோக்கி) நீங்கள் கூறுங்கள். 'நீங்கள் உங்கள் வீட்டில் (தங்கி) இருந்த போதிலும் எவர்கள் மீது வெட்டப்பட்டே இறக்க வேண்டும் என்று விதியாக்கப்பட்டுள்ளதோ அவர்கள் தாங்கள் வெட்டப்பட வேண்டிய இடங்களுக்கு(த் தாமாகவே) வந்தே தீருவார்கள்' என்றும்,
(நம்பிக்கையாளர்களை நோக்கி) அல்லாஹ் உங்கள் மனதிலுள்ளதைப் பரிசோதனை செய்வதற்காகவும் உங்கள் உள்ளங்களில் உள்ளவற்றை பரிசுத்தமாக்குவதற்காகவும் (இவ்வாறு சம்பவிக்கும் படி செய்தான் என்றும் கூறுங்கள். உங்கள்) உள்ளங்களில் உள்ளவற்றை அல்லாஹ் நன்கறிவான் (3:154) என்று குறிப்பிட்டிருக்கின்றான்.
இந்த வசனமானது, ஒவ்வொருவரும் தமக்கு மரணம் நிகழ்வென நிர்ணயிக்கப்பட்டுள்ள இடத்திற்கு தாமாகவே செல்வர். அவரை அவ்விடத்திற்கு பலவந்தமாக இழுத்துச்செல்ல வேண்டியதில்லை. அவரது பாதங்கள் ஒய்வடையும் இடமாக அது இருக்கும். அந்த இடத்திற்கு அப்பால் அவரது பாதங்கள் நகராது. அந்த இடத்தோடு அவர் பூமியில் மேற்கொள்ளும் பயணம் முற்றுப்பெற்றுவிடும். அது அவர் பூமி வாழ்வில் விடைபெறும் இடமாக அமையும்.

அவர்களே அறியாத, அவர்களால் கட்டுப்படுத்த முடியாத ஏதேனும் மறைமுகத் தூண்டுதலால் அவர்கள் அவ்விடத்தை நோக்கி செல்வர். அதுவே நியதி. அதனை அல்லாஹ் அறிவான். ஒவ்வொருவருக்கும் மரணம் நிர்ணயிக்கப்பட்டுள்ள இடத்திலேயே அது நேரக்கூடியதாக உள்ளது. அதற்கு மாற்றமாக எதுவும் இடம்பெறுவதில்லை.

وَلَتَعْلَمُنَّ نَبَاَهٗ بَعْدَ حِيْنٍ

“நிச்சயமாக (சிறிது) காலத்திற்குப் பின்னர், நீங்கள் இதன் உண்மையைத் திட்டமாக அறிந்து கொள்வீர்கள்.”(குர்ஆன் : 38:88)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 144
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 61)

يُنْسِيَنَّكَ الشَّيْطٰنُ فَلَا تَقْعُدْ بَعْدَ الذِّكْرٰى مَعَ الْقَوْمِ الظّٰلِمِيْنَ

(நபியே!) நம் வசனங்களைப் பற்றி வீண் விவாதம் செய்து கொண்டிருப்போரை நீர் கண்டால், அவர்கள் அதைவிட்டு வேறு விஷயங்களில் கவனம் செலுத்தும் வரையில் நீர் அவர்களைப் புறக்கணித்து விடும்; (இக்கட்டளையைவிட்டு) ஷைத்தான் உம்மை மறக்கும்படிச் செய்துவிட்டால், நினைவு வந்ததும், அந்த அநியாயக்கார கூட்டத்தினருடன் நீர் அமர்ந்திருக்க வேண்டாம். (குர்ஆன் : 6:68)

وَمَا عَلَى الَّذِيْنَ يَتَّقُوْنَ مِنْ حِسَابِهِمْ مِّنْ شَىْءٍ وَّلٰـكِنْ ذِكْرٰى لَعَلَّهُمْ يَتَّقُوْنَ

(வீண் விவாதத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்) அவர்களுடைய (செய்கைகளின்) கணக்கில் பயபக்தியுடையவர்களுக்கு யாதொரு பொறுப்பும் இல்லை; எனினும் அவர்கள் பயபக்தியுடையவர்களாகும் பொருட்டு, அவர்களுக்கு நல்லுபதேசம் செய்வது பொறுப்பாகும்.
(குர்ஆன் : 6:69)

மேற்கண்ட வசனங்களில் நிராகரிப்பாளர்கள் செய்யும் பரிகாசமும் (கேலியும்), அதற்குப் பதிலாக முஸ்லிம்கள் செய்யும் விமர்சனமும் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வசனம் இறக்கப்பட்டதும் முஸ்லிம்கள் கவலையுடன் பெருமானார் (ஸல்) அவர்களை நோக்கி, "திரு காபாவைக் கொண்டுள்ள பள்ளிவாசலில் நாம் வணக்கத்திற்காகச் சென்று உட்காருகிறோம்; அவர்களும் வருகின்றனர்; இறை வசனங்களைக் குறித்து வீண் விவாதம் செய்யவும், பரிகசிக்கவும் ஆரம்பிக்கின்றனர்; அல்லாஹ்வின் உத்தரவுப்படி நாம் வணக்கம் செய்யாமல் எழுந்து போய்விட வேண்டுமா?

"அவர்கள் செய்கிற தவற்றை நாம் எடுத்துக் கூறாமல் அவர்கள் போக்கிலேயே அவர்களை விட்டு விடுவதும் குற்றமல்லவா?" என்று நபி(ஸல்) அவர்களிடம் வினவினர். அப்பொழுது அதற்கு விடையாக மேற்கண்ட இரு வசனங்களும் இறக்கப்பட்டது. (அறிவித்தவர்: ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி

நமது திருக்குர்ஆன் ஆயத்துகளில் (பரிகாசத்துடன்) மூழ்கி இருக்கிறார்களே அவர்களை நீர் பார்த்தால், அது அல்லாத (வேறு) செய்தியில் அவர்கள் மூழ்கும் வரை அவர்களை நீர் புறக்கணித்து விடும். ஆனால், ஷைத்தான் உனக்கு மறதி உண்டாக்கி விட்டால், (அது) நினைவுக்கு வந்த பிறகு அநியாயக்காரர்களான கூட்டத்தாருடன் நீர் உட்கார வேண்டாம்.

திருக்குர்ஆனில் சொல்லப்பட்ட விபரங்களை மறுப்பதும். அதனைக் குறித்துக் குறை பேசுவதும், ஒருவருக்கொருவர் அதனைப் பற்றிப் பரிகாசம் செய்து கொள்வதும் குறைஷிக் காஃபிர்களது வழக்கம். இவ்வாறு அவர்கள் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டால். அவ்விடத்திற்குச் செல்லாமல், அவர்களைப் புறக்கணித்து விட வேண்டும் என்பதும், மறதியாக அவர்களுடன் சேர்ந்து உட்கார்ந்து விட்டாலும், இறைவனது இக்கட்டளை நினைவுக்கு வந்தவுடன், அந்த இடத்தை விட்டு அகன்று விட வேண்டுமென்பதும் இந்த ஆயத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

இந்த ஆயத்தில் கூறப்பட்டுள்ள கட்டளை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு மட்டும் அல்ல, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது உம்மத்துகளான நம் அனைவருக்குமே இக்கட்டளை பொருந்தும். ஆகவே, இக்காலத்திலும் இவ்வாறு எவரேனும் பரிகசிக்க ஆரம்பித்தால், அவர்களை முஸ்லிம்கள் புறக்கணித்து விட வேண்டும்.
தங்களைப் பரிசுத்தப் படுத்திக் கொண்ட நல்லவர்கள் மீது எந்தக் குற்றமும் ஏற்படாது. வீண்வாதமும், பரிகாசமும் செய்து கொண்டிருப்பவர்களுக்கு, அவர்கள் அத்தவறான செய்கையின் கெடுதியை உணர்த்த வேண்டியதுதான். ஒரு சமயம் அவர்கள் திருந்தி தங்களைப் பரிசுத்தப்படுத்திக் கொள்ளக் கூடும்.
அவர்களை விட்டு அகன்று விடுங்களென்றால், அவர்களுக்கு எதுவுமே எடுத்துரைக்காமல் அகன்றுவிட வேண்டுமென்பது கருத்தல்ல. எவ்வளவு சொல்லியும் ஏற்காமல் வீண்வாதமே செய்து கொண்டிருப்பார்களாயின், அவர்களைவிட்டு விலகிக் கொள்ள வேண்டியதுதான்.

இதனால், அவர்கள் ஒன்று கூடும் இடங்களுக்கு நீங்கள் செல்லக் கூடாது; அல்லது நீங்கள் இருக்குமிடத்திற்கு அவர்கள் வந்தால், நீங்கள் எழுந்து போய்விட வேண்டுமென்பதில்லை. அவர்களுடைய செய்கையைப் புறக்கணிப்பதற்கு அந்த சந்தர்ப்பத்தில் என்ன செய்யவேண்டுமென்று உங்களுக்குத் தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள் என்பதே கருத்தாகும்.

இதனைக் குறித்தே, வீண்வாதம் செய்யவும் அவர்களுடைய கணக்கிலிருந்து செய்கைகளிலிருந்து எந்த ஒன்றும் தங்களைப் பரிசுத்தப்படுத்திக் கொண்டவர்களான நல்லவர்கள் மீது சாருவது இல்லை,
ஆயினும் அத்தீயவர்கள் தங்களைப் பரிசுத்தப்படுத்திக் கொள்ளும் பொருட்டு ஏதாவதொரு முறையில் அவர்களுக்கு நல்லுபதேசம் செய்ய வேண்டியதுதான். அடியோடு விட்டுவிட வேண்டுமென்பதில்லை என்னும் கருத்து இவ்வசனத்தில் கூறப்படுகிறது.
மேலே சொல்லப்பட்ட விஷயத்தில் பரிகாசமும் (கேலியும்), விமர்சனமும் சொல்லப்பட்டிருக்கிறது.
உளவியல் ரீதியில் விமர்சிப்பதற்கும் பரிகாசம் ( கேலி ) செய்வதற்கும் என்ன வித்தியாசம்?
அளவுக்கு மிஞ்சிய எதிர்மறை விமர்சனங்களே பரிகாசம் (கேலி) ஆகிறது. பரிகாசம் (கேலி) என்பது நமது தோற்றத்தையோ திறமையையோ படைப்புகளையோ செயல்பாடுகளையோ பரிகசித்து பேசுவது. கேலி நம்மைக் காயப்படுத்தும்.

பரிகாசம் திரும்ப அந்த செயல்களை முயற்சிக்க விடாமல் தடுக்கும். காலத்துக்கும் மனதை உறுத்தும். மனக்கசப்பை உண்டாக்கும். தாழ்வு மனப்பான்மையிலும் தள்ளும். நம்மை முடக்குவதற்காகவே செய்யப்படுவது கேலி. இது பொறாமையின் வெளிப்பாடு. இதில் குறைகள் மட்டுமே பேசுபொருளாகும்.
மொத்தத்தில் கேலி நம்மை நார் நாராக கிழித்து தொங்க விடும். அதனால்தான் இறைவன் இவ்வாறு அவர்கள் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டால். அவ்விடத்திற்குச் செல்லாமல், அவர்களைப் புறக்கணித்து விட வேண்டும் என்கிறான்
விமர்சனம் நமது குறை நிறைகளை சுட்டிக்காட்டும். அது நம்மைப் பற்றிய நமது செயல்பாடுகள் பற்றிய ஒரு ஆய்வாக இருக்கும். நமது நிறைகளை வளர்க்கவும் குறைகளை களையவும் வாய்ப்பளிக்கும். நம்மை சுய ஆய்வு செய்ய உதவி செய்யும்.
அதனால்தான் மேற்கண்ட வசனத்தில் "அவர்கள் பயபக்தியுடையவர்களாகும் பொருட்டு, அவர்களுக்கு நல்லுபதேசம் செய்வது பொறுப்பாகும்" என்கிறான்.
நடுநிலையான விமர்சனம் நம்மை பக்குவப்படுத்தும்.இன்னொன்று ஆக்கபூர்வமான விமர்சனம். ஒரு விமர்சனம் நம்முள் நேர்மறையான மாற்றத்தை ஏற்படுத்தினால் அது ஆக்கப்பூர்வமான விமர்சனம். இதில் நமது செயல்பாடுகள் விமர்சிக்கப்பட்டு அதற்கு தீர்வுகளும் சொல்லப்படும். இது உங்கள் தன்னம்பிக்கையை

வளரச்செய்யும். சாதிக்கத் தூண்டும். வழிகளை வாய்ப்புகளை தேடச் செய்யும். முடங்கிக் கிடந்தவர்களையும் விழிக்கச்செய்யும். அல்லது நம் விமர்சனத்தால் நேர்வழியும் பெறலாம்.
ஆக்கப்பூர்வமான விமர்சனங்கள் அரிதானவை. எப்போதும் எல்லோரிடமிருந்தும் வருவதில்லை.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 145
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 62 )

وَذَرِ الَّذِيْنَ اتَّخَذُوْا دِيْنَهُمْ لَعِبًا وَّلَهْوًا وَّغَرَّتْهُمُ الْحَيٰوةُ الدُّنْيَا وَ ذَكِّرْ بِهٖۤ اَنْ تُبْسَلَ نَفْسٌ بِمَا كَسَبَتْ لَـيْسَ لَهَا مِنْ دُوْنِ اللّٰهِ وَلِىٌّ وَّلَا شَفِيْعٌ وَاِنْ تَعْدِلْ كُلَّ عَدْلٍ لَّا يُؤْخَذْ مِنْهَا اُولٰۤـئِكَ الَّذِيْنَ اُبْسِلُوْا بِمَا كَسَبُوْا لَهُمْ شَرَابٌ مِّنْ حَمِيْمٍ وَّعَذَابٌ اَ لِيْمٌ بِمَا كَانُوْا يَكْفُرُوْنَ

(நபியே!) யார் தங்கள் மார்க்கத்தை விளையாட்டாகவும் வெறும் வேடிக்கையாகவும் எடுத்துக் கொண்டார்களோ, இன்னும் யாரை இவ்வுலக வாழ்க்கை ஏமாற்றி விட்டதோ அவர்களை விட்டுவிடும்.
எனினும் அவர்களுக்கு ஒவ்வோர் ஆன்மாவும் தான் செய்த செயல்களின் காரணமாக ஆபத்தில் சிக்கிக்கொள்ளும் (எனும் உண்மையை) குர்ஆனைக் கொண்டு நினைவுறுத்தும். அந்த ஆத்மாவுக்கு அல்லாஹ்வைத்தவிர வேறு பாதுகாவலரோ, பரிந்து பேசுபவரோ இல்லை;
(தாங்கள் செய்த பாவத்திற்கு) ஈடாக (தங்களால் இயன்ற) அத்தனையும் கொடுத்தாலும், அது அவர்களிடமிருந்து ஒப்புக்கொள்ளப் பட மாட்டாது; இவர்கள் தாங்கள் செய்த செய்கைகளாலேயே தங்களை நாசமாக்கிக் கொண்டார்கள்; இவர்கள் நிராகரித்துக் கொண்டிருந்த காரணத்தால் இவர்களுக்குக் கொதிக்கும் நீரும் துன்புறுத்தும் வேதனையும் உண்டு. (குர்ஆன் : 6:70)

சத்திய மார்க்கத்தை விளையாட்டாகவும் வேடிக்கையாகவும் ஆக்கிக் கொண்டு பரிகசிக்கும் கூட்டத்தினர் அனுபவிக்க இருக்கும் துன்பங்கள் பற்றி இவ் வசனம் எடுத்துரைக்கிறது.
இவர்கள் அல்லாஹ்வின் திருவசனங்கள் பற்றி கேவலமாக பேசுவதுடன் அவற்றை பொய்யானது என்றும் கூறினர். இவர்கள் இவ்வுலகில் உண்பதிலும், குடிப்பதிலும், விளையாடுவதிலும், வேடிக்கைகளைக் கண்டு கழிப்பதிலே அவர்கள் காலத்தை கழித்தவுடன் அவற்றையே தங்களுடைய மார்க்கமாகவும் கடைபிடித்திருந்தனர்.

அவற்றையே தங்களுடைய மார்க்கமாகவும் கடைப்பிடித்திருந்தனர். உண்மையான இஸ்லாமில் மார்க்கத்தையும் அதன் சட்டத்திட்டங்களையும் புறக்கணித்ததுடன் அதனைப் பொருத்தமற்ற மார்க்கமென்றுங் கூறினர் மறுமை நாளை மறுத்தனர். அதன் நிகழ்ச்சிகளை கற்பனை என்று கூறினர்
இத்தன்மையுடையவர்களிடத்தில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது பற்றி இவ்வசனத்தின் தொடக்கத்தில், எவர் தங்களுடைய மார்க்கத்தை விளையாட்டாகவும். வேடிக்கையாகவும் ஆக்கிக் கொண்டனரோ அவர்களை நீர் முற்றிலும் வெறுத்து அவர்கள் போக்கில் விட்டுவிடும்.
அவர்களை இவ்வுலக வாழ்வு மயக்கிவிட்டது எனக் கூறப்படுகிறது. அதனால் உண்மையான மார்க்கத்தை அவர்கள் விட்டுவிட்டு அவர்கள் மனத்தில் தோன்றியதையே மார்க்கமாகக் கொண்டுள்ளனர்.
இவ்வுலகிலேயே சில தண்டனைகளை இவர்களுக்கு அல்லாஹ் கொடுப்பதுண்டு. அவைகளை அனுபவித்துத் திருத்திக் கொண்டார்களானால் அது அவர்களுக்கு நல்லது. இல்லையெனில், மீண்டும் அவர்களுக்கு மிகக்கொடிய வேதனையைக் கொண்டு எச்சரிக்கை செய்வீராக,

எவ்வாறெனில், ஒவ்வோர் ஆன்மாவும் அது இவ்வுலகில் சம்பாதித்த தீய காரியங்களின் காரணத்தால் வேதனையால் பிடிக்கப்படுமென்பதை இதன் மூலம் இந்தத் திருக்குர்ஆன் மூலம் அவர்களுக்கு நினைவூட்டும்.

இவ்வாறு தண்டிக்கப்படும் அந்நாளில் அந்த ஆன்மாவுக்கு அல்லாஹ்வையன்றி அதைக் காப்பாற்றுவதற்கு எந்த உற்றநேசரும், அல்லது வேதனையிலிருந்து விடுவிக்குமாறு பரிந்து பேசுபவரும் இருக்கவே மாட்டார்.
வேதனையைத் தாங்க முடியாத அந்த ஆன்மாவானது. அதனைச் செய்யாமலிருப்பதற்கு எத்தனை நஷ்ட ஈட்டைக் கொடுத்தாலும் அதனிடமிருந்து ஏற்கப்படமாட்டாது. இந்த உலகில் இருந்தபொழுது இத்தகைய தந்திரங்களால் தப்பித்துக் கொண்டிருந்தனர். மறுமையில் இது ஒன்றும் எடுபடாது.
இத்தகைய தீயவர்கள் தாம்; இவர்கள் இவ்வுலகில் செய்த தீய காரியங்களின் காரணத்தால் வேதனையால் பிடிக்கப்பட்டனர்.

உலகில் உயர்தரமான உணவுகளைப் புசித்தனர். சிறந்த பானங்களை அருந்தினர். உல்லாசமாக வாழ்ந்தனர். அந்த மமதையில் மறுமையை நிராகரித்தனர். இப்பொழுது மறுமைநாள் ஏற்பட்டு தண்டனை பெறுகின்றனர். அவர்கள் நிராகரித்துக் கொண்டிருப்பதன் காரணத்தால் நரகில் தள்ளப்படும். அவர்களுக்கு- எல்லை மீறிக் கொதிக்கும் சுடுநீர் பானமும் துன்பம் அளிக்கும் வேதனையும் உண்டு என்பன இவ்வசனத்தின் கருத்தாகும். பெருமானார் (ஸல்) அவர்களைக் குறிப்பிட்டு எதிரிகளுடன் அவர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறை இவ்வசனத்தில் கூறப்பட்டு இருந்தாலும், இத்தகைய தீய குணம் படைத்தோர் எக்காலத்தவராயினும் அவர்களிடமும் நல்லவர்கள் இவ்வாறே நடந்து கொள்ள வேண்டுமென்பதுதான் இவ்வசனத்தின் பொது அறிவிப்பாகும்.
இவ்வுலக வாழ்வின் உண்மை நிலை குறித்து உங்கள் சிந்தனைக்கு !
"அறிந்து கொள்ளுங்கள்: 'நிச்சயமாக இவ்வுலக வாழ்க்கை விளையாட்டும், வேடிக்கையும், அலங்காரமுமேயாகும்; மேலும் (அது) உங்களிடையே பெருமையடித்துக் கொள்வதும்; பொருள்களையும், சந்ததிகளையும் பெருக்குவதுமேயாகும்; (இது) மழையின் உதாரணத்துக்கு ஒப்பாகும்;
(அதாவது:) அது முளைப்பிக்கும் பயிர் விவசாயிகளை ஆனந்தப் படுத்துகிறது; ஆனால், சீக்கிரமே அது உலர்ந்து மஞ்சள் நிறம் ஆவதை நீர் காண்கின்றீர்; பின்னர் அது கூளமாகி விடுகிறது; (உலக வாழ்வும் இத்தகையதே; எனவே உலக வாழ்வில் மயங்கியோருக்கு) மறுமையில் கடுமையன வேதனையுண்டு; (முஃமின்களுக்கு) அல்லாஹ்வின் மன்னிப்பும், அவன் பொருத்தமும் உண்டு - ஆகவே, இவ்வுலக வாழ்க்கை ஏமாற்றும் சொற்ப சுகமே தவிர (வேறு) இல்லை" (அல்-குர்ஆன் 57:20)

இவ்வுலக வாழ்க்கைக்கு ஓர் உதாரணம்!
"இவ்வுலக வாழ்க்கைக்கு உதாரணம், நாம் வானத்திலிருந்து இறக்கிவைக்கும் மழை நீரைப் போன்றது; (அதன் காரணமாக) மனிதர்களும் கால்நடைகளும் உண்ணக் கூடியவைகளிலிருநது பூமியின் பயிர்கள் பல்வேறு வகைகளாகின்றன; முடிவில் பூமி (அந்த பயிர்கள் மூலம்) தன் அலங்காரத்தை பெற்று கவர்ச்சியடைந்த பொழுது அதன் சொந்தக்காரர்கள்: (கதிரை அறுவடை செய்து கொள்ளக்கூடிய) சக்தியுடையவர்கள் என்று தங்களை எண்ணிக்கொண்டிருந்தனர், அச்சமயம்
இரவிலோ பகலிலோ அதற்கு நம் கட்டளை வந்து (அதை நாம் அழித்து விட்டோம்). அது முந்திய நாள் (அவ்விடத்தில்) இல்லாதது போன்று அறுக்கப்பட்டதாக அதை ஆக்கிவிட்டோம். இவ்வாறே நாம் சிந்தனை செய்யும் மக்களுக்கு (நம்) அத்தாட்சிகளை விவரிக்கின்றோம்" (அல்-குர்ஆன் 10:24)

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 146**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 63 )**

قُلْ اَنَدْعُوْا مِنْ دُوْنِ اللّٰهِ مَا لَا يَنْفَعُنَا وَلَا يَضُرُّنَا وَنُرَدُّ عَلٰٓى اَعْقَابِنَا بَعْدَ اِذْ هَدٰٮنَا اللّٰهُ كَالَّذِى اسْتَهْوَتْهُ الشَّيٰطِيْنُ فِى الْاَرْضِ حَيْرَانَ لَـهٗۤ اَصْحٰبٌ يَّدْعُوْنَهٗۤ اِلَى الْهُدَى ائْتِنَا ؕ قُلْ اِنَّ هُدَى اللّٰهِ هُوَ الْهُدٰى ؕ وَاُمِرْنَا لِنُسْلِمَ لِرَبِّ الْعٰلَمِيْنَۙ

(நபியே!) நீர் கூறும்: "நமக்கு யாதொரு நன்மையும், தீமையும் செய்ய இயலாத அல்லாஹ் அல்லாதவற்றையா நாம் அழைப்போம்? அல்லாஹ் நமக்கு நேர் வழி காட்டிய பின்னரும் (நாம் வழிதவறி) நம் குதிங்கால்களின் மீது நாம் திருப்பப்பட்டுவிடுவோமா?
(அவ்வாறாயின், ஒருவனுக்கு நண்பர்கள் இருந்து அவனை, அவர்கள் "எங்கள் இடம் வந்து விடு" என நேர்வழி காட்டி அழைத்துக் கொண்டிருக்கும் போது, ஷைத்தான் அவனை வழிதவறச் செய்தால் பூமியிலே தட்டழிந்து திரிகிறானே அவனைப் போன்று ஆகிவிடுவோம்."
இன்னும் கூறும்: "நிச்சயமாக அல்லாஹ் காட்டும் நேர்வழியே நேர் வழியாகும்; அகிலங்களின் இறைவனுக்கே வழிபடுமாறு நாங்கள் ஏவப்பட்டுள்ளோம்." (குர்ஆன் : 6:71)
வசனம் இறக்கப்பட்ட காரணம்
இஸ்லாத்தில் எதிரிகள் பெருமானார். (ஸல்) அவர்களைத் தங்களுடைய முதாதையரின் மார்க்கத்தின் பாலும், அவர்கள் வணங்கி வந்த விக்கிரகங்களை வணங்குமாறும் அழைத்தனர். அத்தகையோருக்கு இவ்வசனத்தில் கண்டவாறு கூறும்படி அறிவிக்கப்படுகிறது.

வசன விளக்கம்
நபியே! தங்களது முதாதையர் வணங்கி வந்தவைகளையே வணங்குமாறு உம்மையும் உம்மைச் சார்ந்தவர்களையும் அழைக்கும் அவர்களுக்கு இவ்வாறு கூறும்.
அவர்களுக்கு நடக்கக்கூடிய கால்கள் உண்டா? அல்லது அவர்களுக்கு பிடிப்பதற்குரிய கைகள் உண்டா? அல்லது அவர்களுக்குப் பார்க்கக் கூடிய கண்கள் உண்டா? அல்லது அவர்களுக்குக் கேட்கக் கூடிய காதுகள் உண்டா? (நபியே!) நீர் கூறும்: "நீங்கள் இணை வைத்து வணங்கும் (உங்கள்) தெய்வங்களை (எல்லாம்) அழைத்து, எனக்கு(த் தீங்கு செய்திட) சூழ்ச்சி செய்து பாருங்கள் - (இதில்) எனக்குச் சிறிதும் அவகாசம் கொடுக்காதீர்கள்" என்று. (குர்ஆன் : 7:195)

பைபிள் வேதத்தில் சிலை வணக்கத்தை எதிர்த்து கடுமையான வசனங்கள் இருக்கின்றன ஆனால் கிருத்தவ சகோதரர்கள் அதை மதிப்பதில்லை. மாறாக பைபிள் வசனங்களுக்கு நேர்மாறாக நடந்துக்கொண்டு தங்கள் வேதமான பைபிளை இகழ்ந்தும் வருகின்றனர்.
இறைவன் எந்த செயல்களை கிருத்தவர்கள் செய்யக்கூடாது என்று பைபிளில் கட்டளையிடுகிறானோ அதைத் தானே பின்பற்றுகிறார்கள். கடவுளை விரும்புகிறோம் என்று கூறி கடவுளின் வார்த்தைகளை நிராகரிப்பது கூடுமா?
சிலை வணக்கம் கூடாது என்று தன் வேதாகமத்தில் குறிப்பிடும் இறைவனுக்கு மாற்றமாக ஏசுநாதரையும், மரியாளையும், சிலுவையையும், இன்னும் மனிதர்களில் சிலர் சிலரையும் கல்லாக வழிபடுகிறார்கள் இது நியாயமா?
விக்கிரகங்களை உருவாக்குகிற யாவரும் வீணர்; அவர்களால் இச்சிக்கப்பட்டவைகள் ஒன்றுக்கும் உதவாது; அவைகள் ஒன்றும் காணமலும், ஒன்றும் அதறியாமலும் இருக்கிறதென்று தங்ளுக்கு வெட்கமுண்டாக அவைகளுக்குத் தாங்களே சாட்சிகளா யிருக்கிறார்கள்.4. அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது; அவைகளுக்குக் கண்களிருந்தும் காணாது. ஏசாயா 44:9 (44:6,9-20)

அவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளியும் பொன்னும், மனுஷருடைய கைவேலையுமாயிருக்கிறது. அவைகளுக்குக் காதுகளிருந்தும் கேளாது; அவைகளுக்கு மூக்கிருந்தும் முகராது. அவைகளுக்குக் கைகளிருந்தும் தொடாது; அவைகளுக்குக் கால்களிருந்தும் நடவாது; தங்கள் தொண்டையால் சத்தமிடவும் மாட்டாது. அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவைகளை நம்புகிறவர்கள் யாவரும், அவைகளைப்போலவே இருக்கிறார்கள்.சங்கீதம் 115:3-8 (Psalms 115:3-8)

பழங்கால சிலைகள் சிதைக்கப்படுவதற்கான மிகவும் சுவாரஸ்யமான காரணங்களில் ஒன்று மாயாஜாலங்கள் நிறைந்ததாக உள்ளது. எகிப்தியர்கள் போன்ற சில பண்டைய கலாச்சாரங்கள், சிலைகள் தங்களுக்கென ஒரு "உயிர் சக்தி" இருப்பதாக நம்பினர். வழிபாடு செய்பவர்கள் அந்தச் சிலைக்கு பிரார்த்தனை செய்து, அதன் முன்னிலையில் மரியாதைக்குரிய சடங்குகளைச் செய்வார்கள். எனவே, எதிரிகள் இந்தப் பகுதிகளை ஆக்கிரமிக்கும் போது, அவர்கள் சிலையை முடக்க ஏதாவது ஒரு வழியில் சிதைப்பார்கள்.
இந்த வார்த்தையின் உண்மையான அர்த்தம் என்னவெனில் ஒரு சிலை "உயிருடன்" இருப்பதாக எகிப்தியர்கள் நம்பவில்லை என்றாலும், உயிர் சக்தி மூக்கு வழியாக சிலைக்குள் நுழைந்ததாக அவர்கள் நம்பினர். உயிர் சக்தி சிலைக்குள் நுழைவதைத் தடுக்க மூக்கை உடைக்க வேண்டியிருந்தது. அந்த காலத்தில், இது சிலையைக் கொன்றதாக மக்கள் நம்பினர். இப்போது, இந்த மத மற்றும் கலாச்சார சின்னங்களை சேதப்படுத்துவது கடவுள் உருவ அழிப்பு செயலாக கருதப்படுகிறது.

புரூக்ளின் அருங்காட்சியகத்தின் எகிப்திய கலைக்கூடங்களின் கண்காணிப்பாளரான எட்வர்ட் ப்ளீபெர்க், கடந்த காலத்தில், ஒரு சிலையின் மீது அழிக்கப்பட்ட உடல் உறுப்பு இருப்பது அதன் வேலையைச் செய்ய முடியாமல் தடுக்கும் என்று கருதப்பட்டது.
சிலையின் காதுகளை அறுத்தால், அதன் பக்தர்களின் பிரார்த்தனைகளைக் கேட்க முடியாமல் போகும். இடது கை உடைந்தால், இனி பக்தர்களுக்கு பிரசாதம் வழங்க முடியாது. இருப்பினும், நம்பிக்கை செய்ததை விட அரசியல் கடவுள் உருவ அழிப்பை அதிகம் தூண்டியது என்று பிளீபெர்க் கூறுகிறார்.
ஏக அல்லாஹ்தான் எல்லாவகையான சக்திகளையும் கொண்டவன். அவனன்றி, நமக்கு எத்தகைய நலனையும் தர முடியாதவைகளையும், நாம் அவற்றை வெறுத்தால் நமக்கு சிறிய ஒரு துன்பத்தையும் செய்ய முடியாதவைகளையும் நாம் அழைப்பதா? அது ஒரு போதும் சாத்தியப்படாது. மேலும்
அல்லாஹ் நமக்கு இஸ்லாம் மார்க்கத்தின் மூலம் நேர்வழியைக் காட்டியுள்ளான். அதனை நாம் பின்பற்றி ஏகத்துவக் கொள்கையிலிருக்கும் பொழுது மீண்டும் நம்முடைய சுவடுகளின் மீது நாம் திருப்பப்படுவதா? அதாவது: அந்த உண்மையான மார்க்கத்தை விட்டு மீண்டும் பழைய இணைவைக்கும் தொழிலுக்கே திருப்பப்படுவதா? இதனைச் செய்ய ஒரு போதும் நாங்கள் சம்மதியோம்.

அப்படியே உங்களின் நோக்கப்படி உங்கள் மார்க்கத்தில் நாங்கள் திரும்பினால், நிச்சயமாக தாங்கள் வழிதவறிவிடுவோம். இதற்கு உதாரணம் எப்படியெனில்,
ஒருவனைப் போன்று, அவனை ஷைத்தான்கள் ஏமாற்றிக் கொண்டுபோய் கண்காணாத பூமியில் தடுமாறி நிற்குமாறு செய்துவிட்டனர். அவனோ திசை தெரியாமலும் தான் எங்கேயிருக்கிறோம் என்று விளங்காமலும் தடுமாறிக் கொண்டிருக்கிறான். அங்கிருந்து வெளியேறுவதற்குரிய மார்க்கமும் அவனுக்குத் தெரியவில்லை. இதோ இறை தூதர் இப்ராஹீம் (அலை) வார்த்தைகளை கேளுங்கள்
("என்) இறைவனே! நிச்சயமாக இவை (சிலைகள்) மக்களில் அநேகரை வழி கெடுத்து விட்டன; எனவே, எவர் என்னைப் பின்பற்றுகிறாரோ அவர் என்னைச் சேர்ந்தவராவார். எவர் எனக்கு மாறு செய்கிறாரோ (அவர் என்னைச் சார்ந்தவர் இல்லை; என்றாலும்) நிச்சயமாக நீ மன்னிப்பவனாகவும், மிக்க கருணையுடையவனாகவும் இருக்கின்றாய்." (குர்ஆன் : 14:36)

இந்நிலையில் அவனுக்கு நண்பர்கள் இருக்கின்றனர். அவர்கள் அங்கு வந்து, "எங்களிடம் வா" என்று நேரான வழியின்பால் அழைக்கின்றனர்.
இது உதாரண விளக்கமாகும். இதனை அல்லாஹ் விக்கிரக ஆராதனைக்காக. அழைப்பவருக்கும், அதனை விட்டு விட்டு அல்லாஹ்வின்பால் திரும்புமாறு அழைப்பவருக்கும் உதாரணமாகக் காட்டுகின்றான். அதாவது!
எந்த விதமான நன்மையோ, தீமையோ செய்ய முடியாத விக்கிரகங்களை வணங்குமாறு ஒருவன் அழைக்கின்றான். மற்றொருவன் தன்மையும், இடரும் செய்யச் சக்தியுள்ளா அல்லாஹ்வை வணங்குமாறு அழைக்கின்றான்.
உதாரணப் பொருத்தம்
இவ்விருவருக்கும் உதாரணம் எப்படியெனில் ஒருவன் தன் நண்பர்களுடன் சென்று கொண்டிருக்கையில் திடீரென ஷைத்தான்கள் அவனைப் பிடித்துக் கொண்டுபோய் கண்காணா இடத்தில் விட்டுவிட்டன. அங்கு தடுமாறிக் கொண்டு அவன் நிற்கின்றான்.
இந்நிலையில் அவனுடைய நண்பர்கள் அவனைக் கண்டு பிடித்து, "இதோ நேர்வழி! எங்களுடன் வந்து சேர்ந்துகொள்."என அவனை அழைக்கின்றனர். அவன் அதனை ஏற்று வந்துவிட்டால், நேர்வழி பெற்று விடுவான். இல்லையெனில், மீண்டும் வழிதவறி அலைந்து கொண்டே சென்று அழி வேண்டியதுதான்.
இணைவைத்துக் கொண்டிருப்பவர், ஷைத்தானின் மயக்கத்துக்குள்ளாகித் தட்டழிந்து கொண்டு இருக்கின்றனர். அத்தகையவர் மீது அன்புகொண்டு பெருமானாரும், முஸ்லிம்களும்
அவர்களை நேர்வழியென்னும் ஏகத்துவக்கொள்கையின்பால் அழைக்கின்றனர்.
அவர்கள் வந்துவிட்டால் அவர்கள் நேர்வழி பெறுகின்றனர். இல்லையெனில் வழிதவறி ஷைத்தானின் மோசடிக்கு உள்ளாகி மடிந்து நரகம் செல்லவேண்டியதுதான்.
ஏனென்றால் நிச்சயமாக இஸ்லாம் மார்க்கமென்பது அல்லாஹ்வின் நேர்வழி. அதுவே உண்மையான நேர்வழியாகும்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 147
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 64 )

وَاَنْ اَقِيْمُوا الصَّلٰوةَ وَ اتَّقُوْهُ وَهُوَ الَّذِىْۤ اِلَيْهِ تُحْشَرُوْنَ
தொழுகையை நீங்கள் நிலைநாட்டுங்கள்; அவனுக்கே அஞ்சி நடங்கள்; அவனிடம் தான் நீங்கள் ஒன்று சேர்க்கப்படுவீர்கள். (குர்ஆன் : 6:72)
தொழுகை என்பது இஸ்லாத்தின் ஐம்பெரும் கடமைகளில் முக்கியமான ஒன்றாகும். கியாமத் நாளில் முதலில் கலிமாவைப் பற்றி விசாரிக்கப்படும். அதன் பின் பர்ளான ஐவேளைத் தொழுகைகளைப் பற்றியே வினவப்படும், ஆராயப்படும்.
தொழும் விஷயத்தில் எதுவித காரணமும் சொல்லித் தப்பித்து விட முடியாது.நோன்புக்கு சலுகைகள் இருந்தாலும் தொழும் ஒருவருக்கு அதனை விட்டு விடுவதற்கு எதுவித சலுகையும் இல்லை. வருத்தம், முதுமை உட்பட.
நாம் செய்யும் நல் வணக்கங்களைப் பார்த்து, அண்ணல் நபி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் பார்த்து மகிழ்ச்சியடைவதாகவும், நம்மில் நின்றும் மார்க்கம் இகழும் நடத்தைகள் வெளிப்படும் போது அவர்கள் மனவேதனை கொள்கின்றார்கள் என்றும் வந்திருக்கின்றது..
தொழுகை பற்றிய திருமறை வசனங்கள் சில:
قَدْ
ஈமான் கொண்டவர்கள் நிச்சயமாக வெற்றி பெற்று விட்டனர். அவர்கள்

எத்தகையோரென்றால், தங்கள் தொழுகையில் உள்ளச்சத்தோடு
இருப்பார்கள். மேலும் அவர்கள் தம் தொழுகைகளை(க் குறித்த காலத்தில் முறையோடு) பேணுவார்கள். (குர்ஆன் - 23:1,2,9)
இன்னும் நீங்கள் தொழுகைக்கு அழைத்தால், – அதனை அவர்கள் பரிகாசமாகவும், விளையாட்டாகவும் எடுத்துக் கொள்கிறார்கள் இதற்கு காரணம் அவர்கள் அறிவில்லாத மக்களாக இருப்பதேயாம். குர்ஆன்-5:58
எவர்கள் வேதத்தை உறுதியாகப் பற்றிப்பிடித்துக் கொண்டு, தொழுகையையும் நிலை நிறுத்துகிறார்களோ (அத்தகைய) நல்லோர்களின் கூலியை நாம் நிச்சயமாக வீணாக்க மாட்டோம். ( குர்ஆன் 7:170)
"நிச்சயமாக நான் தான் அல்லாஹ் ! என்னைத் தவிர வேறு நாயன் இல்லை ஆகவே, என்னையே நீர் வணங்கும்,! என்னை தியானிக்கும் பொருட்டு தொழுகையை நிலைநிறுத்துவீராக ! (குர்ஆன் 20:14 )
"உங்களை ஸகர் (நரகத்தில்) நுழைய வைத்தது எது?" (என்று கேட்பார்கள்.). அவர்கள் (பதில்) கூறுவார்கள்: "தொழுபவர்களில் நின்றும் நாங்கள் இருக்கவில்லை". ( குர்ஆன் 74:42,43)
தொழகை பற்றிய ஹதீதுகள் சில :
உங்கள் குழந்தைகள் ஏழுவயதை எய்திவிட்டால் அவர்களைத் தொழும்படி ஏவுங்கள்! பத்து வயதை அடைந்த(தும் தொழமலிருந்தால்) அதற்காக அவர்களை அடியுங்கள். என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் அறிவிப்பாளர்: அம்ரு இப்னு ஷுஐபு.
நூல்கள்:அஹ்மத்,அபூதாவூத்.
யார் தொழுகையைப் பேணிக் கொள்கிறாரோ அவருக்கு அத்தொழுகை பிரகாசமாகவும்,
அத்தாட்சியாகவும்,மறுமை நாளில் ஈடேற்றமாகவும் ஆகிவிடும். மேலும் எவன் அதை பேணிக்
கொள்ளவில்லையோ அவனுக்கு அத்தொழுகை பிரகாசமாகவோ,
சாட்சியாகவோ, ஈடேற்றமாகவோ இருக்காது.
(மாறாக) அவன் மறுமை நாளில் காரூன், பிர்அவ்ன், காமான், உபைபின் கஃப் ஆகியோருடன் இருப்பான். என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.அறிவிப்பாளர்: அப்துல்லாஹ்.
இப்னு உமர(ரழி) நூல்:அஹ்மத்
இனி தொழுகை பற்றிய விஞ்ஞான தகவல்கள்
ஒவ்வொரு தொழுகைக்கும் சுத்தி (ஒழு) செய்யும் பொழுதும் உடற் சுகாதாரம் எவ்வாறு பேணி
கடைப்பிடிக்கப்படுகின்றது என்பதை சிந்தித்தீர்களா ?....கைகள், பற்கள், வாய், நாசித்துவாரங்கள், கண்கள், முகம், தலை, பிடரி, கால்கள் சுத்தம் செய்யப்படுகிறது.
ஐங்கால தொழுகைகளின் நேர அட்டவணையை.நோக்கினால் அந்தந்த இடத்திற்குண்டான சூரியனின்
உதயநிலை உச்சி நிலை, அஸ்தமன நிலையைக் கொண்ட தொழுகை நேரங்கள். இதன் மூலம் அகில
உலகத்திலும் 24 மணி நேரமும் சதா ஒரு விநாடி கூட விடாது தொழுகைகள் நடந்து கொண்டே இருக்கிறது. ஆச்சரியமான விந்தை புலப்படவில்லையா?
தொழுகை சுத்தம், கடமை, கட்டுப்பாடு, கண்ணியம், சகோதரத்துவம், ஒற்றுமை, உடல் நலம்,இறைதொடர்பு, சமுதாய தொடர்பு, வேற்றுமை பாராட்டாமை மேலும் பல சிறப்புகளை தன்னகத்தில் கொண்டது
ஐவேளை தொழுகையின் மூலம் உலக கடமைகளை புறந்தள்ளி விடாமலும் உலகாதய சூழ்நிலைகளிலேயே
மூழ்கி கிடந்திடாமலும இறைவனிடம் தொடர்பை சற்றும் தொய்வில்லாமல் பற்றி பிடித்துக் கொண்டு
இணைந்திருப்பதற்கு துணை புரியும் அமைப்பை கண்டீர்களா ?
உலகின் அத்தனை முஸ்லீகளும் எந்த மூலை முக்கிலிருந்தாலும் மையப்புள்ளியாக ஒரே இலக்கான
மக்காவிலிருக்கும் ஆதி இறை பள்ளி நோக்கியே இணைந்திருப்பதற்கு துணை புரியும் தொழுகை அமைப்பை கண்டீர்களா ?

இதன் சூட்சுமம் அளவிலடங்காதது. உலக முஸ்லீகள் அனைவரையும் தொழுகையின் மூலம் நாடு, இனம், மொழி, நிற பேதமின்றி மறைபொருளாய் பிணைத்து ஒன்றினைக்கிறது என்றால் மிகையாகாது என்ற உண்மை உணர்ந்தீரா?
தொழுகைகளில் சிறிதே நேரமே ஆனாலும் தொழுகிறவர் ஆத்மார்த்த ஆன்மீக ரீதியாக ஒருவர் அடையும் பெரும்பலன்களுடன, நெற்றி, மூக்குமுனை, உள்ளங்கைகள், முழங்கால் முட்டுக்கள்,கால பெருவிரல்கள் ஆகியவைகள் பூமியில் படிய சஜ்தா செய்யும்பொழுது நம் உடலுக்கு பூமியின் மூலமாக பல நன்மைகளையும் அடைகிறோம் என்றால் வியப்பாக உள்ளதா?
உடல் ரீதியாக எல்லா உடற்ப்பயிற்ச்சிகளுக்கும் மேலான உள்ளத்துக்கும் உடலின் சகலத்துக்கும் பயன் தரும் உடற்பயிற்ச்சியை அவர் அறியாமலே செய்து பலன் பெற்று விடுகிறார்.
பிரசித்தி பெற்ற யோகாசனஆசிரியர் எழுதியுள்ள நூலில் அனைத்து யோகாசனங்களிலேயே இதுதான் சிறப்பானது என்று ஒரு ஆசனத்தை பரிந்துரைத்து "இந்த ஆசனத்தை முஸ்லீம்கள் இலகுவாக செய்திடுவார்கள். ஏனென்றால் அவர்கள் தொழுகைகளில் இது அமைந்திருக்கிறது என கூறுகிறார்.
தொழுகைகளில் அமைந்த அந்த யோகாசனம்: "பிஸ்மீ கால் மடிப்புடன் முழந்தாளிட்டு அத்தஹிய்யாத் தொடங்கி சலாம் கொடுத்து துவாவுடன் தொழுகையை முடிக்கும் வரையிலான இருப்பு நிலை தான்."
இதையெல்லாம் படித்துவிட்டு தொழுகை வெறுமனே ஒரு உடற்பயிற்ச்சி தான் என்று கூறும் முயற்சி அல்ல இது. தொழுகையினால் கண் காணா, உணர முடியா, அடையாள படுத்த முடியா, எண்ணிக்கையிலடங்கா பலன்கள் நமக்குள்ளன. அதில் ஒரு துளிதான் இந்த உடற்பயிற்சி விஷயம்.நமது தொழுகையினால் இறைவனுக்கோ இறைதூதருக்கோ அல்லது வேறு யாருக்குமோ எந்த பலனுமில்லை. தொழும்போது இறைவனிடம் பேசுகிறீர்கள். திருக்குர்ஆன் ஓதும்பொழுது இறைவன் உங்களிடம் பேசுகிறான்.
அல்ஜிமர்ஸ் நோயை விரட்டுகிறது தொழுகை-அமெரிக்க ஆய்வு!..
ஐவேளை தொழுகையை நேரம் தவறாமல் நிறைவேற்றும் முஸ்லிம்களிடம் அல்ஜிமர்ஸ் எனும் நோய் 50 சதவீதம் கட்டுப்படுத்தப் பட்டுள்ளதாக அமெரிக்க இஸ்ரேலிய விஞ்ஞானிகள் புதிதாக கண்டு பிடித்துள்ளனர்.
அல்ஜிமர்ஸ் எனும் இந்த நோய் மனிதனுக்குள் ஏற்படும் ஞாபக மறதியைப் பற்றியது. தொழுகாத மக்களை விட நேரம் குறிப்பிட்டு சரியாக மசூதியை அடைந்து விடும் மக்களுக்கு இந்த நோய் வருவது தடுக்கப்படுகிறது.
டெல் அவீவ், யாஃபா, அமெரிக்காவின் இதர பல்கலைக்கழகத்தைச் சார்ந்த விஞ்ஞானிகள் இந்த ஆய்வை நடத்தியுள்ளனர். நினைவாற்றல் குறையாமலிருக்க பயிற்சி மையங்கள் மற்றும் இதர வழிகளில் பயிற்சி மேற்கொள்பவர்களை விட குறிப்பிட்ட நேரத்தில் தொழுகையை பேணுபவர்களுக்கு அல்ஸிமர்ஸ் நோய் தாக்கும் வாய்ப்பு குறைவாகும் என இந்த ஆய்வில் தெரியவந்துள்ளது.
குறித்த நேரத்தில் தொழுகையை பேணுவது அல்ஷிமர்ஸ் நோயிலிருந்து காப்பாற்றுவதுடன் புத்தியாகவும், சிந்தனை ரீதியாகவும் பேசுவதற்கு தேவையான ஆக்கப்பூர்வமான பலன்கள் கிடைப்பதாக இந்த ஆய்வுக் குழுவின் தலைவராக பணியாற்றிய பேராசிரியர் Rivka Inzelberg கூறுகிறார்.
இவரது ஆராய்ச்சியின் முடிவை துருக்கியில் நடந்த சர்வதேச ஆய்வு மாநாட்டில் சமர்ப்பிக்கப்பட் டது. துருக்கி, ஈரான், ஈராக், லெபனான், ஐக்கிய அரபு எமிரேட்ஸ் அரபு நாடுகள், இந்தியா, போன்ற நாடுகள் இதில் கலந்து கொண்டன.
தொழுகையினால் பலன்கள் அனைத்தும் உங்களுக்கே. உங்களுக்கே.. உங்களுக்கே...

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 148

(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 65 ) - பகுதி 1

وَهُوَ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ بِالْحَـقِّ وَيَوْمَ يَقُوْلُ كُنْ فَيَكُوْنُ قَوْلُهُ الْحَـقُّ وَلَهُ الْمُلْكُ يَوْمَ يُنْفَخُ فِى الصُّوْرِ عٰلِمُ الْغَيْبِ وَ الشَّهَادَةِ وَهُوَ الْحَكِيْمُ الْخَبِيْرُ

"அவன் தான் வானங்களையும் பூமியையும் உண்மையாகவே படைத்தான்; அவன் "ஆகுக!" என்று சொல்லும் நாளில், அது (உடனே) ஆகிவிடும். அவனுடைய வாக்கு உண்மையானது "(குர்ஆன் : 6:73)

அல்லாஹ்ஹு தஆலாவே சகல வஸ்துக்களையும் படைத்தவன் என்பதில் முஸ்லிம்கள், நிராகரிப்பாளர்கள் உள்ளிட்ட எவரிடத்திலும் மாற்றுக் கருத்துக் கிடையாது. அனைவருமே சகல வஸ்துக்களையும் படைத்தவன் அல்லாஹ்தான் என்று நம்புகிறார்கள்.

"ஜாஹிலிய்யா" காலத்தில் வாழ்ந்த மக்கத்து "நிராகரிப்பாளர்கள்கள்" கூட வானங்கள், பூமியைப் படைத்தது முதல் வானத்திலிருந்து மழையை பொழிவித்து வறட்சியால் இறந்து போன பூமியை உயிப்பிப்பது வரை அனைத்தையும் செய்பவன் அல்லாஹ் என்றே அவர்கள் நம்பியிருந்தார்கள்.

அல்லாஹு தஆலா திருமறையில் பின்வருமாறு கூறிக் காட்டுகிறான்.

وَلَئِنْ سَأَلْتَهُمْ مَنْ خَلَقَ السَّمَاوَاتِ وَالْأَرْضَ وَسَخَّرَ الشَّمْسَ وَالْقَمَرَ لَيَقُولُنَّ اللَّهُ فَأَنَّى يُؤْفَكُونَ

நபியே ! நீங்கள் அவர்களிடத்தில் வானங்கள், பூமியைப் படைத்து, சூரியனையும், சந்திரனையும் வசப்படுத்தியவன் யார் என்று கேட்டால், நிச்சயமாக அவர்கள் அல்லாஹ்தான் என்று சொல்வார்கள். அவ்வாறாயின் அவர்கள் (உண்மையை விட்டும்) எங்கே திருப்பப் படுகிறார்கள்? (29-61)

وَلَئِنْ سَأَلْتَهُمْ مَنْ نَزَّلَ مِنَ السَّمَاءِ مَاءً فَأَحْيَا بِهِ الْأَرْضَ مِنْ بَعْدِ مَوْتِهَا لَيَقُولُنَّ اللَّهُ

வானத்திலிருந்து மழையை இறக்கி, வறண்டு இறந்துபோன இப்பூமியை உயிர்ப்பிக்கச் செய்தவன் யார் என்று அவர்களிடம் நீங்கள் கேட்டால் நிச்சயமாக அல்லாஹ் என்றே சொல்வார்கள். (29-63)

எனவே, அல்லாஹ்தான் படைப்பாளன் என்பதில் மாற்றுக் கருத்தில்லை. ஆனால் அந்தப் படைப்புக்களை அவன் எங்கிருந்து சிருஷ்டித்தான் ? என்பதில் பலவிதமான கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. சிலர் "இல்லாமை"யிலிருந்துதான் சிருஷ்டித்தான் என்றும், வேறு சிலர் "உள்ளமை"யிலிருந்துதான் சிருஷ்டித்தான் என்று கூறுகிறார்கள்.

"இல்லாமையிலிருந்து" சிருஷ்டித்தான் என்று கூறுபவர்கள். இல்லாமை என்பது ஒரு பொருள் ஏற்கனவே இருந்து, இப்போது இல்லாமையானது. ஏற்கனவே இருந்ததைப் படைப்பது சாத்தியம்

"இல்லாமலிருந்து உண்டாக்கினான்" என்பது எந்த பொருள் என்னவென்று யாருக்கும் தெரியாது. அந்த 'இல்லாமலி' ருந்து அந்தப் பொருளை உண்டாக்கினான் . இது இல்லாமலிருந்து படைத்தான்.இது அசாத்தியம் இதைதான் இறைவன் படைக்கிறான் "இல்லாமையிலிருந்து உண்டாக்கினான்" என்று தவறாக விளங்கிக் கொண்டார்கள்.

هَلْ اَتٰى عَلَى الْاِنْسَانِ حِيْنٌ مِّنَ الدَّهْرِ لَمْ يَكُنْ شَيْـــًٔـا مَّذْكُوْرًا

ஒவ்வொரு மனிதனுக்கும் (அவன் வெளிவருவதற்கு) முன்னர் ஒரு காலம் செல்லவில்லையா? அதில் அவன், இன்ன பொருள் என்றும் கூறுவதற்கில்லாத நிலைமையிலிருந்தான். (குர்ஆன் : 76:1)

நபி ஈஸா (அலை) அவர்களை அல்லாஹ் படைக்க நாடிய போது,,,

(அச்சமயம் மர்யம்) கூறினார்: "என் இறைவனே! என்னை ஒரு மனிதனும் தொடாதிருக்கும்போது எனக்கு எவ்வாறு ஒரு மகன் உண்டாக முடியும்?" (இது இல்லாமையிலிருந்து உண்டாகுதல்) (அதற்கு) அவன் கூறினான்: "அப்படித்தான் அல்லாஹ் தான் நாடியதைப் படைக்கிறான். அவன் ஒரு காரியத்தைத் தீர்மானித்தால், அவன் அதனிடம் "ஆகுக" எனக் கூறுகிறான், (இது இல்லாமலிருந்து உண்டாகுதல்) உடனே அது ஆகி விடுகிறது." (குர்ஆன் : 3:47)

அல்லாஹு தஆலா படைப்புக்களை உள்ளமையிலிருந்து உண்டாக்கினான் என்று கூறும் சூஃபிகள் அதற்கு ஆதாரமாக பின்வரும் மறை வசனத்தை ஆதாரமாக காட்டுகிறார்கள்.

إِنَّمَا أَمْرُهُ إِذَا أَرَادَ شَيْئًا أَنْ يَقُولَ لَهُ كُنْ فَيَكُونُ

அல்லாஹுு தஆலா ஒரு வஸ்தைப் படைக்க நாடினால் அதற்கு “குன்” நீ ஆகு என்று சொல்வான். அது உடனே ஆகிவிடும். (82-36)

மேற்படி வசனத்தில் “நீ ஆகு” என்று “அதற்குச்” சொல்வான் என்றால் எதற்கு ? என்ற விஷயத்தில் சிலர் அந்த வஸ்துவுக்கே சொல்வான் என்று கூறுகின்றனர். அப்படியாயின் அந்த வஸ்து அது இருந்ததா?

உதாரணத்திற்கு,

இன்றைய தினத்தில் இருந்து 15 மில்லியன் வருஷம் அதாவது 1500 கோடி வருஷங்களுக்கு முன் ஓர் அதிரடி , மஹா வெடிப்பு ( Big Bang) ஏற்பட்டது. அதற்கான தடயங்கள் இன்னும் காணக் கிடக்கின்றன .

ஒன்றுமே இல்லாத சூன்யத்தில் இருந்து எல்லாமே வந்து , ஒன்றாகி ஒருமித்த புள்ளி ( Singularity ) யாகி அதன் பின் வெடித்திருக்கிறது . நம்ப முடிகிறதா ?

اَوَلَمْ يَرَ الَّذِيْنَ كَفَرُوْۤا اَنَّ السَّمٰوٰتِ وَالْاَرْضَ كَانَـتَا رَتْقًا فَفَتَقْنٰهُمَا وَجَعَلْنَا مِنَ الْمَآءِ كُلَّ شَىْءٍ حَىٍّ اَفَلَا يُؤْمِنُوْنَ

(ஆரம்பத்தில்) வானம் (என்றும்) பூமி (என்றும் தனித்தனியாக) இல்லாமல் ஒன்றாக இருந்ததை நாமே பிரித்தமைத்தமைத்தோம் . (குர்ஆன் : 21:30)

வெடித்து சிதறிய பிரபஞ்சம் அன்றிலிருந்து விரிவடைந்து விரிவடைந்து பெரியதாகிக் கொண்டே வந்திருக்கிறது . இதற்கும் Red Shift போன்ற பௌதீக ஆதாரங்கள் உள்ளன .

وَ السَّمَآءَ بَنَيْنٰهَا بِاَيْىدٍ وَّاِنَّا لَمُوْسِعُوْنَ

(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசால மாக்கியும் வைத்திருக்கின்றோம். (குர்ஆன் : 51:47)

வெடிப்பதற்கு முன் வானமும் பூமியும் எங்கே இருந்தது ? அதாவது வானமும் பூமியும் படைப்பதற்கு முன் எங்கே இருந்தது ? இதற்கு விஞ்ஞானத்தில் பதில் இல்லை . ஆனால் ஆன்மீகத்தில் பதில் இருக்கிறது . அவைகள் அல்லாஹ்வின் எண்ணத்தில் இருந்தது. அவைகள் எப்படி படைக்க வேண்டும் என்ற கருத்தும் அவனிடம் இருந்தது.

இப்போது விஞ்ஞானம் கூறுவதைப் பாருங்கள் . "பிரபஞ்சம், எண்ணத்திலிருந்துதான் வெளிப்படுகிறது என்பதையும் , நம்மைச் சுற்றி இருக்கும் பருப்பொருட்கள் அனைத்தும் உருமாற்றமடைந்த எண்ணங்களால்தான் உருவானவை என்பதையும் குவாண்டம் இயக்கவியல் உறுதி செய்துள்ளது அதை அண்டவியலும் இதை நிரூபித்துள்ளது.

ஒரே ஒரு பிரபஞ்ச மனம் மட்டும்தான் உண்டு. அது இல்லாத இடம் என்று எதுவும் கிடையாது.அது எல்லாவற்றிலும் நிறைந்துள்ளது .

அந்த மனம் அனைத்தும் அறியும் . அனைத்து ஞானமாய், அனைத்து முழுமையாய், எல்லாவற்றிலும் , எல்லா இடத்திலும் ஒரே நேரத்தில் நிலைகொண்டுள்ளது. அனைத்தும் அந்த ஒரே ஒரு பிரபஞ்ச மனம்தான் என்றால், அது எல்லா இடத்திலும் வியாபித்துள்ளது என்றால் , அது உங்களுக்குள்ளும் இருக்கிறது என்றுதானே பொருள் ?

قَلِيْلًا مَّا تَشْكُرُوْنَ   ثُمَّ سَوّٰىهُ وَنَفَخَ فِيْهِ مِنْ رُّوْحِهٖ وَجَعَلَ لَكُمُ السَّمْعَ وَالْاَبْصَارَ وَالْاَفْـِٕدَةَ

பின்னர், (படைப்பாகிய) அதனைச் செப்பனிட்டுத் தன்னுடைய "ரூஹை" அதில் புகுத்தி (உங்களை உற்பத்தி செய்கிறான்.) உங்களுக்குக் காதுகள், கண்கள், உள்ளங்கள் ஆகியவற்றையும் அவனே அமைக்கிறான். இவ்வாறு இருந்தும் உங்களில் நன்றி செலுத்துபவர்கள் வெகு சிலரே! (குர்ஆன் : 32:9)

உங்களைப் பொறுத்தவரை இந்தப் புரிதலால் என்ன பயன் ?

சொல்றேன், வருங்காலத்தில் நிகழ இருக்கும் அனைத்து அறிவும், அனைத்துப் புதிய கண்டுபிடிப்புகளும், அனைத்துக் கண்டறிதல்களும் , சாத்தியக் கூறுகளாகப் பிரபஞ்ச மனத்தில் ,மனிதமனம் தன்னை நோக்கி அதை இழுத்துக் கொள்வதற்காகக் காத்துக் கொண்டிருக்கின்றன .

வரலாற்றில் நிகழ்ந்துள்ள அனைத்துக் கண்டுபிடிப்புகளும் , படைப்புகளும் , அந்தந்த நபர்கள் அறிந்திருந்தார்களோ இல்லையோ அப்பிரபஞ்ச மனத்திலிருந்துதான் அவர்களை நோக்கிக் கவர்ந்திழுக்கப் பட்டுள்ளன .

بَدِيْعُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَ اِذَا قَضٰۤى اَمْرًا فَاِنَّمَا يَقُوْلُ لَهٗ كُنْ فَيَكُوْنُ

(அல்லாஹ்) வானங்களையும், பூமியையும் முன் மாதிரியின்றி (இல்லாமையிலிருந்து), தானே உண்டாக்கினான்; அதனிடம் “குன்” - ஆகுக- என்று கூறினால், உடனே அது ஆகிவிடுகிறது.(குர்ஆன் : 2:117)

முதலில் உங்கள் தேவைகளை கண்டுபிடியுங்கள்.பின் அக்கண்டுபிடிப்பை எப்படி நிகழ்த்துவது என்று யோசியுங்கள். உங்களை அந்த பிரபஞ்ச மனம் தேர்ந்தெடுத்ததால்தான் உங்களுக்கு அந்த தேவை உங்களுக்கு வேண்டும் என்று உங்கள் எண்ணத்தில் உதயமானது. உங்கள் தேவைக்குரிய அத்தனை சாத்தியக்கூற்றையும் பிரபஞ்ச மனம் தன்னகத்தே கொண்டுள்ளது. பிறகு என்ன ? உங்கள் தேவை வடிவமைக்கப்பட்டு உங்கள் முன் உருப்பெற்று இருக்கிறது.

وَمَا تَشَآءُوْنَ اِلَّاۤ اَنْ يَّشَآءَ اللّٰهُ رَبُّ الْعٰلَمِيْنَ

எனினும், அகிலத்தாரின் இறைவனாகிய அல்லாஹ் நாடினாலன்றி, நீங்கள் விரும்பமாட்டீர்கள் . (அல்குர்ஆன் : 81:29)

கணக்கிலடங்காத கருத்தாக்கங்கள், நீங்கள் கண்டுபிடித்து நிஜமாக்கப்படுவதற்காக அந்த பிரபஞ்ச மனம் காத்துக் கொண்டிருக்கின்றன.

படைப்பாளிகள் தங்கள் படைப்புக்காக பாராட்டப்படும் போது அவர்கள் மறக்காமல் சொல்வது "அல்ஹம்தில்லாஹ் - எல்லா புகழும் அல்லாஹ்விற்கே ! " என்று

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 149**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 66 ) - பகுதி 2**

وَهُوَ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ بِالْحَـقِّ‌ وَيَوْمَ يَقُوْلُ كُنْ فَيَكُوْنُ‌ قَوْلُهُ الْحَـقُّ‌ وَلَهُ الْمُلْكُ يَوْمَ يُنْفَخُ فِى الصُّوْرِ‌ عٰلِمُ الْغَيْبِ وَ الشَّهَادَةِ‌ وَهُوَ الْحَكِيْمُ الْخَبِيْرُ

"...எக்காளம் (சூர்) ஊதப்படும் நாளில், ஆட்சி (அதிகாரம்) அவனுடையதாகவே இருக்கும்; அவன் மறைவானவற்றையும், பகிரங்கமானவற்றையும் அறிந்தவனாக இருக்கிறான்; அவனே பூரண ஞானமுடையோன்; (யாவற்றையும்) நன்கறிந்தோன். (குர்ஆன் : 6:73)

சூர் (எக்காளம்) ஊதுவதின் பொறுப்பு.- இதன் பொறுப்பாளர் இஸ்ராFபீல் (அலை).

அஸ்சூர் அதாவது வானம் பூமி ஆகியவற்றை அல்லாஹுத்தஆலா படைத்த பிறகு, ஹளரத் இஸ்ராFபீல் அலைஹிஸ் ஸலாம் அவர்களிடம் எக்காளத்தைக் கொடுத்தான். அவர் அதனை வாயில் வைத்துக் கொண்டு, தமது பார்வையை அர்ஷுக்கு நேராக உயர்த்தி அல்லாஹுத் தஆலாவின் கட்டளையை எதிர்பார்த்த வண்ணமிருக்கிறார்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வலல்லம் அவர்களிடம் சூர் என்பது என்ன வென்று கேட்டதற்கு, அது ஒரு கொம்பு என்று பதிற் கூறினார்கள். அந்தக் கொம்பு வானம் பூமியுடைய நீள அகலங்களைப் பார்க்கினும் பெரிது. அதில் சிருஷ்டிப் பொருள்கள் யாவற்றிற்கும் இருக்கிற ஆத்மாக்களின் எண்ணிக்கையின் அளவு துவாரங்கள் இருக்கின்றன.

ஹளரத் இஸ்ராFபீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அந்த சூரை ஊதுவார்கள். ஆத்மாக்களெல்லாம் அந்த துவாரங்களிலிருந்து வெளியாகி வானத்திற்கும் பூமிக்குமிடையில் தேன் குழவிபோல் தத்தி நின்று கொண்டிருக்கும்.

பிறகு இறைவன் அவற்றை அவரவருக்குரிய சரீரங்களில் புகுந்து கொள்ளும் படி சொல்வான். அவைகள் சரீரங்களில் புகுந்து கொள்ளும். அப்புறம் பூமி பிளக்கும். முதலாவதாக நமது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெளியாவார்கள். அப்புறம் அவர்களுடைய உம்மத்துகள் 33 வயதுள்ள வாலிபர்களாக வெளியாவார்கள்.

இந்த சூர் மூன்று முறை ஊதப்படும்; முதலாவது முறை ஊதுவதற்கு "நஃப்கத்துல் பஜ்க்" அதாவது திடுக்கத்தின் ஊதுகை என்று பெயர்.
முதல் முறையாக ஊதும் சப்தத்தைக் கேட்டவுடன், மரணம் வந்து விடும் என்பதை யாவரும் உறுதியாக உணர்ந்து கொள்வார்கள். இனி சில தினங்களைத் தவிர அதிக நாள் உயிருடனிருக்க முடியாது என்பதை அவர்கள் தெரிந்து கொள்வதால் அவர்களுக்குத் திடுக்கமும் பயமும் ஏற்படும்.
ஒரே ஒரு தடவை ஸூர் ஊதப்பட்டு, பூமியும், மலைகளும் தூக்கப்பட்டு தூள் தூளாக்கப்படும் போது, அந்நாளில் தான் அந்த நிகழ்ச்சி நடந்தேறும். வானம் பிளந்து விடும். அன்றைய தினம் அது உறுதியற்றதாக இருக்கும். வானவர்கள் அதன் ஓரங்களில் இருப்பார்கள். அந்நாளில் (முஹம்மதே!) உமது இறைவனின் அர்ஷை தம் மீது எட்டுப் பேர் (வானவர்கள்) சுமப்பார்கள்.( குர்ஆன் 69:13-17 )
இரண்டாவது முறை ஊதுவதற்கு "நஃப்கத்துஸ் ஸஅக்" அதாவது இடியோசை என்று பெயர். இது ஊதப்பட்டவுடன் அனைவரும் மரணித்து விடுவார்கள். அல்லாஹுத்தஆலாவைத் தவிர வேறு எதுவுமிருக்காது,
"எழுதப்பட்ட ஏடுகளைச் சுருட்டுவதைப் போல் வானத்தை நாம் சுருட்டிவிடும் அந்நாளை (நபியே! நினைவூட்டுவீராக!); முதலில் படைப்புகளைப் படைத்தது போன்றே, (அந்நாளில்) அதனை மீட்டுவோம்; இது நம் மீது வாக்குறுதியாகும்; நிச்சயமக நாம் இதனை செய்வோம். (குர்ஆன் : 21:104) வசனத்தை ஓதிக்காட்டினார்கள். (அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி), நூல்கள்: புகாரி, முஸ்லிம்)
மூன்றாவது முறை ஊதப்படுவது "நஃப்கத்துல் பஅது " அதாவது எழுப்புதல் என்று பெயர். இதனை ஊதும்போது யாவரும் சுப்ருகளிலிருந்து உயிர் பெற்றெழும்பி விடுவர். ஒரு முறை ஊதிய பின் மறுமுறை ஊதுவதற்கு இடையில் 40 வருட கால தவணை உண்டு
இவ்வாறு இரண்டாவது முறை ஓதப்பட்டு அனைவரும் மரணித்த பிறகு அவர்களது ஆன்மாக்கள் சூர் குழலிலுள்ள துவாரங்களில் வைக்கப்படும்.
அப்புறம் மூன்றாவது முறை சூர் ஊதிய பிறகு மேற்கண்டவாறு யாவரும் உயிர் பெற்று எழும்புவார்கள்.
“மனிதர்களை எழுப்புவதற்கான ஸூர் ஊதப்பட்டதும், நான் தான் முதலில் எழுவேன். ஆனால் எனக்கு முன்பே மூஸா நபி அர்ஷைப் பிடித்துக் கொண்டு நிற்பார்கள். இவ்வுலகில் இறைவனைப் பார்க்க ஆசைப்பட்டு அவர்கள் ஏற்கனவே மூர்ச்சையாகி விட்டதால் இப்போது மூர்ச்சையாகாமல் இருந்தாரா? அல்லது மூர்ச்சையாகி எனக்கு முன் எழுந்தாரா? என்று எனக்குத் தெரியாது” என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரி 2411, 2412, 3408, 6517, 6518, 7472)
நல்லடியார்கள் நல்லடக்கம் செய்யப்பட்டதும், அவர்களிடம் முன்கர், நன்கீர் ஆகிய இரு மலக்குகளின் கேள்விகள் கேட்கப்பட்டு முடிக்கப்பட்டதும், அந்த மலக்குகள், அந்த நல்லடியானிடம்…
“புது மாப்பிள்ளை உறங்குவது போல் (அயர்ந்து) உறங்கு! என்பார்கள். அல்லாஹ் அவனை மண்ணறையிலிருந்து எழுப்பும் வரை அவர்கள் உறங்கிக் கொண்டிருப்பார்கள்.” என்று அல்லாஹ்வின் திருத்தூதர்(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள். அறிவிப்பவர் : அபூஹுரைரா(ரழி) நூல் : திர்மிதீ. -இப்படிப்பட்ட நல்லடியார்கள், மீண்டும் உயிர்த்தெழும் போது, எந்தவிதமான திடுக்கமும் இன்றி எழுவார்கள்.
பல்லாயிரம் ஆண்டுகள் மண்ணறைகளில் புதைந்து கிடந்தவர்கள் உட்பட எவருமே தாம் மண்ணறைகளில் தங்கியிருந்த கால அளவை உணரமாட்டார்கள். ஏதோ சற்று நேரம் உறங்கி விட்டு எழுந்திருப்பதாகவே அனைவரும் உணர்வார்கள். இதைப் பின்வரும் வசனங்கள் விளக்குகின்றன.
‘இவர்களுக்கு வாக்களிக்கப்பட்டதை இவர்கள் பார்க்கும் நாளில் பகலில் சிறிது நேரம் தவிர (மண்ணறைகளில்) இருக்க வில்லை என்பது போல் அவர்களுக்குத் தோன்றும்’.(குர்ஆன் 46:35)
‘நிச்சயமாக அதை அவர்கள் காணும் நாளில் காலையிலோ, மாலையிலோ சொற்ப நேரமே தங்கியிருந்ததாக அவர்களுக்குத் தோன்றும்’ (குர்ஆன் 79:46)

நபிமார்கள், நல்லவர்கள், ஆண்கள், பெண்கள் மற்றும் அனைவருமே நிர்வாணமாக எழுப்பப்படுவார்கள். எவருமே ஆடை யணிந்திருக்க மாட்டார்கள். மேலும் இவ்வுலகில் கத்னா செய்திருந்தவர்கள் உட்பட அனைவரும் கத்னா செய்யப்படாதவர்களாகவே எழுப்பப்படுவார்கள்.
'நிச்சயமாக நீங்கள் நிர்வாணமாகவும், செருப்பணியாமலும், கத்னா செய்யப்படாமலும் எழுப்பப்படுவீர்கள்' என்று நபி (ஸல்) கூறிவிட்டு
"எழுதப்பட்ட ஏடுகளைச் சுருட்டுவதைப் போல் வானத்தை நாம் சுருட்டிவிடும் அந்நாளை (நபியே! நினைவூட்டுவீராக!); முதலில் படைப்புகளைப் படைத்தது போன்றே, (அந்நாளில்) அதனை மீட்டுவோம்; இது நம் மீது வாக்குறுதியாகும்; நிச்சயமக நாம் இதனை செய்வோம். (குர்ஆன் : 21:104) வசனத்தை ஓதிக்காட்டினார்கள். (அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி), நூல்கள்: புகாரி, முஸ்லிம்)
சூர் ஊதப்படும் அந்நேரம் அவர்கள் மண்ணறையிலிருந்து அவர்களின் இறைவனிடம் விரைந்து வருவார்கள். (36:51)
பலி பீடங்களை நோக்கி விரைந்து செல்பவர்களைப் போல் அந்நாளில் அவர்கள் மண்ணறைகளில் இருந்து வேகமாக வெளியேறுவார்கள் (அல்குர்ஆன் 70.43)
'பூமி பிளந்து அவர்கள் வேகமாக வரும் நாள் அது தான். யாவரையும் ஒன்று சேர்க்கும் நாள்! இது நமக்கு மிக எளிதானதேயாகும்'. (அல்குர்ஆன் 50:44)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 150
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 67 ) –

وَاِذْ قَالَ اِبْرٰهِيْمُ لِاَبِيْهِ اٰزَرَ اَتَتَّخِذُ اَصْنَامًا اٰلِهَةً ۚ اِنِّىْۤ اَرٰٮكَ وَقَوْمَكَ فِىْ ضَلٰلٍ مُّبِيْنٍ

இப்ராஹீம் தம் தகப்பனார் ஆஜரிடம், "விக்கிரகங்களையா நீர் தெய்வங்களாக எடுத்துக் கொள்கிறீர்? நான் உம்மையும் உம் சமூகத்தாரையும், பகிரங்கமான வழி கேட்டில் இருப்பதை நிச்சயமாக பார்க்கிறேன்" என்று கூறியதை நினைத்துப்பாரும். (குர்ஆன் : 6:74)
இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் மக்காவில் உள்ள இஸ்லாமிய எதிரிகள் தங்களை இப்ராஹீமின் (ஆபிராமின் ) மார்க்கத்தை சேர்ந்தவர்கள் எனக் கூறிக் கொண்டிருந்தனர். அவர்கள் இப்ராஹீம் நபியின் பரம்பரையை சேர்ந்தவர்களாயினும் உண்மையில் இப்ராஹிம் நபியின் மார்க்கத்தை கடைப்பிடித்தவர்களல்லர்.
காரணம், இக்கூட்டத்தினர். இணைவைத்துக் கொண்டிருந்தனர். இப்ராஹீம் (அலை) அவர்கள் இணைவைப்பதை ஒழித்து ஏகதெய்வ வணக்கத்தின்பால் எல்லோரையும் அழைத்து வந்தார்கள்.
ஆகவே, இப்ராஹீமின் மார்க்கத்தைப் பின்பற்றியவர்கள் எனக் கூறிக் கொண்டிருப்பவர்களுக்கு இப்ராஹீம் நபியின் வரலாற்றையும் அவர்களுடைய கொள்கைகளையும் விளக்கிக் காட்டவே இவ்வசனம் 74 முதல் வசனம் 90 வரையுள்ள வசனங்கள் இறக்கி
அருளப்பட்டிருக்கின்றன.
ஹளரத் இப்ராஹீம் (அலை) அவர்கள், பாபிலோன் அருகில் (உர் எனும்) இன்றைய இராக் நாட்டில் கி.மு. 2160-ல் பிறந்தார்கள் அவர்களுடைய தந்தை ஆஜர் கிமு. 2230 வாக்கில் வாழ்ந்தார். அந்நாட்டு மன்னன்
நம்ரூத் பின் கன்ஆன் (Nimrod) என்னும் மன்னன் ஆண்டு வந்தான்
இப்ராஹீம் நபி பிறப்பதற்கு முன்னரே இம்மன்னனிடம் நட்சத்திர கலைகளை உணர்ந்த சில வானசாஸ்திரிகள், ஓர் ஆண் குழந்தைப் பிறக்கப்போகிறதென்றும், அதனால் நம்ரூதின் ஆட்சிக்கு மிகப்பெரிய தொல்லை ஏற்படுமென்றும் அறிவித்திருந்தனர்.
இதனைக் கேட்ட நம்ரூத் பெருந் திகிலடைந்து அக்காலத்தில் பிறக்கும் ஆண் குழந்தைகளையெல்லாம் பிறந்த உடனேயே கொன்று விடுமாறு கட்டளையிட்டிருந்தான்.

அல்லாஹ்வின் ஏற்பாட்டிற்கு முன்னிலையில் நம்ரூதின் ஆணை எம்மாத்திரம்? அல்லாஹ்வின் ஏற்பாடே நடந்தது.
நம்ரூதின் கட்டளைக்கு அஞ்சி யாரும் அறியாவண்ணம் இப்ராஹீம் நபியின் பெற்றோர் ஒரு குடிசையில் தங்கினர். அங்கு ஹஜ்ரத் இப்ராஹீம் (நபி) பிறந்தார்கள்.
சில வருடங்கள் வரை இப்ராஹீம் நபி அக்குடிலிலேயே பத்திரமாக வைத்துப் பாதுகாக்கப்பட்டார்கள், எவரும் அறிய முடியவில்லை. இதுதான் அல்லாஹ்வின் ஏற்பாடு.
பின்னர் இப்ராஹீம் நபி அங்கிருந்து வெளியேறினார்கள். அப்பால் நடைபெற்றவை இவ்வசனத்திலும் பின்னருள்ள வசனங்களிலும் கூறப்படுகின்றன.
அவர்களுடைய தந்தையின் பெயர் 'ஆஜர்', இவருக்கு புனைப்பெயராக 'தாரக்' என்றும் கூறப்படும்.(ஆதியாகமம். 11:26ல் இவருடைய பெயர் "தேராகு" எனக் கூறப்பட்டிருக்கிறது.) தம்முடைய தந்தையும் அவருடைய கூட்டத்தினரும் பலவகையான விக்கிரகங்களை வைத்து வணக்கம் செய்து கொண்டிருப்பதைக் கண்ட இப்ராஹீம் அவர்கள், தமது தந்தை ஆஜரை நோக்கி. "நீர் விக்கிரகங்களைக் கடவுள்களாக ஆக்கிக் கொண்டீரா?" என்று வெறுப்புடன் கேட்டார்கள்.
இப்ராஹீம் நபியின் காலத்தவர் அல்லாஹ்வையும் அவனுடைய மலக்குகளையும் நம்பிக் கொண்டிருந்தனர். ஆயினும், அவர்கள் மலக்குகளை விட இறைவன் அழகாகயிருப்பான் என அவர்களாக ஓர் அழகிய உருவை கற்பனை செய்து அதனைச் சிலையாக வடித்து அதனை வணங்கத் தலைப்பட்டனர்.
இவ்வாறே மலக்குகளைப் பற்றியும் அவர்கள் மனத்தில் தோன்றிய பிரகாரம் கற்பனையாக உருவம் கொடுத்து பல சிலைகளை உண்டாக்கிக் கொண்டு அவைகளையும் வணங்கத் தலைப்பட்டார்கள். இப்படிச் செய்து வணங்கினால் தான் கடவுளுடனும், மலக்குகளுடணும் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முடியுமென்றும் அவர்கள் நம்பினார்.
பொதுவாக இவ்வுலகானது வானத்துடன் சம்பந்தப்பட்டிருப்பதால், வானிலுள்ள நட்சத்திரங்களின் மாறுபாடுகள் காரணமாக இவ்வுலகமும் மாறுபடுகிறது என நம்பினர்.
இதனால் வானிலுள்ள நட்சத்திரங்களுக்கு இவ்வுலகில் பல மாறுதல்களைச் செய்ய சக்தியுண்டு என்று நம்பி தங்களுக்கு நன்மை செய்யுமாறும், தீமைகள் ஏற்படாதவாறு பாதுகாக்குமாறும் நட்சத்திரங்களையும் வேண்டினர். அந்த நட்சத்திரங்களுக்கு ஒவ்வொரு பெயரைக் கொடுத்து அவற்றிற்குச் சிலைகளும் செய்து கொண்டனர்.
இம்முறையில் கிரகங்களை வணங்கும் வழக்கமும் ஏற்பட்டது. இவையனைத்தும் சிறிய சிறிய கடவுள்கள். இவை ஒரு பெரிய கடவுளுக்குக் கட்டுப்பட்டவை என்றும் அப்பெரிய கடவுளேதான் தன்னில் தானே நிலைபெற்ற தனி உள்ளமை படைத்தவன் என்றும் கூறி வந்தனர்.
வேறு சிலர், சில பெரியார்களிடம் சென்று கடவுளின் தன்மைகள் பற்றிக் கேட்பர். அவர்கள் கடவுள்,"சாந்தத் தன்மை படைத்தவர்" என்று கூறினால் உடனேயே "சாந்தம் நிலவும் அங்கங்களைக் கொண்ட ஓர் உருவத்தை உண்டாக்கி அதனை வணங்குவர், "கொடூரமானவர்" என்றால் உடனேயே அதற்குரிய பயங்கரமான அங்கங்களை அமைத்துச் சிலைகளை உருவாக்கி வணங்குவர்.
அவர் பெண்ணா? ஆணா? என்று கேட்டால் சில பெண்ணுக்குரிய குணத்தைக் கூறும்போது பெண்ணுருவிலும், ஆணுக்குரிய வீரத்தைக் கூறும் பொழுது ஆண் உருவிலும் உண்டாக்கி அவற்றை வணங்குவர்.
இப்படிப் பல வகையான விக்கிரகங்கள் நபி இப்ராஹிம் (அலை) அவர்கள் காலத்தில் உண்டாக்கப்பட்டு வணங்கப்பட்டு வந்தன.
பிற்காலத்தில் இங்கிலாந்து பிரான்ஸு நாடுகளைச் சேர்ந்த சிலர், பாபிலோன், நைனவா முதலான இடங்களுக்குச் சென்றிருந்தனர். புராதனச் சின்னங்களை ஆராயும் இவர்கள் ருமேனியா சுல்தானின் அனுமதி பெற்று அங்குள்ள சில இடங்களைத் தோண்டினர்.

பளிங்குக் கற்களால் செய்யப்பட்ட அற்புதமான அழகிய பல சிலைகளைக் கண்டெடுத்து அவற்றைப் பொருட்காட்சி சாலையில் வைத்திருக்கின்றனர். இப்படிப்பல சிலைகள் இப்ராஹீம் நபி காலத்தவரால் செய்யப்பட்டவையாகும்.
இதில் ஓர் ஆச்சரியம் என்னவென்றால், இப்ராஹீம் (அலை) அவர்களுடைய தந்தை ஆஜர் இத்தகைய விக்கிரங்களை உற்பத்தி செய்து விற்பனை செய்யும் தச்சராக இருந்ததுதான். தமது கைப்பட செய்தவைகளைத் தாமும் வணங்கி அவற்றை வணங்குவதற்காக பிறருக்கும் விற்பனை செய்து கொண்டிருந்தார். அதனால்தான் அவரைப் பார்த்து இப்ராஹிம் நபி கேட்டது வசனம் 74ல் கூறப்படுகிறது.
இவற்றையெல்லாம் கூர்மையாகக் கவனித்த இப்ராஹீம் நபி அவர்கள், அந்த விக்கிரகங்களால் எவ்விதப் பயனுமில்லை என்பதை நன்கு தெரிந்து கொண்டு தந்தையை நோக்கி, இவற்றை வணங்கும் உம்மையும், உம்முடைய கூட்டத்தினரையும் பகிரங்கமான வழி கேட்டிலிருப்பதாகவே நான் காண்கிறேன்" என்று கூறினார்கள்.
இயற்கையிலேயே நபி இப்ராஹிம் (அலை) அவர்கள் சிறந்த அறிவு ஜீவியாக பகுத்தறிவாளராக இருந்தார்கள். இதனால் அல்லாஹ்வின் படைப்பினங்களை உன்னிப்பாக கவனித்து ஒவ்வொன்றில் இருந்தும் ஒவ்வொரு ஞானத்தை பெற்றார்கள்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 151
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 68 )

وَكَذٰلِكَ نُرِىْۤ اِبْرٰهِيْمَ مَلَـكُوْتَ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَلِيَكُوْنَ مِنَ الْمُوْقِـنِيْنَ
அவர் உறுதியான நம்பிக்கையுடையவராய் ஆகும் பொருட்டு வானங்கள், பூமி இவற்றின் ஆட்சியை இப்ராஹீமுக்கு இவ்வாறு காண்பித்தோம்.(குர்ஆன் : 6:75)
வானங்கள், பூமி இவற்றின் ஆட்சியை ஆராய்தல் :
தமது தந்தையும், அவருடைய கூட்டத்தினரும் வணங்கி வரும் விக்கிரகங்களால் எவ்விதப் பயனுமில்லை என்பதை ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்கள் நன்கு உணர்ந்தே தம்முடைய தந்தையிடம் 74ம் வசனத்தில் கண்டபடி கூறினார்கள்.
இதனை அவர்கள் வெறுமனே கூறிவிடவில்லை. ஒவ்வொன்றையும் நன்றாக ஆராய்ந்து காட்டிய பின்னரே கூறினார்கள். 'அல்லாஹ் ஒருவன்; அவனுக்கு எவரும், எதுவும் இணையாக முடியாது' என்பதற்கு வானங்களையும் பூமியையும், அவற்றிலிருப்பவைகளையும் அவர்கள் ஆராய்வதற்கு ஏற்றவாறு வானங்கள் பூமியுடைய நமது ஆட்சியை நாம் அவருக்குக் காட்டினோம். நன்கு ஆராய்ந்து பார்த்து நம்மைப் பற்றி உறுதி கொண்டவர்களில் ஒருவராய் அவரும் ஆகுவதற்காகவே இவ்வாறெல்லாம் காட்டினோம் என இங்கு கூறப்படுகிறது.
வானங்களிலும் பூமியிலும் உள்ள ஆட்சிகளை நாம் அவருக்குக் காண்பித்தோம் :
அந்தமும் ஆதியும் இல்லா இறைவன் எந்த முன் மாதிரியும் முன் உதாரணமும் இன்றி விந்தைமிகு விண்வெளியை அமைத்து அகில மக்கள் பயன்பாட்டிற்கு வசப்படுத்தி கொடுத்திருப்பதைச் சிந்தனை செய்ய செப்புகிற செம்மறை குர்ஆனின் கூற்றை ஆய்வோம்.
சிந்திப்பது பற்றிய சீர்மிகு குர்ஆனின் சிறப்பான வசனம் (குர்ஆன் 7:185)
" வானங்கள் பூமி ஆகியவற்றில் நடைபெறும் அரசாட்சியை அவர்கள் கூர்ந்து கவனிப்பதில்லையா? என்று வினவுகிறது.
வானங்கள் பூமியின் ஆட்சி அதிகாரங்களைப் பார்ப்பது என்பது அல்லாஹ் அவற்றில் அடங்கியுள்ள உண்மைகளைச் சிந்தித்து உணரவேண்டியதே. அல்லாஹ்வின் அறிவை மிகைக்கும் அற்புத அத்தாட்சிகளை உணர வேண்டும் என்று விளக்குகிறது தப்ஸீர் அத்தப்ரீ 191/2 .

வானங்களில் உள்ள படைப்புகளில் அறிவை ஈர்க்கும் அற்புத அத்தாட்சிகள் உள்ளன. அறிஞர்கள் அறியவேண்டிய ஆய்வுக்குரிய நுட்பங்கள் நிறைந்துள்ளன. இவற்றை அறிய இகம் காக்கும் இறைவனின் அச்சம் வலுவடையும்; மகத்துவம் புலப்படும்.
வேறு சில வசனங்களில் அல்லாஹ் கூறுகிறான். "வானங்களிலும் பூமியிலும் உள்ளவற்றை கூர்ந்து நோக்குங்கள் என்று நபியே நீர் அவர்களிடம் கூறுவீராக (குர்ஆன் 10: 101)
இப்ராஹீம் உறுதியான நம்பிக்கை உடையவர் ஆவதற்காக வானங்களிலும் பூமியிலும் உள்ள ஆட்சிகளை நாம் அவருக்குக் காண்பித்தோம் என்று ஏக இறைவன் இயம்பியதை ( குர்ஆன் 6:75 ) -ஆவது வசனம் எடுத்துரைக்கிறது. வானங்களையும் பூமியையும் அவற்றில் உள்ளவற்றையும் அவைகளின் இயக்கத்தையும் ஊன்றி உணர்ந்து ஆய்ந்து அறிவதற்காக இப்ராஹீம் நபி அவர்களுக்குக் காட்டியதை அறிவிக்கிறது இந்த வசனம்.
(குர்ஆன் 3: 191) -ஆவது வசனம் நிலையிலும் இருப்பிலும் விலாப்புறம் படுத்தபடியும் அல்லாஹ்வை நினைவு கூர்ந்து வானங்களையும் பூமியையும் படைத்திருப்பதைச் சிந்திக்கின்றனர். எங்கள் இறைவனே இவற்றை வீணாக படைக்கவில்லை. நீ மிக தூயவன். வேதனையிலிருந்து எங்களைக் காப்பாற்றுவாயாக! என்று சிந்தித்து செப்புவதை அறிவிக்கிறது. இவர்கள் இப்படி சிந்தித்ததின் விளைவே இன்றைய விண்வெளி ஆராய்ச்சி.
(குர்ஆன் : 45:13) அவனே வானங்களிலுள்ளவை, பூமியிலுள்ளவை அனைத்தையும் தன் அருளால் உங்களுக்கு வசப்படுத்திக் கொடுத்திருக்கிறான்; அதில் சிந்திக்கும் சமூகத்தாருக்கு நிச்சயமாகப் பல அத்தாட்சிகள் உள்ளன.
(குர்ஆன் : 40:64) பூமியில் உள்ளவர்களுக்கு பாதுகாப்பாக வானம் முகடாக கட்டமைக்கப்பட்டிருக்கிறது. அப்பாதுகாப்பால் மக்களின் வாழ்வு நிலையாக அமைகிறது. வாழ்வாதாரங்கள் வானத்தில் இருந்து கிடைக்கின்றன.
குர்ஆன் 14- 33 -ஆவது வசனம் சூரியனையும் சந்திரனையும் ஒழுங்காக இயங்க வைத்து இரவையும் பகலையும் மக்கள் வசதிக்காக செய்தான் என்று செப்புகிறது.
(குர்ஆன் : 51:47) மேலும், நாம் வானத்தை (நம்) சக்திகளைக் கொண்டு அமைத்தோம்; நிச்சயமாக நாம் விரிவாற்றலுடையவராவோம்.
(குர்ஆன் 31:10) அல்லாஹ்வின் ஆற்றலால் படைக்கப்பட்ட வானத்தைத் தாங்கி நிற்கும் தூண்கள் பூமியில் இல்லை. உயரமாக எவ்வித ஆதாரமும் இன்றி எற்படுத்தினான் ஏக இறைவன் என்று விளக்கம் அளிக்கிறது தப்ஸீர் இப்னு கதீர் 424/7.
வானங்களைத் தூண்கள் இன்றி படைத்திருக்கிறான். நீங்கள் பார்க்கிறீர்கள், பூமி உங்களைக் கவிழ்த்து விடாதிருக்க மலைகளை நிறுத்தி பல உயிரினங்களையும் அதில் பரப்பினான். வானிலிருந்து மழையை பொழிவித்து பயிர்களை முளைக்கச் செய்தான் என்று செப்புகிறது.
( குர்ஆன் 79: 27, 28) ஆவது வசனங்கள் அல்லாஹ்தான் வானத்தைப் படைத்தான். அவனே அதன் முகட்டை உயர்த்தி அதனை ஒழுங்கு படுத்தினான் என்று பகர்கின்றன.
வானத்தை உயரமாய் கட்டமைத்தான். அளவிட முடியாத தொலைவில் வைத்தான். நம் இயல்பான கணிப்புகளுக்கு அப்பாற்பட்டதாக அமைத்திருக்கிறான் என்று விளக்குகிறது. தப்ஸீர் இப்னு கதீர் 316/8.
( குர்ஆன் 67:3 )ஆவது வசனத்தில் வரும் ஸம்ரு என்னும் அரபி சொல் ஒரு பொருளின் மிக தாழ்ந்த அடிப்பகுதியிலிருந்து உயர்ந்த மேற்பகுதி வரை அளப்பதைக் குறிக்கிறது. அளவிட முடியாத உயரத்தில் வானம் இருப்பதை இயம்புகிறது.
அல்லாஹ் ஏழு வானங்களையும் அடுக்கடுக்காகப் படைத்தான். அந்த அல்லாஹ்வின் படைப்பில் நீயாதொரு ஒழுங்கீனத்தையும் காண மாட்டாய்.
(குர்ஆன் : 67:4) பின்னர் இருமுறை உன் பார்வையை மீட்டிப்பார்; உன் பார்வை களைத்து, மழுங்கிச் சிறுமையடைந்து உன்னிடம் திரும்பும்.

அல்லாஹ் வானங்களை ஒவ்வொரு அடுக்காக கட்டமைத்தான். அவற்றில் எந்த வேறுபாடோ ஏற்றத் தாழ்வோ குறைகளோ பாதிப்புகளோ குழப்பமோ இல்லாத வகையில் வைத்திருக்கிறான். பல்வேறு கோளங்களையும் ஒளிவீசும் நட்சத்திரங்களையும் அந்த வானங்களில் வைத்திருக்கிறான்.
ஏழு வானங்களும் அவற்றில் அமைந்துள்ள நட்சத்திரங்களும் பிரமாண்டமானவை. சூரியன், சந்திரன் பிற கிரகங்கள் பூமியை விட உருவத்தால் மிகப் பெரியவை. பலவகை பிரகாசங்களும் அற்புதங்களும் நிரம்பியவை. ஒப்பிடுகையில் பூமியில் புலப்படும் அற்புதங்கள் அற்பமானவை.
ஏழு வானங்களில் உள்ள நட்சத்திரங்கள், ஒரு விநாடியில் பல லட்சம் தொலைவில் சஞ்சரித்தாலும் ஒன்றோடொன்று மோதி கொள்வதில்லை. எத்தனை வழி சாலைகள் அமைத்து சகல வசதிகளைச் செய்து வழியை விசாலமாக்கினாலும் விபத்துகள் குறையவில்லை. ஆபத்துகள் அகலவில்லை. இந்நிகழ்வும் நினைவில் பதித்து சிந்திக்கத் தக்கது.

(குர்ஆன் 15:16) நிச்சயமாக, நாம் வானத்தில் பெரிய பெரிய நட்சத்திரங்களைப் பார்ப்பவர்களுக்கு அதனை அலங்காரமாகவும் ஆக்கி வைத்தோம் என்று அல்லாஹ் அறிவிக்கிறான் -
( குர்ஆன் 16:16 ) நட்சத்திரங்கள் வானத்தின் அழகு. இருள்சூழும் சமயங்களில் தரையிலும் கடலிலும் உரிய வழியைக் கண்டு செல்ல இந்த நட்சத்திரங்கள் வழிகாட்டிகள் என்று விளக்கம் தருகிறது தப்ஸீர் அத்தப்ரீ 123/ 23. அடையாளங்களைக் கொண்டும் நட்சத்திரங்களைக் கொண்டும் தங்கள் வழியை அறிந்து கொள்கின்றனர் என்று உறுதி செய்கிறது. காடுகள் மலைவழி செல்வோர் காலத்தையும் திசைகளையும் தெரிந்து நேர்வழியில் செல்ல நட்சத்திரங்களைப் படைத்தான் பாராளும் அல்லாஹ்.
வானத்தில் உள்ள நட்சத்திரங்களின் எண்ணிக்கையை அல்லாஹ் மட்டுமே அறிவான். விண்வெளி ஆராய்ச்சியில் ஈடுபாடுள்ள அறிவியல் அறிஞர் ஒருவர் கூறுகிறார். வானத்தில் எண்ணற்ற விண்மீன் வளிமண்டலங்கள் (கேலக்ஸி) உள்ளன. ஒரு விண்மீன் வளிமண்டலம் என்பது அதனைச் சூழ்ந்து அமைந்திருக்கும் நட்சத்திரங்களையும் கோள்களையும் உள்ளடக்கியது. நமது பால்வெளி விண்மீன் (மில்கிவே கேலக்ஸி) வளிமண்டலத்தில் மட்டும் சூரியனைச்சுற்றி பல ஆயிரம் கோடி நட்சத்திரங்கள் உள்ளன.
வானங்கள், பூமி இவற்றில் அவனின் ஏகோபத்திய ஆட்சி அதிகாரத்தை சிறிதளவே சொல்லியிருக்கிறேன்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 152
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 69 )

فَلَمَّا جَنَّ عَلَيْهِ الَّيْلُ رَاٰ كَوْكَبًا  قَالَ هٰذَا رَبِّىْ فَلَمَّآ اَفَلَ قَالَ لَاۤ اُحِبُّ الْاٰفِلِيْنَ
ஆகவே அவரை இரவு மூடிக் கொண்டபோது அவர் ஒரு நட்சத்திரத்தைப் பார்த்தார்; “இதுதான் என் இறைவன்!” என்று கூறினார்; ஆனால் அது மறைந்த போது அவர், “நான் மறையக் கூடியவற்றை நேசிக்க மாட்டேன்” என்று சொன்னார். (குர்ஆன் : 6:76)
ஹஜரத் இப்ராஹீம் (அலை) அவர்கள், அல்லாஹ் ஒருவன் என்னும் ஏகத்துவத்தை தமது தந்தைக்கும், அவர் தம் கூட்டத்தினருக்கும் நிரூபித்துக் காட்டுவதையே இவ்வசனம் அறிவிக்கின்றது.
ஹழ்ரத் இத்ரீஸ் (அலை) இவர்கள்தான் நட்சத்திரக் கணக்கை முதன்முதலில் உலகிற்கு கொண்டு வந்தவர்கள். இத்ரீஸ் நபியவர்களுக்கு இந்த நட்சத்திர ஞானம், ஒரு தடவை வெயிலின் கொடுமையை கண்டு "யா அல்லாஹ்..! சூரியனைச் சுமக்கும் வானவருக்கு அதன் உஷ்ணத்தால் சிரமம் ஏற்படாதவாறு அருள் புரிவாயாக! "என்று துஆ செய்தார்கள்.

இதனால் அந்த வானவர் நபியவர்களை வானலோகத்திற்கு அழைத்து சென்று மலக்குகள் பார்வையிடும் ஸிர்ருல் மலக்கூத்து என்கிற பிரபஞ்சங்கள் இரகசிய கிதாபை படிக்க கொடுத்தும், சூரியனுடைய கோள்கள் சுற்றி வரும் பாதைகளில் அந்தந்த கிரகங்களோடு அவரையும் பயணிக்க செய்தார்கள்
இப்படி சனிக்கோளுடன் சேர்ந்து 30 ஆண்டுகள் விண்ணிலே பயணித்து வந்தார்கள் ஆகையால் இவர்களால் தன்னால் நேரில் கண்ட நட்சத்திரத்திரங்களைப் பற்றியும் ஞானத்தையும், மலக்குகளின் கிதாபு (பிரபஞ்சங்கள் இரகசியத்தை) ஒன்றாக சேர்த்து வான சாஸ்திரத்தை இவர்கள் தொகுத்து பூமிக்கு கொடுத்தார்கள்.
இந்த நட்சத்திர ஞான அறிவை தப்பும், தவறுமாக விளங்கிக் கொண்டு, முன்னர் கூறப்பட்ட பிரகாரம் நட்சத்திரங்களையும், கிரகங்களையும் இப்ராஹிம் நபியின் கூட்டத்தினரான கன்ஆனியர் (கன் ஆன் தேசம்) கடவுளாக பாவித்து வணங்கிக் கொண்டிருந்தனர்.
அவற்றின் அறிகுறியாக புவியில் நட்சத்திரங்களுக்கும், கிரகங்களுக்கும் சிலைகளைச் செய்து அவைகளுக்காக கோவில்களை நிர்மாணித்து அவற்றை வணங்கினார்கள். இதனால் அவர்கள் வணங்கும் இப்பொருள்கள் பற்றி அவர்களுக்கு விளக்கிக் காட்டுவதே, அவசியமென இப்ராஹீம் (அலை) கண்டார்கள்.
நட்சத்திரங்கள்,கிரகங்கள் கடவுள்களல்ல :-
அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு எதனையும் வணக்கத்திற்குரியதாக நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் கருதவில்லை. ஆயினும், முதலில் அக்கூட்டத்தினரின் போக்கிலேயே சென்று, அவர்களால் வணங்கப்படும் பொருள்கள் உபயோக மற்றவை என்பதை அவர்களுக்கு விளக்கிக் காட்ட தாமே அவற்றைத் துருவி துருவி ஆராய்வது போல் காட்டிக் கொண்டார்கள்.
இம்முறையில் ஒரு நாள் அவர்கள்மீது இரவின் இருள் கப்பி எங்கும் இருள்மயமான பொழும் ஒரு நட்சத்திரத்தை அவர்கள் கண்டார்கள். சிலர் அந்நட்சத்திரம் ஜஹ்ரா நட்சத்திரம் என்றும், சிலர் முஷ்தரீ நட்சத்திரம் என்றும் கூறுவர். அது மாதத்தின் பிற்பகுதியாதலால் எங்கும் இருள் நிறைந்திருந்த சமயத்தில் அது உதயமானதும் ஒளியொன்று பிரகாசமாக விசீற்று இதனைக் கண்டு "இது என்னுடைய இரட்சகன்" என்று கூறினார்.
அதனையே அவர்கள் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தனர். அனைவரும் பார்த்து கொண்டிருக்கிற நிலையிலேயே அது மறைந்து விட்டது.
அவ்வாறு அது மறைந்த பொழுது மறைகிறவைகளை இரட்சகன் என்று கூற நான் பிரியப்படமாட்டேன். ஏனெனில், மறைவதும், அப்பால் தோன்றுவதும், ஒளி கூடுவதும், குறைவதும், ஒன்று மாறி ஒன்று அழிவதையே காட்டுவனவாகும். ஏக இரட்சகனாக இருப்பவனுக்கு இவையெல்லாம் இருக்கக் கூடாது. ஆகையினால் இந்த நட்சத்திரங்கள் எதுவும் இறைவனாக இருக்கத் தகுதியற்றவை என்று கூறிவிட்டார்.
நட்சத்திரங்கள் ஏன் மின்னுகின்றன ?
இரவில் வானம் முழுக்க மின்னும் நட்சத்திரங்களை நீங்கள் கண்டு ரசித்திருப்பீர்கள்.
சூரியனை விடவும் பல கோடி மைல்களுக்கு அப்பால் நட்சத்திரங்கள் இருக்கின்றன. அதனால் நம் கண்களுக்கு அவை குட்டியாகத் தெரிகின்றன. சூரியனைப் போல் 20 முதல் 100 மடங்கு பெரிய விண்மீன்கள் ( நட்சத்திரங்கள் ) வானில் உள்ளன.
சூரியன்தான் நமக்கு அருகில் உள்ள நட்சத்திரம். சூரியனுக்கு அடுத்து உள்ளது பிராக்சிமா சென்டாரி ( Proxima Centauri) என்ற நட்சத்திரம். ஆனால் அதனுடைய ஜொலிப்பு குறைவு என்பதால் நம் கண்களுக்குத் தெரிவதில்லை. அல்பா சென்டாரி (Alpha Centauri) என்ற நட்சத்திரம் பிராக்சிமாவை விட தூரமாக இருந்தாலும் ஜொலிப்பு அதிகம் என்பதால் கண்களுக்குத் தெரியும்.
நட்சத்திரங்கள் மறைவதும், அப்பால் தோன்றுவதும், ஒளி கூடுவதும், குறைவதும், ஒன்று மாறி ஒன்று அழிவதையே காட்டுவனவாகும் இருப்பதற்கு காரணத்தை சொல்றேன்.
நட்சத்திரங்கள் மின்னுவதில்லை. வளி மண்டலத்தில் உள்ள காற்றை அவற்றின் ஒளி கடந்து வரும்போது நம் கண்களுக்கு மின்னுவது போல் தோற்றம் தருகின்றன.

விண்மீன்களின் ஒளி பூமியை வந்தடைய பல லட்சம் ஆண்டுகள் ஆகின்றன. காரணம் விண்மீன் இருக்கும் தூரத்தை ஒளி செல்லும் வேகத்தில் அளக்கப்படுகிறது.
ஒரு ஒளியாண்டு என்பது....ஒளி ஒரு ஆண்டில் கடக்கும் தூரமாகும். உதாரணமாக.....ஒளி ஒரு வினாடியில் 2,99,792 கி.மீ தூரம் பயணிக்கும்! இதனை 60ஆல் பெருக்கி வரும் தொகையை மறுபடியும் 60ஆல் பெருக்கிக் கிடைக்கும் தொகையை 24ஆல் பெருக்கி, கிடைக்கும் தொகையை 365ஆல் பெருக்கிக் கிடைக்கும் தொகையாகும்!
((ஸ்ஸ்ஸ்ஸ்....ஹப்பாடா! வேண்டாம் விடையைக் கூறி விடுகிறேன்! தோராயமாக 1,000,000,000,000,000,000. வருடங்கள்!
விண்மீன்களின் ஒளி பூமியை வந்தடைய பல லட்சம் ஆண்டுகள் ஆகின்றன என்பதை அறிந்தோம்.ஆனால் அந்த விண்மீன் இப்போது அங்கு இருக்குமா என்றால் யாருக்கும் தெரியாது. அந்த விண்மீன் அழியாமல் இருக்கும் போது புறப்பட்ட ஒளி இப்போது தான் பூமியை வந்தடைந்திருக்கிறது.
ஒன்று சொல்கிறேன் அந்த நட்சத்திரங்களில் பல நட்சத்திரங்கள் பல நூறு ஆண்டுகளாக இல்லை. ஆனால் நம் கண்ணுக்கு தெரிந்து கொண்டிருக்கிறது என்ன காரணம் என்றால் அவை அழிந்து போய் அல்லது அவையும் ஒரு பிளாக் ஹோலாக மாறி பல நூற்றாண்டுகள் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆகி இருக்கலாம்.
ஆனால் நம் கண்ணுக்கு எப்படி தெரிகிறது என்றால் அவற்றிலிருந்து அங்கு கிளம்பிய ஒளி இன்னும் முடிவடையவில்லை வந்து கொண்டே இருக்கிறது. நட்சத்திரங்கள் அழிந்து ஓய்ந்த பிறகும் கூட அங்கு புறப்பட்ட ஒளி இன்னும் வந்து கொண்டிருக்கிறது இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு வந்து கொண்டிருக்கும் அப்படி என்றால் இந்த தூரத்தை அவற்றின் பிரம்மாண்டத்தை நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள்.
நான் சாதாரணமாக பேச்சு வழக்கில் கற்பனைக்கு எட்டாத என்ற வார்த்தையை அடிக்கடி உபயோகிப்போம் அது உண்மையாவே கற்பனைக்கு எட்டாத கற்பனை செய்து பார்க்க முடியாத அளவுக்கு பிரமாண்டம் கொண்டதுதான்.
وَ السَّمَآءَ بَنَيۡنٰهَا بِاَيۡٮدٍ وَّاِنَّا لَمُوۡسِعُوۡنَ
(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசாலமாக்கியும் வைத்திருக்கின்றோம். (குர்ஆன் : 51:47)
இந்த விண்வெளி அண்டம் இந்த பிரபஞ்சம் பிரபஞ்சத்தை பற்றியும் அதில் உள்ள நட்சத்திரங்கள் கோள்கள் பிளாக் கோள்கள், பிளாக் மேட்டர் என்பன போன்ற இன்னும் பல அதிசயங்களை பற்றியும் இன்னும் எவ்வளவோ பேசிக் கொண்டிருக்கலாம் எவ்வளவோ சொல்லலாம் நமக்குத் தெரிந்தவை குறைவு இன்னும் தெரியாதவை புரியாத மர்மங்கள் எத்தனையோ இருக்கின்றன இந்த பிரபஞ்சத்தில்

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 153
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 70 )

فَلَمَّا رَاَالۡقَمَرَ بَازِغًا قَالَ هٰذَا رَبِّىۡ‌ ۚ فَلَمَّاۤ اَفَلَ قَالَ لَٮِٕنۡ لَّمۡ يَهۡدِنِىۡ رَبِّىۡ لَاَ كُوۡنَنَّ مِنَ الۡقَوۡمِ الضَّاۤ لِّيۡنَ
பின்னர் சந்திரன் (பிரகாசத்துடன்) உதயமாவதைக் கண்டு, அவர், “இதுவே என் இறைவன்” என்று கூறினார். ஆனால் அது மறைந்த போது அவர், “என் இறைவன் எனக்கு நேர்வழி காட்டவில்லையானால், நான் நிச்சயமாக வழி தவறியவர்கள் கூட்டத்தில் (ஒருவனாக) ஆகிவிடுவேன்” என்று கூறினார். (குர்ஆன் : 6:77)
அப்பால் கொஞ்ச நேரம் பொறுத்து சந்திரன் உதயமாவதைக் கண்டார். அது நட்சத்திரத்தை விடச் சற்றுக் கூடுதல் ஒளியுடையதாக இருப்பதைக் கண்ட அவர், "இது என்னுடைய இரட்சகன் என்று கூறினார். அதுவும் மறைந்த பொழுது எனது இரட்சகன் இல்லை.

அவனை நான் அறிவதற்கு அவன் நேர்வழி காட்டவில்லையாயின் வழி தவறிப்போன கூட்டத்தினரில் நிச்சயமாக நான் ஆகிவிடுவேன். அவன் ஒருவன்; ஏகன், சகல சக்தியும் உடையவன்; அவன் எந்த மாறுதலுக்கும் உட்படாதவன் என்பதனை நாங்கள் உணர்ந்து கொள்வதற்கு அவனே வழி காட்டவேண்டும் என்று கூறினார்.
மாதத்தின் பிற்பகுதியாதலால், முன்னிரவில் நட்சத்திரம் உதயமானது. ( முந்தைய பதிவில் பார்த்தோம்) அப்பால் பின்னிரவில் சந்திரன் உதயமானது. இரண்டின் தன்மைகளும் நன்கு தெரிந்து விட்டன. ஆகையால். அவையிரண்டும் இறைவனாக இருக்கத் தகுதியற்றவை என்று நிரூபணமாயிற்று.
நபி இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு சந்திரன் திடீரென உதயமாகி திடீரென மறைவதில் உள்ள சந்திரனின் இயல்பை வைத்து இது என் இறைவனாக இருக்க முடியாது என்ற கருத்துக்கு வந்தார்கள்.
உண்மையில் சந்திரோதயம் மற்றும் அஸ்தமனம் பற்றி விஞ்ஞான ரீதியில் சொல்றேன். உதாரணத்திற்கு, சூரியனை எடுத்துக் கொள்வோம்.
சுமார் சூரிய உதயம் காலை 6 மணி. சூரிய அஸ்தமனம் மாலை சுமார் 6 மணி. இதிலே ஒரு ஒழுங்கு இருக்கிறது. புரியுதுங்க.
ஆனா பாருங்க...இந்த நிலா சந்திரன் புரியறதே இல்லைங்க..சில நேரங்களில் காலைல தலைக்கு மேலே நிலாங்க...இன்னும் சில நேரங்களில் கிழக்கே சூரியனும் இருக்குதுங்க, மேற்கே நிலாவும் இருக்குதுங்க. எப்படிங்க நிலா மட்டும் ஒரு ஒழுங்கு இல்லாம கன்னா பின்னான்னு சுத்துது ?
இந்த சேதியை நண்பர்களுக்கு புரியற மாதிரி சொல்றேன்.
பூமி தனக்குத்தானே ஒருமுறை சுற்றிக்கொள்ள ஆகும் நேரம் 24 மணி. சூரியனை ஒரு முறை சுற்றிவர ஒரு வருஷம் 365.25 நாட்கள்
சந்திரன் பூமியைச் சுற்றி வரும் நேரம் 27.3 நாட்கள். இதை 'சைடிரியல்' மாதம் என்பர். பூமியின் உபக் கிரகமாக இருப்பதால், தனது மற்றும் பூமியின் சுழற்சியில் உள்ள வித்தியாசத்தினால் ஒவ்வொரு நாளும் பூமிக்கு நிலா சுமார் 13 டிகிரி தள்ளித் தள்ளி கிழக்கே போய்விடுகிறது.
விளைவு, சூரிய ஒளி தன் மீது படும் கோணங்களிலும் வித்தியாசங்களோடு பகல்நிலா, பிறைநிலா என்று தோற்ற மாற்றம்! இது தவிர, உதய நேரத்திலும் பிசகுகள். படத்தைப் பார்த்தால் ஓரளவு புரியும் என நினைக்கிறேன்.
சந்திரனின் இந்த மாய நிலைகளை குறித்து ஒருவர் ஆய்வு செய்து பார்த்தால் குழம்பி போய்விடுவார்கள். இருந்தாலும் துணைக்கு இருக்கும் இந்த படம் உதவி செய்யும் என நினைக்கிறேன்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 154
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 71 )

فَلَمَّا رَاٰ الشَّمْسَ بَازِغَةً قَالَ هٰذَا رَبِّىْ هٰذَاۤ اَكْبَرُ فَلَمَّاۤ اَفَلَتْ قَالَ يٰقَوْمِ اِنِّىْ بَرِىْٓءٌ مِّمَّا تُشْرِكُوْنَ
பின் சூரியன் (மிக்க ஒளியுடன்) உதயமாவதைக் கண்டபோது : “இதுவே என் இறைவன்; இது எல்லாவற்றிலும் பெரியது” என்று அவர் கூறினார். அதுவும் அஸ்தமிக்கவே, அவர், “என் சமூகத்தாரே! நீங்கள் (ஆண்டவனுக்கு) இணைவைக்கும் (ஒவ்வொன்றையும்) விட்டு நிச்சயமாக நான் விலகி விட்டேன்” என்று கூறினார். (குர்ஆன் : 6:78)
மாதத்தின் பிற்பகுதி ஆதலால், முன்னிரவில் நட்சத்திரம் உதயமானது. அப்பால் பின்னிரவில் சந்திரன் உதயமானது. இரண்டின் தன்மைகளும் நன்கு தெரிந்துவிட்டன. ஆகையால் அவையிரண்டும் இறைவனாக இருக்கத் தகுதியற்றவை என்று நிரூபணமாயிற்று.
அப்பால் விடிந்தது. சூரியன் தனது கதிர்களைப் பரப்பிய நிலையில் அதிகப் பிரகாசத்துடன் உதயமானதை அவர் கண்டார். இந்தப் பிரகாசமானது பூமி முழுவதும் பரவி எல்லா பொருள்களும் நன்கு தெரியுமாறு செய்தது. இப்படி அவர் அதனைக் கண்டபொழுது. இது என்னுடைய இரட்சகன், முந்தைய இரண்டினையும் விட இது மிகப் பெரியதாகும் என்று கூறி அதனையும் கூர்ந்து கவனித்து வரலானார்.

அது மதியம்வரை பிரகாசத்தின் உச்சக் கட்டத்தையடைந்த பின்னர், குறைந்து கொண்டே வந்து மாலையானதும் அதுவும் மறைந்து விட்டது. அதன் சுடர்கூட இல்லை. எங்கும் இரு கவ்விக்கொண்டது.
இவ்வாறு அதுவும் மறைந்த பொழுது இவற்றையெல்லாம் நம்பிப் பயனில்லை என்பதை அக் கூட்டத்தினருக்கு நன்கு உணர்த்திவிட்ட அவர், "எனது கூட்டத்தினரோ நீங்கள் அல்லாஹ்வுக்கு இணை வைத்துக் கொண்டிருக்கிற இவைகளை விட்டு தான் ஒதுங்கியவனாக இருக்கின்றேன்" என்று கூறினார்.
இந்த நட்சத்திரங்களும், சந்திரனும், சூரியனும் கடவுள்களாக இருப்பதற்குத் தகுதியற்றவையாகும். இவை எனது ஏக இரட்சகனான அல்லாஹ்வின் படைப்பினங்கள். அவனுடைய கட்டளைப்படி நடப்பவை. இவை தமக்கு உத்தரவிடப்பட்ட செயல்கனைத் தவிர்த்து வேறு எதனையும் செய்ய இயலாதவை.
நீங்களோ இவைகளை வீணே வணங்கிக் கொண்டு உங்களுடைய தேவைகளை இவற்றிடம் கேட்கிறீர்கள். அவை தம்முடைய வேலைகளை மட்டும்தான் செய்துக்கொண்டிருக்குமே. தவிர, உங்களுடைய தேவைகளில் ஓர் அணுப்பிரமாணத்தைக் கூட அவை நிறைவேற்றாது. இதனை நீங்கள் உணர்ந்து ஒரே அல்லாஹ்வின்பால் வாருங்கள். அவனே வானங்கள், பூமி அவற்றிலுள்ளவை அனைத்தையும் படைத்தவன்.
இதனை நீங்கள் நம்பவில்லையாயின் தான் உங்களை விட்டு அகன்று
வானங்களையும், பூமியையும் படைத்த அந்த ஒருவனின் பக்கமே மனம் ஒன்றித்தவனாக என் முகத்தை நிச்சயமாக நான் (அவனிடமே) திருப்பி விட்டேன் மேலும்,நான் இணை வைப்பவர்களில் உள்ளவனல்ல" என்று கூறினார்.
திருக்குர்ஆனில் இப்ராஹீம் (அலை) அவர்கள் சூரியனைப் பற்றி ஒரு சம்பவத்தோடு குறிப்பிடுகிறார்கள் (குர்ஆன் : 2:258) வசனத்தில் "அல்லாஹ் தனக்கு அரசாட்சி கொடுத்ததின் காரணமாக (ஆணவங்கொண்டு), இப்ராஹீமிடத்தில் அவருடைய இறைவனைப் பற்றித் தர்க்கம் செய்தவனை (நபியே!) நீர் கவனித்தீரா?
இப்ராஹீம் கூறினார்: “எவன் உயிர் கொடுக்கவும், மரணம் அடையும்படியும் செய்கிறானோ, அவனே என்னுடைய ரப்பு (இறைவன்)” என்று; அதற்கவன், “நானும் உயிர் கொடுக்கிறேன்; மரணம் அடையும்படியும் செய்கிறேன்” என்று கூறினான்;
(அப்பொழுது) இப்ராஹீம் கூறினார்: “திட்டமாக அல்லாஹ் சூரியனைக் கிழக்கில் உதிக்கச் செய்கிறான்; நீ அதை மேற்குத் திசையில் உதிக்கும்படிச் செய்!” என்று (அல்லாஹ்வை) நிராகரித்த அவன், திகைத்து வாயடைப்பட்டுப் போனான்; தவிர, அல்லாஹ் அநியாயம் செய்யும் கூட்டத்தாருக்கு நேர் வழி காண்பிப்பதில்லை. (குர்ஆன் : 2:258)
நபி இப்ராஹிம் (அலை) அவர்களை நம்ரூது அழைத்து,"உம் ஆண்டவன் யார் ? எங்கே இருக்கிறான் ? அவனை எனக்கு காட்டும். ஏனெனில் இவ்வுலகில் ஒவ்வொன்றும் அதற்குரிய காரணம் ஏற்படும்போது, தானாகவே உண்டாகிறது. காரணம் முடிந்ததும் தானாகவே அழிந்து விடுகிறது. அப்படி இருக்க ஆண்டவன் ஒருவன் ஏன் ? என்று தனது சர்வாதிகார மமதையில் மிக அகங்காரத்துடன் கேட்டான்.
ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்கள், ''ஏக வல்லவனான அல்லாஹ் ஒருவன் உண்டு; அவனே யாவற்றையும் படைத்து ஆள்கிறான்" என்பதை ஆதாரபூர்வமாக நிரூபிக்க முன் வந்தார்கள்.
'இவ்வுலகில் யாருடைய ஆதிக்கத்திலும் கட்டுப்படாத சில காரியங்கள் நடைபெறுவதை காண்கிறோம். நமது சக்தியால் அவற்றைத் தடுக்கவோ அவற்றிற்கு மாறாக வேறொன்றை உற்பத்தி செய்யவோ முடிவதில்லை. எனவே, நம்முடைய சக்திகளுக்கெல்லாம் மேம்பட்ட சக்தியை கொண்ட ஒன்றினால்தான் அக்காரியங்கள் நடைபெறுகின்றன என்பது நிரூபணமாகிறது.
உதாரணமாக, மரிப்பதை எவனும் விரும்புவதில்லை. அதனைத் தடுப்பதற்கு எத்தனையோ முயற்சிகளை செய்கிறான். அவற்றில் அவன் தோல்வியடைந்து மரித்தே விடுகிறான். ஒரு காரியம் உண்டாகக் கூடாதென்று மிகுந்த முயற்சி செய்கிறான். அது உண்டாகி விடுகிறது.
ஒருவன் மரித்து விட வேண்டும் என்று மற்றொருவன் நினைத்து, அவனைக் கொல்வதற்கு ஏற்பாடுகளைச் செய்கிறான். ஆனால் அவன் மரிப்பதில்லை; உயிருடனே இருக்கிறான். ஒருவன் தன் உயிரைக் காப்பாற்ற பல முயற்சிகளை செய்கிறான். ஆனால் அவன் இறந்து விடுகிறான்.

இவைபோல் மனிதனுடைய சக்திக்கு அடங்காதவை எத்தனையோ இருக்கின்றன. சற்று சிந்தித்துப் பார்க்கும் பொழுது சர்வ வல்லமை உள்ள ஒருவனால்தான் சர்வமும் இயங்குகின்றன என்பது தெரிகிறது' என்னும் தங்கள் கருத்தை ''என் இரட்சகன் உயிர்ப்பிப்பான், மரிக்கவும் வைப்பான்" என்ற இரு வாக்கியங்கள் மூலம் நபி இப்ராஹீம் (அலை) எடுத்துக் காட்டினார்கள்.
நம்ரூது இக்கருத்தை உணரவில்லை. இப்ராஹீம் நபியின் அவ்விரு வாக்கியங்களை மட்டும் மேலெழுந்த வாரியாகக் கேட்டு விட்டு:
''உயிர்ப்பித்தலும் மரிக்க வைத்தலும் காரணங்களோடு நடைபெறுகின்றன. நான் ஒருவனை மரிக்க வைக்க நாடினால் என் வாளின் மூலம் அவனை வெட்டி இரு துண்டாக்கி விடுகிறேன். அவனை வெட்டாமல் விட்டு விட்டேனானால், அவனை நான் உயிர் வாழச் செய்கிறேன். எனவே நானும் உயிர்ப்பிப்பேன்; மரிக்கவும் வைப்பேன்" என்று அவன் கூறினான்.
ஆனால் இப்ராஹிம் (அலை) அவர்கள் நம்ரூதை நோக்கி, "நீ கொன்றவனைத் திரும்பவும் உயிர் கொடுத்து எழுப்புப் பார்க்கலாம்" என்று கூறி, அவனை மடக்கி இருக்கலாம். அப்படி சொல்லாமல்,
“திட்டமாக அல்லாஹ் சூரியனைக் கிழக்கில் உதிக்கச் செய்கிறான்; நீ அதை மேற்குத் திசையில் உதிக்கும்படிச் செய்!” என்று (அல்லாஹ்வை) நிராகரித்த அவன், திகைத்து வாயடைப்பட்டுப் போனான்;
காரணம் பாபுல் நகர - உர் மக்கள் சூரியனை மிகப்பெரிய கடவுளாக மிகவும் பயபக்தியுடன் வணங்கி வந்தனர். சூரியனின் பிள்ளைகளான மன்னர்களையும் அவர்கள் கடவுளாக நம்ரூதையும் வணங்கி வந்தனர். ஆனால், சூரியனைப் பற்றி யாரேனும் தவறுதலாக கூறினால், அது மன்னராக இருந்தாலும் கொன்று விடுவார்கள். எனவே நம்ரூத் திகைத்து வாயடைப்பட்டுப் போனான்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 155
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 72 )

اِنِّىْ وَجَّهْتُ وَجْهِىَ لِلَّذِىْ فَطَرَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ حَنِيْفًا وَّمَاۤ اَنَا مِنَ الْمُشْرِكِيْنَ
“வானங்களையும் பூமியையும் படைத்தவன் பக்கமே நான் உறுதியாக என் முகத்தைத் திருப்பிக் கொண்டேன்; நான் முஷ்ரிக்கானவனாக - (இணைவைப்போரில் ஒருவனாக) இருக்க மாட்டேன்” (என்று கூறினார்).(குர்ஆன் : 6:79)
وَحَآجَّهٗ قَوْمُهٗ ‌ قَالَ اَتُحَآجُّوْنِّىْ فِى اللّٰهِ وَقَدْ هَدٰٮنِ‌ وَلَاۤ اَخَافُ مَا تُشْرِكُوْنَ بِهٖۤ اِلَّاۤ اَنْ يَّشَآءَ رَبِّىْ شَيْــًٔـا‌ وَسِعَ رَبِّىْ كُلَّ شَىْءٍ عِلْمًا‌ اَفَلَا تَتَذَكَّرُوْنَ
அவருடன் அவருடைய கூட்டத்தார் விவாதித்தார்கள்; அதற்கவர் “அல்லாஹ்வைப் பற்றியா என்னிடம் தர்க்கம் செய்கிறீர்கள்? அவன் நிச்சயமாக எனக்கு நேர்வழி காட்டிவிட்டான்; நீங்கள் அவனுக்கு இணையாக்குபவற்றைப் பற்றி நான் பயப்படமாட்டேன்; என் இறைவன் எதையாவது நாடினாலன்றி (எதுவும் நிகழ்ந்து விடாது); என் இறைவன் (தன்) ஞானத்தால் எல்லாப் பொருட்களையும் சூழ்ந்திருக்கின்றான்; இதை நீங்கள் சிந்திக்க வேண்டாமா?” என்று கூறினார்.(குர்ஆன் : 6:80)
வானங்களையும் பூமியையும் அவற்றில் உள்ள யாவற்றையும் படைத்தவன் அல்லாஹ் ஒருவனே ஆவான். அந்த ஒருவனின் பால் முற்றிலும் நான் சாய்ந்து விட்டேன். என் முகத்தை நிச்சயமாக நான் அவனிடமே திருப்பி விட்டேன். நான் உங்களைப் போல் இணை வைத்தவர்களிலும் உள்ளவன் அல்ல, என்று இப்ராஹிம் நபி கூட்டத்தினரை நோக்கி கூறினார்கள்.
இவ்வாறு அக்கூட்டத்தில் விக்கிரகங்களுடைய குறைகளை இப்ராஹீம் நபி எடுத்துக்காட்டிய பொழுது அவர்கள் அவரை வெறுத்தனர்.அவரிடம் வீணாக தர்க்கமும் செய்ய ஆரம்பித்தனர்.
ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்கள் அல்லாஹ் ஒருவனின் ஏகத்துவத்தைப் பற்றி அக்கூட்டத்தினருக்கு நன்கு எடுத்துக் காட்டியதுடன், அவர்களுடைய விக்கிரகங்களின் செயலற்ற தன்மையை நன்கு விளக்கிக் காட்டினார்கள். இதனை அக்கூட்டத்தினர் ஏற்கவில்லை, தர்க்கம் செய்ய ஆரம்பித்தனர். அன்றியும்,

அவ்விக்கிரகங்களை நிந்தித்தால் பல வகையான துன்பங்களை அனுபவிக்க வேண்டியதேற்படும் எனவும் பயமுறுத்தினர்.
ஹஜ்ரத் இப்ராஹீம், அல்லாஹுவின் அளப்பரிய சக்தியை அறிந்து கொண்டிருந்ததால், யாருடைய பயமுறுத்தலுக்கும் அஞ்சவில்லை. விக்கிரகங்களின் கையாலாகாத தன்மையை இன்னுமதிக வேகத்துடன் எடுத்துக்கூறி அவைகளைத் துச்சமாக மதித்தார்கள்.
இப்ராஹீம் நபியின் தந்தை விக்கிரகங்களைச் செய்து விற்பவர் என்பது முன்னர் கூறப்பட்டிருக்கிறது. அவரிடம் ஹஜ்ரத் இப்ராஹீம்நபி அவர்கள் வந்தபொழுது, அத்தந்தை தம் மகனைப் பாசத்துடன் அணைத்துக் கொண்டார். அவருக்கும் அவரது செயலின் உபயோகமற்ற தன்மையை இப்ராஹீம் (அலை) விளக்க நாடினார்கள்.
இப்ராஹீம் நபியின் தந்தை விக்கிரகங்களைச் செய்து தம் மகனிடம் கொடுத்து விற்று வருமாறு கூறுவார். அவற்றை எடுத்துச் செல்லும் இப்ராஹீம் "நன்மையோ, தீமையோ எதுவுமே செய்ய முடியாதவற்றை வாங்குபவர் யார்?" என்று கூவி அழைப்பார்கள்.
இவ்வாறு கூறும் பொழுது, அவற்றை யார் வாங்குவார்கள்? யாருமே வாங்குவதில்லை. அவற்றை அப்படியே ஆற்றிற்குக் கொண்டு சென்று அவற்றின் தலைகளைத் தண்ணீரில் கவிழ்த்து, "தண்ணீர் குடியுங்கள் தண்ணீர் குடியுங்கள்" என்று இப்ராஹீம் (அலை) அவர்கள் பரிகாசமாக மொழிவார்கள்.
இதெல்லாம் அச்சமுதாயத்தினருக்குத் தெரிந்து அவர் மீது ஆத்திரமடைந்தனர், அவரிடம் தர்க்கம் செய்து எப்படியாவது அவரை மடக்கி, விக்கிரக நித்தனையிலிருந்து அவரை அகற்றி விட முனைந்தனர். இதனைக் குறித்தே இவ்வசனத்தில் அவருடைய கூட்டத்தினர் அவரிடம் அல்லாஹ்வைப் பற்றி அனாவசியமாகத் தர்க்கித்தனர் எனக் கூறப்படுகிறது.
அத்துடன் அக்கூட்டத்தினர் இப்ராஹீம் நபியை நோக்கி, "எங்களுடைய விக்கிரகங்கள் மிகவும் சக்தி வாய்ந்தவையாகும். அவற்றை நீர் குறை கூறினால், அவை உம்மீது ஆத்திரம் கொண்டு உமக்குப் பைத்தியம் பிடிக்கச் செய்து விடும். அல்லது வேறு வகையான கொடிய வேதனையால் உம்மைப்பிடித்து விடும்" எனவும் பயமுறுத்தினர்.
அப்பொழுது இப்ராஹீம் (அலை) அக்கூட்டத்தினருக்குக் கூறிய பதிலாவது:
அல்லாஹ் ஒருவன்; அவனே வணக்கத்திற்குரியவன்; அவனையே நீங்களும் வணங்க வேண்டும் என நான் கூறுவதன் உண்மையை உணராமல் என்னிடம் தர்க்கம் செய்கிறீர்களா? அதுவுமன்றி என்னை பயமுறுத்துகிறீர்களா? இதனாலெல்லாம் என்னை நீங்கள் ஒன்றும் செய்துவிட முடியாது,
அல்லாஹ் ஒருவனே எனக்கு நிச்சயமாக நேர்வழிகாட்டினான். அவன் ஏதாவதொன்றை நாடினாலல்லாமல் நீங்கள் இணைவைத்துக் கொண்டிருக்கிற விக்கிரகங்கள் எனக்கு எதுவும் தீங்கு செய்து விடுமென்று ஒரு போதும் நான் பயப்படமாட்டேன். அவைகள் வைக்கப்பட்ட இடங்களில்தான் இருக்குமே.தவிர யாருக்கும் எதுவும் செய்யவே முடியாது.
வேண்டுமானால் அவைகளை என் மீது ஏவிப் பாருங்கள். வீணாக அவற்றை நம்பி ஏமாத்திருக்காதீர்கள். அவற்றிற்கு எதையும் அறியக்கூடிய சக்தி கிடையாது. என்னுடைய இரட்சகன் எல்லாவற்றையும் அறிவதில் விசாலமானவன் அவனுடைய அறிவிலிருந்து எதுவும் தப்ப முடியாது.
நீங்கள் வணங்கிக் கொண்டிருப்பவைகளோ வெறும் உலோகங்கள்; கற்கள்; மண், மரங்கள். அவை யாருக்கும் எந்தத் தீங்கும் செய்ய முடியாது, எந்த நன்மையும் செய்ய இயலாது. ஆகவே, நீங்கள் இதனை கொஞ்சமேனும் நினைத்துப் பார்க்கக் கூடாதா?
இவ்வாறெல்லாம் சிந்தித்து உணராமல் என்னை பயமுறுத்துகிறீர்களே!
\

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 156
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 73 )

وَكَيْفَ اَخَافُ مَاۤ اَشْرَكْتُمْ وَلَا تَخَافُوْنَ اَنَّكُمْ اَشْرَكْتُمْ بِاللّٰهِ مَا لَمْ يُنَزِّلْ بِهٖ عَلَيْكُمْ سُلْطٰنًا ‌ فَاَىُّ الْفَرِيْقَيْنِ اَحَقُّ بِالْاَمْنِ‌ اِنْ كُنْتُمْ تَعْلَمُوْنَ‌

உங்களுக்கு அவன் எந்த அத்தாட்சியும் இறக்கி வைக்காமல் இருக்கும்போது நீங்கள் அல்லாஹ்வுக்கு இணை வைப்பது பற்றி பயப்படவில்லை - அப்படியிருக்க நீங்கள் (அவனுக்கு) இணை வைப்பவற்றுக்கு நான் எப்படி பயப்படுவேன்? நம் இரு பிரிவினரில் அச்சமின்றி இருக்கத்தகுதி உடையவர் யார்? நீங்கள் அறிந்தவர்களாக இருந்தால், (கூறுங்கள் எனவும் கேட்டார்) (குர்ஆன் : 6:81)

اَلَّذِيْنَ اٰمَنُوْا وَلَمْ يَلْبِسُوْۤا اِيْمَانَهُمْ بِظُلْمٍ اُولٰۤـئِكَ لَهُمُ الْاَمْنُ وَهُمْ مُّهْتَدُوْنَ

எவர் ஈமான் கொண்டு அதன் பின்னர் தம்முடைய ஈமானை (இணை வைத்தல் என்னும்) அநீதியைக் கொண்டு களங்கப்படுத்த வில்லையோ, அவர்களுக்கே அபயமுண்டு; இன்னும் அவர்களே நேர்வழியைப் பெற்றுக் கொண்டவர்கள்.(குர்ஆன் : 6:82)

நீங்கள் வணங்கிக்கொண்டிருக்கிற விக்கிரகங்கள் தெய்வங்கள் என்பதற்கும்,சக்தியுடையவை என்பதற்கும்,அவற்றை வணங்காதவர்களை அவை தண்டித்து விடும் என்பதற்கும் உங்களிடம் என்ன ஆதாரங்கள் இருக்கின்றன? அப்படி இருந்தால் கொண்டு வாருங்கள்" என்று இப்ராஹீம் நபி கூறியபொழுது, அக்கூட்டத்தினரில் எவரும் எந்த ஆதாரத்தையும் கொண்டு வரவில்லை.

அப்பொழுது இப்ராஹீம் (அலை) அக்கூட்டத்தினரை நோக்கி, "நீங்கள் செய்வதெல்லாம் சரிதான் என்பதற்கு ஆதாரமாக எதனையும் அல்லாஹ் உங்கள் மீது இறக்கி வைக்காமல் அவனுக்கு இணை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அவனுக்குப் பயப்படாத நிலையில் நீங்கள் இணை வைத்துக் கொண்டிருக்கும் உங்களுடைய விக்கிரகங்களுக்கு நான் எப்படி பயப்படுவேன் ? அவை உபயோகமற்றவை என்பதை நன்கறிந்துள்ளேன்.

"நீங்கள் இவ்வாறு இணை வைப்பதன் மூலம் மாபெரும் பாவத்தைச் செய்கிறீர்கள். நானோ ஏக தெய்வக் கொள்கையின் மீது இருந்து கொண்டு ஒரே அல்லாஹ்வை வணங்குகிறேன். இவ்வாறு ஒரு இரு வேறுபட்ட நிலையிலிருக்கும் நம் இரு சாராரில் யார் வேதனையைக் குறித்து அச்சமற்றிருப்பதற்குத் தகுதியுடையவர் ஏக தெய்வக் கொள்கையுடையவரா? இணை வைப்பவரா? என்பதை நீங்கள் அறிவீர்களாயின் எனக்கும் தெரிவியுங்கள்" என நபி இப்ராஹீம் (அலை) கூறினார்கள்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 157
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 74 )

وَتِلْكَ حُجَّتُنَاۤ اٰتَيْنٰهَاۤ اِبْرٰهِيْمَ عَلٰى قَوْمِهٖ‌ نَرْفَعُ دَرَجٰتٍ مَّنْ نَّشَآءُ‌ اِنَّ رَبَّكَ حَكِيْمٌ عَلِيْمٌ

இவை நம்முடைய ஆதாரங்களாகும், நாம் இவற்றை இப்ராஹீமுக்கு அவருடைய கூட்டத்திற்கு எதிராகக் கொடுத்தோம்; நாம் விரும்புவோருக்கு பதவிகளை (மேலும் மேலும்) உயர்த்துகிறோம்; நிச்சயமாக உம்முடைய இறைவன் பூரண ஞானமும் பேரறிவும் உள்ளவன். (குர்ஆன் : 6:83)

நபி இத்ரீஸ் (அலை) அவர்கள் எழுதிய 'சிர்ருள் மலக்கூத்து' என்ற பிரபஞ்ச ரகசியத்தின் கிதாபுகளில் சொல்லப்பட்ட நட்சத்திரத்தின் இயற்கை தன்மைகள், ஆற்றல்கள் இவைகளை குறித்து அவைகள் ஒவ்வொன்றுக்கும் சிலைகளை வடித்து வணங்கினர்.

மேலும் நட்சத்திரம், சூரியன், சந்திரன், இதர பொருட்களையெல்லாம் வணங்கி வந்த கூட்டத்தினர், மேற்படி பொருள்களால் உபயோகமில்லையென உணர்ந்து வாயடைத்துப் போகுமாறு பற்பல ஆதாரங்களை நபி இப்ராஹீம் (அலை) எடுத்துக் காட்டினார்கள்.

"(அவன் எப்பொருளாலும் ஆனவன் இல்லை ) அவன்தான் இவ்வுலகிலுள்ள ஒவ்வொன்றையும் படைப்பவன் அல்லாஹ்தான். அவன் ஒருவனே! அவனுக்கு இணைதுணையில்லை அவனே உலகிலுள்ள அனைத்தையும் அடக்கி ஆளுகின்றான் " (குர்ஆன் : 13:16)
மேலும் படைக்கப்பட்ட பொருட்களையெல்லாம் படைக்கும் இறைவனாக பார்த்து வணங்கக் கூடாது என்று நபியவர்கள் அழுத்தம் திருத்தமாக ஆதாரத்தோடு நிரூபிப்பதற்கு
அல்லாஹ்வினால் அவர்களுக்கு வழங்கப்பட்ட ஆதார அறிவுகள் துணை நின்றது.
அந்த அறிவின் மூலம் அவர் தமது சமுதாயத்தினரின் மீது மிகைத்து வெற்றி பெறுவதற்காக அவற்றை நாம் அவருக்கு அறிவித்துக் கொடுத்தோம். இதனால் அவருடைய பதவிகள் உயர்ந்தன. நாம் யாரை விரும்புகிறோமோ அவருக்கு பதவிகளை உயர்த்துவோம் என்பதற்கு இது ஒரு சான்றாகும்.இதைத்தான் மேற்கண்ட வசனம் எடுத்துரைக்கிறது.
கடவுள் துகள் :-
இன்றைய விஞ்ஞானிகள் படைக்கப்பட்ட பொருட்களை படைக்கும் இறைவனாக மீண்டும் பார்க்க ஆய்வு செய்தனர். எப்படி ? சொல்றேன்.
பொதுவாக, பேச்சு வழக்கில் 'அது என்ன பிரபஞ்ச ரகசியமா..?" என்ற கேள்வி அவ்வப்போது பலரால் கேட்கப்படுவது வழக்கம். பிரபஞ்சம் உருவான விதம் பெரிய ரகசியமாகவே இருந்து வருகிறது. கடவுள் பிரபஞ்சத்தையும் அதில் உள்ள மற்ற பொருட்களையும் படைத்தார் என்று ஆன்மிகம் குறிப்பிடுகிறது.
ஆனால், அறிவியலோ பிரபஞ்சமும் அதில் உள்ள மற்ற பொருட்களும் அணுக்களால் ஆனது என்று உறுதியாக எடுத்துக் காட்டுகிறது.
அதற்கு பல்லாயிரம் கோடி ஆண்டுகளுக்கு முன்பு 'பிக்பாங்க்' என்ற பெரு வெடிப்பின்போது பல்வேறு வாயுக்கள் உருவாகின. பின்னர், அதில் உள்ள அணுக்கள் ஒன்றிணைந்து பிரபஞ்சமும், அதில் உள்ள மற்ற பொருட்களும் உருவானதாக அறிவியல் கூறுகிறது.
அணு என்பது எலக்ட்ரான், புரோட்டான், நியூட்ரான் என்ற 3 உட்பொருட்களின் சேர்க்கை ஆகும். அந்த அணுக்களின் கூட்டமைப்புதான் வெவ்வேறு விதங்களில் திடப்பொருட்களாக உருவாகி இருக்கின்றன. பூமியில் நம்மை சுற்றிலும் இருக்கும் அனைத்து பொருட்களும் அணுக்களின் கூட்டமைப்பில் உருவானவை.
அனைத்து பொருட்களும் ஒன்றிணைந்த இந்த பிரபஞ்சமும் அடிப்படை அமைப்பில் அணுக்களின் சேர்க்கைதான். அந்த அணுக்களை ஒன்றாக இணைக்கும் ஒட்டுப்பொருள் எது..? ( செங்கல்களுக்கிடையில் வைக்கப்படும் சிமெண்ட் மாதிரி ) என்ற கேள்விக்கு பதில் தெரியாமல் இருந்தது.
அணுக்களை ஒன்றோடு ஒன்று இணைய வைக்கும் பொருளை கண்டுபிடித்தால், பிரபஞ்சம் உருவான ரகசியத்தையும் அறிந்துகொள்ள முடியும் என்று விஞ்ஞானிகள் நம்பினார்கள். அதை கண்டுபிடிக்க ஆராய்ச்சிகளையும் மேற்கொண்டார்கள்.
பெரு வெடிப்பின்போது ஏற்பட்ட அந்த சூழலை செயற்கையாக உண்டாக்கும் பட்சத்தில் அணுக்களை இணைக்கும் ஒட்டுப் பொருள் எது..? என்பதை கண்டுபிடிக்க முடியும் என்று விஞ்ஞானிகள் முடிவு செய்தனர். அதற்காக அணுக்களை ஒன்றோடு ஒன்று மோதவிட்டு சோதனைகளை மேற்கொள்ள முடிவு செய்து அதற்காக பிரான்ஸ் மற்றும் சுவிட்சர்லாந்து நாடுகளுக்கு இடையே 574 அடி ஆழத்தில் 27 கிலோ மீட்டர் நீளம் கொண்ட சுரங்கப் பாதை போன்று 'செர்ன்' என்ற பெயரில் (அணு ஆராய்ச்சிக்கான ஐரோப்பிய மையம்) ஆராய்ச்சிக் கூடத்தை அமைத்து, உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானிகள் ஒன்று சேர்ந்து ஆராய்ச்சிகளை செய்து வந்தனர்.
அவர்களது ஆராய்ச்சி முடிவில் அணுக்களின் ஒட்டுப் பொருளானது 12 துகள்களின் சேர்க்கை என தெரியவந்தது. அதில் 11 துகள்கள் கண்டறியப்பட்டன. 12-வது துகளை விஞ்ஞானி ஹிக்ஸ், 1964-ம் ஆண்டு கண்டு பிடித்தார். அது 'ஹிக்ஸ் போசன்' துகள் என்றும், 'கடவுள் துகள்' (காட்ஸ் பார்ட்டிகிள்) என்றும் குறிப்பிடப்படுகிறது.
கடவுள் துகள்கள்' என்று பெயர் வந்தது எப்படி?

1982ஆம் ஆண்டு இயற்பியலுக்கான நோபல் பரிசை வென்ற லியோன் மேக்ஸ் லேடர்மேன், எழுத்தாளர் டிக் தெரேசி உடன் இணைந்து எழுதிய நூல் 'The God Particle: If the Universe Is the Answer, What Is the Question?' என்பது. 1993-ல் வெளியான இந்த நூலின் தலைப்பில் The Goddamn Particle என்று எழுதியிருந்தனர்.
இதன்காரணமாக இதன் பெயரை 'The God Particle' என்று மாற்றியதாக லியோன் மேக்ஸ் லேடர்மேன் மற்றும் டிக் தெரேசி அப்புத்தகத்திலேயே குறிப்பிட்டுள்ளனர்.
மேலும் கடவுள்தான் இந்த உலகைப் படைத்தார் என்று மதங்கள் நம்புவதால், உலகில் உள்ள பொருட்கள் அனைத்துக்கும் ஒட்டும் தன்மையையும், நிறையைக் கொடுக்கும் இந்த துகளுக்கு 'கடவுள் துகள்' என்று ஒரு சாராரால் அழைப்புப் பெயர் வைக்கப்பட்டுள்ளது.
ஆனால், கடவுளை அறியப்படாமல் இருப்பதுபோல் அறியப்படாத அந்தத் துகள்களை கடவுளாக சித்தரிப்பதையோ, குறிப்பதையோ பல மதகுருக்கள் கடுமையாக இன்னும் எதிர்த்துள்ளனர்.
இதர பொருட்களையெல்லாம் கடவுளாக வணங்கி வந்த இப்ராஹீம் நபி கூட்டத்தினர், நபியவர்களின் வாதத்தால் மேற்படி பொருள்களால் உபயோகமில்லையென உணர்ந்து வாயடைத்துப் போகுமாறு பற்பல ஆதாரங்களை நபி இப்ராஹீம் (அலை) எடுத்துக் காட்டினார்கள்.
ஆனால் இன்றைய விஞ்ஞானம் பொருள்- கடவுள் என்ற கோட்பாட்டை அக்கால உர் நகர மக்கள் விட்ட இடத்தை மீண்டும் கடவுள் துகள் என்று தொட்டிருக்கிறது.
கடவுள் துகளை கண்டறியும் முயற்சியில் ஜோ இன்கண்டேலா என்ற பிரபல அணு விஞ்ஞானி தலைமையில், இரண்டு விஞ்ஞானிகள் குழு தொடர்ந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டு வந்தது. ஆராய்ச்சி முடிவில் கடவுள் துகள் கண்டுபிடிக்கப்பட்டு விட்டது.
அதே நேரத்தில் கண்டுபிடிக்கப்பட்டிருப்பது 'ஹிக்ஸ் போசன்' துகள் என்று சொல்லப்படும் கடவுள் துகள்தானா..? என்பதை உறுதி செய்யும் அடுத்த கட்ட ஆராய்ச்சிகள் தொடர்ந்து நடந்து வருகின்றன..
படம் :- சுவிட்சர்லாந்து - பிரான்ஸ் எல்லையில் மலைக்கு அடியில் அமைக்கப்பட்டுள்ள 'லார்ஜ் ஹேட்ரான் கொலைடர்' மூலம் 2012 -ல் பேரண்டத்தில் ஹிக்ஸ் போசான் துகள்கள் இருப்பது உறுதியானது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 158
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 75 )

وَوَهَبْنَا لَهٗۤ اِسْحٰقَ وَيَعْقُوْبَ كُلًّا هَدَيْنَا ‌ وَنُوْحًا هَدَيْنَا مِنْ قَبْلُ‌ وَمِنْ ذُرِّيَّتِهٖ دَاوٗدَ وَسُلَيْمٰنَ وَاَيُّوْبَ وَيُوْسُفَ وَمُوْسٰى وَ هٰرُوْنَ‌ وَكَذٰلِكَ نَجْزِى الْمُحْسِنِيْنَۙ
நாம் அவருக்கு இஸ்ஹாக்கையும், யஃகூபையும் (சந்ததியாகக்) கொடுத்தருளினோம், இவர்கள் அனைவரையும் நாம் நேர்வழியில் செலுத்தினோம்; இதற்கு முன்னர் நாம் நூஹையும் அவருடைய சந்ததியிலிருந்து தாவூது, ஸுலைமான், அய்யூப், யூஸுஃப், மூஸா, ஹாரூன் ஆகியோரையும் நேர்வழியில் செலுத்தினோம்; இப்படியே நாம் நன்மை புரிவோருக்கு நற்கூலி வழங்குகிறோம். (குர்ஆன் : 6:84)
(1) ஹஜ்ரத் இஸ்ஹாக் (ஈசாக்கு) (அலை) (கி.மு 2060-1880 ) அவர்கள். ஹஜ்ரத் இப்ராஹீம் நபி (அலை ) அவர்களுக்கும், ஸாரா அம்மையாருக்கும் பிறந்த நேரடிப் புதல்வராவார். இவர்கள், தங்களது கூட்டத்தினருக்கு ஏகத்துவத்தைப் போதித்து தேர் வழி நடத்தினார்கள். ஷாம் தேசத்தில் காலமான இந்த நபி தங்களுடைய தந்தையான இப்ராஹீம் நபி (அலை) அருகில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.
(2) யாகூபு (யாக்கோபு) நபி (அலை). ( கிமு 2000 - 1850 ) இஸ்ஹாக்கின் புதல்வரும் இப்ராஹீம் நபியின் பேரருமான யாகூபு நபி (அலை), பன்னிரு புதல்வர்களுக்குத் தந்தையாவார்கள். அம்மக்களில் குறிப்பிடத்தக்கவர் யூசுபு நபி (அலை) ஆவார்கள். யாகூபு நபிக்கு 'இஸ்ராயில்' என்றும் ஒரு பெயர் உண்டு. இவருடைய சந்ததியில் தோன்றியவர்களே இஸ்ரவேலர். 147 வருடங்கள் இவ்வுலகில் வாழ்ந்த இந்த நபியும் ஏகத்துவப் பிரச்சாரம் செய்தார்கள்.

இங்கு கூறப்பட்ட இரு நபிமார்களையும் குறிப்பிட்டு இப்ராஹீமுக்கு அவ்விருவரையும் கொடுத்தருளினோம் மேற்கண்ட வசனத்தில் அறிவிக்கப்படுகிறது. இவர்கள் ஒவ்வொருவரும் நேர்வழி பெற்றவர்களாகையால், இவர்களைக் குறித்து ஒவ்வொருவரையும் நேர்வழியில் செலுத்தினோம் என்றும் கூறப்படுகிறது.
(3) நூஹ் நபி (அலை) (நோவா). மேற்கூறப்பட்ட நபிமார்களுக்கும் ஹஜ்ரத் இப்ராஹீம் நபி அவர்களுக்கும் முன்னரே தோன்றியவர்கள் ஹஜ்ரத் நூஹ் நபி அவர்கள். இவர்கள் இரண்டாவது ஆதம் என வர்ணிக்கப்படுவார்கள். 950 வருட காலம் உலகில் ஏகத்துவப் பிரச்சாரம் செய்தார்கள். இவர்களின் வம்சத்திலுள்ளவர்கள் ஹஜ்ரத் இப்ராஹீம் நபி அவர்கள்,
இந்த நபியின் நீண்டகாலப் பிரச்சாரத்தினால் இவரைப் பின் பற்றியவர்கள் மொத்தம் 80 நபர்களே தாம். இதனால் சலிப்படைந்த இந்த நூஹ் நபி, அக்கிரமக்காரர்களான தமது கூட்டத்தினரை அழிக்குமாறு இறைவனிடம் பிரார்த்தித்த பொழுது வெள்ளப் பிரளயம் தோன்றி அவருடைய விரோதிகளை அழித்து விட்டது. திருகுர்ஆனில் அநேக இடங்களில் இவர்களுடைய வரவாறு கூறப்பட்டிருக்கிறது.
மார்க்கச் சட்டம் என்பதனை முதன் முதலில் உலகுக்கு எடுத்துக் கூறியவர் இந்த நபி அவர்களே. ஆதலால் இவர்களைப் பற்றி இங்கு, முன்னர் நுஹையும் நாம் நேர்வழியில் செலுத்தினோம் எனக் கூறப்படுகிறது.
அடுத்து அவர்களுடையவும், இப்ராஹீம் நபியுடையவும் சந்ததிகளில் தோன்றிய நபிமார்கள் தொடராகக் கூறப்படுகின்றனர்.
(4) தாவூது (அலை) (தாவீது), (கிமு 962) வீரமும், இனிய குரலும் கொண்ட இந்த நபியின் வரலாறு பற்றி அல்பகரா 251 ல் குறிப்பில் விவரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஜபூர் வேதத்தைப் பெற்ற இந்த நபி நாற்பது ஆண்டுகள் ஆட்சியும் புரிந்துவிட்டுத் தமது நூறாவது வயதில் காலஞ் சென்றார்கள்.
(5) சுலைமான் (அலை) (சாலமன்): (கிமு 932) தாவூது நபியின் குமாரர் தாம் ஹஜ்ரத் சுலைமான் (அலை) அவர்கள், அறிவிலும், ஆற்றலிலும், யுக்தியிலும், நீதிபரிபாலனம் செய்வதிலும் பிறந்த இவர்களிடம் இவர்களது தந்தை தாவூது நபி அவர்கள் தங்களுடைய அரசாங்க அலுவல்கள் பற்றிக் கலந்தாலோசிப்பார்கள்.
ஏறக்குறைய 12 வயதிலேயே ஆட்சிப் பொறுப்பை ஏற்ற சுலைமான் (அலை) அவர்கள் நேர்மையான ஆட்சி புரிந்து, ஏகத்துவத்தை நிலை நிறுத்தி விட்டு இவ்வுலகினை நீத்தார்கள்.
(6) அய்யூபு (அலை), இஸ்ஹாக் நபியின் குமாரர் அய்ஸ் என்பவரின் சந்ததியில் தோன்றிய அய்யூபு நபி அவர்கள், பெருஞ் செல்வந்தர்களாக இருந்தார்கள். நபிமார்களிலேயே பெருஞ் சோதனைக்குள்ளானவர்கள். ஆனால், அத்தனையையும் பொறுமையுடன் சகித்துக் கொண்டார்கள். இதனால் இவர்களைக் குறித்து திருகுர்ஆனில் பொறுமையாளர் என்று வர்ணிக்கப்பட்டுள்ளது.
தங்களுடைய மூதாதையர்களைப் போன்றே தங்களது கூட்டத்தினருக்கு ஏகத்துவத்தைப் போதித்தார்கள்.
(7) யூசுபு (அலை) (யோசேப்பு). இஸ்ஹாக் நபியின் வம்சத்தினரும் யாகூப் நபியின் புதல்வருமான ஹஜ்ரத் யூசுபு நபி அவர்கள், தங்களது இளம் பிராயத்தில் தங்களுடைய சகோதரர்களால் துன்பம் விளைவிக்கப்பட்டு பின்னர் உயர் பதவியடைந்து மிஸ்ரு (எகிப்து) நாட்டின் மாபெரும் அதிபதியானார்கள் அழகும், குணமும் அறிவாற்றலும், கனவுகளுக்கு உண்மையான வியாக்கியானம் கூறும் ஞானமும் பெற்றிருந்த இவர்கள் தம் முன்னோர்கள் போன்று ஏகத்துவத்தைப் போதித்துக் கொண்டிருந்தார்கள்.
(6) மூஸா (அலை) (மோசே) (கிமு 1540- 1400 ) இவர்களது சரிதை திருக்குர்ஆனின் பல இடங்களில் கூறப்படுகிறது. பெருங்குடி மக்களான இஸ்ரவேலர்களை எகிப்து நாட்டு மன்னன் ஃபிர்ஔனின் கொடுமையிலிருந்து விடுவித்து அவர்களை சுதந்திரமாக வைத்தார்கள்.
தவ்ராத் வேதத்தைப் பெற்ற இந்த நபி மூஸா (அலை) அவர்கள் ஏகத்துவத்தையும், இறைச் சட்டத்தையும் தங்கள் கூட்டத்தினருக்கு அழகுற எடுத்துரைத்தார்கள்.
ஹாரூன் (அலை) ஆரோன் மூஸா நபியின் சகோதரரான ஹாரூன் ஒரு நபியாக இருந்து தமது சகோதரரான மூஸா நபிக்கு ஏகத்துவ பிரச்சாரத்திலும், தவ்ராத்தை விளக்குவதிலும் துணையாக இருந்தார்கள்.

மூஸா நபிக்கு ஓர் ஆண்டுக்கு முன்னதாகக் காலஞ் சென்ற இவர்கள், மூஸா நபிக்கு ஓர் ஆண்டுக்கு முன்னதாகப் பிறந்தவர்கள், பேச்சு வன்மை மிக்க இந்த நபியின் உரையைக் கேட்கப் பெருங் கூட்டம் கூடும்.
இதுவரை கூறப்பட்ட நபிமார்கள் அனைவரும் அல்லாஹு தஆலாவினால் அறிவிக்கப்படும் கட்டளைகளை மக்களுக்கு உடனுக்குடன் அறிவித்து அவர்களை ஏகத்துவத்தின் பால் கொண்டு வெகுவாக முயற்சி செய்தனர். இதனால் பல வகையான துன்பங்களை அவர்கள் அனுபவித்தனர் ஆயினும், அவர்கள் பொறுமையைக் கடைப்பிடித்து நன்மைகளைே செய்தனர். இதனாலேயே இவர்களைக் குறித்து மேற்கண்ட வசனத்தில் இறுதியில் நன்மை செய்கிற இவர்களுக்கு நாம் நற்கூலி வழங்குகிறோம் என்று கூறப்பட்டிருக்கிறது

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 159
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 76)

وَزَكَرِيَّا وَيَحْيٰى وَعِيْسٰى وَاِلْيَاسَ كُلٌّ مِّنَ الصّٰلِحِيْنَۙ

இன்னும், ஜகரிய்யா, யஹ்யா, ஈஸா, இல்யாஸ் - இவர்கள் யாவரும் (நேர் வழிசார்ந்த) ஸாலிஹானவர்களில் நின்றுமுள்ளவர்களே.
(குர்ஆன் : 6:85)
وَاِسْمٰعِيْلَ وَالْيَسَعَ وَيُوْنُسَ وَلُوْطًا وَكُلًّا فَضَّلْنَا عَلَى الْعٰلَمِيْنَۙ

இன்னும் இஸ்மாயீல், அல்யஸவு, யூனுஸ், லூத் - இவர்கள் யாவரையும் உலகத்திலுள்ள அனைவரிலும் மேன்மையாக்கினோம். (குர்ஆன் : 6:86)
وَمِنْ اٰبَآٮِٕهِمْ وَذُرِّيّٰتِهِمْ وَاِخْوَانِهِمْ وَاجْتَبَيْنٰهُمْ وَهَدَيْنٰهُمْ اِلٰى صِرَاطٍ مُّسْتَقِيْمٍ

இவர்களுடைய மூதாதையர்களிலிருந்தும், இவர்களுடைய சந்ததிகளிலிருந்தும், இவர்களுடைய சகோதரர்களிலிருந்தும் (பலரை) நாம் தேர்ந்தெடுத்து, அவர்களை நேர் வழியில் செலுத்தினோம்.
(குர்ஆன் : 6:87)
(10) ஜகரிய்யா (அலை) (சகரியா), சுலைமான் நபி (அலை) அவர்களின் சந்ததியில் தோன்றிய இவர்களுக்கு சுமார் 93 ஆம் வயதில் 'யஹ்யா என்னும் ஒரு புதல்வர் பிறந்த வரலாறு சரித்திர பிரசித்தமாகும். விபரம் ஆல இம்ரான் அத்தியாயத்தின் வசனங்கள் 38.39ன் குறிப்புகளில் கூறப்பட்டுள்ளது.
இவர்கள் அல்லாஹ்வின் கட்டளைகளை நன்கு போதித்தார்கள். இதனை ஏற்காத விரோதி இவர்களை ரம்பத்தால் அறுத்துக் கொன்று விட்டனர்.
(11) யஹ்யா (அலை) (யோவான்) முன்னர் கூறப்பட்ட ஜகரிய்யா நபிக்கு அவர்களுடைய முதுமைக் காலத்தில் பிறந்தவரே 'யஹ்யா' ஆவார்.
ஒரு பெண்ணை ஓர் அதிகாரி தகாத முறையில் மணந்து கொண்டார். இவ்விவாகம் செல்லாது என்று யஹ்யா நபி கூறினார்கள். ஆனால், அந்த அதிகாரி அதனை ஏற்காமல் விவாகம் செல்லுமென்று தீர்ப்புக் கூறுமாறு யஹ்யா நபியை வற்புறுத்தினார். அவர்கள் அதனை ஏற்கவில்லை. சட்டம் என்னவோ அதையே வற்புறுத்தினார். இதனால் ஆத்திரமடைந்த அவ்வதிகாரியும் அவரைச் சார்ந்தோரும் யஹ்யா நபியைக் கொன்றுவிட்டனர்.
(2) ஈஸா (அலை) (இயேசு), மர்யமின் குமாரரரான ஈஸா நபி பற்றிய வரலாறு திருக்குர்ஆனில் பலவிடங்களில் கூறப்பட்டிருக்கிறது. அல்லாஹு தஆலாவின் சக்திக்கு ஒரு எடுத்துக்காட்டாக ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்கள், தந்தையின்றி பிறந்தார்கள். இவர்களைப் பற்றிய விளக்கமா வரலாறு-ஆல இம்ரான் அத்தியாயத்தில் வசனம் 3 முதல் 55 முடியவுள்ள வசனங்களின் குறிப்புகளில் கூறப்பட்டிருக்கிறது
சரித்திரப் பிரசித்தமான அந்த நபி, 'இன்ஜீல் எனும் வேதத்தைப் பெற்ற இறை தூதராக இருந்தார்கள். இஸ்ரவேல் மக்களை அல்லாஹுதஆலாவின் வழியில் கொண்டு வருவதற்க மிகுந்த முயற்சி எடுத்தார்கள். ஆயினும், யூதர்கள் இவர்கள் சம்பந்தமாக சதி செய்து கொன்றுவிட திட்டமிட்டனர் ஆனால் அல்லாஹுதஆலா இந்த நபியைக் காப்பாற்றிக் கொண்டான்.

(13) இல்யாஸ் (அலி) (எலியா). மூஸா நபிக்குப் பின்னர் இஸ்ரவேலர்கள் தவ்ராத் வேதப்படி நடக்காததால் அவர்களை திருத்தும் பொருட்டு நபிப்பட்டம் பெற்றவர்கள் இல்யாஸ் (அலை) அவர்களாவார் ஏகத்துவத்தை இஸ்ரவேலர்களுக் அழகாக இல்யாஸ் (அலை) எடுத்துக் கூறியும் அக் கூட்டத்தினர் ஏற்கவில்லை.
'பஅலபக்" நகர மன்னன், இலியாஸ் நபியைக் கொன்று விடத்
திட்டமிட்டான் ஆனால் அவனால் முடியவில்லை. இல்யாஸ் நபியோ ஏகத்துவப் பிரச்சாரம் செய்து கொண்டே இருந்து மறைந்தார்கள்.
இங்கு கூறப்பட்ட நபிமார்களில் ஒவ்வொருவரும் நல்லடியார்களின் குழுவைச்
சேர்ந்தவர்கள்.நன்மையானவற்றையே போதித்தனர் அல்லாஹ்வுக்கு இணக்கமான காரியங்களையே செய்து வந்தனர்.
இதே நற்காரியங்களிலும், ஏகத்துவம் பிரச்சாரத்திலும் இன்னும் சில நபிமார்கள் முழுமூச்சோடு ஈடுபட்டிருந்தனர் அவர்களாவன:
(14) இஸ்மாயீல் (அலை) (இஸ்ரவேல்) (கிமு 2070 - 1933) ஹஜ்ரத் இப்ராஹிம் நபிக்கும் அன்னை ஹாஜரா (ஆகார்)வுக்கும் புதல்வராகப் பிறந்தவர்களே ஹஜ்ரத் இஸ்மாயில் நபி(அலை) ஆவார்கள்.
இந்த நபியின் சந்ததியிலேயே இறுதி நபியான எம்பெருமானார் முஹம்மது [ஸல்) அவர்க தோன்றினார்கள். திரு மக்காவில் வசித்து வந்த இவர்கள், அல்லாஹ்வின் திருவீடாம் கஃபாவைப் புனரமைக்கும் பணியில் தங்களது தந்தையான ஹஜ்ரத் இப்ராஹிம் நபிக்கு உதவினார்கள்.
வாக்குறுதியை நிறைவேற்றுவதில் உண்மையாளர்." என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றவர் இஸ்மாயீல் என்பதாக திருக்குர்ஆனின் பிறிதோர் இடத்தில் கூறப்பட்டிருக்கிறது. இவர்களின் சந்ததியினர் பெரும் பாலர் அரபியர்கள்.
அல்லாஹுத ஆலாவின் அடியார்களை நேர்வழிக்கு கொண்டு வருவதிலேயே ஈடுபட்டிருந்த இந்த நபி அவர்கள் தங்களது 137ம் வயதில் உலகை நீத்தார்கள்.
(15) அல்யஸஉ (அலை)(எலிசா)- மூஸா நபியின்தவ்ராத் வேதத்தை இஸ்ரவேலர்களுக்கு விளக்கிக் காட்டி நேர்வழியில் கொணரும் பொருட்டு அனுப்பப்பட்ட நபியே இவர்கள். இதே பிரச்சாரத்திலேயே முழுவதும் ஈடுபட்டிருந்து காலஞ் சென்றார்கள்.
(16) யூனுஸ் (அலை) ( கிமு 781 - 741 ) மத்தாவின் குமாரரான இவர்கள், கி.மு.862ல் ஷாம் தேசத்தில் பிறந்தார்கள். மூலிலுக்குச் சமீபமான டைக்ரீஸ் நதிக்கரையிலுள்ள "நைனவா"என்னும் நகர வாசிகளைத் திருந்தி நேர்வழியில் கொண்டு வர முயன்றார்கள். ஆனால் அக்கூட்டத்தினர் திருந்தவில்லை. அக்கூட்டத்தினர் மீது வேதனை இறங்கி விடுமென்று எச்சரித்தும் வேதனை இறங்காததால் ஊருக்கு வெளியே சென்று கடலில் போய்க் கொண்டிருந்த கப்பலில் ஏறிக் கொண்டார்கள்
கப்பல் தத்தவித்த போது யூனுஸின் காரணத்தால் தான் இந்நிலை ஏற்பட்டிருக்கிறது என்ற முடிவில் கப்பலில் உள்ளவர்கள் அவரைக் கடலில் தள்ளி விட்டனர். ஒரு மீன் அவர்களை விழுங்கி விட்டது. அதன் வயிற்றிலிருந்து இறைவனைத் துதித்தார்கள். இறைவன் அவர்களைக் காப்பாற்றினான். அதனால் மீன் அவர்களைக் கரையில் கொண்டு வந்து சுக்கிற்று பின்னர் தமது கூட்டத்தினரிடம் சென்று அவர்களுக்குத் தங்களது வாழ்நாள் முழுவதும் நேர்வழியைக் காட்டி இறுதியில் காலம் சென்றார்கள்.
(17) லூத்(அலை) (லோத்து) ( கிமு 2061 )இப்ராஹீம் நபியுடைய சகோதரரின் குமாரரே லூத் தபியாவார்கள். ஷாம் தேசத்தின் எல்லையிலுள்ள "ஸதூம் நகர மக்கள் அருவருப்பான கெடுதியான ஆண் புணர்ச்சிகளைச் செய்து கொண்டிருந்தனர். அவர்களைத் திருத்தும் பொருட்டு இவர்கள் அங்கு நபியாக அனுப்பப்பட்டார்கள். ஆனால் எவ்வளவு கூறியும் அக்கூட்டத்தினர் திருந்தவில்லை. முடிவில் அக்கூட்டத்தினர் வாழ்ந்த ஸதூம் நகர் தலைகீழாகப் புரட்டி அடிக்கப்பட்டு அவர்கள் அழிக்கப்பட்ட வரலாறு பிரபலமானது.
இந்த வேதனை இறக்கப்படுவதற்கு முன்னரே லூத் நபியும், அவர்களை விசுவாசம் கொண்ட சிவரும் ஊரை விட்டு வெளியேறி விடுமாறு அறிவிக்கப்பட்டிருந்தனர். அதன்படி அவர்கள் வெளியேறி விட்டார்கள்.

இதுவரை ஸஜ்ரத் இப்ராஹீம் நபி உட்பட 18 நபிமார்கள் இங்குள்ள 4 வசனங்களிலும் பெயர் அறிவிக்கப்படுகின்றனர். இவர்கள் அனைவரும் சிறப்பிக்கப்பட்டவர்கள். இக் கருத்தைக் குறித்தே 86 வசனத்தின் இறுதியில் இவர்களில் இவ்வொருவரையும் உலகினர் அனைவரையும் விட பலவகையிலும் மேன்மையாக்கி வைத்தோம் எனக் கூறப்படுகிறது.
மொத்தம் நபிமார்கள் ஓர் இலட்சத்து இருபத்தி நான்காயிரம் ஆவார்கள்.அவர்களில் 313 பேர்கள் ரசூல்மார்கள் ஆவார் எனப் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (அல்ஹதீது) ஹஜ்ரத் அபூதர் (ரலி) நூல்: முஸ்னத் இமாம் அஹ்மது)
இந்த நபிமார்களில் 25 பேர் திருக்குர்ஆனில் கூறப்பட்டிருக்கின்றனர். அவர்களில் 18 பேர்கள் இங்குள்ள வசனங்களில் கூறப்பட்டிருக்கிறார்கள். இவர்களன்றி மற்றையோர் திருக்குர்ஆனின் இதர இடங்களில் கூறப்பட்டுள்ளனர். அவர்கள் ஆதம் (அலை), இத்ரீஸ் ( அலை), ஷுஐப்(அலை), ஸாலிஹ் (அலை), ஹூத்(அலை), துல்கிப்லு(அலை) இறுதி நபியாம் ஹஜ்ரத் முஹம்ம (ஸல்) ஆகிய ஏழு நபிமார்கள்.
இந்த நபிமார்களின் வரலாற்றினை நோக்கும் பொழுது இதர நபிமார்கள், இந்த நபிமார்களின் மக்களாகவோ, சந்ததியினராகவோ, உறவினர்களாகவோ இருக்கின்றனர்.
இதனைக் குறிப்பிட்டே இங்குள்ள வசனம்87ல் இவர்களுடைய மூதாதையரிலிருந்து இவர்களின் சந்ததிகளிலிருந்தும் இவர்களுடைய சகோதரர்களிலிருந்தும் சிலரை நாம் மேன்மையாக்கி நபித்துவத்தையும் அவர்களுக்குக் கொடுத்து மற்றையோரை விட அவர்களை உயர்வானவர்களாக நாம் தேர்ந்தெடுத்துக் கொணடோம்.
உண்மையான மார்க்கத்தை அவர்களும் கடைப்பிடித்து மற்றையோருக்கும் அவர்கள் அதனை எடுத்துரைக்கும் பொருட்டு அவர்களை நேரான வழியிலும் நாம் நடத்தினோம் என கூறப்படுகிறது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 160
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 77)

ذٰ لِكَ هُدَى اللّٰهِ يَهْدِىْ بِهٖ مَنْ يَّشَآءُ مِنْ عِبَادِهٖ‌ وَلَوْ اَشْرَكُوْا لَحَبِطَ عَنْهُمْ مَّا كَانُوْا يَعْمَلُوْنَ
இதுவே அல்லாஹ்வின் நேர் வழியாகும், தன் அடியார்களில் அவன் யாரை விரும்புகிறானோ, அவர்களுக்கு இதன்மூலம் நேர்வழி காட்டுகிறான்; (பின்னர்) அவர்கள் இணைவைப்பார்களானால், அவர்கள் செய்து வந்ததெல்லாம், அவர்களை விட்டு அழிந்துவிடும்.
(குர்ஆன் : 6:88)
முற்கூறப்பட்ட நேர்வழியென்பது மனிதன் சுயமாக ஆராய்ந்து உண்டு பண்ணிக்கொண்டதல்ல, அது அல்லாஹ்வினால் அருளப்பட்ட அவனுடைய நேர்வழியாகும். அதில் செல்வதற்குத் தகுதியுடையவர் யார் என்பது அவனுக்கே தெரியும். ஆகவே, அவன் தனது அடியார்களில் தான் நாடியவரை அந்த நேர்வழியில் நடத்துகிறான். அப்பொழுது அவர்கள் அவ்வழி சென்று மேன்மை அடைகின்றனர்.
இதனை உணராத சிலர், மனம் போனவாறெல்லாம் செல்கின்றனர். முடிவில் அல்லாஹ்வின் மீதே நம்பிக்கை இழந்து விடுகின்றனர். அல்லது அவனுக்குப் பலவற்றையும் இணையாக்க ஆரம்பித்து விடுகின்றனர். அவ்வாறு அவர்கள் இணை வைத்தார்களாயின், அவர்கள் முன்னர் செய்து கொண்டிருந்த நன்மைகள் அனைத்தும் அழிந்து விடும். அப்பொழுது அவர்கள் எந்த நன்மையுமற்று நிர்க்கதியாகி விடுவர்.
இந்த நிலை ஏற்படாமலிருப்பதற்காகவே நபிமார்கள் காட்டிய நேர்வழிகள் எல்லாம் எடுத்துரைக்கப்படுகின்றன. அவர்களில் முக்கியமான பதினெட்டு நபிமார்கள் பற்றி முன்னருள்ள வசனங்களில் கூறப்பட்டது. அவர்கள் சாமானிய மானவர்களல்லர்.
இணை கற்பித்தால் நற்செயல்கள் அழியும்

"அவர்கள் இணை கற்பித்தால் அவர்கள் புரிகின்ற (நற்)செயல்கள் அவர்களிடமிருந்து நிச்சயமாக அழிந்து போகும்" என்று அந்த வசனத்தில் அல்லாஹ் தெரிவிக்கின்றான். இது, இணை கற்பிப்பதன் கடுமையையும் மோசமான விளைவுகளையும் சுட்டிக்காட்டி, அதைச் செய்வது பெரும் பாவமாகும் என்பதை உணர்த்துகின்றது. மற்றொரு வசனத்தில், நீர் இணை கற்பித்தால் நிச்சயமாக உமது (நற்) செயல் அழிந்துவிடும். நிச்சயமாக நீர் இழப்புக்குள்ளானவர்களில் ஒருவராக ஆகிவிடுவீர் என்று (நபியே) உமக்கும் உமக்கு முன்னுள்ளவர்களான இறைத் தூதர்களுக்கும் வேத அறிவிப்புச் செய்யப்பட்டுள்ளது" குர்ஆன் (39:65) என்று அல்லாஹ் கூறுகின்றான். இங்கு இணை கற்பித்தால்' என்பது சார்பு நிலைச் சொற்றொடரே தவிர, அவர்கள் இணை கற்பித்தார்கள் என்பது இதன் பொருளாகாது. ஒன்றைச் சார்பு நிலையாகச் சொல்லும்போது, அது நிகழக்கூடும் என எடுத்துக் கொள்ளக் கூடாது. இதே கருத்தை வேறுசில வசனங்களிலும் காணலாம்.
அளவற்ற அருளாளனாகிய இறைவனுக்கு மகன் இருந்தால் (அவரை) வழிபடுபவர்களில் நானே முதல் ஆளாக இருப்பேன் என்று (நபியே!) நீர் கூறுவீராக. குர்ஆன் (43:80)
நாம் கேளிக்கையை உருவாக்க விரும்பியிருந்தால் அதை நம்மிடமிருந்தே ஏற்படுத்தியிருப்போம். குர்ஆன் (21:17)
அல்லாஹ் மகனை (தனக்கு) ஏற்படுத்திக் கொள்ள விரும்பியிருந்தால், தான் படைத்தவற்றிலிருந்து தான் நாடுவதை அவன் தேர்ந்தெடுத்திருப்பான். அவன் தூயவன். அதிகாரமிக்க ஏகனாகிய அவனே அல்லாஹ் குர்ஆன் (39: 4)
படம் : மக்கா, மதீனா ஆகிய இரு புனிதத் தளங்களுக்கான அமைச்சின் தலைவரும் பிரதம இமாம்களில் ஒருவருமான அப்துர் ரஹ்மான் அஸ்சுதைஸ் தலைமையில் கஃபாவின் மகாம் இப்றாஹீம், ஹஜருல் அஸ்வத் மற்றும் கஃபாவின் முக்கிய பகுதிகள் கழுவி நறுமணம் பூசுதல்

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 161
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 78)

أُولَٰئِكَ الَّذِينَ آتَيْنَاهُمُ الْكِتَابَ وَالْحُكْمَ وَالنُّبُوَّةَ ۚ فَإِنْ يَكْفُرْ بِهَا هَٰؤُلَاءِ فَقَدْ وَكَّلْنَا بِهَا قَوْمًا لَيْسُوا بِهَا بِكَافِرِينَ

அவர்கள் எத்தகையவர்களௌனில், அவர்களுக்கு வேதத்தையும் (மார்க்கச்) சட்டத்தையும், நபித்துவத்தையும் நாம் கொடுத்துள்ளோம். ஆகவே, இவற்றை (இஸ்லாமிய விரோதிகளான) இக் கூட்டத்தினர் நிராகரிப்பாராயின், அப்பொழுது இவற்றி(னை ஏற்பத)ற்காக இவற்றை நிராகரிக்காத (வேறு) ஒருகூட்டத்தினரை நாம்நிச்சயமாக ஏற்படுத்துவோம். (குர்ஆன் : 6:89)
மேற்கண்ட நபிமார்கள் அனைவருக்கும் வேதத்தையும், சட்டத்தையும், நபித்துவத்தையும் நாம் கொடுத்துள்ளோம். இம்மூன்றினையும் தான் இஸ்லாமிய விரோதிகள் நிராகரிக்கின்றனர்.ஆகவே இவற்றை இக் கூட்டத்தினர் நிராகரிப்பாராயின், இவர்கள் மீது நடவடிக்கை எடுத்து இவர்களை அழித்து விட்டு இவர்களுக்குப் பதிலாக வேறு ஒரு கூட்டத்தினரை நாம் ஏற்படுத்துவோம்.
அவர்கள் நபிமார்களுக்கு அருளப்பட்ட நபித்துவம், வேதம், சட்டம், ஆகியவற்றினை நிராகரிக்க மாட்டார்கள் என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.
இதற்கு ஆதாரமாக மக்கத்து எதிரிகள் இஸ்லாத்தை நிராகரித்ததையும், மதீனா வாசிகளான அன்ஸார்கள் அதற்கு ஆதரவு தந்து பலப்படுத்தியதையும் உதாரணமாக கொள்ளலாம்.
அல்லாஹ் சுப்ஹானல்லாஹு வதஆலா நமக்கு செய்த மாபெரும் அருள், நமக்கு கொடுத்து இருக்கக்கூடிய அவனுடைய மாபெரும் அருட்கொடை, இந்த இஸ்லாமிய மார்க்கத்தில் நம்மை பிறக்க வைத்து இருப்பது; நம்மை முஸ்லிம்களாக அல்லாஹு தஆலா படைத்திருப்பது.

உலகத்தில் எத்தனையோ பாக்கியங்கள், எத்தனையோ அருட்கொடைகள் இருக்கின்றன. ஆனால் உண்மையில் இந்த அருட்கொடைகள் இவ்வுலகத்தினுடைய மறு உலகத்தினுடைய வெற்றி இஸ்லாமில் மட்டும்தான் இருக்கின்றது. அல்லாஹ்வுடைய இறைநம்பிக்கையில் மட்டும்தான் இருக்கின்றது.
இந்த இஸ்லாம் இந்த ஈமான் ஒருவருக்கு கிடைப்பது அல்லாஹு தஆலா அவன் மீது செய்யக்கூடிய மிகப்பெரிய ஒரு கிருபை ஆகும்.
அல்லாஹு தஆலா தன் திருமறையில் சொல்கின்றான்;
فَمَنْ يُرِدِ اللَّهُ أَنْ يَهْدِيَهُ يَشْرَحْ صَدْرَهُ لِلْإِسْلَامِ وَمَنْ يُرِدْ أَنْ يُضِلَّهُ يَجْعَلْ صَدْرَهُ ضَيِّقًا حَرَجًا كَأَنَّمَا يَصَّعَّدُ فِي السَّمَاءِ كَذَٰلِكَ يَجْعَلُ اللَّهُ الرِّجْسَ عَلَى الَّذِينَ لَا يُؤْمِنُونَ
யாருக்கு அல்லாஹ் நேர்வழி காட்ட விரும்புகிறானோ, அவனுக்கு இஸ்லாமின் விளக்கத்தை தருகின்றான். யாரை அல்லாஹ் வழிகேட்டில் விட்டு விட நினைக்கிறானோ அவனுடைய உள்ளத்தை அல்லாஹ் நெருக்கடியில் ஆக்கி விடுகின்றான்.
உண்மையை ஏற்றுக் கொள்வது அவருக்கு எந்த அளவு சிரமமாகத் தோன்றும் என்றால், வானத்திலே எதுவுமில்லாமல் ஏறு! என்று சொன்னால்,எந்த அளவு சிரமமாக இருக்குமோ அந்த அளவுக்கு உண்மையை ஏற்றுக் கொள்வது சிரமமாக இருக்கும். இப்படித்தான் அசுத்தத்தை அறிவற்ற மக்களின் மீது அல்லாஹ் ஆக்கி விடுகின்றான். (குர்ஆன் 6 : 125)
அதாவது ஈமானை சுத்தம் என்பதாகவும், குஃப்ரையும் ஷிர்க்கையும் அல்லாஹு ரப்புல் ஆலமீன் அசுத்தம் என்பதாக குறிப்பிடுகின்றான்.
யாருக்கு இறைநம்பிக்கை, இஸ்லாமுடைய வாய்ப்பு கிடைத்ததோ, அவர்களை அறிவுள்ளவர்கள் என்பதாக அல்லாஹ் ரப்புல் ஆலமீன் புகழ்ந்து சொல்கின்றான். யாருக்கு இஸ்லாமுடைய வாய்ப்பு கிடைக்கவில்லையோ, இறைநம்பிக்கையுடைய வாய்ப்பு கிடைக்கவில்லையோ, யார் அல்லாஹ்வை தெரிந்து கொள்ளவில்லையோ, மறுமையை தெரிந்து கொள்ளவில்லையோ, சொர்க்கம் நரகத்தை புரிந்து கொள்ளவில்லையோ, அவர்களைப் பற்றி அல்லாஹ் ரப்புல் ஆலமீன் பல இடங்களிலே மிக கேவலமாகவும் சொல்கின்றான்.
ஆகவே, நபிமார்கள் அனைவரும் உலக மக்களை நேர்வழியில் நடத்துவதற்கே அனுப்பப்பட்டிருக்கின்றனர். அவர்கள் உபதேசித்த வழிதான் நேர்வழியாகும். அதனையே பின்பற்றுதல் ஒவ்வொருவர் மீதும் அத்தியாவசியமாகும்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 162**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 79)**

اُولٰٓٮِٕكَ الَّذِيْنَ هَدَى اللّٰهُ فَبِهُدٰٮهُمُ اقْتَدِهْ‌ قُلْ لَّاۤ اَسْـَٔـلُكُمْ عَلَيْهِ اَجْرًا‌ اِنْ هُوَ اِلَّا ذِكْرٰى لِلْعٰلَمِيْنَ
( நபிமார்களாகிய ) இவர்கள் யாவரையும் அல்லாஹ் நேர்வழியில் செலுத்தினான்; ஆதலால், இவர்களுடைய நேர்வழியையே நீரும் பின்பற்றுவீராக; “இதற்காக நாம் உங்களிடம் எவ்வித பிரதிபலனையும் கேட்கவில்லை; இது (இக்குர்ஆன்) உலக மக்கள் யாவருக்கும் நல்லுபதேசமேயன்றி வேறில்லை” என்றுங் கூறுவீராக. (குர்ஆன் : 6:90)
فَبِهُدٰٮهُمُ
ஆகவே, அவர்களது நேர்வழியை என்பது முன்னாள் கூறப்பட்டுள்ள ஆயத்துகளில் சொல்லப்பட்ட 18 நபிமார்கள் அல்லாஹ்வைக் கொண்டு ஈமான் கொள்ளல், ஓர்இறை வணக்கம், சன்மார்க்கத்தின் அடிப்படையான திட்டங்கள் ஆகியவற்றில் அவர்கள் சென்ற வழி என்பது கருத்து. அவர்களது ஷரீஅத்துகள் என்று கருத்து கொள்ளலாகாது. ஏனெனில், ஷரீஅத்துக்கள் ஒவ்வொன்றும் நபிமார்களில் ஒவ்வொருவராலும் மாற்றப்பட்டு வந்திருக்கின்றது. ஆகவே, ஷரீஅத்துகள் அந்தந்த நபிமார்களது காலத்தில் வழிகாட்டிகளாக இருந்தாலும், அவைகள் மாற்றப்பட்ட பிறகு வழிகாட்டிகளாக இருப்பதில்லை.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எல்லா நபிமார்களிலும் சிறந்தவர்கள் என்பதற்கு இந்த ஆயத்து ஆதாரமாக இருக்கிறது என்று சில அறிஞர்கள் கூறி இருக்கிறார்கள்.
முற்காலத்து நபிமார்கள் ஒவ்வொருவரிடத்திலும் சிறந்த அம்சங்கள் யாவும் ஒருங்கே அமைந்திருக்கவில்லை. ஒவ்வொருவரிடமும் ஒரு அம்சமிருந்தது.
ஹளரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களும். சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களும் நன்றியறிதலுள்ளவர்களாக இருந்தார்கள். இவ்விருவரிடமும் இந்த அம்சங்கள் மிகைத்திருந்தன.
ஹளரத் அய்யூபு அலைஹிஸ்ஸலாம், ஹளரத் யூசுஃப் அலைஹிஸ்ஸலாம் ஆகிய இருவர்களிடம் கஷ்டங்களைச் சகித்துக் கொள்ளும் தன்மை மிகைத்திருந்தன.
ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் விவேகமும், எதிரிகளை மடக்கும்படியான அற்புதச் செய்கைகளும் இருந்தன.
ஹளரத் ஜக்கரிய்யா அலைஹிஸ்ஸலாம், யஹ்யா அலைஹிஸ்ஸலாம், ஈஸா அலைஹிஸ்ஸலாம், இல்யாஸ் அலைஹிஸ்ஸலாம் ஆகியவர்களிடம் துறவு (சூஃபித் தன்மை) அதிகமாக இருந்தது.
ஹளரத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் உண்மை மிளிர்ந்து கொண்டிருந்தது.
இத்தன்மைகள் எல்லாம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஒருங்கே அமைந்திருந்தன.
இதற்குக் காரணம் இந்த ஆயத்தில் சொல்லப்பட்டபடி இவர்கள் எல்லோருடையவும் வழியை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பின்பற்றியதேயாகும்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 163
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 80)

وَمَا قَدَرُوا اللّٰهَ حَقَّ قَدْرِهٖۤ اِذْ قَالُوْا مَاۤ اَنْزَلَ اللّٰهُ عَلٰى بَشَرٍ مِّنْ شَىْءٍ قُلْ مَنْ اَنْزَلَ الْـكِتٰبَ الَّذِىْ جَآءَ بِهٖ مُوْسٰى نُوْرًا وَّ هُدًى لِّلنَّاسِ تَجْعَلُوْنَهٗ قَرَاطِيْسَ تُبْدُوْنَهَا وَتُخْفُوْنَ كَثِيْرًا‌ وَعُلِّمْتُمْ مَّا لَمْ تَعْلَمُوْۤا اَنْتُمْ وَلَاۤ اٰبَآؤُكُمْ‌ قُلِ اللّٰهُ‌ ثُمَّ ذَرْهُمْ فِىْ خَوْضِهِمْ يَلْعَبُوْنَ

இவர்கள் அல்லாஹ்வை மதிக்க வேண்டிய முறையில் மதிக்கவில்லை; ஏனெனில் அவர்கள், “அல்லாஹ் எந்த ஒரு மனிதர் மீதும் எ(ந்த வேதத்)தையும் இறக்கவில்லை” என்று கூறுகின்றனர்;
அவர்களிடத்தில் நீர் கூறும்: “பிரகாசமானதாகவும், மனிதர்களுக்கு வழிகாட்டியாகவும் மூஸா கொண்டுவந்தாரே அந்த வேதத்தை இறக்கியவன் யார்? அதனை நீங்கள் தனித்தனி ஏடுகளாக ஆக்கி, அவற்றில் சிலவற்றை வெளிப்படுத்துகிறீர்கள்; பெரும்பாலானவற்றை மறைத்தும் விடுகிறீர்கள்; (அவ்வேதத்தின் மூலமாகவே) நீங்களும் உங்கள் மூதாதையர்களும் அறியாமல் இருந்தவைகளையெல்லாம் கற்றுக்கொடுக்கப்பட்டீர்கள்.” :
(நபியே! மேலும்) நீர் கூறுவீராக: “அல்லாஹ்தான் (அதை இறக்கிவைத்தான்)” பின்பு அவர்களைத் தம் வீணான (தர்க்கத்)தில் விளையாடிக்கொண்டிருக்குமாறு விட்டுவிடுவீராக. (குர்ஆன் : 6:91)
வசனத்தின் விளக்கவுரை :- யூதர்களிலுள்ள மார்க்க அறிஞர்களான மாலிக் பின் ஸைஃப் என ஒருவர் இருந்தார். இவர் யூதர்களுக்குப் பிரதமத் தலைவர். இவர் தமது தோழர்களில் பலரை அழைத்துக் கொண்டு, திருமக்காவிலிருந்த நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தார். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் பல விஷயங்களைக் கேட்டு மடக்க வேண்டும் என்பது அவருடையவும் அவரது தோழர்களுடையவும் எண்ணம்.
ஆனால்,மாலிக் பின் ஸைஃப் நன்கு தடித்துக் கொளுத்தவர். அவர் திருமக்கா வந்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பார்க்கிறார்.
மாலிக் பின் ஸைஃப் நோக்கி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "மூஸாவிற்கு தவ்ராத் வேதத்தை இறக்கியவன் மீது ஆணையாக உன்னைக் கேட்கிறேன். நன்கு கொளுத்த யூதப் பாதிரியின் மீது அல்லாஹ்

கோபமடைகின்றான் என்பதாக அவ்வேதத்தில் (தவ்ராத்தில்) இருப்பதை நீர் பார்த்திருக்கிறீரா?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர் “ஆம்' என்று கூறினார்.
உடனே, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "நீர் நன்கு கொளுத்த பாதிரியாயிருக்கிறீர். யூதர்கள் உமக்களித்த தீவனங்களினால் நீர் கொளுத்திருக்கிறீர். மேலும் நீர் நோன்பும் நோற்கவில்லை" என்று கூறினார்கள்.
இதனைக் கேட்டவுடன், அவருடன் வந்திருந்த மற்ற ஜனங்கள் சிரித்தனர்.
மாலிக் பின் ஸைஃப் வெட்கமடைந்தார். பின் கோபத்தில் "எந்த மனிதன் மீதும் அல்லாஹ் எதையும் இறக்கவில்லை" என்று கூறினார்.
பிறகு அவர் தமது சமூகத்தாரிடம் திரும்ப வந்தபோது அவருடைய சமூகத்தினர் அவரை நோக்கி "உம்மைப் பற்றி எங்களுக்குக் கிடைத்த விஷயத்தைக் குறித்து என்ன கூறுகிறீர்? மூஸாவுக்கு அல்லாஹு தஆலா தவ்ராத்தை இறக்கினான் என்பது உண்மை இல்லையா? நீர் ஏன் அவ்வாறு கூறினீர்?" என்று வினவினர்.
அதற்கவர் "முஹம்மது எனக்குக் கோபமூட்டினார். அதற்காக நான் அவரிடம் அப்படிக் கூறினேன்" என்று சமாதானம் கூறினார்.
இவரது சமாதானத்தை அவர்கள் அங்கீகரிக்காமல் "நீர் கோபமடைந்து விட்டால், அல்லாஹுத்தஆலாவின் மீது பொய்யைக் கூறி, உமது மார்க்கத்தை நீர் விட்டு விடுகிறீர்" என்று கூறி,
அவரைத் தலைமைப் பதவியிலிருந்தும், பாதிரி வேலையிலிருந்தும் நீக்கிவிட்டு, அவ்விரு அந்தஸ்துகளையும் கஅபு பின் அஷ்ரஃபுக்குக் கொடுத்தனர். அப்போது இந்த வசனம் அருளப்பட்டது.
"பெரும்பாலானதை நீங்கள் மறைத்து விடுகிறீர்கள்" என்று கூறியது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும், இதர பல விஷயங்களையும் குறித்து தவ்ராத் வேதத்தில் முன்னறிக்கையாகச் சொல்லப்பட்ட விஷயங்களை யூதப் பாதிரிமார்கள் வெளியிடாமல் மறைத்துக் கொண்டிருந்தனர். இவ்வாறு அவர்கள் மறைத்துக் கொண்டிருந்ததைக் குறிக்கிறது.
"அவர்கள் விளையாட அவர்களை விட்டு விடும் " என்பதற்கு உண்மையாகவே யூதர்கள் விளையாடிக் கொண்டிருக்கவில்லை. வீணான ஒரு காரியத்தில் அனாவசியமாக நுழைபவர்களை 'விளையாடுபவர்கள்" என்று கூறுவது வழக்கம். இவ்வழக்கத்தை யொட்டி இங்கு சொல்லப் பட்டிருக்கிறது.
ஆகவே, அவர்கள் பிரயோஜனமில்லாமல் வீணான காரியத்தில் பிரவேசித்திருக்கிறார்கள் என்பது இதிலிருந்து விளங்குகிறது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 164
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 81)

وَهٰذَا كِتٰبٌ اَنْزَلْنٰهُ مُبٰرَكٌ مُّصَدِّقُ الَّذِىْ بَيْنَ يَدَيْهِ وَلِتُنْذِرَ اُمَّ الْقُرٰى وَمَنْ حَوْلَـهَا وَالَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِالْاٰخِرَةِ يُؤْمِنُوْنَ بِهٖ وَهُمْ عَلٰى صَلَاتِهِمْ يُحَافِظُوْنَ
இந்த வேதத்தை - அபிவிருத்தி நிறைந்ததாகவும், இதற்குமுன் வந்த (வேதங்களை) மெய்ப்படுத்துவதாகவும் நாம் இறக்கி வைத்துள்ளோம்; (இதைக்கொண்டு) நீர் (நகரங்களின் தாயாகிய) மக்காவில் உள்ளவர்களையும், அதனைச் சுற்றியுள்ளவர்களையும் எச்சரிக்கை செய்வதற்காகவும், (நாம் இதனை அருளினோம்.) எவர்கள் மறுமையை நம்புகிறார்களோ அவர்கள் இதை நம்புவார்கள். இன்னும் அவர்கள் தொழுகையைப் பேணுவார்கள் (குர்ஆன் : 6:92)
அச்சமூட்டி எச்சரிப்பத் மறுமை நாளை விசுவாசம் கொள்கின்ற வர்கள் இதனையும் விசுவாசம் கொள்வார்கள். அவர்கள் தங்களுடைய தொழுகைகளை (விடாமல் தொழுவதன் பேணுவார்கள்.
வசன விளக்கம்

"முபாரக்குன்" அதாவது மிகுந்த பரக்கத்துள்ளது என்பதற்கு அதிகப் பிரயோஜனமுள்ளது என்பது கருத்து. தவிர திருக்குர்ஆன் அறிவு சம்பந்தமான கல்விகளும், அவயவங்கள் சம்பந்தமான கிரியைகளைப் பற்றிய விபரங்களும் அடங்கியது.
அறிவு சம்பந்தமான கல்விகளில் அல்லாஹுத்தஆலாவின் தாத்து, ஸிஃபாத்து, அஃப்ஆல்களைக் குறித்த மஅரிஃபா (ஞானம்) வைப் பார்க்கினும் சிறந்த கல்வி வேறொன்று மில்லை. இவ்விஷயத்தில் திருக்குர்ஆன் மக்களுக்கு எவ்வளவு பயன்பட்டிருக்கிறதோ அவ்வளவு பிரயோஜனத்தை வேறு எந்த கிரந்தமும் செய்யவில்லை.
கிரியை சம்பந்தமானவைகள் இரு வகை. ஒன்று இப்புற அவயவங்கள் சம்பந்தப்பட்டது. மற்றொன்று அக அவயவங்கள் இருதயம் சம்பந்தப்பட்டது.இந்த இரண்டிற்குந்தான் அக்லாக் (ஒழுக்கம் ) தஜ்கியத்துன்னஃப்ஸ் (அகத்தூய்மை)என்று பெயர். இவ்விரண்டையும் குறித்துத் திருக்குர்ஆன் விளக்கி இருப்பதைப் போல் வேறு எந்த நூலும் விளக்கவில்லை.
உம்முல்குரா - தாய் நாடு
" உம்மூல் குரா" என்பது திருமக்கமா நகரம். ஆதியில் பூமி உண்டான போது மக்கமா நகரம் இருக்குமிடம்தான் முதலாவதாக உண்டாயிற்று. அப்புறம் மற்றைய பூமிகளெல்லாம் உண்டாயின. ஆகவே, அது பூமிக்குத் தாயாக இருப்பதால் அதற்கு “உம்முல் குரா" அதாவது நகரங்களின் தாய் என்ற பெயர் வந்தது.
'இன்னும் அதனைச் சுற்றியுள்ளவர்' என்பதற்கு உலகிலுள்ள எல்லா மனிதர்களும் என்பது கருத்து, ஏனெனில். ஆரம்பத்தில் திருமக்கா உண்டாயிற்று. அப்புறம் அதனைச் சுற்றிலும் ஏனைய நகரங்களும். கிராமங்களும் தோன்றின. ஆதலால். இவ்வார்த்தைகள் உலகிலுள்ள எல்லா மனிதர்களையும் குறிக்கின்றன.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 165
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 82)

وَمَنْ اَظْلَمُ مِمَّنِ افْتَـرٰى عَلَى اللّٰهِ كَذِبًا اَوْ قَالَ اُوْحِىَ اِلَىَّ وَلَمْ يُوْحَ اِلَيْهِ شَىْءٌ وَّمَنْ قَالَ سَاُنْزِلُ مِثْلَ مَاۤ اَنْزَلَ اللّٰهُ‌ ؕ وَلَوْ تَرٰۤى اِذِ الظّٰلِمُوْنَ فِىْ غَمَرٰتِ الْمَوْتِ وَالْمَلٰۤٮِٕكَةُ بَاسِطُوْۤا اَيْدِيْهِمْ‌ ۚ اَخْرِجُوْۤا اَنْفُسَكُمُ‌ ؕ اَلْيَوْمَ تُجْزَوْنَ عَذَابَ الْهُوْنِ بِمَا كُنْتُمْ تَقُوْلُوْنَ عَلَى اللّٰهِ غَيْرَ الْحَـقِّ وَكُنْتُمْ عَنْ اٰيٰتِهٖ تَسْتَكْبِرُوْنَ

மேலும், அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக் கட்டியவனை அல்லது அவனுக்கு எதுவும் வஹி அறிவிக்கப்படாமல் இருக்கிற நிலையில் எனக்கு வஹி அறிவிக்கப்படுகிறது என்று கூறியவனை விட இன்னும், அல்லாஹ் இறக்கி வைத்ததைப் போல் நானும் விரைவில் இறக்கி வைப்பேன் என்று சொன்னவனைப் பார்க்கினும் அநியாயக்காரன் யார் ?
மேலும், அநியாயக்காரர்கள் மரணத்தின் வேதனைகளில் இருக்கும் போது, நீர் பார்ப்பீராயின் மலக்குகள் (அவர்களது ஆன்மாக்களைக் கைப்பற்ற) தங்களுடைய கைகளை நீட்டியவர்களாக "உங்கள் உயிர்களை வெளியேற்றுங்கள். அல்லாஹ்வின் மீது உண்மையல்லாததை நீங்கள் கூறிக் கொண்டு நீங்கள் இருந்ததனாலும், அவனுடைய ஆயத்துகளை (ஈமான் கொள்ள மறுத்துப்) பெருமையடித்துக் கொண்டும் நீங்கள் இருந்ததனாலும், இன்றைய தினம் இழிவுமிக்க வேதனையை நீங்கள் (கூலியாக) கொடுக்கப்படுவீர்கள்' (என்று கூறுவதைக் காண்பீர்) (குர்ஆன் : 6:93)
முஸைலமாவின் முழுப்பெயர் அபூஸுமாமா பின் ஹபீப் பனூ உஸால் அல்லது பனூ ஹனீஃபா கூட்டத்தைச் சேர்ந்தவன். யமன் நாட்டைச் சேர்ந்த "முஸைலமத்துல் கத்தாப்" என்பவன் தனக்கு நபித்துவம் வருவதாக தாவாச் செய்ததுடன், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் தமக்கு ஈமான் கொண்டுள்ள இரண்டு பேரை தூது அனுப்பினான்.
அவ்விருவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்தபோது, அவ்விருவரையும் நோக்கி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "முஸைலமா நபியென்பதாக நீங்கள் இருவரும் சாட்சியங் கூறுகிறீர்களா?" என்று வினவினார்கள்.

அதற்கு, அவ்விருவரும் "ஆம்" என்று பதிற் கூறினர். அப்பொழுது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவ்விருவரையும் நோக்கி "தூதுவர்களைக் கொல்லக்கூடாது என்ற நியதி இல்லலாதிருப்பின், உங்களிருவரின் கழுத்துகளை நான் வெட்டி இருப்பேன் " என்று கூறி, அவ்விருவரையும் அனுப்பி விட்டார்கள். யமன் நாட்டைச் சேர்ந்த ஸன்ஆ என்ற ஊரில் "அஸ்வதும் அபஸீ" என்றொருவன் இருந்தான். அவனும் தனக்கு நபித்துவம் இருப்பதாக தாவாச் செய்தான். சஹீக் ஷரீக் என்று இருவானவர்கள் தன்னிடம் வந்து பேசுவதாக அவன் சொல்லிக் கொண்டான். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நோய் வாய்ப்பட்டிருந்தபோது பைரோஸுத்தைலமீ என்பவர் இவனைக் கொன்றார். இவன் கொலை செய்யப்பட்டான் என்ற செய்தி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு எட்டிய போது "பைரோஸ் வெற்றி பெற்றார்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

முஸைலமத்துல் கத்தாபு ஹளரத் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் கலீஃபாவாக இருந்த காலத்தில் வஹ்ஷீ ரலியல்லாஹுதஆலா அன்ஹு என்பவரால் கொல்லப்பட்டான்.
இவ்விருவரையும் குறித்துப் பெருமானார் (ஸல்) அவர்கள் அறிவிக்கையில்,
"ஒரு நாள் நான் தூங்கிக் கொண்டிருந்தபொழுது இவ்வாறு கனவு காண்கின்றேன்; பூமியின் பொக்கிஷங்கள் அனைத்தும் என்னிடம் கொடுக்கப்படுகின்றன; அடுத்து தங்கத்தினாலான இரு காப்புகள் எனது இரு கரங்களில், வைக்கப்படுகின்றன; அவையிரண்டும் பெரியனவாகவும், முக்கியமானவையாயும் எனக்குத் தோன்றுகின்றன; அப்பொழுது அவ்விரண்டினையும் ஊதி விடுமாறு எனக்கு அறிவிக்கப்படுகிறது; உடனேயே நான் அவற்றை ஊதி விடுகின்றேன்; அவையிரண்டும் பறந்து விடுகின்றன;
இரண்டு பொய்யர்கள் தங்களை நபி என வாதித்துக் கொண்டு வருவர் என அதற்கு வியாக்கியானங் கொண்டேன், அவ்லிருவர்தாம் "ஸன்ஆ"நகரைச் சேர்ந்த அஸ்வதும்,'யமாமா'வைச் சேர்ந்த முஸைலிமாவும் ஆவர்" என்று கூறினார்கள். அறிவித்தவர் ஹஜ்ரத் அபூஹுரைரா (ரலி) நூல்கள்: புகாரீ, முஸ்லிம்.)
முந்தியவர். பெருமானார் (ஸல்) அவர்கள் இவ்வுலகைத் துறப்பதற்கு இரண்டு நாள் முன்னரும், பின்னவர் ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி) அவர்களது பதவி காலத்திலும் கொல்லப்பட்டனர். ஒரு பொருளைக் காற்றில் ஊதி பறக்கடிப்பது போல் இவ்விருவரும் பறக்கடிக்கப்பட்டு விட்டனர்.

ஹளரத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களது மார்க்கத்தில் இருந்த அறபியரிடம் விக்கிரக ஆராதனையைப் புகுத்தியவர் "அம்ருப்னுல் லுஹிய்யீ" என்பவர் ஆவார். இவர்கள் அனைவரும் அல்லாஹுத் தஆலாவின் மீது பொய்யை இட்டுக் கட்டியவர்களாவார்கள்.
ஏனெனில், அல்லாஹுத்தஆலா தங்களை நபியாக அனுப்பி இருப்பதாக முதலில் இருவரும் பொய்த் தாவாச் செய்தவர்கள் மூன்றாமவர் விக்கிரக ஆராதனையை உண்டு பண்ணி, விக்கிரகங்கள் வணக்கத்திற்குரியவைகளென நம்பும்படி ஜனங்களை ஏமாற்றியவர். ஆதலால், இவர்கள் யாவரும் ஒவ்வொரு விதத்தில் இறைவன் மீது பொய்யை இட்டுக்கட்டியவர்களே. இவர்களைக் குறித்துத்தான் "அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக் கட்டியவர், என்று சொல்லப்பட்டிருக்கிறது.
அப்துல்லாஹிப்னு ஸஅதிப்னி அபீ ஸரஹ் ரஹ்மத்துல்லாஹி அலைஹி என்பவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு வருகிற வஹியை எழுதி வைக்கும் காத்திபுகளில் ஒருவராக இருந்தார்.
மேலும், மனிதனைக் களிமண்ணினால் நாம் திட்டமாகப் படைத்திருக்கிறோம் 23:12 என்ற ஆயத்து அருளப்பட்டபோது அதனை இவர் எழுதினார். அப்புறம், பின்னர் அவனை வேறொரு சிருஷ்டியாக உண்டாக்கினோம் 23:13 என்ற வாக்கியமும் அதனைத் தொடர்ந்து அருளப்பட்டது. அதனையும் அவர் எழுதும்படி கட்டளையிடப்பட்டார். இவ்விரு வாக்கியங்களிலுமுள்ள பொருள் விசேஷங்களைக் கண்டு, அவர் ஆச்சரிய மடைந்து அல்லாஹ் முபாரக்கானவன் சிருஷ்டிப்பவர்களில் மிகவும் அழகியவன் 23:14 என்று அவர் கூறினார்.

இவர் கூறியது போலவே வஹியும் வந்ததால், இவ்வாக்கியத்தையும் எழுதும்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறி "அதனை எழுதிக் கொள்ளும், அவ்விதமாகத்தான் அருளப்பட்டது" என்று கட்டளையிட்டார்கள்.
எனவே அவருக்குச் சந்தேகம் வந்து விட்டது."இந்த மாதிரிதான் அருளப்பட்டது என்று முஹம்மது கூறிய வாக்கியத்தில் அவர் உண்மையாளராக இருப்பின், அவருக்கு வஹி அறிவிக்கப்படுவது போலவே எனக்கும் வஹி அறிவிக்கப்படுகிறது என்பதிற் சந்தேகமில்லை. நானும் அவரைப் போல்தான் இருக்கிறேன். அவர் பொய்யுரைத்திருப்பாராயின், நானும் அவர் கூறியது போலவே கூறி இருக்கிறேன். ஆதலின், அவரைப்போல் எனக்கு வஹி வருவதாக தாவாச் செய்ய இடங்கிடைத்திருக்கிறது" என்று கூறி. இஸ்லாத்தை விட்டு மாறி முஷ்ரிக்குகளுடன் சேர்ந்து கொண்டார்.

திருமக்காவை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வெற்றி கொள்வதற்குக் கொஞ்சம் முன்னதாக அவர் இஸ்லாம் மார்க்கத்தை மீண்டும் தழுவினார். ஆதலின் இவரைக் குறித்துத்தான் என்பால் வஹி அறிவிக்கப்படுகிறது.
"ஆனால், அவருக்கு வஹி அறிவிக்காமலிருக்கையில் என்று கூறினார்கள்" என்ற ஆயத்து அருளப்பட்டிருக்கிறது.
உமரின் நாவின் அல்லாஹ் பேசுகிறான்' என்று நபி[ஸல்] அவர்களால் சிறப்பித்து சொல்லப்பட்ட ஸஹாபி என்பதை நாம் அறிவோம். உமர்[ரலி] அவர்கள் கூற்றிற்கேற்ப, அல்லாஹ் சில வசனங்களை இறக்கியதையும் நாமெல்லாம் அறிந்துள்ளோம்.

அத்தகைய சிறப்பிற்குரிய உமர்[ரலி] அவர்கள் இன்னொரு நல் அமலுக்கு ஒரு ஆலோசனை கூற அது அல்லாஹ்வின் தூதர்[ஸல்] அவர்களால் அங்கீகரிக்கப்பட்டு, அன்றும்-இன்றும்- நடைமுறைப் படுத்தப்பட்டு வருகிறது. அதுதான் பாங்கோசையை முன் மொழிந்தது. அதற்காக உமர் (ரலி) தன்னை நபி எனக் கூறவில்லை.
விஞ்ஞான ரீதியாக ஓர் உண்மைச்சம்பவம் :
1898 ஆம் ஆண்டு ஆங்கில எழுத்தாளர் Morgan Robertson என்பவர் The Wreck of Titan " என்ற தலைப்பில் ஒரு நாவலை எழுதினார் அதில் கதையில் 70000 டன் எடையுள்ள மிகப்பெரிய கப்பல் ஒன்று அட்லாண்டிக் கடலின் வடக்கே ஐஸ் பாறையில் மோதி முழ்கிறது அந்த கப்பலில் 2500 பயணிகள் உயிரிழக்கிறார்கள். இந்த கதை 1898 இறுதியில் எழுதினார்

1912 ஏப்ரல் 14 தேதி 66000 டன் எடையுள்ள டைட்டானிக் என்கிற கப்பல் அதே அட்லாண்டிக் கடலில் ஐஸ் கட்டி மீது மோதி 1513 பயணிகள் உயிரிழக்கிறார்கள்
கதையில் அது நடந்தது ஏப்ரல் மாதம் நிஜத்திலும் அது ஏப்ரல் மாதம் தான் மூழ்கியது. கதையில் நியூ பவுண்ட்லேண்ட் எனும் இடத்தில இருந்து 400 மைல் தள்ளி விபத்து நடந்ததாக எழுதி இருந்தார். நிஜத்திலும் விபத்து அங்கு தான் நடந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக கதையில் அந்த கப்பலின் பெயர் "டைட்டானிக்"நிஜத்திலும் அந்த கப்பலின் பெயர் "டைட்டானிக் "
மோர்கன் ராபர்ட்ஸன் என்னும் எழுத்தாளர் வியப்பான இந்த நாவல் கற்பனையில் உதித்த கரு என்று சொல்வதை விட உள்ளுணர்வு சொல்லிய கதை.
இது எப்படி நடந்தது ?
ரூடிரக்கர் என்பவர் " மனவெளி (Mindscape or Mind Space ) என்று ஒன்று இருக்கிறது . அங்கே கணித உண்மைகள் , விஞ்ஞான விதிகள் , இதுவரை கண்டறியப்படாத யுக்திகள் இவைகளெல்லாம் வசிக்கின்றன. மன வெளியில் இருந்துதான் நாம் ஒவ்வொன்றாகக் கண்டறிகிறோம் " என்கிறார்.

காஃபிர்களிற் சிலர் முஹம்மது கூறுகிற குர்ஆன் வசனங்களைப் போல், நாங்களும் விரும்பினால் கூறமுடியும் என்று கூறி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பரிகசித்துக் கொண்டிருந்தனர். இவர்களைக் குறித்து மேற்கண்ட ஆயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.
மலாயிகத்து அதாவது மலக்குகள் என்பதற்கு உயிரைக் கைப்பற்றும் மலக்குகள் என்பது கருத்து.
"உங்களது உயிர்களை வெளியேற்றுங்கள் என்று மலக்குகள் கூறியதால், மரணிக்கும் ஜனங்கள் தங்கள் உயிர்களைத் தாங்களாக வெளிப்படுத்துவார்கள் என்பது கருத்தல்ல. அவ்வாறு வெளிப்படுத்த அவர்களுக்குச் சக்தி இல்லை. என்றாலும், மேற்சொல்லப்பட்ட காஃபிர்கள் அக்கிரமம் செய்பவர்களாக இருந்ததால், அவர்களை அம்மலக்குகள் கோபித்து அவ்வாறு கூறுவார்கள்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 166
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 83 )

وَلَقَدْ جِئْتُمُوْنَا فُرَادٰى كَمَا خَلَقْنٰكُمْ اَوَّلَ مَرَّةٍ وَّتَرَكْتُمْ مَّا خَوَّلْنٰكُمْ وَرَآءَ ظُهُوْرِكُمْ وَمَا نَرٰى مَعَكُمْ شُفَعَآءَكُمُ الَّذِيْنَ زَعَمْتُمْ اَنَّهُمْ فِيْكُمْ شُرَكٰٓؤُا لَقَدْ تَّقَطَّعَ بَيْنَكُمْ وَضَلَّ عَنْكُمْ مَّا كُنْتُمْ تَزْعُمُوْنَ
ஆரம்பத்தில் உங்களை நாம் படைத்ததைப் போன்றே, (இப்போது) நீங்கள் தனியாகவே நம்மிடம் வந்துள்ளீர்கள். நாம் உங்களுக்கு அருளிய (செல்வம் முதலான) வற்றை உங்கள் முதுகுக்குப் பின்னால் விட்டு விட்டீர்கள். உங்களுக்கு(ப் பயனளிக்கும்) தெய்வங்கள் என்று நீங்கள் கருதிய உங்கள் பரிந்துரையாளர்களை உங்களுடன் நாம் காண வில்லையே! (இன்று) உங்களுடைய தொடர்புகளெல்லாம் அறுந்துவிட்டன. (தெய்வங்கள் என்று) நீங்கள் கருதிச் கொண்டிருந்தவை உங்களைவிட்டு மறைந்துவிட்டன.(என்று மறுமை நாளில் அவர்களிடம் கூறப்படும்).(குர்ஆன் : 6:94)
மூமின்களில் பரம ஏழைகளாக இருந்தவர்களை பார்த்து மக்கத்து காஃபிர்கள்,
"உங்களைப் பார்க்கினும் நாங்கள் இவ்வுலகில் செல்வத்தாலும், மக்கள் பேறாலும் அதிகம் உள்ளவர்கள். ஆகவே நாங்கள் மறுமையிலும் வேதனை செய்யப்பட மாட்டோம்"- என்று கூறி பரிகசித்ததுவுடன் தங்கள் செல்வங்களையும் சந்ததியினரையும் குறித்து பெருமை கொண்டனர். இதற்கு மறுமொழியாக இறைவன் இவ்வசனத்தை அருளினான்.
இவ்வுலகில் அநியாயங்கள் செய்து அதே நிலையில் மரித்த கூட்டத்தினர் மறுமையில் அல்லாஹ்வின்பால் வருகின்றனர். அல்லாஹ் அவர்களை நோக்கி,
"உங்களை முதல் தடவையாக நாம் படைத்த பிரகாரமே நீங்கள் தனித்தவர்களாக நம்மிடம் நிச்சயமாக வந்து விட்டீர்கள். இப்பொழுது உங்களிடம் எந்தப் பொருளும் இல்லை. மனைவி, மக்கள், உதவியாளர், பணியாளர், எவருமே இலர். உங்களுடைய தாய் வயிற்றிலிருந்து எப்படி உலகில் முன்னர் தோன்றினீர்களோ அதே நிலையிலேயே இங்கும் நீங்கள் வந்திருக்கிறீர்கள்" எனக் கூறுவான்.
இதனைக் குறித்துப் பெருமானார் (ஸல்) அவர்கள் அறிவிக்கையில், "மனிதர்களே!, நீங்கள் அல்லாஹ்விடம், ( செருப்பு அணியாத ) வெறும் கால்களுடன் நிர்வாணிகளாக, (அதுவும்) ஆண்குறி நுனித்தோல் மூடிய நிலையில் ஒன்று கூட்டப்படுவீர்கள்," என்று அறிவித்தார்கள்.
"அப்பொழுது ஆண்களும், பெண்களும் ஒருவரையொருவர் பார்ப்பார்களே? என்று நான் கேட்டபொழுது, அவரவரின் நிலை இதையெல்லாம் விட மிகக் கடினமானது. (தங்களைத் தாங்கள் காப்பாற்றிக் கொண்டால் போதும் என்று எண்ணுவார்களே தவிர பிறரை நோக்கும் சிந்தனையே அவர்களுக்குத் தோன்றாது)'' என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அன்னை ஹஜ்ரத் ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்தார்கள். (நூல்கள்: புகாரி,முஸ்லீம்.)
இந்நிலையில் நிற்கின்ற அவர்களை நோக்கி மீண்டும் உங்களுக்கு நான் கொடுத்தவைகளான பொருள்கள், அதிகாரம், பதவி, வசதி வாய்ப்புகள் அனைத்தையும் உங்களுடைய முதுகுகளுக்கு அப்பால் (அதாவது:

உலகத்தில்) விட்டு விட்டீர்கள். இனி அவை உங்களிடம் வராது. மனைவி மக்களும் உங்களுக்கு உதவி செய்ய மாட்டார்கள்.
அல்லாஹ்வின் தூதர் ஸல்லல்லாஹு அவர்கள் சொன்னார்கள்: "ஆதமின் மகன் (மனிதன் ) எனது செல்வம் எனது செல்வம் என்று கூறுகிறான். ஆனால் நீ உண்டு அழித்ததையும், உடுத்தி கிழித்ததையும் தர்மம் செய்து சேமித்த நன்மைகளையும் தவிர உனது செல்வத்தில் உனக்கு என்ன வேறு ஏதும் உண்டா ? மற்ற அனைத்தையும் மக்களுக்காக விட்டுவிட்டு செல்கின்றாய். அறிவிப்பாளர் அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம், முஸ்னது அஹ்மத் எங்கே அவர்கள்?
அடுத்து உங்களுக்குப் பயனளிக்கும் தெய்வங்கள் என்று நீங்கள் கருதிய உங்கள் பரிந்துரையாளர்களை உங்களுடன் நாம் காணவில்லையே அவர்களிடம் கூறப்படும்" என்று அந்த வசனம் தெரிவிக்கின்றது அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்கக்கூடியவர்களை இவ்வசனம் வன்மையாகக் கண்டிக்கின்றது. அவர்களை எச்சரிக்கின்றது .
பொய்த் தெய்வங்களும் சிலைகளும் தங்களுக்கு இவ்வுலக வாழ்க்கையிலும் மீண்டும் எழுப்பப்படுவது இருக்குமானால்- மறுமையிலும் பயன் தரும் என்று நம்பி அவற்றை அல்லாஹ்வுக்கு இணையானவர்களாக அவர்கள் கருதினர்.
ஆனால், மறுமை நாள் ஏற்படும் போது அவர்களுடைய தொடர்புகள் அனைத்தும் அறுந்துவிடும்; தீய வழி காணாமல் போய்விடும். அவர்கள் வழிபட்ட பொய்த் தெய்வங்கள் அவர்களைவிட்டு மறைந்துவிடும். பின்னர் எல்லாப் படைப்புகளுக்கும் முன்னிலையில் அவர்களிடம்,
وَيَوْمَ يُنَادِيْهِمْ فَيَقُوْلُ اَيْنَ شُرَكَآءِىَ الَّذِيْنَ كُنْتُمْ تَزْعُمُوْنَ
இன்னும், (அல்லாஹ்) அவர்களை அழைக்கும் நாளில்: “எனக்கு இணையானவர்கள் என்று நீங்கள் எண்ணிக்கொண்டிருந்தீர்களே அவர்கள் எங்கே ? ” என்று கேட்பான்.(குர்ஆன் : 28:62)
மேலும் அல்லாஹ்வை இன்றி நீங்கள் வழிபட்டுக் கொண்டிருந்தவை எங்கே ? இந்நாளில் அவர்கள் உங்களுக்கு உதவுவார்களா ? அல்லது தமக்குத் தாமே அவர்களால் உதவ முடியுமா ? என்று அவர்களிடம் கேட்கப்படும். ( குர்ஆன் 26:92,93)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 167
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 84 )

اِنَّ اللّٰهَ فَالِقُ الْحَبِّ وَالنَّوٰى يُخْرِجُ الْحَىَّ مِنَ الْمَيِّتِ وَمُخْرِجُ الْمَيِّتِ مِنَ الْحَىِّ ذٰ لِكُمُ اللّٰهُ فَاَنّٰى تُؤْفَكُوْنَ
நிச்சயமாக அல்லாஹ்தான், வித்துகளையும், கொட்டைகளையும் வெடி(த்து முளை)க்கச் செய்கிறான்; இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றை வெளிப்படுத்துகிறான், உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் அவனே வெளிப்படுத்துகிறான்; அவனே உங்கள் அல்லாஹ் - எப்படி நீங்கள் திசை திருப்பப்படுகிறீர்கள்? (குர்ஆன் : 6:95)
அல்லாஹ்வின் சக்தி எத்தகையது என்பதைக் கொஞ்சமாவது சிந்தித்துப் பாருங்கள்.உலகில் எத்தனையோ வகையான வித்துக்களும் விதைகளும் கொட்டைகளும் இருக்கின்றன. அவை உங்களுக்கு உணவாகவும் வேறு வகையாகவும் பயன்படுகின்றன.
ஆனால் இவை அனைத்தும் விருத்தியடைந்தால்தான் உங்களுக்கு அவைகள் பயன்படும். இல்லையேல் நீங்கள் இவ்வுலகில் வாழவே முடியாது ஆகவே இவை எப்படி உற்பத்தி ஆகின்றன என்பதை சிந்தித்துப் பாருங்கள் வித்துக்களை முளைப்பிப்பவன் யார்?
முதலில் இவற்றைப் படைத்தவன் அல்லாஹ்வேயாவான். இவைகளை நீங்கள் பூமியில் முளைத்து வருவது உங்கள் சக்தியில் இல்லை. பூமியில் புதைக்கப்பட்ட அல்லது ஊன்றப்பட்ட வித்தையும், விதையும்

கொட்டையையும் முளைப்பதற்கு ஏற்றவாறு அல்லாஹ் பிளக்கச் செய்கிறான். அது பிளந்து துளிர் விடுகிறது. காய்ந்த வித்தும், விதையும், கொட்டையும் பசுமையான செடிகளாக, கொடிகளாக, பரந்த விருட்சங்களாக மாறி உங்களுக்குப் பலனைத் தருகின்றன. இவை யாரால் உற்பத்தி செய்யப்படுகின்றன என்பதைச் சிந்தியுங்கள்.
அதே உலர்ந்த வித்தையும், விதையும், கொட்டையையும் நீங்கள் பூமியில் ஊன்றியதும் முளைப்பதோ, முளைக்காமல் அப்படியே கருகி விடுவதோ அல்லாஹ்வின் கரத்திலேயே இருக்கின்றன. அவை முளைத்துவிடும் என்பதாக நீங்கள் எண்ணுகிறீர்கள். அதற்கு நேர்மாறாக முளைக்காமலேயே போய் விடுகின்றது.
உங்களுடைய சக்தியிலேயே எல்லாம் இருக்கின்றன என்று நீங்கள் எண்ணினால் உங்கள் எண்ணப்படி அவை அனைத்தும் முளைத்திருக்க வேண்டுமே? அவ்வாறு இல்லையே. இதனைக் கொண்டேனும் அவனுடைய சக்தியை உணர்ந்து அவனை நம்புங்கள்.

இறைவனின் சக்தி உணருவதற்கு உதாரணமாக , இந்த ஏரழிஞ்சில் மரம். கோவை மாவட்டத்தின் பொள்ளாச்சியின் மேற்கு பகுதியில் தொடங்கி கேரளாவின் பாலக்காடு வரை தெற்கு வடக்காக இந்த மரங்கள் பரவலாக வளர்கின்றன
இம்மரம் சின்னக் கன்றாக இருக்கும்போதே மரத்தில் பழம் பழுக்கும். பெரிய சைஸ் மரமாக வளரும். இந்த மரத்தின் பழங்களை பறவைகள் தின்றுவிட்டு, கீழே போட்டால், அது மரமாகும். ஆனால், ஏரழிஞ்சில் மரத்திலிருந்து தானாகக் கீழே விழும் பழங்களில் உள்ள விதைகள் முளைக்காது.
பழங்கள் கீழே விழுந்த மூன்று நாள்களில் அந்தப் பழத்தில் உள்ள விதைகள் தானாக நகர்ந்து போய், ஏரழிஞ்சில் மரத்தில் ஏறி அடிமரங்களில் ஆங்காங்கே ஒட்டிக் கொள்ளும்.
அது எப்படி என்றால், மரத்திலிருந்து கீழே விழும் பழங்களில் உள்ள விதைகளுக்குள் குறிப்பிட்ட ஒரு பூச்சியினத்தின் புழுக்கள் உள்ளே போயிரும். அந்தப் புழு ஏரழிஞ்சில் விதைகளை நகர்த்திக் கொண்டு போய் மரத்தில் ஏற்றி, அடிமரங்களில் ஒட்ட வைக்கும்.
பிறகு கூட்டுப்புழுக்கள் போய் இருந்துவிட்டு, பின்பு மரத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும் விதைகளிலிருந்து அந்தப் புழுக்கள் பூச்சிகளாக மாறி பறந்து போய்விடும். அந்த விதைகள் மட்டும் ஏரழிஞ்சில் மரங்களில் ஒட்டிக்கொண்டிருக்கும்.

நாளடைவில் அந்த விதைகள் வெறும் விதைக் கூடுகளாக மாறி, மரத்தில் ஒட்டிக்கொண்டிருக்கும். இப்படி அதிசயங்களும், அற்புத மருத்துவக் குணங்களையும் கொண்ட இந்த ஏரழிஞ்சில் மரம்.
அடுத்து, மத்தியபிரதேசத்தில். மத்தியப்பிரதேச மாநிலம் ரத்லம் பகுதியை சேர்ந்த தாதர் சிங், தனக்கு சொந்தமான இடத்தில் சோயா பீன்ஸை சமீபத்தில் விதைத்துள்ளார்.
சில நாட்களுக்கு பிறகு தனது தோட்டத்தை பார்வையிட சென்ற அவர் அங்கு ஒரு எலி உடலில் பீன்ஸ் செடி ஒன்று முளைத்தபடி அங்கும் இங்கும் ஓடியதைக் கண்டார்.
அவர் அந்த எலியை வீடியோ எடுத்து வெளியிட்டுள்ளார். பிறகு அந்த எலியை பிடித்து அதன் கழுத்து பகுதியில் வளர்ந்திருந்த பீன்ஸ் செடியை பிடுங்கியுள்ளார்.
இந்த அதிசயம் பற்றி கல்லூரி உயிரியல் தலைவர் ஒருவர் கூறுகையில் கழுத்தில் காயம் ஏற்பட்டபொழுது சோயா விதை அங்கு விழுந்திருக்கும் அதனால் இப்படி சோயா செடி வளர்ந்திருக்கலாம் என்றும், கழுத்து பகுதியில் செடி வளர்ந்திருந்தாலும், அதனால் பாதிக்கப்பட்ட எலியின் மூளையில் எந்த பாதிப்பும் இல்லை என்றும் கூறியுள்ளார்.
மரித்ததிலிருந்து உயிருள்ளதை வெளியாக்குகிறவன். உயிருள்ளதிலிருந்து மரித்ததை வெளியாக்குகிறவன். வித்து, விந்து, முட்டை போன்றவை முதலில் மரித்தது போன்று இருக்கின்றன. அவற்றிலிருந்து பசுமையான செடிகள், ஜீவ இனங்கள் தோன்றுகின்றன.
இவ்வாறே உயிருள்ளவற்றிலிருந்து மரித்தவை தோன்றுகின்றன.

ஜீவனுள்ள பிராணிகளிலிருந்து விந்து தோன்றுகின்றது. பசுமையானவற்றில் இருந்து வித்துக்கள் தோன்றுகின்றன. இன்னம் இவை போன்று எத்தனையோ வெளிப்படுகின்றன.
விசித்திரமான சம்பவம் ஒன்றை ரஷ்யா விஞ்ஞானிகள்
கண்டுபிடித்திருக்கிறார்கள்
பிடெல்லாய்ட் ரோடிபர்ஸ் (Bdelloid rotifers) என்ற விலங்கினம்
இது நீர்சார்ந்த இடங்களில், கடும் குளிரான தட்பவெட்ப நிலையிலும் எப்பேர்ப்பட்ட கடும் சூழ்நிலையிலும் வாழும் ஓர் மைக்ரோஸ்கோபிக் விலங்கினம்.
சமீபமாக ஒரு Drilling Rig உதவியுடன் சைபீரியன் பகுதியில் ஆழ்துளை இடப்பட்டு நிலத்தடி உறைபனி மண், பூமிக்கு கொண்டு வரப்பட்டு, அதனை ஆராய்ச்சி செய்யும் போது,இந்த உயிரினம் உயிர்த்தெழுப்பப்பட்டது.
ரேடியோ கார்பன் டேட்டிங் மூலம் இந்த நிலத்தடி உறைபனி கிட்டத்தட்ட 24,000 ஆண்டுகள் பழமையானது என்று கண்டுபிடிக்கப்பட்டது.
ஆக,24,000 ஆண்டுகளாக உறைபனியில் உறைந்திருந்த உயிரினம் பிடெல்லாய்ட் ரோடிபர்ஸ் உயிர்த்தெழுப்பப்பட்டது.
இந்த ரோடிபர்ஸ் போன்று பல உயிரினங்கள் உறைபனி நிலையிலிருந்து உயிர்த்தெழுப்பப்பட்டுள்ளன உதாரணமாக, நேமிடோட்ஸ் எனப்படும் புழு வகையை சார்ந்த உயிரினம்,2018 ஆம் ஆண்டு கிட்டத்தட்ட 30,000 ஆண்டுகளுக்கு பின் உயிர்த்தெழுப்பப்பட்டது.
இவையெல்லாம் யாருடைய செயல்கள் இவ்வாறெல்லாம் செய்கிற அவனேதான் அல்லாஹ். இதையெல்லாம் உணர்ந்தும் கூட நீங்கள் அல்லாஹ்வை விசுவாசம் கொள்வதிலிருந்து எப்படி யாரால் திருப்பப்படுகிறீர்கள்? அவன் ஒருவன்; அவனை வணங்காமல் எப்படி வேறொன்றை வணங்கத் தொடங்குகிறீர்கள்?

**Rahmath Rajakumaran**

இந்த மரத்திலிருந்து மாந்திரீக மை, வசிய மை தயாரிக்கிறார்கள். மாந்திரீக நாட்டம் உடையவர்கள் இந்த மரங்களைத் தேடி அலைவார்கள். ஏனென்றால்,மாந்திரீக வேலைகளில் இந்த மரத்திலிருந்து தயாரிக்கப்படும் மை ராஜ மையாகப் பயன்படுத்தப்படுகிறதாம்.
அதோடு, இந்த மரத்தின் விதைகளோடு,இன்னும் சில விதைகளைச் சேர்த்து அரைத்து குளித்தைலம் முறையில் காயகற்பம் தயார் செய்கிறார்கள். இந்தக் காயகற்பத்தை சாப்பிட்டால், நம் உடல் நீண்டகாலம் நலமாக இருக்கும். தொடர்ந்து இந்தக் காயகற்பத்தைச் சாப்பிட்டு வந்தால், அதிக வயது வரை நாம் உயிர் வாழலாம் என்பது நம்பிக்கை.
அதேபோல், இந்த மரத்தின் இலைகள், மரப்பட்டைகளை எடுத்து அரைத்துப் பவுடராக்கி உண்டு வந்தாலும், நம் உடம்பில் உள்ள சகலப் பிரச்னைகளும் நீங்கி நாம் அதிகநாள்கள் உயிர் வாழலாம்.
இந்த ஏரழிஞ்சில் சின்னக் கன்றாக இருக்கும்போதே மரத்தில் பழம் பழுக்கும். பெரிய சைஸ் மரமாக வளரும். இந்த மரத்தின் பழங்களை பறவைகள் தின்றுவிட்டு, கீழே போட்டால், அது மரமாகும்.
ஆனால், ஏரழிஞ்சில் மரத்திலிருந்து தானாகக் கீழே விழும் பழங்களில் உள்ள விதைகள் முளைக்காது.பழங்கள் கீழே விழுந்த மூன்று நாள்களில் அந்தப் பழத்தில் உள்ள விதைகள் தானாக நகர்ந்து போய், ஏரழிஞ்சில் மரத்தில் ஏறி அடிமரங்களில் ஆங்காங்கே ஒட்டிக் கொள்ளும்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 168
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 85 )- பகுதி 1

فَالِقُ الْاِصْبَاحِ وَ جَعَلَ الَّيْلَ سَكَنًا وَّالشَّمْسَ وَالْقَمَرَ حُسْبَانًا ذٰلِكَ تَقْدِيْرُ الْعَزِيْزِ الْعَلِيْمِ

அவனே பொழுது விடியச் செய்பவன்; (நீங்கள் களைப்பாறி) அமைதிபெற அவனே இரவையும், காலக் கணக்கினை அறிவதற்காகச் சூரியனையும், சந்திரனையும் உண்டாக்கினான் - இவையாவும் வல்லமையில் மிகைத்தோனும், எல்லாம் அறிந்தோனுமாகிய (இறைவனின்) ஏற்பாடாகும். (குர்ஆன் : 6:96)
பகுதி -1) அவனே பொழுது விடியச் செய்பவன் (நீங்கள் களைப்பாறி) அமைதிபெற அவனே இரவையும், காலக் கணக்கினை அறிவதற்காகச் சூரியனையும், சந்திரனையும் உண்டாக்கினான்:-

ஒரு நாளின் ஆரம்பம் முடிவு இரண்டையும் நிர்ணயிப்பது சூரியனைக் கொண்டுதான். ஒவ்வொரு நாளும் " கறுப்புக் கயிறு " எனும் இரவின் இருள் ரேகை விலகி " வெள்ளைக் கயிறு " எனும் விடியலின் வெளிச்ச ரேகை தெரிய பொழுது புலர்ந்துவிட்டால் குர்ஆன் (02:187) அன்றைய நாளும் தேதியும் சூரியன் உதித்தவுடன் குர்ஆன் ( 06:96 ) இயல்பாகவே மாறிவிடுகிறது.
இதுவே தொன்றுதொட்டு மனித குலம் பயன்படுத்தி வரும் இயற்கையானதும் இலகுவானதுமான நாட்காட்டிக்கான குர்ஆன் (09:96) வழிமுறையாகும் இதனையே பரிசுத்த குர்ஆன் வசனங்களும் நபி(ஸல்) அவர்களின் சொல்லும் செயல் முறைகளும் நமக்கு நிரூபிக்கின்றன.
ஓர் ஆண்டைக் கணக்கிட வேண்டுமானால் அதன் மாதங்களையும், வாரங்களையும் , நாட்களையும் சரியாகக் கணக்கிட வேண்டும் , ஒரு நாளை முதலில் எதிலிருந்து கணக்கிட வேண்டும் என்ற கேள்விக்குப் பதிலாகத்தான் அல்லாஹ் :
"( பொழுது புலரும்போது ) உங்கள் இறைவனுடைய அருட்கொடைகளை நீங்கள் தேடிக் கொள்வதற்காகவும் ; ஆண்டுகளின் எண்ணிக்கையையும் ,(மாதங்களின் , வாரங்களின் , நாட்களின் ) கணக்குகளையும் நீங்கள் அறிந்து கொள்வதற்காகவும் பகலின் அத்தாட்சியைப் பிரகாசமாக்கினோம் குர்ஆன் ( 17:12 ) என்றும் ஆண்டுகளின் எண்ணிக்கையையும் காலக் கணக்கையும் நீங்கள் அறிந்துகொள்ளும் பொருட்டு அவன்தான் சூரியனைச் (சுடர்விடும்) பிரகாசமாகவும் சந்திரனை ஒளிவுள்ளதாகவும் ஆக்கினான் குர்ஆன் (10:05) என்றும் குறிப்பிடுகின்றான்
.
ஐவேளைத் தொழுகையின் நேரங்கள் :-
இஸ்லாத்தின் முக்கியக் கடமைகளில் ஒன்றான ஐவேளைத் தொழுகையை அதற்கென குறிப்பிட்ட நேரத்தில் நிறைவேற்றுவது கடமையாகும்.
நம்பிக்கை கொண்டோர் மீது தொழுகை நேரம் குறிக்கப்பட்ட கடமையாகவுள்ளது. ( குர்ஆன் 4:103)
சுப்ஹுத் தொழுகையின் நேரம் வைகறையிலிருந்து சூரியன் உதிக்கும் வரை உண்டு. 'சுப்ஹுத் தொழுகையின் நேரம் வைகறை நேரம் முதல் சூரியன் உதிக்கும் வரை உண்டு' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) நூல்: முஸ்லிம் 1075
லுஹர் தொழுகையின் நேரம் சூரியன் உச்சியை விட்டு மேற்கு நோக்கிச் சாய்ந்ததிலிருந்து ஒவ்வொரு பொருட்களின் நிழலும் அது போன்ற அளவு வரும் வரை உண்டு.
'லுஹர் தொழுகையின் நேரம் சூரியன் உச்சி சாய்ந்ததிலிருந்து ஒரு மனிதனின் நிழல் அவனது உயரம் அளவுக்கு ஆகும் வரை, அதாவது அஸ்ர் நேரத்திற்கு முன்பு வரை உண்டு' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) முஸ்லிம் 1075
அஸர் தொழுகையின் நேரம் ஒவ்வொரு பொருட்களின் நிழலும் அது போல ஒரு அளவு வந்ததிலிருந்து சூரியன் மறையத் துவங்கும் வரை உண்டு.
(ஒவ்வொரு தொழுகையின் ஆரம்ப நேரம் அதன் கடைசி நேரம் ஆகிய இரு நேரங்களில்) இரண்டு தடவை எனக்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள் கஅபாவில் இமாமத் செய்தார்கள். (முதல் தடவை) இமாமத் செய்யும் போது... ஒவ்வொரு பொருளின் நிழலும் அப்பொருளின் அளவுக்கு வந்த போது அஸ்ரை தொழுவித்தார்கள்.அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) நூல்: திர்மிதீ 138
ஜிப்ரீல் (அலை) அவர்கள் தொழுகையின் ஆரம்ப நேரத்தையும், கடைசி நேரத்தையும் கற்றுக் கொடுக்க வந்த ஹதீஸில் .... ஒரு பொருளின் நிழல் அப்பொருளின் அளவுக்கு வந்த போது அஸ்ர் தொழுகை நடத்துவீராக என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கூறினார்கள். ஒரு பொருளின் நிழல் அது போல் இரு மடங்கு ஆனபோது மறுநாள் வந்து அஸ்ர் தொழுவீராக என்று கூறினார்கள்..... இவ்விரண்டுக்கும் இடைப்பட்ட நேரமே தொழுகை நேரமாகும் என்று கூறினார்கள். (சுருக்கம்) நூல் : இப்னு ஹிப்பான்

‘அஸ்ர் தொழுகையின் நேரம் சூரியன் பொன்னிறமாகி அதன் நுனி மறைவதற்கு முன்பு வரை உண்டு’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி)
முஸ்லிம் 1076
மக்ரிப் தொழுகையின் நேரம் சூரியன் முழுமையாக மறைந்ததிலிருந்து மேற்கே செம்மை மறையும் வரை உண்டு.
‘மக்ரிப் தொழுகையின் நேரம் சூரியன் மறைந்தது முதல் செம்மை மறையும் வரை உண்டு’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) முஸ்லிம் 1076
இஷாத் தொழுகையின் நேரம்:--
நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர் வந்து தொழுகை நேரங்கள் பற்றி வினவினார். (அவரிடம்) நபி (ஸல்) அவர்கள், ‘நம்முடன் தொழுகையில் கலந்து கொள்வீராக!’ என்று கூறினார்கள்.
இதையடுத்து நபி (ஸல்) அவர்கள் பிலால் (ரலி) அவர்களிடம்... செம்மை மறைந்ததும் இஷாத் தொழுகைக்காகக் கட்டளையிட்டார்கள். மறு நாள் பிலால் (ரலி) அவர்களிடம் ... இரவின் மூன்றில் ஒரு பகுதி கடந்த பின் இஷாத் தொழுகைக்குக் கட்டளையிட்டார்கள்.
பின்னர், ‘கேள்வி கேட்டவர் எங்கே? இவ்விரண்டுக்கும் இடைப்பட்ட நேரமே தொழுகையின் நேரமாகும்’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: புரைதா (ரலி) நூல்: முஸ்லிம் 1079
‘இஷாத் தொழுகையின் நேரம் இரவின் பாதி வரை உண்டு’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) முஸ்லிம் 1074
இஷாவின் நேரம் சுப்ஹ் வரை நீடிக்கின்றது என்ற கருத்துடையவர்கள் கீழ்க்கண்டவாறு தங்கள் வாதத்தை எடுத்து வைக்கின்றனர்.
மறு தொழுகை நேரம் வரை ஒரு தொழுகையின் நேரம் உள்ளது என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர். இதில் சுப்ஹ் மட்டும் தான் விதி விலக்கு பெற்றுள்ளது.
‘யார் சூரியன் உதிப்பதற்கு முன் சுப்ஹுத் தொழுகையின் ஒரு ரக்அத்தை அடைந்து கொள்கிறாரோ அவர் சுப்ஹுத் தொழுகையை அடைந்து விட்டார்’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நூல்: புகாரீ 579, 556

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 169
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 86 )- பகுதி 2

فَالِقُ الْاِصْبَاحِ وَ جَعَلَ الَّيْلَ سَكَنًا وَّالشَّمْسَ وَالْقَمَرَ حُسْبَانًا ذٰلِكَ تَقْدِيْرُ الْعَزِيْزِ الْعَلِيْمِ
அவனே பொழுது விடியச் செய்பவன்; (நீங்கள் களைப்பாறி) அமைதிபெற அவனே இரவையும், காலக் கணக்கினை அறிவதற்காகச் சூரியனையும், சந்திரனையும் உண்டாக்கினான் - இவையாவும் வல்லமையில் மிகைத்தோனும், எல்லாம் அறிந்தோனுமாகிய (இறைவனின்) ஏற்பாடாகும். (குர்ஆன் : 6:96)
பகுதி - 2 :- தொழுகை நேரம் குறித்த கல்வெட்டு
கீழக்கரையில் உள்ள ஓடக்கரை மசூதியில் தொழுகை நேரம் தமிழ்மாதம், தமிழ் எண்களில் எழுதப்பட்டுள்ளது. மாதந்தோறும் சூரியன் கதிக்கு ஏற்ப தொழுகை நேரங்கள் மாறுபட்டுள்ளதை 300 ஆண்டுகட்கு முற்பட்ட இக்கல்வெட்டுத் தெரிவிக்கிறது.
அஸருக்கு அடி

---

தை மாசி பைங்கூனி சித்திரை வைகாசி ஆனி

---

11 10 9 8 7 8

_______________________________________________________

10 1/2 9 1/2 8 1/2 7 1/2 7 1/2. 8 1/2

_______________________________________________________

10 . 9 8 7 8. 9

_______________________________________________________

மார்கழி காத்திகை அற்பிசி புரட்டாதி ஆவணி ஆடி

_______________________________________________________

குறிப்பு:
தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி மாதங்கள் உத்தராயண காலம் (உத்தரம்-வடக்கு)
ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி மாதங்கள் தட்சிணாயன காலம். (தட்சிணம் - தெற்கு)
இதே தொழுகை நேரங்கள் கீழக்கரை ஜுமா மசூதியிலும் கொளச்சல்கல்லுப்பள்ளியிலும் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டுள்ளன.
குறிப்பு:
இந்தக் கல்வெட்டில் (அஸருக்கு அடி) அஸர் நேரத்தை தமிழ் பன்னிரு மாதங்களில் நிழல் எத்தனை அடிகளில் குறிக்கும் என்பது 300 ஆண்டுகட்கு முன்பு கடிகாரம் இல்லாத காலத்தில் பள்ளிவாசலில் மக்கள் அறிவதற்காகக் குறித்துள்ளது வியந்து
போற்றத் தக்கது.
இதன்படி காயல் பட்டினத்தில் அசற் தொழுகை நேரம்
தை மாதம் - 11- 10/2 அடி
மாசி மாதம் _ 10 - 9/2 அடி
பங்குனி மாதம் _ 9-8/2 அடி
சித்திரை மாதம் - 8-71/2 அடி
வைகாசி மாதம் - 7-7/2 அடி
ஆனி மாதம் _ 8-81/2 அடி
ஆடி மாதம் _ 9-9/2 அடி
ஆவணி மாதம் _ 8-7/2 அடி
புரட்டாசி மாதம் - 7-7/2 அடி
ஐப்பசி மாதம் - 8-8/2 அடி
கார்த்திகை மாதம் - 9-9/2 அடி
மார்கழி மாதம் - 10-10/2 அடி
நிழல் அரையடி செல்லும் நேரம் அசற் தொழுகை நேரம்
ஆகும்.
இதை அறிவிக்க இக்கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது.
'அசறுக்கு அடி' என்பதன் விளக்கம் இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகள் ஐந்தாகும். அவை:
1) ஈமான் என்னும் இறைநம்பிக்கை
2) தொழுகை என்னும் இறை வழிபாடு
3) நோன்பு என்னும் விரதம்
4) ஜக்காத் என்னும் தானதர்மம்
5) ஹஜ் என்னும் புனிதப் பயணம்.
தொழுகை என்பது ஐந்துவேளை என்று வரையறுக்கப் பட்டுள்ளது.
1) பஜ்ரு - அதிகாலைத் தொழுகை, கிழக்கு வானம் வெளுத்து சூரியன் உதயமாகுமுன் தொழுவது.

2) லுஹர் - மதியத் தொழுகை. சூரியன் உச்சியிலிருந்து சற்று நகர்ந்தபின் தொழுவது.
3) அஸர் - மாலைத் தொழுகை. சூரியன் மறைவதற்கு முன் தொழுவது.
4) மஃரிப் - சூரியன் மறைந்தவுடன் தொழுவது.
5) இஷா - இரவுத் தொழுகை. சூரியன் மறைந்து 70 நிமிடம் கழித்து கிழக்கு வெளுக்கு முன் தொழுவது.
ஐவகைத் தொழுகை அஸர் - மாலைத் தொழுகை எப்பொழுது தொழுவது என காயல்பட்டினத்தில் சிலர் வினவியிருக்கக் கூடும். அல்லது அஸர் நேரத்திலிருந்து நாளின் ஆரம்பம் என்பதால் இருக்கலாம்.
அஸர் நேரத்தை அறிவிக்க இந்த சூரியக் கடிகாரம் பயன்படுத்தப் பட்டிருக்க வேண்டும்.
ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து சூரிய ஒளியால் ஏற்படும் நிழல் எந்த அடியைத் தொடுகிறதோ அது அந்த மாதத் தொழுகை நேரம் ஆகும். இது ஒரு அபூர்வமான அறிவியல் குறிப்பாகும்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 170
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 87 )- பகுதி 3

فَالِقُ الْاِصْبَاحِ وَ جَعَلَ الَّيْلَ سَكَنًا وَّالشَّمْسَ وَالْقَمَرَ حُسْبَانًا ذٰلِكَ تَقْدِيْرُ الْعَزِيْزِ الْعَلِيْمِ
அவனே பொழுது விடியச் செய்பவன்; (நீங்கள் களைப்பாறி) அமைதிபெற அவனே இரவையும், காலக் கணக்கினை அறிவதற்காகச் சூரியனையும், சந்திரனையும் உண்டாக்கினான் - இவையாவும் வல்லமையில் மிகைத்தோனும், எல்லாம் அறிந்தோனுமாகிய (இறைவனின்) ஏற்பாடாகும். (குர்ஆன் : 6:96)
நோன்பின் ஷஹர் நேரத்தையும் , நோன்பின் இப்தார் நேரத்தையும் , மற்றும் ஐங்காலத் தொழுகை நேரத்தையும் சூரியனின் போக்கை அடிப்படையாகக் கொண்டே அமைக்கப்பட்டுள்ளன .
நோன்பு மாதமாகிய ரமலானின் தொடக்கமும் , அதன் நிறைவும் மற்றும் ஹஜ் கடமைகளும் சந்திரனின் தோற்றத்தை அடிப்படையாகக் கொண்டே அமைக்கப்பட்டுள்ளன.
(நபியே! மாதந்தோறும் பிறந்து, வளர்ந்து, தேயும்) பிறைகளைப் பற்றி உங்களிடம் கேட்கிறார்கள். (அதற்கு) நீங்கள் கூறுங்கள்: "அவை மனிதர்களுக்கு (ஒவ்வொரு மாதத்தையும்) ஹஜ்ஜுடைய காலங்களை(யும்) அறிவிக்கக் கூடியவை. (குர்ஆன் : 2:189)
“(உலர்ந்து வளைந்த) பழைய பேரீச்ச மடலைப் போல் (பிறையாக) ஆகும் வரையில் சந்திரனுக்கு நாம் பல நிலைகளை ஏற்படுத்தி இருக்கின்றோம்” (36:39) என்பது இறை வசனம்.
காலக்கணக்கு எனப்படும் ஆண்டுகளின் எண்ணிக்கை, மாதங்களின் எண்ணிக்கை மற்றும் வாரங்களின் எண்ணிக்கையைக் கணக்கிட சந்திரனின்நிலைகள் பயன்படுத்தப்படுகின்றன.
சூரியன் உதிப்பதில் இருந்து மறையும் வரை எவ்வாறு நாளானது பல பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றதோ, அதைப்போல ஒவ்வொரு நாளும் இரவில் தோன்றி மறையும் சந்திரனின் நிலைகள் மாதங்களின் எண்ணிக்கையை அறிய உதவுகிறது. இவற்றை மேற்கண்ட இரு வசனங்களும் எடுத்துரைக்கின்றன.
எவ்வாறு பழைய பேரீச்ச மடல் பல நெளிவுகளைக் கொண்டுள்ளதோ, அதேபோல சூரியனைப் பூமியோடு சுற்றி வரும் சந்திரனின் பாதையும் பல்வேறு வளைவுகளைக் கொண்டுள்ளது. இதை நவீன விஞ்ஞானத்தின் மூலம் விளங்கிக் கொள்ள முடிகிறது. அந்த வகையில் குர்ஆன் கூறும் பழைய பேரீச்ச மடல் உவமை மிகப் பொருத்தமாக அமைந்துள்ளதை அறியலாம்.
மனிதனால் ஆக்கப்பட்ட செயற்கை கடிகாரங்கள் பொய்த்தாலும் , இறைவனின் இயற்கை காலம் காட்டிகளாகிய சூரியனும், சந்திரனும் என்றுமே பொய்க்காமல் அனைத்துலக மக்களுக்கு நேரத்தையும் , காலத்தையும் தவறாமல் காட்டி வருகின்றன.
“அவனே சூரியனை ஒளியாகவும் (பிரகாசமாகவும்) சந்திரனை (அழகிய) வெளிச்சம் தரக்கூடியதாகவும் ஆக்கி ஆண்டுகளின் எண்ணிக்கையையும் (மாதங்களின்) கணக்கையும் நீங்கள் அறிந்து கொள்வதற்காக

அவைகளுக்கு (மாறி மாறி வரக்கூடிய) தங்கும் இடங்களையும் நிர்ணயம் செய்தான். மெய்யான தக்க காரணமின்றி இவற்றை அல்லாஹ் படைக்கவில்லை” குர்ஆன் (10:5) என்று திருமறையில் இறைவன் கூறுகின்றான்.

சந்திரன் சூரியனை 354 நாட்களில் சுற்றி முடிக்கிறது .மாதக் கணக்கில் அதன் நாட்கள் 29 .53 நாட்களையுடையது. பூமி சூரியனை 365 .25 நாட்களில் சுற்றி முடிக்கிறது.மாதக் கணக்கில் அதன் நாட்கள் சராசரியாக 30 நாட்கள் .(28 , 29 , 30 , 31 நாட்களும் வரும்)

அதாவது ஒரு வருடத்தில் சந்திரன் பூமியை விட 11 நாட்கள் குறைவாக சூரியனை சுற்றி முடிக்கிறது .

இந்த 11 நாட்கள் ஒவ்வொரு வருடமும் குறைவதால் இறைவனின் நோன்பு கோடைக்காலம் , இளவேனிர் காலம் , வசந்த காலம் , குளிர் காலம் என்று எல்லா பருவக் காலங்களிலும் அது தவழ்ந்து வரும் .

ஒருவர் உலகில் எப்பகுதியில் வாழுந்தாலும் தம் ஆயுட்காலத்தில் அனைத்தும் பருவ காலங்களிலும் நோன்பு நோற்கும் வாய்ப்பினைப் பெறுகின்றார் .

திருக்குர்ஆன் ஆய்வாளர்கள் உலர்ந்து வளைந்த பழைய பேரீச்ச மடலைக் குறித்து கூறும் வசனமானது,

“(உலர்ந்து வளைந்த) பழைய பேரீச்ச மடலைப் போல் (பிறையாக) ஆகும் வரையில் சந்திரனுக்கு நாம் பல நிலைகளை ஏற்படுத்தி இருக்கின்றோம்” குர்ஆன் (36:39)

என்ற வசனம் சந்திரனின் ஒவ்வொரு நாளின் நிலையை மட்டும் அல்ல; காலத்தின் சீதோஷண நிலையான தட்ப வெப்பத்தையும் குறிப்பிடுவனாக இருக்கிறது என்கிறார்கள்.

ஒரு பேச்சுக்கு சூரிய கணக்கில் நோன்பு காலத்தை இறைவன் ஏப்ரல் மாதம் என்று அதை நடைமுறைப்படுத்தி யிருந்தால் , அந்நோன்பு காலம் எப்போதுமே வெப்பமாகவே இருந்திருக்கும் .

இது எல்லா காலங்களிலும் வருவதால் நோன்பாளிகளுக்கு இறைவன் கொடுத்திருக்கும் சலுகையாகும் .

இதற்காக இறைவனுக்கு நாம் நன்றி செலுத்துவோமாக !

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 171
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 88 )

وَ هُوَ الَّذِىْۤ اَنْشَاَكُمْ مِّنْ نَّفْسٍ وَّاحِدَةٍ فَمُسْتَقَرٌّ وَّمُسْتَوْدَعٌ قَدْ فَصَّلْنَا الْاٰيٰتِ لِقَوْمٍ يَّفْقَهُوْنَ

உங்கள் அனைவரையும் ஒரே ஆத்மாவிலிருந்து உண்டாக்கிப்பின் (உங்கள் தந்தையிடம்) தங்க வைத்து, (பின்னர் கர்ப்பத்தில்) ஒப்படைப்பவனும் அவனே. சிந்தித்து விளங்கிக் கொள்ளக் கூடிய மக்களுக்கு நிச்சயமாக நம் வசனங்களை விவரித்துள்ளோம்.(குர்ஆன் : 6:98)

ஆத்மா என்பது ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், அவர்களது விலா எலும்பிலிருந்துதான் ஹளரத் ஹவ்வா அவர்களை அல்லாஹ் உற்பத்தி செய்தான். அப்புறம் இருவரிலும் இருந்து உலகிலுள்ள எல்லா மனிதர்களும் உண்டாயினர்.

ரூஹ் என்பது "உயிர்" (Life) ஆகும் ."நஃப்ஸ்" என்பது "உயிருள்ளது" அல்லது " உயிரி " (Life Fore) ஆகும் . உயிர் மட்டும் தனியாக இருந்தால் அதை "ரூஹ்" என்போம் . உடலுடன் உயிர் காக்கும் போது அதை "நஃப்ஸ்" என்போம் .

ரூஹ் மட்டும் உடல் இல்லாமல் தனியாக "ஆலம் அர்வாஹ்" என்ற ஆன்ம உலகில் இருந்தது.உடலும் உயிருமாக இவ்வுலகில் நாம இருக்கிறோம்

நல்ல உயிர் , கெட்ட உயிர் என்பதெல்லாம் உடலுடன் இருக்கும் போது அது நடந்து கொள்ளக் கூடிய நடைமுறையைப் பொருத்ததாகும் .

அவ்வாறு உயிரியில் ஏற்படும் இன்பம் - துன்பம் , சுகம் - துக்கம் ,வலி - வலியின்மை ஆகியவையெயல்லாம் உடலுக்குள் ஊடுருவி இருக்கும் உயிரின் அனுபவங்களாகும் .

இருப்பினும் உயிருக்கே "நஃப்ஸ்" என்றும்,உயிரினத்திற்கே "ரூஹ்" என்றும் சொல்லப்படுவதுண்டு.இது உரு வழக்கு ஆகும் இப்படி தத்துவஞானிகள் உயிரைப் பற்றிய கருத்துக்கள் சொல்லி இருக்கிறார்கள் .
அல்லாஹுத்தஆலா முதலாவதாக ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சிருஷ்டித்து, அவரிலிருந்து ஏனைய மனிதர்களைச் சிருஷ்டித்தது போல,
முதல் முதலாக ஹளரத் முஹம்மதுர் ரசூலுல்லாஹி அலைஹி வஸல்லம் அவர்களது ஆத்மாவைச் சிருஷ்டித்து, அதிலிருந்துதான் ஏனைய ஆத்மாக்களைச் சிருஷ்டித்தான். இதனைக் குறித்துத்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "அல்லாஹுத்தஆலா சிருஷ்டித்ததில் முதலாவது எனது ஆத்மாதான்" என்று கூறி இருக்கிறார்கள்.
ஆகவே, ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அபுல் பஷர் (மனிதர்களின் தந்தை) ஆக இருக்கிறார்கள். நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அபுல் அர்வாஹ் (ஆத்மாக்களின் தந்தை) ஆக இருக்கிறார்கள். இதனைத்தான் இந்த ஆயத்து அறிவிக்கிறது என்று மெஞ்ஞானிகள் கூறுகிறார்கள்.
நஃப்ஸுன் என்ற பதத்திற்கு ஸ்தூலம், ஆத்மா, ஸ்தூலமும் ஆத்மாவும் சேர்ந்த பொருள். மனம், எண்ணம் ஆகிய பல பொருள்களுண்டு. இங்கு மேற்கண்ட ஞானிகளது கருத்துப்படி ஆத்மா என்றும், மனிதர் என்றும் இரண்டு பொருள்கள் கொள்ள வேண்டும்.
மனிதர்கள் தங்கள் தந்தையின் முதுகெலும்புக்குள் இந்திரியத் துளியாக இருக்கிறார்கள். அப்புறம் தாயாரின் கர்ப்பக் கோளறையில் சில மாதகாலம் தங்கி உடலைப் பெற்று உலகில் பிறக்கிறார்கள்.
தந்தையின் முதுகெலும்பில் தரித்திருப்பவர்களாகவும், தாயின் கர்ப்பக் கோளறையில் அமானிதமாக வைக்கப்பட்டவர்களாகவும் இருப்பதை முஸ்த கர்ரன் வ முஸ்தவ்தஉன் என்ற பதங்கள் அறிவிக்கின்றன.
அதாவது "பின்னர் தங்க வைக்கப்படுபவரும் மறைத்து வைக்கப்படுபவரும் (உங்களில் உள்ளனர்)" என்று மேற்கண்ட வசனம் (6: 98) கூறுகின்றது.
இதில் 'தங்கவைக்கப்படுபவர்' ('முஸ்தகர்ரு'), 'மறைத்துவைக்கப்படுபவர்' ('முஸ்தவ்தஉ) ஆகிய சொற்கள் எதைக் குறிக்கின்றன என்பது தொடர்பாகப் பல்வேறு கருத்துகள் தெரிவிக்கப்பட்டுள்ளன.
நபித்தோழர் இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள், (தாயின்) கருப்பையில் தங்க வைக்கப்படுபவர், (தந்தையின்) முதுகுத்தண்டில் மறைத்துவைக்கப்படுபவர் என்று பொருள் கூறியுள்ளார்.
முதலாவது சொல் இவ்வுலகில் உள்ள வசிப்பிடத்தையும், இரண்டாவது உள்ள சொல் சவக்குழியையும் குறிக்கும் என்று மற்றோர் அறிவிப்பில் வேறு சிலரும் கருத்து தெரிவித்துள்ளனர்.
தவிர, இதற்கு முந்திய வசனத்தில் ( குர்ஆன 6:97 ) சந்திரன், சூரியன். நட்சத்திரங்களைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றை நேருக்கு நேராக புறக்கண்ணினால் பார்க்க முடிவதால் அவற்றை உணர்ந்து கொள்வது சுலபம். இதனால்தான் அவற்றைப் பற்றிக் கூறிய வசனத்தில் " அறியும்படியான கூட்டத்தாருக்கு அத்தாட்சிகளைத் திட்டமாக நாம் விவரித்திருக்கிறோம்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.
மனிதர்களை ஒருவரிலிருந்து உண்டாக்கி, இந்திரியமாக்கி, அப்புறம் தாயின் கர்ப்பத்தில் உடலை ஏற்படுத்தி, சில காலத்திற்குப் பிறகு உலகில் குழந்தையாகப் பிறக்கும்படி செய்வது புறக்கண்ணினால் பார்த்து உணர்ந்து கொள்ளக்கூடிய காரியமல்ல.
பெண்கள் கர்ப்பவதியாக ஆவதையும், குழந்தைகளைப் பெறுவதையும் உலகிலுள்ள யாவரும் சகஜமாகத் தெரிந்திருந்தாலும், கர்ப்பத்தில் இருக்கும் சிசு உண்டாகுவதன் முறையை நேருக்கு நேர் தெரிந்து கொள்ள பெண்ணாலும் முடியாது. ஆணாலும் முடியாது.
ஆதலால், அதனை அறிந்து கொள்வது யூகத்தாலும், அறிவாலுமேயாகும். இதனால்தான் இந்த வசனத்தில் "விளங்கும்படியான கூட்டத்தினருக்கு அத்தாட்சிகளைத் திட்டமாக நாம் விபரித்திருக்கிறோம்" என்று சொல்லப்பட்டது.
அறியும்படி , விளங்கும்படி ஆகிய இரு சொற்றொடர்களை இறைவன் எவ்வளவு அழகாக லாவகமாக பயன்படுத்துகிறான் பார்த்தீர்களா ?

மேலும், மனித உற்பத்தியும், சந்திர சூரிய, நட்சத்திரங்களை உற்பத்தி செய்து நடத்துவதும் அவ்வல்லோனின் சக்தியையும், வல்லமையையும் விளக்குவதாக இருப்பதால் இவற்றிற்கு அத்தாட்சிகள் என்று சொல்லப்பட்டன.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 172**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 89 )**

وَهُوَ الَّذِىْٓ اَنْزَلَ مِنَ السَّمَآءِ مَآءً فَاَخْرَجْنَا بِهٖ نَبَاتَ كُلِّ شَىْءٍ فَاَخْرَجْنَا مِنْهُ خَضِرًا نُّخْرِجُ مِنْهُ حَبًّا مُّتَرَاكِبًا وَمِنَ النَّخْلِ مِنْ طَلْعِهَا قِنْوَانٌ دَانِيَةٌ وَّجَنّٰتٍ مِّنْ اَعْنَابٍ وَّالزَّيْتُوْنَ وَالرُّمَّانَ مُشْتَبِهًا وَّغَيْرَ مُتَشَابِهٍ اُنْظُرُوْۤا اِلٰى ثَمَرِهٖۤ اِذَاۤ اَثْمَرَ وَيَنْعِهٖ اِنَّ فِىْ ذٰ لِكُمْ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يُّؤْمِنُوْنَ

அவனே வானத்திலிருந்து மழையை இறக்கினான். அதைக் கொண்டு எல்லா வகையான புற்பூண்டுகளையும் நாம் வெளியாக்கினோம்; அதிலிருந்து பச்சை(த் தழை)களை வெளிப்படுத்துகிறோம்; அதிலிருந்து நாம் வித்துகளை அடர்த்தியான கதிர்களாக வெளிப்படுத்துகிறோம்;
பேரீத்த மரத்தின் பாளையிலிருந்து வளைந்து தொங்கும் பழக்குலைகளும் இருக்கின்றன; திராட்சைத் தோட்டங்களையும் (நாம் உண்டாக்கினோம் )
இன்னும் ஜைத்தூனையும், மாதுளையையும் (இவைகளின் இலைகள்) ஒன்று போலுள்ளதாகவும், ( பழம்) ஒன்று போல் இல்லாததாகவும் (உண்டாக்கினோம் )
இன்னும் அவைகளின் காய்கள் காய்ப்பதையும், பின்னர் கனிந்து பழமாக ஆவதையும் நீங்கள் உற்று நோக்குவீர்களாக - ஈமான் கொள்ளும் மக்களுக்கு நிச்சயமாக இவற்றில் அத்தாட்சிகள் அமைந்துள்ளன. (குர்ஆன் : 6:99)
அவனேதான் வானிலிருந்து தண்ணீரை இறக்கி வைத்தான்.
வித்தோ, கொட்டையோ ஏதாவதொன்று பூமியில் ஊன்றப்படுகிறது. அல்லாஹ் நாடினாலன்றி அது முளைப்பதில்லை. அதற்கு முதலில் தண்ணீர் வேண்டும். அத்தண்ணீரை வானிலிருந்து அல்லாஹ் இறக்கி வைக்கிறான்.
அப்பால் அதனைப் பூமியில் நன்றாகப் பிடிக்குமாறு செய்து, சிலநாட்களில் அதை பிளக்க வைத்து அதிலிருந்து இரு கிளைகள் தோன்றுமாறு செய்கிறான்.
ஒன்று கீழ் நோக்கிச் செல்கிறது. அது தான் வேர். மற்றொன்று மேல் நோக்கி வருகிறது. இதனைக் குறித்தே அத்தண்ணீரைக் கொண்டு ஒவ்வொரு பொருளின் புற்பூண்டுகளையும் வெளிப்படுத்தினான் எனக் கூறப்படுகிறது.
மேல் நோக்கி வருகிற முனையானது பசுமையாக மாறுகிறது. இதைத் தான் பசுமை வெளிப்படுத்தினான் என இங்கு கூறப்படுகிறது.
இது தானிய வகையைச் சேர்ந்ததாயின், நாளுக்குநாள் வளர்ந்து கதிர் பிடித்து தானியங்கள் அடுக்காகத் தொடர்ந்து தோன்றுகின்றன. அடுக்கடுக்கான வித்துக்களை வெளிப்படுத்துகிறோம் என்பது இதையே அறிவிக்கிறது. இவை நெல், சோளம், போன்ற தானியங்களைக் குறிப்பதாகும்.
கனிவர்க்கங்களைக் கவனித்தோமானால், கொட்டை ஒன்று பூமியில் புதைக்கப்படுகிறது. அல்லாஹ் நாடினாலன்றி அது உற்பத்தியாகிப் பலன் தராது.
கனிகளில் பேரீச்சம்பழம் மிகச் சிறந்ததும் ஊட்டச் சக்தியுள்ளதும் ஆகும். நாம் சுவைத்து உண்ணுகிறோம். அதன் மரத்திலிருந்து பாளை தோன்றுகிறது. அப்பாளையிலிருந்து அடுக்கடுக்காகப் பூக்கள் தோன்றி அவை பிஞ்சுகளாகி நாம் எட்டிப் பறிக்கும் அளவுக்குத் தொங்கிக் கொண்டிருக்கிற பேரீச்சம் பழக்குலைகள் வெளிவந்து விடுகின்றன.

கொட்டையைப் போட்ட உடனேயே அது முளைத்து நமக்குப் பலன் கொடுத்து விடாது. அல்லாஹ் அதற்குரிய உதவியைச் செய்ய வேண்டும். அப்பொழுதுதான் அதன் பலனை நாம் பெற முடியும்.
கனிவர்க்கங்களில் பேரீச்சம் பழத்திற்கு அடுத்தபடியாக இருப்பவை திராட்சைப் பழம் , ஜைத்தூன் பழம், மாதுளம் பழம் ஆகியவையாகும். ஒலிவ ( ஆலிவ்) மரத்தின் பழத்திற்கு ''ஜைத்தூன் "பழம் எனக் கூறப்படுகிறது. இதிலிருந்து எண்ணெய் தயாரிக்கப்படுகிறது. இதை ஆலிவ் எண்ணெய் என இதற்குக் கூறுவர். இப்பழங்களின் தோட்டங்கள் அநேகம் காணப்படுகின்றன.

திராட்சையின் தோட்டங்களையும், மாதுளையையும், ஜைத்தூனையும் நாமே உண்டாக்கினோம். இவைகளில் சில அவற்றின் இலைகளிலும் வடிவத்திலும் ஒரே மாதிரியாகவும், ஒவ்வொன்றின் சுவையும் ஒரே மாதிரியாக இல்லாததாயும் இருக்கின்றன.
அதாவது மாதுளை, ஜைத்தூன் ஆகிய மரங்களின் இலைகள் ஏறத்தாழ ஒரே மாதிரியாக இருக்கும். ஆனால் இரண்டு கனிகளின் சுவைகள் வெவ்வேறாக இருக்கின்றன.
இப்படி எத்தனையே விருட்சங்களை நாம் காண முடிகிறது. சில கனிகள் உருவத்தில் கூட ஒன்றாக காட்சியளிக்கின்றன. ஆனால் சுவையில் வித்தியாசம் காணப்படுகிறது.
ஆப்பிள் பழத்தை பெரிய தக்காளி பழத்தையும் மேலெழுந்த வாரியாகப் பார்ப்போமானால் இரண்டும் மாதிரியாகத் தோன்றுகின்றன. இதனால் தக்காளியை "ஏழைகளின் ஆப்பிள்" எனக் கூறுவர். ஆனால் இரண்டின் சுவைகள் வெவ்வேறாக இருக்கின்றன. இதனை உணர்த்தும் பொருட்டே, தோற்றத்தில் ஒரே மாதிரியாகவும் சுவையில் ஒரே மாதிரியில்லாததாகவும் நாம் வெளிப்படுத்தினோம் என்று இங்கு கூறப்படுகிறது.
கனியைத் தரும் விருட்சம் முளைத்து மரமாகிப் பூத்துப் பிஞ்சுவிட்டு அப்பால் கனிந்து பழமாவதை நீங்கள் பார்த்துக் கொண்டு இருக்கிறீர்கள். இது எவ்வாறு உண்டாகிறது? யாரால் உண்டாகிறது என்பதைச் சிந்தித்துப் பார்த்தீர்களா?

உங்களுடைய சக்தியைக் கொண்டே உண்டாகிறது என நீங்கள் கருதுவது உண்மையானால், நீங்கள் புதைக்கும் எல்லா வித்துக்களும் முளைத்து உங்கள் நோக்கம் போல் பலன் கொடுக்க வேண்டுமே! அவ்வாறு எல்லமே முளைத்துப் பலன் கொடுத்து விடுவதில்லையே. சில சமயம் ஒன்றுமே முளைக்காமல் அனைத்தும் அழிந்து போய் விடுகின்றன. உங்களுடைய சக்தி என்பதும் அத்துடன் அழிந்து விடுகிறது.
ஆகவே, அவ்வித்தானது காய்ந்து அது கனியும் பொழுது அதன் கனியை நீங்கள் உற்று நோக்குங்கள். அப்பொழுது நமது 'சக்தி அங்கே உங்களுக்குத் தெரியும். உண்மையாகவே நம்மை விசுவாசம் கொள்கிற மக்களுக்கு இம்மாதிரியான நிகழ்ச்சிகளில் பல ஆதாரங்கள் இருக்கின்ற என இவ்வசனத்தின் மூலம் அறிவிக்கப்படுகிறது.
குர்ஆனில் இன்னொரு இடத்தில்,
"பூமியில் பல தொகுதிகளை சேர்ந்தாற்போல் அமைத்து (அதில்) திராட்சை, தானியப்பயிர் நிலங்களையும், பேரீச்சந் தோப்புகளையும் ஆக்கினான்; கிளைகள் உள்ளதும், கிளைகள் இல்லாததுமான மரங்களையும் (உற்பத்தி செய்கிறான். இவை அனைத்திற்கும்) ஒரேவித நீர் புகட்டப்பட்டபோதிலும், சிலவற்றைவிட சிலவற்றை சுவையில் நாம் மேன்மையாக்கி வைத்தோம். இதில், அறிவுடைய மக்களுக்கு நிச்சயமாக பல அத்தாட்சிகள் இருக்கின்றன''. (குர்ஆன் : 13:4) இந்த வசனமும் நம்மை சிந்திக்க வைக்கிறது .
இவ்வாறெல்லாம் தெளிவான ஆதாரங்களை எடுத்து உரைத்தும் கூட உணராத சிலர் அல்லாஹ்வுக்கு கண்டதை எல்லாம் இணை வைக்கின்றனர்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 173**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 90 )**

وَجَعَلُوْا لِلّٰهِ شُرَكَآءَ الْجِنَّ وَخَلَقَهُمْ وَخَرَقُوْا لَهٗ بَنِيْنَ وَبَنٰتٍ بِغَيْرِ عِلْمٍ سُبْحٰنَهٗ وَتَعٰلٰى عَمَّا يَصِفُوْنَ
இவ்வாறிருந்தும் அவர்கள் ஜின்களை அல்லாஹ்வுக்கு இணையானவர்களாக ஆக்குகிறார்கள்; அல்லாஹ்வே அந்த ஜின்களையும் படைத்தான்; இருந்தும் அறிவில்லாத காரணத்தால் இணைவைப்போர் அவனுக்குப் புதல்வர்களையும், புதல்விகளையும் கற்பனை செய்து கொண்டார்கள் - அவனோ இவர்கள் இவ்வாறு வர்ணிப்பதிலிருந்து தூயவனாகவும், உயர்ந்தவனுமாக இருக்கிறான். (குர்ஆன் : 6:100)
மஜூஸியர்கள் அல்லாஹுத்தஆலாவிற்கு "யஜ்தான்" என்றும், இப்லீசுக்கு "அக்ரமன்" என்றும் பெயர் கூறுகிறார்கள். யஜ்தானும் அக்ரமனும், சகோதரர்கள் என்பதும்,
மனிதர்கள், ஆடுமாடு ஒட்டகைகள் போன்ற மிருகங்களை, இன்னும் நன்மை பயக்கும் யாவற்றையும் யஜ்தான் சிருஷ்டிக்கிறான் என்பதும்,

புலி, கரடி போன்ற கொடிய மிருகங்களையும், பாம்பு, தேள் போன்ற விஷ ஜந்துக்களையும், தீமை செய்யக் கூடிய மற்றவைகள் யாவற்றையும் அக்ரமன் சிருஷ்டிக்கிறான் என்றும் நம்பி, இவ்விரண்டையும் வணங்குகிறார்கள். கிறிஸ்துவர்கள் ஹளரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களைக் கடவுள் குமாரர் என்று கூறுகிறார்கள். யூதர்கள் உஜைர் அலைஹிஸ் ஸலாம் அவர்களைக் கடவுள் குமாரர் என்று கூறுகின்றனர். அரபியரில் ஒரு கூட்டத்தினர் மலக்குகளை அல்லாஹுத்தஆலாவின் புதல்விகள் என்று கருதுகிறார்கள்.
இப்லீஸ் ஜின் வர்க்கத்தைச் சேர்ந்தவன். ஆதலின் அவர்கள் ஜின்களை வணங்குகிறார்கள். இவர்கள் இவ்வாறு, தங்களைப் படைத்தவனை மட்டும் வணங்காமல் ஜின்களையும் வணங்குவதை இந்த வசனத்தில் இறைவன் கண்டித்திருக்கிறான்.

ஜின்களைப் பற்றி ....
ஜின்களுக்கும் இஸ்லாம் தான் மார்க்கம். அல்லாஹ் தான் இறைவன் நபி (ஸல்) அவர்கள் தான் இறைத்தூதர்கள். ஜின்கள் இதை ஏற்று பின் பற்ற வேண்டும்!
ஜின்களில் முஸ்லீம்களும் உண்டு காஃபிர்களும் உண்டு:
மனிதர்களில் எப்படி நல்லவர்கள் கெட்டவர்கள் உள்ளார்களோ அதே போன்று ஜின்களிலும் நல்லவர்கள் தீயவர்கள்,காஃபிர்கள், முஸ்லிம்களும் உள்ளனர்!
நம்மில் முஸ்லிம்களும் உள்ளனர். அநீதி இழைத்தோரும் உள்ளனர். இஸ்லாத்தை ஏற்போர் நேர் வழியைத் தேடிக்கொண்டனர். (அல் குர்ஆன்: 72:14)
மனிதர்களில் நாம் எப்படி ஆண்கள்,பெண்கள் என்ற இரு இனத்தவர்கள் இருக்கின்றோமோ அதேபோல ஜின்களிலும் ஆண், பெண் என்ற இரு இணத்தவர்கள் உள்ளனர் (அல்குர்ஆன்: 72:6)
ஜின்களும் மனிதர்களை போன்று ஒருவருக்கு ஒருவர் நேசித்து கொள்ளுவார்கள் ! அவைகளும் நம்மை போன்று குழந்தைகளை பெற்று கொள்ளும்! (அல்குர்ஆன்: 18:50) (நூல்: முஸ்லீம்: 5312)
ஜின்களில் உள்ள ஆண் ஜின்களிடம் தான் சூனியகாரர்கள் உதவி தேடுகிறார்கள் நம்மில் சில ஆண்கள் எப்படி இந்த உலகத்திற்கோ அல்லது மறுமை உலகத்திற்கோ எந்த பயனும் இல்லாமல் உள்ளார்களே அதே போன்று ஜின்களிலும் சிலர் உள்ளார்கள்!
இது போன்ற ஜின்களிடம் சூனியக்காரர்கள் அடிபணித்து அவர்களை வணங்க ஆரம்பம் செய்கிறார்கள் இன்னும் அவர்களுக்கு குர்பானி போன்றவை கொடுக்கிறார்கள்!இதனால் கெட்ட ஜின்கள் இவர்களுக்கு உதவி செய்ய முன் வருகிறது!
இறைவனுக்கும் மலக்குகளுக்கும் என்ன உறவு முறை ?

(மனிதர்களே!) உங்கள் இறைவன், ஆண் மக்களை உங்களுக்குச் சொந்தமாக்கி விட்டு, மலக்குகளைத் தனக்குப் பெண் மக்களாக ஆக்கிக் கொண்டானா? இவ்வாறு கூறும் நீங்கள் நிச்சயமாக மகத்தான (பொய்க்) கூற்றையே கூறுகிறீர்கள். (குர்ஆன் : 17:40)
மக்காவிலுள்ள முஷ்ரிக்குகள் பெண் குழந்தைகள் தங்களுக்கு இருப்பதை ரொம்பவும் கேவலமாக மதிப்பதும், ஆண் மக்கள் தங்களுக்கு இருப்பதை ரொம்பவும் பெருமையாக கருதுவதுமாக இருந்தார்கள் . மேலும் மலக்குகளை பெண்களாகக் கருதி , அவர்களை இறைவனுடைய பெண் மக்கள் என்பதாக கூறி வந்தனர் . இறைவன் நித்தியன் , நிரந்தரன் , எப்போதுமே தனித்திருப்பவன் . அழிவற்றவன் , ஆதலால் , அவனுக்கு சந்ததி வேண்டுமென்ற அவசியம் இல்லை.
ஏன் மலக்குகளை இறைவனின் பெண் மக்களாக முஷ்ரிக்குகள் நினைத்தார்கள் ?
இதற்குக் காரணம் இருக்கிறது .அதாவது ஆதம் என்ற மனிதரை மண்ணில் இருந்து படைத்து அவரில் இருந்தே அவர் மனைவியைப் படைத்தான் .ஆக இருவருக்குமே மூலாதாரம் மண்தான்.குர்ஆன் (2 : 35)
அடுத்து ஜின் இனங்களை நெருப்பில் இருந்துப் படைத்து ஜின்களின் துணை மற்றும் ஜின் சந்ததிகளை அதே நெருப்பில் இருந்துப் படைத்தான் .இரண்டுக்கும் மூலாதாரம் நெருப்பு . குர்ஆன் ( 7 : 12 )
சரி. இறைவன் குர்ஆனில் தன்னை ஒளிமயமானவன் என்பதாக குறிப்பிட்டுள்ளான்.
இறைவனின் ஒளியைக் கொண்டு பூமி பிரகாசிக்கும். (அவரவர்களின்) தினசரிக் குறிப்பு (அவரவர்கள் முன்) வைக்கப் பட்டுவிடும். குர்ஆன் ( 39 : 69)

தம் வாய்களைக் கொண்டே அல்லாஹ்வின் ஒளியை (ஊதி) அணைத்துவிட அவர்கள் விரும்புகின்றார்கள் - ஆனால் காஃபிர்கள் வெறுத்த போதிலும் அல்லாஹ் தன் ஒளியை பூர்த்தியாக்கி வைக்காமல் இருக்க மாட்டான். (குர்ஆன் : 9:32)
அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் "நீங்கள் உங்கள் இறைவனைப் பார்த்தீர்களா?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள் "(அவனைச் சுற்றிலும் இருப்பது) ஒளியாயிற்றே! நான் எப்படி அவனைப் பார்க்க முடியும்?" என்று (திருப்பிக்) கேட்டார்கள். ( ஸஹீஹ் முஸ்லிம் 291 )
ஒளிமயமான இறைவன் மலக்குமார்களை ஒளியில் இருந்து படைத்தான் .(ஹதீஸ் : புஹாரி ,முஸ்லீம் )
ஆக இறைவனும் ஒளிமயமானவன்.மலக்குகளும் ஒளியில் இருந்து படைக்கப்பட்டவர்கள் . ஆகையால் ஒளியிலிருந்து ஒளி. கணக்கு சரி வருதா ...? மேலும் மலக்குகளுக்கு ஆண் / பெண் என்ற பாலினம் கிடையாது. இறைவனுக்கும் பாலினம் கிடையாது. மலக்குகளுக்கும் உறவுகள் கிடையாது இருந்தாலும் முஷ்ரிக்களின் கற்பனைக்கு ஏற்றவாறு இறைவனுக்கும் மலக்குகளுக்கும் தகப்பன் - மகள் என்ற உறவைக் கற்பித்து மலக்களை இறைவனின் பெண் மக்களாக சித்தரித்தனர் .
இறைவன் உறவுகளை விட்டும், படைப்புகளை விட்டும் மஹா மஹா பரிசுத்தமானவன் .இவர்கள் இவ்வாறு கூறுவது எவ்வளவு தவறானது என்பதைச் சற்றும் யோசிக்காமல் செய்கின்றார்கள். இவ்விதமான காரியங்களை விட்டு அல்லாஹ் தூயவன் என்பது மேற்கண்ட (6:100) ஆயத்தின் கருத்து.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 174
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 91)

بَدِيْعُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ اَنّٰى يَكُوْنُ لَهٗ وَلَدٌ وَّلَمْ تَكُنْ لَّهٗ صَاحِبَةٌ وَخَلَقَ كُلَّ شَىْءٍ وَهُوَ بِكُلِّ شَىْءٍ عَلِيْمٌ
அவன் வானங்களையும், பூமியையும் முன் மாதிரியின்றிப் படைத்தவன். அவனுக்கு மனைவி, எவரும் இல்லாதிருக்க, அவனுக்கு எவ்வாறு பிள்ளை இருக்க முடியும்? அவனே எல்லாப் பொருட்களையும் படைத்தான். இன்னும் அவன் எல்லாப் பொருட்களையும் நன்கறிந்தவனாக இருக்கின்றான். (குர்ஆன் : 6:101)
ذٰ لِكُمُ اللّٰهُ رَبُّكُمْ لَاۤ اِلٰهَ اِلَّا هُوَ خَالِقُ كُلِّ شَىْءٍ فَاعْبُدُوْهُ وَهُوَ عَلٰى كُلِّ شَىْءٍ وَّكِيْلٌ
அவன்தான் அல்லாஹ் - உங்கள் இறைவன்; அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை; எல்லாப் பொருட்களின் படைப்பாளன் அவனே ஆவான்; ஆகவே, அவனையே வழிபடுங்கள் - இன்னும் அவனே எல்லாக் காரியங்களையும் கண்காணிப்பவன். (குர்ஆன் : 6:102)
சர்வ சக்தனான அல்லாஹ் எத்தகையவன் என்பதை மேற்கண்ட இவ்விரு வசனங்களும் விவரிக்கின்றன. எத்தகைய முன் மாதிரியும், எவருடைய துணையும் இல்லாமல் வானங்களையும், பூமியையும்அவன் படைத்தவன்.
அவனுக்குக் குழந்தையோ, மனைவியோ தேவை இல்லை. அவனுக்கே வானங்கள், பூமி அவற்றிலுள்ளவை அனைத்தும் சொந்தம், இந்நிலையில் அவனுக்கு எங்ஙனம் குழந்தை ஏற்படும்? ஏற்பட வேண்டிய அவசியமே இல்லை. அவன் இணை துணையற்றவன்.
மனைவி மக்கள் இல்லாதவன்
குழந்தை அவனுக்கு உண்டு என்றால், அது அவனைப் போன்று இருத்தல் வேண்டும். அப்பொழுது அவன் அதற்கு இணை, அது அவனுக்கு இணை என்று ஏற்பட்டுவிடும். இந்த நிலை ஏற்படுவதென்றால் அவன் ஏக அல்லாஹ்வாக இருக்க முடியாது. ஆகையால், இவை ஒன்றும் அவனுக்குத் தேவையில்லை.
அவனுக்கு மனைவியும் இல்லை. அவனே எல்லாவற்றையும் படைத்தான். அவன் எதன் மீதும் தேவையுடையவனல்லன். ஆகவே, அவனுக்கு மனைவியோ மக்களோ தேவையில்லை: அவன் எல்லாவற்றையும் நன்கறிந்து அவற்றிற்கு எப்போது எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்கிறவன்.
(அந்த நாயன்) எத்தகையவன் என்றால் வானங்கள், பூமி (ஆகியவற்றின்) ஆட்சி அவனுக்கே உரியது அவன் (தனக்கென) ஒரு மகனை எடுத்துக் கொள்ளவில்லை அவனுடைய ஆட்சியில் அவனுக்கு கூட்டாளி எவருமில்லை அவனே எல்லாப் பொருட்களையும் படைத்து, அவற்றை அதனதன் அளவுப் படி அமைத்தான். குர்ஆன் (25:2)
மேலும், "ஒரு மகனைப் பெறாத, ராஜ்யத்தில் அவருக்கு ஒரு பங்குதாரரும் இல்லை, அவருக்கு ஒரு பாதுகாவலரும் இல்லை" என்று கூறுங்கள்.
"அன்றியும், (தனக்குச்) சந்ததியை எடுத்துக் கொள்ளாதவனும், (தன்) ஆட்சியில் தனக்குக் கூட்டாளி எவரும் இல்லாதவனும், எந்தவித பலஹீனத்தை கொண்டும் எந்த உதவியாளனும் (தேவை) இல்லாமலும் இருக்கிறானே அந்த நாயனுக்கே புகழ் அமைத்தும்" என்று (நபியே!) நீர் கூறுவீராக இன்னும் (அவனை) எப்பொழுதும் பெருமைப் படுத்த வேண்டிய முறையில் பெருமைப் படுத்துவீராக. குர்ஆன் (17:111)
கடவுள் ஒரு மகனைப் பெற விரும்பியிருந்தால், அவர் விரும்பியதைத் தேர்ந்தெடுத்து படைத்திருப்பார், அவரே கடவுள்.
அல்லாஹ் (தனக்கு) ஒரு பிள்ளையை எடுத்துக் கொள்ள நாடியிருந்தால், அவன் படைத்துள்ளவர்களிலிருந்து தான் விரும்பிவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டிருப்பான்; (எனினும் இத்தகையவற்றிலிருந்து) அவன் பரிசுத்தமானவன். அவனே (யாவரையும்) அடக்கியாளும் வல்லமை மிக்கவனாகிய ஏகனான அல்லாஹ். குர்ஆன் (39:4)
வானங்களையும், பூமியையும் படைத்தவன், அவனே அனைத்தையும் படைத்தான், அவன் அனைத்தையும் அறிந்தவன்.
(நபியே!) நீர் கூறுவீராக: அல்லாஹ் அவன் ஒருவனே.

அல்லாஹ் (எவரிடத்தும்) தேவையற்றவன்.
அவன் (எவரையும்) பெறவுமில்லை
(எவராலும்) பெறப்படவுமில்லை.
அன்றியும், அவனுக்கு நிகராக எவரும் இல்லை. ( குர்ஆன் 112:1- 4)
அல்லாஹ்வுக்கு ஒரு மகன் உண்டு என்பது மிகவும் அபாண்டமான கூற்று ஆகும். மிகப்பெரிய பொய் ஆகும். அவ்வாறு இருந்திருந்தால் அவன் நமக்கு அதைப்பற்றி கூறியிருப்பான். இன்னும் அல்லாஹ் தன் நபியிடம் கூறுவதைப் பாருங்கள்
“அருளாளனுக்கு ஒரு மகன் இருந்தால், நான் முதலில் வணங்குவேன்” என்று கூறுங்கள்.
(நபியே!) நீர் கூறும்; " அர் ரஹ்மானுக்கு ஒரு சந்ததி இருந்திருக்குமானால், (அதை) வணங்குவோரில் நானே முதன்மையானவனாக இருந்திருப்பேன்!" (43:81)
இத்தகைய உயர்ந்த தன்மைகளைக் கொண்டவனே அல்லாஹ். அவன் உங்களையும் இதர எல்லாவற்றையும் படைத்து இரட்சிக்கிறவன். அவனே வணக்கத்திற்கு உரியவன். அவனைத் வேறு நாயன் இல்லை.
எல்லாவற்றையும் படைக்கிறவனான அவனையே நீங்கள் வணங்கி அவனுக்கே கீழ்ப்படியுங்கள். அவன் தன்னுடைய எல்லா படைப்புகளின் மீதும் பொறுப்பு ஏற்கிறவன், கண்காணிக்கிறவன்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 175
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 92)

لَا تُدْرِكُهُ الْاَبْصَارُ وَهُوَ يُدْرِكُ الْاَبْصَارَ وَهُوَ اللَّطِيْفُ الْخَبِيْرُ
பார்வைகள் அவனை அடைய முடியா; ஆனால் அவனே எல்லோருடைய (எல்லாப்) பார்வைகளையும் (சூழ்ந்து) அடைகிறான். அவன் நுட்பமானவன்; தெளிவான ஞானமுடையவன். (குர்ஆன் : 6:103)
இவ்வுலகில் அவனை எவரும் பார்த்து விட முடியாது என்பதை இவ்வசனம் தெளிவுபட எடுத்துரைக்கிறது. இதற்கு முன்னருள்ள வசனங்களில் அல்லாஹ்விற்குரிய வர்ணனைகள் இலக்கணங்கள் கூறப்பட்டன. இத்தகைய இலக்கணங்களுக்குரிய அவனை இவ்வுலகில் எவருடைய பார்வைகளும் அடைந்து விட முடியாது.
கண் பார்வைகள் பிற பொருள்களை பார்த்துக் கொள்வது போல் அவனை, எவரும் பார்த்துவிட முடியாது, கண் பார்வைக்கு எட்டக் கூடிய உருவம் கொண்டதாக இருத்தல் வேண்டும். அவனை எந்த அளவீட்டாலும் அளந்து விட முடியாது.

நம்முடைய பார்வை திறன் குறித்து முதலில் தெரிந்து கொள்வோம்.
ஒரு பொருளைப் பார்க்கும் செயல்பாட்டில், பின்வரும் படிகள் நிகழ்கின்றன:
சூரியன் போன்ற ஒரு மூலத்திலிருந்து வரும் ஒளி, பொருளின் மீது விழுகிறது.
பொருள் அனைத்து சாத்தியமான திசைகளிலும் ஒளியை பிரதிபலிக்கிறது.
பொருளிலிருந்து பிரதிபலித்த ஒளி நம் கண்களை அடைகிறது.
நம் மூளை கண்களிலிருந்து தகவல்களைப் பெறுகிறது, அது நம்மைப் பார்க்க வைக்கிறது.
அதாவது ஒளியானது பொருளைப் பிரதிபலித்து நம் கண்களை அடையும்போது அப்பொருள் தெரிகிறது. இதில் எந்த ஒரு படிநிலையில் பிரச்சனை என்றாலும் பார்வை தெரிவதில்லை
நாம் காணும் சூரிய வெள்ளோளியில் பார்க்கக் கூடிய ஏழு வர்ணக் கதிர்கள் உள்ளன .
இக்கதிர்கள் அலை நீளங்கள் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை. சிவப்புக் கதிரின் நீளம் 0.00007 செ மீ இருந்து ஊதாக் கதிரின் அலை நீளம் 0.00004செ மீ வரைதான் நம் கண்களால் காண முடியும் .

சிவப்புக் கதிருக்கு மேலயுள்ள இன்ஃபரா சிவப்பு கதிரின் நீளம் 0.00008 செ மீ அதைப் போல் ஊதாக் கதிருக்கு கீழேயுள்ள அல்ட்ரா வயலட் அலை நீளம் 0.00003 செ மீ இக்கதிர்களை நம் கண்களால் காண முடியாது .
இதே ஒளியில்தான் ரேடியத்திலிருந்து வீசும் காமா கதிர்கள், எக்ஸ்ரே கதிர்கள் காஸ்மிக் கதிர்கள் மற்றும் அறியப்படாத கதிர்கள் இவைகளையும் நம் கண்களால் காண முடியாது.
இதனால்தான் இறைவனின் பிரதான படைப்புகளான ஒளியினால் படைக்கப்பட்ட மலக்குமார்களும், நெருப்பினால் படைக்கப்பட்ட ஜின்களும் நம் கண்களுக்குத் தெரியவில்லை.
மனிதர்களின் பார்வை திறன் சராசரியாக 20 அடி என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஒருவருக்கு கண் பரிசோதனை செய்தபின் முடிவை 15/20 என்று வைத்துக் கொண்டால் சராசரி மனிதருக்கு 20 அடி இருக்க வேண்டும் ஆனால் உங்களுக்கு 15 அடி தான் உள்ளது என்று பொருள். பின் அதற்கேற்ப கண்ணாடி பரிந்துரைக்கப்படும்.
பருந்துவின் பார்வை (Eagle's eye) மனிதர்களோடு ஒப்பீடு செய்யும் போது 20/5 என்று கூறுவார்கள். அதாவது மனிதன் ஒரு பொருளை 5அடி தூரத்தில் நன்றாக பார்க்க முடிவதை பருந்துவால் 20 அடி தூரத்தில் இருந்தே பார்க்க முடியும். இதைத்தான் உதாரணத்திற்கு பருந்துவின் பார்வை (Eagle's eye) உள்ளவர் என்று வழக்கத்தில் கூறப்படுகிறது.

நம் கண்களுக்கு இத்தனை குறைபாடுகள் இருக்கும்போது நம்மைப் படைத்த ரப்பு வை எப்படி நாம் காணமுடியும் ?
70 ஆயிரம் திரைகளுக்கு அப்பால் உள்ள இறைவனை பிடரி நரம்பை விட பக்கத்திலிருப்பதாக எடுததுக்கொள்வோம். பிடரி நரம்பை விட பக்கத்திலிருக்கும் இறைவனுக்கும் நமக்கும் இடையே 70 ஆயிரம் திரைகள் இட்டது நாமா ? இறைவனா ? என்று கேள்வி கேட்கிறார்கள் சூஃபிகள்
அவனுடைய வல்லமைகளையும் படைப்புகளையும் பார்ப்பதன் மூலம் இதயத்தால் அவனை ஓரளவு உணர முடியும். அதுவும் பூரணமாக உணர்ந்துவிட முடியாது. இதனைக் குறித்தே "நீ மகா தூய்மையானவன் உன்னை நாங்கள் அறிய வேண்டிய முறைப்படி அறியவில்லை. அறிய
முடியவில்லை" என பெருமானார்(ஸல்) அவர்களும், அல்லாஹ்வின் நேசச்செல்வர்களான வலிமார்களும் அடிக்கடி கூறி வந்திருக்கின்றனர்.
இவ்வாறு புறக்கண்களால் அவனைப் பார்க்க முடியாதென்பதெல்லாம் இவ்வுலகத்தில் மட்டுந்தான், மறுமை நாளிலும், சுவர்க்கத்திலும் உண்மை விசுவாசிகள் அல்லாஹ்வைப் பார்ப்பர் என்பது ஸுன்னத் வல்ஜமா அத்தைச் சேர்ந்தோரின் கொள்கையாகும்.

இதனைப் பற்றி கீழ்வரும் பெருமானார் (ஸல்) அவர்களின் ஹதீதுகள் தெளிவுபடுத்துகின்றன.
''நாங்கள் ஒரு சமயம் பெருமானார்(ஸல்) அவர்களுடன் அமர்ந்திருந்தோம். அன்று பூரண சந்திரோதய இரவாகும்.பெருமானார் (ஸல்) அவர்கள், சந்திரனை நோக்கினார்கள். நிச்சயமாக நீங்கள் இந்தச் சந்திரனை சிக்கலில்லாமல் தெளிவாகப் பார்ப்பது போல் உங்களுடைய இரட்சகனை நீங்கள் கண் கூடாகப் பார்ப்பீர்கள்" என்று பெருமானார்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (அல்ஹதீது. அறிவித்தவர்: ஹஜ்ரத் ஜரீரிப்னு அப்துல்லாஹ்
மற்றொரு சமயம் சிலர் பெருமானார்(ஸல்) அவர்களை நோக்கி, "மறுமை நாளில் எங்களுடைய இரட்சகனைக் கண்ணால் நாங்கள் பார்க்க முடியுமா?" எனக் கேட்டனர்.
"பூரண சந்திரோதய இரவில் அம்முழுமதியை நீங்கள்பார்ப்பதற்காக நெருக்கி அடித்துக் கொள்வீர்களா? என்று பெருமானார்(ஸல்) கேட்டார்கள்.
"அல்லாஹ்வின் தூதரே! அப்படியிருக்காது." என்று அம்மக்கள் கூறினர்.
வானில் எத்தகைய மேகமும் இல்லாத நிலையில் சூரியனை நீங்கள் பார்ப்பதற்கு துன்பப்படுவீர்களா?" என்று பெருமானார்(ஸல்) கேட்டார்கள்.
"இருக்காது, அல்லாஹ்வின் தூதரே!' என்று பதில் அளித்தார்கள்.

ஆகவே,நிச்சயமாக நீங்கள் அவனை(க் கண் கூடாக)ப் பார்ப்பீர்கள். என்று கூறினார்கள் (அல்ஹதீது அறிவித்தவர்: ஹஜ்ரத்அபூஹுரைரா (ரலி) நூல்கள் புகாரீ, முஸ்லிம்)
இம்மையில் தான் அல்லாஹ்வை கண்களால் பார்க்க முடியாதே தவிர மறுமையில் அவனைப் பார்ப்பது உறுதி என்பதைப் பெருமானாரின் மேற்கண்ட வாக்குகள் திட்டவட்டமாக அறிவிக்கின்றன.
ஆகவே. எவராவது இந்த உலகத்தில், "அல்லாஹ்வைக் காட்டுகிறேன்." என்று கூறினால் அவர் ஏமாற்றுபவரேயல்லாமல் உண்மையானவரல்ல.ஏனெனில் அவனை இக்கண்களால் இவ்வுலகில் பார்க்கவும் முடியாது. எவராலும் காட்டி விடவும் முடியாது.
அவனோ பார்வைகளை எல்லாம் கவனிக்கின்றான். எந்தக் கருத்துடன் அந்தப் பார்வைகள் பார்க்கின்றன ? என்பதை சூழ்ந்து அறிவான். எதுவும் அவனை விட்டு மறைந்து விடவே முடியாது.
அவன் எதையும் நுணுக்கமாக அறிகிறவன், மனிதரின் புலன்களுக்குப் புலப்பட முடியாதவற்றையெல்லாம் அல்லாஹ் அறிகிறவன். எவ்வளவு நுண்ணியமான பொருளாயினும் அதனை அவனே படைத்தவனாகையால், அதன் அந்தரங்கத்தையும் அவன் அறிகிறவன். மேலெழுந்த வாரியாக அறிந்துஅப்படியே விட்டு விடுகிறவனல்லன். அவன் குணமுடையவன். எல்லாவற்றின் தாத்பரியத்தையும் அவன் அறிகிறவன்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 176
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 93 )

قَدْ جَآءَكُمْ بَصَآٮِٕرُ مِنْ رَّبِّكُمْ فَمَنْ اَبْصَرَ فَلِنَفْسِهٖ وَمَنْ عَمِىَ فَعَلَيْهَا وَمَاۤ اَنَا عَلَيْكُمْ بِحَفِيْظٍ

நிச்சயமாக உங்களுக்கு உங்கள் இறைவனிடமிருந்து ஆதாரங்கள் வந்துள்ளன; எவர் அவற்றை (கவனித்து)ப் பார்க்கிறாரோ அது அவருக்கே நன்மையாகும், எவர் (அவற்றைப்) பார்க்காது கண்ணை மூடிக்கொள்கிறாரோ அது அவருக்கே கேடாகும் “நான் உங்களைக் காப்பவன் அல்ல” (என்று நபியே! நீர் கூறும்). (குர்ஆன் : 6:104)
வசன விளக்கம்
நீங்கள் நேர்வழி பெறும் பொருட்டு உங்களுடைய இரட்சகனிடமிருந்து தெளிவான ஆதாரங்கள் உங்களுக்கு வந்துவிட்டன. இந்த ஆதாரங்கள் அனைத்தையும் கொண்டது தான் திருகுர்ஆன். இதன் மூலம் உங்களுடைய அகத்தையும், புறத்தையும் நீங்கள் பரிசுத்தம் செய்து கொள்ள முடியும். பல ஞானோதயங்களையும் உங்களுக்கு இத் திருகுர்ஆன் தருகிறது.
மேலும் அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது அவர்கள் இருதயங்கள் (இருக்கின்றனவே) அவற்றின் மீது பூட்டுப் போடப்பட்டு விட்டனவா? (குர்ஆன் : 47:24)
மேலும் அவனிடமிருந்து இறக்கியருளப்பட்ட அறிவுப்பூர்வமான வழிகாட்டுதல்களான திருக்குர்ஆனை நீங்கள் உங்கள் அகப் பார்வையைக் கொண்டு சிந்தித்து ஏற்று அதன்படி செயலாற்றுங்கள். அவையே உங்கள் வாழ்விற்குப் பலனுள்ளதாக இருக்கும்.
ஆகவே எவர் இதனை நன்கு பார்த்து இதுகூறுகிற பிரகாரம் செயல் படுகின்றனரோ அவருக்குத் தான் நன்மையாகும். அவர் இம்மை, மறுமை இரண்டிலும் நற்பலன் பெறுவார்.
ஆனால் எவர் இதனைப் பார்த்ததும் சிந்திக்காமல் குருடர் போல் நடந்து கொள்கிறாரோ அவருக்குத் தான் கேடாகும். அதனால் அவர் அனுபவிக்கவிருக்கும் வேதனையிலிருந்த யாரும் அவரைக் காப்பாற்றி விட முடியாது. நான் அல்லாஹ்வின் தூதனாகயிருந்தாலும் என்னாலும் அவரைக் காப்பாற்ற முடியாது. நான் உங்கள் மீது (நியமிக்கப்பட்ட) பாதுகாவலன் அல்லன் என்று நபியே, நீர் கூறிவிடும் என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.
திருக்குர்ஆன் இன்னொரு இடத்தில் ,

"(நபியே!) நீர் கூறுவீராக: “மனிதர்களே! நிச்சயமாக உங்கள் இறைவனிடமிருந்து உங்களுக்கு சத்திய(வேத)ம் வந்துவிட்டது; எனவே யார் (அதைப் பின்பற்றி) நேரான வழியில் செல்கிறாரோ அவர் தம் நன்மைக்காகவே அந்நேர்வழியில் செல்கின்றார்; எவர் (அதை ஏற்க மறுத்து) வழி தவறினாரோ, நிச்சயமாக அவர் தமக்குக் கேடான வழியிலே செல்கிறார்; நான் (உங்களைக் கட்டாயப்படுத்தி) உங்கள் காரியங்களை நிர்வகிக்க அதிகாரம் பெற்றவனல்லன்.”
(குர்ஆன் : 10:108)
திருக்குர்ஆன் மற்றொரு இடத்தில் ,
நிச்சயமாக (புறக்) கண்கள் குருடாகவில்லை; எனினும், நெஞ்சுக்குள் இருக்கும் இதயங்கள் (அகக் கண்கள்) தாம் குருடாகின்றன.(குர்ஆன் : 22:46)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 177
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 94 )

وَكَذٰلِكَ نُصَرِّفُ الْاٰيٰتِ وَلِيَقُوْلُوْا دَرَسْتَ وَلِنُبَيِّنَهٗ لِقَوْمٍ يَّعْلَمُوْنَ
நீர் (பல வேதங்களிலிருந்து) பாடம் படித்து வந்தீர் என்று அவர்கள் கூறுவதற்காகவும், இன்னும், அறியக்கூடிய மக்களுக்கு அதனை நாம் தெளிவு படுத்துவதற்காகவும் (நமது) வசனங்களை இவ்வாறு விபரிக்கிறோம். (குர்ஆன் : 6:105)
குறைஷியர் ரோம் தேசத்திலிருந்து ஸய்யார் என்பவரையும் ஜுபைர் என்பவரையும் சிறைப் பிடித்து வந்து அடிமைகளாக்கி வைத்திருந்தனர். இவ்விருவரும் கிறிஸ்துவர்கள்.
இவர்களிடம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு,அவைகள் தமக்கு வஹியின் மூலம் வந்தவைகள் என்று தங்களிடம் கூறுவதாக குறைஷிக் காஃபிர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறித்துப் பேசுவது வழக்கம்.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் திருக்குர்ஆனை சுயமாக இயற்றி இருக்க முடியாது என்று ஒப்புக் கொள்ளும் ஆய்வாளர்கள், யூத, கிறித்தவ சமுதாய மக்களின் வேதங்களிலிருந்து கற்று இவர் கூறுகிறார் எனக் கூறியதுண்டு. இன்றைக்கும் கூட சில கிறித்தவர்கள் இவ்வாறு கூறுவதுண்டு.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்திலேயே திருக்குர்ஆனின் தரத்தைப் பார்த்து வியந்து இவருக்கு யாரோ சொல்லிக் கொடுத்துள்ளனர் என்று விமர்சனம் செய்தனர்.
ஏனெனில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன் வாழ்ந்த ஆதாம், நோவா, மோசே, யோவான், யோபு, தாவீது, ஸாலமோன், இயேசு போன்ற பல்வேறு இறைத்தூதர்கள் பற்றி யூத, கிறித்தவ வேதங்கள் கூறுகின்றன.
திருக்குர்ஆனும் இவர்களைப் பற்றிப் பேசுவதால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முந்தைய வேதங்கள் வழியாக அறிந்து அதைக் கூறுகிறார் எனக் கூறுகின்றனர். பல காரணங்களால் இது தவறாகும்.
மேற்கண்ட நன்மக்களின் பெயர்களை திருக்குர்ஆன் கூறினாலும் யூத, கிறித்தவ வேதங்கள் கூறுவது போல் அவர்களைப் பற்றிக் கூறவில்லை.
மேற்கண்ட நன்மக்கள் குடி, விபச்சாரம், மோசடி போன்ற தீய பழக்க வழக்கங்கள் உடையோராக இருந்தனர் என்று மற்ற வேதங்கள் கூறுவது போல் திருக்குர்ஆன் கூறவில்லை. மாறாக அவர்கள் நன்மக்களாகத் திகழ்ந்தார்கள் என்று கூறுகிறது.
அவர்கள் வாழ்வில் நாம் படிப்பினை பெறத் தேவையான முக்கிய நிகழ்ச்சிகளை மட்டுமே திருக்குர்ஆன் கூறுகிறது. அதுவும் மற்ற வேதங்கள் கூறுவதற்கு எதிராகக் கூறுகிறது.
இவ்வாறிருக்க முந்தைய வேதங்களை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காப்பியடித்து விட்டார்கள் எனக் கருத முடியாது.

"நீர் (பல வேதங்களிலிருந்து) பாடம் படித்து வந்தீர் " - என்பதற்கு ( இதனை இன்னும் நீர் (பிறரிடமிருந்தும் கற்றுக் கொண்டீர் என்று அவர்கள் கூறுவதற்காக ) என்ற ஆயத்தில் சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது.
குறைஷியர் இம்மாதிர் கூறவேண்டும் என்பதற்காக இறைவன் இவ்வத்தாட்சிகளை விபரிக்கவில்லை.
இவ்வாறு விபரிப்பதைக் குறித்து அக்காஃபிர்கள் இம்மாதிரி காரணம் கூறிவிட்டு ஈமான், கொள்ளாமல் நழுவிவிடுவார்கள் என்ற விபரம்தான் இவ்வசனத்தில் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 178
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 95 )

اِتَّبِعْ مَاۤ اُوْحِىَ اِلَيْكَ مِنْ رَّبِّكَ لَاۤ اِلٰهَ اِلَّا هُوَ وَاَعْرِضْ عَنِ الْمُشْرِكِيْنَ
(நபியே!) உம்முடைய இறைவனிடமிருந்து உமக்கு அறிவிக்கப்பெறும் வேத அறிவிப்பை மூலம் நீர் பின்பற்றுவீராக - அவனைத் தவிர (வணக்கத்திற்குரிய) இறைவன் வேறில்லை; இணை வைப்போரை நீர் புறக்கணித்துவிடும். (குர்ஆன் : 6:106)
وَلَوْ شَآءَ اللّٰهُ مَاۤ اَشْرَكُوْا ‌ وَمَا جَعَلْنٰكَ عَلَيْهِمْ حَفِيْظًا‌ وَمَاۤ اَنْتَ عَلَيْهِمْ بِوَكِيْلٍ
அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் இணை வைத்திருக்கவே மாட்டார்கள்; நாம் உம்மை அவர்கள் மீது காப்பாளராக ஏற்படுத்தவில்லை - இன்னும் நீர் அவர்கள் (காரியங்களை நிர்வகிக்கும்) பொறுப்பாளரும் அல்லர். (குர்ஆன் : 6:107)
வேத அறிவிப்பைப் பின்பற்றுவீராக:-
அதாவது அவன் உங்களுக்கு அறிவிக்கின்ற வேத அறிவிப்பை நீங்கள் பின்பற்றி நடங்கள்; அதைச் செயல்படுத்துங்கள். ஏனெனில், உம்முடைய இறைவனிடமிருந்து உமக்கு அறிவிக்கப்படும் வேத வசனங்கள் உண்மையானவை; சந்தேகத்திற்கிடமில்லாதவை. அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை.
இணைவைப்பாளர்களை நீர் புறக்கணிப்பீராக" அதாவது அவர்களை மன்னித்து விட்டுவிடுவீராக; அவர்கள் தரும் துன்பங்களைச் சகித்துக் கொள்வீராக. இறுதியில் இணை வைப்பாளர்களுக்குத் தோல்வியையும், உங்களுக்கு வெற்றியையும் அவன் வழங்குவான்.
அவர்களைத் தவறான வழியில் விட்டுவிடுவதற்குத் தகுந்த காரணம் உண்டு என்பதை அறிந்துகொள்ளுங்கள். அவன் நாடியிருந்தால் எல்லா மக்களுக்கும் நல்வழி காட்டியிருப்பான்; அவர்களை நல்வழியில் ஒன்றிணைத்திருப்பான்.
இதையே, "அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் இணை கற்பித்திருக்க மாட்டார்கள்". விசுவாசிகளாக ஆகியிருப்பர். ஆனால் அவனுடைய நாட்டம் என்ன என்பதை நீங்கள் அறியவும் முடியாது. அதை அறியும் வரையில் நீங்கள் பிரச்சாரம் செய்யாமல் இருக்கவும் கூடாது.
அவர்களுக்கு அல்லாஹ்வின் கட்டளையை எடுத்துரைப்பது நபியே உமது பொறுப்பாகும். வேதனையில் இருந்து அகற்றி விடும் பாதுகாவலராக உம்மை அவர்கள் மீது நாம் ஆக்கவில்லை நீர் அவர்களுடைய காரியங்கள் அனைத்தையும் நிறைவேற்றிக் கொடுக்கும் பொறுப்பாளரும் அல்லர்.
நீர் பிரச்சாரம் செய்து கொண்டே இரும். மற்றவைகளை நாம் கவனித்துக் கொள்கிறோம்" என்பன இவ்வசனங்களில் கருத்தாகும்.
அதாவது அவன் சரியாகவும் விவேகமாகவும் முடிவெடுப்பவன் ஆவான். அதற்கான அதிகாரம் அவனுக்கே உண்டு. அவனை எவரும் கேள்வி கேட்க முடியாது. அவன்தான் மற்றவர்களைக் கேள்வி கேட்பான்.
அல்லாஹ்வின் கட்டளைகளை மக்களுக்கு "எடுத்துரைப்பது மட்டுமே உமது கடமையாகும்" குர்ஆன் (42:48) என்று வேறொரு வசனம் கூறுகின்றது.

வேறு சில வசனங்களில் அல்லாஹ் கூறுகின்றான்; எனவே, நீர் அறிவுரை கூறுவீராக, நீர் அறிவுரை கூறுபவரேயாவீர், நீர் அவர்களை நிர்வகிப்பவர் அல்லர். குர்ஆன் (88:21,22)
எடுத்துச் சொல்வதுதான் உமது கடமை. கணக்குக் கேட்பது நமது பொறுப்பாகும். குர்ஆன் (13:40)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 179
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 96 )

وَلَا تَسُبُّوا الَّذِيْنَ يَدْعُوْنَ مِنْ دُوْنِ اللّٰهِ فَيَسُبُّوا اللّٰهَ عَدْوًا بِغَيْرِ عِلْمٍ  كَذٰلِكَ زَيَّنَّا لِكُلِّ اُمَّةٍ عَمَلَهُمْ ثُمَّ اِلٰى رَبِّهِمْ مَّرْجِعُهُمْ فَيُنَبِّئُهُمْ بِمَا كَانُوْا يَعْمَلُوْنَ
அவர்கள் அழைக்கும் அல்லாஹ் அல்லாதவற்றை நீங்கள் திட்டாதீர்கள்; (அப்படித் திட்டினால்) அவர்கள் அறிவில்லாமல், வரம்பை மீறி அல்லாஹ்வைத் திட்டுவார்கள் - இவ்வாறே ஒவ்வொரு சமூகத்தாருக்கும் அவர்களுடைய செயலை நாம் அழகாக ஆக்கியுள்ளோம் - பின்பு அவர்களுடைய மீட்சி அவர்களின் இறைவனிடமே இருக்கிறது. அப்போது அவர்கள் செய்ததை அவர்களுக்கு அவன் அறிவிப்பான். (குர்ஆன் : 6:108)
இந்த வசனத்தில் அல்லாஹ், இணைவைப்பாளர்கள் வழிபடக்கூடிய தெய்வங்களை ஏசக் கூடாது என்று நபி (ஸல்) அவர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் கட்டளையிடுகின்றான். ஏனெனில், அதனால் ஏற்படும் நன்மைகளைவிட தீமையே அதிகம். பதிலுக்குப் பதிலாக, இணைவைப்பாளார்கள் முஸ்லிம்கள் வழிபடக்கூடிய உண்மையான இறைவனை ஏசுவார்கள்.
"அவனே, 'அல்லாஹ்'; அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை" (4:87) என்று ஒரு வசனம் கூறும்.
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இந்த வசனத்திற்கு விளக்கமளிக்கையில் கூறியதாவது: இணைவைப்பாளர்கள் நபி (ஸல்) அவர்களிடம். "முஹம்மதே! எங்கள் தெய்வங்களை ஏசுவதை விட்டுவிடுங்கள், இல்லையேல். நாங்கள் உம்முடைய இறைவனை ஏசுவோம்' என்று கூறினர்.
எனவேதான் அவர்கள் வழிபடும் சிலைகளை ஏசக் கூடாது என்று கட்டளையிடும் முகமாக, "அல்லாஹ்வை யன்றி (வேறு யாரைத் தெய்வங்களாக) அவர்கள் அழைக்கிறார்களோ அவர்களை நீங்கள் ஏசாதீர்கள் (அவ்வாறு ஏசினால்) அவர்கள் அறிவின்றி எல்லை மீறி அல்லாஹ்வை ஏசவார்கள்" என்று இந்த வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்.
அபூதாலிப் மரணப் படுக்கையில் இருந்தபோது குறைஷித் தலைவர்கள் தங்களிடையே ஓர் ஆலோசனை நடத்தினார்கள். "நாம் அபூதாலிபிடம் சென்று, அவருடைய சகோதரர் மகன் முஹம்மதை நம்மைவிட்டு விலகிக் கொள்ளச் செய்யுமாறு அவருக்குக் கட்டளையிடுவோம். ஏனெனில் அபூதாலிப் இறந்த பிறகு முஹம்மதைக் கொலை செய்வது நமக்கு வெட்க கேடாகும்.
அவ்வாறு நாம் கொலை செய்தால் அரபியர் நம்மைக் குறை கூறுவார்கள். இதுவரை அபூதாலிப் முஹம்மதைக் கொலை செய்துவிடாமல் குறைஷியரைத் தடுத்துவந்தார்; அபூதாலிப் இறந்ததும் குறைஷியர் முஹம்மதைக் கொலை செய்துவிட்டனர்" என்று அவர்கள் நம்மைப் பழிப்பார்கள். ஆகவே நாம் அபூதாலிபைச் சந்தித்துப் பேசுவோம் என்று குறைஷித் தலைவர்கள் முடிவெடுத்தனர்
அதன்படி அபூசுஃப்யான் அபூஜஹ்ல், நள்ர் பின் அல்ஹாரிஸ், உமய்யா பின் கலஃப், உபை பின் கலஃப், உக்பா பின் அபீமுஐத், அம்ர் பின் அல்ஆஸ், அஸ்வத் பின் அல்பக்தரீ ஆகியோர் அபூதாலிபைச் சந்திக்கச் சென்றனர். முதலில் முத்தலிப் என்பவரை அபூதாலிபிடம் அனுப்பி அனுமதி பெற்று வருமாறு கூறினர். அவர் அபூதாலிபிடம் சென்று, "உங்கள் சமுதாயத் தலைவர்கள் உங்களைச் சந்திக்க விரும்புகிறார்கள்" என்று கூறினார்.உடனே அவர்களுக்கு தாலிப் அனுமதி வழங்கினார்.
பின்னர் அவர்கள் அனைவரும் உள்ளே சென்றார்கள்." அபூதாலிப் ! நீங்கள் எங்களுடைய மூத்த தலைவர். உங்களுடைய சகோதரர் மகன் முஹம்மத் நம்மையும், நம் தெய்வங்களையும் அவமதிக்கிறார். ஆகவே, நீங்கள்

அவரை அழைத்து, நம் தெய்வங்கனை அவமதிப்பதைத் தடுத்து நிறுத்த வேண்டும்: நாங்கள் அவரையும் அவருடைய இறைவனையும் (ஏசு வதை) விட்டுவிடுகிறோம்." என்று கூறினர்.
உடனே அபூதாலிப் நபி (ஸல்) அவர்களை அழைத்தார்கள். நபி (ஸல்) அவர்களும் அங்கு வந்தார்கள். அப்போது அபூதாலிப் நபி (ஸல்) அவர்களிடம், இவர்கள் உம்முடைய சமுதாயத்தார்; தந்தைவழிச் சகோதரர்கள் ஆவர் (எனவே. அவர்கள் கூறுவதைக் கேட்பீராக)" என்று கூறினார்கள்.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறைஷித் தலைவர்களிடம், "உங்கள் விருப்பம் என்ன?" என்று கேட்டார்கள்.
அதற்கு அவர்கள், "எங்களையும் எங்கள் தெய்வங்களையும் அவமதிப்பதை நீங்கள் நிறுத்திக் கொள்ள வேண்டும். உம்மையும் உம்முடைய இறைவனையும் அவமதிப்பதை நாங்கள் விட்டுவிடுகிறோம்" என்று கூறினர்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "நான் இதற்கு உத்தரவாதம் அளிக்கிறேன்.
அதற்குப் பதிலாக நீங்கள் ஓர் உறுதி மொழி அளிப்பீர்களா? அதை நீங்கள் நிறைவேற்றினால், அரபு நாடுகள் அனைத்தும் உங்களுக்குச் சொந்தமாகி விடும். பிற அந்நிய நாடுகள் உங்களுக்குப் பணிந்துவிடும். அவை உங்களுக்குக் கட்டுப்பட்டு வரி செலுத்தும் ஆகவே அந்த உறுதிமொழியை நீங்கள் ஏற்பீர்களா? என்று கேட்டார்கள்.
அப்போது அபூஜஹ்ல், உம்முடைய தந்தைமீது சத்தியமாக! அது மட்டுமல்ல; அதைப் போன்ற பத்து உறுதிமொழிகளை வேண்டுமென்றாலும் நாங்கள் தருகிறோம்" என்று கூறினார். பின்னர் அவர்கள், அந்த உறுதிமொழி என்ன? என்று கேட்டனர்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்று உறுதி கூறுங்கள்" என்று சொன்னார்கள்.
ஆனால், அவர்கள் அதை ஏற்க மறுத்தார்கள். அதைக் கேட்டு வெறுப்படைந்தார்கள்.
பின்னர் அபூதாலிப், "என் சகோதரர் மகனே! இதைத் தவிர வேறு எதை வேண்டுமென்றாலும் நீ கூறு. ஏனென்றால், உன் சமுதாயத்தார் இதனால் மிகவும் அச்சமடைந்துள்ளனர்' என்று கூறினார்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "என் தந்தையின் சகோதரரே! அவர்கள் சூரியனைக் கொண்டுவந்து என் கையில் வைக்கும்வரை அந்த ஏகத்துவ உறுதிமொழியைத் தவிர வேறு எதையும் நான் சொல்லமாட்டேன்.ஒரு வேளை அவர்கள் சூரியனை என் கையில் கொடுத்தாலும்,அதைத் தவிர வேறு எதையும் நான் கூற மாட்டேன்" என்று அவர்கள் நிராசையாகும் வகையில் உறுதியாகச் சொன்னார்கள்.
இதைக் கேட்டுக்கெண்டிருந்த குறைஷியர் கோபடைந்தனர் "நீர் எங்கள் தெய்வங்களை ஏசுவதை நிறுத்திக்கொள்ளும் இல்லையென்றால். உம்மையும் உமக்குக் கட்டளையிடுகின்ற உம்முடைய இறைவனையும் நாங்கள் ஏசுவோம்" என்று குறைஷித் தலைவர்கள் கூறினர் அப்போதுதான் இந்த வசனத்தை அல்லாஹ் அருளினான். நூல் : தஃப்சீர் தபரீ, தஃப்சீர் இப்னு அபீஹாத்திம்
ஆக பெரிய தீமையைக் கருத்தில் கொண்டு ஒரு நன்மையைக் கைவிடலாம் என்பது இதிலிருந்து தெரிகிறது. இந்த வகையில் உள்ளதே பின்வரும் நபிமொழியும்
அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) அவர்கள் கூறியதாவது: "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், 'தம் தாய் தந்தையரை ஏசுபவர் சபிக்கப்பட்டவர் ஆவார் என்று கூறினார்கள்.
அப்போது ஒரு மனிதர் தம் தாய் தந்தையார் எவ்வாறு ஏசுவார்? என்று கேட்கப்பட்டது.
நபி (ஸல்) அவர்கள். ஒருவர் இன்னொருவரின் தந்தையை ஏசுவார். உடனே பதிலுக்கு அவர் இவருடைய தந்தையையும் தாயையும் ஏசுவார். (ஆக, தம் தாய் தந்தையர் ஏசப்பட இவரே காரணமாகிறார்) என்றார்கள், இவ்வாறே, அல்லாஹ்வை ஏசப்பட இறைநம்பிக்கையாளர்கள் காரணமாக இருக்கக் கூடாது என்பதையே இந்த வசனம் உணர்த்துகின்றது.
அவர்களது செயலை அழகாகக் காட்டினோம்:

அடுத்து, "இவ்வாறுதான். ஒவ்வொரு சமுதாயத்தாருக்கும் அவர்களது செயலை நாம் அழகாக்கிக் காட்டினோம்' என்று இந்த வசனத்தில் அல்லாஹ் தெரிவிக்கின்றான்.
அதாவது இந்த மக்கள், தாம் வழி படக்கூடிய சிலைகளை நேசிப்பதையும் அவற்றைப் பராமரித்து அவற்றுக்குப் பணிவிடை செய்வதையும் புனிதமானவையாக அவர்களுக்கு நாம் காட்டினோம்.
சென்ற முந்தைய சமூகங்களுக்கு அவர்களின் செயல்களை அழகானவையாகக் காட்டினோம். அல்லாஹ்வின் விருப்பத்திலும் தேர்விலும் முழு மையான அர்த்தம் இருக்கும்.
"பின்னர் அவர்கள் தம் இறைவனிடமே திரும்பிவர வேண்டியுள்ளது" என்று இவ்வசனம் கூறுகின்றது. அதாவது இறுதியில் அவர்கள் தங்கள் இறைவனிடமே திரும்பிச் செல்ல வேண்டியுள்ளது.
"அப்போது அவன், அவர்கள் (இவ்வுலகில்) செய்துகொண்டிருந்தவை பற்றி அவர்களுக்குத் தெரிவிப்பான்" என்று இந்த வசனத்தின் இறுதித் தொடர் கூறுகின்றது.
அதாவது அவர்களின் செயல்களுக்கேற்ப அவர்களுக்கு இறைவன் பிரதிபலன் வழங்குவான். அவர்கள் நன்மை புரிந்திருந்தால் நன்மையும், தீமை செய்திருந்தால் தண்டனையும் அளிப்பான்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 180**

**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 97 )**

وَاَقْسَمُوْا بِاللّٰهِ جَهْدَ اَيْمَانِهِمْ لَٮِٕنْ جَآءَتْهُمْ اٰيَةٌ لَّيُؤْمِنُنَّ بِهَا قُلْ اِنَّمَا الْاٰيٰتُ عِنْدَ اللّٰهِ وَمَا يُشْعِرُكُمْ اَنَّهَاۤ اِذَا جَآءَتْ لَا يُؤْمِنُوْنَ

(நிராகரித்துக் கொண்டிருக்கும்) அவர்கள், அல்லாஹ்வின் மீது உறுதியான சத்தியம் செய்து, தங்களுக்கு ஓர் அத்தாட்சி வந்துவிடுமானால் தாம் நிச்சயமாக அதைக் கொண்டு ஈமான் கொள்வதாக கூறுகிறார்கள்.

(நபியே!) அவர்களிடம்) நீர் கூறும்: அத்தாட்சிகள் யாவும் அல்லாஹ்விடமே இருக்கின்றன. அந்த அத்தாட்சிகள் வரும்பொழுது நிச்சயமாக அவர்கள் ஈமான் கொள்ளமாட்டார்கள் என்பதை உங்களுக்கு எது அறிவித்தது?(குர்ஆன் : 6:109)

குறைஷிக் காஃபிர்கள் நபி ஸல்லல்லாஹ் அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஒரு கைத்தடியை வைத்திருந்தார்கள் அத்தடியினால் கல்லை அடிப்பார்கள். அதிலிருந்து 12 ஊற்றுக்கண்கள் ஒலித்தோடும்.

ஹளரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மரணித்தவர்களை உயிர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள்.

ஹளரத் ஸாலிஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மலையிலிருந்து ஒட்டகையை வரவழைத்தார்கள் என்று எங்களுக்கு நீர் கூறுகிறீர்.

அவர்கள் தங்கள் சமூகத்தாருக்குக் காண்பித்த இம்மாதிரியான அற்புதச் செய்கைகளைப் போல், எங்களுக்கும் நீர் ஒரு அற்புதத்தைச் செய்து காண்பியும், அவ்வாறு நீர் செய்து காண்பிப்பீராயின் நாங்கள் உம்மை உண்மையான நபியென்று நம்பி கொள்வோம் என்று சத்தியம் செய்தனர். அதிலும் மிக உறுதியாக சத்தியம் செய்தனர்.

அப்பொழுது, நபி ஸல்லல்லாஹு அலைஹி வால்லம் அவர்கள். அவர்களை நோக்கி "நீங்கள் எதை விரும்புகிறீர்கள்?" என வினவினார்கள்,

அதற்கு அவர்கள் "இந்த ஸஃபா மலையை தங்கமாக்க வேண்டும், அல்லது மரணமடைந்து போன எங்கள் மனிதரிற் சிலரை உயிர்ப்பிக்க வேண்டும். அவர்களிடம் உம்மைப் பற்றி நீர் கூறுவது சத்தியமா அல்லது அசத்தியமா?" என்பதை விசாரிப்போம், அல்லது உமக்கு ஆதரவாக சாட்சியங் கூறும்படியான மலக்குகளை நீர் எங்களுக்குக் காண்பிக்க வேண்டும்" என்று கூறினார்கள்.

அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "நீங்கள் கூறுவதில் எதையேனும் நான் செய்தால், என்னை நீங்கள் உண்மையாளரென நம்புவீர்களா?" என்று வினவினார்கள்.

அதற்கவர்கள், "ஆம், அல்லாஹ்வின் மீது சத்தியமாகக் கூறுகிறோம். அவ்வாறு நீர் செய்தால் நாங்களெல்லோரும் உம்மைப் பின்பற்றுவோம்" என்று கூறினர். அவர்களும் ஈமான் கொள்ளட்டும் என்பதைக் கருதி அவர்கள் கேட்பதுபோல் அற்புதத்தைச் செய்யும்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை முஸ்லிம்களும் கேட்டுக் கொண்டனர்.

ஆகவே, அவர்கள் விருப்பப்படி செய்வதற்காக அல்லாஹுத் தஆலாவிடம் துஆச் செய்ய நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விரும்பினார்கள்.

உடனே, ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வந்து, நபி லல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம், “நீர் விரும்பினால் அப்படியே ஆகும். எனினும், அவ்வாறு நீர் அல்லாஹுத்தஆலாவைக் கேட்டு, அவனும் அதனை அளித்துவிட்டபின் அவர்கள் ஈமான் கொள்ள வில்லையானால், அவர்கள் அனைவரையும் வேரறுத்து விடக்கூடிய வேதனை அவர்களுக்கு நிச்சயமாக வரும். நீர் விரும்பினால். இம்மாதிரி துஆச் செய்யாமல், அவர்களாக நன்மை தீமையை உணர்ந்து, தவ்பாச் செய்து நேர்வழிக்கு வரும்படி விட்டு விடலாம்"

என்று கூறினார்கள்.

ஆகவே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முஃஜிஸாவைக் காண்பித்து, அவர்கள் ஈமான் கொள்ளாவிடில் அழிந்துபோவதைப் பார்க்கினும், அவர்கள் கூறும் முஃஜிஸாவைக் கொண்டு வராமல் இருந்துவிடுவதுதான் அவர்களுக்கு நன்மை என்றும் அவர்கள் தாங்களாக உய்த்துணர்ந்து தவ்பாச் செய்து கொள்ளட்டும் என்று இருந்துவிட்டார்கள்.

ஆகவே, இந்த ஆயத்தில் அக்குறைஷியர் செய்த சத்தியத்தைக் குறித்தும், அவர்களது நிலையைக் குறித்தும் சொல்லப்பட்டிருக்கிறது.

மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான்: "அற்புதங்களை நாம் அனுப்புவதற்கு தடையாக இருப்பது முன்னோர்கள் அவற்றை மறுதலித்தது தான் ( குர்ஆன் 17:59 )

சூரா அர்ரஃது (இடி) அத்தியாயத்திலும் மக்கத்து குறைஷிகள் நபிகளாரிடம் இதே போன்று அற்புதங்கள் செய்ய கேட்டிருக்கிறார்கள்.

https://m.facebook.com/story.php?story_fbid=3761255020800492&id=100007480923921&mibextid=Nif5oz

ஓர் இறை நம்பிக்கையாளனின் இறை நம்பிக்கையில் அற்புதங்களின் மீதான அளவு கோல் - மதிப்பீடு என்னவாக இருக்க வேண்டும் ?

அரபியில் முஃஜிஸா - அற்புதம் என்று பொருள் சாத்தியம் இல்லாத ஒன்றை செய்து காட்டுவது இயற்கை விதிகளுக்கு அப்பாற்பட்ட, அதற்கான காரண காரியங்களை விளக்கிக் கூறிட முடியாத அல்லது மனித அறிவாற்றலால் விளங்கிட முடியாத சம்பவம் அல்லது காட்சி

மனித குல சக்திக்கு அப்பாற்பட்ட செயல் என்றும் விரிவான பொருள் கொள்ளலாம்.

ஆக, அற்புதங்களை கண்களை மூடிக்கொண்டு நிராகரிப்பதும் தவறு. இஸ்லாமிய மார்க்கத்தின் உயர்வுக்கு அற்புதம் தான் அளவுகோல் என்று நம்புவதும் இஸ்லாமிய மார்க்க

அடிப்படையில் தவறு.

அப்படியென்றால் குர்ஆனில் பல்வேறு வசனங்களில், பல இறைத்தூதர்கள் நிகழ்த்திக்காட்டிய அற்புதங்கள் பற்றி கூறப்படுபவைகளை அந்த இறைத்தூதர்கள் தங்களின்

தூதுத்துவததை- நபித்துவத்தை மக்களிடையே நிலை நாட்டவே அற்புதங்களை மேற்கொண்டனர்” என்று நம்ப வேண்டுமென இமாம் முல்லா அலீ காரீ (ரஹ்) அவர்கள் தங்களின் ஷரஹ்ஃபிக்ஹுல் அக்பர் எனும் நூலில் தெளிவுபடுத்துகின்றார்கள்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 181
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 98 )

وَنُقَلِّبُ اَفْــِٕدَتَهُمْ وَاَبْصَارَهُمْ كَمَا لَمْ يُؤْمِنُوْا بِهٖۤ اَوَّلَ مَرَّةٍ وَّنَذَرُهُمْ فِىْ طُغْيَانِهِمْ يَعْمَهُوْنَ
மேலும், நாம் அவர்களுடைய உள்ளங்களையும் அவர்களுடைய பார்வைகளையும் திருப்பிவிடுவோம் - அவர்கள் முதலில் இதை நம்பாமல் இருந்தது போலவே; இன்னும் அவர்கள் தங்களுடைய வழி கேட்டிலேயே தட்டழிந்து திரியுமாறு அவர்களை நாம் விட்டுவிடுவோம்.
(குர்ஆன் : 6:110)

இதற்கு முன் ஒரு முறை மக்கத்து குறைஷியர் ஓர் அமாவாசை இருட்டில் பூரண சந்திரனை வரவழைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர் அவர்களில் விருப்பப்படி நபி ஸல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சந்திரனை வரவழைத்தார்கள்.
பௌர்ணமி அன்று அவர்களுக்குச் சந்திரனைப் பிளந்து காட்டினோம். நமது தூதரின் வாயிலாக சில சில அற்புதங்களைச் செய்து காட்டினோம் அவற்றைக் கண்ட பின்னர். "இதுவெல்லாம் சூனியம் " என்று கூறி விசுவாசம் கொள்ளாமலேயே இருந்துவிட்டனர்.

அவ்வாறு அவர்கள் முதல் தடவை விசுவாசம் கொள்ளாமலிருந்தது போலவே அற்புதத்தையும், ஆதாரத்தையும் இப்பொழுது காட்டினாலும் விசுவாசம் கொள்ள மாட்டார்கள். அவர்களுடைய மனப்பான்மை முன்பிருந்த மாதிரியே இருக்கிறது. அதில் எத்தகைய மாறுதலும் ஏற்படவில்லை.
அதனால் அவர்களுடைய இருதயங்களையும், பார்வைகளையும் நாம் புரட்டி விட்டோம். இனியும் அவர்கள் உண்மையை எங்கே உணரப் போகிறார்கள்? மேலும் அவர்களுடைய வரம்பு மீறிய போக்கிலேயே அக்கிரமத்திலும், வழிகேட்டிலும் அவர்கள் தட்டழிந்து நிலை குலைந்து திரியுமாறே அவர்களை நாம் விட்டிருக்கின்றோம்.
அவர்கள் கேட்டுக் கொண்ட அற்புதங்களில் விநோதமானவை எவையென்றால், நமது மலக்குகள் அவர்களிடம் நேரிடையாக வர வேண்டும். இறந்து போனவர்களில் சிலராவது உயிர் பெற்று எழுந்துவந்து, அவர்களிடம் பேச வேண்டும் என்பனவாகும். அப்படியே அவர்களுடைய கோரிக்கை நிறைவேற்றப்பட்டாலும் அவர்கள் விசுவாசம் கொள்ளப்போவதில்லை.
மலக்குகள் அவர்களிடம் நேரிடையாக வருவது குறித்து குர்ஆனில் ,
هَلْ يَنْظُرُوْنَ اِلَّآ اَنْ يَّاْتِيَهُمُ اللّٰهُ فِىْ ظُلَلٍ مِّنَ الْغَمَامِ وَالْمَلٰٓـِٕكَةُ وَقُضِىَ الْاَمْرُ وَاِلَى اللّٰهِ تُرْجَعُ الْاُمُوْرُ
(நபியே! இவ்வளவு தெளிவான வசனங்களையும் நிராகரிக்கும் அவர்கள்) அல்லாஹ்வும் மலக்குகளும் (வெண்) மேகத்தின் நிழலில் அவர்களிடம் வந்து (அவர்களை அழித்து) அவர்களின் வேலையை முடிப்பதைத் தவிர (வேறெதையும்) அவர்கள் எதிர்பார்க்கின்றனரோ? (அவர்களுடைய) எல்லா விஷயங்களும் (மறுமையில்) அல்லாஹ்விடமே (விசாரணைக்குக்) கொண்டு வரப்படும். (குர்ஆன் : 2:210)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 182
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 99 )

وَلَوْ اَنَّـنَا نَزَّلْنَاۤ اِلَيْهِمُ الْمَلٰٓـِٕكَةَ وَكَلَّمَهُمُ الْمَوْتٰى وَ حَشَرْنَا عَلَيْهِمْ كُلَّ شَىْءٍ قُبُلًا مَّا كَانُوْا لِيُؤْمِنُوْۤا اِلَّاۤ اَنْ يَّشَآءَ اللّٰهُ وَلٰـكِنَّ اَكْثَرَهُمْ يَجْهَلُوْنَ
இன்னும், நிச்சயமாக நாம் மலக்குகளை அவர்களிடம் இறக்கி வைத்தாலும், இன்னும், அவர்களுடன் மரணித்தவர்கள் பேசினாலும், இன்னும், அவர்களுக்கு முன்னிலையில் எல்லா பொருட்களையும் நாம் ஒன்று சேர்த்தாலும், அல்லாஹ் நாடினாலன்றி அவர்கள் ஈமான் கொள்பவர்களாக இல்லை. எனினும், அவர்களில் பெரும்பாலானவர்கள் அறியமாட்டார்கள். (குர்ஆன் : 6:111)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் அக்காஃபிர்கள் கோரிக் கொண்ட மூவகை அற்புதங்களுக்கு இங்கு மறுமொழி சொல்லப்பட்டிருக்கிறது.
1) அதாவது மலக்குகளை அவர்கள் பிரத்தியட்சமாகப் பார்த்து, அவர்கள் சாட்சியம் கூறவேண்டும் என்று அவர்கள் கூறியதற்கேற்ப, நாம் மலக்குகளை இறக்கிவைத்தாலும் அவர்கள் அல்லாஹ்வின் நாட்டமின்றி, ஈமான் கொள்ளமாட்டார்கள்.
2) குறைஷியர்கள் குஸ்ஸிய்யுப்னு கிலாபையும், ஜத்ஆனுப்னு அம்ரையும் கௌரவிப்பவர்கள். அவ்விருவரும் உண்மையாளர்கள் என்பது அவர்களது நம்பிக்கை. ஆகவே, அவ்விருவரையும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உயிர்ப்பிக்க வேண்டும் என்றும், அவ்விருவரும் சாட்சியஞ் கூற வேண்டும் என்றும் அவர்கள் கேட்டுக் கொண்டனர்.
அவ்விருவர் மட்டும் என்ன? மரணித்தவர் யாவருமே உயிர்ப்பிக்கப்பட்டு, அவர்களுடன் குறைஷியர் பேசிய போதினும், அல்லாஹ்வின் நாட்டமின்றி, அவர்கள் ஈமான் கொள்ள மாட்டார்கள் என்ற விபரம் ; இன்னும், அவர்களுடன் மரணித்தவர்கள் பேசினாலும் என்ற வசனத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

3) ஸஃபா மலையைத் தங்கமாக்க வேண்டும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அக்குறைஷியர் கேட்டுக் கொண்டனர். ஸஃபா மலையைத் தங்கமாக்குவதென்ன? எறும்பு முதல் யானை வரையுள்ள எல்லாவற்றையும் கூட்டங் கூட்டமாக அவர்கள் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்திய போதினும் அல்லாஹ்வின் நாட்டமின்றி அவர்கள் ஈமான் கொள்ளமாட்டார்கள் என்ற விபரம் "இன்னும், அவர்களுக்கு எல்லாப் பொருட்களையும் கூட்டங்கூட்டமாக நாம் ஒன்று சேர்த்தாலும்" என்ற வசனத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.
"எனினும், அவர்களில் பெரும்பாலானவர்கள் அறியமாட்டார்கள்" என்ற வசனத்திற்கு மூமின்களில் பெரும்பாலானவர்கள் அறியமாட்டார்கள் என்பது கருத்து.
ஏனெனில், குறைஷிக்காஃபிர்கள் அற்புதங்களைப் பார்த்தேனும் ஈமான் கொள்ளட்டும் என்று மூமின்களும் விரும்பி, குறைஷிக் காஃபிர்கள் கோரும் அற்புதத்தைச் செய்யும்படி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் கேட்டார்கள். ஆனால், அவ்விதமான அற்புதங்களைச் செய்தாலும் அல்லாஹ்வின் நாட்டமின்றி அக்காஃபிர்கள் ஈமான் கொள்ளமாட்டார்கள் என்பதை அவர்கள் அறியவில்லை என்பது இதில் விபரிக்கப்பட்டிருக்கிறது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 182
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 99 )

وَكَذٰلِكَ جَعَلْنَا لِكُلِّ نَبِىٍّ عَدُوًّا شَيٰطِيْنَ الْاِنْسِ وَالْجِنِّ يُوْحِىْ بَعْضُهُمْ اِلٰى بَعْضٍ زُخْرُفَ الْقَوْلِ غُرُوْرًا‌ وَلَوْ شَآءَ رَبُّكَ مَا فَعَلُوْهُ‌ فَذَرْهُمْ وَمَا يَفْتَرُوْنَ
இவ்வாறே ஒவ்வொரு நபிக்கும், மனிதரிலும் ஜின்களிலும் உள்ள ஷைத்தான்களை விரோதிகளாக நாம் ஆக்கியிருந்தோம்; அவர்களில் சிலர் மற்றவரை ஏமாற்றும் பொருட்டு, அலங்காரமான வார்த்தைகளை இரகசியமாகச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்; (நபியே!) உம்முடைய இறைவன் நாடியிருந்தால் இவ்வாறு அவர்கள் செய்திருக்க மாட்டார்கள் - எனவே அவர்களையும் அவர்கள் கூறும் பொய்க்கற்பனைகளையும் விட்டுவிடுவீராக. (குர்ஆன் : 6:112)
وَلِتَصْغٰۤى اِلَيْهِ اَفْـِٕدَةُ الَّذِيْنَ لَا يُؤْمِنُوْنَ بِالْاٰخِرَةِ وَلِيَرْضَوْهُ وَلِيَقْتَرِفُوْا مَا هُمْ مُّقْتَرِفُوْنَ
(ஷைத்தான்களின் அலங்காரமான பேச்சை) மறுமையை நம்பாதவர்களின் உள்ளங்கள் செவிமடுப்பதற்காகவும் அதை திருப்தி கொள்வதற்காகவும் அவர்கள் செய்து வந்ததையே தொடர்ந்து செய்வதற்காகவும் (இவ்வாறு ஷைத்தான்கள் மயக்கினர்).(குர்ஆன் : 6:113),
கிறிஸ்தவச் சமயப் பெரியார் வர(க்)கா பின் நவ்ஃபல் அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் நீங்கள் பெற்றுள்ள( உண்மையான வேதம் போன்ற)தைப் பெற்ற எவரும் மக்களால் பகைத்துக் கொள்ளப்படாமல் இருந்ததில்லை என்று கூறினார்கள் ( புகாரி 6982)
"மனிதரிலுள்ள ஷைத்தான்கள் என் விஷயத்தில் ஜின்களிலுள்ள ஷைத்தான்களைப் பார்க்கினும் மிகப்பலமாக இருக்கின்றன. ஜின்களிலுள்ள ஷைத்தான்களை விட்டு நான் அல்லாஹுத் தஆலாவிடத்தில் காவல் தேடுவேன். அவைகள் என்னை விட்டுச் சென்றுவிடும். மனிதரிலுள்ள ஷைத்தான்கள் என்னைப் பாவத்தின் பக்கம் இழுத்துக் கொண்டு சென்று விட்டன" என்று மாலிக்குப்னுதீனார் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறி இருக்கிறார்கள்.
மற்றோர் அறிவிப்பில் அபூ உமாமா (ரலி) அவர்கள் கூறியிருப்பதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அபூதர் (ரலி) அவர்களிடம்,
"அபூதர்ரே! ஜின்களிலும் மனிதர்களிலும் உள்ள ஷைத்தான்களின் தீங்கிலிருந்து பாதுகாக்கும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தித்தீரா?" என்று கேட்டார்கள்.

அப்போது அபூதர் (ரலி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே! மனிதர்களிலும் ஷைத்தான்கள் உள்ளனரர் என்று கேட்டார்கள் அதற்கு நபி (ஸல்) அவர்கள். ஆம் என்று கூறிவிட்டு இந்த வசனத்தை குர்ஆன் (6:112) ஓதிக்காட்டிக் காட்டினார்கள் - (தஃப்சீர் இப்னு அபீஹாத்திம் )
இக்ரிமா (ரஹ்) அவர்கள் இந்த வசனத்திற்கு விளக்கமளிக்கையில் கூறியதாவது: "மனிதர்களிலும் ஷைத்தான்கள் உண்டு. ஜின்களிலும் ஷைத்தான்கள் உண்டு. மனித ஷைத்தான்கள் ஜின் ஷைத்தான்களிடம் தாங்கள் மனிதர்களை எவ்வாறு வழி தவறச்
செய்தோம் என்று தெரிவிக்கிறார்கள். மேலும், நல்லவர்களை ஏமாற்றுவதற்காகக் கவர்ச்சியான வாதங்களைத் தங்களிடையே அவர்கள் பரிமாறிக் கொள்கிறார்கள்.
பின்னர் மனித ஷைத்தான்கள் மனிதர்களை வழி தவறச் செய்கிறார்கள்.ஜின் ஷைத்தான்கள் ஜின்களை வழி தவறச் செய்கிறார்கள், மனித ஷைத்தான்களும் ஜின் ஷைத்தான்களும் சந்தித்துக்கொள்ளும்போது அவர்களில் ஒருவன் மற்றவனிடம் நான் என் இனத்தாரை இன்னின்ன வழிகளில் கெடுத்தேன். நீயும் உன் இனத்தாரை இவ்வாறு வழி தவறச் செய் என்று கூறுவான்.
தவறானதும் பொய்யானதுமான செய்திகளைக் கலந்து ஒருவருக் கொருவர் சொல்வார்கள்" என்பது இந்த ஆயத்தின் கருத்து.
ஒரு மூமின் மரணித்து விட்டால் அவருடைய உறவினர்களைப் பார்க்கினும் அதிகமாக ஷைத்தான் அழுவான். ஏனெனில், இவ்வுலகில் அவன் செய்யும் குழப்பத்திற்கு ஒரு ஆள் இல்லாமற் குறைந்து போவதுதான் அதற்குக் காரணம்,
பின்னர், அந்த மூமினுடைய ரூஹை வானத்திற்குக் கொண்டு
செல்லப்படும்போதும், "இந்த அடியாரை ஷைத்தானை விட்டுக் காப்பாற்றியவனான அல்லாஹுத் தஆலா தூயவன்" என்று மலக்குகள் கூறுகிறார்கள் என்று சில ஷெய்குகள் கூறி இருக்கிறார்கள். ஆகவே, மூமின்கள் ஷைத்தானுடைய வஸ்வஸாவை விட்டு நீங்கி இருப்பது அவசியமாகும்.
ஷயாத்தீனுல் இன்ஸ் அதாவது மனிதரிலுள்ள ஷைத்தான்கள் என்பது நஃப்ஸுல் அம்மாராவாகும். இது எல்லாப் பகைவர்களிலும் மிகக் கடுமையான பகைவனாகும். இதனால்தான் இந்த ஆயத்தில் ஷயாத்தீனுல் இன்ஸ என்று ஜின்களைப் பார்க்கினும் முந்திச் சொல்லப்பட்டிருக்கிறது.
நஃப்ஸ் அல்-அம்மாராவை எவ்வாறு அடையாளம் காண்பது?
கஞ்சத்தனம், பேராசை, தீயச் செயல்கள், பேராசை, முட்டாள்தனம், வெறுப்பு, பொறாமை, அறியாமை, சோம்பேறித்தனம், கோபம், பிறன் மனை நோக்கல், காமுறுதல், பழிவாங்குதல் மற்றும் அவதூறு ஆகியவை கட்டளையிடும் சுயத்தின் (அல்-நஃப்ஸ் அல்-அம்மாரா) பண்புகளில் அடங்கும் .
இந்த மோசமான குணநலன்களில் ஒன்றைக் கொண்டிருப்பது கட்டளையிடும் சுயத்தின் (அல்-நஃப்ஸ் அல்-அம்மாரா) சான்றாகும்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 183

(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 100 )

اَفَغَيْرَ اللّٰهِ اَبْتَغِىْ حَكَمًا وَّهُوَ الَّذِىْۤ اَنْزَلَ اِلَيْكُمُ الْـكِتٰبَ مُفَصَّلاً‌ وَالَّذِيْنَ اٰتَيْنٰهُمُ الْـكِتٰبَ يَعْلَمُوْنَ اَنَّهٗ مُنَزَّلٌ مِّنْ رَّبِّكَ بِالْحَـقِّ‌ فَلَا تَكُوْنَنَّ مِنَ الْمُمْتَرِيْنَ

(நபியே! கூறும்:) “அல்லாஹ் அல்லாதவனையா (தீர்ப்பளிக்கும்) நீதிபதியாக நான் தேடுவேன்? அவன்தான் உங்களுக்கு (விரிவான) விளக்கமான வேதத்தை இறக்கியுள்ளான்; எவர்களுக்கு நாம் வேதத்தைக் கொடுத்திருக்கின்றோமோ அவர்கள் நிச்சயமாக இது (குர்ஆன்) உம்முடைய இறைவனிடமிருந்து உண்மையாக இறக்கப்பட்டுள்ளது என்பதை நன்கு அறிவார்கள். எனவே நீர் சந்தேகம் கொள்பவர்களில் ஒருவராகி விடாதீர். (குர்ஆன் : 6:114)

மக்கத்து முஷ்ரிக்குகள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் வந்து "முஹம்மதே! உமக்கும் நமக்கும் இடையில் யூதர்களிலுள்ள அஹ்பார்கள் என்னும் வேத விரிவுரையாளர்களிலாவது அல்லது கிறிஸ்துவர்களிலுள்ள பாதிரிமார்களிலாவது ஒரு நீதிபதியை நீர் ஏற்படுத்திக் கொள்ளும்.
அந்த நீதிபதி உண்மைக்கும் உண்மையல்லாததிற்கு மிடையில் தீர்ப்புச் செய்யட்டும். ஏனெனில், அவர்கள் உமக்கு முன்னதாகவே வேதத்தை ஓதியவர்களாயிருக்கிறார்கள்" என்று கூறினார்கள். அது சமயம் இந்த வசனம் அருளப்பட்டது.
அல்லாஹ் அல்லாத வேறு ஒருவரையா நான் நீதிபதியாக்குவேன் ? அது ஒரு போதும் சாத்தியப்படாது அவன் உங்கள் பால் இவ்வேதத்தை எல்லா வகையான விவரங்களும் கொண்டதாக இறக்கியருளி இருக்கின்றான். இதில் ஏவல், விலக்கல் எச்சரிக்கை, வாக்குறுதி, மனிசமுதாயத்தில் ஏற்படும் பிரச்சினைகளுக்கு தீர்வு காணல், பலகால சரித்திரக் குறிப்புக்கள், அறிவியல் போன்ற இன்னும் அனேக விவரங்கள் இவ்வேதத்தில் இருக்கின்றன. இதனை விட்டு வேறு ஒன்றின் தீர்ப்புக்காக ஏன் நாம் செல்ல வேண்டும்? அவ்வாறு செல்வதற்கு அவசியமுமில்லை.
ஆனால் பிடிவாதக்குணம் படைத்தவர்கள் இதனை நம்பாமல் குயுக்தியாகவும். சூழ்ச்சியாகவும் இதனை விட்டு பொதுமக்களின் கவனத்தைத் தங்கள் பக்கம் திருப்பவே த்திரமான வார்த்தைகளைக் கூறுவர்.
இவர்கள் இந்த வேதத்தின் உயர்ந்த தன்மையை உணர மாட்டார்கள். ஆகையினால் இது பொருத்தமற்றது; உண்மையில்லாதது என்றெல்லாம் கூறுவர். வேதம் பற்றிய ஞானம் கொஞ்சமேனும் இருந்தால், இப்படியெல்லாம் கூறாமல் சற்று சிந்தித்துப் பார்ப்பர்
எவர்களுக்கு நாம் வேதத்தைக் கொடுத்தோமோ அத்தகைய யூத கிறிஸ்தவர்கள் இதன் உண்மையைப் புரிந்தே இருக்கின்றனர். அவர்கள் அதனை வெளியே காட்டிக் கொள்ளாவிட்டாலும் இ(ந்த குர்ஆன் ஆன)து உம்முடைய இரட்சகனிடமிருந்து உம்மீது உண்மையுடன் இறக்கப்பட்டது என்பதை நன்கு அறிவார்கள் காரணம், அவர்கள் வேத ஆராய்ச்சி உடையவர்கள். ஆனால் பகிரங்கமாக
இந்த உண்மையை அவர்கள் கூற மாட்டார்கள்.
ஆகவே, (நபியே!) இந்த வேதம் உண்மையா? அல்லவா? என சந்தேகிப்பவர்களில் நிச்சயமாக ஆகிவிடாதீர்.
மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்: (நபியே!) நாம் உமக்கு அருளிய வேதத்தில் நீர் ஏதேனும் சந்தேகப்பட்டால், உமக்கு முன் வழங்கப் பெற்ற வேதத்தை ஓதுவோரிடம் நீர் கேட்(டுப் பார்ப்)பீராக. நிச்சயமாக உண்மை உம்முடைய இறைவனிடமிருந்தே வந்திருக்கிறது. எனவே நீர் சந்தேகம் கொள்வோரில் ஒருவராக ஆகிவிடாதீர் குர்ஆன் (10:94)
எனவே தான் இந்த வசனம் அருளப்பெற்ற பிறகு நபி (ஸல்) அவர்கள் நான் சந்தேகப்படவும் இல்லை. அவர்களிடம் கேட்கப் போவதுமில்லை என்று கூறியதாக அறிவிக்கப்பட்டது. ( நூல்:முஸ்ன்னஃப் அப்திர் ரஸ்ஸாக்)
"அல்லாஹுத்தஆலாவினால் அருளப்பட்ட இவ்வேதத்தைக் குறித்து தீர்ப்பளிக்க, அல்லாஹுத்தஆலாவைத் தவிரவுள்ள மற்றவர்களை நான் நீதிபதியாக ஏற்படுத்த மாட்டேன்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அக்காஃபிர்களுக்குக் கூறிவிட வேண்டும் என்பது இந்த ஆயத்தின் கருத்து.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 184
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 101 )

وَتَمَّتْ كَلِمَتُ رَبِّكَ صِدْقًا وَّعَدْلاً لَا مُبَدِّلَ لِكَلِمٰتِهٖ وَهُوَ السَّمِيْعُ الْعَلِيْمُ

மேலும் உம்முடைய இறைவனின் வார்த்தை உண்மையாலும் நியாயத்தாலும் முழுமையாகி விட்டது - அவனுடைய வார்த்தைகளை மாற்றுவோர் எவரும் இல்லை - அவன் (எல்லாவற்றையும்) கேட்பவனாகவும், (யாவற்றையும்) அறிபவனாகவும் இருக்கின்றான் (குர்ஆன் : 6:115)

அல்லாஹ்வின் திருவாக்குகளைக் கொண்ட வேதமானது உண்மையும் நீதியும் கொண்டதாகும். இதன் மூலம் அறிவிக்கப்பட்டிருக்கிற எல்லா விவரங்களும் சத்தியத் தன்மையடைந்தவை ஆகும். சட்டங்கள், சரித்திரங்கள், நடந்தவைகள், நடக்க விருப்பவைக ஆகிய அனைத்தும் இதில் கூறப்பட்டிருக்கின்றன.
இத்திருக்குர்ஆன் வரலாற்றைப் பற்றி பேசும் போதெல்லாம் அது கடந்த காலத்திலும், சட்டதிட்டங்கள், வாழ்வியலைப் பற்றி பேசும் போதெல்லாம் அது நிகழ் காலத்திலும், அறிவியல் பற்றி பேசும் போதெல்லாம் அது எதிர்காலத்திலும் ஆக எக்காலத்திலும் எத்துறையைப் பற்றி பேசும் போதெல்லாம் அது உண்மையை உரைத்துக் கொண்டே இருக்கிறது ! உலகில் இவ்வேதம் போல் எவ்வேதமும் இல்லை.
இத்திருக்குர்ஆனில் எவரும் எத்தகைய தவறையும் முரண்பாட்டையும் காணவே முடியாது. அத்துடன் இவ்வுலகில் ஏற்படும் பிரச்சினைகள் அனைத்திற்கும் அது வழங்கும் தீர்ப்பானது நியாயமானதாக இருப்பதுடன், எந்தக் காலத்திலும் அத்தீர்ப்பை யாராலும் மாற்ற இயலாது' என்பதில் எவரும் சந்தேகம் கொள்ளவே முடியாது.
திருக்குர்ஆன் விடும் சவால்களில் ஒன்று, "ஒரே ஒரு வசனத்தையேனும் யாரேனும் கொண்டு வரட்டும் பார்க்கலாம் " என்பது. ஒரே ஒரு வசனத்தை மட்டும் அல்ல ; இது கூறும் நியாயத் தீர்ப்புகளும் கூட இதற்கு மிஞ்சிய ஒரு நியாயத்தை உலகின் எந்த மூலைமுடுக்கிலும் இருந்தும் வர முடியாது.
யாராலும் மாற்ற முடியாத திருவேதம்
இதன் பரிபூரணத் தன்மைக்கு, இத்தன்மைகளே எடுத்துக்காட்டுகள் ஆகும். இதனை விளக்கும் பொருட்டே இவ்வசனத்தில் உமது இரட்சகனின் வாக்கு உண்மையாகவும், நீதியாகவுமிருக்கும் நிலையில் பூர்த்தியடைந்து விட்டது என அறிவிக்கப்படுகிறது
உலகின் முடிவு வரையில் இத்திருக்குர்ஆனை எவரும் மாற்றவே முடியாது இதிலிருந்து ஒரு சிறு புள்ளியைக் கூட இடம் மாற்றிப் போட முடியாது. இது இறக்கப்பட்ட காலத்தில் இருந்தது போன்றே இறுதி நாள் வரையில் இருக்குமாறு பாதுகாக்கப்படும்.
எப்பொழுது அது பூர்த்தி அடைந்துவிட்டதோ அப்பொழுதிலிருந்து அது சம்பூரணத் தன்மை பெற்று விட்டதால், இனி அது எந்த மாறுதலையும், கூடுதல், குறைவையும் ஏற்றுக் கொள்ளாது. இதனைக் குறித்தே அவனுடை வாக்குகளை மாற்றுகிறவர் எவருமிலர் என இங்கு அறிவிக்கப்படுகிறது.
இதனை மாற்றி விடும் முயற்சியில் ஈடுபட்டவர்கள் தோல்வியுற்று முடிவில், இதனை எவராலும் மாற்றியமைக்கவே முடியாது என்று ஏற்றுக் கொண்ட வரலாறுகள் எத்தனையோ உண்டு,
இது அல்லாஹ்வின் வாக்கு. இது சம்பந்தமாக எல்லோரும் என்ன கூறுகின்றனர் என்பதை அவன் நன்கு செவியுறுகிறவன். அவர்களின் மன எண்ணங்களையும் நன்கறிகிறவன்.
திருக்குர்ஆனின் இன்னொரு இடத்தில்,
நீங்கள் எந்த நிலையில் இருந்தாலும், “குர்ஆனிலிருந்து நீங்கள் எதை ஓதினாலும், நீங்கள் எந்தக் காரியத்தை செய்தாலும், நீங்கள் அவற்றில் ஈடுபட்டிருக்கும்போது நாம் கவனிக்காமல் இருப்பதில்லை. (குர்ஆன் : 10:61)
ஆகவே, இதனை விசுவாசம் கொண்டோர் இதில் உறுதியாக இருத்தல் வேண்டும். இதனை விட்டு அவர்களை அகற்றித் தவறான வழிகளில் அவர்களைச் செலுத்திடப் பல முயற்சிகள் செய்யப்படும். அவற்றிலெல்லாம் அவர்கள் விழிப்புணர்ச்சியோடிருத்தல் வேண்டும்.
அங்கனமின்றி இதற்கு முரணாகச் செல்வோருக்கு கீழ்ப்படித்து விட்டால் விசுவாசிகளும் வழி தவற வேண்டியது வரும்

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 185
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 102 )

وَاِنْ تُطِعْ اَكْثَرَ مَنْ فِى الْاَرْضِ يُضِلُّوْكَ عَنْ سَبِيْلِ اللّٰهِ اِنْ يَّتَّبِعُوْنَ اِلَّا الظَّنَّ وَاِنْ هُمْ اِلَّا يَخْرُصُوْنَ

பூமியில் உள்ளவர்களில் பெரும்பாலோரை நீர் பின்பற்றுவீரானால் அவர்கள் உம்மை அல்லாஹ்வின் பாதையை விட்டு வழிகெடுத்து விடுவார்கள். (ஆதாரமற்ற) வெறும் யூகங்களைத்தான் அவர்கள் பின்பற்றுகிறார்கள் - இன்னும் அவர்கள் (பொய்யான) கற்பனையிலேயே மூழ்கிக்கிடக்கிறார்கள். (குர்ஆன் : 6:116)

யூகமும், கற்பனை என்னும் அனுமானம் பற்றி :-

நடக்கும் என்ற நம்பிக்கை... நடக்காது என்றும் தோன்றும்... அது யூகம்.

நடந்தால் நல்லது என்று தோன்றுவது கற்பனை என்னும் அனுமானம்

யூகம் என்பது ஒரு திட்டமிட்டு கணிப்பு. இப்படித்தான் நடக்கும் என்று தனக்குள்ளே வகுத்துக் கொள்வது

கற்பனை என்னும் அனுமானம் என்பது அதில் சிறிதளவு ஐயம் சந்தேகம் தெளிவின்மை ஆகியவை குழப்பத்தில் நடக்குமா என்று இப்படி ஆகலாம் என முடிவெடுப்பது

வசனத்தின் கருத்து :-

சத்தியம் தவறி நடப்பவர்கள் அதிகமாயிருக்கிறார்கள் என்பதற்காக அவர்களைப் பின் பற்றி விடக் கூடாது என இவ்வசனம் வலியுறுத்திக் கூறுகிறது.

பெரும்பான்மையினரோ, சிறுபான்மையினரோ, எவராயினும் சத்தியப் பாதையில் நடப்பாராயின் அவர்களுக்குத் தான் கீழ்ப்படிய வேண்டும். அவர்களைப் பின்பற்றியே நடக்க வேண்டும்.

இதனை விட்டு விட்டு பெரும்பான்மையினர் தவறான ஒரு பாதையில் செல்லும் போது அதிக எண்ணிக்கையிலுள்ளோர் அந்தப் பாதையில் செல்வதால் அது தான் சரியாக இருக்கும் என்று எண்ணி அதில் சென்று தவறிய பெரும்பான்மையினருக்கு நீர் கீழ்ப்படித்து அவர்களைப் பின்பற்றிச் செல்வீராயின் அல்லாஹ்வின் பாதையை விட்டு அவர்கள் உம்மை வழி தவறச் செய்து விடுவார்கள்.

தவறான பாதையில் செல்வதைத் தான் அதிகமான மக்கள் விரும்புவர். தங்களுடைய அறிவை உபயோகித்து அது தவறு என்று உணர்வதற்குக் கூட அவர்களுக்கு ஆற்றல் இல்லை. காரணம் பெரும்பாலான மக்கள் அவ்வழி செல்கின்றனர். ஆகவே, அது சரியாகத் தான் இருக்குமென்று முழுமனதாக முடிவு செய்து விடுகின்றனர்.

ஆனால், அவர்களுடைய இந்த முடிவில் வீண் எண்ணத்தையே அல்லாமல் வேறெதையும் அவர்கள் பின்பற்றவில்லை. இந்த வீண் எண்ணமானது உண்மையை உணர்வதிலிருந்து அவர்களைத் தடுத்து விடுகிறது.

அதனால் என்றைக்கும் அவர்கள் தேர்வழி பெற முடியாமல் பல வகையான அனுமானங்களையும், கற்பனைகளையுமே செய்து அதிலேயே மூழ்கிப் போய் விடுகின்றனர்

இத்தகையோரிடம் எந்தச் சத்தியத்தையும் காண முடியாது. காரணம், அவர்கள் வெறுமே கற்பனையான ஆதாரமற்ற ஊகத்தை அடிப்படையாக கொண்ட எண்ணங்களைக் கொள்கின்றனரே அல்லாமல் எந்த உறுதியான அறிவும், கொள்கையும் அவர்களிடம் இல்லை.

ஆகையால், இத்தகையோரின் கொள்கைகளையோ, கூற்றையோ நீங்கள் பொருட்படுத்தாமல் அல்லாஹ்வினால் அறிவிக்கப்பட்டவைகளையே கடைப்பிடியுங்கள்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 186
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 103 )

اِنَّ رَبَّكَ هُوَ اَعْلَمُ مَنْ يَّضِلُّ عَنْ سَبِيْلِهٖ وَهُوَ اَعْلَمُ بِالْمُهْتَدِيْنَ

நிச்சயமாக தன்னுடைய நல்வழியை விட்டுத்தவறியவன் யார் என்பதை உம் இறைவன் நன்கு அறிவான் - அவ்வாறே நல்வழியில் செல்பவர்கள் யார் என்பதையும் அவன் நன்கு அறிவான்.(குர்ஆன் : 6:117)

فَكُلُوْا مِمَّا ذُكِرَ اسْمُ اللّٰهِ عَلَيْهِ اِنْ كُنْتُمْ بِاٰيٰتِهٖ مُؤْمِنِيْنَ

(முஃமின்களே!) நீங்கள் அல்லாஹ்வின் வசனங்களை நம்புவோராக இருப்பின் அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டு (அறுக்கப்பட்டவற்றின் மாமிசத்தையே) புசியுங்கள். (குர்ஆன் : 6:118)

பெரும்பாலானவரோ, சிறுபான்மையினரோ எவராயினும் ஏதாவது ஒரு வழியில் சென்று அதுதான் சரியென்று கூறியபோதிலும் நிச்சயமாக உமது இரட்சகன் தன்னுடைய உண்மையான வழியிலிருந்து தவறிச்செல்பவரை நன்கு அறிபவன்.அவனை எவரும் ஏமாற்றி விட முடியாது அம்மாதிரியே நேர் வழிபெற்று உண்மையாக நடந்து கொள்கிறவர்களையும் அவன் நன்கறிபவன்.

இவ்விரு வசனங்களும் இறக்கப்பட்டதின் காரணம்:-

ஒரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்களிடம் இணைவைத்துக் கொண்டிருந்தவர்களில் சிலர் வந்து தானாகச் செத்துப் போன பிராணி பற்றி பெருமானார் (ஸல்) அவர்களிடமும், முஸ்லிம்களிடமும் விவாதித்தனர். "உங்களுடைய இரட்சகனான அல்லாஹ் கொன்றதை நீங்கள் சாப்பிடாமல் நீங்களாகக் கொன்றதை எப்படிச் சாப்பிடலாம்?" என்று கேட்டனர்.

அச்சமயம் முஸ்லிம்கள் எண்ணிக்கையில் மிகச் சொற்பமாக இருந்தனர். மற்றவர்கள் அதிகமாக இருந்ததுடன் அவர்கள் அனைவரும் தானாகச் செத்துப்போன பிராணிகளையும் புசித்துக் கொண்டிருந்தார்கள்.

'பெரும்பாலாரான எங்களைப் பின் பற்றி சிறுபான்மையினராக இருக்கும் முஸ்லிம்களாகிய நீங்களும் செத்த பிராணிகளையும் புசிக்க வேண்டியது தானே" என்று அவர்கள் வாதித்தனர். அப்பொழுதுதான் இவ்வசனங்கள் இறக்கப்பட்டன.

அதிகமானோர் குறைவானோர் என்ற பிரச்சினை எதுவும் இஸ்லாத்தில் இல்லை. சத்தியம் யாரிடமிருக்கிறதோ அவர்களே நேர்வழி பெற்றவர்கள் அவர்களைத் தான் பின்பற்ற வேண்டும் என்னும் கருத்து இவ்வசனங்கள் மூலம் வலியுறுத்திக் கூறப்பட்டு பிராணிகள் சம்பந்தமாக தெளிவான சட்டமும் பின் வரும் வசனங்கள் மூலம் அறிவிக்கப்பட்டு விட்டது.

"நீங்கள் கொன்றதை மட்டும் சாப்பிடலாம்; அல்லாஹ் கொன்றதைச் சாப்பிடக் கூடாதா?" என்ற கேள்விக்கு (குர்ஆன் 6: 118) வசனத்தின் மூலம் விடையளிக்கப்படுகிறது.

தானாக இறந்தவற்றைப் புசிக்கக் கூடாது; அல்லாஹ்வின் திருநாமம் கூறி அறுக்கப்பட்டதைத்தான் புசிக்க வேண்டும் என்று அல்லாஹ்வே தான் சட்டம் செய்துள்ளான்.

செத்த பிராணியினால் கேடு:-

ஒரு பிராணி தானாகச் செத்து விடுமாயின், அதனைப் புசித்தல் கூடாது என்பதற்கு நுட்பமான ஒரு விஞ்ஞான தத்துவம் உண்டு.

இரத்தும் என்பது உடலின் ஒரு நுண்பொருளாகும். அதனைக் கொண்டுள்ள ஒரு பிராணி தானாக செத்து விடுமாயின் அது உடலை விட்டு வெளியேறாமல் தசைகளிலும் நரம்புகளிலும் அப்படியப்படியே தங்கி அவற்றைக் கெடுத்து விடும். அதனைப் புசிப்பதால் பல வகையான கெடுதிகள் புசிப்பவரின் உடலில் ஏற்பட்டு விடும்.

இந்நிலையில் ஒரு பிராணியைச் சாப்பிடுவதென்றால் அதன் இரத்தம் முழுவதும் வெளியேற்றப்படவேண்டும். அதன் குரல்வளையைத் தவிர மீதி எந்த இடத்தில் கீறினாலும் அந்த பகுதியில் உள்ள ரத்தம்தான் வெளியேறும், மீதி இரத்தம் அப்படியே உடலில் இருக்கும்.

அதே சமயம் குரல் வளையில் கீறிவிட்டால் உடலின் இரத்தம் முழுவதும் வெளியேறிவிடும். இதனாலேயே அல்லாஹ்வின் திருநாமம் கூறி முறைப்படி குரல்வளையில் நரம்புகள் துண்டிக்கப்படும் விதமாக அறுக்க வேண்டும் என்று இஸ்லாமிய சட்டம் வலியுறுத்தி கூறுவதுடன், தானாக மரிக்கும் பிராணியை உண்ணக் கூடாது எனவும் கண்டித்துக் கூறுகிறது.
தானாக செத்த பிராணியை ஒரு சமயம் விஷ ஜந்துக்கள் தீண்டியிருந்தால், அந்த விஷத்தின் தாக்கம் அந்த பிராணியை உண்பவருக்கும் பாதிப்பை ஏற்படுத்தும். எனவேதான் தானாக செத்த பிராணியை உண்ணக் கூடாது என்று இஸ்லாம் தடை செய்திருக்கிறது.
இரத்தம் அறியாமைக் கால அரபியர், பிராணிகளின் இரத்தத்தை பாத்திரத்தில் பிடித்த அதனை வறுத்துச் சாப்பிட்டு வந்தனர். இப்பொழுதும் சில சமூகத்தினர் இவ்வாறு செய்து வருவதையும் காணலாம். இது கெடுதி ஆனது.
ஆகவே, அல்லாஹ்வின் சட்டங்களைத் தாங்கிய அவனுடைய வசனங்களை உண்மையாகவே நீங்கள் விசுவாசம் கொண்டவர்களாக இருந்தால் அல்லாஹ்லினால் அனுமதிக்கப்பட்ட பிராணிகளை நீங்கள் அறுக்கும் பொழுது, அல்லாஹ்வின் திருநாமத்தை, "பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர் " என்று கூறிக் கொள்ளுங்கள். அவ்வாறு கூறப்பட்ட பிராணியிலிருந்து நீங்கள் புசித்துக் கொள்ளுங்கள்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 187
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 104 )

وَمَا لَكُمْ اَلَّا تَاْكُلُوْا مِمَّا ذُكِرَ اسْمُ اللّٰهِ عَلَيْهِ وَقَدْ فَصَّلَ لَـكُمْ مَّا حَرَّمَ عَلَيْكُمْ اِلَّا مَا اضْطُرِرْتُمْ اِلَيْهِ‌ وَاِنَّ كَثِيْرًا لَّيُضِلُّوْنَ بِاَهْوَآٮِٕهِمْ بِغَيْرِ عِلْمٍ‌ اِنَّ رَبَّكَ هُوَ اَعْلَمُ بِالْمُعْتَدِيْنَ

அல்லாஹ்வின் பெயர் கூறி (உங்களுக்கு அனுமதிக்கப்பட்டவற்றில்) அறுக்கப்பட்டதை நீங்கள் சாப்பிடாமலிருக்க என்ன (தடை) இருக்கிறது? நீங்கள் நிர்ப்பந்திக்கப்பட்டாலன்றி சாப்பிட உங்களுக்கு விலக்கப்பட்டவை எவை என்பதை அல்லாஹ் விவரித்துக் கூறியுள்ளான் -
ஆனால் பெரும்பாலோர், அறியாமையின் காரணமாகத் தங்களுடைய மன இச்சைகளின் பிரகாரம் (மனிதர்களை) வழி கெடுக்கிறார்கள்; வரம்பு மீறிச்செல்பவர்களை நிச்சயமாக உம் இறைவன் நன்கு அறிகிறான். (குர்ஆன் : 6:119)
தானாக செத்துப்போன பிராணியைப் புசித்தல் கூடாது. அல்லாஹ்வின் திருநாமம் கூறி அறுக்கப்பட்ட பிராணிகளை புசிப்பதால் எத்தகைய குற்றமும் கிடையாது.
இதனைக் குறித்தே அல்லாஹ்வின் திருப்பெயர்எவற்றின் மீது கூறப்பட்டு அறுக்கப்பட்டுள்ளதோ அவற்றை நீங்கள் சிக்காமலிருப்பதற்கு உங்களுக்கு என்ன தடை இருக்கிறது? "பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர்' என்று கூறி நீங்கள் அறுத்துவிடும் பொழுது அது புசிப்பதற்கு ஆகுமாக்கப்பட்டிருக்க. அதனைப் புசிக்கக் கூடாதென யார் உங்களுக்குத் தடை விதித்தார்கள்?
இத்தகைய பிராணிகளைப் புசிக்கலாம் என்று அல்லாஹ் உங்களுக்கு அறிவித்திருப்பதுடன் உங்கள் மீது விலக்கப்பட்டவைகளை அவன் திட்டவட்டமாக உங்களுக்கு விவரித்துக் கூறிவிட்டான் இங்ஙனமிருக்க நீங்களாக ஏன் உங்கள் மீது தடை விதித்துக் கொள்கிறீர்கள்
சில சமயம் உங்களுக்கு மிகக் கடினமான பசி ஏற்பட்டுப் புசிப்பதற்கு எதுவுமே கிடைக்காது போகலாம். அச்சமயம் விலக்கப்பட்டதைக் கூட உயிர் வாழ வேண்டிய நிர்பந்த நிலைக்காக நீங்கள் புசிப்பதற்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறீர்கள். இது நிர்ப்பந்தமான கட்டாய நிலை.

اِنَّمَا حَرَّمَ عَلَيْكُمُ الْمَيْتَةَ وَالدَّمَ وَلَحْمَ الْخِنْزِيْرِ وَمَآ اُهِلَّ بِهٖ لِغَيْرِ اللّٰهِ‌ فَمَنِ اضْطُرَّ غَيْرَ بَاغٍ وَّلَا عَادٍ فَلَاۤ اِثْمَ عَلَيْهِ‌ اِنَّ اللّٰهَ غَفُوْرٌ رَّحِيْمٌ

தானாகவே செத்ததும், இரத்தமும், பன்றியின் மாமிசமும், அல்லாஹ் அல்லாத பெயர் சொல்லப்பட்டதும் ஆகியவைகளைத்தான் உங்கள் மீது ஹராமாக ஆக்கியிருக்கிறான்; ஆனால் எவரேனும் பாவம் செய்யாத நிலையில் - வரம்பு மீறாமல் (இவற்றை உண்ண வேண்டிய சூழலல்லால் ) நிர்ப்பந்திக்கப்பட்டால், அவர் மீது குற்றமில்லை; நிச்சயமாக அல்லாஹ் கருணைமிக்கோனும், மன்னிப்பவனுமாக இருக்கின்றான். (குர்ஆன் : 2:173)
ஒரு குடும்பத்தார் மிகவும் வறிய நிலையில் இருந்தனர். அவர்கள் ஒரு நாள் மாமிசம் சுட்டும், வறுத்தும் சாப்பிட ஆரம்பிக்கும் வேளையில் பக்கத்து வீட்டு மிகப்பெரிய பணக்கார வியாபாரின் மகன் சிறுவன் சுட்ட வறுத்த மாமிசத்தின் வாடையை நுகர்ந்து கொண்டு, அந்த வறியவர் வீட்டில் நுழைந்து தனக்கும் உண்ண மாமிசம் வேண்டும் என்று கேட்டான்.

ஆனால், அந்த வறியவரோ அந்தச் சிறுவனை வீட்டைவிட்டு வெளியேற்றி, கதவை சாத்திவிட்டு மீண்டும் அந்த மாமிசத்தை உண்டனர்.
இந்நிகழ்வை சிறுவன் தன் பணக்கார தகப்பனாரிடம் கூறவும், அவர் அச்சிறுவனை அழைத்துக்கொண்டு ,பக்கத்து வீட்டு வறியவரிடம் வந்து, "என் மகன் சிறுவன். ஒரு சிறிய துண்டு மாமிசம் கேட்டும் கூட கொடுக்காமல் நீங்கள் மட்டும் உண்ணுவதற்கு உங்களுக்கு எப்படி மனம் வந்தது ?" என்று கூறி ஆதங்கப்பட்டார்.
அதற்கு அந்த வறியவர், "எங்களுக்கு ( ஹலாலானதும் ) ஆகுமானதும், உங்களுக்கு ( ஹராமாக்கப்பட்ட ) விலக்கப்பட்ட உணவை உங்கள் மகனுக்கு நாங்கள் எப்படி கொடுக்க முடியும் ? என்று கேட்டார்.
அதற்கு அந்த பணக்காரர், "நாம் இருவரும் முஸ்லிம் தானே ? உங்களுக்கு ஆகுமான உணவு எங்களுக்கு எப்படி ஹராமானதாகும் ?

இஸ்லாமிய சட்டம் நம்மிருவருக்கும் ஒன்று தானே ? என்றார்.
"சகோதரரே ! இஸ்லாமிய சட்டம் நம்மிருவருக்கும் ஒன்றுதான்; ஆனால் நாங்கள் மிகவும் வறியவர்கள். சாப்பிட்டு மூன்று நாளுக்கு மேலாகிறது. மேலும் எங்கள் குழந்தைகள் பசியால் வாடி வதங்கி துவண்டு படுத்துவிட்டனர். இனி அவர்களால் "பசிக்கிறது" என்று சொல்லும் திராணியைக் கூட இழந்து விட்டனர்.
எனவே ஊருக்கு வெளியே கழுதை ஒன்று செத்துக் கிடந்தது. அவற்றின் மாமிசத்தை யாருக்கும் தெரியாமல் அறுத்து எடுத்து வந்து சமைத்து சாப்பிட்டோம். இந்த உணவை எப்படி உங்கள் மகனுக்கு எங்களால் எப்படி கொடுக்க முடியும் ? என்று கூறிய ( குர்ஆன் 2:173 ) வசனத்தை ஓதிக் காண்பித்தார்.
உடனே அந்த பணக்காரர் ஒன்றும் பேசாமல், தன் வீட்டிற்கு போய் ஹஜ்ஜுக்காக தான் சேர்த்து வைத்திருந்த பணத்தை எடுத்து வந்து அந்த வறியவரிடம் கொடுத்து, வியாபார துறையையும் அவருக்கு அறிமுகமாக்கினார்.
ஹஜ் காலம் வந்தது. பணக்கார வியாபாரி ஹஜ்ஜிற்கு போக முடியவில்லை. அன்றிரவு அவர் ஒரு கனவுக் கண்டார்.
கனவில் இருவர் (மலக்குகள்) தோன்றி இந்த வருடம் சிறப்பான மக்பூலான ஹஜ் யாருக்குக் கிடைத்துள்ளது ? என்று வினவ,
மற்றொருவர், "இன்ன தேசத்து இன்னாருடைய மகன் இன்னாருடைய ஹஜ் சிறப்பு வாய்ந்த மக்பூலான ஹஜ் என்று இறைவனிடத்தில் பதிவாகி இருக்கிறது " என்று தன்னுடைய பெயரை அந்த மலக்கு கூறினார்.
இவ்வாறு நீங்கள் நிர்ப்பத்திக்கப்பட்டிருக்கும் சமயத்தைத் தவிர்த்து மற்றைய சமயங்களில் எதனைப் புசிக்கலாம் எதனைப் புசிக்கக்கூடாது என நன்கு விலக்கிக் காட்டப்பட்டு விட்டீர்கள்: இந்நிலையில் நீங்களாக ஏன் உங்கள் மீது புதிய சட்டங்களைத் திணித்துக் கொள்கிறீர்கள்?
மனிதர்களில் அநேகர் அறிவின்மையின் காரணத்தால் தங்களுடைய மனங்களில் நோன்றுகிறவற்றை எல்லாம் சட்டமாக்கிக் கொள்கின்றனர். இத்தரையோர் மன இச்சைகளைப் பின்பற்றுவதால் தாங்களும் வழிதவறிப் பிறரையும் வழிகெடுக்கின்றனர், புதுப்புது சட்டங்களைத் தாங்களாக ஏற்படுத்திக் கொண்டு உண்மையான சட்டங்களில் குதர்க்கம் புரிகின்றனர்.

ஆகுமானதை ஆகாததெனக் கூறுகின்றனர் ஆகாதவற்றை ஆகுமானதாக உபயோகிக்கின்றனர். இதனால் அவர்கள் அல்லாஹ்வின் சட்டங்களுக்கு முரணாக வரம்பு மீறிச் செல்கின்றனர்.
நபியே ! உம்முடைய இரட்சகன் இவ்வாறு வரம்பு மீறிச் செல்கிறவர்களை நன்கு அறிகிறவன். அவர்களுடைய இத்தீச் செயலுக்கு தக்கத் தண்டனையை உரிய சமயத்தில் கொடுத்து விடுவான்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 188
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 105 )

وَذَرُوْا ظَاهِرَ الْاِثْمِ وَبَاطِنَهٗ اِنَّ الَّذِيْنَ يَكْسِبُوْنَ الْاِثْمَ سَيُجْزَوْنَ بِمَا كَانُوْا يَقْتَرِفُوْنَ
(முஃமின்களே!) “வெளிப்படையான (பகிரங்கமான ) பாவத்தையும், அந்தரங்கமான பாவத்தையும் விட்டுவிடுங்கள். நிச்சயமாக எவர்கள் பாவத்தைச் சம்பாதிக்கின்றனரோ, அவர்கள் சம்பாதித்தவற்றுக்குக் கூலி கொடுக்கப்படுவார்கள். (குர்ஆன் : 6:120)
பாவங்களில் பகிரங்கமானதையும், அந்தரங்கமானதையும் கை விடுங்கள்" என்பதற்கு, அந்தரங்கமாகவோ வெளிப்படையாகவோ பாவங்கள் செய்யாதீர்கள் என்பது பொருளாகும் என முஜாஹித் (ரஹ்) அவர்கள் விளக்கமளித்துள்ளார்கள்.
மறைவான, வெளிப்படையான, குறைவான அதிகமான பாவங்கள் அனைத்தையும் விட்டுவிடுங்கள் என்று கத்தாதா (ரஹ்) அவர்கள் பொருள் செய்துள்ளார்கள்.
'பகிரங்கமான பாவம்' என்பது விலைமாதர்களுடன் விபசாரம் புரிவதையும். 'அந்தரங்கமான பாவம் என்பது கள்ளக் காதலிகளுடன் விபசாரத்தில் ஈடுபடுவதையும் குறிக்கும் என்று சுத்தீ (ரஹ்) அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.
நவ்வாஸ் பின் சம்ஆன் (ரலி) அவர்கள் கூறியதாவது: நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம், "எது பாவம்?" என்று கேட்டேன், அதற்கு அவர்கள்,
"உமது உள்ளத்தில் உறுத்தலை ஏற்படுத்தக்கூடிய செயலும், எதைப் பிறர் தெரிந்துகொள்வதை (அவமானமாகக் கருதி) வெறுப்பீரோ அந்தச் செயலும் பாவச் செயல்களாகும்” என்று பதிலளித்தார்கள். ( நூல்: ஸஹீஹ் முஸ்லிம், திர்மிதீ, முஸ்னது அஹ்மத்)
ஒரு மனிதன் பாவங்களில் மூழ்கிவிட்டால் அவன் இறைவனை விட்டும் அவனை நினைவு கூருவதை விட்டும் தூரமாகிவிடுகிறான். பாவத்தில் மூழ்கியவாறே அவனால் இறைவணக்கத்தில் ஆர்வத்துடன் ஈடுபட முடியாது. பாவத்தில் இன்பம் காண்பவரால் இறைவணக்கத்தில் இன்பம் காண முடியாது.
ஒரு கட்டத்தில் இறைவணக்கம் அவனுக்கு கடினமான ஒன்றாகிவிடும். அதுவரை கட்டாயத்தின் அடிப்படையில் செய்து கொண்டிருந்தவன் கொஞ்சம் கொஞ்சமாக அதனை விட்டுவிடவும் தொடங்குகிறான்.
இறைவணக்கத்திலிருந்து அவன் விலகிச் செல்லச் செல்ல பாவங்களை நோக்கி இன்னும் வேகமாகச் செல்கிறான்.
அவற்றுக்கான நியாய வாதங்களையும் அவன் உருவாக்கிக் கொள்கிறான். அவன் கர்வம் கொண்டவனாகவும் இருந்தால் ஒரு கட்டத்தில் இறைமறுப்பு வரையிலும் அவன் சென்றுவிடுகிறான். அவனை குற்றவுணர்ச்சிக்கு ஆளாக்கிய ஒழுக்கங்கள் அறவிழுமியங்கள் என அனைத்தையும் கேள்விக்குள்ளாக்கி அவையனைத்தையும் தகர்க்க முயல்கிறான்.
வணக்க வழிபாட்டில் லயித்திருக்கும் ஒரு மனிதனால் திடீரென இறைமறுப்பில் நுழைந்துவிட முடியாது. பாவங்கள்தாம் அவனை கொஞ்சம் கொஞ்சமாக இறைமறுப்பை நோக்கி இழுத்துச் செல்கின்றன. அவன் ஆரம்ப நிலையிலேயே தன்னை சீர்திருத்தாவிட்டால் போகப் போக சீர்திருத்தம் மிகவும் கடினமான ஒன்றாகிவிடும்.

பாவத்தில் அவ்வப்போது ஈடுபடுதல் என்பது வேறு. பாவத்தில் ஒரேயடியாக மூழ்கிவிடுதல் வேறு.பாவத்தில் ஒரேயடியாக மூழ்கிவிடுவதைக் குறித்தே இப்போது இங்கு பார்க்கப்படுகிறது.
தொழுகை மானக்கேடான, தீய காரியங்களை விட்டும் தடுக்கின்றது என்று திருக்குர்ஆன் கூறுகிறது. தொழுகை உள்ளத்தில் இறைநினைவை பசுமையாக்குகிறது; குற்றவுணர்வை கூர்மையாக்குகிறது. ஐந்து வேளை தொழுதுகொண்டே ஒருவனால் பாவங்களில் மூழ்கியிருக்கவும் முடியாது. இரண்டும் எதிரெதிர் அம்சங்கள். ஒன்றின் இருப்பு மற்றொன்றை இல்லாமலாக்கி விடும். தொழுகையில் நிலைத்திருப்பவன் பாவங்களில் மூழ்க முடியாது. பாவங்களில் மூழ்கியிருப்பவன் தொழுகையில் நிலைத்திருக்க முடியாது.
ஒரு மனிதன் தான் செய்யும் பாவத்தை பாவம் என உணர்தலே அவன் அதிலிருந்து விடுபடுவதற்கான முதல் அடி. எந்தச் சமயத்திலும் அதனை அவன் நியாயப்படுத்தி விடக்கூடாது. அதற்கான நியாய வாதங்கள் அவனுக்குள் உருவாகிவிட்டால், அவற்றை அவன் வெளிப்படுத்தத் துணிந்து விட்டால் அவன் அடுத்த நிலைக்குச் சென்றுவிடுவான். அது வெளியேறுவதற்கு சற்று கடினமான நிலை. ஒருவன் தனக்கு நோய் இருப்பதை உணர்ந்தால்தானே அதற்கான சிகிச்சையை அவன் முன்னெடுக்க முடியும்.
பாவங்கள் உள்ளத்தைத் தாக்கக்கூடியவை; அகவெளிச்சத்தை இல்லாமல் ஆக்கக்கூடியவை. அகவெளிச்சம் ஆரோக்கியமான உள்ளத்தின் விளைச்சல். பாவங்கள் அவனுடைய உள்ளத்தை கடினமாக்கி விடுகின்றன. கடினமான உள்ளங்கள் அறிவுரைகளை ஏற்றுக்கொள்வதில்லை. அவற்றுக்கு அறிவுரைகள் கசக்கின்றன. அறிவுரைகள் அவற்றின் கர்வத்தை சீண்டுகின்றன. அதன் காரணமாக அவை இன்னும் உறுதியாக பாவங்களில் நிலைத்து விடுகின்றன.
சிலரது பாவங்கள் அவர்களின் கர்வத்தை உடைக்கவும் செய்கின்றன. பாவம் செய்யாத தன்மை சில சமயங்களில் கர்வத்தை உண்டாக்கிவிடுகிறது. அந்த நிலை மற்றவர்களை இழிவாகக் கருதச் செய்கிறது. அப்படிப்பட்டவர்கள் செய்யும் பாவங்களால் அவர்களின் கர்வம் உடைபடுகிறது எனில் உண்மையில் அவை அவர்களைப் பாதுகாக்கும் கேடயங்கள்தாம்.
பாவமன்னிப்புக் கோரிக்கையும் நற்செயல்களும் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துகின்றன. நற்செயல்கள் பாவங்களை அழித்துவிடுகின்றன.
இங்கு பாவம் செய்யாத புனிதர்கள் என்று யாரும் இல்லை. மனிதர்கள் பாவம் செய்யக்கூடியவர்கள். ஆனால் நம்பிக்கையாளர்கள் பாவங்களில் நிலைத்திருக்க மாட்டார்கள். அவற்றுக்கு அடிமையாக மாட்டார்கள். தங்களின் பாவங்களை நியாயப்படுத்த மாட்டார்கள். இதுதான் நம்பிக்கையாளர்களுக்கும் மற்றவர்களுக்குமான அடிப்படையான வேறுபாடு. இதன் காரணமாகத்தான் நம்பிக்கையாளர்கள் மன்னிக்கப்படுகிறார்கள்.
மனிதன் ஒரு பாவத்தை தொடர்ந்து செய்யும்போது குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு அதற்கான நியாய வாதங்களை தன் மனதில் அவன் உருவாக்கிக் கொள்கிறான். முதலில் அவன் மனதில் ஒலிக்கும் குரலுக்கு அவன் காரணம் சொல்ல வேண்டியிருக்கிறது. பிறகு மனதிற்கு அதனை உண்மையென நம்பவைக்க வேண்டியிருக்கிறது. ஒரு கட்டத்திற்குப் பிறகு குற்றவுணர்ச்சியே இல்லாத திருப்தியடைந்த நிலைக்கு அவன் சென்று விடுகிறான்.
தான் மட்டுமே அப்படி இல்லையென்றும் தன்னைச் சுற்றியுள்ள மனிதர்களும் அப்படித்தான் இருக்கிறார்கள் என்றும் அவன் தனக்கும் மற்றவர்களுக்கும் நியாயம் சொல்லிக் கொள்கிறான். இந்த திருப்தியடைந்த நிலை மோசமான நிலை. அது மனிதன் பாவங்களிலிருந்து வெளியேற முடியாத நிலை.
ஆரம்ப கட்டத்திலேயே தவிர்ந்திருக்கும் மனிதர்கள் பாக்கியவான்கள். அதுதான் குற்றவுணர்வு கூர்மையாக இருக்கும் நிலை. அதற்குப் பிறகு அந்த உணர்வு மழுங்கடிக்கப்பட்ட நிலைக்குச் சென்று விடுகிறது. சிறு சிறு துன்பங்கள் அந்த உணர்வை மீண்டும் கூர் திட்டலாம். அவை அவன் பாவங்களிலிருந்து மீண்டுவர அவனுக்கு உதவலாம்.

மூன்றாம் நிலையே அவன் அடிமையாகும் நிலை. அவன் பாவங்களுக்கு அடிமையாகிவிடுகிறான். அவனே வெளியேற நினைத்தாலும் அவனால் அவ்வளவு எளிதாக வெளியேறிவிட முடியாது. அவன் அடிமைத்தனத்தில் சுகம் காண்பவனாகிவிடுகிறான்.
சில சமயங்களில் அவனுக்கு ஏற்படும் பெரும் துன்பம் அவன் சிக்கியிருக்கும் இழிநிலையை அவனுக்கு உணர வைக்கிறது. அதன் போதையிலிருந்து அவனை மீட்டு இயல்பு நிலைக்குக் கொண்டு வருகிறது. உண்மையில் அத்தகையே பெரும் துன்பம்கூட அவனுக்கு அருட்கொடையே. அதுதானே அவனை மீட்டு இயல்பு நிலைக்குக் கொண்டு வருகிறது.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 189**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 106 )**

وَلَا تَاْكُلُوْا مِمَّا لَمْ يُذْكَرِ اسْمُ اللّٰهِ عَلَيْهِ وَاِنَّهٗ لَفِسْقٌ‌ وَاِنَّ الشَّيٰطِيْنَ لَيُوْحُوْنَ اِلٰٓى اَوْلِيٰٓـٮِٕهِمْ لِيُجَادِلُوْكُمْ‌ وَاِنْ اَطَعْتُمُوْهُمْ اِنَّكُمْ لَمُشْرِكُوْنَ
எதன்மீது (அறுக்கும்போது) அல்லாஹ்வின் பெயர் கூறப்படவில்லையோ அதைப் புசியாதீர்கள் - நிச்சயமாக அது பாவமாகும்; நிச்சயமாக ஷைத்தான்கள் தங்கள் நண்பர்களை உங்களோடு (வீண்) தர்க்கம் செய்யுமாறு தூண்டுகிறார்கள் - நீங்கள் அவர்களுக்கு வழிபட்டால், நிச்சயமாக நீங்களும் முஷ்ரிக்குகள் (இணைவைப்போர்) ஆவீர்கள். (குர்ஆன் : 6:121)
தப்ஸீருல் ஹமீத் படி மேற்கண்ட வசனம் கீழே கொடுக்கப்படுகிறது
இன்னும் அல்லாஹ்வின் பெயர் கூறப்படாததிலிருந்து நீங்கள் புசிக்காதீர்கள். மேலும், நிச்சயமாக அது ஃபிஸ்காகும். இன்னும், நிச்சயமாக ஷைத்தான்கள், அவர்களது காரிய கர்த்தர்களிடம் உங்களுடன் அவர்கள் தர்க்கம் செய்வதற்காக இரகசியமாக அறிவிக்கிறார்கள். மேலும் அவர்களுக்கு நீங்கள் வழிப்பட்டீர்களாயின், நிச்சயமாக நீங்களும் முஷ்ரிக்குகளாவீர்கள்.(குர்ஆன் : 6:121)
அல்லாஹ்வின் பெயர் கூறப்படாதது என்பதில் விக்கிரகங்களுக்காக அறுக்கப்பட்டது. தானாகச் செத்தது முதலியவைகளெல்லாம் சேர்ந்திருக்கின்றன. வேண்டுன்றே அல்லாஹுத் தஆலாவின் பெயர் கூறாமல் அறுத்ததைத்தான் புசிக்கக் கூடாது.
ஆனால், மூமினானவர் நினைவில்லாமல் அல்லாஹுத் தஆலாவின் பெயரைக் கூறாமல் அறுத்துவிட்டால் குற்றமில்லை. ஏனெனில், மூமினுடைய கல்பில் அல்லாஹுத்தஆலாவின் ஞாபகம் எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கும். ஆதலால், நினைவில்லாமல், அல்லாஹுத் தஆலாவின் பெயர் கூறி அறுக்காததற்கு மன்னிப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது.
ஆயிஷா (ரலி) அவர்கள் கூறியதாவது: சிலர் நபி (ஸல்) அவர்களிடம், "ஒரு கூட்டத்தார் (கிராமத்திலிருந்து) எங்களிடம் இறைச்சி கொண்டு வருகிறார்கள். (அதை அறுக்கும்போது) அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டதா, இல்லையா என்பது எங்களுக்குத் தெரியாது. (இந்நிலையில் நாங்கள் அதை உண்ணலாமா?)" என்று கேட்டனர். நபி (ஸல்) அவர்கள், "நீங்கள் அதன் மீது அல்லாஹ்வின் பெயர் சொல்லி உண்ணுங்கள்" என்று பதில் சொன்னார்கள்.
அந்தக் கூட்டத்தார் இறைமறுப்பை அப்போதுதான் கைவிட்டுப் புதிதாக இஸ்லாத்தைத் தழுவியிருந்தனர். புகாரி 2057, 5507, 7398 மற்றும் அபூதாவூத், இப்னுமாஜா, தாரிமீ.
கேள்வி கேட்டவர்கள், அல்லாஹ்வின் பெயர் கூறுவது அவசியம் என்பதை அறிந்திருந்தார்கள். ஆயினும், புதிதாக இஸ்லாத்தைத் தழுவியிருந்த அக்கூட்டத்தார் (பழைய முறைப்படி) 'பிஸ்மில்லாஹ்' சொல்லாமல் அறுப்பார்களோ என்று அஞ்சினார்கள். எனவேதான் நபி (ஸல்) அவர்கள், உண்ணும் போது பேணுதலுக்காக 'பிஸ்மில்லாஹ் சொல்லும்படி கட்டளையிட்டார்கள்.

உண்ணும்போது 'பிஸ்மில்லாஹ்' சொல்வதானது. அறுக்கும்போது பிஸ்மில்லாஹ்' சொல்லாமல் விடப்பட்டிருந்தால் அதற்கு ஈடாகிவிடும் என்ற அடிப்படையில் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறினார்கள்:
பின்பற்ற வேண்டிய விதிமுறைகளை இயன்ற வரை நடைமுறைப்படுத்துமாறு முஸ்லிம்களுக்குக் கட்டளையிட்டார்கள்.
மேற்கண்ட வசனத்தில், "ஃபிஸ்கு" என்பதற்கு இந்த ஆயத்தில் ஹலாலாக இருப்பதிலிருந்து வெளியேறிவிடுதல் என்பது கருத்து
"ஷயாத்தின்" அதாவது ஷைத்தான்கள் என்பது இப்லீஸையும் அவன் படையையும் குறிக்கிறது.
"அவர்களது காரியகர்த்தர்கள்" என்பது முஷ்ரிக்குகளைச் சுட்டிக்காட்டுகிறது. ஷைத்தான்களது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து, அவர்களது கட்டளைப்படி முஷ்ரிக்குகள் நடப்பதால், அவர்களுக்கு ஷைத்தான்களின் அவ்லியாக்கள் என்ற பெயர் வந்தது.
அல்லாஹுத்தஆலாவின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து, அவனை திக்ரு செய்து. அவனைத் தேடுவதில் அல்லாமல் உணவருந்தக் கூடாது என்பது இதிலிருந்து தெரியவருகிறது.
இவ்வாறு உணவருந்துவதால் உணவிலுள்ள இருளும், இச்சையும் திக்ரின் பிரகாசத்தினால் நீங்கிவிடும்.
உணவிலுள்ள இருளும் இச்சையும் ஃபிஸ்கின்பால் சேர்த்து வைப்பனவாயிருக்கின்றன. இவ்வாறான ஃபிஸ்கு ஏற்படுவதால் மனிதன் ஆத்மார்த்தப் பிரகாசத்திலிருந்து மாறி நஃப்ஸானியத்தின் இருளில் சென்றுவிடுவான்.
"நிச்சயமாக ஷைத்தான் அல்லாஹ்வின் திக்ரு இல்லாமல் இருக்கிற உணவில் இறங்குகிறான்" என்று ஹதீஸில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே, பலர் கூடி இருந்து சாப்பிடும் போது ஒருவர் "பிஸ்மில்லாஹ்" கூறி முதலில் உணவை அருந்த ஆரம்பித்து விட்டால், சுன்னத்து நிறைவேறிவிடும்.
ஆனால், சாப்பிடுவதற்கு முன் பிஸ்மில்லாஹ்ச் சொல்ல ஒருவர் மறந்துவிடுவாராயின், அவருக்கு நினைவு வந்த போது பிஸ்மில்லாஹி அவ்வலஹு வஆகிரகு என்று கூற வேண்டும். அவ்வாறு கூறிவிட்டால் முன்னர் கூறத்தவறிய குறை நீங்கிவிடும். ( ஹதீஸ்)
ஒரு மனிதர் உணவருந்திக் கொண்டிருந்தார். ஆனால், அவர் "பிஸ்மில்லாஹ்" சொல்ல மறந்து விட்டார்.
கடைசியாக ஒ ஒரு கவளம்தான் மீதமிருந்தது. அப்பொழுது அவருக்கு ஞாபகம் வந்து "பிஸ்மில்லாஹி அவ்வலஹு வஆகிரஹு" என்று கூறினார்.
உடனே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சிரித்து விட்டு, 'ஷைத்தான் அவருடன் உணவருந்திக் கொண்டிருந்தான். அவர் "பிஸ்மில்லாஹ் "ச் சொல்லியவுடன், அவனருந்தி இருந்த உணவுகளை எல்லாம் வாந்தி எடுத்து விட்டான்" என்று கூறினார்கள்.
ஆடு மாடு ஒட்டகை முதலிய ஹலாலான கால்நடைகளையும் பறவைகளையும் அறுக்கும் போது "பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர்" என்று கூற வேண்டும் என்று ஏற்பட்டதற்குக் காரணமென்ன எனில், உயிர் பிரியும் போது ஏற்படும் கசப்பு மிகக் கடுமையாக இருக்கும். அல்லாஹுத்தஆலாவினுடைய திருநாமத்தைக் கூறுவது மிகவும் இனிப்பாக இருக்கும்.
ஆகவே, அக்கசப்பைக் குறைப்பதற்காக அவற்றை அறுக்கும் போது அல்லாஹு தஆலாவின் திருநாமத்தை கூறும்படி நாம் கட்டளையிடப் பட்டிருக்கிறோம். எனவேதான் "உங்களது மரணித்தவர்களுக்கு லாஇலாஹ இல்லல்லாஹு என்ற ஷஹாதத்துக் கலிமாவை ஓதிக் காண்பியுங்கள். இதனால் சக்ராத்துல் மௌத்து இலேசாகும் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறி இருக்கிறார்கள்.
பிராணிகளை அறுக்கும் முறை :-
பிராணிகளின் குரல்வளையில் கூர்மையான கத்தி மூலம் அறுத்துத்தான் பிராணிகளைக் கொல்ல வேண்டும் என்று இஸ்லாம் கூறுகிறது. இஸ்லாம் கூறுகின்ற முறையில் உயிரினங்களை அறுக்கும்போது அவற்றுக்கு எந்த வேதனையும் தெரியாது என்று
ஜெர்மனி நாட்டில் உள்ள ஹனோவர் பல்கலைக் கழகத்தில் ஒரு ஆய்வு மேற்கொள்ளப்பட்டது . அந்த ஆய்வை நடத்தியவர்கள் பேராசிரியர் சூல்ட்ஜ் மற்றும் அவரது துணை ஆய்வாளர் டாக்டர் ஹாஸிம் ஆவார்கள் .

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 190
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 107 )

اَوَمَنْ كَانَ مَيْتًا فَاَحْيَيْنٰهُ وَجَعَلْنَا لَهٗ نُوْرًا يَّمْشِىْ بِهٖ فِى النَّاسِ كَمَنْ مَّثَلُهٗ فِى الظُّلُمٰتِ لَـيْسَ بِخَارِجٍ مِّنْهَا كَذٰلِكَ زُيِّنَ لِلْكٰفِرِيْنَ مَا كَانُوْا يَعْمَلُوْنَ

மரணம் அடைந்த ஒருவனை நாம் உயிர்ப்பித்து எழுப்பினோம் - இன்னும் அவனுக்கு ஓர் ஒளியையும் கொடுத்தோம். அதைக்கொண்டு அவன் மனிதர்களிடையே நடமாடுகிறான். மற்றொருவன் இருள்களில் சிக்கிக்கிடக்கிறான்; அதைவிட்டு அவன் வெளியேறவே முடியாது - இவ்விருவரும் சமமாவாரா? இவ்வாறு காஃபிர்களுக்கு அவர்கள் செய்யக்கூடிய (பாவச்)செயல்கள் அழகாக்கப்பட்டுள்ளன.(குர்ஆன் : 6:122)

ஒரு நாள் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது அபூஜஹ்ல் ஒட்டகையின் மலத்தை எடுத்து எறிந்தான். ஆதலால், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கவலைப்பட்டு ஓரிடத்தில் உட்கார்ந்திருந்து கொண்டிருந்தார்கள்.

அச்சமயம் ஹம்ஜா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் வேட்டைக்குச் சென்றுவிட்டு வீட்டுக்குத் திரும்பவந்து கொண்டிருந்தார்கள்.

அவர் வீட்டுக்கு வந்தவுடன், ஹம்ஜா (ரலி) அவர்களின் மனைவி ஹம்ஜா அவர்களை நோக்கி "தந்தை இல்லாதவருடைய பரிதாபத்தைக் குறித்து நாம் என்ன கூறலாம்" என்று கூறி, அவரது சகோதரரது மகனார் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அபூஜஹ்ல் தலையிலடித்துப் பிளந்து விட்டானென்றும், அதோ அந்த இடத்தில் அழுது கொண்டிருக்கிறாரென்றும் கூறினார்.

உடனே, ஹம்ஜா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் தங்கள் கையில் வைத்திருந்த அம்பு, வில் முதலியவற்றுடன் வீட்டை விட்டு வெளியேறி, அவ்வில்லினால் அபூஜஹ்லின் தலையை உடைத்தார்.

அப்பொழுது அவன் ஹம்ஜா (ரலி) அவர்களை நோக்கி “உமது புதல்வன் செய்த வேலையை நீ கவனிக்கவில்லையா? நம்மை எல்லாம் மடையர் என்று கூறுவதுடன், நமது கடவுள்களையும் ஏசுகிறார்" என்றான்.

அதற்கு ஹம்ஜா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் அவர் கூறியது போல் நீங்கள் எல்லா மனிதரிலும் கேடு கெட்ட மடையர்கள்தான். நீங்கள் கல்லை வணங்குகிறீர்கள்" என்று கூறிவிட்டு,

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் சென்று "மகனே, நான் உயிருடன் இருக்கும் காலம் வரை உம்மை முகம் வாடி இருக்க நாம் பார்க்க மாட்டேன்" என்று கூறி, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கையை நீட்டச் சொல்லி, அவர்களது கையைப் பிடித்து,

"அஷ்ஹது அன் லா இலாஹ இலல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீகலஹு வ அஷ்ஹது அன்னமுஹம்மதன் அப்துஹு வ ரசூலுஹு என்று கலிமாச் சொல்லி இஸ்லாம் மார்க்கத்தில் சேர்ந்து விட்டார்கள். அச்சமயம் இந்த ஆயத்து அருளப்பட்டது.

ஹளரத் ஹம்ஜா ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் ஈமான் கொண்டு, இஸ்லாம் மார்க்கத்தில் சேர்ந்த மூன்று நாட்களுக்குப் பிறகு ஹளரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் ஈமான் கொண்டார்கள்.

மையத் என்பதற்கு உயிரில்லாதவர் என்பது கருத்தல்ல. ஈமான் இல்லாமல் காஃபிராக இருப்பவர் என்பது கருத்து. "நிராகரித்துக் கொண்டிருத்தல்" என்பது மரணத்திற்கு சமமாகும். ஏனென்றால் இத்தன்மையானது இதயத்தை மரிக்கச் செய்து விடுகிறது. ஆகையால் எந்த ஞானத்தையும் அது ஏற்காது. நேர்வழி என்னும் ஜீவனையும் அது பெற முடியாது.

"விசுவாசம் கொள்ளுதல்" என்பது நிலையான ஜீவனை கொண்டதாகும். இது இதயத்தை ஜீவன் உள்ளதாக ஆக்கி வைத்திருப்பதால், நல்ல ஞானங்களை அது கிரகித்து அதன்படி செயல்பட்டு நேர்வழி பெறுகிறது.

இவ்விரு கருத்துக்களை அடிப்படையாக வைத்து இவ்வசனத்தில் விசுவாசம் அற்றவனே மரித்தவனாகவும், ஈமான் என்னும் விசுவாசம் கொண்டவனை உயிர் பெற்று அந்த விசுவாசி ஜோதியில் நடப்பவனாகவும் கூறப்படுகிறது.

மேலும் மேற்கண்ட வசனத்திற்கு ஆன்மிக ரீதியில் பலப் படித்தரங்களை விளக்கமாக மெஞ்ஞானிகள் எனும் சூஃபியாக்கள் கொடுத்துள்ளார்கள்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 191**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 108 )**

وَكَذٰلِكَ جَعَلْنَا فِىْ كُلِّ قَرْيَةٍ اَكٰبِرَ مُجْرِمِيْهَا لِيَمْكُرُوْا فِيْهَا‌ وَمَا يَمْكُرُوْنَ اِلَّا بِاَنْفُسِهِمْ وَمَا يَشْعُرُوْنَ

மேலும் இவ்வாறே ஒவ்வோர் ஊரிலும் அதிலுள்ள குற்றவாளிகளை தலைவர்களாக நாம் ஏற்படுத்தியிருக்கிறோம். அதில் அவர்கள் (சதி) சூழ்ச்சி செய்வதற்காக, ஆனால் அவர்கள் தங்களுக்கே சூழ்ச்சி (சதி) செய்து கொள்கிறார்கள். (இதனை) அவர்கள் அறியமாட்டார்கள்.(குர்ஆன் : 6:123)
இங்கு 'தலைவர்கள்' என்பதைக் குறிக்க 'அகாபிர்' எனும் சொல் ஆளப் பெற்றுள்ளது. இதற்கு 'ஊர் பிரமுகர்கள்' என்று முஜாஹித், கத்தாதா (ரஹ்) ஆகியோர் பொருள் கூறியுள்ளனர்.
வசனம் இறக்கப்பட்ட வரலாறு :-
இஸ்லாமியப் பிரச்சாரத்தின் ஆரம்பக் காலத்தில் முஸ்லிம்களுக்குப் பரம விரோதிகளாக இருந்தவர்களில் அபூஜஹ்லும், வலீதுபின் முகீராவும் குறிப்பிடத் தக்கவர்கள்.
இவ்விருவரும் மக்காவின் ஒவ்வொரு வீதியிலும் நான்கு நபர்களை நிறுத்தி வைத்திருந்தனர்.
வெளியூர்களிலிருந்து எவரேனும் மக்காவிற்குள் வந்தாரானால், அவரை வழியிலேயே தடுத்து நிறுத்தி வைத்துக் கொண்டு பெருமானார் (ஸல்) அவர்களைக் குறிப்பிட்டு,
"அவர் ஒரு பொய்யர்; அதே சமயத்தில் சூனியமும் செய்வார்; அவருடன் எத்தகைய தொடர்பும் வைத்துக் கொள்ளாதீர்கள், அவருடைய வார்த்தைகளில் எதனையும் செவியேற்று விடாதீர்கள்" என்று கூறுவதே அந்நால்வரின் பணி என ஏற்பாடு செய்திருந்தனர்.
இதனால் பெருமானார் (ஸல்) அவர்கள் பெருங்கவலையும் அடைந்தார்கள். அப்பொழுது, இவ்வசனம் இறக்கப்பட்டு அவர்களுக்கு ஆறுதல் கூறப்படுகிறது. (அறிவித்தவர்: ஹளரத் முஜாஹித் (ரஹ்) நூல்கள்: காஜின், ஹக்கானி, அஹ்ஸன்)
ஒவ்வொரு ஊரிலும் அக்கிரமக்காரத் தலைவன் உண்டு :-
ஒவ்வொரு ஊரிலும் மிகச் சிறிய கிராமத்திலும் இத்தகைய பாவிகள் உண்டு. அவர்கள் தாம் அவ்வூருக்குத் தலைவர்களாக ஆக்கப்பட்டிருப்பர். அவர்கள் வைத்தது தான் சட்டம். தங்களுடைய நோக்கத்திற்கே அனைவரும் ஒத்திருக்கவேண்டும். யாராவது கொஞ்சமேனும் மாறாக நடந்தால் அவர்களை ஒழித்து விடுவதற்கோ, அல்லது அவர்களது வார்த்தைகளை எவரும் செவியேற்காமல் தடுப்பதற்கோ பலவகையான ஏற்பாடுகளைச் செய்துவிடுவர்.
இத்தகைய பாவிகளால் நல்லவர்கள் ஒதுங்கிக் கொள்ள வேண்டியது ஏற்படும். நல்ல காரியங்கள் எதுவும் சுமூகமாக நடைபெறவே முடியாது இவர்களால் செய்யப்படும் அக்கிரமங்களும், அநியாயங்களும் கணக்கிலடங்காதனவாகும். இவர்களின் காரணத்தால் எத்தனையோ நல்லவர்கள் மனம்நொந்து சஞ்சலத்தில் மூழ்கிக் கொண்டிருப்பது கண்கூடான ஒன்று. இவர்கள் அனைவருக்கும் இவ்வசனம் ஒரு ஆறுதலை அளிக்கிறது.
மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்: இவ்வாறே ஒவ்வொரு நபிக்கும் குற்றவாளிகளிலிருந்து (சில) எதிரிகளை நாம் ஏற்படுத்தியிருந்தோம்.' (25:31)
இவ்வாறே ஒவ்வொரு கிராமத்திலும் அதன் பாவிகளைத் தலைவர்களாக நாம் ஆக்கியிருக்கிறோம் .
இவர்கள் அக்கிராமத்தில் வஞ்சனைகள் பல செய்து கொண்டிருப்பதற்காகத்தான். என்றாலும் அவர்களும் அவர்களுடைய சூழ்ச்சிகளும் நிலைத்திருக்க மாட்டா. இறக்கப்பட்ட வரலாற்றில் கூறப்பட்ட இரு

அக்கிரமக்காரர்களும் 'பத்ரு' யுத்தத்தின் போது கேவலமாக அழிக்கப்பட்டது சரித்திரப் பிரசித்தமான ஒரு எடுத்துக் காட்டாகும்.
இவ்வாறே ஒவ்வொரு கிராமத்தின் அக்கிரமக்காரர்களும் கேவலமாக அழிக்கப்பட்டு விடுவர். இதற்கு உலக வரலாற்றில் எத்தனையோ எடுத்துக் காட்டுகள் உள்ளன. வஞ்சகச் சூழ்ச்சி செய்யும் பாவிகள் தங்களுடைய சூழ்ச்சிகளில் வெற்றிபெற்று சந்தோஷமாக இருந்தனர் என்ற சரித்திரமே இல்லை.
காரணம், அவர்கள் தங்கள் தமக்கேயல்லாமல் சதி செய்வதில்லை. அவர்கள் செய்யும் சதியின் பலனை அவர்களே அனுபவிப்பர். பிறரை அழிக்க வெட்டிய குழியில் அவர்களே வீழ்த்து மடிவர். இதனை அவர்கள் உணர்ந்துகொள்வதும் இல்லை. அவர்கள் அறியாதபடியே அச்சூழ்ச்சியில் சிக்கி அழிவர்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 192**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 109 )**

وَاِذَا جَآءَتْهُمْ اٰيَةٌ قَالُوْا لَنْ نُّـؤْمِنَ حَتّٰى نُؤْتٰى مِثْلَ مَاۤ اُوْتِىَ رُسُلُ اللّٰهِ ؔ اَللّٰهُ اَعْلَمُ حَيْثُ يَجْعَلُ رِسٰلَـتَهٗ سَيُصِيْبُ الَّذِيْنَ اَجْرَمُوْا صَغَارٌ عِنْدَ اللّٰهِ وَعَذَابٌ شَدِيْدٌ بِمَا كَانُوْا يَمْكُرُوْنَ
அவர்களுக்கு ஏதாவது ஓர் அத்தாட்சி வந்தால், அவர்கள், “அல்லாஹ்வின் தூதர்களுக்குக் கொடுக்கப்பட்டது போல் எங்களுக்கும் கொடுக்கப்படாத வரையில் நாங்கள் நம்பிக்கை கொள்ளவே மாட்டோம்” என்று கூறுகிறார்கள்; அல்லாஹ் தனது தூதை எங்கு, அமைக்க வேண்டுமென்பதை நன்கு அறிவான்; குற்றம் செய்து கொண்டிருப்போருக்கு அவர்கள் செய்யும் சதியின் காரணமாக அல்லாஹ்விடம் சிறுமையும், கொடிய வேதனையும் உண்டு.
(அல்குர்ஆன் : 6:124)
இறக்கப்பட்ட வரலாறு
ஒரு சமயம் பெருமானார் (ஸல்) அவர்களிடம் வலீத்பின் முகீரா என்பவர் கூறியதாவது. ''நபிப் பட்டமென்பது உண்மையாயின், உம்மை விட நானே அதற்கு மிகவும் தகுதியுடையவன். ஏனெனில், நான் உம்மைவிட வயதில் பெரியவன்; செல்வம் மிகுந்தவன்."
இவ்வாறே "அவருக்கு அந்த வேத வெளிப்பாடு (வஹீ) வருவது போல் எங்களுக்கும் வராத வரையில் நாங்கள் அவரை நம்ப முடியாது " என்று அபூஜஹ்லும் கூறினான்.அப்பொழுது தான் இவ்வசனம் இறக்கப்பட்டது. (ஆதார நூல்கள்: காஜின், அஹ்ஸன், தன்தாவி )
ஒரு நாள் அபூஜஹ்ல் ஜனங்களிடத்தில் நாங்களும் அப்துமனாஃபின் சந்ததியினரும், தலைமைத்தனம், கண்ணியம் ஆகியவற்றில் ஒருவருக்கொருவர் போட்டியாகவே இருந்து வந்தோம். இரண்டு பந்தயக்குதிரைகள் ஒன்றை ஒன்று முந்தாமல் சரிசமமாக இருப்பதுபோல் நாங்கள் சரிசமமாகவே இருந்து வந்தோம்.
இப்பொழுது அவர்கள் எங்களை நோக்கி "எங்களில் ஒரு நபி இருக்கிறார். அவருக்கு வஹி வருகிறது" என்று கூறுகிறார்கள்.
ஆகவே, அவருக்கு வஹீ வருவதுபோல எங்களுக்கும் வஹீ வரவேண்டும். அப்படி இல்லையேல் ஒருபோதும் அவரை நாங்கள் பொருந்திக் கொள்ளவே மாட்டோம்" என்று அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து கூறினான்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு நுபுவ்வத்தும் ரிஸாலத்தும் கிடைத்ததுபோல தங்களுக்கும் அவை இரண்டும் கிடைக்க வேண்டும் என்றே அபூஜஹ்லும் அவனைச் சேர்ந்தவர்களும் விரும்பினர் என்பது இதிலிருந்து தெரியவருகிறது. ஆகவே, அவர்கள் பிறரைப்பின்பற்ற விரும்பவில்லை என்பதும், தங்களை மற்றவர்கள் பின்பற்ற வேண்டும் என்பதுமே அவர்களது நோக்கமாக இருந்திருக்கிறது.
இதனைக் குறித்து தைஸீர் என்ற கிரந்தத்தின் ஆசிரியர் ஒரு மனிதனை நோக்கி, ''நீ ஈமான் கொள்" என்று கூற, அதற்கவர் “இல்லை, என்னையும் அல்லாஹ் நபியாக ஏற்படுத்தாத வரையில் நான் ஈமான் கொள்ளப்

போவதில்லை என்று கூறுவதைப் பார்க்கினும், அதிகமான முட்டாட்டனம் வேறொன்றுமில்லை”, என்று கூறி இருக்கிறார்.
"ருஸ்லுல்லாஹி' அதாவது அல்லாஹ்வின் ரசூல்மார்கள் என்ற வார்த்தைகள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறிக்கின்றன. இவ்வாறே வேறொரு இடத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைக் குறித்து அல்லாஹுத்தஆலா யாஅய்யுஹர் ருஸ்லு என்று கூறி இருக்கிறான் என்று இமாம் தஃலபீ ரஹ் அவர்கள் கூறி இருக்கிறார்கள்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களில் எல்லா நபிமார்களின் அம்சங்களும் ஒருங்கே அமைந்திருக்கின்றன என்று ஷரஹுத் தஅர்ருப் என்ற நூலில் எழுதப்பட்டிருக்கிறது.
நுபுவ்வத்து அல்லாஹுத்தஆலாவிற்குச் சொந்தமாகவுள்ள நன்கொடை அதனைத் தனது சுயமுயற்சியால் யாரும் சம்பாதித்துக் கொள்ள முடியாது. இவ்வாறே விலாயத்தும இருந்து வருகிறது.
மேலும், நுபுவ்வத்து அரசாங்கத்தையும், விலாயத்து அமைச்சர் பதவியையும் போன்று இருக்கின்றன. என்றாலும், விலாயத்தை ஆத்மார்த்த வழியிற் செல்லும் முஜாஹிதுகள் அடைய முடியும். ஆயினும், அனைவருக்கும் அது கிடைக்காது.
மேலும், எவ்விதமான முயற்சியும் இஜ்திஹாதும் இல்லாதவர்களும் கூட அல்லாஹ் நாடினால், அதனை அடைந்து விடுவார்கள்

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 193

## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 110 )

فَمَنْ يُّرِدِ اللّٰهُ اَنْ يَّهْدِيَهٗ يَشْرَحْ صَدْرَهٗ لِلْاِسْلَامِ وَمَنْ يُّرِدْ اَنْ يُّضِلَّهٗ يَجْعَلْ صَدْرَهٗ ضَيِّقًا حَرَجًا كَاَنَّمَا يَصَّعَّدُ فِى السَّمَآءِ كَذٰلِكَ يَجْعَلُ اللّٰهُ الرِّجْسَ عَلَى الَّذِيْنَ لَا يُؤْمِنُوْنَ

அல்லாஹ் யாருக்கு நேர்வழி காட்ட நாடுகிறானோ அவருடைய நெஞ்சை இஸ்லாத்தை ஏற்றுக்கொள்வதற்காக விசாலமாக்குகிறான் - யாரை அவன் வழி கெடுக்க நாடுகிறானோ, அவருடைய நெஞ்சை, வானத்தில் ஏறுபவன் நெஞ்சைப் போல் இறுகிச் சுருங்கும்படிச் செய்கிறான் - இவ்வாறே ஈமான் கொள்ளாதவர்களுக்கு அல்லாஹ் தண்டனையை ஏற்படுத்துகிறான். (குர்ஆன் : 6:125)

ஒருவர் நேர்வழி பெறுவதும் தவறான வழியிலேயே இருப்பதும் அல்லாஹ்வின் நாட்டத்தைப் பொருத்தே இருக்கின்றன. அவன் எவருக்கு நேர் வழிகாட்ட நாடுகிறானோ அவருடைய அகக் கண்களைத் திறந்து விடுகிறான். அவற்றின் மூலம் உண்மை விசுவாசத்தின் ஒளியைப் பெறுவதால் தடையாக இருந்த திரைகள் அனைத்தும் அகன்று அம்மனிதன் நேர்வழியைப் பெற்று விடுகின்றான்.

இதனைக் குறித்தே இங்கு இஸ்லாம் மார்க்கத்திற்காக அவருடைய நெஞ்சத்தை விரிவுபடுத்துகின்றான் எனக் கூறப்படுகிறது.

விரிவடைந்த நெஞ்சம் :-

அவ்வாறு விரிவடைந்த நெஞ்சத்தில் இதயத்தில் இஸ்லாமிய ஞானம் தாராளமாக நுழைகிறது. அப்பொழுது அம்மார்க்கத்தின் உண்மை அதில் நன்கு பதிந்துவிடுகிறது. எல்லா வகையான அறிவு ஞானங்களும் ஊற்றுக்கள் போல் ஒலித்து ஓட ஆரம்பிக்கின்றன.

இவ்வசனம் இறக்கப்பட்டதும் பெருமானார் (ஸல்) அவர்களை நோக்கி, அவர்களுடைய தோழர்கள்,"நெஞ்சம் விரிவடைவது என்றால் என்ன என்று கேட்டனர்.

''அது ஒரு பிரகாசமாகும். அதனை உண்மை விசுவாசியின் இதயத்தில் அல்லாஹ் பிரயோகிக்கும் பொழுது அந்த விசுவாசியின் நெஞ்சம் (ஞானத்தால்) விரிவடைகிறது" என்று பெருமானார் (ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள்.

''அதற்கு ஏதாவது அடையாளமுண்டா?" என்று தோழர்கள் கேட்டனர்.

ஆம்! உண்டு நிலையான மறு உலகின்பால் சிந்தனை அதிகமாகச் செல்லும்.மயக்குகிற இவ்வுலகினை விட்டு மனம் அகன்று கொள்ளும், மரணம் வருமுன்னரே மரணத்திற்குரிய சித்தமுடனிருக்குமாறு தூண்டும்" என்று விடையளித்தார்கள். (அறிவித்தவர்: ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) நூல்: தப்ரானி)

இவை நேர்வழி பெற்றவர் பெறும் பாக்கியங்களாகும்.

சுருங்கிய நெஞ்சம் :-

எவர் வழிகேட்டிலேயே இருக்குமாறு செய்ய அல்லாஹ் நாடுகிறானோ அவருடைய நெஞ்சத்தைநெருக்கடியானதாகவும், சிரமப்படக் கூடியதாகவும் ஆக்கி விடுகின்றான்.

அத்தகையவனின் நெஞ்சம் மிகவும் குறுகி விடுகிறது.அங்கே எந்த பிரகாசமும் நுழையாது: எந்த ஞானமும் சுரக்காது.

குறுகி இறுகி அந்த இதயத்தில் ஈமான் எனும் ஒளியை எம்முறையிலும் புகுத்த முயன்றாலும் முடியாது. அது எப்படி இருக்குமென்றால் ஒருவனை மிகவும் துன்புறுத்தி பலவந்தப்படுத்தி வானத்தில் ஏறுமாறு செய்வது போன்றேயிருக்கும். இதனையே இவ்வசனத்தில் வானில் ஏறுபவனின் நெஞ்சம் போல் என உதாரண ரூபத்தில் விளக்கப்படுகிறது.

இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளாத மனிதர்களின் உள்ளமானது... எப்படி இருக்கும் என்பதற்கு உதாரணமாக, வானில் ஏறும் மனிதர்களின் உள்ளம் போன்று சுருங்கி இருக்கும் என்ற ஓர் அறிவியல் உண்மையை அல்லாஹ் கூறுகிறான். இந்த வசனம் இறங்கிய 1400 ஆண்டு காலகட்டத்தில்...மனிதன் வானில் ஏறுவதை கற்பனையிலும் கூட நினைத்திருக்க முடியாது. அதிக பட்சமாக.... உயரமான ஒரு மலையில் ஏறும் ஒரு மனிதனின் இதயம் ஆக்சிஜன் பற்றாக்குறையால் மூச்சு விட சிரமப்பட்டு இதயம் சுருங்குவதையே இவ்வசனம் குறிப்பதாகவே கருதப்பட்டது.

ஆயினும் இன்றைய நவீன அறிவியல் உலகம். ஏராளமான மனிதர்களைப் பூமிக்கு வெளியில் விண்வெளிக்கும், நிலவுக்கும் அனுப்பி சாதனை செய்து வருகிறது. இப்படி விண்ணைத் தாண்டி வானில் ஏறிய விண்வெளியாளர்களின் இதயமானது, வெற்றிடம், மற்றும் ஈர்ப்பு விசை அழுத்தமின்மை காரணமாக, நீள் வட்ட

அமைப்பிலிருந்து சுருங்கி வட்டவடிவமாகிறது (Heart shrink like a spherical shape) என்ற உண்மை முன்பே வெளி வந்து விட்டது.

**http://www.space.com/25452-zero-gravity-affects...**.

பூமியில் இருக்கும்போது இதயம் நீள் வட்டத்திலும் (பச்சை) விண்வெளியில் இருக்கும்போது சுருங்கி உருண்டை வடிவத்திலும் (சிவப்பு) மாறுகிறது.

இது குறித்து விரிவான ஆய்வு முடிவுகள் தற்போது வெளிவந்துள்ளது. வானில் ஏறி விண்வெளிக்குச் செல்லும் மனிதர்களின் இதயம் மட்டும் சுருங்குவதில்லை.மாறாக, இதயத்தின் தசை செல்களிலும் ஏராளமான மாற்றங்கள் நிகழ்கிறது என்பதை சமிபத்திய (JOURNAL STEM CELL REPORTS) 7-நவம்பர்.2019. “ஜர்னல் ஸ்டெம்செல் ரிப்போர்ட்” ஆய்வு இதழ் விளக்கியுள்ளது.

அமெரிக்கா ஸ்டான்போர்ட் பல்கலைக்கழக ஆய்வாளர்கள்..

எந்த ஒரு இதய நோயும் இல்லாத, ஆரோக்கியமான, மூன்று நபர்களின் இதய ஸ்டெம்செல் ரத்த மாதிரிகளை ஆய்வுக்கு எடுத்தனர்.

அந்த ரத்த மாதிரியின் ஒரு பகுதியை பூமியில் வைத்தும் மறு பாதியை ஸ்பேஸ் எக்ஸ் ராக்கெட் மூலம் விண்வெளிக்கு எடுத்துச் சென்று... பூமிக்கு மேலே மிதந்து வரும் சர்வதேச விண்வெளி ஆய்வு மையத்தில் ( ISS-International Space Station.) வைத்து சோதித்தனர்... புவி ஈர்ப்பு விசை இல்லா வெற்றிட சூழலில் (Microgravity) ஐந்தரை வாரங்கள் வைத்து ஆய்வு செய்தனர்.

இந்தச் சோதனையில் புவி ஈர்ப்பு விசை இல்லா வெற்றிடச் சூழலில் இதய தசை செல்கள் செயல்பாட்டில் பெரிதும் மாறுதல் நிகழ்ந்தன. குறிப்பாக இதய செல்லில் 2635 ஜீன்களின் அமைப்பு மாற்றமடைந்தது.

இந்த ஐந்து வார சோதனை முடிவில் மீண்டும் பூமிக்கு திரும்பக் கொண்டு வரப்பட்ட இதய தசை செல்களின் மாறிய அமைப்பானது... பூமிக்கு வந்த பத்து நாட்களில் மீண்டும் அதன் பழைய அமைப்புக்கு சென்று விட்டது.

வானில் செல்லும் விண்வெளி வீரர்களின் இதயமானது சுருங்குகிறது.. இதயத்தின் அமைப்பு சுருங்குவதன் காரணம்... அதன் தசை செல்களில் ஏற்படும் மாற்றம் என்பதை இன்றைய ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

இந்த இருபதாம் நூற்றாண்டு அறிவியல் உண்மைகளை ஏழாம் நூற்றாண்டில் எந்த மனிதராலும் சொல்ல முடியாது. அது படைத்த இறைவனுக்கு மட்டுமே அன்று தெரிந்த ரகசியம்.

**https://www.newscientist.com/.../2222698-spaceflight.../**

அவருடைய நெஞ்சை, வானத்தில் ஏறுபவனின் நெஞ்சைப்போல் இறுகிச் சுருங்கும்படிச் செய்கிறான். – அல்குர்ஆன்.6:125

வானில் ஏறி விண்வெளிக்குச் செல்லும் வீரர்களின் இதயத்தின் அமைப்பு சுருங்கியும்,அதன் உள் செயல்பாட்டில் பெறும் மாற்றம் ஏற்படுமென்ற உண்மையை.... அல்லாஹ் அன்றே அல்குர்ஆன் வசனம் மூலம் முன்னறிவித்து விட்டான். சிந்திக்கக்கூடிய மனிதர்களுக்கு இந்த ஒரு வசனமே போதுமானது… சத்தியத்தை ஏற்றுக்கொள்வதற்கு!

இந்த ஆய்வானது அறிவியல் உலகில் மிக முக்கியமான ஒன்றாகப் பார்க்கப்படுகிறது. இதுவரை வானில் ஏறிச்சென்ற மனிதன் சந்திரன் வரையே சென்றுள்ளான். அடுத்து அவனது பயணத் திட்டம் பல லட்சம் மைல்களை கடந்து செவ்வாய் கிரகத்திற்கு செல்வதாக உள்ளது.

விண்ணை கடந்து செல்ல மனிதனுக்கு அறிவாற்றல் கொடுக்கப்பட்டாலும்… அவனது உடலானது அத்தகைய கடின சூழலுக்கு ஒத்துழைக்க வேண்டியது அதிமுக்கியமான ஒன்று.

மனு,ஜின் கூட்டத்தார்களே! வானங்கள்,பூமி ஆகியவற்றின் எல்லைகளைக் கடந்து செல்ல நீங்கள் சக்தி பெருவீர்களாயின் (அவ்வாறே) செல்லுங்கள். ஆனால் (வல்லமையும் நம்) அதிகாரமும் இல்லாமல் நீங்கள் கடக்க முடியாது, – அல் குர்ஆன்,55:33.

வானில் ஏறிச்செல்லும் ஆற்றல் அன்று குர்ஆன் இறக்கப்பட்ட போது மனிதனுக்கு கொடுக்கப்படவில்லை. ஆனால் இன்று அந்த அறிவியல் ஆற்றலை மனிதன் பெற்று விட்டான். அப்படி ஆற்றலைப் பெற்ற மனிதன், வானில் உயரச் செல்லும்போது, அவனது உடலிலுறுப்புகளுள் இதயம் மாறுதல் அடையும் என்ற உண்மையையும் அல்லாஹ் அன்றே சொல்லி விட்டான். பூமியிலிருந்து 350 கி.மீ உயரத்தில் மிதக்கும் சர்வதேச விண்வெளி நிலையத்தில் வைத்து ஆய்வு செய்யும் நிலையில் இதய அமைப்பு மாறி விடுகிறது.

படம்:- பூமியில் இருக்கும்போது இதயம் நீள் வட்டத்திலும் (பச்சை) விண்வெளியில் இருக்கும்போது சுருங்கி உருண்டை வடிவத்திலும் (சிவப்பு) மாறுகிறது.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 194**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 111 )**

وَهٰذَا صِرَاطُ رَبِّكَ مُسْتَقِيْمًا قَدْ فَصَّلْنَا الْاٰيٰتِ لِقَوْمٍ يَّذَّكَّرُوْنَ

(நபியே!) இதுவே உம் இறைவனின் நேரான வழியாகும் - சிந்தனையுள்ள மக்களுக்கு (நம்) வசனங்களை நிச்சயமாக விவரித்திருக்கின்றோம். (குர்ஆன் : 6:126)
لَهُمْ دَارُ السَّلٰمِ عِنْدَ رَبِّهِمْ وَهُوَ وَلِيُّهُمْ بِمَا كَانُوْا يَعْمَلُوْنَ

அவர்களுக்கு அவர்களுடைய இறைவனிடம் (சாந்தியும்) சமாதானமுமுள்ள வீடு(சுவர்க்கம்) உண்டு - அவர்கள் செய்த (நன்மைகளின்) காரணமாக அவன் அவர்களுடைய உற்ற நேசனாகவும் இருக்கிறான். (குர்ஆன் : 6:127)
இவ்விரு வசனங்களிலும் அல்லாஹ்வின் நேரான வழி பற்றியும், அவ்வழி நடப்போர் பெறும் அவர் நற்பலன்கள் பற்றியும் கூறப்படுகின்றன.
இந்த இஸ்லாம் மார்க்கமானது உமது இரட்சகனால் அருளப்பெற்ற நேரான மார்க்கம் ஆகும். இதன் வாயிலாக அறிவிக்கப்பட்டு இருக்கும் வழிமுறையானது உமது இரட்சகன் உடைய நேரான வழியாகும்.

இம்மார்க்கத்தை நன்கு விளங்கி காட்டுகிற வேதம் திருக்குர்ஆன் ஆகும். இதன் மூலம் உணர்வு பெறுகிற கூட்டத்தினருக்கு நமது திருக்குர்ஆன் வசனங்களை நிச்சயமாக நாம் விவரித்து இருக்கின்றோம். இவற்றில் மனிதனுக்கு எல்லா காலங்களிலும் ஏற்படக்கூடிய பிரச்சனைகள் அனைத்திற்கும் பரிகாரம் உண்டு
நபி (ஸல் ) அவர்கள் திருக்குர்ஆனின் சிறப்பை பற்றி கூறும்போது, "அது அல்லாஹ்வின் நேரான வழியாகும். அல்லாஹ்வின் உறுதியான கயிறாகும். ஞானம் நிறைந்த அறிவுரையும் ஆகும் என்று குறிப்பிட்டார்கள்.
அறிவிப்பாளர் அலீ (ரலி) நூல் திர்மிதீ.
அடுத்த வசனத்தில் (127), அவர்களுக்கு அவர்களுடைய இறைவனிடம் 'அமைதி இல்லம்' இருக்கிறது" என்று அல்லாஹ் தெரிவிக்கின்றான்.
அதாவது மறுமை நாளில் அவர்களுக்குச் சொர்க்கம் கிடைக்கும். 'அமைதி இல்லம் (தாருஸ் ஸலாம்) என்பது சொர்க்கத்தையும், 'அவர்களுடைய இறைவனிடம் '- என்பது மறுமை நாளையும் குறிக்கும்.
இங்கு சொர்க்கத்தை 'அமைதி இல்லம்' அல்லது சாந்தி இல்லம் என்று அல்லாஹ் வர்ணிக்கின்றான். ஏனெனில், சொர்க்கம் செல்லும் நல்லவர்கள். உலகத்தில் வாழும்போது இறைத்தூதர்களின் வழியைப் பின்பற்றி நேரான பாதையில், சாந்தி வழியில் நடந்தனர். அதனால் கோணலில் இருந்து பாதுகாக்கப்பட்டனர். அவ்வாறே மறுமையில் பாதுகாப்பானதும் அமைதியானதுமான இல்லத்திற்கு சொர்க்கத்திற்கு அவர்கள் செல்கிறார்கள்.
அடுத்து, 'அவர்கள் புரிந்த நற்செயல்களின் காரணமாக ' அதாவது அவர்கள் செய்த நல்லறங்களுக்கும் பிரதிபலனாக அவர்களுக்கு அவனே பாதுகாவலனாக இருக்கின்றான் என்று அந்த வசனம் கூறுகின்றது.
அதாவது அவர்களின் உதவியாளனாகவும், அவர்களுக்கு வலு சேர்ப்பவனாகவும் அவனே இருக்கின்றான்.
அவர்களை காக்கும் பொறுப்பை ஏற்கும் அவன் தனது கருணையாளும் அருளாலும் அவர்களுக்கு சொர்க்கத்தை பரிசாக வழங்குவான்

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 195
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 112 )

لَهُمْ دَارُ السَّلٰمِ عِنْدَ رَبِّهِمْ وَهُوَ وَلِيُّهُمْ بِمَا كَانُوْا يَعْمَلُوْنَ
அவர்களுக்கு அவர்களின் றப்பிடத்தில் ஈடேற்றத்தின் வீடு இருக்கிறது. இன்னும், அவர்கள் (நற்செயல்களைச்) செய்து கொண்டிருப்பதால் அவர்களுக்கு அவன் வலீயாக இருக்கிறான். ( குர்ஆன் 6:127 )
மேற்கண்ட வசனத்திற்கு தப்ஸீருல் ஹமீத் விளக்கம்
"லஹும்"- அதாவது 'அவர்களுக்கு ' என்பது இதற்கு முந்திய ஆயத்தில் கூறப்பட்டுள்ள உபதேசம் பெறும் கூட்டத்தினரைக் குறிக்கிறது.
"தாருஸ்ஸலாம்" - என்பதற்கு ஈடேற்றத்தின் வீடு என்பது பதப் பொருள். ஆயினும், சுவர்க்கம் என்பது கருத்து.
"வலீ" - என்பதற்கு தோழன், உதவியாளன், காரிய கர்த்தன்
அல்லாஹுத்தஆலா இந்த ஆயத்திலும் இதற்கு முந்திய ஆயத்துகளிலும் ஈமானின் சிறப்பையும், குஃப்ரின் தீமையையும், நல்லோர்கள், தீயோர்களின் தன்மையைப் பற்றியும் கூறி இருப்பதுடன், அல்லாஹுத்தஆலாவின் அன்பை அடைவதற்கு ஸாலிஹான நற்செயல்கள் காரணமாக இருக்கின்றன என்ற விபரத்தையும் கூறியுள்ளான்.
அஜம் தேசத்திலுள்ள ஒரு கோட்டையைக் கைப்பற்றுவதற்காக ஹளரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் தமது புதல்வரான ஹளரத் அப்துல்லாஹ் ரலியல்லாஹுதஆலா அன்ஹுமா அவர்களது தலைமையின் கீழ் 4000 குதிரை வீரர்களைக் கொண்ட ஒரு படையை அனுப்பினார்கள். அவர்கள் பிரயாணம் செய்து, மலையின் மீதிருந்த கோட்டைக்குச் சென்று, முற்றுகையிட்டனர்.

அக்கோட்டையைக் கீழிலிருந்து அம்பால் எய்து கைப்பற்ற முடியாதவாறு அவ்வளவு உயரத்திலிருந்தது. ஆகவே, அதனை அவர்கள் முற்றுகையிட்டனர். அக்கோட்டைக்குள் இருந்த காஃபிர்களின் படைக்கு அழகிய ஒரு பெண் தலைவியாக இருந்தாள். இதனால் முஸ்லிம்களுக்குப் பெருங்கஷ்டம் ஏற்பட்டிருந்தது.
முற்றுகையிட்டிருக்கும்போது, ஒருநாளில் அத்தலைவி முஸ்லிம் போர் வீரர்களைக் கோட்டைக்கு மேலிலிருந்து பார்த்தாள். முஸ்லிம் வீரர்களில் ஒரு அழகிய வாலிபரை அவள் கண்டு காதலித்தாள்,
அவ்வாலிபர் குதிரைப்படை வீரர்களில் மிகத்திறமையானவர். அவள் அவ்வாலிபரைப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள். அப்பொழுது அவளது தோழிப் பெண்கள் அவளைப் பார்த்து "அரசியே! நீங்கள் ஏன் பெரு மூச்சுவிடுகின்றீர்கள் ? நீங்களோ கோட்டைக்குள் இருக்கின்றீர்கள். தக்க பாதுகாப்பும் இருக்கிறது" என்று கூறினார்கள்.

அதற்கவள் "நம்முடைய இந்தக் கோட்டையை அதோ நிற்கிற அவ்வாலிபர் கைப்பற்றி விடுவார்" என்றாள்.
அதற்கவர்கள் "எவ்வாறு கைப்பற்றுவார் ?" என்றார்கள்.
அதற்கவள் "ஒரு நாளிகைக்குப் பிறகு விரைவில் நீங்கள் பார்ப்பீர்கள் என்று கூறி, அவ்வாலிபரிடம் ஒரு தூதுவனை அனுப்பி, உன்னிடம் நான் வருவதற்கு ஏதேனும் வழி இருக்கிறதா? எனக்காக நீர் இருக்க வேண்டும்; உனக்காக நான் இருக்க வேண்டும்" என்றாள்.
அதற்கு அவ்வாலிபர் "ஆம், வழியிருக்கிறது.இரண்டு நிபந்தனைகளின் பேரில் அதாவது வெளியிலுள்ள கோட்டையை எங்களிடம் ஒப்புவித்து விடவேண்டும். உள்கோட்டையை அவனிடம் ஒப்புவித்துவிட வேண்டும் என்று பதிற் கூறினார்கள்.
இதனைக் கேட்ட அவ்வரசி, மீண்டும் தனது தூதுவனை அனுப்பி, வெளிக் கோட்டையை உங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்பதன் கருத்து விளங்குகிறது. உள்கோட்டையை அவனிடம் ஒப்படைக்க வேண்டும் என்பதன் கருத்து விளங்கவில்லை. ஆதலின், அதனை விளக்கமாகக் கூறவேண்டும் என்று விசாரித்தாள்.
அதற்கவர் "உனது இருதயத்தை அல்லாஹுத் தஆலாவிடம் ஒப்புவித்து விட வேண்டும். அவனது ஏக தெய்வத்தன்மையை அங்கீகரித்து விட வேண்டும்' என்று பதிற் கூறினார்.
அதற்கவள் சம்மதித்து "உமது போர்வீரர்களைக் கோட்டைக்குள் அனுப்பலாம். அவர்களுக்காக நான் கோட்டை வாசலைத் திறந்து விட்டேன்" என்று கூறி அனுப்பினாள்.

முஸ்லிம் போர் வீரர்கள் கோட்டைக்குள் சென்று, அதனைக் கைப்பற்றிக் கொண்டனர். அவளை இஸ்லாம் மார்க்கத்தில் சேர்ந்து விட வேண்டும் என்று கேட்டதற்கு அவள் "நான் அரசி, கௌரவம் உள்ளவள். ஆதலால், உமது படையில் உம்மைப் பார்க்கினும் பெரியவர் இருந்தால். அவர் கையில் நான் இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவிவிடுவேன்" என்றாள்.
அதற்கவ் வாலிபர் "ஆம். எங்கள் தளபதியாகிய, எங்கள் தலைவர் இருக்கிறார். அவர்தான் எங்கள் அமீருல் மூமினீன் அவர்களது புதல்வர்" என்று கூறினார்.
உடனே, அவள் ஹளரத் அப்துல்லாஹிப்னு உமர் ரலியல்லாஹுதஆலா அன்ஹுமா அவர்களிடம் சென்றாள். அப்பொழுது அவளை இஸ்லாத்தில் சேர்ந்துவிட வேண்டும் என்று கேட்டபோது, இஸ்லாத்தில் சேர்ந்து விடுவதில் ஆட்சேபனை இல்லை. ஆனால், தங்களைப் பார்க்கினும் பெரியவர் இருந்தால், அவரிடம் இஸ்லாத்தைத் தழுவ விரும்புகிறேன்" என்று கூறினாள்.
அதற்கவர் ''ஆம், எனது தந்தை அமீருல் மூமினீன் உமர் ஃபாரூக் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் இருக்கிறார்கள்" என்றார்.
உடனே, அவள், "அவ்வாறாயின் என்னை அவரிடம் அனுப்பி விடுங்கள். அவரிடத்தில் நான் இஸ்லாத்தைத் தழுவுகிறேன்" என்றாள்.

அவளது விருப்பத்திற்கேற்ப முஸ்லிம்களது தளபதியான அப்துல்லா ஹிப்னு உமர் ரலியல்லாஹுதஆலா அன்ஹுமா அவர்கள் அவளுக்குப் பாதுகாவலாக ஒரு படையையும், ஏராளமான பொருள்களையும் அவர்களிடம் ஒப்புவித்து, அவளை ஹளரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களிடம் அனுப்பி வைத்தார்.
அவள் ஹளரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களிடம் வந்து "அமீருல் மூமினீன் அவர்களே! தங்களைப் பார்க்கினும் பெரியவர் இருக்கிறாரா?" என்று வினவினள்.
அதற்கு ஹளரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் "ஆம் முஹம்மதுர் ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருக்கிறார்கள். இதோ அவர்களது கப்ரு ஷரீபு இருக்கிறது என்று ரெளலா ஷரீபைச் சுட்டிக் காட்டினார்கள்.
அப்பொழுது, அவள் அங்குதான் நான் இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவுவேன் என்று கூறினாள்.
அதற்குச் சம்மதிக்கவே அவள் பரிசுத்த ரவ்லா ஷரீபிற்கு முன் வந்து, ஸலாம் சொல்லி, மிக மரியாதையாக உட்கார்ந்து,
''வணக்கத்திற்குரியவன் அல்லாஹுத்தஆலாவைத் தவிர வேறு யாருமில்லை. என்று நான் சாட்சியங் கூறுகிறேன். முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவனது
அடியாராகவும் தூதராகவும் இருக்கிறார்கள் என்று நான் சாட்சி கூறுகிறேன்". என்று கூறி,
“இருள்களிலிருந்து நான் வெளியேறிப் பிரகாசத்தின்பால் வந்துவிட்டேன். அல்லாஹ்வின் ரசூலே! நான் ஈமான் கொண்ட பின் பாவங்களைச் செய்து அதனை அசுத்தப்படுத்தி விடுவேனோ என்று அஞ்சுகிறேன். தங்களை எங்கள்பால் ரசூலாக உண்மையைக் கொண்டு அனுப்பிய உங்களது றப்பிடம், நான் மறுமுறை பாவம் செய்வதற்கு முன் எனது உயிரைக் கைப்பற்றி விடுமாறு பிரார்த்தியுங்கள்" என்று விண்ணப்பம் செய்து, தனது தலையை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது வாசற்படியின் மீது வைத்தாள். அந்த நிமிடத்திலேயே அவள் இறந்து விட்டாள். அவளது அழகிய முடிவைக் குறித்து ஹளரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் அழுதுவிட்டு, அந்த பெண்ணை ஜன்னத்துல் பக்கீஇல் ஸஹாபிகளுக்கு மத்தியில் நல்லடக்கம் செய்யும்படி கட்டளை யிட்டார்கள்.
لَهُمْ دَارُ السَّلٰمِ عِنْدَ رَبِّهِمْ وَهُوَ وَلِيُّهُمْ بِمَا كَانُوْا يَعْمَلُوْنَ
அவர்களுக்கு அவர்களின் றப்பிடத்தில் ஈடேற்றத்தின் வீடு இருக்கிறது. இன்னும், அவர்கள் (நற்செயல்களைச்) செய்து கொண்டிருப்பதால் அவர்களுக்கு அவன் வலீயாக இருக்கிறான். ( குர்ஆன் 6:127 )

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 196
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 113 )

وَيَوْمَ يَحْشُرُهُمْ جَمِيْعًا يٰمَعْشَرَ الْجِنِّ قَدِ اسْتَكْثَرْتُمْ مِّنَ الْاِنْسِ وَقَالَ اَوْلِيٰٓـئُهُمْ مِّنَ الْاِنْسِ رَبَّنَا اسْتَمْتَعَ بَعْضُنَا بِبَعْضٍ وَّبَلَغْنَاۤ اَجَلَـنَا الَّذِىْۤ اَجَّلْتَ لَـنَا قَالَ النَّارُ مَثْوٰٮكُمْ خٰلِدِيْنَ فِيْهَاۤ اِلَّا مَا شَآءَ اللّٰهُ اِنَّ رَبَّكَ حَكِيْمٌ عَلِيْمٌ
அவர்கள் யாவரையும் ஒன்று சேர்க்கும் (மறுமை) நாளில், அவன் (ஜின்களை நோக்கி) “ஓ! ஜின்களின் கூட்டத்தாரே! நீங்கள் மனிதர்களில் அநேகரை (வழிகெடுத்து) உங்களுடன் சேர்த்துக் கொண்டீர்களல்லவா?” என்று கேட்பான். அதற்கு மனிதர்களிலிருந்து அவர்களுடைய நண்பர்கள்: “எங்கள் இறைவா! எங்களில் சிலர் சிலரைக்கொண்டு பலன் அடைந்திருக்கின்றோம். நீ எங்களுக்கு நிர்ணயித்த தவணையை நாங்கள் அடைந்து விட்டோம்” என்று கூறுவார்கள்;
அதற்கு அவன், “நரகம் தான் நீங்கள் தங்குமிடமாகும் - அல்லாஹ் நாடினாலன்றி நீங்கள் அதில் என்றென்றும் இருப்பீர்கள் - நிச்சயமாக உமது இறைவன் மிக்க ஞானமுடையோனாகவும், (யாவற்றையும்) நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான்.(குர்ஆன் : 6:128)
وَكَذٰلِكَ نُوَلِّىْ بَعْضَ الظّٰلِمِيْنَ بَعْضًا بِمَا كَانُوْا يَكْسِبُوْنَ

இவ்வாறே அநியாயக்காரர்களில் சிலரை மற்றும் சிலருடன் - அவர்கள் செய்து கொண்டிருக்கும் (பாவச்) செயல்களின் காரணத்தால் - நெருங்கியவர்களாக ஆக்குகிறோம். (குர்ஆன் : 6:129)
ஜின் வர்க்கத்தைச் சார்ந்த ஷாத்தான்கள் சிலர், மனிதர்களைப் பயமுறுத்தியோ ஆசை காட்டியோ அல்லாஹ்வுக்கு இணை வைக்கத் தூண்டினர். இதனால் மனித வர்க்கத்தினர் ஷைத்தானுக்கு வழிப்பட்டு மனித ஷைத்தான்களாக ஆகிவிட்டனர். இவ்விரு வர்க்கத்தினர் அனைவரையும் இறைவன் ஒன்று கூட்டும் அந்த இறுதி நாளில் மனிதர்களைக் கெடுத்த ஜின் வர்க்கத்தினரை நோக்கி,

"ஜின் வர்க்கத்தினரே! நீங்கள் மனித வர்க்கத்தினரை ஏமாற்றி அவர்களிலிருந்து அநேகரை உங்களுடைய வழிகேட்டில் சிக்கிக் கொள்ள தேடி எடுத்துக் கொண்டீர்கள். அவர்கள் அல்லாஹ்வை விசுவாசம் கொள்ள முடியாத வகையில் பல வகையிலும் அவர்களைத் உங்களுடன் சேர்த்துக் கொண்டீர்கள். அவர்களைக் கெடுத்த குற்றம் உங்களையே சாருகிறது என்று இறைவன் கூறுவான்.

மனித, ஜின் ஆகிய இரு வர்க்கத்தினரின் முன்னிலையிலேயே இந்த விசாரணை நடைபெறும் எவரும் எதையும் மறைத்து விட முடியாத நாள் ஆகையால், ஜின்கள் பதில் கூற முடியாமல் மௌனமாக இருக்கும் பொழுது மனிதர்களில் உள்ள அந்த ஷைத்தான்களுடைய நேச ஏதாவது கூறி தப்பிக்க முயல்வர்.
"எங்களுடைய இரட்சகனே! நாங்கள் ஷைத்தான்களுடன் சேர்ந்து கொண்டே இருந்தோம். அவர்களுக்காக நீ விரும்பாத அநேக செயல்களை செய்தோம். உனக்கு விரோதமாக அவர்களை நாங்கள் வணங்கினோம். சில சிலைகளை நாங்கள் செய்து அந்த ஷைத்தான்களின் பெயர்களை அவற்றிற்குக் கொடுத்து அவற்றையும் வணங்கினோம். இச்செய்கைகள் அனைத்தையும் நாங்கள் அழகாகக் காணுமாறு அந்த ஷைத்தான்கள் எங்களை மயக்கி விட்டனர் அவர்களே எங்களுடைய நண்பர்களாகி பரஸ்பரம் நாங்கள் ஒன்றாகவே விட்டோம்."
"எங்களில் சிலரான ஷைத்தான்கள் மனிதர்கள் சிலரைக் கொண்டு தங்களுடைய நோக்கமான இணை வைத்தல் எனும் பலனைப் பெற்றுக் கொண்டனர். நாங்கள் முற்றிலும் இந்த மறுமை நாளை மறக்குமாறு செய்துவிட்டனர். ஆனால். நீ எங்களுக்குத் தவணையாக ஏற்படுத்திய எங்களுடைய தவணைக் காலமான இந்த மறுமை நாளை இப்பொழுது நாங்கள் அடைத்து விட்டோம்.இதைத்தான் அவர்கள் மறக்கடித்தனர் இதனால் நாங்கள் முஸ்லிம்களை வெறுத்தோம். அவர்களுடைய உண்மையான கொள்கைகளை புறக்கணித்தோம்"
"ஆகையால் எங்களைக் கெடுத்த அந்த ஷைத்தான்களையே நீ தண்டிக்க வேண்டும்"என ஷைத்தான்களின் நேசர்களான மனிதர்கள் கூறுவர்.

இதற்கு அல்லாஹ் பதிலளிக்கையில், "உங்களிருவருக்கும் நரகம் தான் தங்குமிடம் இவைகளை எல்லாம் நமது தூதர்கள் உலகிலேயே அறிவித்து விட்டனர். நம்முடைய வேதங்களும் தெளிவாக எடுத்துரைத்து விட்டன. இங்கே உங்களுடைய காரணங்கள் எதுவும்
ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது. இந்த நரகத்திலேயே நீங்கள் தங்கி விடுவீர்கள். அல்லாஹ் நாடியுள்ள காலத்தைத் தவிர மற்றைய காலங்கள் முழுவதும் இதில் நான் நீங்கள் இருக்க வேண்டும். இதிலிருந்து வெளியேறுவதோ. இதிலேயே நிரந்தரமாக வைப்பதோ நம்முடைய நாட்டத்தைப் பொருத்ததாகும்' எனக் கூறிவிடுவான்.
"அல்லாஹ் நாடிய காலத்தைத் தவிர" என்ற வாக்கியத்திற்கு திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள் ஏகமனதாகப் பொருள் செய்யவில்லை. ஷைத்தான்களும் அவர்களைப் பின் பற்றியவர்களும் நரகத்தில் நுழைந்து நிரந்தரமானவர்களாக இருப்பார்கள்.
என்றாலும், அக்காஃபிர்களை நரகத்தில் நெருப்புள்ள பாகத்தைவிட்டு, பனிக்கட்டியுள்ள பாகத்திற்கு அனுப்பப்படும். இவ்வாறு அனுப்பப்படும் காலத்தைதான் இவ்வாக்கியம் குறிப்பிடுகிறது என்று சிலர் கூறுகிறார்கள்.

இதனைக் குறித்து, நெருப்பின் வேதனையை விட்டு அவர்கள் மாற்றப்பட்டு, பனிக்கட்டியுள்ள ஓடைக்குக் கொண்டு செல்லப் படுவார்கள். அங்குள்ள மிகக் கடுங்குளிரின் கொடுமையால் அவர்களது அங்கங்களெல்லாம் துண்டு துண்டாகி விழுந்து விடும். அதனை அவர்கள் சகிக்க முடியாமல் தங்களை நெருப்புள்ள நரகத்திற்கே திரும்பவும் கொண்டு போக வேண்டுமென்று கூக்குரலிடுவார்கள்.
قُلْنَا يٰنَارُ كُوْنِىْ بَرْدًا وَّسَلٰمًا عَلٰٓى اِبْرٰهِيْمَۙ
(அவ்வாறே அவர்கள் இப்ராஹீமை நெருப்புக் கிடங்கில் எறியவே நெருப்பை நோக்கி) "நெருப்பே! நீ இப்ராஹீமுக்கு சுகம் தரும் விதத்தில் குளிர்ந்து விடு!" என்று நாம் கூறினோம்.
(அல்குர்ஆன் : 21:69) இதில் கவனிக்க வேண்டிய விஷயம் "சுகம் தரும் விதத்தில் குளிர்ந்து விடு"
உறைந்த நீரை பனிக்கட்டி என்கிறோம். பனிக்கட்டியின் வெப்பநிலை என்பது O டிகிரி ஆகும். இந்த O டிகிரிக்கு கீழேயும் உள்ள வெப்பநிலையை ( - ) மைனஸ் டிகிரி வெப்பநிலை என்கிறோம்.
ஒரு பொருளின் மின்னோட்டம் என்பது எலக்ட்ரான்களின் ஓட்டமே மின்னோட்டம் என்கிறோம். ஒரு செம்பு, இரும்பு போன்ற உலோகத்தை ( - ) மைனஸ் டிகிரி வெப்பநிலை கீழே மைனஸ் 272 டிகிரி வரை கொண்டு வந்தாலும் அந்தப் பொருளில் எலக்ட்ரானின் சுற்று ஓட்டம் தொடர்ந்து இருக்கும்
ஒரு பொருளின் வெப்ப நிலை மைனஸ் 273 டிகிரிக்கு (super conductivity) குறைந்தால் அந்த வெப்பநிலைக்குப் பெயர் " அப்ஸல்யூட் ஜீரோ" (Absolute Zero ). அப்படி என்ன மைனஸ் 273 டிகிரியில் அப்படி என்ன விசேஷம் ? சொல்றேன்.
இதற்கு மேல் குளிர் என்பது விஞ்ஞான ரீதியாக இல்லை . இந்த மைனஸ் 273 டிகிரியில் சில வினோதங்கள் அந்த உலோகப் பொருளின் மீது விசித்திரமாக நிகழ்கின்றன . இது கற்பனை இல்லை , நிரூபிக்கபட்ட விஞ்ஞான உண்மை.
அதாவது, உலோகங்களிலுள்ள அணுவில் உள்ள எலக்ட்ரான்கள் வெளிவட்டத்தில் சுற்றிக் கொண்டிருப்பது முற்றிலுமாக நின்று போய் உஷ்ணம் என்பதே இல்லாத நிலை அந்த உலோகத்திற்கு வந்து விடுகிறது . இப்போது அது உலோகம்தானா ? என்ற கேள்வி விஞ்ஞானத்திற்கு வருகிறது. அது ஓரமாக இருக்கட்டும் .
இந்த மைனஸ் 273 டிகிரியில் உலோகங்களின் மின் தடைகளில் (Resistance) கணிசமான மாற்றம் ஏற்பட்டு . மின்சாரத்தைக் கடத்தும் தகுதி நேரடியாக அதிகமாகி விடுகிறது . மின்சாரத்தை தடுத்து நிறுத்த வேண்டிய தடை, மின்சாரத்தை ஒரேயடியாகக் கடத்துகிறது . அந்த உலோகத்தின் மின் தடைக்கு என்னாச்சி ? இதென்ன மாறுபட்ட குண இயல்பு ?
அதாவது லாரி ஓட்டுவதற்கு "'பிரேக் " மிகவும் தேவையானது. "பிரேக்" _ வேகத்திற்கு தடை .
அதே மாதிரி 'ரெஸிஸ்டன்ஸ் " என்பது மின்சார தடை . இந்த மின் தடையை எல்லா உலோகங்களுக்கும் அலோகங்களுக்கும் இருக்கும் . இந்த இயல்பான தடை இப்போது இல்லாமல் செய்து விடுகிறது இந்த மைனஸ் -273 டிகிரி . இதனால் உலோகங்களில் பெரும் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தி விடுகிறது.
அதுவும் பிரேக்கே இல்லாத மணல் லாரியை தாசில்தார் போலீஸ் ஜிப்பில் விரட்டும்போது அந்த மணல் லாரி எப்படி தலைதெறிக்க ஓடும் அது மாதிரி மின்சாரம், மின் தடை ஏதுமின்றி சகட்டுமேனிக்கு மின்சாரம் பாய்கிறது . விஞ்ஞானமே இது பற்றி கொஞ்சம் பயந்துதான் இருக்கிறது.
- மைனஸ் 273 டிகிரி என்பது ஒவ்வொரு பொருளின் இயற்கைத் தன்மைக்கு மாற்றமான அப்ஸல்யூட் ஜீரோ" (Absolute Zero ) என்கிறது. இயற்கைத் தன்மைக்கு மாற்றமான இந்தக் குணம் உலோகத்திற்கு எப்படி வந்தது? விஞ்ஞானத்திற்கே தெரியவில்லை.
நெருப்பின் வேதனையை விட்டு நரகவாசி மாற்றப்பட்டு, பனிக்கட்டியுள்ள ஓடைக்குக் கொண்டு செல்லப் படுவார்கள். அங்குள்ள மிகக் கடுங்குளிரின் (மைனஸ் 273 டிகிரியாக இருக்கலாம் ) கொடுமையால் அவர்களது அங்கங்களெல்லாம் துண்டு துண்டாகி விழுந்து விடும். அதனை அவர்கள் சகிக்க முடியாமல் தங்களை நெருப்புள்ள நரகத்திற்கே திரும்பவும் கொண்டு போக வேண்டுமென்று கூக்குரலிடுவார்கள்.

படம் :- அண்டார்டிகா கண்டத்திலுள்ள கடல் பனிப்பாறை இதன் வெப்பநிலை மைனஸ் 10 டிகிரியோ அல்லது மைனஸ் 20 டிகிரியோ இருக்கலாம். நான் சொல்றது நரகின் பனி ஓடை மைனஸ் 273 டிகிரி வரை இருக்கலாம். மைனஸ் 273 டிகிரியை கற்பனை செய்து பாருங்கள்.
அது " அப்ஸல்யூட் ஜீரோ" (Absolute Zero )

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 197
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 114 )

يٰمَعْشَرَ الْجِنِّ وَالْاِنْسِ اَلَمْ يَاْتِكُمْ رُسُلٌ مِّنْكُمْ يَقُصُّوْنَ عَلَيْكُمْ اٰيٰتِىْ وَيُنْذِرُوْنَكُمْ لِقَآءَ يَوْمِكُمْ هٰذَا قَالُوْا شَهِدْنَا عَلٰٓى اَنْفُسِنَا وَغَرَّتْهُمُ الْحَيٰوةُ الدُّنْيَا وَشَهِدُوْا عَلٰٓى اَنْفُسِهِمْ اَنَّهُمْ كَانُوْا كٰفِرِيْنَ
(மறுமை நாளில் இறைவன் ஜின்களையும் மனிதர்களையும் நோக்கி) “ஜின்கள், மனிதர்கள் கூட்டத்தாரே! உங்களுக்கு என் வசனங்களை (அறிவித்து) ஓதிக்காட்டவும், இந்த நாளில் (ஏற்படப்போகும்) சந்திப்பைப் பற்றி உங்களுக்கு எச்சரிக்கை செய்யவும் உங்களிலிருந்தே உங்களிடம் தூதர்கள் வரவில்லையா?” (என்று கேட்பான்), அதற்கு அவர்கள், “நாங்கள் எங்கள் (பாவத்தின்) மீது சாட்சி கூறுகிறோம்” என்று கூறுவார்கள்; இதற்குக்காரணம் உலக வாழ்க்கை அவர்களை மயக்கிவிட்டது - அவர்கள் காஃபிர்களாக இருந்ததாக அவர்கள் தங்களுக்கு எதிராகவே சாட்சி கூறுவார்கள்.(குர்ஆன் : 6:130)
அல்லாஹுத்தஆலா கியாமத்து நாளில் மனுஜின் ஆகிய இரு வர்க்கத்தாரையும் நோக்கிக் கேட்கும் கேள்வியும், அவர்கள் கூறும் பதிலும், அவர்கள் நபிமார்களது உபதேசங்களை அடைந்தும் ஈமான் கொள்ளாமல் காஃபிர்களாக இருந்ததற்குரிய காரணமும் இந்த ஆயத்தில் கூறப்பட்டிருக்கின்றன.
மனுஜின் ஆகிய இரு வர்க்கத்தாரும் நன்மைகளைச் செய்யவும், தீமைகளைச் செய்யாதிருக்கவும் கட்டளையிடப் பட்டவர்களாக இருக்கிறார்கள் என்பதில் எல்லா இமாம்களும் ஏகமனதாக கருத்து கூறி இருக்கிறார்கள்.
மனு ஜின் ஆகிய இரு வர்க்கத்திற்கும் ரசூல்மார்கள் அனுப்பப்பட்டிருக்கிறார்கள் என்பது இதிலிருந்து தெரியவருகிறது.
ஆனால், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மனு ஜின் ஆகிய இரு வர்க்கத்தினருக்கும் பொது நபியாக இருந்தார்கள் என்று இஜ்மாஉல் உம்மாவில் சொல்லப்பட்டிருக்கிறது.
ஜின்களில் ஒரு கூட்டத்தினர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தொழுகையில் கிராஅத் ஓதிக்கொண்டிருந்ததைச் செவிமடுத்துக் கேட்டதாகவும், அதனால் அவர்கள் ஈமான் கொண்டதாகவும் திருக்குர்ஆனிலேயே சொல்லப்பட்டிருக்கிறது.
"மேலும் (நபியே!) நாம் உம்மிடம் இந்த குர்ஆனை செவியுறும் பொருட்டு ஜின்களில் சிலரை திருப்பியதும், அவர்கள் அங்கு வந்த போது, “மௌனமாக இருங்கள்” என்று (மற்றவர்களுக்குச்) சொன்னார்கள்; (ஓதுதல்) முடிந்ததும் தம் இனத்தாரிடம் சென்று அவர்களை அச்சமூட்டி எச்சரிக்கை செய்தனர்.
(ஜின்கள்) கூறினார்கள்: “எங்களுடைய சமூகத்தார்களே! நிச்சயமாக நாங்கள் ஒரு வேதத்தைச் செவிமடுத்தோம், அது மூஸாவுக்குப் பின்னர் இறக்கப்பட்டிருக்கின்றது, அது தனக்கு முன்னுள்ள வேதங்களை உண்மை படுத்துகிறது. அது உண்மையின் பக்கமும், நேரான மார்க்கத்தின் பாலும் (யாவருக்கும்) “வழி” காட்டுகின்றது.
“எங்கள் சமூகத்தாரே! உங்களை அல்லாஹ்வின் பக்கம் அழைப்பவருக்கு பதிலளித்து (அவர் கூறுவதை ஏற்று) அவர் மீது ஈமான் கொள்ளுங்கள். அவன் உங்கள் பாவங்களிலிருந்து உங்களுக்கு மன்னிப்பளிப்பான், நோவினை தரும் வேதனையிலிருந்து உங்களைப் பாதுகாப்பான்.(குர்ஆன் : 46:29 - 31)
மனிதரிலுள்ள மற்ற நபிமார்களில் எவரும் இவ்விரு வர்க்கத்தாருக்கும் பொது நபியாக வரவில்லை.

ஹளரத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஜின்களின் மீது அதிகாரம் செலுத்தியதாகவும், அவர்களிடம் வேலை வாங்கியதாகவும் வந்திருக்கிறதேயன்றி, அவர்களுக்கு அவர் நபியாக வரவில்லை.
படம் :- ஹளரத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் காற்றில் பறப்பதற்கு ஜின்கள் உதவி புரியும் காட்சி

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 198**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 115 )**

ذٰ لِكَ اَنْ لَّمْ يَكُنْ رَّبُّكَ مُهْلِكَ الْقُرٰى بِظُلْمٍ وَّاَهْلُهَا غٰفِلُوْنَ
(இவ்வாறு தூதர்களை அவன் அனுப்பியதற்குக்) காரணம் யாதெனில், அநியாயம் செய்பவர்களின் ஊரை, அதிலிருப்போர் எச்சரிக்கை இல்லாதிருக்கும் நிலையில் அவர்கள் செய்துவிட்ட அநியாயத்தின் காரணமாக உம் இறைவன் அழிப்பதில்லை என்பதேயாகும்.
(குர்ஆன் : 6:131)
وَلِكُلٍّ دَرَجٰتٌ مِّمَّا عَمِلُوْا وَمَا رَبُّكَ بِغَافِلٍ عَمَّا يَعْمَلُوْنَ
ஒவ்வொருவருக்கும் அவர்கள் நடந்து கொண்டதற்குத் தக்கவாறு உயர்நிலைகள் உண்டு; உம் இறைவன் அவர்கள் செய்வதைப் பற்றி பாராமுகமாக இல்லை. (குர்ஆன் : 6:132)
ஒரு கூட்டத்தினரை எந்த எச்சரிக்கையும் செய்யாமல் அல்லாஹ் அழிப்பதில்லை. எந்த ஊர்களாயினும், நகரங்களாயினும் அவற்றில் வசிப்பவர்கள் எந்த எச்சரிக்கையும் செய்யப்படாமலோ, ரசூல்மார்களை அனுப்பி அச்சமூட்டி அறிவிக்கப்படாமலோ அவர்கள் மறதியாளர்களாக இருக்கும் நிலையில் அநியாயமாக அல்லாஹ் அழிக்கிறவனல்லன்.
முதலில் தனது தூதர்களை அனுப்புவான். அவர்கள் மூலம் வேதத்தை வழங்குவான். வேத விளக்கம் செய்பவர்களை அப்போதைக்கப்போது தோற்றுவிப்பான். திருந்துவதற்குரிய பல வாய்ப்புக்களையும் கொடுப்பான். இவ்வாறெல்லாம் செய்தும் திருந்தாவிடில், தனது வேதனையை இறக்குவான். இங்ஙனமின்றி எடுத்த எடுப்பிலேயே அனைவரையும் அல்லாஹ் அழித்து விடுபவனல்லன் என்பது இதன் கருத்தாகும்.
இதன் பின்னர் அவர்கள் எப்படிநடந்து கொள்கின்றனரோ அதற்குத் தக்கவாறுள்ள நிலைகள் அவர்களுக்கு உண்டு; விவரம் அடுத்த வசனத்தில் 132 -ல் கூறப்படுகிறது.
உலகில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரியத்தைச் செய்கின்றனர். சிலர் அல்லாஹ்வுக்கு கீழ்ப்படிந்து நடக்கின்றனர். சிலர், அவனுக்கு மாறு செய்கின்றனர். ஆனால் அவர்களில் ஒவ்வொருவருக்கும் அவர்கள் செய்ததற்குரிய பதவிகள் உண்டு. நன்மை செய்தார்களானால் நற்பதவியை அடைவார்கள். தீமை செய்தார்களானால் அதற்குரிய தீய பலனை அடைவார்கள்.
யார் யார் எதைச் செய்தார்; செய்துகொண்டிருக்கின்றார் என்பவற்றை உமது இரட்சகன் மறந்து விடுகிறவனல்லன். அந்தந்த செயல்களைக் கணக்கிட்டு அவற்றிற்குரிய கூலிகளை முறைப்படி வழங்கிவிடுவான். அவன் யாரிடமும் எந்தத் தேவையுடையவனுமல்லன். அவன் எல்லோருக்கும் அவரவருக்குரிய தேவைகளை வழங்குகிறான்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 199
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 116)

وَرَبُّكَ الْغَنِىُّ ذُو الرَّحْمَةِ ‌ اِنْ يَّشَاْ يُذْهِبْكُمْ وَيَسْتَخْلِفْ مِنْۢ بَعْدِكُمْ مَّا يَشَآءُ كَمَاۤ اَنْشَاَكُمْ مِّنْ ذُرِّيَّةِ قَوْمٍ اٰخَرِيْنَ
உம் இறைவன் தேவைகளற்றவன்; மிக்க கருணையுடையவன் - அவன் நாடினால் உங்களைப் போக்கி உங்களுக்கு பிறகு, உங்களை அவன் இதர மக்களின் சந்ததியிலிருந்து உற்பத்தி செய்தது போன்று - தான் நாடியவரை உங்களுக்கு பதிலாக ஆக்கி விடுவான். (குர்ஆன் : 6:133)
இறைவன் ஏன் படைக்கிறான் ?
"அவன்தான் அல்லாஹ் - உங்கள் இறைவன்; அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை; எல்லாப் பொருட்களின் படைப்பாளன் அவனே ஆவான்; ஆகவே, அவனையே வழிபடுங்கள் - இன்னும் அவனே எல்லாக் காரியங்களையும் கண்காணிப்பவன். (அல் குர்ஆன் 6:102)

அல்லாஹ் மிகத்தெளிவாக இந்த வசனத்திலே அவனே படைப்பாளன் என்று கூறுகிறான் அல்லாஹ் தன்னை ஹாலிக் (படைப்பாளன்) என்று கூறிக்கொள்கிறான். அதை மனிதர்களாகிய நாம் உணர்வதற்காக அனைத்தையும் படைக்கிறான், படைத்துக்கொண்டே இருக்கிறான்.
அல்லாஹ் படைக்கிறான் சரி. இதிலென்ன அதிசயம் இருக்கிறது மனிதன் கூடத்தான் படைககிறான் என்று பகுத்தறிவுவாதிகள் சொல்லக்கூடும். அல்லாஹ்வின் படைப்பிற்கும் மனிதனுடைய படைப்பிற்கும் உள்ள வித்தியாசத்தயும் நாம் முதலில் புரிந்து கொள்ள வேண்டும்.
மனிதனுடைய படைப்பு என்பது ஏற்கனவே இந்த உலகத்தில் இருக்கக் கூடிய பொருளை வேறு ஒரு பொருளாக படைப்பது. இரும்பைக் கொண்டு Screw (ஸ்குரூ) தயார் செய்வது,இரும்பை மனிதனால் தயார் செய்ய முடியாது. கல்லைக் கொண்டு சிலையை தயார் செய்வது, கல் உடைத்து எடுக்கப்படும் பாறையை மனிதனால் தயார் செய்ய முடியாது. ஆனால் அல்லாஹ்வுடைய படைப்பு என்பது ஒன்றுமில்லாததிலிருந்து ஒன்றை படைப்பது.இந்த பிரபஞ்சம் எப்படி படைக்கப்பட்டதோ அதுபோல (Big Bang Theory).
இங்கே மற்றொரு முக்கியமான விஷயத்தை அனைவரும் கவனிக்க வேண்டும். எப்படி ஒரு சிலையை பார்த்து நாம் சிற்பியை தெரிந்து கொள்கிறோமோ, ஒரு ஓவியத்தை பார்த்து ஓவியரை தெரிந்து கொள்கிறோமோ அதுபோல இறைவனின் படைப்புகளை பார்த்து நாம் இறைவனை உணர்ந்து கொள்கிறோம் அவ்வளவே. சிலையை பார்த்து சிற்பியை தெரிந்து கொள்வதனால் சிலை நிச்சயம் சிற்பியாகிவிட முடியாது. ஓவியத்தை பார்த்து ஓவியரை தெரிந்து கொள்வதனால் ஓவியம் ஓவியராகிவிட முடியாது.சிற்பி சிற்பிதான் சிலை சிலைதான்.ஓவியர் ஓவியர்தான் ஓவியம் ஓவியம்தான். அதுபோல அல்லாஹ்வால் படைக்கப்பட்ட அனைத்து படைப்புகளும் நமக்கு அல்லாஹ்வை அவனின் ஆற்றலை உணர்த்துகின்றன. ஆனால் படைக்கப்பட்ட எந்த பொருளும் அல்லாஹ் ஆக முடியாது.

உங்களில் நீங்கள் அல்லாஹ்வை உணருகிறீர்கள். அல்ஹம்துலில்லாஹ். அல்லாஹ் திடமான கை கால்களை கொடுத்திருக்கிறான். நல்ல கண் பார்வையை கொடுத்திருக்கிறான். யாருடைய உதவியுமில்லாமல் உங்களுடைய உடல் இயக்கம் அழகாக இயங்குகிறது. இங்கே உங்களில் நீங்கள் அல்லாஹ்வை உணருகிறீர்கள் அவனது படைப்பின் ஆற்றலை உணருகிறீர்கள். ஆனால் நீங்கள் ஒருகாலும் அல்லாஹ் ஆகிவிட முடியாது.
"வானங்களையும், பூமியையும் படைத்தவன் அவனே; உங்களுக்காக உங்களில் இருந்தே ஜோடிகளையும் கால் நடைகளிலிருந்து ஜோடிகளையும் படைத்து, அதைக் கொண்டு உங்களை(ப் பல இடங்களிலும்) பல்கி பரவச் செய்கிறான், அவனைப் போன்று எப்பொருளும் இல்லை; அவன் தான் (யாவற்றையும்) செவியேற்பவன், பார்ப்பவன். (அல் குர்ஆன் 42:11).

இந்த இறைவசனம் அல்லாஹ்வுக்கு நிகராக எந்த பொருளுமில்லை என்பதை நமக்கு விளக்குகிறது. ஆகவே இறைவனால் படைக்கப்பட்ட பொருட்களினால் நாம் அல்லாஹ்வை உணரவேண்டுமே தவிர படைக்கப்பட்ட எந்த பொருளையும் இறைவனாக்கி விடக்கூடாது.
இறைவன் ஏன் படைக்கிறான் என்பது நமக்கு இப்பொழுது புரிந்திருக்குமென்று நினைக்கிறேன்.
இறைவன் தேவைகளற்றவன் : --
இறைவனுக்குத் தேவைகள் இல்லாவிட்டால் தன்னைத் தொழுமாறும், நோன்பு வைக்குமாறும் அல்லாஹ் கட்டளையிடுவது ஏன்? என்ற கேள்வி சிலருக்கு எழலாம்.
இறைவனைத் தொழ வேண்டும் எனவும், இறைவனுக்காக அறுத்துப் பலியிட வேண்டும் எனவும் இஸ்லாம் கூறுவதால் அல்லாஹ் தேவைகளுள்ளவன் என்று கருத முடியாது.
இறைவனைத் தொழுவதில்லை என்று உலக மக்கள் அனைவரும் ஏகமனதாக முடிவு செய்தாலும் இறைவனுக்கு எந்தக் குறைவும் ஏற்படப் போவதில்லை.
இறைவனை அனைவரும் வணங்க வேண்டும் என்று ஏகமனதாகத் தீர்மானம் போட்டாலும், இறைவனது மதிப்பு இதனால் அதிகமாகி விடப் போவதில்லை. இந்தக் கருத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் பொன்மொழியும் உள்ளது. நூல் : முஸ்லிம் 5033
தொழுகை உள்ளிட்ட வணக்கங்களை நிறைவேற்றுமாறு இறைவன் கட்டளையிடுவது அவனுக்கு அது தேவை என்பதற்காக அல்ல. மாறாக, நிறைவேற்றும் மனிதனின் நன்மைக்காகவே.
ஒருவரின் நன்மைக்காக ஒரு காரியத்தில் ஈடுபடுமாறு நாம் அவருக்கு அறிவுரை கூறினால் நமக்கு அந்தக் காரியத்தின் பால் தேவையுள்ளது என்று எடுத்துக் கொள்ள மாட்டோம்.
ஒருவன் தனது மகன் பரீட்சையில் அதிக மதிப்பெண்கள் பெற
வேண்டும் என்று வற்புறுத்துகிறான். போட்டிகளில் அவன் வெற்றி பெற வேண்டும் என்று ஆர்வமூட்டுகிறான். இவை தனது தேவைக்காக அல்ல. மாறாக தனது மகனின் நன்மைக்காகவே இவ்வாறு வலியுறுத்துகிறான். 'மகன் நல்ல நிலையில் இருந்தால் நம்மை நன்றாகக் கவனிப்பான்' என்ற எதிர்பார்ப்பாவது இதில் மறைந்து நிற்கும்.
ஆனால், அல்லாஹ்வுக்கு செய்யும் வணக்க வழிபாடுகளில் இது போன்ற எதிர்பார்ப்புகள் கூட கிடையாது. எனவே, நமது நன்மைக்காக இடப்படும் கட்டளைகளை கட்டளை பிறப்பித்தவனின் தேவைக்காக இடப்பட்ட கட்டளை என்று கருதுவது தவறாகும்.
உங்களைப் போக்கி உங்களுக்கு பிறகு வேறொரு படைப்பு :-
ஹளரத் நூஹ் (அலை) அவர்கள் காலத்திலிருந்தவர்கள் தங்களது அக்கிரமச் செய்கைகளாலும், ஹளரத் நூஹ் (அலை) அவர்களுக்கு விரோதமாக இருந்து சன்மார்க்கத்தை எதிர்த்ததாலும் பிரளயமேற்பட்டு யாவரும் அழிந்தனர்.
"இதற்கு முன்னர் எத்தனையோ கூட்டத்தினரை நாம் அழித்திருக்கின்றோம். அவர்களில் ஒருவரையேனும் நீங்கள் காண்கின்றீர்களா? அல்லது அவர்களுடைய சிறிய சப்தத்தையேனும் நீங்கள் கேட்கின்றீர்களா? (குர்ஆன் : 19:98)
அப்பொழுது ஹளரத் நூஹ் (அலை) அவர்களிடம் ஈமான் கொண்டிருந்த சிலர் மட்டுமே ஹளரத் நூஹ் (அலை) அவர்களது கப்பலில் ஏறி தப்பித்துக் கொண்டார்கள். அவ்வாறு தப்பித்தவர்களது சந்ததியினர்தான் இப்பொழுது உலகில் வாழும் மனிதர்கள். இவ்விஷயத்தை உங்களை வேறொரு சமூகத்தாரின் சந்ததியிலிருந்து அவன் உண்டாக்கியது போல என்ற வசனம் அறிவிக்கிறது.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 200**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 117)**

اِنَّ مَا تُوْعَدُوْنَ لَاٰتٍ ۙ وَّمَاۤ اَنْـتُمْ بِمُعْجِزِيْنَ

நிச்சயமாக உங்களுக்கு வாக்களிக்கப்பட்டது வந்து விடும். (அதை) நீங்கள் தடுத்துவிட முடியாது. (குர்ஆன் : 6:134)
திடீரென மரணம் வந்துவிடும் என்றும், மரணத்திற்கு பின்னர் ஒரு நாள் நீங்கள் உயிர்ப்பித்து எழுப்பப்படுவீர்கள் என்றும், மறுமை நாள் உண்டு என்றும், அந்த நாளில் நீங்கள் விசாரிக்கப்படுவீர்கள் என்றும் கூறப்பட்டு அவற்றின் வாயிலாக உங்களுக்கு வாக்களிக்கப்படுவது எல்லாம் நிச்சயமாக வந்தே தீரும்.
இவற்றையெல்லாம் அவன் நடத்தும்பொழுது, அவனை நீங்கள் பலவீனப்படுத்தி அவற்றை செய்யவிடாமல் தடுத்து விட முடியாது.
குறைந்தப் பட்சம் உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட மரணத்தை அவன் கொண்டு வரும்போது, அவனை தடுத்து மரணத்திலிருந்து நீங்கள் தப்பிவிட முடியாது.
அல்லது அவனை ஏமாற்றிவிட்டு, எங்கேனும் சென்று நீங்கள் ஒளிந்து கொள்ளவும் முடியாது.
இவ்வாறெல்லாம் அச்சுறுத்தி,எச்சரித்தும் உங்கள் போக்கிலேயே நீங்கள் சென்று கொண்டிருக்கிறீர்களானால், முடிவு பயங்கரமாக இருக்கும்.
ஒரு மீனவ இளைஞனைப் பார்த்துக் கேட்டார்கள்:
"கடல் இவ்வளவு ஆபத்தான இடமாயிற்றே எப்படித் துணிச்சலுடன் நீங்கள் மீன் பிடிக்கப் போகிறீர்கள்?"
"என்ன செய்வது நாங்கள் மீன் பிடித்தால்தான் உணவு உண்ணமுடியும்."
"அது சரி. உன் தந்தை எப்படி இறந்தார்?"
'அவர் மீன் பிடிக்கச் செல்லும்போது புயலில் இறந்தார்"
''உன் தாத்தா?"
"என் தாத்தா ஒருமுறை அலையில் மாட்டிக்கொண்டு கடலுக்குள் இழுத்துச் செல்லப்பட்டுவிட்டார்."
"இவ்வளவு நடந்த பிறகும் எப்படி உன்னால் கடலுக்கு மீன் பிடிக்கச் செல்ல முடிகிறது?"
அவன் திரும்பக் கேட்டான் "உங்கள் தந்தை எப்படி இறந்தார்?"
"நோய்வாய்ப்பட்டு படுக்கையில்"
"உங்கள் தாத்தா எப்படி இறந்தார் ?"
"அவரும் படுக்கையில்"
"உங்கள் கொள்ளுத் தாத்தா எப்படி இறந்தார் ?"
"அவரும் படுக்கையில்."
"இப்படிப் பரம்பரையே படுக்கையில் இறந்திருக்கிறார்கள். அப்புறம் எப்படித் தினமும் தைரியமாக நீங்கள் படுக்கப்போகிறீர்கள்?" என்று அவன் பதிலுக்குக் கேட்டான்.
மேலும்,மீனவ இளைஞன் சிரித்துக் கொண்டே நக்கலாக...
படுத்துட்டு இருக்கும் போதே மரணம் வந்தால் பரவாயில்லை !
ஆனால், மரணம் வரும்வரை படுத்துட்டு இருக்கிறதுதான்
கொடுமையிலும் கொடுமை !
ஆபத்தான வாழ்க்கையை வாழும் யாரும் ஆபத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆனால், பார்க்கிற மற்ற எல்லோருக்கும் அவர்களுடைய ஆபத்தான வாழ்க்கைதான் நினைவுக்கு வருகிறது.

اَلَّذِيْنَ قَالُوْا لِاِخْوَانِهِمْ وَقَعَدُوْا لَوْ اَطَاعُوْنَا مَا قُتِلُوْا ؕ قُلْ فَادْرَءُوْا عَنْ اَنْفُسِكُمُ الْمَوْتَ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ

அன்றி இவர்கள் (தங்கள் வீட்டில்) இருந்துகொண்டே (போரில் இறந்துபோன) தங்கள் சகோதரர்களைப் பற்றி "அவர்களும் எங்களைப் பின்பற்றி இருந்தால் (போருக்குச் சென்று இவ்வாறு) கொல்லப்பட்டிருக்க மாட்டார்கள்" என்றும் கூறினார்கள்.

(ஆகவே நபியே!) நீங்கள் கூறுங்கள்: "நீங்கள் உண்மை சொல்பவர்களாக இருந்தால், ( அவர்களை என்ன! ) நீங்கள் உங்களையே மரணத்தில் இருந்து தப்பவையுங்கள் பார்க்கலாம் !" (குர்ஆன் : 3:168)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 201 (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 118 )

قُلْ يٰقَوْمِ اعْمَلُوْا عَلٰى مَكَانَتِكُمْ اِنِّىْ عَامِلٌ فَسَوْفَ تَعْلَمُوْنَۙ مَنْ تَكُوْنُ لَهٗ عَاقِبَةُ الدَّارِ اِنَّهٗ لَا يُفْلِحُ الظّٰلِمُوْنَ

(நபியே!) நீர் கூறும்: “என்னுடைய கூட்டத்தாரே! நீங்கள் உங்கள் நிலைமைக் கொப்ப காரியங்களைச் செய்து கொண்டிருங்கள்; நானும் (காரியங்கள்) செய்து கொண்டிருப்பவனே; அப்பால், இவ்வுலகத்தின் இறுதி முடிவு யாருக்கு நலமாக இருக்கும் என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள் - நிச்சயமாக அநியாயக்காரர்கள் வெற்றிபெற மாட்டார்கள்.” (குர்ஆன் : 6:135)

நபியே ! உம்மை நிராகரிக்கிறவர்களுக்கு நாம் அறிவிப்பதைப் போதித்துக் கொண்டே இரும். எவ்வளவு தான் நீர் போதித்த போதிலும் அவர்கள் அதனை ஏற்க மறுத்து விட்டார்களானால் அப்பொழுது இவ்வாறு கூறிவிட்டு ஒதுங்கிக் கொள்ளும்!

"என்னுடைய கூட்டத்தினரே! நீங்கள் உங்கள் போக்கிலேயே செயல்படுங்கள். நான் பல வகையிலும் உங்களுக்கு அல்லாஹ்வின் கட்டளைகளை எடுத்துக் கூறிவிட்டேன். நீங்க அவற்றை ஏற்க மறுக்கிறீர்கள். இதற்கு மேல் உங்களுடைய நோக்கப்படி நடந்து கொள்ளுங்கள் நானும் எனதுபோக்கிலேயே செயல்படுகிறேன். என்னுடைய இரட்சகன் எனக்கு என்ன கட்டளையிட் இருக்கின்றானோ அதன் பிரகாரம் செயல்பட்டு அதிலேயே நான் உறுதியுடனிருக்கிறேன். இதற்கு மேல் முடிவு கூறுகிறவன் அல்லாஹ்வேயாவான்.

நம்மில் எவருக்கு சாதகமாக அவ்வுலகின் (மறுமையின்) முடிவு இருக்கும் என்பதை வெகு விரைவில் நீங்கள் அறிந்து கொள்வீர்கள். அப்பொழுது நீங்கள் செயல்பட்டது உண்மையா ? அல்லது நான் செயல்பட்டது உண்மையா ? என்பது நன்கு புலனாகி விடும்.

அல்லாஹ்வின் ஆணைகளுக்கு முரணாக நடப்போர் அநியாயக்காரர்கள் ஆவர். அவர்கள் இம்மை, மறுமை இரண்டிலும் வெற்றி பெறவே மாட்டார்கள்.

அல்லாஹ்வுக்கு இணை வைத்துக் கொண்டிருப்போரும் அநியாயக்காரர்களேயாவர். இவர்கள் அல்லாஹ்வின் கட்டளைக்கு முரணாகத் தங்களது மனம் போன போக்கிலெல்லாம் செயல்படுவர். அவர்கள் தாங்களாகவே சில சட்டங்களை ஏற்படுத்திக் கொள்வர். ஆனால் அவற்றில் எத்தகைய நன்மையுமிருக்காது.

குர்ஆனில் இன்னொரு இடத்தில்,

" நம்பிக்கை கொள்ளாதவர்களிடம் (நபியே!) நீர் கூறுவீராக: “நீங்கள் உங்கள் போக்கில் நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக நாங்களும் (எங்கள் போக்கில்) செயல்படுகிறோம்.”

நீங்களும் (உங்கள் போக்கின் முடிவை) எதிர் பார்த்துக்
கொண்டிருங்கள்; நாங்களும் (அவ்வாறே) எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.” (குர்ஆன் : 11:121,122)

அல்லாஹ் தன் தூதர் (ஸல்) அவர்களுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றினான். பல நாடுகளை அவர்களுக்கு வசப்படுத்திக் கொடுத்தான்; மாறு செய்த மக்கள் மீது அவர்களுக்கு அதிகாரத்தை ஏற்படுத்தினான். மக்காவை வெற்றி பெறச் செய்தான். அவர்களுடைய சமுதாயத்தில் அவர்களை எதிர்த்தவர்கள், பொய்யாக்கியவர்கள். ஒதுக்கியவர்கள் உள்பட அனைவருக்கும் எதிராக அவர்களை வெற்றி கொள்ளச் செய்தான்.

அரபு தீபகற்பம் முழுவதிலும் அவர்களது அதிகாரத்தை நிலைநாட்டினான். இவையனைத்தும் நபி (ஸல்) அவர்களது வாழ்நாளிலேயே நடந்தன. அவர்கள் இறந்த பின்பு பல நகரங்களும் பல மாகாணங்களும் அவர்களுடைய பிரதிநிதிகளின் (கலீஃபாக்கள்) ஆட்சிக் காலத்தில் வெற்றிகொள்ளப் பட்டன.

வேறு வசனங்களில் அல்லாஹ் கூறுகின்றான்: நானும் என் தூதர்களும் வெற்றி பெற்றே தீருவோம் என்று அல்லாஹ் எழுதிவிட்டான். அல்லாஹ்
ஆற்றல் மிக்கவன். வல்லமை படைத்தவன் ( குர்ஆன் 58 : 21 )

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 202**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 119** )

وَجَعَلُوْا لِلّٰهِ مِمَّا ذَرَاَ مِنَ الْحَـرْثِ وَالْاَنْعَامِ نَصِيْبًا فَقَالُوْا هٰذَا لِلّٰهِ بِزَعْمِهِمْ وَهٰذَا لِشُرَكَآٮِٕنَا فَمَا كَانَ لِشُرَكَآٮِٕهِمْ فَلَا يَصِلُ اِلَى اللّٰهِ وَمَا كَانَ لِلّٰهِ فَهُوَ يَصِلُ اِلٰى شُرَكَآٮِٕهِمْ سَآءَ مَا يَحْكُمُوْنَ
அல்லாஹ் உண்டாக்கிய விளைச்சலிலிருந்தும், கால்நடைகளிலிருந்தும் அல்லாஹ்வுக்கென ஒரு பாகத்தை ஏற்படுத்தினார்கள்; இன்னும் அவர்களின் எண்ணப்படி இது அல்லாஹ்வுக்கு என்றும், இது எங்களுடைய இணை தெய்வங்களுக்கு என்றும் சொல்கிறார்கள்
- அவர்கள் தங்கள் தெய்வங்களுக்கென்று குறிப்பிட்ட பாகத்தில் எதுவும் அல்லாஹ்வுக்குச் சேர்வதில்லை; அல்லாஹ்வுக்கு ஆகியிருப்பது அவர்கள் தெய்வங்களுக்குச் சேரும் என்றும் சொல்கிறார்கள். அவர்கள் செய்யும் இம்முடிவு மிகவும் கெட்டதாகும். (குர்ஆன் : 6:136)
அறியாமைக் காலத்தில் வாழ்ந்த இஸ்லாமிய விரோதிகளான இணை வைப்போர், சட்டங்களைத் தாங்களாகவே உண்டாக்கி வைத்திருந்தனர்.
அவர்களுடைய விவசாயத்திலும், கனிகளிலும், கால்நடைகளான ஆடு மாடு ஒட்டகங்களி அவர்களுடைய இதர பொருள்களிலும் இரண்டு பாகங்கள் செய்வர். ஒருபாகம் அல்லாஹ்வுக்கு மற்றொரு பாகம் தாங்கள் இணை வைத்து வணங்குகிற விக்கிரகங்களுக்கும் என்று ஏற்படுத்த கொண்டிருந்தனர்.
இவற்றில் அல்லாஹ்விற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள பாகங்களை விருந்தாளிகளுக்கும், ஏழைகளுக்கும் செலவு செய்து விடுவர். விக்கிரகங்களுக்காக நிர்ணயிக்கப்பட்ட பாகத்தை அவைகளுக்கும், அவை வைக்கப்பட்டிருக்கும் இடங்களில் வேலை செய்பவர்களான பூசாரிகளுக்கு செலவு செய்வார்கள்.
அல்லாஹ்விற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள பாகத்திலிருந்து ஏதாவதொன்று விக்கிரகங்களின் பாகத்தில் சேர்ந்து விட்டால், அதை அப்படியே விட்டு விடுவார்கள். அதிலிருந்து அதனை பிரித்து எடுக்க மாட்டார்கள். "அல்லாஹ் இதெல்லாவற்றையும் விட்டு தேவையற்றவன்" என்று அதற்கு சமாதானம் சொல்லி விடுவார்கள்.
ஆனால், விக்கிரகங்களுக்காக ஏற்படுத்தப்பட்டுள்ள பாகங்களிலிருந்து ஏதாவதொன்று அல்லாஹ்வின் பாகத்தில் விழுந்து விட்டால், அந்த உடனேயே அதைப் பிரித்தெடுத்து விக்கிரகங்களின் பாகத்தில் சேர்த்துவிடுவார்கள். "அவற்றுக்கு அது தேவை" என்று சொல்லி விடுவார்கள்.
அல்லாஹ்வின் பாகங்களிலுள்ளவற்றிலிருந்து ஏதாவதொன்று அழிந்து விட்டால், அல்லது ஒரு பிராணி செத்து விட்டால் அதனைப் பொருட்படுத்தாமல் அப்படியே விட்டு விடுவார்கள். இதுவே விக்கிரகங்களுக்குரியதில் நிகழ்ந்தால் உடனேயே அதற்குப் பதிலாக வேறொன்றைக் கொண்டு வந்துசேர்த்து விடுவார்கள். விக்கிரகங்கள் கோபப்படும் என்பதற்காக.
இதை இவ்வசனம் குறிப்பிட்டு அவர்களின் ஓரவஞ்சனையான தீர்ப்பின் கெடுதியையும் எடுத்துக் காட்டுகிறது.
இந்த சூராவிற்கு "அல்அன்ஆம்" பெயர் வரக் காரணம் :-
இந்த அத்தியாயத்தின் பெயர் அன்ஆம் என்பதாகும். ஆடு, மாடு, ஒட்டகம் என்பது இதன் பொருளாகும். இப்பெயர் இவ்வசனத்திலும் இதன் பின்னருள்ள வசனங்களிலும் கூறப்படுவதுடன், இது சம்பந்தப்பட்ட விளக்கமும் கூறப்படுகிறது. இதனை அடிப்படையாக வைத்தே இவ்வத்தியாயத்திற்கு "அல்அன்ஆம்" எனப் பெயர் சூட்டப்பட்டிருக்கிறது.

அறியாமைக் கால மக்கள், தங்களுடைய ஒவ்வொரு பொருளிலும் இரு பாகங்கள் செய்து மேற்கண்டவாறு செயலாற்றிக் கொண்டிருந்தனர். இது இஸ்லாமியப் பிரச்சாரம் தோன்றுவதற்கு முன்னரும். தோன்றிய பின்னர் சில காலமும் செயல்பட்டு வந்தது. பின்னர் இம்மூடச் சட்டங்களெல்லாம் ஒழிக்கப்பட்டு விட்டன.
பங்காளிகள் :-
அந்த தெய்வங்களை அவர்களுடைய கூட்டாளிகள் என இங்கு கூறப்படுகின்றன. ஏனெனில், அவர்களுடைய பொருள்களில் அவைகளுக்குப் பங்கு வைக்கப்பட்டிருப்பதால், 'பங்கு பெறும் கூட்டாளிகள்' - " பங்காளிகள் "- என்னும் கருத்தில் அவ்வாறு அழைக்கின்றனர். அவைகளைத் தான் அவர்கள் வணங்கவும் செய்கின்றனர். பஞ்சமோ, வறுமையோ அவர்களைப் பிடித்து விட்டால் அல்லாஹ்விற்காக வைத்துள்ள பாகத்தைக் காட்டி, அவனிடம் உதவி தேடி விட்டு, அதனை உண்டு அருந்தி விடுவர். தங்களுடைய பங்காளிகளின் பாகத்தைத் தொடவே மாட்டார்கள்.
எந்த விதமான பலனும், இடரும் அளிக்க முடியாத சிலைகள் சம்பந்தமாக தவறான கொள்கைகளை மனத்திற் கொண்டு இப்படியெல்லாம் அவர்கள் செய்யும் இத் தீர்ப்பானது, மிகக் கெட்டது சற்று சிந்தித்துப் பார்த்தார்களானால் இது எத்தனை பெரிய முட்டாள்தனமான செயல் என்பதை நன்குணர்வர்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 203
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 120 ) பகுதி – 1

وَكَذٰلِكَ زَيَّنَ لِكَثِيْرٍ مِّنَ الْمُشْرِكِيْنَ قَتْلَ اَوْلَادِهِمْ شُرَكَاۤؤُهُمْ لِيُرْدُوْهُمْ وَلِيَلْبِسُوْا عَلَيْهِمْ دِيْنَهُمْ وَلَوْ شَآءَ اللّٰهُ مَا فَعَلُوْهُ فَذَرْهُمْ وَمَا يَفْتَرُوْنَ
இவ்வாறே இணை வைப்போரில் பெரும்பாலோருக்கு, அவர்களுடைய (பெண்) குழந்தைகளையே கொலை செய்வதை அவர்களுடைய தெய்வங்கள் அழகாக்கி வைத்துள்ளன; அவர்களை நாசப்படுத்தி, அவர்களுடைய மார்க்கத்தையும் குழப்பத்திலாக்கிவிட்டன. அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் அப்படிச் செய்திருக்க மாட்டார்கள். எனவே (நபியே!) நீர் அவர்களையும், அவர்களுடைய பொய்யான கூற்றுக்களையும் விட்டு விலகி விடுவீராக. (குர்ஆன் : 6:137)
பெண் குழந்தைகளை உயிருடன் புதைக்கும் கொடூரம்
அக்கால அரேபியர்கள் சிலர் தங்களுடைய பெண் குழந்தைகளைப் பிறந்த உடனோ, பிறந்த பின் சில காலம் சென்றோ குழி தோண்டி உயிருடன் புதைத்துக் கொன்று விடுவர். இத்தகைய கொடூரம சம்பவங்கள் அக்காலத்தில் அதிகமாக நடைபெற்று வந்திருக்கின்றன.
வறுமைக்குப் பயந்தும் பிற ஒருவனுக்கு அப்பெண்ணை மணமுடித்துக் கொடுத்தால் அவர்களுக்குப் பணிந்து நடக்கவேண்டுமே என்ற கௌரவப் பிரச்சினையும் தான் இவ்வாறு பெண் குழந்தைகளைக் கொலைசெய்வதற்கு காரணங்களாக இருந்தன.
இவ்வக்கிரமச் செயலை இஸ்லாம் அடியுடன் வெறுத்து.இதனைத் தவிர்த்து விடுமாறு வலியுறுத்திக் கூறியது. ஆனால் இணைவைத்து வணங்கிக்கொண்டிருப்போரில் அநேகருக்கு இவ்வாறு செய்வது அலங்காரமாகவும் அழகாகவும் தோன்றிற்று.
அவர்களை அழித்து நாசமாக்குவதற்கும், அவர்கள் கடைப் பிடித்திருப்பதற்காக கூறும் இப்ராஹிம் நபியின் மார்க்கத்தில் இணை வைப்பவர்களுக்கு ஒரு குழப்பத்தை உண்டாக்கி அந்த மார்க்கத்தை விட்டு அவர்களை அகற்றுவதற்காகவும் இத்தகைய செயல்களை செய்யுமாறு அவர்களுடைய கூட்டாளிகளான ஷைத்தான்கள் தூண்டினர்.

இந்தக் கூட்டாளிகளில் சிலர், மனிதர்களாகவும் இருந்தனர். குறிசொல்லி , கோடங்கி என்ற பெயரில், ஒருவருடைய பெண் குழந்தையினால் எதிர்காலத்தில் அவருக்குப் பெருத்த நஷ்டமும். கேவலமும் ஏற்பட்டு விடும் என்று இவர்கள் அவரிடம் கூறுவர். உடனே அப் பெண்குழந்தையைப் பெற்றவரே அதைக் கொன்று விடுவார். இவ்வழக்கம் அவர்களில் முதிர்ந்து திருமணம் நிகழும் காலத்திலேயே ''பெண் குழந்தை பிறந்தால் குழந்தையின் தாய் அக்குழந்தையை இவ்வாறு செய்ய வேண்டும். அவள் அவ்வாறு செய்யும் போது அவளுடைய உறவினர்களும் இருக்க வேண்டும். அல்லது தந்தை இவ்வாறு செய்ய வேண்டும். அவனுக்கு அப்பெண்ணின் தாய் உடந்தையாக இருக்க வேண்டும்" போன்ற ஒப்பந்தங்களையும்கூட அவர்கள் செய்து கொள்வார்களாம்.
பெண் கர்ப்பிணியானவுடனேயே ஒரு குழியைத் தோண்டி வைத்திருப்பதும், பின்னர் குழந்தை பிறந்தவுடன் ஆண் குழந்தையாக இருந்தால் அக்குழியை மூடி விடுவதும், பெண் குழந்தையாக இருந்தால் குழிக்குள் அக்குழந்தையைப் போட்டு மூடி விடுவதும் சில குடும்பங்களில் வழக்கமாக இருந்து வந்தது.
சில குடும்பத்தில் பெண் குழந்தை பிறந்தால் ஆறு வயது வரை, அக்குழந்தையை மிகச் செல்லமாக வளர்ப்பர். ஆறு வயதான பிறகு காட்டில் கிணற்றைப் போல ஆழமாகக் குழி தோண்டி வைத்துக் கொண்டு, குழந்தையை ஓர் இளவரசியைப் போல் நன்கு அலங்கரித்து உறவினர்களுடன் அக்காட்டுக்கு அழைத்துச் செல்வார்கள்.
அக்கிணற்றின் அருகில் சென்றதும், அதில் தண்ணீர் இருக்கிறதாவென அதனை உற்று நோக்க அக்குழந்தையை சொல்வதும் குற்றமும் வஞ்சகமும் சுதுமில்லாத அக்குழந்தை, கிணற்றை உற்றுப் பார்க்கும்போது பின்னாலிருந்து அக்குழந்தையைத் தள்ளி விடுவதும்,
தான் தவறி விழுந்ததாக அக்குழந்தை நினைத்து உதவிக்கு தன் தந்தையை அழைத்துக் கதறுவதும், கதறலையும் கூட இலட்சியம் செய்யாமல் இரக்கமற்ற தந்தை, தன் குழந்தையின் மீது மண்ணையும், கல்லையும் மற்றவற்றையும் போட்டு மூடி சமதளமாக ஆக்கிவிட்டு, தனக்கு வர இருந்த பெரும் சிறுமையிலிருந்து தப்பி விட்டதாக மகிழ்ச்சி ஆரவாரத்துடன் திரும்ப வருவதும் அரேபியர்களின் வழக்கம்.
நபிகள் நாயகம் காலத்தில் நடந்த ஒரு நிகழ்வைப் பாருங்கள்.
நபிகளார் தோழர்களுடன் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது இஸ்லாத்திற்கு முந்தைய அறியாமைக் காலத்து பேச்சு எழுந்தது. ஒரு தோழர் தன் அடி மனதில் உறைந்து கிடந்த நிகழ்வைச் சொல்லத் தொடங்கினார்.
“இறைத் தூதரே! அந்த அறியாமைக் காலத்தில் என் மனைவி நிறை மாதக் கர்ப்பிணியாக இருந்த நேரம். நான் வியாபார விஷயமாகப் பயணம் செல்ல வேண்டிய கட்டம். என் மனைவியிடம், ‘ஆண் குழந்தை பிறந்தால் பத்திரமாகப் பார்த்துக் கொள். பெண் குழந்தை பிறந்தால் கொன்று புதைத்து விடு’ என்று சொன்னேன். பிறகு நான் பயணத்தில் இருந்து திரும்பியபோது மனைவி என்னிடம், ‘நமக்குப் பெண் குழந்தை பிறந்தது. நல்லவேளை அது இறந்து விட்டது’ என்று சொன்னாள்.
சில ஆண்டுகள் சென்றன. ஒருநாள் என் வீட்டிற்கு ஒரு அழகான பெண் குழந்தை வந்து விளையாடுவதைக் கண்டு, ‘யாரவள்?’ என்று திடுக்கிட்டுக் கேட்டேன். அதற்கு என் மனைவி, ‘பக்கத்து வீட்டுக் குழந்தை’ என்றாள். அந்தக் குழந்தை என்னிடம் பழகத் தொடங்கியது. குழந்தைக்கும் எனக்கும் இடையே இருந்த பாசத்தைக் கண்ட என் மனைவி, ‘இந்தக் குழந்தை மீது உங்களுக்கு அவ்வளவு பாசமா?’ என்று கேட்டாள். ‘ஆம்.. இவள் என் உயிரல்லவா?’ என்றேன்.
அப்போது என் மனைவி, ‘அன்று நான் சொன்னது பொய். இது பக்கத்து வீட்டு குழந்தை அல்ல. நம் குழந்தைதான். உங்களுக்குப் பயந்து நான் அப்படிச் சொன்னேன்’ என்றாள்.
நான் மகிழ்ச்சியில் நனைந்திருக்க வேண்டுமல்லவா? ஆனால் அறியாமைக் காலத்து வெறித்தனத்தில் நான், அந்தக் குழந்தையைக் கொல்ல முடிவு செய்தேன். ஆனாலும் பாசம் என்னை விடவில்லை. பாசத்திற்கும், அறியாமைக் கால சிந்தனைகளுக்கும் இடையே நடந்த போராட்டத்தில் பாசம் தோற்றது.
ஒருநாள் என் அன்பு மகளைப் பாலை வெளிக்கு அழைத்துச் சென்றேன். என்னுடன் அவள் விளையாடிக் கொண்டும், கதை பேசிக் கொண்டும் இருந்தாள். ஒரு இடத்தில் குழி தோண்டினேன். பாலை வனத்தின் மணல் என்

தாடியில் பதிந்தன. அந்தச் செல்ல மகள் ஏதும் அறியாமல், தன் பிஞ்சு விரல்களால் என் தாடியில் உள்ள மணலைத் தட்டி விட்டாள்.
இறைத்தூதரே! நான் கல்நெஞ்சக்காரன். என் மகளைக் குழியில் தள்ளி மணலைப் போட்டு, உயிரோடு புதைத்து விட்டேன்" என்று நபித் தோழர் சொன்னபோது, நபிகளார் அழ ஆரம்பித்து விட்டார்.
அருகில் இருந்த தோழர்கள், அந்தத் தோழரைப் பார்த்து, "என்ன காரியம் செய்தீர்? நபிகளாரையே அழச் செய்து விட்டீரே!" என்றபோது, நபிகள் நாயகம், "அந்தக் காலம் மறைந்து விட்டது. நாம் பாவமன்னிப்பைத் தேடி மீண்டு விட்டோம்" என்று கூறியவண்ணம் தனது தாடி நனையும் அளவு அழுதார்கள்.
பின்னர் நபிகள் நாயகம் கூறினார்கள்: "நாம் எவ்வளவு கல் நெஞ்சகர்களாய் இருந்துள்ளோம். (இஸ்லாத்தின் வருகைக்கு முந்தைய) அறியாமைக் காலத்தில் செய்த செயல்கள் அனைத்தையும் இறைவன் மன்னித்து விடுவான். ஆகவே உமது நற்செயல்களை புதுப்பித்துக் கொள்வீராக!" என்று அத்தோழரைப் பார்த்துக் கூறினார்கள்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 204
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 121 ) பகுதி – 2

( தப்ஸீருல் ஹமீத் )
وَكَذٰلِكَ زَيَّنَ لِكَثِيْرٍ مِّنَ الْمُشْرِكِيْنَ قَتْلَ اَوْلَادِهِمْ شُرَكَاۤؤُهُمْ لِيُرْدُوْهُمْ وَلِيَلْبِسُوْا عَلَيْهِمْ دِيْنَهُمْ وَلَوْ شَآءَ اللّٰهُ مَا فَعَلُوْهُ فَذَرْهُمْ وَمَا يَفْتَرُوْنَ
இவ்வாறே இணை வைப்போரில் பெரும்பாலோருக்கு, அவர்களுடைய குழந்தைகளையே கொலை செய்வதை அவர்களுடைய தெய்வங்கள் அழகாக்கி வைத்துள்ளன; அவர்களை நாசப்படுத்தி, அவர்களுடைய மார்க்கத்தையும் குழப்பத்திலாக்கிவிட்டன. அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் அப்படிச் செய்திருக்க மாட்டார்கள். எனவே (நபியே!) நீர் அவர்களையும், அவர்களுடைய பொய்யான கூற்றுக்களையும் விட்டு விலகி விடுவீராக. (குர்ஆன் : 6:137)
அரபு தேசத்தில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஸ்லாம் மார்க்கத்தைப் பிரசங்கிப்பதற்கு முன், அரபியர் தங்கள் பெண் குழந்தைகளைப் பிறருக்கு திருமணம் செய்து கொடுக்கவேண்டுமே, அல்லது அவர்களைப் பகைவர்கள் சிறைபிடித்துச் செல்வார்களே, அல்லது அவர்கள் ஆண்களைப் போல் சம்பாதிப்பவர்களல்ல. ஆதலால், பெண் குழந்தைகளால் தரித்திரமும் செலவுமல்லவா அதிகம் வரும் என எண்ணிக் கொலை செய்து விடுவதும்,
தனக்கு இத்தனை ஆண் குழந்தைகள் பிறந்தால் அவர்களில் ஒருவரை அல்லது இத்தனையாவது புதல்வரைக் குர்பானி செய்து விடுகிறேன் என்று பிரார்த்தனை செய்து, அவ்வாறே கொடுத்து விடுவதும் வழக்கம். இவ்வாறு தங்கள் சந்ததியினரைக் கொலை செய்வதை நல்ல காரியமாக அவர்களது விக்கிரகங்கள் அவர்களுக்கு ஏற்படுத்தி இருக்கின்றன என்பதை இந்த ஆயத்து அறிவிக்கிறது.
ஜம்ஜம் கிணற்றைத் தோண்டுவதாக அப்துல் முத்தலிபு கனவு கண்டு. அது இருந்த இடத்தை அறிகுறியால் உணர்ந்து, அதனைத் தோண்ட ஆரம்பித்தார்.
அக்காலத்தில் ஹாரிது என்பவரைத் தவிர அவருக்கு வேறு புதல்வர்கள் இல்லை. ஆகவே, தனக்கு பத்து புதல்வர்கள் பிறந்து, அவர்கள் தக்க வயது வரை வாழ்ந்து முழு ஆடவர்களாக ஆகிவிட்டால், அவர்களில் ஒருவரை அல்லாஹுத் தஆலாவிற்காக, கஃபாவிற்குப் பக்கத்தில் குர்பானி செய்து விடுகிறேன் என்று பிரார்த்தனை செய்து கொண்டார்.

அவருக்குப் பரிபூரணமாக பத்துப் புதல்வர்கள் பிறந்தபோது, தமது பிரார்த்தனையின் விபரத்தைத் தமது புதல்வர்களிடம் அவர் கூறினார். மக்களும் தந்தையின் பிரார்த்தனையை இனிது நிறைவேற்ற ஒரு மனப்பட்டார்கள்.

எல்லாருடைய பெயர்களையும் எழுதிச் சீட்டுப் போட்டுப் பார்த்ததில் "அப்துல்லாஹ்" என்ற பெயருக்குச் சீட்டு விழுந்தது. ஆகவே, அப்பெயருள்ளவர் குர்பானி செய்யப்பட வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. அவரைக் குர்பானி செய்ய அப்துல் முத்தலிபும் தயாராகி விட்டார்.

ஆனால், குறைஷியர் ஒன்று சேர்ந்து "எங்கள் கண்ணுக்குத் தெரியும்படி நீர் குர்பானி செய்யக்கூடாது. அவரை அழைத்துக் கொண்டு காட்டுக்குச் சென்றுவிடும்" என்று கூறியதுடன்,

''அல்லது அவருக்குப் பதிலாக ஒட்டகையைக் குர்பானி செய்துவிடலாம். ஒட்டகையின் எண்ணிக்கையையும் அவருடைய பெயரையும் இரண்டு சீட்டுகளில் எழுதிப்போட்டுப் பார்க்க வேண்டும். எந்த எண்ணிக்கையில் சீட்டு விழுகிறதோ அந்த எண்ணிக்கையின்படி ஒட்டகங்களைக் குர்பானி செய்து விடுவோம்" என்று ஆலோசனை கூறினர்.

இதன்படி சீட்டுப்போட்டதில் அப்துல்லாஹ் அவருக்குப் பதிலாக 100 ஒட்டகைகள் என்று சீட்டு விழுந்தது. அதன்பின்னர் நரபலி நிறுத்தப்பட்டது.

இதனால்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "நான் இரண்டு பலிகளின் புதல்வன்" என்று கூறி இருக்கிறார்கள். அதாவது ஹளரத் இஸ்மாயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களும் அப்துல்லாஹ் அவர்களும் இந்த ஹதீஸில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

படம் :- அரிய வகை புகைப்படம் பற்பல வருடங்களுக்கு முன்பு கஃபாவும் , ஜம்ஜம் கிணறு ஊற்றும்

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 204
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 121 )

( தப்ஸீருல் ஹமீத் )

وَقَالُوْا هٰذِهٖۤ اَنْعَامٌ وَّحَرْثٌ حِجْرٌ ‌ لَّا يَطْعَمُهَاۤ اِلَّا مَنْ نَّشَآءُ بِزَعْمِهِمْ وَاَنْعَامٌ حُرِّمَتْ ظُهُوْرُهَا وَاَنْعَامٌ لَّا يَذْكُرُوْنَ اسْمَ اللّٰهِ عَلَيْهَا افْتِرَآءً عَلَيْهِ‌ ؕ سَيَجْزِيْهِمْ بِمَا كَانُوْا يَفْتَرُوْنَ

இன்னும் அவர்கள் (தம் கால்நடைகளைக் குறிப்பிட்டு) “ஆடு, மாடு, ஒட்டகம்; விவசாயத்தில் காணும் இந்த விளைச்சல் ஆகியவற்றை நாம் விரும்புபவர்களைத் தவிர வேறு யாரும் புசிப்பது தடுக்கப்பட்டுள்ளது” என்று கூறுகின்றனர்; மேலும் சில கால்நடைகளைச் சவாரி செய்யவும், சுமைகளைச் சுமந்து செல்லவும் பயன் படுத்துவது தடுக்கப்பட்டுள்ளது என்றும்; இன்னும் சில கால்நடைகளை அறுக்கும்போது அல்லாஹ்வின் பெயரைக் கூறக்கூடாதென்றும்; அல்லாஹ்வின் மீது பொய்யாகக் கற்பனை செய்து சொல்கிறார்கள். (அல்லாஹ்) அவர்களுடைய பொய்க் கூற்றுகளுக்காக அவர்களுக்குக் கூலி கொடுப்பான்.(குர்ஆன் : 6:138)

وَقَالُوْا مَا فِىْ بُطُوْنِ هٰذِهِ الْاَنْعَامِ خَالِصَةٌ لِّذُكُوْرِنَا وَمُحَرَّمٌ عَلٰٓى اَزْوَاجِنَا‌ ۚ وَاِنْ يَّكُنْ مَّيْتَةً فَهُمْ فِيْهِ شُرَكَآءُ‌ ؕ سَيَجْزِيْهِمْ وَصْفَهُمْ‌ ؕ اِنَّهٗ حَكِيْمٌ عَلِيْمٌ

மேலும் அவர்கள், “இந்தக் கால் நடைகளின் வயிற்றில் இருக்கும் குட்டிகள் எங்கள் ஆண்களுக்கு மட்டுமே சொந்தம். அவை எங்கள் பெண்களுக்குத் தடுக்கப்பட்டுள்ளன - அவை செத்துப் பிறந்தால், அவற்றில் அவர்களுக்கும் பங்கு உண்டு” என்றும் கூறுகிறார்கள்; அவர்களுடைய (இந்தப் பொய்யான) கூற்றுக்கு அவன் தக்க கூலி கொடுப்பான் - நிச்சயமாக அவன் பூரண ஞானமுடையோனும், (யாவற்றையும்) அறிந்தவனுமாக இருக்கின்றான். (குர்ஆன் : 6:139)

🟨🟦🟥🟩🟫🟪🟨🟦🟥🟩🟫🟪🟨🟦🟨

பெருமானார் (ஸல்) அவர்கள் பிறப்பதற்குச் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர் அம்ரு பின் லுஹைய்யி குஜாலி என்னும் பெயருடைய ஒருவர் திருமக்காவில் ஆட்சி செய்து கொண்டிருந்தார். அரபுநாட்டில் ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் மார்க்கத்தையே மாற்ற முற்பட்டு தன் நோக்கப்படி நூற்றுக் கணக்கான பொருட்களை விலக்கப்பட்டவையென்றும், நூற்றுக் கணக்கானவற்றை அனுமதிக்கப்பட்டவை என்றும் அரசர் அம்ரு பிரகடனப்படுத்தினார். திருமக்காலில் அநேக விக்கிரகங்களையும், சிலைகளையும் நிறுவி அவற்றினை வணங்க வேண்டுமென்று சட்டம் ஏற்படுத்தியவரும் அவர்தான்.
இவ்வசனத்தில் கூறப்படும் நான்கு வகையான மூடப் பழக்கங்களை ஏற்படுத்தியவரும் அந்த அம்ரேதான், இது நாளாவட்டத்தில் அறியாத பாமரமக்கள் மனத்தில் (கற்பனையான) பல மூடப் பழக்க வழக்கங்களை உண்டாக்கிற்று. இதன் தவறுகளை விளக்கி நேர்வழிக்கு அவர்களைக் கொண்டு வருவதுதான் இவ்வசனத்தின் நோக்கமாகும்.
"பஹீரா (காது கிழிக்கப்பட்ட பெண் ஒட்டகம்), ஸாயிபா (சுயேச்சையாக மேய விடப்படும் பெண் ஒட்டகம்) வஸீலா (இரட்டைக் குட்டிகளை ஈன்றதற்காக சில நிலைகளில் விக்கிரகங்களுக்கு நேர்ந்து விடப்பட்ட ஆடுகள்) ஹாமி (வேலையெதுவும் வாங்கப்படாமல் சுயேச்சையாகத் திரியும்படி விடப்படும் ஆண் ஒட்டகம்) என்பவை (போன்ற சடங்குகளை) அல்லாஹ் ஏற்படுத்தவில்லை - ஆனால் காஃபிர்கள்தாம் அல்லாஹ்வின் மீது பொய்யாகக் கற்பனை செய்(து கூறு)கின்றனர் மேலும் அவர்களில் பெரும்பாலோர் நல்லறிவு பெறாதவர்களாகவே இருக்கின்றனர். (குர்ஆன் : 5:103)
நான்கு பொருட்கள் பற்றிய விளக்கம்
1.பஹீரா பெண் ஒட்டகம் ஐந்து குட்டிகள் ஈன்று கடைசிக்குட்டி ஆணாக இருந்து விட்டால், உடனேயே அந்த பெண் ஒட்டகத்தின் காதுகளைப் பிளந்து, அதன்போக்கில் அதனை விட்டு விடுவார்கள். அதில் ஏறவோ, சவாரி செய்யவோ, அதில் பாலைக் கறக்கவோ மாட்டார்கள். அதன் உரோமங்களை கத்தரிக்கவுமாட்டார்கள். அது ஈன்ற ஐந்தாவது ஆண் குட்டியை அறுத்து -ஆண், பெண் அனைவரும் புசிப்பார்கள்.
ஆனால் அது பெண் குட்டியாக இருந்தால் அதன் காதுகளை கிளித்து அப்படியே விட்டு விடுவார்கள், அதனை அறுத்தால் அதன் பலன்களை பெண்கள் அனுபவிக்கக் கூடாது. ஆண்கள்தான் அனுபவிக்க வேண்டுமென்று சட்டம் ஏற்படுத்தி இருந்தார்கள். ஆனால் அது தானாக செந்து விட்டால் ஆண், பெண் இருவரும் அதனை அனுபவிக்கலாம். ('பஹீரா' என்றால்: "காது கிளிக்கப்பட்டது "என்று பொருள்.)
2. ஸாயிபா ஒருவர் எங்காவது மறைந்துவிட்டாலோ, நோய் வாய்ப்பட்டு விட்டாலோ, அப்பொழுது என் நோய் குணமானால், அல்லது காணாமல் மறைந்தவர் வந்து விட்டால் என் ஒட்டகம் (சாமியின் பெயரால்) விடப்பட்டு விடும் என்று நேர்த்திக் கடன் செய்து கொள்வார். அவரது நோக்கம் நிறைவேறி விட்டால் அந்த ஒட்டகத்தை அதன் போக்கில் விட்டுவார். அது எங்கு வேண்டுமானாலும் சென்று மேய்ந்துக் கொள்ளலாம்; தண்ணீர் குடித்துக் கொள்ளலாம், அதில் எவரும் சவாரி செய்யமாட்டார். ஏறக்குறைய இதன்பின் நிகழ்ச்சியும் முந்தையதைப் போன்றுதான். (ஸாயிபா: "இஷ்டப்படி திரிய விடப்பட்டது" என்பதாகும்.)
3. வஸீலா : ஓர் ஆடு ஏழு தடவைகள் ஈன்று ஏழாவது தடவையில் ஆண் குட்டியை ஈன்றிருந்தால் அதனை அறுத்து ஆண்களும், பெண்களும் புசித்து விடுவர். ஆனால் ஏழாவது பெண் குட்டியாக இருந்தால் ஆட்டுடன் சேர்த்து குட்டியையும் விட்டு விடுவர்.
ஆணும், பெண்ணுமாக கலந்து ஈன்றிருந்தால் தன் சகோதரனுடன் சேர்ந்து நிற்கட்டும் என்று பெண் குட்டியையும் ஆண் குட்டியையும் உயிருடன் விட்டு விடுவர். அந்தப் பெண் குட்டிக்காக ஆண் குட்டியை அவர்கள் அறுப்பதில்லை. சேர்த்து ஒன்றாக ஓடித்திரிய உயிருடன் விட்டு விடுவார்கள். (வஸீலா - "சேர்ந்து விடப்பட்டது" என்பதாகும்.)
4.ஹாமி (வேலையெதுவும் வாங்கப்படாமல் சுயேச்சையாகத் திரியும்படி விடப்படும் ஆண் ஒட்டகம்) அதன் மூலம் பத்து சூல்கள் வெளிப்பட்டதானால் அப்பொழுது அதனைக் குறித்து 'தனது முதுகுத்தண்டைக் காப்பாற்றிக் கொண்டது' என்று கூறி அப்படியே விட்டு விடுவார்கள். அதில் அவர்கள் சவாரி செய்யமாட்டார்கள். அதன்

முதுகில் எந்த சுமையையும் ஏற்றமாட்டார்கள் அது தன் இஷ்டப் பிரகாரம் எங்கு வேண்டுமானாலும் சென்று மேயலாம். அது தானாக செத்துவிட்டால் ஆண்களும், பெண்களும் ஒன்றுகூடி அதனைப் புசிப்பார்கள். (ஹாமி - "முதுகுத் தண்டைக் காப்பாற்றிக் கொண்டது" என்பது கருத்தாகும்.)
இந்நான்கும் அவர்களாக ஏற்படுத்திக் கொண்டவை. இவற்றின் மாமிசத்தைச் சிலர் சாப்பிடலாம் ; சிலர் சாப்பிடக் கூடாது என்பதும் அவர்களுக்காகக் கற்பனை செய்துக் கொண்டதாகும். செத்ததின் மாமிசத்தையும் புசிக்கக் கூடாது என்றிருந்ததைப் புசிக்கலாம் என்று அவர்களே மாற்றி ஏற்படுத்திக் கொண்டனர். ஆனால், முடிவில் அவர்கள் இவையெல்லாம் அல்லாஹ்வினால் ஏற்படுத்தப்பட்டவை என்றும் கூறிக் கொண்டார்கள். இதனை மறுத்தே இவ்வசனத்தில் பஹீரா, ஸாயிபா, வஸீலா, ஹாமி ஆகியவற்றை அல்லாஹ் ஏற்படுத்தவில்லை. நிராகரித்துக் கொண்டிருக்கிறவர்கள் அல்லாஹ்வின் மீது பொய்யைக் கற்பனை செய்கின்றனர் என்று கூறப்பட்டுள்ளது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 205

(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 122 )

قَدْ خَسِرَ الَّذِيْنَ قَتَلُوْۤا اَوْلَادَهُمْ سَفَهًا بِغَيْرِ عِلْمٍ وَّحَرَّمُوْا مَا رَزَقَهُمُ اللّٰهُ افْتِرَآءً عَلَى اللّٰهِ قَدْ ضَلُّوْا وَمَا كَانُوْا مُهْتَدِيْنَ

தங்களுடைய மக்களை அறிவின்றி மடமையினால் (உயிருடன் புதைத்து) கொலை செய்து விட்டவர்களும் இன்னும் அல்லாஹ் அவர்களுக்கு (உண்பதற்கு ஆகுமாக்கிக்) கொடுத்திருப்பதை அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக் கட்டி (தங்களுக்கு) விலக்கலாக்கி வைத்திருக்கிறார்களே அவர்களும் திட்டமாக நஷ்டமடைந்து விட்டார்கள். திட்டமாக அவர்கள் வழி கெட்டு விட்டார்கள். மேலும், நேர்வழி பெற்றவர்களாகவும் அவர்கள் இருக்கவில்லை. (குர்ஆன் : 6:140)
அறபியரில் ரபீஆ, முலர் முதலிய கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் தங்கள் பெண் மக்களைக் கொலை செய்பவர்களாயிருந்தார்கள். தவிரவும், பெண்மக்களை உயிருடன் புதைப்பதைத் தங்களுக்குப் பெருமையாகவும் கருதி வந்தனர்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களது ஸஹாபிகளில் ஒருவர் எந்நேரமும் மிகவும் கவலைப் பட்டவராக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடத்தில் இருந்து கொண்டிருந்தார்.
ஒரு நாள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை நோக்கி "நீர் எந்நேரமும் கவலைப் பட்டவராக இருக்கக் காணப்படுகிறீர். இதற்குக் காரணம் என்ன?"என்று வினவ,
அதற்கவர் "அல்லாஹ்வின் ரசூலே! நான் இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவுவதற்கு முன் ஒரு பாவம் செய்தேன். நான் இப்பொழுது முஸ்லிமாக இருந்தாலும், அல்லாஹுத் தஆலா அந்த பாவத்தை எனக்கு மன்னிக்க மாட்டான் என்று அஞ்சுகிறேன்'' என்று கூறினார்.
அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உமது பாவம் என்ன?" என்று வினவ, அவர் "அல்லாஹ்வின் ரசூலே! நான் பெண் மக்களைக் கொலை செய்தவர்களில் ஒருவன் எனக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தாள், அவளைக் கொல்ல வேண்டாமென என் மனைவி என்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள், ஆதலால், அவளைக் கொல்லும் எண்ணத்தை நான் விட்டு விட்டேன்.
அக்குழந்தை வளர்ந்து வாலிபமான பிறகு பலர் அவளை திருமணம் செய்து கொள்வதற்காகப் பெண் பேசி வந்தனர். எனக்கு ரோஷ் முண்டாகிவிட்டது. ஆதலால், பெண் கேட்டு வந்த ஒருவருக்கும் அவளை திருமணம் செய்து கொடுக்கவில்லை.
ஒருநாள் எனது மனைவியிடம் இன்ன ஊருக்கு, அங்கு எனது உறவினர்களில் இன்னாரை நான் பார்க்கச் செல்கிறேன். என் புதல்வியையும் என்னுடன் அனுப்பி வை" என்று கூறினேன்.

அதற்கவள் என் மீது சந்தேகப்பட்டு, என்னிடம் வாக்குறுதி வாங்கிக் கொண்டு, குழந்தையைப் பத்திரமாகப் பாதுகாத்துத் திரும்ப அவளிடம் கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என என்னுடன் அனுப்பினாள்.
நான் அவளை அழைத்துக் கொண்டு சென்று, அவளைத் தள்ளிவிட ஒரு கிணற்றை உற்றுப்பார்த்தேன். நான் பார்ப்பதை அவள் குறிப்பால் அறிந்து, என் ஆடையைப் பிடித்துக் கொண்டு
"என் தந்தையே! என்னை என்ன செய்ய நாடுகிறீரோ தெரியவில்லை" என்று கூறி, கதறிக் கதறி அழுதாள். நான் இரக்கப்பட்டு, அவளை விட்டுவிட்டு, மீண்டும் கிணற்றை உற்றுப்பார்த்தேன். அப்பொழுது எனக்கு அவளிருப்பது அவமானமாக இருக்கிறது என்ற உணர்ச்சி அதிகமாகி, அவளை விட்டு வைக்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்து கிணற்றை உற்றுப் பார்த்தேன்.
அவள் எனது நோக்கத்தை உணர்ந்து, எனது ஆடையைப் பிடித்துக் கொண்டு, "என் தந்தையே! என் தாயின் அமானிதத்தைப் பழுதாக்க வேண்டாம்" என்று அழுதாள்.
அப்பொழுது எனக்கு இரக்கம் வந்தது. அவளைத் தள்ளாமல் விட்டுவிட்டேன். அப்பால் நான் அவளைப் பிடித்துக் கொண்டு கிணற்றைப் பார்ப்பதும். அவள் முகத்தைப் பார்த்தவுடன் இரக்கம் வந்து தள்ளாமல் நின்று விடுவதுமாக இருந்தேன்.
இறுதியாக, ஷைத்தான் என்னை மிகைக்கவே, அவளைத் தலைகீழாக நான் கிணற்றினுள் தள்ளி விட்டேன். அவள் கிணற்றுக்குள் கிடந்து கொண்டு "என் தந்தையே! தந்தையே!! என்னைக் கொல்கிறீரா?" என்று அழைத்தாள்.
நான் அவளைத் திரும்பிப் பார்க்காமல், அங்கேயே இருந்து, அந்தச் சப்தம் அடங்கியபிறகு, நான் அவ்விடத்தை விட்டு வந்தேன்" என்று கூறினார்.
இச்சம்பவத்தை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கேட்டு, மிகவும் அழுததுடன், ஜாஹிலிய்யத்தான காலத்தில் செய்த குற்றத்திற்குத் தண்டனை விதிப்பது என்றிருந்தால், உன்னுடைய இக்குற்றத்திற்குத் தக்க தண்டனை விதித்திருப்பேன் என்று கூறினார்கள்.
இவ்வாறு கொலை செய்வதற்குரிய காரணம் அறிவின்மையும், மூடத்தனமுந்தான். இதனை இவ்வசனத்தின் மூலம் எடுத்துரைக்கையில், 'எவர்கள் அறிவின்றி மூடத்தனமாகத் தங்களுடைய மக்களைக் கொலை செய்தனரோ அவர்கள் படு நட்டமடைந்துவிட்டனர்.' அறிவிக்கப்படுகின்றது.
இவ்வாறே முன்னருள்ள வசனங்களில் கூறப்பட்ட பிரகாரம், "அல்லாஹ்வே விலக்கினான். என அவன் மீது கற்பனை செய்து, அவன் உணவாக அளித்தவற்றைத் தகாதவையென விலக்கி கொண்டவர்களும் நஷ்டமடைந்தனர் என இவ்வசனம் எடுத்துரைத்து விட்டு நேர்வழியை உணர முடியாத இவர்கள் நிச்சயமாக வழி தவறி விட்டனர். இவர்கள் நேர்வழி பெற்றவர்களல்லர் எனச் சுட்டிக் காண்பிக்கிறது.
இவ்வசனத்தில் கூறப்படும் இரு சம்பவங்களுக்குமுரிய காரணம் அறிவின்மையும், மூடத்தனமும் தான் இதனைக் குறிப்பிட்டு, நபிகள் பெருமானார்(ஸல்) அவர்கள் அறிவிக்கையில் அரபியரின் மடமையை நீ அறிய ஆசைப்பட்டால், "அன் ஆம்." அத்தியாயத்தின் 130வது வசனத்திற்கு மேற்பட்ட (இந்த 140 ம்) வசனத்தை ஓதிப் பார்த்துக்கொள்' என்று கூறியுள்ளார்கள். (அல்ஹதீது, அறிவித்தவர்: ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) நூல்: புகாரி)
அல்லாஹ் அறிவித்துள்ள உணவு வகைகளை அறிவீனமாக எவரும் விலக்கிக் கொள்ளக் கூடாது. ஆகுமான ஒன்றை ஆகாதென வாதிப்பவர் அறிவில்லாதவர் என்றும், வழி தவறியவர் என்றும் இவ்வசனம் சந்தேகத்திற்கு இடமின்றி அறிவித்து விட்டது.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 206**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 123)**

وَهُوَ الَّذِىْۤ اَنْشَاَ جَنّٰتٍ مَّعْرُوْشٰتٍ وَّغَيْرَ مَعْرُوْشٰتٍ وَّالنَّخْلَ وَالزَّرْعَ مُخْتَلِفًا اُكُلُهٗ وَالزَّيْتُوْنَ وَالرُّمَّانَ مُتَشَابِهًا وَّغَيْرَ مُتَشَابِهٍ‌ؕ كُلُوْا مِنْ ثَمَرِهٖۤ اِذَاۤ اَثْمَرَ وَاٰتُوْا حَقَّهٗ يَوْمَ حَصَادِهٖ ‌ۖ وَلَا تُسْرِفُوْا‌ ؕ اِنَّهٗ لَا يُحِبُّ الْمُسْرِفِيْنَ

பந்தல்களில் படரவிடப்பட்ட கொடிகளும், படரவிடப்படாத செடிகளும், பேரீத்த மரங்களும் உள்ள சோலைகளையும், புசிக்கத்தக்க விதவிதமான காய், கறி, தானியங்களையும், ஒன்றுபோலும் வெவ்வேறாகவும் தோற்றமளிக்கும் ஜைத்தூன் (ஒலிவம்) மாதுளை ஆகியவற்றையும், அவனே படைத்தான்.
ஆகவே அவை பலனளித்தால் அவற்றின் பலனிலிருந்து புசியுங்கள். அவற்றை அறுவடை செய்யும் காலத்தில் அதற்குரிய (கடமையான) பாகத்தைக் கொடுத்து விடுங்கள். வீண் விரயம் செய்யாதீர்கள்- நிச்சயமாக அவன் (அல்லாஹ்) வீண் விரயம் செய்பவர்களை நேசிப்பதில்லை. (குர்ஆன் : 6:141)
இன்னும் ஜைத்தூனையும், மாதுளையையும் (இவைகளின் இலைகள்) ஒன்று போலுள்ளதாகவும், ( பழம்) ஒன்று போல் இல்லாததாகவும் (உண்டாக்கினோம் ) என்பதாக கூறி தன் வல்லமையை இறைவன் வெளிப்படுத்துகின்றான்.
பந்தல் கொடி கற்றுத் தரும் வாழ்க்கை பாடம் :-
பந்தல் எனச் சொன்னதும் முல்லைப் பந்தல், மல்லிகைப் பந்தல், புடலங்காய், பீர்க்கங்காய், அவரை போன்றவைதான் நினைவுக்கு வரும். பொதுவாக குச்சிகள் வைத்தும் பந்தல் அமைக்க முடியும். இரும்புக் கம்பிகள் கொடுத்தும் பந்தல் அமைக்க முடியும். அழகுக்காக அமைக்கிற பந்தல் ஒன்றும் இருக்கிறது. பந்தல்களில் படரும் கொடிகள், பார்வைக்கு அழகு மட்டுமல்ல.. நம் சிந்தனைக்கும் விருந்து!
பந்தல் கொடி வகைகளைப் பார்த்ததும் உங்களுக்கு என்ன தோன்றும். படர்ந்து வளர்கிற கொடி வகைகள் நமக்குக் கற்றுத் தருகிற விஷயம் என்ன? தனக்கு அருகில் பிடிமானத்துக்கு என்ன கிடைக்கிறதோ அதைப் பிடித்துக் கொண்டு போய்க்கொண்டே இருக்கும்.
அதே தத்துவம் நம் வாழ்க்கைக்கும் பொருந்தும். வசதி வாய்ப்புகள் கிடைக்கிற போது அவற்றைப் பிடித்துக் கொண்டு மேலே போக வேண்டும்.
கொடிகள், தனது அருகாமையை மோப்பம் பிடிக்கும். பக்கத்தில் பிடிமானம் இருப்பது தெரிந்தால் அதைப் பிடித்துக் கொண்டு நாம் படர்ந்து விடலாம் என வழி தெரிந்ததும்,அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளும். கொடிகளையும், அவற்றின் பூக்களையும், அவை படர்ந்த பந்தலையும் பார்க்கும் போதே நம் மனது ரம்மியமாகும். தவிர, கொடிகளில் உள்ள நெளிவுகளும், சுளிவுகளும், வளைவுகளும் அழகானவை. இந்த நெளிவுகளும், சுளிவுகளும், வளைவுகளும் நம் வாழ்க்கையில் தொடர்ந்து உயர்ந்து படர நமக்குக் கற்றுத்தரும் வாழ்க்கை சூட்சமம்.
இத்தனைக்கும் கொடி சன்னமாகத்தான் இருக்கும். அடர்த்தியாக இருப்பதில்லை. ஆனாலும், பிடிமானத்தைத் தேடி, அதைப் பிடித்துக் கொண்டு தன்னை தாங்குகிற பந்தலையே மூடுகிற அளவுக்கு செழிப்பாக படரும். இது நம் சிந்தனைக்குரிய விஷயம்.
கொடிகள் என்பவை தோட்டத்துக்கு மிக அவசியமான அங்கம். கொடிகளுக்கென உள்ள மேலே சொன்ன பிரத்யேக குணங்களை மனிதர்களும் அறிந்து தங்கள் வாழ்க்கையை மேம்படுத்த வேண்டும் என்பதை சூட்சமாக இறைவன் இவ்வசனத்தில் குறிப்பிட்டுள்ளான்
மேற்கண்ட வசனத்தில் "மஃறூஷாத்" என்பதற்குப் பல அர்த்தங்களுண்டு. பொதுவாக எல்லா கொடிகளுக்கும் இப்பெயர் கூறலாம். வீடுகளில் அல்லது தோட்டங்களில் பந்தல் போட்டு பந்தலின் மீது ஏற்றிப்படர விடப்படும் கொடிகளுக்குச் சிலர் இப்பெயரைக் கூறுகிறார்கள்.
காடுகளில் பூமியின் மீது படர்ந்து கிடக்கும் கொடிகளுக்கு இப்பெயரைக் கூறுவதில்லை. ஆனால், இந்த ஆயத்தில் மனிதர்கள் வீடுகளில் அல்லது தோட்டங்களில் திராட்சைப் போட்டு, அதன் மீது படரவிடுகிற கொடிகளுக்கு

மஃறூஷாத் என்றும், பூமியின் மீது படர்ந்திருக்கிற கொடிகளுக்கு "கைர மஃறூஷாத்" என்றும் சொல்லப் பட்டிருக்கிறது.
இவ்வாறு வாழ்க்கையில் கொடிப் பந்தலைப் போல் உயர்ந்த நிலையை அடைந்ததும் அவற்றிலிருந்து ஏழைகளுக்கும் ஜக்காத்தாக கொடுக்க வேண்டும் என்பதை ,
"இன்னும் அவற்றை அறுவடை செய்யும் காலத்தில் அதற்குரிய (கடமையான) பாகத்தைக் கொடுத்து விடுங்கள்" என்ற வாக்கியம் பூமியில் விவசாயம் செய்து உற்பத்தி செய்கிற விளைபொருள்களுக்கு கொடுக்க வேண்டிய ஜக்காத்தை குறிப்பிடுகின்றது. இக்காலத்தில் ஏக்கர் ஒன்றுக்கு இத்தனை ரூபாய் என்று திட்டமிடுவது போல இஸ்லாமிய ஷரியத்தில் ரூபாய் கணக்கில் திட்டமிடவில்லை.
மழைத் தண்ணீரால் விளையும் வெள்ளாண்மையில் இருபதில் ஒரு பாகத்தை ஜக்காத்துக் கொடுக்க வேண்டும். நீர் பாசனத்தினால் தண்ணீரைக் கட்டிவைத்து, அதனைப் பாய்ச்சி வெள்ளாண்மை செய்தால் பத்திலொரு பங்கு ஜக்காத்துக் கொடுக்க வேண்டும்.
இது பொதுவாக விளைபொருளிலிருந்து கொடுக்க வேண்டிய கட்டாய தர்மம் என்றாலும் இதனை கூடுதலாகவும் கொடுக்கலாம். ஆயினும் சேமித்து வைக்க தகுதி இல்லாத கனி வர்க்கம், காய்கறி வர்க்கம் ஆகியவற்றில் கட்டாய தர்மம் கிடையாது. உபரி தர்மமாக கொடுக்கலாம்.
நபி (ஸல்) அவர்கள் காலத்தில் மதீனாவில் உள்ள அன்சாரிகள் தங்களுடைய தோட்டத்தில் விளைந்த பேரிச்சம் பழத்தை அறுவடை செய்ததும் அதில் இருந்து சில குலைகளைக் கொண்டு வந்து பள்ளிவாசலின் ஓரத்தில் தொங்க விட்டு விடுவார்கள்.
அங்கு வரும் ஏழைகள் அதை கம்பினால் அடித்து அதிலிருந்து உதிர்ந்ததை எடுத்து உண்பது வழக்கம். (ஆதாரம் நூல் காஜின்)
இதனை பயனளிக்கும் தர்மம் எனக் கூறலாம்.சேமித்து வைக்க தகுந்த தானியங்களில் மேற் கூறப்பட்ட அளவை கட்டாயமாக தர்மமாக கொடுக்க வேண்டும். ஆகவே அல்லாஹ்வினால் ஒருவருக்கு கொடுக்கப்படும் இத்தகைய உணவு வகைகளை தானும் புசித்து மற்றவர்களுக்கும் வழங்குவது அவனுக்கு காட்டுகிற நன்றியாகும்.
அறுவடை செய்துவிட்டு அதற்கான தர்மத்தை வழங்காதவர்களை அல்லாஹ் குர்ஆனில் ஒரு சொல்லிக் கண்டிக்கிறான்.
"நிச்சயமாக நாம் தோட்டமுடையவர்களைச் சோதித்தது போலவே, நாம் அவர்களைச் சோதித்தோம். அ(த் தோட்டத்திற்குடைய)வர்கள் அதிலுள்ள கனிகளை அதிகாலையில் சென்று பறித்து விடுவோமென்று சத்தியம் செய்தார்கள்.
அல்லாஹ் நாடினால் என்று அவர்கள் கூறவில்லை; எனவே, அவர்கள் தூங்கிக் கொண்டிருந்த போது உம் இறைவனிடமிருந்து சுற்றக் கூடிய (நெருப்பின் ஆபத்)து சுற்றி(த் தோட்டத்தை) அழித்து விட்டது.
(நெருப்புக் கரித்து விட்ட படியால் அத்தோட்டம்) காலையில் கருத்த சாம்பலைப் போல் ஆயிருந்தது. (இது அறியாது) காலையில் எழுந்த அவர்கள் ஒருவரை ஒருவர் அழைத்தனர்.
“நீங்கள் (விளைந்த) கனிகளைக் கொய்பவர்களாக இருந்தால் உங்கள் தோட்டத்திற்கு அதிகாலையில் செல்லுங்கள்” (என்று கூறிக் கொண்டனர்). எனவே அவர்கள் (பிறர் அறியாது) மெதுவாகப் பேசிக் கொண்டு சென்றனர்;
“எந்த ஏழை எளியவரும் இன்று உங்களிடம் அ(த் தோட்டத்)தில் நிச்சயமாக பிரவேசிக்கக் கூடாது” (என்று).
உறுதியுடன் சக்தியுடையவர்களாக காலையில் சென்றனர்.
ஆனால், அவர்கள் அதை (தோட்டத்தை அழிந்து போன நிலையில்) கண்ட போது: “நிச்சயமாக நாம் வழி தவறி (வேறு தோட்டத்திற்கு) வந்து விட்டோம்” என்று கூறினார்கள்.
(பின்னர் கவனித்துப் பார்த்துவிட்டு) “இல்லை! (ஏழை எளியோர்க்கு எதுவும் கிடைக்காமற் செய்து) நாம் தாம் பாக்கியம் இழந்தவர்களாக ஆகிவிட்டோம்” (என்றும் கூறிக்கொண்டனர்) (குர்ஆன் : 68:17 - 27)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 207
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 124 )

وَ مِنَ الْاَنْعَامِ حَمُوْلَةً وَّفَرْشًا كُلُوْا مِمَّا رَزَقَكُمُ اللّٰهُ وَ لَا تَتَّبِعُوْا خُطُوٰتِ الشَّيْطٰنِ اِنَّهٗ لَـكُمْ عَدُوٌّ مُّبِيْنٌ ۙ

இன்னும் கால்நடைகளில் சில சுமை சுமப்பதற்கும், சில உணவுக்காகவும் உள்ளன அல்லாஹ் உங்களுக்கு அளித்ததிலிருந்து உண்ணுங்கள் - நீங்கள் ஷைத்தானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றாதீர்கள்- நிச்சயமாக அவன் உங்களுக்கு பகிரங்கமான பகைவனாவான். (குர்ஆன் : 6:142)

' ஹமூலத் 'என்பது ஒட்டகம், குதிரை, கழுதை,கோவேறு கழுதை உள்ளிட்ட சுமை ஏற்றப்படும் கால்நடைகளை குறிக்கும்.

' ஃபர்ஷ் ' என்பது ஆட்டை குறிக்கும் - நூல் : ஹாகிம்

கால்நடைகளிருந்து நமக்கு உணவும் மற்ற பயன்களும் கிடைக்கின்றன. நமக்காக அவற்றை படைத்து வசப்படுத்தி தந்தவன் அவன் . ஆனால் அவற்றின் மீது உரிமை கொண்டாடுவது நாம்!

மேலும் ஒரு சைக்கிளையோ, காரையோ அல்லது ஏதாவது வாகனத்தையோ வடிவமைத்து தயாரிக்க எவ்வளவு தலைமுறைகளின் அறிவாற்றல், அனுபவம், உழைப்பு, காலம் என பலதும் விரயமாகி உள்ளது என்பதை ஒரு கணம் சிந்தித்தாலே இறைவன் நமக்கு வசப்படுத்தி தந்துள்ள கால்நடைகளின் அருமையை எளிதாய் உணர முடியும். அவற்றை நினைவூட்டி இவற்றுக்கெல்லாம் நீங்கள் நன்றி செலுத்த மாட்டீர்களா? என்று கேட்கிறான்:

நிச்சயமாக நாம் அவர்களுக்காக நம்முடைய கைகள் செய்தவற்றிலிருந்து கால்நடைகளைப் படைத்திருக்கின்றோம் என்பதை அவர்கள் பார்க்கவில்லையா?

- அவற்றின் மீது அவர்கள் உரிமை பாராட்டுகிறார்கள்.
- மேலும், அவற்றை அவர்களுக்குக் கீழ்படியுமாறு செய்துள்ளோம்;
- ஆகவே, அவற்றில் சிலவற்றின் மீது அவர்கள் ஏறிச்சவாரி செய்வதும் இருக்கிறது;
- இன்னும் அவற்றிலிருந்து சிலவற்றைப் புசிக்கிறார்கள்.
- மேலும், அவற்றிலிருந்து அவர்களுக்கு பயன்களும், பானங்களும் இருக்கின்றன,

இவற்றுக்கெல்லாம் அவர்கள் நன்றி செலுத்த மாட்டார்களா?

(திருக்குர்ஆன் 36 : 71- 73)

"அல்லாஹ்தான் கால் நடைகளை உங்களுக்காக உண்டாக்கியிருக்கிறான் - அவற்றில் சிலவற்றின் மீது நீங்கள் சவாரி செய்கிறீர்கள் - இன்னும் அவற்றி(ல் சிலவற்றி)லிருந்து நீங்கள் புசிக்கிறீர்கள்.

இன்னும், அவற்றில் உங்களுக்கு (வேறு பல) பயன்களும் இருக்கின்றன; மேலும் உங்கள் உள்ளங்களிலுள்ள விருப்பங்களை அதனால் நீங்கள் நிறைவேற்றிக் கொள்ளும் பொருட்டு, அவற்றின் மீதும், கப்பல்கள் மீதும் நீங்கள் சுமந்து செல்லப்படுகிறீர்கள்.

(குர்ஆன் : 40:79, 80)

அல்லாஹ் உங்களுக்கு அருளியவற்றிலிருந்து உண்ணுங்கள் என்கிறது மேற்கண்ட வசனம். அதாவது கனிகள் தானியங்கள் கால்நடைகள் ஆகியவற்றை உண்ணுங்கள் அல்லாஹ்வே அவை அனைத்தும் படைத்து உங்களுக்கு வாழ்வாதாரமாக ஆக்கி உள்ளான்.

" ஷைத்தானின் அடிச்சுவடுகளைர் பின்பற்றிவிடாதீர்கள்" என அல்லாஹ் கூறுகின்றான் அதாவது எஷத்தாளின் வழியையும் அவனுடைய கட்டளைகளையும் பின்பற்றி விடாதீர்கள்.

இணைவைப்பாளர்கள் ஷைத்தானின் வழியைப் பின்பற்றியே, தங்களுக்கு அல்லாஹ் அருளிய கனிகளையும் தானியங்களையும் தடை செய்து கொண்டார்கள். இது இறைவனின் கட்டளை அன்று அவன்மீது அவர்கள் புனைந்த கற்பனையாகும்..

அவன் உங்களுக்கு - அதாவது மனிதர்களே! ஷைத்தான் உங்களுக்கும் பகிரங்க எதிரி ஆவான்." அதாவது அவனது விரோதம் வெளிப்படையானது. தெளிவானது.

வேறு வசனங்களில் அல்லாஹ் கூறுகின்றான்: நிச்சயமாக ஷைத்தான் உங்களுக்கு எதிரி ஆவான் அவனை நீங்களும் எதிரியாகவே ஆக்கிக்கொள்ளுங்கள் குர்ஆன் (35:6)
ஆதமின் மக்களே! மனிதர்களே உங்களுடைய பெற்றோர் இருவரையும் ஷைத்தான் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றியதைப் போன்று உங்களையும் அவன் குழப்பத்தில் ஆழ்த்தி விட வேண்டாம் அவ்விருவரின் வெட்க தலங்களை அவர்களுக்கு காட்டுவதற்காக அவர்களை விட்டு அவர்களது ஆடையை அவன் அகற்றினான் ( குர்ஆன் 7: 27)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 208
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 125 )

ثَمٰنِيَةَ اَزْوَاجٍ مِنَ الضَّاْنِ اثْنَيْنِ وَمِنَ الْمَعْزِ اثْنَيْنِ قُلْ ءٰۤالذَّكَرَيْنِ حَرَّمَ اَمِ الْاُنْثَيَيْنِ اَمَّا اشْتَمَلَتْ عَلَيْهِ اَرْحَامُ الْاُنْثَيَيْنِ نَبِّـــُٔوْنِىْ بِعِلْمٍ اِنْ كُنْتُمْ صٰدِقِيْنَ ۙ
(நபியே! அம்மக்களிடம்) “கால்நடைகளில் எட்டு வகைகள் உள்ளன - செம்மறி ஆட்டில் (ஆண், பெண்) இரு வகை வெள்ளாட்டில் (ஆண், பெண்) இரு வகை அவன் (அல்லாஹ்) ஆண் இரண்டையும் ஹராமாக்கி விட்டானா? அல்லது பெட்டை இரண்டையும் ஹராமாக்கி விட்டானா? அல்லது அவ்விரு வகைகளிலுமுள்ள பெண்களின் கர்ப்பங்களில் உள்ளவற்றையா (அவன் தடுத்திருக்கிறான்?) நீங்கள் உண்மை கூறுபவர்களாக இருந்தால், (இதனை) ஆதாரத்துடன் எனக்கு அறிவியுங்கள்” என்று கேட்பீராக. (குர்ஆன் : 6:143)
وَمِنَ الْاِبِلِ اثْنَيْنِ وَمِنَ الْبَقَرِ اثْنَيْنِ قُلْ ءٰۤالذَّكَرَيْنِ حَرَّمَ اَمِ الْاُنْثَيَيْنِ اَمَّا اشْتَمَلَتْ عَلَيْهِ اَرْحَامُ الْاُنْثَيَيْنِ اَمْ كُنْتُمْ شُهَدَآءَ اِذْ وَصّٰٮكُمُ اللّٰهُ بِهٰذَا فَمَنْ اَظْلَمُ مِمَّنِ افْتَـرٰى عَلَى اللّٰهِ كَذِبًا لِّيُضِلَّ النَّاسَ بِغَيْرِ عِلْمٍ اِنَّ اللّٰهَ لَا يَهْدِى الْقَوْمَ الظّٰلِمِيْنَ
இன்னும், “ஒட்டகையில் (ஆண், பெண்) இரு வகை மாட்டிலும் (பசு, காளை) இரு வகையுண்டு - இவ்விரு வகைகளிலுள்ள ஆண்களையா அல்லது பெட்டைகளையா அல்லது இவ்விரு வகையிலுள்ள பெட்டைகளின் கர்ப்பங்களில் உள்ளவற்றையா (இறைவன்) தடுத்திருக்கிறான். இவ்வாறு அல்லாஹ் கடடளையிட்ட(தாகக் கூறுகிறீர்களே, அச்)சமயம் நீங்கள் சாட்சியாக இருந்தீர்களா?” என்றும் (நபியே!) நீர் கேளும் - மக்களை வழி கெடுப்பதற்காக அறிவில்லாமல் அல்லாஹ்வின் மீது பொய்க் கற்பனை செய்பவனைவிட அதிக அநியாயக்காரன் யார்? நிச்சயமாக அல்லாஹ் இத்தகைய அநியாயக் காரக் கூட்டத்தினருக்கு நேர்வழி காட்டமாட்டான். (குர்ஆன் : 6:144)
இங்கு இஸ்லாத்திற்குமுன் அரபியரிடையே இருந்துவந்த மூடப் பழக்க வழக்கங்களில் சிலவற்றை அல்லாஹ் விவரிக்கின்றான்.
அவர்கள் கால்நடைகளில் சிலவற்றைத் தமக்குத் தாமே தடை செய்து கொண்டனர். கால்நடைகளில் தமது சுய விருப்பத்தின்பேரில் சில வகைகளைக் குறிப்பிட்டு, அவற்றுக்கு பஹீரா, சாயிபா, வஸீலா, ஹாம் என அவர்கள் பெயர் சூட்டிக்கொண்டனர். அவ்வாறே தானியங்களிலும் பழ வகைகளிலும் செய்தனர்
எனவேதான், இதற்கு முந்தைய வசனத்தில் (141), "கொடி படர்ந்த, கொடி படராத தோட்டங்களை அவனே படைத்தான்" என்றும், அதற்கு அடுத்த வசனத்தில் (142), "கால்நடைகளில் சுமை சுமப்பவற்றையும், சுமை சுமக்காத (வேறு பயன்பாட்டுக்கானிவற்றையும் அவனே உருவாக்கினான் என்றும் அல்லாஹ் விவரித்தான்.
இங்கு கால்நடைகளின் வகைகளைக் குறிப்பிட்டு அவற்றையோ அவற்றின் குட்டிகளையோ (உண்பதற்குத்) தான் தடை செய்யவில்லை என்றும். இவையனைத்தும் உண்ணுதல், சுமை ஏற்றுதல், பயணம். செய்தல், பால் கறத்தல் போன்ற மனிதர்கவே படைக்கப்பட்டுள்ளன என்றும், அல்லாஹ் தெரிவிக்கின்றான்.
வேறொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான். உங்களுக்காக கால் நடைகளில்) இணைகளான எட்டுப் பிராணிகளை அவன் அருளினான். ( குர்ஆன் 39:6 )
இங்கு முதலாவது வசனத்தில் (143),
''(கால்நடைகளில்) இணைகளான எட்டுப் பிராணிகளை (அவனே உருவாக்கினான்” என்று கூறப்பட்டுள்ளது. அவையாவன. செம்மறியாட்டில் ஆண் மற்றும் பெண், வெள்ளாட்டில் ஆண் மற்றும் பெண். ஒட்டகத்தில் ஆண்

மற்றும் பெண், மாட்டில் ஆண் மற்றும் பெண் இவற்றில் எதையேனும் நான் தடை செய்தேனா என அல்லாஹ் வினவுகின்றான்
அடுத்து "அல்லது இவ்விரு வகைப் பெண் பிராணிகளின் கருப்பைகளில் உள்ளவற்றையா (அல்லாஹ் தடுத்தான்)?" என்று கேட்கப்பட்டுள்ளது.
இது. "இந்தக் கால்நடைகளின் வயிற்றில் உள்ளவை எங்களுடைய ஆண்களுக்கு மட்டுமே உரியவை: எங்களுடைய பெண்களுக்குத் தடை செய்யப்பட்டவை ஆகும்" (6:139) என்ற அக்கால அரபியரின் கூற்றுக்கு மறுப்பாக அமைந்துள்ளது.
அடுத்து "நீங்கள் உண்மையாளர்களாயின், (இது குறித்து) எனக்கு அறுதியிட்டு அறிவியுங்கள் என (நபியே) நீர் கூறுவீராக" என்று அந்த வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்.
அதாவது பஹீரா, சாயிபா, வஸீலா, ஹாம் போன்ற கால்நடைகள் தடை செய்யப்பட்டவை என்று நீங்களாகவே கற்பனை செய்து கொண்டிருக்கிறீர்களே! இவற்றை அல்லாஹ் எப்போது, எப்படி தடை செய்தான் என்பதை உறுதியாக எனக்கு அறிவியுங்கள் என்று நபியே! நீர் கேட்பீராக
இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது: (ஆடு, மாடு, ஒட்டகம் போன்ற) எல்லா வகைக் கால்நடைகளின் கருப்பைகளிலும் ஆண், பெண் என்ற இரு வகையான குட்டிகள் தானே இருக்கும். அவற்றில் சிலவற்றை அனுமதிக்கப்பட்டவை என்றும், வேறு சிலவற்றைத் தடை செய்யப்பட்டவை என்றும் நீங்கள் ஏன் கூறு போடுகிறீர்கள்?
இவை அனைத்தும் அனுமதிக்கப் பட்டவை தான். எதையும் நான் தடை செய்யவில்லை என்று அல்லாஹ் கூறுகின்றான்.
ஒரு சமயம் மாலிக் பின் அவ்புல் ஜஷமி என்ற ஒருவர் பெருமானார் (ஸல்) அவர்களிடம் சிலரை அழைத்துக்கொண்டு வாதாட வந்தார்.
"முஹம்மதே! நமது மூதாதையர் எதனைச் செய்துகொண்டு வந்தார்களோ அதனை நீர் தடுப்பதாகக் கேள்விப்படுகிறோம்' என்று கடினமாகக் கூறினார்.
"ஆடு, மாடு ஒட்டகங்களில் சிலவற்றை எந்தவித அடிப்படையும் ஆதாரமுமின்றி நீங்களாகத் தடுத்துக் கொள்கிறீர்கள். ஆனால், அல்லாஹ்வோ இந்த எட்டு ஜோடியையும் புசிப்பதற்கும் பலன் பெறுவதற்குமே படைத்துள்ளான். அங்ஙனமிருக்க, இவற்றை நீங்கள் எந்த ஆதாரத்தின் மூலம் தடுக்கின்றீர்கள்? இவற்றில் ஆண்கள் தடுக்கப்பட்டிருக்கின்றனவா? அல்லது பெண் தடுக்கப்பட்டிருக்கின்றனவா? என்று பெருமானார் (ஸல்) அவர்கள் அவரிடம் கேட்டார்கள்.
திகிலடைந்த அவர்,பதிற் கூற முடியாமல் மௌனமாகி விட்டார்.
அப்பொழுது பெருமானார் (ஸல்)அவர்கள் அவரை நோக்கி, "மாலிக்கே ஏன் பேசாமலிருக்கின்றீர்கள்?" என்று கேட்டார்கள்.
அதற்கவர், "நீங்களே பேசுங்கள்; நான் கேட்டுக்கொண்டே இருக்கின்றேன்" என்று கூறினார் எந்த பதிலும் அவரால் சொல்ல முடியவில்லை. (ஆதார நூல்: காஜின் )
அடுத்த வசனத்தில் (144), அல்லது உங்களுக்கு அல்லாஹ் இவ்வாறு அறுவுறுத்தியபோது நீங்கள் அங்கு இருந்தீர்களா?" என்று அல்லாஹ் கேட்கின்றான். இந்தத் தொடர், அறியாமைக் கால அரபியர் கால்நடைகளில் சிலவற்றைத் தாங்களாகவே தடை செய்து விட்டு, இறைவன்மீது பழிபோடுவதை நகைக்கிறது.
அடுத்து "மக்களை வழிதவறச் செய்தற்காக அறிவின்றி இறைவன் மீதே பொய்யைப் புனைந்துரைப்பவனைவிட அநீதியாளன் (வேறு) யார் (இருக்க முடியும்)?" என்று அல்லாஹ் கேட்கின்றான். அதாவது அவனைவிட அநீதியாளன் (வேறு) யாரும் கிடையாது.
"அநீதி இழைக்கும் மக்களுக்கு அல்லாஹ் நல்வழி காட்டுவதில்லை" என்று அந்த வசனம் கூறுகின்றது. இந்த வசனத்தின் எச்சரிக்கைக்கு இலக்கான முதலாவது ஆள். அம்ர் பின் லுஹை பின் கம்ஆ என்பவர்தான்.

ஏனெனில், அவர்தான் ஆரம்ப மாக நபிமார்களின் மார்க்கத்தை மாற்றியமைத்தார். பஹீரா, சாயிபா, வஸீலா, ஹாம் போன்றவற்றை ஏற்படுத்தினார். இச்செய்தி நம்பகமான நபிமொழிகளில் வந்துள்ளது. ( புகாரி 4623)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 209
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 126 )

قُل لَّآ اَجِدُ فِىۡ مَاۤ اُوۡحِىَ اِلَـىَّ مُحَرَّمًا عَلٰى طَاعِمٍ يَّطۡعَمُهٗۤ اِلَّاۤ اَنۡ يَّكُوۡنَ مَيۡتَةً اَوۡ دَمًا مَّسۡفُوۡحًا اَوۡ لَحۡمَ خِنۡزِيۡرٍ فَاِنَّهٗ رِجۡسٌ اَوۡ فِسۡقًا اُهِلَّ لِغَيۡرِ اللّٰهِ بِهٖ‌ۚ فَمَنِ اضۡطُرَّ غَيۡرَ بَاغٍ وَّلَا عَادٍ فَاِنَّ رَبَّكَ غَفُوۡرٌ رَّحِيۡمٌ

(நபியே!) நீர் கூறும்: "தானாக இறந்தவைகளையும் வடியும் இரத்தத்தையும் பன்றியின் மாமிசத்தையும் தவிர உண்பவர்கள் புசிக்கக் கூடியவற்றில் எதுவும் தடுக்கப்பட்டதாக எனக்கு அறிவிக்கப்பட்டதில் நான் காணவில்லை" - ஏனெனில் இவை நிச்சயமாக அசுத்தமாக இருக்கின்றன.
அல்லது அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர் சொல்லி அறுக்கப்பட்டது பாவமாயிருப்பதனால் - (அதுவும் தடுக்கப்பட்டுள்ளது) - ஆனால் எவரேனும் நிர்ப்பந்திக்கபட்டு, வரம்பை மீறாமலும் பாவம் செய்ய நினைக்காமலும் புசித்துவிட்டால் - (அவர்மீது குற்றமாகாது ஏனெனில்) நிச்சயமாக உங்கள் இறைவன் மிக்க மன்னிப்போனாகவும், பெருங் கருணையுடையோனுமாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 6:145)
ஷைத்தானின் தூண்டுதலால் சில உயிர்ப் பிராணிகளை இணை வைத்து கொண்டிருப்போர் தங்களுக்குத் தாங்களே தடை செய்து கொண்டனர்.
இவ்வாறு செய்து கொண்டிருக்கும்.அவர்களை நோக்கி, நபியே நீர் கூறும்: புசிக்கிறவர் எந்தப் பிராணியினைப் புசிக்கிறாரோ அதனைப் புசிக்கக் கூடாதென்று அதனை தடுத்திருப்பதாக எனக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்ட சட்டத்தில் நான் காணவில்லை. நீங்களே தாம் உங்கள் மீது அவற்றில் சிலவற்றை அனுமதிக்கப்பட்டவையென்றும், சிலவற்றை அனுமதிக்கப்படாதவை என்றும் ஏற்படுத்திக் கொண்டீர்கள்.
இத்தகைய அறிவிப்பு எதுவும் எனக்கு அல்லாஹ்விடமிருந்து வரவில்லை.
விலக்கப்பட்டவை
1) அல்லாஹ்விடமிருந்து எனக்கு வந்தஅறிவிப்பு என்னவென்றால், பிணமாக இருந்தால். புசிக்கக் கூடாது. இதை நீங்கள் அனுமதிக்கப்பட்டதென்று உங்கள் நோக்கப்படி கூறுகிறீர்கள்.
சம்பவம் 1 : இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது: சவ்தா பின்த் ஸம்ஆ (ரலி) அவர்களின் ஒன்று தானாக செத்துவிட்டது. அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம், " அல்லாஹ்வின் தூதரே ! இன்ன ஆடு செத்துவிட்டது என்று தெரிவித்தார்கள்.
நபி (ஸல்) அவர்கள் "அதன் தோலை ஏன் எடுக்கவில்லை ?" என கேட்டபோது, "செத்த ஆட்டின் தோலை நாங்கள் எடுக்கலாமா ? "என்று சவ்தா ( ரலி) அவர்கள் கேட்டார்கள்.
அதற்கு நபி(ஸல்) அவர்கள் இவ்வசனத்தை ஓதி காட்டி நீங்கள் அதை உண்ணப்போவதில்லை. ஆனால் அதன் தோலைப் பதனிட்டுப் பயன்படுத்தலாமே என்று கூறினார்கள்.
அவ்வாறே சவ்தா ( ரலி) அவர்கள் அதன் தோலை உரித்து அதனைப் பதனிட்டு அதிலிருந்து தோல் பை செய்து கொண்டார்கள். அது பழையதாகி கிழியும் வரை அவர்களிடம் இருந்தது. - ஜாபிர் பின் ஸைத் (ரஹ்) - அபூதாவூத்
2) ஓட்டப்பட்ட இரத்தமாக இருந்தால் அதனைப் புசிக்கக் கூடாது. ஆனால் இரத்தத்தை நீங்கள் சாப்பிடுகிறீர்கள். அதாவது ஒரு பிராணி அறுக்கப்பட்டு அதன் இரத்தம் ஓடிக்கொண்டிருக்கும் போது அந்த இரத்தத்தை அப்படியே பிடித்து உபயோகிக்கிறீர்கள். இது நீங்களாக ஏற்படுத்திக் கொண்ட சட்டம்.
சம்பவம் 2 : ஆயிஷா ( ரலி ) அவர்கள் விலங்குகளின் இறைச்சி, (அடுப்பில் வேகும்) பாத்திரத்தில் ஒட்டி உள்ள ரத்தம் செந்நிறம் ஆகியவற்றை குறையாக கருதவில்லை அதற்கு சான்றாக இந்த வசனத்தை ஓதி காட்டுவார்கள் - நூல் : தஃப்சீர் தபரீ

3) பன்றியின் மாமிசமாக இருந்தால் புசிக்கக் கூடாது. ஏனெனில் நிச்சயமாக இது அசுத்தமாகும். ஆனால் நீங்களோ பன்றியின் மாமிசத்தைத் தாராளமாகப் புசிக்கின்றீர்கள்,அது அனுமதிக்கப்பட்டது எனக் கூறுகிறீர்கள்.
சம்பவம் 3 : நுமைலா அல்ஃபஸாரீ (ரஹ்) அவர்கள் கூறியதாவது: நான் இப்னு உமர் (ரலி) அவர்களிடம் இருந்தேன். அப்போது ஒரு மனிதர், முள்ளம் பன்றியை உண்பதைப் பற்றி வினவினார்.
உடனே இப்னு உமர் (ரலி) அவர்கள் இந்த வசனத்தை (145) ஓதிக் காட்டினார்கள்.(அதாவது முள்ளம் பன்றி அனுமதிக்கப்பட்டதுதான் என்றார்கள்.)
அப்போது அங்கிருந்த முதியவர் ஒருவர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் பின்வருமாறு கூறியதைத் தாம் கேட்டதாகச் சொன்னார்: நபி (ஸல்) அவர்களிடம் முள்ளம் பன்றி பற்றிக் கேட்கப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள். "அது அசுத்தமானவற்றில் ஒன்றாகும்” என்று பதிலளித்தார்கள்.
இதைக் கேட்டவுடன், “நபி (ஸல்) அவர்கள் அவ்வாறு கூறியிருந்தால், அவர்கள் சொன்னதுதான் சட்டம்" என்று இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறினார்கள். நூல் அபூதாவூத், முஸ்னது அஹ்மத்
4) அல்லாஹ்வின் பெயரைக் கூறி அறுக்கப்படாமல் விக்கிரகங்களின் பெயர் கூறி அறுக்கப்பட்ட பிராணியாக இருந்தால் சாப்பிடக் கூடாது.
ஆனால் நீங்களோ உங்களுடைய தெய்வங்களின் பெயர்களைக் கூறி அறுக்கிறீர்கள். அல்லது எதுவுமே கூறாமல் அப்படியே கொன்று விடுகிறீர்கள். அதனைச் சாப்பிடுவது அனுமதிக்கப்பட்டதென்று கூறுகிறீர்கள்.
இங்கு கூறப்படும் நான்கு இனங்களும் தடைசெய்யப்பட்டவை என எனக்கு அறிவிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் நீங்களோ இவைகளை விட்டு விட்டு சுயமாக உங்கள் நோக்கப்படியெல்லாம் சிலவற்றை அனுமதிக்கப்பட்டதாக்கிக் கொண்டீர்கள். சிலவற்றை அனுமதிக்கப்படாதவையாக்கிக் கொண்டீர்கள்.
இதற்குரிய ஆதாரத்தைக் கொண்டு வாருங்கள்.
சில சமயம் நிர்ப்பந்தத்தின் காரணத்தால் விலக்கப்பட்ட இவற்றைக் கூட சாப்பிட வேண்டியதேற்படும். அந்த நிலை ஏற்படும்போது இவற்றை உபயோகிக்கலாம்.
இதனை இவ்வசனத்தில், ஒருவர் பாவம் செய்யாத நிலையிலும், வரம்பு மீறாத நிலையிலும் விலக்கப்பட்டதை புசிக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டால் அப்பொழுது இவற்றைப் புசிக்கலாம்.
இவை தவிர்க்க முடியாத நிலையாகும். தன்னுடைய பசியை ஆற்றிக் கொள்ள எதுவுமே கிடைக்காத நிலை ஒருவருக்கு ஏற்படலாம்; அல்லது ஏதாவதொரு அநியாயக்காரன் கையில் அகப்பட்டு அவனால் இவற்றைப் புசிக்குமாறு அவர் நிர்பந்திக்கப்படலாம்.
இந்த நிலைகளில் தடை செய்யப்பட்டவையும் அவருக்கு அனுமதிக்கப்பட்டவையாகி விடுகின்றன. அதனால் குற்றம் ஏற்படாது: அதனை நிச்சயமாக உமது இரட்சகன் மிகவும் மன்னிக்கிறவன். அதனைக் குற்றமாகப் பிடிக்க மாட்டான். அத்துடன், இரக்கம் காட்டும் நிகரற்ற அன்புடையவன் என்பன இவ்வசனத்தின் கருத்துரைகளாகும்.
வேண்டுமென்று செய்யும் தவறுகளின் காரணத்தால் சில சட்டங்கள் கடுமையாக்கப்படுகின்றன. அப்பொழுது அனுமதிக்கப்பட்ட சிலவற்றைக் கூட அனுமதிக்கப்படாதவை என அவர்களுக்கு அறிவிக்கப்படுகின்றன.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 210
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 127 )

وَعَلَى الَّذِيْنَ هَادُوْا حَرَّمْنَا كُلَّ ذِىْ ظُفُرٍ وَمِنَ الْبَقَرِ وَالْغَنَمِ حَرَّمْنَا عَلَيْهِمْ شُحُوْمَهُمَاۤ اِلَّا مَا حَمَلَتْ ظُهُوْرُهُمَاۤ اَوِ الْحَـوَايَاۤ اَوْ مَا اخْتَلَطَ بِعَظْمٍ ذٰ لِكَ جَزَيْنٰهُمْ بِبَـغْيِهِمْ وَاِنَّا لَصٰدِقُوْنَ
நகத்தையுடைய அனைத்தையும் யூதர்களுக்கு நாம் ஹராமாக்கியிருந்தோம்; ஆடு, மாடு ஆகியவற்றில் - அவற்றின் முதுகுகளிலோ அல்லது வயிறுகளிலோ அல்லது எலும்புகளுடன் கலந்தோ இருக்கும் கொழுப்பைத் தவிர மற்ற அவற்றின் கொழுப்பையும் ஹராமாக்கினோம் - அவர்கள் அக்கிரமம் செய்த காரணத்தினால்

அவர்களுக்கு இதனை நாம் கூலியாக கொடுத்தோம் - நிச்சயமாக நாம் உண்மையே கூறுகிறோம். (குர்ஆன் : 6:146)
யூதர்கள் வட்டி தொழில், மற்றும் வட்டித் தொழிலில் நூதனத்தை ஏற்படுத்தல், ஜனங்களது பொருட்களைத தகாத முறையில் கைப்பற்றுதல், நபிமார்களை கொலை செய்தல் முதலிய பாவமான காரியங்களை செய்து அடிக்கடி இறைவனது கட்டளையை மீறிக்கொண்டே இருந்தனர். யூதர்கள் செய்த இதுபோன்ற அநியாயங்களினால் அவர்களுக்கு அனுமதிக்கப்பட்ட சில பொருட்கள் தடுக்கப்பட்டன. அவை இந்த வசனத்தில்
அறிவிக்கப்படுகின்றன.
நகத்தையுடையதை யூதர்களுக்கு நாம் தடுத்திருந்தோம்
பிராணிகளின் விரல்கள் பிளந்து நகங்களுடன் இருப்பவைகளையும் பறவை இனங்களையும் கோழி, வாத்து போன்றவைகளையும் அவர்கள் உண்ணக் கூடாது என்று தடை செய்திருந்தோம்.
ஆடு, மாடு ஆகியவற்றிலிருந்து அவ்விரண்டின் கொழுப்புகளையும் வயிற்றின் உட்பாகத்திலுள்ள சிறு நீரகமான கிட்னியின் கொழுப்புகளையும், சாதாரணமாகப் படர்ந்துள்ள கொழுப்புக்களையும் நாம் தடை செய்திருந்தோம். இத்தகைய சுவை மிக்க உணவுகளை அவர்கள் புசிக்கக் கூடாது எனத் தடை செய்யப்பட்டிருந்தனர். ஆனால் அவ்விரண்டின் சிறுகுடல்கள் சுமந்து கொண்டிருக்கும் கொழுப்புகள், எலும்புகளுடன் கலந்துள்ள கொழுப்புக்கள் ஆகியவை தவிர்த்து இவைகளை மட்டும் அவர்கள் புசிக்கலாம் என அனுமதிக்கப்பட்டிருந்தனர்.
அதாவது: ஆடு, மாடு ஆகியவற்றின் எலும்புகளுடன் சேர்ந்துள்ள கொழுப்புக்கள், மிகக் குறைவாக இருக்கும். அவற்றை மட்டும் அவர்கள் உபயோகிக்கலாம் என அனுமதிக்கப் பட்டிருந்தனர்.
திரு மக்கா வெற்றியடைந்த ஆண்டில் பெருமானார் (ஸல்) அவர்கள் சொற்பொழிவு நிகழ்த்தும் பொழுது, 'நிச்சயமாக கள், பன்றி, பிணம், விக்கிரகங்கள் ஆகியவற்றினை விற்பதும் வாங்குவதும் கூடாதென்று அல்லாஹ் தடுத்துள்ளான். 'என்று கூறினார்கள்.
அப்பொழுது, 'பிணத்தில் கொழுப்புகள் கப்பல்களில் பூசப்படுகின்றன; அவற்றால் தோல் பதனிடப்படுகிறது; அவற்றைக் கொண்டு மனிதர்கள் விளக்கு எரிக்கின்றனர். இந்நிலையில் இவையும் கூடாதென்று கூறுகிறீர்களா? அல்லாஹ்வின் தூதரே !" என்று கேட்கப்பட்டது.
ஆம்! விலக்கப்பட்டது தான் ! என்று பெருமானார் (ஸல்) அவர்கள் கூறி விட்டு மீண்டும் யூதர்களை அல்லாஹ் நாசமாக்குவானாக ஆடு, மாடு ஆகிய இரண்டின் கொழுப்புகளை புதிக்க கூடாதென்று அல்லாஹ் தடை செய்தபொழுது அவற்றை அவர்கள் உருக்கி விற்று அதன் விலையைச் சாப்பிட ஆரம்பித்து விட்டனர்," என்றும் கூறினார்கள். (அல்ஹதீது, அறிவித்தவர் ஹஜ்ரத் ஜாபிர் பின் அப்துல்லாஹ் நூல்கள்: புகாரி, முஸ்லிம் )
நவீன காலத்தில் ....
இறந்து போன பன்றிகள், கால்நடைகள் மற்றும் கோழியிலிருந்து கிடைக்கும் கொழுப்பைப் பயன்படுத்தி விமானங்களுக்கான பசுமை எரிபொருள் தயாரிக்கப்பட்டால், எதிர்காலத்தில் மிகப் பெரிய பாதிப்பு ஏற்படுத்தும் என்று ஓர் ஆய்வில் தெரிய வந்துள்ளது.
விலங்குகளின் கொழுப்பு ஒரு தேவையற்ற பொருளாகக் கருதப்படுகிறது. இந்தக் கொழுப்பைப் பயன்படுத்தி விமானப் போக்குவரத்துக்கான எரிபொருளைத் தயாரிக்கும்போது மிகக் குறைந்த அளவிலான கரிம வாயு மட்டுமே வெளியாகிறது. இதனால் சுற்றுச்சூழல் பாதிக்காது.
விலங்குகளின் கொழுப்பைக் கொண்டு தயாரிக்கப்படும் பொருட்களில் இருந்து எரிபொருள் உற்பத்தி செய்வது வரும் 2030ஆம் ஆண்டுக்குள் மூன்று மடங்கு அதிகரிக்கும் எனக் கருதப்படும் நிலையில், விமானப் போக்குவரத்துக்கு இந்த எரிபொருள் அதிக அளவில் பயன்படுத்தப்படும் என எதிர்பார்க்கப்படுகிறது.
இதனால் மற்ற தொழில்துறைகளுக்குத் தேவையான கொழுப்பு கிடைக்காது என்பதால், அத்துறைகளில் பனை எண்ணெய் பயன்படுத்தப்படும் நிலை ஏற்படும் என்றும், இது கரிம வெளியேற்றத்தைப் பல மடங்கு அதிகரிக்கும் இதனால் சுற்றுச்சூழல் பாதிக்கும் என்றும் நிபுணர்கள் எச்சரிக்கின்றனர்

புதைபடிம எரிபொருட்களைப் பயன்படுத்தும் விமானங்கள் அதிக அளவு கரிம வாயுவை வெளியேற்றுவதால் அதைக் குறைக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டிய கட்டாயத்தில் விமானப் போக்குவரத்துத் துறை உள்ளது என்பதாக கருத்து தெரிவிக்கப்படுகிறது.
பாவத்தினால் சட்டமும் கடினமாகிறது
இதன் மூலம் யூதர்களில் சூழ்ச்சியை அறியலாம். பாவங்களை மாற்று உருவில் தந்திரமாக செய்துவிடுவர். இதனாலேயே அவர்கள் மீது கடினமான சட்டங்களும், தடைகளும் விதிக்கப்பட்டிருந்தன. இதனை இவ்வசனத்தில் குறிப்பிட்டுக் கூறுகையில், அவர்கள் அறியாயம் செய்து கொண்டிருந்ததின் காரணத்தால், அவர்களை இவ்வாறெல்லாம் தடை விதிப்பதன் மூலம் தாம் தண்டித்தோம் எனக் கூறப்படுகிறது.
படம் : விலங்குகளின் கொழுப்பினால் எரிக்கப்படும் விளக்கு

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 211
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 128)

قُل لَّآ اَجِدُ فِىْ مَآ اُوْحِىَ اِلَىَّ مُحَرَّمًا عَلٰى طَاعِمٍ يَّطْعَمُهٗۤ اِلَّاۤ اَنْ يَّكُوْنَ مَيْتَةً اَوْ دَمًا مَّسْفُوْحًا اَوْ لَحْمَ خِنْزِيْرٍ فَاِنَّهٗ رِجْسٌ اَوْ فِسْقًا اُهِلَّ لِغَيْرِ اللّٰهِ بِهٖ فَمَنِ اضْطُرَّ غَيْرَ بَاغٍ وَّلَا عَادٍ فَاِنَّ رَبَّكَ غَفُوْرٌ رَّحِيْمٌ
(நபியே!) நீர் கூறும்: "தானாக இறந்தவைகளையும் வடியும் இரத்தத்தையும் பன்றியின் மாமிசத்தையும் தவிர உண்பவர்கள் புசிக்கக் கூடியவற்றில் எதுவும் தடுக்கப்பட்டதாக எனக்கு அறிவிக்கப்பட்டதில் நான் காணவில்லை" - ஏனெனில் இவை நிச்சயமாக அசுத்தமாக இருக்கின்றன.
இஸ்லாம் பன்றி இறைச்சியை உணவாக உட்கொள்ளத் தடை செய்திருப்பது ஏன்?
பதில்:
இஸ்லாம் பன்றி இறைச்சியை உணவாக உட்கொள்ள தடை செய்திருப்பது அனைவரும் அறிந்த உண்மை. இந்தத் தடை ஏன்?. என்பது பற்றிய விபரத்தை கீழ்க்காணும் விளக்கங்கள் மூலம் தெளிவாக அறியலாம்.
பன்றி இறைச்சி உண்பது தடை செய்யப்பட்டிருப்பது பற்றி அருள்மறை குர்ஆனில் குறைந்தது நான்கு அத்தியாயங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.
'தானாகவே செத்ததும் இரத்தமும் பன்றியின் மாமிசமும் அல்லாஹ் அல்லாத பெயர் சொல்லப்பட்டதும் ஆகியவைகளைத்தான் உங்கள் மீது ஹராமாக ஆக்கியிருக்கிறான்.' (குர்ஆன் 02:173) மேலும் (குர்ஆன் 5:3) ( 6: 145) (16 :115) ஆகிய வசனத்திலும் காணலாம்.
பன்றி இறைச்சி உண்ணத் தடை என்று பைபிளும் குறிப்பிடுகின்றது.
பைபிளின் அத்தியாயம் 11 - லெவிட்டிக்கஸ் (Leviticus) வசனம் 7 முதல் 8 வரையிலும், பைபிளின் அத்தியாயம் 14 - டியுட்டர்னோமி (Deuteronomy) வசனம் 8 ம் பன்றி இறைச்சி உண்ணத் தடை பற்றி அறிவிக்கின்றன.
மேலும் பைபிளின் அத்தியாயம் 65 - புக் ஆஃப் இஷையா (Book of Isaiyah) 2 முதல் 5 வரையுள்ள வசனங்களில் பன்றி இறைச்சி உண்ணத் தடை பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.
காரணம் : பன்றி இறைச்சி உண்பதால் - மனிதனுக்கு ஏராளமான நோய்கள் உண்டாகின்றன.
பன்றி இறைச்சி உண்பதால் மனிதனுக்கு எழுபது விதமான நோய்கள் உண்டாகிறது. பன்றி இறைச்சி உண்பதால் மனிதனின் வயிற்றில் வட்டப்புழு (RoundWorm), ஊசிப்புழு (inWorm), கொக்கிப்புழு (HookWorm) போன்ற குடற்புழுக்கள் உண்டாகின்றன. பன்றி இறைச்சி உண்பதால் மனிதனின் வயிற்றில் நாடாப்புழு உருவாகிறது. இந்த நீளமான நாடாப்புழு மனித குடலின் அடிப்பகுதியில் சென்று தங்கிவிடுகிறது.
அது இடும் முட்டை இரத்த நாளங்கள் வழியாக உடலின் எல்லாப் பாகங்களுக்கும் பரவுகிறது. இந்த முட்டை மனித மூளையச் சென்றடைந்தால் மனிதன் தன் நினைவாற்றலை இழப்பான். இந்த முட்டை மனித இதயத்தைச் சென்றடைந்தால் மனிதனுக்கு மாரடைப்பு உண்டாகிறது. இந்த முட்டை மனிதனின் கண்களைச் சென்றடைந்தால் மனிதன் கண்பார்வையை இழக்கிறான். இந்த முட்டை மனிதனின் ஈரலைச் சென்றடைந்தால்

மனிதனின் ஈரல் பாதிக்கப்படுகிறது. இவ்வாறு பன்றி இறைச்சி உண்பதால் மனித வயிற்றில் உருவாகும் நாடாப்புழுவின் முட்டைகள் மனித உருப்புகள் அனைத்தையும் செயலிழக்கச் செய்யும் வல்லமை உள்ளவை. பன்றி இறைச்சியில் திரிகூரா திச்சுராஸிஸ் (Trichura Tichurasis) என்ற பெயரையுடைய மற்றொரு ஆபத்தான குடற்புழு உள்ளது. பன்றி இறைச்சியை நன்றாக வேக வைத்துவிட்டால் இது போன்ற புழுக்கள் மரணித்து விடுகின்றன என்பது ஒரு பொதுவான அதே சமயம் தவறான கருத்து மக்களிடையே இருக்கிறது.

இது பற்றிய ஆய்வு ஒன்று அமெரிக்காவில் நடத்தப்பட்டபோது - இருபத்து நான்கு பேர் திரிகூரா திச்சுராஸிஸ் (Trichura Tichurasis) என்று குடற்புழு நோயால் தாக்கப்பட்டிருந்தார்கள். அவர்களில் இருபத்தி இரண்டு பேர் பன்றி இறைச்சியை நன்றாக வேகவைத்து சாப்பிட்டவர்கள் என்று கண்டறியப்பட்டது. சாதாரணமான வெப்பத்தில் சமைக்கப்படும் பன்றி இறைச்சியில் - குடற்புழு உண்டு என மேற்படி ஆய்விலிருந்து நாம் அறியும் செய்தி பன்றி இறைச்சியில் கொழுப்புச் சத்து அதிகம்.

பன்றி இறைச்சியில் மாமிச சத்தைவிட கொழுப்புச் சத்தே அதிகம். பன்றி இறைச்சி உண்பதால் ஏற்படும் கொழுப்புச் சத்து மனித இரத்த நாளங்களை அடைத்து விடுவதால் - மனிதனுக்கு இரத்த அழுத்த நோயும் - மாரடைப்பும் உண்டாகின்றது. எனவே அமெரிக்கர்களில் ஐம்பது சதவீதம் பேர் இரத்த அழுத்தம் உள்ளவர்களாக இருப்பதில் ஆச்சரியம் இல்லை.
உலகில் உள்ள மிருகங்களில் எல்லாம் கேடுகெட்ட மிருகம் பன்றி.
பூமியல் உள்ள விலங்கினங்களில் எல்லாம் கேடுகெட்ட விலங்கினம் பன்றி. பன்றி சேற்றிலும் சகதியிலும் மலத்திலும் வாழக்கூடிய விலங்கினம். கடவுளின் படைப்பில் ஒரு சிறந்த சுத்திகரிக்கும் மிருகம் பன்றி. நவீன கழிப்பறை வசதி இல்லாத கிராமப்புறங்களில் மனிதர்கள் - காடுகளிலும் - வெட்டவெளியிலும்தான் மலஜலம் கழிப்பார்கள். இந்த மலத்தை சுத்தம் செய்வது பன்றிதான்.
ஆஸ்திரேலியா போன்ற மேலை நாடுகளில் பன்றிகள் மிக சுத்தமான சூழ்நிலையில் வளர்க்கப்படுகின்றன என சிலர் வாதிட முற்படலாம். எந்த மாதிரி சுத்தமான சூழ்நிலையிலும் பன்றிகள் ஒன்றாகத்தான் அடைத்து வைக்கப்படுகின்றன. எத்தனைதான் சுத்தமான சூழ்நிலையில் நீங்கள் பன்றிகளை வைத்திருந்தாலும் - பன்றி இயற்கையாகவே கேடு கெட்டவை. தன்னுடைய மலத்தையும் - பிறருடைய மலத்தையும் சுவைத்துத் தின்னும் மிருகம் பன்றி.
உலகில் உள்ள மிருகங்களில் எல்லாம் வெட்கம் கெட்ட மிருகம் பன்றிதான். தனது நண்பர்களை அழைத்து வந்து தனது துணையுடன் நண்பர்களை உடலுறவு கொள்ளச் செய்யும் மிருகம் பன்றி. அமெரிக்காவில் பெரும்பான்மையினர் பன்றி இறைச்சி உண்ணக் கூடியவர்களாக இருக்கிறார்கள். இரவு நேர பார்ட்டிகள் முடிந்த பிறகு தங்களுக்குள் 'மனைவியரை மாற்றிக் கொள்ளும் பண்பாடு' (அதாவது எனது மனைவியுடன் நீ உனது மனைவியுடன் நான் என) கொண்டவர்களாக இருக்கிறார்கள்.
பன்றி இறைச்சி தின்பவன் பன்றியைப் போலத்தான் செயல்படுவான். இந்தியர்களான நாம் அமெரிக்கர்களை மிகவும் முன்னேறியவர்கள் எனவும் - மிகவும் பண்பாடு உடையவர்கள் எனவும் தலைக்கு மேல் வைத்து கொண்டாடுகிறோம். அவர்கள் என்ன செய்தாலும் அதனை நாமும் அப்படியே பின்பற்றுகிறோம்.
சமீபத்தில் மும்பையிலிருந்து பிரசுரமாகும் 'ஐலேண்ட்' என்னும் மாதப்பத்திரிக்கை வெளியிட்டுள்ள கட்டுரை 'மனைவியரை மாற்றிக் கொள்ளும் பண்பாடு' மும்பை வட்டாரத்தில் சர்வ சாதாரணம் என்று குறிப்பிடுகிறது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 212
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 129 )

فَاِنْ كَذَّبُوْكَ فَقُلْ رَّبُّكُمْ ذُوْ رَحْمَةٍ وَّاسِعَةٍ وَلَا يُرَدُّ بَأْسُهٗ عَنِ الْقَوْمِ الْمُجْرِمِيْنَ

(நபியே!) இவர்கள் உம்மைப் பொய்ப்பிப்பார்களானால், "உங்களுடைய இறைவன் விசாலமான கருணையுடையவன்தான்; (எனினும்) குற்றம் செய்த கூட்டத்தாரைவிட்டு அவன் தண்டனை தடுக்கப்படமாட்டாது. (அல்குர்ஆன் : 6:147)

யூதர்களின் நிலை பற்றி ஆதாரபூர்வமாக இவ்வளவு தெரிவிக்கப்பட்ட பின்னரும் (நபியே!) அவர்கள் உம்மைப் பொய்யாக்கினார்களானால், அப்பொழுது அவர்களை நோக்கி,

"நீங்கள் செய்து கொண்டிருக்கும் அக்கிரமங்களுக்கெல்லாம் உங்களுடைய இரட்சகன் உடனுக்குடன் உங்களைத் தண்டிக்காமல் விட்டு வைக்கிறான். காரணம், அவன் விசாலமான கிருபையை உடையவன். அந்தக் கிருபையானது நல்லவன், கெட்டவன் எல்லோருக்கும் வியாபித்திருக்கிறது. இதனால் அவன் தனக்கு மாறு செய்பவர்களை உடனேயே தண்டித்து விடுவதில்லை.

யார் இந்த யூதர்கள் ?

யூதர்கள் தான் இவ்வுலகில் புத்திகூர்மை உடைய மக்கள்..

உலகில் மிக சொற்ப தொகையினர் இவர்களே..

ஆனால் அதே சமயம் உலகத்தை தனக்கு சாதகமாக வளைப்பவர்களும் இவர்களே...

உலக தீவிரவாதம் முஸ்லீம்களின் பெயரால் இவர்களால் நடத்தபடுகிறது... உலக ஊடகங்கள், உலக வங்கிகள், உலக அரசியல், உலக விஞ்ஞானம் அனைத்தும் இவர்கள் பிடியில்... இவர்களின் நாடு இஸ்ரேல்...

உலகில் எந்த மதத்தை சார்ந்தவர்களும் இன்னொரு மதத்திற்கு மாற முடியும்... யூத மதத்தை தவிர...இவர்களை தவிர யாரையும் யூத மதத்தில் சேர்ப்பதில்லை...

மத பிரசாரம் செய்வதில்லை...

உலக மொத்த ஆபாச இணையதளங்களை இயக்குபவனும் உருவாக்குபவனும் இந்த யூதர்களே...

ரஷ்யா என்ற பெரிய நாட்டை கம்யூனிஸம் என்ற போலி தத்துவத்தை விதைத்து ஒரு நாட்டையே அடிமைபடுத்தி வைத்த காரல் மார்க்ஸ் ஒரு தீவிர யூதர்...

உலக போதை கலாச்சாரத்தை விதைத்து இளைஞர் சக்தியை சிதைப்பதும் இவர்களே...

ஐரோப்பிய யூனியன், உலக வங்கி, அமெரிக்க ஏகாதிபத்தியம்,ஐநா சபை இவை அத்தனையும் யூதர்களின் பிடியில் ...

போதை பொருட்கள் இஸ்ரேல் நாட்டில் தடை...

ஆனால் உலகில் போதை பொருளை விற்பது இவர்களே...

இஸ்ரேல் நாட்டில் புகை பிடிப்பது தேச விரோத குற்றம்...

ஆனால்..உலகில் புகையிலை விற்பனை செய்யும் ஏஜெண்டுகள் இவர்களே...

இன்று அத்தனை ஆபாச இணையதளங்களும் இயக்குவது அவர்களே...

குழந்தைகளின் அறிவை மழுங்கடிக்கும் கார்ட்டூன் படங்கள் இஸ்ரேல் நாட்டில் தடை...

ஆனால் கார்ட்டூன் படங்களை உலகில் உலவ விடுவதும் இந்த யூதர்களே...

மறைமுகமாக உலகை ஆள்பவர்கள் இவர்கள்... நம் மூளை இவர்களிடம் நமக்கே தெரியாமல் அடகு வைத்துள்ளோம்... இந்த யூதர்கள் நேருக்கு நேர் மோதாத கோழைகள்...

ஆனால்..

சூழ்ச்சி செய்வதில் வல்லவர்கள்...

இதைபோல் சொல்லி கொண்டே போகலாம்...

மேற்கண்ட (6.147 ) வசனத்தில்...

ஆனால், இதே நிலை நீடித்து இருக்கும் என்று எண்ணாதீர்கள். அவன் நடவடிக்கை எடுத்துத் தண்டிக்க நாடிவிட்டால், அப்பொழுது குற்றம் செய்து கொண்டிருக்கும் கூட்டத்தினரை விட்டு அவனுடைய வேதனை எவராலும் தடுக்கப்பட மாட்டாது என்பதையும் உணர்ந்து நடந்துகொள்ளுங்கள் என நபியே! நீர் கூறும்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 213
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 130 )

سَيَقُوْلُ الَّذِيْنَ اَشْرَكُوْا لَوْ شَآءَ اللّٰهُ مَاۤ اَشْرَكْنَا وَلَاۤ اٰبَآؤُنَا وَلَا حَرَّمْنَا مِنْ شَىْءٍ‌ كَذٰلِكَ كَذَّبَ الَّذِيْنَ مِنْ قَبْلِهِمْ حَتّٰى ذَاقُوْا بَاْسَنَا‌ قُلْ هَلْ عِنْدَكُمْ مِّنْ عِلْمٍ فَتُخْرِجُوْهُ لَـنَا‌ اِنْ تَتَّبِعُوْنَ اِلَّا الظَّنَّ وَاِنْ اَنْـتُمْ اِلَّا تَخْرُصُوْنَ

(அல்லாஹ்வுக்கு இணை வைக்கும்) முஷ்ரிக்குகள் “அல்லாஹ் நாடியிருந்தால், நாங்களும் எங்கள் மூதாதையர்களும் இணை வைத்திருக்க மாட்டோம்; நாங்கள் எந்தப் பொருளையும் (எங்கள் விருப்பப்படி) ஹராமாக்கியிருக்கவும் மாட்டோம்” என்று கூறுவார்கள் -
இப்படித்தான் இவர்களுக்கு முன் இருந்தவர்களும் நமது தண்டனையை அனுபவிக்கும் வரை பொய்ப்பித்துக் கொண்டிருந்தார்கள்; (ஆகவே அவர்களை நோக்கி,) இதற்கு உங்களிடம் ஏதாவது ஆதாரம் உண்டா? இருந்தால் அதை எமக்கு வெளிப்படுத்துங்கள்; (உங்களுடைய வீணான) எண்ணங்களைத் தவிர வேறெதையும் நீங்கள் பின்பற்றவில்லை; நீங்கள் பொய் வாதமே புரிகின்றீர்கள்” என்று (நபியே!) நீர் கூறும். (குர்ஆன் : 6:148)
இணை வைத்து வணங்கிக் கொண்டிருக்கும் கூட்டத்தினருக்கு இணை வைப்பதின் கெடுதியும், அவர்களாக சிலவற்றை அனுமதிக்கப்பட்டிருப்பதாக ஆக்கிக் கொள்வதும், சிலவற்றைத் தடுத்துக் கொள்வதுமான அறிவற்ற செயல்களின் தீமையும் ஆதாரபூர்வமாக விளக்கப்பட்டன.
அவைகளுக்கு அவர்களால் எவ்வித பதிலும் கூறமுடியவில்லை. அதனால் இவ்வசனத்தில் கூறப்பட்ட பிரகாரம் சொல்லித் தப்பிக்க நினைக்கின்றனர்.
அல்லாஹ் நாடி இருந்தால் நாங்களும் எங்களுடைய மூதாதையரும் அல்லாஹ்வுக்கு இணை வைத்திருக்க மாட்டோம் என்று கூறுகின்றனர்.
மற்றொரு வசனத்தில், "அளவற்ற அருளாளன் இறைவன் நாடி இருந்தால் நாங்கள் அ(ந்த வான)வர்களை வழிபட்டிருக்கும் மாட்டோம்" என்று அவர்கள் கூறுகிறார்கள் ( குர்ஆன் 43: 20)
அல்லாஹ்வின் நாட்டம்
அல்லாஹ் நாடினானா ? நாடவில்லையா ? என்பதை அறியும் ஆற்றல் இவர்களுக்கு எங்கே இருக்கிறது? இவர்கள் தங்களுடைய சொந்த அறிவைக் கொண்டாவது, அல்லது பிறர் சொல்வதைக் கேட்டாவது தங்களுடைய இணை வைக்கும் கொள்கையை விட்டு அகன்று ஏகத்துவத்தின் பால் வந்திருக்கலாமல்லவா?
ஆனால், அவர்களுடைய பிடிவாதக் குணமும், முஸ்லிம்கள் மீது கொண்டுள்ள துவேஷமும் அவர்களுடைய அறிவை மழுங்க வைத்துவிட்டன. ஆகையால் அல்லாஹ்வின் மீது பழியைப் போட்டு விட்டு ஒதுங்க முயல்கின்றனர்.

இவ்வாறே அல்லாஹ் நாடியிருந்தால், எந்த ஒன்றையும் நாங்கள் விலக்கியிருக்க மாட்டோம் என்கின்றனர். இதுவும் மற்றவரை ஏமாற்றி விட்டு ஒதுங்குவதற்குத் தான். இதற்குரிய பதில்கள் எல்லாம் இவர்களுக்கு முன்னர் கூறப்பட்டு விட்டன.
இவர்களுக்கு முன்னரிருந்த கூட்டத்தினருக்கு அவர்கள் கால நபிமார்கள் எவ்வளவோ எடுத்துரைத்தும் அக்கூட்டத்தினர் அவற்றை ஏற்காமல் நபிமார்களைப் பொய்யாக்க முனைந்தனர். அதன் பலனாக பெரும் வேதனையை அவர்கள் அனுபவித்தனர்.
சிலை வணக்கமுறைக்கு சொல்லப்படும் காரணங்கள் ::
1. சிலை இறைவன் அல்ல!! சிலை இறைவனின் சின்னம் / அடையாளம் மட்டும் தான். (symbol of god)
2. சிலை, மனதை ஓர்மைப்படுத்துவதற்கு தான், அச்சிலையையே இறைவனாக நாங்கள் நம்பவில்லை.
3.நாங்கள் சிலையை வணங்கவில்லை, சிலை மூலமாக இறைவனை வணங்குகிறோம்.
4. எங்கள் தலைவர்களையும், முன்னோர்களையும் மதிப்பதற்காக அவர்களின் புகைப்படங்களையும், சிலையையும் வைத்து மதிப்பது போல, இறைவனை மதித்து வணங்குகிறோம்.
5. இறைவன் எங்கும் இருக்கிறார். அந்த சிலையிலும் இருக்கிறார். எனவே, சிலையை வணங்குவது தவறல்ல!!
6. சிறு உதாரணங்களை வைத்து தான் குழந்தைகளுக்கு விளக்க முடியும். ஆன்மீகத்தில் சாதாரண மக்களும், குழந்தைகள் போல தான். அதனாலேயே வணக்கத்திற்கு சிலையை வைத்திருக்கிறோம்.
7 ) நினைவில் கொள்க: : இறைவனுடைய உருவம், ஒரு அனுமானம் தான். யாரும் இறைவனை பார்த்ததில்லை. ஆக வணங்கப்படும் இறைவனுடைய உருவம் அவனுடையதல்ல!! அவையெல்லாம் மனிதனின் அனுமானங்கள் தான். மனிதன் அவனுடைய அனுபவங்களை வைத்து, அதாவது அவனுடைய அன்றாட வாழ்வில் பார்த்தவற்றை கேள்விப்பட்டவற்றை வைத்து இறைவனுக்கு உருவத்தை கொடுத்துள்ளான்.
நம்முடைய வேதனையை இவர்களும் அனுபவிக்கும் வரை இவ்வாறே பொய்யாக்கிக் கொண்டும் ஏதாவது சொல்லிக் கொண்டுமிருப்பர்.
ஆகவே நபியே! இவர்களை நோக்கி, "அல்லாஹ் நாடினான்; அல்லது நாடவில்லை என்பதற்குரிய அறிவு ஏதாவது உங்களிடம் இருந்தால், அதனை நமக்கு வெளிப்படுத்திக் காட்டுங்கள்" என்று கேளும். அவர்களிடம் அத்தகைய அறிவு இல்லவே இல்லை வெறுமனே எதையாவது எண்ணிக் கொண்டிருக்கின்றனர்.
மீண்டும் அவர்களை நோக்கி, "வீண் எண்ணத்தையேயல்லாமல் வேறு எதனையும் நீங்கள் பின்பற்றவில்லை; நீங்கள் வெறுமனே எதையெதையோ அனுமானிக்கிறீர்களே அல்லாமல் எந்த உறுதியான கொள்கையும் அறிவும் உங்களிடம் அறவே இல்லை" எனக் கூறிவிடும்.
அவர்கள் இப்படியே அல்லாஹ்வின் மீது ஏதாவது ஒரு பொய்யைக் கூறித் தப்பிக்கவே முயல்கின்றனர். அவர்கள் கூற்றுக்கு உண்மையான ஆதாரம் எதுவுமே இல்லை. உண்மையான, உறுதியான ஆதாரம் அல்லாஹ்விடமே இருக்கிறது

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 214
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 131 )

قُلْ فَلِلّٰهِ الْحُجَّةُ الْبَالِغَةُ فَلَوْ شَآءَ لَهَدٰٮكُمْ اَجْمَعِيْنَ

“நிரப்பமான (உறுதி வாய்ந்த ) அத்தாட்சி அல்லாஹ்விடமே உள்ளது; அவன் நாடியிருந்தால் உங்கள் யாவரையும் அவன் நல்வழியில் செலுத்தியிருப்பான்” என்று நீர் கூறும். (குர்ஆன் : 6:149)
அல்லாஹ்விற்கு மாறு செய்கிறவர்கள் தங்களுடைய மாறான செயல்களை ஆதரிக்கும் எந்த ஆதாரத்தையும் கொண்டு வரவே முடியாது. தவறு தவறாகவே தான் முடியும். உண்மை தான் என்றும் நிலைக்கும். ஏனெனில் உண்மைக்கு அல்லாஹ்வின் உதவியும் ஆதரவும் நிச்சயமாக இருக்கும்.

"அல்லாஹ் நாடியிருந்தால் அவர்களையும் நல்வழியில் ஒன்று சேர்த்திருப்பான்" ( குர்ஆன் 6:35)
" உம்முடைய இறைவன் நாடி இருந்தால் மக்களை ஒரே சமுதாயத்தவராக ஆக்கி இருப்பான்". ( குர்ஆன் 11 : 118)
ஆகவே, உறுதி வாய்ந்த முழுமையான ஆதாரம் அல்லாஹ்விற்கே உரியது. அவனுடைய ஏகத்துவத்தை மாற்றிவிட எத்தனை ஆதாரங்களை யார் கொண்டு வந்த போதிலும் அவையனைத்தும் அடிப்பட்டு விடும். முடிவில் அல்லாஹ் ஒருவன்; ஏகன் என்பதற்குரிய ஆதாரமே நிலைத்து நிற்கும்.
இதனை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும் பொழுது, அல்லாஹ்வுக்கு இணை வைத்து வணங்குவோர் கூறும் ஆதாரங்களும் நிலை பெறாது. முடிவில் அவர்களும் ஏகத்துவத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய கட்டாய நிலையே ஏற்படும். இப்படி எத்தனையோ சம்பவங்கள் உலகில் நடைபெற்றிருக்கின்றன. நடைபெற்றும் வருகின்றன.
உதாரணமாக ,
ஆஸ்திரேலியா. அங்கு பள்ளிவாசலிலிருந்து அன்றாடம் வெளி வந்த பாங்கோசையைக் கேட்டு, அதனைப் பெரும் தொந்தரவாக நினைத்துக் கொண்டு, நித்தம் நித்தம் மனம் குமைந்து, இறுதியில் ஒரு நாள் ஒரு கை பார்த்துவிடுவது என்கிற ஆத்திரத்துடனும் ஆவேசத்துடனும் சண்டை போடுகின்ற ஒரே எண்ணத்துடன் பள்ளிவாசலுக்குச் சென்றிருக்கின்றார் ஒரு ஆஸ்திரேலியர்.
அவரை அங்கு முஸ்லிம்கள் வரவேற்றிருக்கின்றார்கள். கண்ணியமாக உபசரித்திருக்கின்றார்கள். மென்மையாக இஸ்லாத்தின் அடிப்படைகளை எளிமையான மொழியில் விளக்கியிருக்கின்றார்கள்.
தொழுகைக்காக மக்களுக்கு அழைப்பு விடுக்கின்ற போது - பாங்கு சொல்லும் போது - சொல்லப்படுகின்ற வாசகங்களின் பொருளைச் சொல்லி விளக்கியிருக்கின்றார்கள்.
ஆத்திரத்துடன் வந்தவர் அமைதியடைந்து விட்டார். வன்மத்துடன் சண்டை போட வந்தவரின் மனம் இளகிவிட்டது. சத்தியத்தை நேரடியாகப் பார்த்து உணர்ந்ததும் இதயம் கனிந்து விட்டது. குர்ஆனிய வசனங்களைக் கேட்டதும் உள்ளம் உருகிவிட்டது. தொழுகையின் அழைப்புக்கான சொற்களே மனதுக்குள் வெளிச்சமாய்ப் பாய்ந்தன.
ஏக இறைவனுக்கு அடிபணிந்து வாழ்வதாக உரத்துச் சொன்னார். முஹம்மத் (ஸல்) அவர்களை வாழ்வின் வழிகாட்டியாக ஏற்றுக் கொள்வதாக பிரகடனம் செய்தார். முஸ்லிமாக மாறிவிட்டார்.
ஆம்! கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். அந்த ஆஸ்திரேலியருக்கு எத்துணை எளிதாக இறைவனின் வழிகாட்டுதல் கிடைத்து விட்டது! எத்துணை வேகமாக அவர் சத்தியம் தனக்கு முன்னால் வந்ததும் அதனை ஆர்வதோடு அரவணைத்துக் கொண்டார். தொலைந்து போன சொந்தக் குழந்தையைப் பாய்ந்து சென்று கைகளில் ஏந்திக் கொள்வதைப் போன்று இஸ்லாத்தை ஒரிரு மணி நேரங்களில் தனக்குரியதாய் அடையாளம் கொண்டு ஏற்றுக்கொண்டார்.
உலகம் முழுவதும் இலட்சக்கணக்கான பள்ளிவாசல்களில் பாங்கு சொல்லப்படுகின்றது. நாள்தோறும் இலட்சக்கணக்கான முறை பாங்கோசை உலகெங்கும் எதிரொலித்துக் கொண்டே இருக்கின்றது. ஆனால் எல்லோருக்குமே அந்த ஆஸ்திரேலியரைப் போன்று நேர்வழி கிடைத்துவிடுவதில்லை.
உண்மை யாதெனில் நேர்வழி கிடைப்பது இறைவனின் கையில்தான் இருக்கின்றது. அவன் யாரை நாடுகின்றானோ அவருக்குத்தான் சத்தியம் புலப்படுகின்றது.
இது தான் அல்லாஹ்வின் நாட்டம்.அவன் நாடினால் உங்கள் அனைவரையும் நேர்வழியில் நடத்தி இருப்பான். அவனுக்கு முரணாக நடக்கும் உங்களின் நோக்கம் என்றுமே ஈடேறுவதில்லை 'என்னும் கருத்தைத் தெரிவிக்குமாறு மேற்கண்ட குர்ஆன் 6:149 வசனத்தின் மூலம் அறிவிக்கப்படுகிறது.

## *அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 215*
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 132 )

قُلْ هَلُمَّ شُهَدَآءَكُمُ الَّذِيْنَ يَشْهَدُوْنَ اَنَّ اللّٰهَ حَرَّمَ هٰذَا ۚ فَاِنْ شَهِدُوْا فَلَا تَشْهَدْ مَعَهُمْ وَلَا تَتَّبِعْ اَهْوَآءَ الَّذِيْنَ كَذَّبُوْا بِاٰيٰتِنَا وَالَّذِيْنَ لَا يُؤْمِنُوْنَ بِالْاٰخِرَةِ وَهُمْ بِرَبِّهِمْ يَعْدِلُوْنَ
"நிச்சயமாக அல்லாஹ் இதனை தடுத்திருக்கிறான் என்று சாட்சி கூறுவார்களே அவர்களாகிய, உங்களது சாட்சிக்காரர்களைக் கொண்டு வாருங்கள்" என்று (நபியே) நீர் கூறுவீராக, ஆகவே, அவர்கள் சாட்சியங் கூறுவார்களாயின், அவர்களுடன் நீரும் சாட்சி கூற வேண்டாம்.
இன்னும், நமது ஆயத்துகளைப் பொய்ப்பித்தார்களே அவர்களுடையவும், அவர்கள் தங்களுடைய றப்புக்கு இணை வைக்கிறவர்களாயிருக்கிற நிலையில், மறுமையைக் கொண்டு ஈமான் கொள்ள மாட்டார்களே அவர்களுடையவும் இச்சைகளை நீர் பின்பற்ற வேண்டாம்.“ (குர்ஆன் : 6:150)
( தப்ஸீருல் ஹமீத்தின் விளக்கம் )
அல்லாஹுத்தஆலா நல்லவைகளை ஹலாலாக்கி, அறியாமைக் காலத்ததில் ஜனங்கள் தங்கள் மனம்போன போக்குப்படித் தாங்களாகவே ஹராமாக்கிக் கொண்டவைகளை ரத்துச் செய்திருக்கிறான். ஏனெனில், மார்க்கமானது வஹியை அடிப்படையாகக் கொண்டு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது, மனோ இச்சையின்படி மார்க்கம் ஏற்படுத்தப்படவில்லை.
மேலும், கள், சவம், இரத்தம், பன்றி போன்றவைகளான கெட்ட பொருள்களை ஹராமாக்கி இருக்கிறான். இவற்றைப் புசிப்பது ஹராமாக இருப்பதுபோல இவற்றை விற்பனை செய்வதும் ஹராமாகும்.
தவிர, அல்லாஹுத்தஆலா ஒரு பொருளை ஹராமாக்கி வைப்பது அப்பொருளில் தீங்கு இருப்பதற்காகவேயாகும். அல்லது மனிதர்களைச் சோதித்து, தனது கட்டளைக்குக் கீழ்ப்படிபவர் எவர், கீழப்படியாதவர் எவர் என்று வெளிப்படையாக அறிவதற்காகவேயாகும்.
அல்லது நாம் செய்த குற்றத்திற்குத் தண்டனை விதிக்கும் முறையிலாயிருக்கும்.
பாஷாணம் போன்றவைகள் மனித உடலுக்கு தீங்கு விளைவிப்பனவாக இருக்கின்றன. கொடிய மிருகங்களின் மாமிசம், விஷ ஜந்துக்களின் மாமிசம் போன்றவைகள் உடலுக்கு தீங்கு விளைவிக்காவிட்டாலும், ஒழுக்கத்தையும் குணத்தையும் மாற்றக் கூடியனவாயிருப்பதால், அவற்றால் ஆத்மார்த்த தீங்குகள் இருக்கின்றன.
இவ்விதமான தீங்குகள் நேராதபடி நம்மைக் காப்பாற்றுவதற்காக இறைவன் இவற்றை அருந்துவதைத் தடுத்திருக்கிறான். இதனைக் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "சிசுவில் பால் குடிப்பது பிறவிக் குணத்தையும் கூட மாற்றிவிடும்" என்று கூறி இருக்கிறார்கள்.
எனவேதான், ஷெய்கு அபூ முஹம்மதினில் ஜூவைனிய்யி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஒரு சமயம் தமது வீட்டிற்குச் சென்ற போது தமது புதல்வருக்கு அவரைப் பெற்ற தாயார் முலைப்பால் கொடுக்காமல், அந்நியப் பெண் ஒருவர் முலைப்பால் கொடுத்துக் கொண்டிருந்ததைப் பார்த்து, அவரது வாயில் விரலை விட்டு, அப்பாலை வாந்தி செய்யும்படி செய்தார்கள்.
இக்குழந்தைதான் பிற்காலத்தில் இமாம் அபுல் மஆலி ரஹ்மத்துல்லாஹி அலைஹி என்ற பெயரால் பிரசித்தி பெற்று விளங்கிற்று. இவர் அருந்திய பாலை வாந்தி செய்துவிட்டார். ஆயினும், இவர் பெரியவரான பின் தர்க்க வாதங்களில் எப்பொழுதேனும் தோல்வி அடைந்தால் இது அந்தப் பாலில் எஞ்சியுள்ளதன் பயன் என்று கூறுவது வழக்கம்.
இதிலிருந்து, ஒரு பெண், ஒரு குழந்தைக்கு முலை யூட்டினால், அந்தப் பெண்ணின் தன்மை அக்குழந்தையில் காணப்படும் என்று தெரியவருகிறது.
இதுபோலவே, மாமிசங்களுக்கும் குணத்தில் மாறுதல் ஏற்படுத்தும் தன்மை இருந்து வருகிறது. எனவேதான் "மாட்டுப் பாலையும் அதன் நெய்யையும் உபயோகியுங்கள். அதன் மாமிசத்தைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்.

ஏனெனில், அதன் பாலும்,நெய்யும் மருந்தாகும். அதன் மாமிசம் வியாதியாகும்" என்று ஹதீஸில் சொல்லப்பட்டிருக்கிறது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 216
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 133 )

قُلْ تَعَالَوْا اَتْلُ مَا حَرَّمَ رَبُّكُمْ عَلَيْكُمْ اَلَّا تُشْرِكُوْا بِهٖ شَيْـًٔـــا وَّبِالْوَالِدَيْنِ اِحْسَانًا ۚ وَلَا تَقْتُلُوْۤا اَوْلَادَكُمْ مِّنْ اِمْلَاقٍ ؕ نَحْنُ نَرْزُقُكُمْ وَاِيَّاهُمْ ۚ وَلَا تَقْرَبُوا الْفَوَاحِشَ مَا ظَهَرَ مِنْهَا وَمَا بَطَنَ ۚ وَلَا تَقْتُلُوا النَّفْسَ الَّتِىْ حَرَّمَ اللّٰهُ اِلَّا بِالْحَـقِّ ؕ ذٰ لِكُمْ وَصّٰٮكُمْ بِهٖ لَعَلَّكُمْ تَعْقِلُوْنَ

“வாருங்கள்! உங்கள் இறைவன் உங்கள் மீது விலக்கியிருப்பவற்றையும் (ஏவியிருப்பவற்றையும்) நான் ஓதிக் காண்பிக்கிறேன்; எப்பொருளையும் அவனுக்கு இணையாக வைக்காதீர்கள்; பெற்றோர்களுக்கு நன்மை செய்யுங்கள்; வறுமைக்குப் பயந்து உங்கள் குழந்தைகளைக் கொல்லாதீர்கள் - ஏனெனில் உங்களுக்கும், அவர்களுக்கும் நாமே உணவளிக்கின்றோம்; வெளிப்படையான இரகசியமான மானக்கேடான காரியங்களை நீங்கள் நெருங்காதீர்கள்; அல்லாஹ் தடுத்துள்ள எந்த ஓர் ஆத்மாவையும் நியாயமானதற்கு அல்லாமல் - கொலை செய்யாதீர்கள் - இவற்றை நீங்கள் உணர்ந்து கொள்வதற்காக (இறைவன்) உங்களுக்கு (இவ்வாறு) போதிக்கின்றான். (குர்ஆன் : 6:151)
குர்ஆன் 6:151 இதற்கு அடுத்து 6:152 , 6.153 ஆக மொத்தம் மூன்று வசனங்களில் இறைவன் பத்துக் கட்டளைகள் குறிப்பிட்டுக் கூறியுள்ளான். இவற்றை எந்த வேதமும் மறுக்கவில்லை இவை மனித வர்க்கம் அனைத்திற்கும் விதிக்கப்பட்டுள்ள விலக்கல்களாகும். இவற்றை எச்சமூகத்தாரும் மறுப்பதற்கில்லை. இவற்றை எவர் கடைப்பிடித்து ஒழுகுகின்றாரோ அவர் சுவர்க்கம் புகுவார். எவர் இவற்றைப் புறக்கணித்து விடுகின்றாரோ அவர் நரகம் புதவார்
கட்டளை 1) :- அல்லாஹுத்தஆலாவிற்கு எப்பொருளையும் இணைவைக்காமலிருத்தல். இனைவைப்பதுதான் ஹராமான காரியங்கள் அனைத்திற்கும் தலையாயுள்ளது. இதனைச் செய்பவர் வேறு எந்த நற்செயல்களைச் செய்த போதினும், அல்லாஹுத்தஆலா அங்கீகரிக்கமாட்டான். இது இரண்டு வகை பகிரங்கமான ஷிர்க்கு விக்கிரகங்களை ஆராதனை செய்தல், வணங்கள், பூஜித்தல் ஆகியவை இவ்வகையைச் சேர்ந்தவை. 2. மறைவான ஷிர்க்கு அல்லாஹுத்தஆலாவுடன் மற்றவரும் கூட்டாக இருப்பதாகக் கருதுதல் இவ்வகையைச் சேர்ந்ததாகும்.
கட்டளை 2) :- தாய் தந்தை ஆகிய இருவருக்கும் நன்றி செய்தல். அதாவது அவர்களை புண்படுத்தக்கூடாது அல்லாஹுத் தஆலாதான் எல்லாவற்றையும் உண்டு பண்ணுபவனாக இருக்கிறான். ஆயினும், பெற்றோர்கள் பிள்ளைகள் உற்பத்திக்குப் புறத்திலுள்ள முக்கிய காரணமானவர்களாக இருக்கிறார்கள். ஆகவே, இவர்களை புண்படுத்துவது ஷிர்க்குக்கு அடுத்தபடியாகவுள்ள பெரும்பாவமாகும்.
ஒலிமார்களில் ஒருவர் பனீ இஸ்ராயீல்கள் வசித்து வந்த தீஹ் என்ற பிரதேசத்தில் வழி தெரியாமல் அலைந்து கொண்டிருந்தார். அப்பொழுது ஒருவர் அவருக்கு வழி காண்பித்துக் கொண்டு முன் சென்றார். இவர் அவரைக் குறித்து ஆச்சரியம் அடைந்ததுடன், அவர் கிலுரு அலைஹிஸ்ஸலாம் அவர்களாக இருக்க வேண்டுமெனத் தீர்மானித்துக் கொண்டு,
அவரை நோக்கி "தாங்கள் யார் ? என்பதை எனக்கு அறிவிக்க வேண்டும்" என அல்லாஹ் மீது ஆணையிட்டுக் கேட்டார்.
அதற்கவர் "நான் உனது சகோதரனாகிய கிலுரு'' என்று கூறினார். அப்பொழுது அந்த ஒலி அவரை நோக்கி ''நான் செய்த எக்காரியத்தின் பொருட்டால் தங்களைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றேன்" என்று வினவியதற்கு, அவர் "உமது தாயாருக்கு நீர் நன்றி செய்ததால் என்னைக் காணும் பாக்கியம் பெற்றீர்" என்று கூறினார்.

கிலுரு (அலை) அவர்களைப் பற்றி பனீ இஸ்ராயீல்கள் நபி மூஸா (அலை) அவர்களுக்கு இறைனின் களா கதீர் ரகசியத்தை அறிவித்து கொடுத்தவர்கள் என்பதை நன்கு விளங்கியிருந்தார்கள்
கட்டளை 3):- தரித்திரம் வந்துவிடும் என்று அஞ்சிப் பெண் மக்களைச் சிசுவிலேயே கொன்றுவிடல். உலக அபிவிருத்திக்கு மக்கட்பேறு முக்கியமானதாகவும், அஸ்திவாரமாகவுமிருக்கிறது. பெண் குழந்தைகளைக் கொன்று விடுவது அதனைத் தடை செய்வதாகும்.
தவிரவும், அனைவருக்கும் உணவளித்துப் போஷித்துக் காக்கும் பொறுப்பை அல்லாஹுத்தஆலா ஏற்றுக் கொண்டிருக்கும் போது, தரித்திரத்திற்கு அஞ்சி கொலை செய்வது அவன் மீது தவக்குல் வைக்கவில்லை என்பதை அறிவிப்பதுடன் அல்லாஹுத்தஆலா ரஜ்ஜாக் என்பதை மறுப்பதாகவும் இருக்கிறது.
கட்டளை 4) :-விபச்சாரம் செய்தல்; இதனை இந்த ஆயத்தில் அவ்ஃபவாஹிஷ் அதாவது "மானக்கேடானவைகள்" என்று பன்மையாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால், விபச்சாரம் என்ற வார்த்தையில் கூடாச் செய்கையை மட்டும் குறிப்பிடாமல் அதன் எல்லா
வகைகளையும் குறிப்பிட்டிருப்பதாகக் கருதல் வேண்டும்.
எனவேதான் இதனை விபரிக்கும் முறையில் பகிரங்க விபச்சாரம் என்றும்.மறைவான விபச்சாரம் என்றும் இரண்டு வகையாகப் பிரித்துச்
சொல்லப்பட்டிருக்கிறது.
சாதாரணமாக உலகில் சில அறிவிலிகள் செய்யும் விபச்சாரத்தைப் பகிரங்க விபச்சாரம் என்றும், உயர் குலத்தில் பிறந்தவர்கள் வைப்பாட்டிகளாக பெண்களை வைத்துக் கொண்டிருப்பதை
மறைவான விபச்சாரம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. கெட்ட நோக்குடன் பார்ப்பதும் கூட பார்வை சம்பந்தமான விபச்சாரமாகும் .
"ஷைத்தான் ஆடவனிடத்தில் மூன்று இடங்களில் இருக்கிறான்.
அதாவது அவனது இரு கண்களிலும், அவனது மனதிலும், அவனது ஆண் குறியிலும் இருக்கிறான்.
இன்னும் ஷைத்தான் பெண்ணிடத்தில் மூன்று இடங்களில் அதாவது அவளது இரு கண்களிலும், அவளது மனதிலும், அவளது பெண் குறியிலும் இருக்கிறான்" என்று இப்னு அப்பாஸ் ரலியல்லாஹுதஆலா அன்ஹுமா அவர்கள் கூறியதாக ரிவாயத்துச் செய்யப்பட்டிருக்கிறது.
கட்டளை 5 :- நியாயமான காரணமில்லாமல் மனிதரைக் கொலை செய்தல். இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவியர் அல்லது முஸ்லிம்களுடன் உடன்படிக்கை செய்து கொண்டிருப்பவர் ஆகியவர்களைக் கொலை செய்வது ஹராமாகும். முஸ்லிம்களுக்கு விரோதிகளாகவுள்ள ஹர்பிகளை எதிர்த்து யுத்தம் செய்து அவர்களை வெட்டுவது ஹராமல்ல.
ஈமான் கொண்ட ஒருவர் காஃபிராகி விடுதல், திருமணம் செய்தவர் விபச்சாரம் செய்தல், குற்றமற்றவர்களைக் கொலை செய்தல் இம்மூவகைக் குற்றங்களுக்கும் ஷரீஅத்தில் மரண தண்டனை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால், இஸ்லாமிய ஷரீஅத்தின்படி நியமிக்கப்பட்ட நீதிமன்றத்தில் இக்குற்றவாளிகள் விசாரிக்கப்பட்டு மரண தண்டனை விதிக்கப்பட்டால், அத்தண்டனையை நிறைவேற்ற கோர்ட்டு உத்தரவுப்படி அவர்களைக் கொல்லலாம். ஆனால். இவ்விதமான குற்றங்களைச் செய்பவரைத் தனிப்பட்ட மனிதர்கள் கோர்ட்டு உத்தரவில்லாமல் கொன்று விடலாகாது.
குறிப்பு:- இன்னும் மீதமுள்ள 5 கட்டளைகள் அடுத்த வசனங்களில் சொல்லப்படும்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 217
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 134 )

وَلَا تَقْرَبُوْا مَالَ الْيَتِيْمِ اِلَّا بِالَّتِىْ هِىَ اَحْسَنُ حَتّٰى يَبْلُغَ اَشُدَّهٗ‌ وَاَوْفُوا الْكَيْلَ وَالْمِيْزَانَ بِالْقِسْطِ‌ لَا نُـكَلِّفُ نَفْسًا اِلَّا وُسْعَهَا‌ وَاِذَا قُلْتُمْ فَاعْدِلُوْا وَلَوْ كَانَ ذَا قُرْبٰى‌ وَبِعَهْدِ اللّٰهِ اَوْفُوْا‌ ذٰ لِكُمْ وَصّٰٮكُمْ بِهٖ لَعَلَّكُمْ تَذَكَّرُوْنَ ۙ

அநாதையின் பொருளின் பக்கம் அவன் பிராயத்தை அடையும் வரையில் அழகான முறையிலன்றி நீங்கள் நெருங்காதீர்கள்; அளவையும், நிறுவையையும் நீதத்தைக் கொண்டு நிரப்பமாக்குங்கள்; நாம் எந்த ஆத்மாவையும் அதன் சக்திக்கு மீறி கஷ்டப்படுத்துவதில்லை; நீங்கள் பேசும்பொழுது அதனால் பாதிக்கப்படுபவர் நெருங்கிய உறவினராக இருந்த போதிலும் - நியாயமே பேசுங்கள்; அல்லாஹ்வுக்கு (நீங்கள் கொடுத்த) உறுதி மொழியை நிறைவேற்றுங்கள். நீங்கள் நினைவு (கூர்ந்து நடந்து கொள்ளும் பொருட்டே அல்லாஹ் உங்களுக்கு (இவ்வாறு) போதிக்கிறான். (குர்ஆன் : 6:152)

وَاَنَّ هٰذَا صِرَاطِىْ مُسْتَقِيْمًا فَاتَّبِعُوْهُ‌ وَلَا تَتَّبِعُوا السُّبُلَ فَتَفَرَّقَ بِكُمْ عَنْ سَبِيْلِهٖ‌ ذٰ لِكُمْ وَصّٰٮكُمْ بِهٖ لَعَلَّكُمْ تَتَّقُوْنَ

நிச்சயமாக இதுவே என்னுடைய நேரான வழியாகும்; ஆகவே இதனையே பின்பற்றுங்கள் - இதர வழிகளை நீங்கள் பின்பற்ற வேண்டாம் - அவை உங்களை அவனுடைய வழியைவிட்டுப் பிரித்துவிடும்; நீங்கள் (நேர் வழியைப் பின்பற்றி) பயபக்தியுடையவர்களாக இருப்பதற்கு இவ்வாறு அவன் உங்களுக்கு போதிக்கிறான். (குர்ஆன் : 6:153)

மேற்கண்ட 2 வசனங்களில் பத்துக்கட்டளில் மீதமுள்ள 5 கட்டளைகள் கூறப்பட்டிருக்கின்றன. அவைகள் வருமாறு.

கட்டளை 6 :- அனாதைகள் நல்ல அறிவுள்ளவர்களாக ஆகும் வரை அவர்களது சொத்தை நிர்வாகம் செய்து, அபிவிருத்தி செய்வதற்காகவே தவிர, வேறு கெட்ட எண்ணத்தினால் அச்சொத்தில் நுழையலாகாது. அனாதைகள் 25 வயதை அடைந்து, சித்த சுவாதீனமுள்ளவர்களாக இருந்தால், அவர்களிடம் அவர்களது சொத்துக்களை ஒப்புவித்து விடவேண்டும் என்று இமாம் அபூஹனீஃபா ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறி இருக்கிறார்கள்.

அவர்கள் சரியான பருவத்தை அடையும் காலம் 18 வயது முதல் 30 வயது வரை என்று ஜௌஹரீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி கூறி இருக்கிறார்கள்.

கட்டளை 7 :- நிறுவையிலும் அளவையிலும் நீதியாக இருக்க வேண்டும் வாங்கும் போதும் நீதியாய் வாங்க வேண்டும்.கொடுக்கும் போதும் நீதியாய்க் கொடுக்க வேண்டும். ஆகவே, இருவிதத்தில் அளவையிலும், நிறுவையிலும் நீதி செலுத்த வேண்டியதிருப்பதை இந்த ஆயத்தில் 'ஔஃபூ' என்றும் 'கிஸ்த்' என்றும் மடக்கி மடக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த வசனத்தில் "ஆத்மாவையும் அதனுடைய சக்திக்கு உட்பட்டதைத் தவிர நாம் கட்டளையிடமாட்டோம்" என்று கூறப்பட்டிருக்கும் வாக்கியத்தின் மூலம் மனிதன் நீதியாக நடந்து கொள்ள முயல வேண்டும். ஆனால், அவனுக்குத் தெரியாமல் தவறு நிகழ்ந்து விட்டால், அதற்காக இறைவன் குற்றம் பிடிக்கமாட்டான் என்ற விபரம் எச்சரிக்கை செய்யப் பட்டிருக்கிறது. வேண்டுமென்றே குறைவு செய்வதுதான் மன்னிக்கத்தகாததாக இருக்கிறது.

ஹளரத் நூஹு அலைஹிஸ்ஸலாம் அவர்களது காலத்தில்தான் அளவையும் நிறுவையும் ஏற்படுத்தப்பட்டன. அதற்கு முன் இவை இரண்டும் கிடையாது.

ஐந்து காரியங்களினால் ஐந்து காரியங்கள் உண்டாகின்றன. ஒன்றாவது உடன்படிக்கையை முறித்தால். முறித்தவர் மீது பகையரைச் சாட்டப்படும். இரண்டாவது, வேதத்தின்படி தீர்ப்பு வழங்கப்படாவிடில் பஞ்சம் அதிகரிக்கும். மூன்றாவது விபச்சாரம் அதிகப்பட்டால் (வஃபா என்னும்) வாந்திபேதியும், மரணமும் அதிகப்படும். நான்காவது அளவையில் குறைவு செய்தால் பஞ்சம் உண்டாகும். ஐந்தாவது ஜக்காத்தைக் கொடுக்காமலிருந்தால், மழைக் குறைவேற்படும் என்று ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

நிறுவையில் நஷ்டப்படுத்துவது கியாமத்தில் முகத்தைக் கருப்பாக்கும் என்று ஃபுலைலுப்னு இயால் ரஹ்மத் துல்லாஹி அலைஹி அவர்கள் கூறி இருக்கிறார்கள்.
மாலிக்குப்னு தீனார் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் சொல்வதாவது: எனது அருகில் இருந்தவனுக்கு மரணத்தின் சமயம் வந்தது. இதனை அறிந்து அவரைப் பார்ப்பதற்காக நான் அவரிடம் சென்றேன். அவர் என்னைத் தன்னருகில் அழைத்து இருக்கச் செய்து, தனக்கு எதிரில் இரு அக்கினி மலைகள் இருப்பதாகவும், அவற்றில் ஏறும்படி தன்னை ஜனங்கள் நிர்ப்பந்திப்பதாகவும் கூறினார்.
எனவே, நான் அவரது வீட்டினரை அழைத்து, அவரது வாழ்க்கை முறையைக் குறித்துக் கேட்டேன். அப்பொழுது அவரிடம் 2 அளவுகள் இருக்கின்றன. பிறரிடமிருந்து அவர் வாங்கும் போது பெரிய படியில் அளந்து வாங்குவதும். பிறருக்குக் கொடுக்கும் போது சின்னப் படியில் கொடுப்பதும் வழக்கம் என்று கூறினார்கள்.
நான் அந்த இரு படிகளையும் கொண்டு வரச் செய்து உடைத்து நொறுக்கிவிட்டேன். அப்புறம் அந்நோயாளியை நோக்கி, நான் விசாரித்ததில் அவர் தமக்கு அதிகமான வருத்தம் இருப்பதைத் தவிர குறையவில்லை என்று கூறிப் பின்னர், இறந்து போனார்.
மாலிக்குப்னு தீனார் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் பின்வருமாறு கூறி இருக்கிறார்கள்.
ஹளரத் "ஃபுலைல் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தமது புதல்வர் தராசைக் கழுவிக் கொண்டிருப்பதைப் பார்த்து, 'ஏன் இத்தராசைக கழுவிக் கொண்டிருக்கிறீர்?' என்று வினவினார்.
அதற்கவர் 'தராசுத் தட்டில் களிம்பிருக்கிறது. அதனுடன் நிறுத்தால் ஒருவேளை யாரையும் நஷ்டப்படுத்திவிட நேர்ந்தாலும் நேரிடலாம் என எண்ணி, அதனைக் கழுவிச் சுத்தப்படுத்துகிறேன்' என்று கூறினார்.
அதற்கவர் தமது புதல்வரைப் பார்த்து "மகனே! உன்னுடைய இச்செய்கை என்னைப் பொறுத்தவரையில் 2 ஹஜ்ஜையும் 20 உம்ராவையும் பார்க்கினும் மிகச் சிறந்த காரியம்" என்று கூறினார்.
ஒரு மனிதர் நிறுத்துக் கொடுக்கும் வேலை அதிகமுள்ள வியாபாரம் செய்து கொண்டிருந்தார். அவருக்கு நோய் உண்டாகி மரணமடையும் வேளையும் வந்தது. ஆதலால், அவருக்குக் கலிமாச் சொல்லிக் கொடுக்கப்பட்டது, அதற்கவர் "நான் நாவால் கூற இயலாது. தராசின் முள் எனது நாவைக் குத்திக் கொண்டிருக்கிறது" என்று கூறினார்.
அப்பொழுது அவரை நோக்கி, ஒருவேளை நீர் நன்றாக நிறுத்துக் கொடுக்கமாட்டீரோ என்று கேட்டதற்கு இருக்கலாம். ஒருவேளை புளுதி முதலியவைகள் தராசுத்தட்டில் படிந்து, அதனால் நிறுவையில் வித்தியாசம் ஏற்பட்டிருக்கக்கூடும்" என்று கூறினார். ஒலிமார்களில் ஒருவர் இந்த ஹிக்காயத்தைக் கூறி இருக்கிறார்கள்.
கட்டளை 8 :- பேசினால் நீதியாகப் பேசவேண்டும். அதாவது உறவினர் என்றும், பிறர் என்றும் தயவு தாட்சண்யம் பாராமல் சாட்சி சொல்லல், நீதி செலுத்துதல், அதிகாரம் செய்தல் முதலியவற்றில் நடுநிலையாகக் கூறவேண்டும்.
பேசினால் அல்லாஹுத்தஆலாவிற்காகவே பேசவேண்டும்; அவனைப் பற்றியே பேசவேண்டும்; அவனைக் கொண்டே பேச வேண்டும்; அவனையே திக்ரு செய்ய வேண்டும்.
கட்டளை 9 :- அல்லாஹுத்தஆலாவிற்கு நாம் செய்து கொடுத்த உறுதிமொழி, அல்லாஹுத்தஆலா நமக்கு ஏவிய கட்டளைகள் ஆகியவற்றை நிறைவேற்ற வேண்டும், அல்லாஹுத் தஆலாவைத் தவிர வேறு யாரையும் வணங்காமலும், நேசிக்காமலும் பார்க்காமலும் இருப்பதுதான் உறுதிமொழியை நிறைவேற்றுவதன் அந்தரங்கம்.
வசனம் 6:153 வசனத்தில் 'நிச்சயமாக இது' என்ற வாக்கியம் இந்த சூரத்தில் கூறப்பட்டுள்ள தவ்ஹீது, நுபுவ்வத்து. முதலிய விபரங்களைக் குறிக்கிறது. பாதையானது குறித்த இடத்திற் சேர்த்து வைப்பது போல் இஸ்லாமிய ஷரீஅத்து சுவர்க்கத்தில், நற்பயனை அடைவதன்பால் மனிதர்களைச் சேர்த்து வைப்பதால் இதற்குப் பாதை என்ற பெயர் வந்தது.

கட்டளை 10 :- அல்லாஹுத்தஆலாவுடைய நேரான பாதையைப் பின்பற்ற வேண்டும். ஏனைய பாதைகளைப் பின்பற்றக் கூடாது. அவ்வாறு பின்பற்றினால், அல்லாஹுத்தஆலாவுடைய பாதையை விட்டு ஜனங்களை மாற்றிவிடும்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இந்த ஆயத்தை ஓதிவிட்டு நேரான ஒரு கோட்டைக் கிழித்துக் காட்டி, "இது அல்லாஹுதத் தஆலாவின் பாதை என்று கூறினார்கள்.
அப்புறம் அக்கோட்டிற்கு வலப் புறமும் இடப் புறமும் பல கோடுகளைக் கிழித்துக் காட்டி, இவை வேறு பல பாதைகள். இவற்றுள் ஷைத்தானுடைய பாதையும் இருக்கிறது. அதன் பால் ஷைத்தான்.அழைக்கிறான்" என்று கூறினார்கள்.
ஷரீஅத்துதான் நேரான பாதை. இது வாளைப் பார்க்கினும் அதிகக் கூர்மையானது. உரோமத்தைப் பார்க்கினும் அதிக நுட்பமானது. எனவேதான் தொழுகையின் ஒவ்வொரு ரக்கஅத்திலும் நேரான பாதையில் ஸ்திரமாக வைக்கும்படி நாம் அவனைப் பிரார்த்திக்கிறோம். இவ்வுலகில் இப்பாதையை விட்டு விலகியவர் மறுமையின் பாதையை விட்டு விலகியவராகிறார்.
இப்பாதையை விட்டுத் தவறி விடுபவர்கள் ஏராளமானவர்கள். இவர்களில் பெரும்பாலர் பெண்கள் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறி இருக்கிறார்கள்.
இக்காலத்தில் ஆடவர்களிலும் பெரும்பாலானவர்கள் சரீர இச்சைகளைப் பின்பற்றுவதிலும் வழக்கத்தை விடக்கூடாது என்று கூறி அதனைக் கடைப்பிடிப்பதிலும் பெண்களைப் போலவே இருக்கிறார்கள். இதனை விட்டு நேரான பாதையில் இருப்பவர் அபூர்வமாகவே காணப்படுகிறார்கள்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 218
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 135 )

ثُمَّ اٰتَيْنَا مُوْسَى الْـكِتٰبَ تَمَامًا عَلَى الَّذِىْۤ اَحْسَنَ وَتَفْصِيْلاً لِّـكُلِّ شَىْءٍ وَّهُدًى وَرَحْمَةً لَّعَلَّهُمْ بِلِقَآءِ رَبِّهِمْ يُؤْمِنُوْنَ
அடுத்து மூஸாவுக்கு அவர் செய்த நன்மைக்காக முழுமையானதொரு ஒரு வேதத்தை நாம் வழங்கினோம். (அவ் வேதம்) எல்லாவற்றுக்கும் விளக்கமாகவும், வழிகாட்டியாகவும், அருளாகவும் அமைந்தது. அவர்கள் தம் இறைவனின் சந்திப்பை உறுதியாக நம்புவதற்காகவே (இவ்வாறு வேதத்தை அருளினோம்) (குர்ஆன் : 6:154)
இதற்கு முந்தைய ( 6:153 ) வசனத்தில் அல்லாஹ் குர்ஆனைப் பற்றி "இதுவே எனது நேரான வழியாகும். இதையே நீங்கள் பின்பற்றி நடப்பீர்களாக என்று குறிப்பிட்டான்.
அதைத் தொடர்ந்து இங்கு இறைத் தூதர் மூசா (அலை) அவர்களுக்குத் தான் அருளிய தவ்ராத் வேதத்தையும் அந்தத் தூதர் மூசா (அலை) அவர்களையும் அல்லாஹ் புகழ்ந்துரைக்கின்றான்.
முதலில் இறை வேதங்களைப் பற்றி சிறிது தெரிந்துகொள்வோம்.
பிரதான இறைவேதங்கள் என்று வரும்போது முக்கியமான நான்கு வேதங்களை குறிப்பிடலாம். அவை வருமாறு:-
சபூர்:இது யூனானி எனும் கிரேக்க மொழியில் தாவூத் (அலை) அவர்களுக்கு இறைவன் வழங்கினான்.
தவ்ராத்:இது அப்ரானி எனும் ஹிப்ரு மொழியில் மூஸா (அலை) அவர்களுக்கு இறைவன் அருளினான். மேலும் அவருக்கு பத்து ஏடுகளையும் இறைவன் அளித்தான்.
இன்ஜீல்:இது ஈஸா (அலை) அவர்களுக்கு சுர்யானி மொழியில் இறைவன் இறக்கிவைத்தான்.
திருக்குர்ஆன்:இது அரபி மொழியில் முஹம்மது (ஸல்) அவர் களுக்கு இறைவன் அருளினான். இந்த வேதம் படிப்படியாக 23 ஆண்டுகள் அருளப்பட்டது.
இதைத்தவிர முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்களுக்கு பத்து ஏடுகளையும், ஷீது (அலை) அவர்களுக்கு ஐம்பது ஏடு களையும், இத்ரீஸ் (அலை) அவர்களுக்கு முப்பது ஏடுகளையும், இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு பத்து ஏடுகளையும் இறைவன் அருளினான்.

மேற்கூறப்பட்ட 4 இறைவேதங்களும், 110 ஏடுகளும் (4 + 110 = 114 ) இறைவனின் திருவசனங்கள் என்று நம்பிக்கை கொள்ள வேண்டும். இந்த 110 ஏடுகளும், 4 வேதங்களும் ஒன்றிணைத்து திருக்குர்ஆனில் 114 அத்தியாயங்களாக இறுதி வேதமாக இறைவன் அருளினான்.
தமக்கு முன் சென்ற தவ்ராத்தை உண்மைப்படுத்துபவராக அவர்களின் அடிச்சுவட்டில் மர்யமின் மகன் ஈஸாவைத் தொடரச் செய்தோம். அவருக்கு இன்ஜீல் வேதத்தையும் வழங்கினோம். அதில் நேர்வழியும், ஒளியும் இருந்தது. தனக்கு முன்சென்ற தவ்ராத்தை உண்மைப்படுத்துவதாகவும் அது அமைந்திருந்தது. (இறைவனை) அஞ்சுவோருக்கு நேர்வழியாகவும், அறிவுரையாகவும் இருந்தது'. (5:46)
'இன்ஜீலுக்குரியோர் அதில் இறைவன் அருளியதின் அடிப்படையில் தீர்ப்பளிக்கட்டும்'. (5:47)
'தவ்ராத்தையும் நாம் அருளினோம், அதில் நேர்வழியும், ஒளியும் இருந்தது'. (5:44)
'நபிமார்களில் சிலரைவிட சிலரைச் சிறப்பித்திருக்கிறோம். தாவூத் (அலை) அவர்களுக்கு ஸபூர் (வேதத்தை) கொடுத்தோம்'. (17:55)

'உலகத்தார் யாவரையும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காக (சத்தியத்தையும், அசத்தியத்தையும் தெளிவாகப்) பிரித்தறிவிக்கும் இவ்வேதத்தை (திருக்குர்ஆனை) தன் அடியார் (முகம்மது (ஸல்) மீது இறக்கியவன் மிக்க பாக்கியமுடையவன்'. (25:1)
'(நபியே! முற்றிலும்) உண்மையைக் கொண்டுள்ள இந்த வேதத்தை, (திருக்குர்ஆனை படிப்படியாக) அவன் தான் உம்மீது இறக்கி வைத்தான். இது இதற்கு முன்னாலுள்ள (வேதங்களை) உறுதிப்படுத்தும். தவ்ராத்தையும், இன்ஜீலையும் அவனே இறக்கி வைத்தான்'.
இறைவேதங்களான நான்கு வேதங்களும் வெவ்வேறு வகையான காலகட்டங்களில் வெவ்வேறு நபிமார்களுக்கு இறைவன் புறத்திலிருந்து இறக்கப்பட்டது. முந்தைய வேதத்தை, பின் இறக்கியருளப்பட்ட வேதம் உண்மைப்படுத்துகிறது; அதை பாதுகாக்கவும் செய்கிறது.
மேற்கண்ட வசனத்தில் (154). "அடுத்து மூசாவுக்கு, அவர் செய்த நன்மைக்காக முழுமையானதொரு வேதத்தை நாம் வழங்கினோம் என்று அல்லாஹ் தெரிவிக்கின்றான். பெரும்பாலும் அல்லாஹ் குர்ஆனைப் பற்றிக் கூறும்போது 'தவ்ராத்' வேதத்தையும் சேர்த்தே குறிப்பிடுவான்.
ஒரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான். இதற்கு முன்னர் மூசாவுடைய வேதம் மக்களுக்கு) வழிகாட்டியாகவும் அருளாகவும் இருந்தது. இ(ந்தக் குர்ஆனானி)து (அதை) உண்மைப்படுத்துகிறது. அரபி மொழியில் அருளப்பெற்றது. அநீதி இழைப்போரை எச்சரிக்கவும், நன்மை செய்வோருக்கு நற்செய்தியாகவும் (அருளப் பெற்றது) (குர்ஆன் 46:12)

பிறிதொரு வசனத்தில் இணை வைப்பாளர்கள் குறித்து அல்லாஹ் தெரிவிக்கின்றான் 'நம்மிடமிருந்து சத்திய (வேதம் அவர்களிடம் வந்த போது இதற்கு முன்னர் மூஸாவுக்குக் கொடுக்கப்பட்டதைப் போன்று இவருக்கும் கொடுக்கப்பட்டிருக்கக் கூடாதா எனக் கேட்டார்கள்.குர்ஆன் ( 28: 48)
மற்றொரு வானத்தில் ஜின்கள் பற்றி அல்லாஹ் கூறுகின்றான் (அந்த ஜின்கள்) கூறினார்கள்: எங்கள் சமுதாயத்தாரே! முஸாவுக்குப் பின்னால் அருளப்பெற்ற ஒரு வேதத்தை நாங்கள் செவியுற்றோம். (அந்த வேதம்) அதற்கு முன்னால் உள்ள வேதத்தை மெய்ப்பிப்பதாகவும் சத்தியத்துக்கும் நேரான பாதைக்கும் வழிகாட்டக்கூடிய தாகவும் உள்ளது. (குர்ஆன் 46:30)
அடுத்து முழுமையான வேதம் என்றால், மூஸா (அலை) அவர்களுக்கு அவர்களது மார்க்கத்தில் வேண்டிய அனைத்தையும் உள்ளடக்கிய நிறைவான வேதத்தை அருளினோம் என்பது பொருளாகும்.
மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்: நாம் மூஸாவுக்காக ஒவ்வொரு விஷயம் குறித்தும் பலகைகளில் எழுதினோம். (குர்ஆன் 7:145)

அடுத்து 'அவர் செய்த நன்மைக்காக ' என்றால், நம் கட்டளைச் செயல்படுத்துவதிலும், நமக்குக் கீழ் படிவதிலும், நல்லறம் புரிவதிலும்
அவர் நடந்து கொண்ட விதத்திற்குப் பரிசாக முழுமையான வேதத்தை நாம் அருளினோம் என்பது பொருளாகும்.
மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான்: நன்மைக்கு நன்மையைத் தவிர வேறு பரிசு உண்டா ( குர்ஆன் 55:60)

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 219
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 136 )

وَهٰذَا كِتٰبٌ اَنْزَلْنٰهُ مُبٰرَكٌ فَاتَّبِعُوْهُ وَاتَّقُوْا لَعَلَّكُمْ تُرْحَمُوْنَۙ

(மனிதர்களே!) இதுவும் ( திருக்குர்ஆனும்) வேதமாகும்; இதனை நாமே இறக்கிவைத்துள்ளோம் - (இது) மிக்க பாக்கியம் வாய்ந்தது; ஆகவே இதனைப் பின்பற்றுங்கள் - இன்னும் (அவனை) அஞ்சி (பாவத்தை விட்டு விலகி)க் கொள்ளுங்கள். நீங்கள் (இறைவனால்) கிருபை செய்யப்படுவீர்கள். (குர்ஆன் : 6:155)
திருக்குர்ஆன் இறைவனால் இறக்கி அருளப்பட்ட வேதமாகவும், மனித குலத்திற்கு ஒரு வழிகாட்டியாகவும் விளங்குகிறது.
“இது பெரும் பாக்கியங்கள் நிறைந்த ஒரு வேதமாகும். (நபியே!) இதனை நாம் உம் மீது இறக்கி அருளியுள்ளோம். இந்த மக்கள் இதனுடைய வசனங்களைச் சிந்திக்க வேண்டும்; அறிவுடையோர் இதில் இருந்து படிப்பினை பெற வேண்டும் என்பதற்காக (குர்ஆன் 38:29) என்றும்,
“இது உலக மக்கள் அனைவருக்கும் ஒரு நல்லுரையே அன்றி வேறில்லை” (திருக்குர்ஆன்-68:52) என்றும் இறைவன் திருமறையில் கூறுகின்றான்.
குர்ஆன் எல்லாச் செய்திகளையும் எளிமையாக எடுத்துச் சொல்கிறது. பல்வேறு காலங்களில் இந்த உலகில் அவதரித்த இறைத்தூதர்கள் பற்றிப் பேசுகிறது. மனிதன் படைக்கப்பட்ட விதத்தை அது பறைசாற்றுகிறது. இயற்கையின் ஆற்றல்களை அது எடுத்துரைக்கிறது. கடந்த கால சமுதாயங்களின் வரலாறுகளை அது விவரிக்கிறது. அழிந்துபோன சமுதாயங்களின் நிலைமைகளைப் பார்க்கும்படி கூறி அச்சமூட்டி எச்சரிக்கிறது. அன்றைய அரேபியாவில் மட்டுமல்ல, உலகம் முழுவதும் உள்ள மக்கள் அறிந்திராத பல அறிவியல் உண்மைகளைக் குர்ஆன் துல்லியமாகக் கூறுகிறது. இன்றைய விஞ்ஞான உலகம் குர்ஆனின் குரல் உண்மை என்பதை உரக்க உரைக்கிறது.
உலகத்தில் உள்ள எல்லா மதங்களில் உள்ள வேத நூல்களும் அந்தந்த மதத்தைச் சேர்ந்தவர்களால் ஓதப்படுகின்றன. சில சிறப்பான வேளை மற்றும் பண்டிகையின்போது ஓதுகின்ற வேதங்களாக அவை உள்ளன. ஆனால் நாள்தோறும் கோடிக்கணக்கான மக்கள் ஓதக்கூடிய ஒரே திருமறை, திருக்குர்ஆன்தான். ஒவ்வொரு நாளும் ஐந்து வேளை தொழுகை நடைபெறும்போது பள்ளிவாசல்களில் திருக்குர்ஆனின் வசனங்கள் ஓதப்படுகின்றன. நாட்டுக்கு நாடு நேரம் வேறுபடுவதைக் கணக்கிட்டுப் பார்த்தால் 24 மணி நேரமும் ஓதப்படுகிற திருமறையாகத் திருக்குர்ஆன் திகழ்வதைக் காணலாம்.
பிற மதங்களுக்குரிய வேதங்கள் பல நாட்டு மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு, அந்தந்த நாடுகளில் அந்தந்த மொழிகளிலேயே ஓதப்படுகிறது. ஆனால் மூல மொழியான அரபி மொழியிலேயே ஓதப்படுகிற ஒரே மறை, திருக்குர்ஆன்தான்.
திருக்குர்ஆன் எந்த மொழியில் மொழிபெயர்க்கப்பட்டாலும் அது ஆங்கிலமாக இருந்தாலும், தமிழாக இருந்தாலும் அரபி மொழியும் இடம் பெற்றிருக்கும். அரபி மொழி இல்லாத தொகுப்புகளைப் பார்ப்பது அரிது.

இந்த உலகத்தில் அருளப்பட்ட எந்த வேத நூலுக்கும் இல்லாத சிறப்பு திருக்குர்ஆனுக்கு உண்டு. 1,500 ஆண்டுகளுக்கு முன்பு திருக்குர்ஆன் அருளப்பட்டு, அது எந்த வரிசைப்படி தொகுக்கப்பட்டதோ, அதே வரிசைப்படி ஒரு புள்ளிகூட மாறாமல்- மாற்றப்படாமல் இன்று வரை இருக்கிறது.

இதற்குக் காரணம், அதைப் பாதுகாத்துக் கொள்கிற பொறுப்பையும் இறைவனே ஏற்றுக் கொண்டு விட்டான். "நிச்சயமாக நாம்தான் (உம்மீது) இவ்வேதத்தை இறக்கி வைத்தோம். ஆகவே (அதில் எத்தகைய மாறுதலும் அழிவும் ஏற்படாதவாறு) நிச்சயமாக நாமே அதனைப் பாதுகாத்துக் கொள்வோம்." (திருக்குர்ஆன்-15:9) என்று இறைவன் கூறுகின்றான்.

நடையழகு கொண்டு இறைவனால் மொழியப்பட்ட நூல், திருக்குர்ஆன். அது கவிதையும் அல்ல; வசனமும் அல்ல. இவ்விரண்டுக்கும் உயர்ந்த நிலையில் இருப்பது. திருமறை வசனங்கள், ஓதுகிறவர்களை மட்டுமல்ல; அதைக் கேட்பவர்களையும் கட்டிப் போடும் சக்தி கொண்டது.

"குர்ஆனின் மாபெரும் வலிமை அதன் கொள்கைகளில் மட்டுமல்ல; அதன் விந்தை மிகு ஓசை நயத்திலும் உள்ளது." என்றார், ஒரு மேலை நாட்டு அறிஞர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கொல்வேன் என்று சூளுரைத்து, உருவிய வாளுடன் உமர் (ரலி) சென்றார். வழியில் அவருடைய தங்கை பாத்திமாவும், அவருடைய கணவரும் இஸ்லாத்தைத் தழுவிய செய்தி கிடைத்ததும் கோபத்துடன் தங்கையின் வீட்டுக்குப் போனார். அப்போது தங்கை ஓதிய குர்ஆன் வசனத்தைக் கேட்டு மனம் மாறி உமர் இஸ்லாத்தைத் தழுவினார்.

குரைஷிகளின் கொடுமையைத் தாங்க முடியாமல் முஸ்லிம்கள் அபிசீனியா நாட்டுக்குச் சென்றனர். அவர்களுக்கு எதிராக மன்னர் நஜ்ஜாஜியிடம் குற்றம் சாட்டினர், குரைஷிகளின் தூதர்கள்.

மன்னரோ கிறிஸ்தவர். ஈசா நபி பற்றிய கொள்கையில் முஸ்லிம்கள் முரண்படுவதாகச் சொல்லி ஒரு தர்ம சங்கடமான நிலையை உருவாக்கினார்கள்.

அப்போது முஸ்லிம் குழுவின் தலைவர் ஜஅபர் இப்னு அபூதாலிப் திருக்குர்ஆனில் அந்தப் பகுதியை ஓதிக் காட்டினார். அப்போது குர்ஆன் வசனங்கள் மன்னரை வசப்படுத்தியது. மன்னர், "இதில் தவறேதும் இல்லை. முஸ்லிம்கள் விரும்பும் வரை என் நாட்டில் இருக்கலாம்" என்றார். பின்னர் சில நாட்களில் அவரே இஸ்லாத்தைத் தழுவினார் என்பது வரலாறு.

"இது (இறைவனால்தான் அருளப்பட்ட) தெளிவான வசனங்களாக இருக்கின்றன. ஆகவே மெய்யான ஞானம் கொடுக்கப்பட்டவர்களின் உள்ளங்களில் இது பதிந்து விடும்." (திருக்குர்ஆன்-29:49) என்ற இறைமொழிக்கு ஏற்ப ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனிதர்களின் இதயங்களில் வைத்துப் பாதுகாக்கப்படுகிற ஒரு வேதமாக திருக்குர்ஆன் திகழ்கிறது.

நபிகளார் காலத்திலேயே அதைப் பலரும் மனப்பாடம் செய்தனர். அப்போது திருக்குர்ஆன் முழுவதையும் மனனம் செய்த நூற்றுக்கணக்கான நபித்தோழர்கள் இருந்தனர். அதன் பின்னரும் இந்த நிலை தொடர்ந்தது. திருக்குர்ஆன் முழுவதையும் மனனம் செய்பவர் களுக்கு 'ஹாபிழ்' என்ற பட்டம் வழங்கப்படுகிறது. இப்போது உலகம் முழுக்க குர்ஆனை மனனம் செய்தவர்களின் எண்ணிக்கை பல லட்சங்களைத் தாண்டும்.

இன்றைய தினம் உலகில் ஒரு திருக்குர்ஆன் பிரதிகள்கூட இல்லை என்று ஒரு வாதத்திற்காக வைத்துக் கொள்வோம். மறுகணமே சில மணி நேரத்தில் ஒரு எழுத்துக்கூட மாறாமல் திருக்குர்ஆன் உருவாகி விடும். அழிக்க முடியாத ஒரு வேதமாக- லட்சக்கணக்கான மக்கள் உள்ளத்தில் உள்ள ஒரு வேதமாக இருக்கும் பெருமை இவ்வுலகில் திருக்குர்ஆனுக்கு மட்டுமே உண்டு. காரணம்

"நிச்சயமாக நாம்தான் (உம்மீது) இவ்வேதத்தை இறக்கி வைத்தோம். ஆகவே (அதில் எத்தகைய மாறுதலும் அழிவும் ஏற்படாதவாறு) நிச்சயமாக நாமே அதனைப் பாதுகாத்துக் கொள்வோம்".(திருக்குர்ஆன்-15:9) என்று இறைவன் கூறுகின்றான்.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 220**

(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 137 )

اَنْ تَقُوْلُـوْۤا اِنَّمَاۤ اُنْزِلَ الْـكِتٰبُ عَلٰى طَآٮِٕفَتَيْنِ مِنْ قَبْلِنَا وَاِنْ كُنَّا عَنْ دِرَاسَتِهِمْ لَغٰفِلِيْنَۙ

நமக்கு முன் இரு கூட்டத்தினர் மீது மட்டுமே வேதம் இறக்கப்பட்டது - ஆகவே நாங்கள் அதனைப் படிக்கவும் கேட்கவும் முடியாமல் பாராமுகமாகி விட்டோம் என்று நீங்கள் கூறாதிருக்கவும்; (குர்ஆன் : 6:156)

اَوْ تَقُوْلُوْا لَوْ اَنَّاۤ اُنْزِلَ عَلَيْنَا الْـكِتٰبُ لَـكُنَّاۤ اَهْدٰى مِنْهُمْ‌ فَقَدْ جَآءَكُمْ بَيِّنَةٌ مِّنْ رَّبِّكُمْ وَهُدًى وَّرَحْمَةٌ‌ فَمَنْ اَظْلَمُ مِمَّنْ كَذَّبَ بِاٰيٰتِ اللّٰهِ وَصَدَفَ عَنْهَا‌ سَنَجْزِى الَّذِيْنَ يَصْدِفُوْنَ عَنْ اٰيٰتِنَا سُوْٓءَ الْعَذَابِ بِمَا كَانُوْا يَصْدِفُوْنَ

அல்லது மெய்யாகவே எங்கள் மீது ஒரு வேதம் அருளப்பட்டிருந்தால், நிச்சயமாக நாங்கள் அவர்களைவிட மிக்க நேர்மையாக நடந்திருப்போம் என்று நீங்கள் கூறாதிருக்கும் பொருட்டும் (இவ்வேதத்தை அருளினோம்);
ஆகவே உங்களுடைய இறைவனிடமிருந்தும் மிகத்தெளிவான வேதமும், நேர்வழியும், அருளும் வந்துவிட்டது - எவனொருவன் அல்லாஹ்வின் வசனங்களைப் புறக்கணித்து, அவற்றைவிட்டு விலகிவிடுகின்றானோ அவனைவிட அதிக அநியாயக்காரன் யார்?
நம்முடைய வசனங்களை விட்டுவிலகிக் கொள்கிறவர்களுக்கு, அவர்கள் விலகிக் கொண்ட காரணத்தால் கொடிய வேதனையைக் கூலியாகக் கொடுப்போம். (குர்ஆன் : 6:157)
புனித மிக்க இத்திருக்குர்ஆன் ஏன் இறக்கப்பட்டது என்பதற்கு இவ்விரு வசனங்களிலும் இரண்டு காரணங்கள் கூறப்பட்டிருக்கின்றன.
(1) எங்களுக்கு முன்னர் வேதம் இறக்கப்பட்டதெல்லாம் இரு கூட்டத்தினரான யூத- கிறிஸ்துவர்கள் மீது தான். முறையே தவ்ராத் வேதத்தையும், இன்ஜீல் வேதத்தையும் அவர்கள் பெற்றனர்.
அவர்களுக்கும் எங்களுக்குமிடையில் அதிகமான தொடர்பு கிடையாது. அவர்களுக்கு இறக்கப்பட்ட வேதத்தின் மொழியும் எங்களுக்குத் தெரியாது. நாங்கள் அரபி மொழியைக் கொண்டவர்கள். அதனால் நாங்கள் அவர்களிடம் படித்துக் கேட்பதை விட்டு பாராமுகமாக இருந்து விட்டோம் என நீங்கள் கூறாதிருப்பதற்காகவே இவ்வேதத்தை உங்களுடைய அரபி மொழியில் இறக்கி வைத்தோம்.
(2) அல்லது நம்மீது நமது மொழியில் ஒரு வேதம் இறக்கப்பட்டிருந்தால் அப்பொழுது தாம் அந்த யூத கிறிஸ்தவர்களை விட மிக்க நேர்வழி பெற்றிருப்போமேயென்று நீங்கள் கூறாதிருக்கவுமே நீங்கள் புரிந்து கொள்ளும் மொழியில் இந்த குர்ஆன் வேதத்தை இறக்கி வைத்தோம்.
இனி நீங்கள் எக்காரணத்தையும் கூறி இந்த குர்ஆனை புறக்கணிக்க முடியாது ஆகவே உங்களுடைய இரட்சகனான அல்லாஹ்வினிடமிருந்து தெளிவான ஆதாரமும், தவறான வழியை விட்டு அகற்றும் நேர்வழியும் அல்லாஹ்வின் அருளும் கிருபையும் கொண்ட குர்ஆன் உங்களுக்கு வந்துவிட்டது.
இதற்கு மேலும் நீங்கள் புறக்கணித்தீர்களாயின், மாபெரும் தவறு செய்தவர்களாவீர்கள். தெளிவான ஆதாரம் வந்த பின்னரும், அல்லாஹ்வினுடைய வசனங்களைப் பொய்யாக்கி அவற்றை விட்டுப் புறக்கணித்தவனைவிட, மிகப்பெரிய அநியாயக்காரன் யார்? ஒருவனுமே இருக்க முடியாது. அத்தகைய கொடியவனை நாம் சும்மா விடமாட்டோம்.
நம்முடைய வசனங்களை விட்டுப் புறக்கணித்துத் தங்கள் நோக்கப்படிச் செல்கிறவர்களுக்கு அவர்கள் எப்பொழுதும் புறக்கணித்துக் கொண்டேயிருப்பதின் காரணத்தால் வேதனையில் மிகக் கெட்டதை அடுத்து நாம் கூலியாகக் கொடுப்போம். அதிலிருந்து அவர்கள் மீட்சி பெறவே முடியாது.
"அரபியர்கள் அவர்கள் பேசும் மொழியிலேயே இந்த குர்ஆன் அருளப்பட்டு விட்டது. இப்போது அவர்கள் இந்த வேதத்தை புறக்கணிக்க முடியாது. ஆகவே உங்களுடைய இரட்சகனான அல்லாஹ்வினிடமிருந்து தெளிவான ஆதாரம் உங்களுக்கு வந்துவிட்டது" - என்று கூறிய போது ,
அரபியர் அல்லாத அஜமிகள் (அரபி தெரியாத மற்ற மொழிக்காரர்கள் )
உலகம் முழுவதற்கும் வழிகாட்ட அருளப்படும் வேதம் அரபு மொழியில் ஏன் அருளப்பட வேண்டும் ? என்று கேட்கலாம்

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன் அனுப்பப்பட்ட தூதர்கள் குறிப்பிட்ட மொழியினருக்கோ, குலத்தினருக்கோ, சமுதாயத்தினருக்கோ அனுப்பப்பட்டனர். அவரவர் மொழியில் மக்களை நல்வழிப்படுத்த அவர்களுக்கு இறைவன் வழங்கிய செய்தியே வேதம் எனப்படும். எனவே நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்துக்கு முன் இருந்த எல்லா மொழிகளிலும் இறைத்தூதர்கள் அனுப்பப்பட்டுள்ளனர்.
ஒவ்வொரு தூதரையும் அவருடைய சமூகத்தாருக்கு அவர் விளக்கிக் கூறுவதற்காக அவர்களுடைய மொழியிலேயே (போதிக்கும் படி) நாம் அனுப்பிவைத்தோம்; குர்ஆன் : 14:4)
ஆனால் திருக்குர்ஆன் அருளப்பட்ட அரபு மொழிதான் தேவமொழி என்பதோ அதுதான் உலகிலேயே உயர்ந்த மொழி என்பதோ இதற்குக் காரணம் அல்ல. எல்லா மொழிகளும் சமமானவை என்றே இஸ்லாம் கூறுகிறது. மொழியின் அடிப்படையில் எவரும் உயர்வு, தாழ்வு கற்பிக்கக் கூடாது என்பதும் இஸ்லாத்தின் கொள்கை. இஸ்லாம் அரபு மக்களுக்கு மட்டுமின்றி உலகில் உள்ள அனைத்து மொழி பேசுவோருக்காகவும் அருளப்பட்ட வாழ்க்கை நெறியாகும். பல்வேறு மொழி பேசும் மக்களுக்கு ஒரு வழிகாட்டு நெறியைக் கொடுத்து ஒரு வழிகாட்டியை அனுப்பும்போது ஏதாவது ஒரு மொழியில் தான் கொடுத்தனுப்ப முடியும். எந்த மொழியில் அந்த வழிகாட்டு நெறி இருந்நாலும் மற்ற மொழியைப் பேசுவோர் இது குறித்து கேள்வி எழுப்புவார்கள்.
யாராலும் எந்தக் கேள்வியும் எழுப்ப முடியாதவாறு இதற்கு ஒரு ஏற்பாடு செய்ய முடியாது. அரபு மொழிக்குப் பதிலாக தமிழ் மொழியில் நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் அனுப்பப்பட்டிருந்தால் இதே கேள்வியை மற்ற மொழி பேசும் மக்கள் கேட்காமல் இருக்க மாட்டார்கள்.
எனவே உலக ஒருமைப்பாட்டைக் கருத்தில் கொண்டு செய்யப்படும் காரியங்களில் மொழி உணர்வுக்கு முக்கியத்துவம் கொடுத்து உலக ஒருமைப்பாட்டைச் சிதைத்து விடக் கூடாது.
நாம் வாழ்கின்ற இந்திய நாட்டில் பல்வேறு மொழி பேசும் மக்கள் வாழ்கின்றனர். ஆனால் நமது நாட்டிற்கு ஒரு தேசிய கீதத்தை வங்காள மொழியில் உருவாக்கி அதை அனைத்து மொழியினரும் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். இவ்வாறு ஏற்றுக் கொண்டிருப்பதால் இந்தியாவிலேயே முதன்மையான மொழி வங்காள மொழி தான் என்றோ மற்ற மொழிகள் தரம் குறைந்தவை என்றோ ஆகாது.
நாட்டின் ஒருமைப்பாட்டுக்காக மொழி உணர்வை சற்றே ஒதுக்கி வைத்து விட்டு, அந்நிய மொழியை ஏற்றுக் கொள்ளும்போது உலக ஒருமைப்பாட்டுக்காகவும் உலக மக்கள் அனைவரும் ஒரே நல்வழியை நோக்கி திரும்ப வேண்டும் என்பதற்காகவும் மிகச் சில விஷயங்களில் மொழி உணர்வை ஒதுக்கி வைப்பதால் மனிதகுலத்துக்கு எந்தக் கேடும் ஏற்படாது மாறாக உலகளாவிய ஒற்றுமை எனும் மாபெரும் நன்மை தான் ஏற்படும்.
ஏதாவது ஒரு மொழியில் தான் உலகளாவிய ஒரு தலைவரை அனுப்ப முடியும் என்ற அடிப்படையில் தான் நபிகள் நாயத்திற்குத் தெரிந்த அவர்களுடைய தாய் மொழியான அரபு மொழியில் குர்ஆன் அருளப்பட்டது. உலகிலேலே அரபு மொழி தான் சிறந்த மொழி என்பதற்காக அரபு மொழியில் குர்ஆன் அருளப்படவில்லை.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 221

## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 138 )

هَلْ يَنْظُرُوْنَ اِلَّاۤ اَنْ تَاْتِيَهُمُ الْمَلٰٓٮِٕكَةُ اَوْ يَاْتِىَ رَبُّكَ اَوْ يَاْتِىَ بَعْضُ اٰيٰتِ رَبِّكَ‌ يَوْمَ يَاْتِىْ بَعْضُ اٰيٰتِ رَبِّكَ لَا يَنْفَعُ نَفْسًا اِيْمَانُهَا لَمْ تَكُنْ اٰمَنَتْ مِنْ قَبْلُ اَوْ كَسَبَتْ فِىْۤ اِيْمَانِهَا خَيْرًا‌ قُلِ انْتَظِرُوْۤا اِنَّا مُنْتَظِرُوْنَ

மலக்குகள் அவர்களிடம் (நேரில்) வருவதையோ அல்லது உம் இறைவனே (அவர்களிடம்) வருவதையோ அல்லது உம் இறைவனின் அத்தாட்சிகளில் சில வருவதையோ அன்றி (வேறெதனையும்) அவர்கள் எதிர்பார்க்கின்றனரா?

உம்முடைய இறைவனின் அத்தாட்சிகளில் சில வரும் அந்நாளில், இதற்கு முன்னால் நம்பிக்கை கொள்ளாமலும், அல்லது நம்பிக்கைக் கொண்டிருந்தும் யாதொரு நன்மையையும் சம்பாதிக்காமலுமிருந்து விட்டு, அந்நாளில் அவர்கள் கொள்ளும் நம்பிக்கை எவ்வித பலனையும் அவர்களுக்கு அளிக்காது -

ஆகவே அவர்களை நோக்கி "(அந்த அத்தாட்சிகளை) நீங்களும் எதிர்பாருங்கள்; நாமும் எதிர்ப் பார்க்கின்றோம்" என்று (நபியே!) நீர் கூறும். (குர்ஆன் : 6:158)

திருக்குர்ஆனின் சத்தியத் தன்மையைப் பற்றி எவ்வளவோ எடுத்துக்கூறியும் புறக்கணித்துக் கொண்டேயிருப்பவர்கள் என்ன எதிர்பார்க்கின்றனர்? வேதனையையோ, மரணத்தையோ கொண்டு வரும் மலக்குகள் அவர்களிடம் வருவதை எதிர்பார்க்கின்றனரா ? அப்படியாயின் உடனேயே அழிக்கப்பட்டு விடுவார்களே!

அல்லது உம்முடைய இரட்சகன் வருவதை அவனால் அனுப்பப்படும் அழிவுச் சின்னங்கள் வருவதை எதிர்பார்க்கின்றனரா? அப்பொழுது ஒருவர் கூட மிஞ்ச மாட்டாரே. அல்லது அவருடைய இரட்சகனின் சில அடையாளங்கள் வருவதை எதிர்பார்க்கின்றனரா ?

அத்தகைய அடையாளங்கள் தோன்றிவிடின், உலகமே அழிந்துவிடும். அப்பொழுது இவர்கள் விசுவாசம் கொள்வதற்கோ, பாவமன்னிப்புக் கோருவதற்கோ சந்தர்ப்பமே கிடைக்காதே .

இது பற்றி பெருமானார் (ஸல்) அவர்கள் அறிவிக்கையில்,

உலகம் முடியும் தருவாயில் ஒருவிதமான புகையுண்டாகி உலகமெல்லாம் பரவும். இதனால் காஃபிர்கள் வேதனையடைவார்கள். மூமின்கள் வேதனையடைய மாட்டார்கள். என்றாலும், அவர்களுக்கு ஜலதோஷம் உண்டாகும்.

தாப்பத்துல் அர்லு என்னும் ஒரு வகை மிருகம் வரும். கீழ் தேசத்தில் சில ஊர்கள் அழியும். மேனாட்டில் சில ஊர்கள் அழியும், அறபு தேசத்தில் சில ஊர்கள் அழியும்.

தஜ்ஜால் வருவான் (அவனை அந்தி கிறிஸ்து என்று கிறிஸ்துவர்கள் அழைக்கிறார்கள்). சூரியன் மேற்குத் திசையில் உதயமாகும். யாஜுஜு மாஜுஜு என்ற கூட்டத்தினர் தோன்றுவர்.

ஹளரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வானத்திலிருந்து இறங்கி வருவார்கள். அதன் தேசத்தில் (அதாவது ஏடன் தேசத்தில்) இருந்து நெருப்புத் தோன்றி அப்பிரதேசத்தில் பரவும். இன்னும் பல அடையாளங்கள் உலகம் முடியும் தருவாயில் தோன்றும்.

சூரியன் மறைந்தபோது மலக்குகள் பறந்து செல்லும் வேகத்தில் அதனை (சூரியன்) ஏழாவது வானத்தின்பால் உயர்த்திக் கொண்டு சென்று, அர்ஷிக்குக் கீழில் தடுத்து வைக்கப்படும். அப்பொழுது சூரியன் வழக்கமாக உதயமாகும் இடத்திலிருந்து உதயமாகவா அல்லது மேற்குத் திசையிலிருந்து உதயமாகவா என்று இறைவனிடம் உத்தரவு கேட்கும். இது போலவே சந்திரனும் உத்தரவு கேட்கும்.

தவ்பாவை அங்கீகரிப்பதற்கு இறைவன் நிரணயித்துள்ள கால நிர்ணயம் முடிவடையும் சமயம் வந்துவிடும். பூமியில் பாவங்கள் மிகைத்து விடும். நன்மை இல்லாமல் தொலைந்துவிடும். நன்மை செய்யும்படி ஒருவரும் ஏவமாட்டார்கள், தீமைகள் உலகெல்லாம் பரவும். அதனைச் செய்ய வேண்டாம் என்று எவரையும் விலக்க மாட்டார்கள்.

இவ்விதமான நிலை ஏற்படும்போதுதான் சூரியன் அர்ஷுக்கு கீழில் தடுத்து வைக்கப்படும். ஒரு இரவுக்குரிய நாளிகைகள் சென்ற பிறகு, சூரியன் சுஜூது செய்து, எத்திசையில் உதயமாக வேண்டும் என்று இறைவனிடம் உத்தரவு கேட்கும். இது போல் சந்திரனும் வந்துசேரும் வரை சூரியனுக்கு எவ்விதப் பதிலும் கொடுக்கப் படமாட்டாது. பிறகு, சந்திரனும் அர்ஷிக்குக் கீழில் மேற்கண்ட விதமாகத் தடுத்து வைக்கப்படும். அதுவும் சுஜுது செய்து இறைவனிடம் உத்தரவு கேட்கும். இவ்வாறு சந்திரன் சூரியன் ஆக இரண்டும் மூன்று இரவின் கால அளவிற்கு சுஜுது செய்யும்.

மூன்று இரவுகளின் அளவிற்குச் சந்திரன், சூரியன் ஆகிய இரண்டும் தடைபட்டிருக்கும். இதனை நியமமாக தஹஜ்ஜத் தொழுபவர்கள்தான் அறிவார்கள். அக்காலத்தில் தஹஜ்ஜத் தொழுபவர்கள் மிகவும் குறைவாயிருப்பார்கள். அவர்கள் வழக்கமாக தூங்கும் அளவிற்குத் தூங்கிவிட்டு எழுந்திருந்து, தஹஜ்ஜத் தொழுகையை நிறைவேற்று வார்கள்.

அப்புறம் கொஞ்ச நேரத்திற் கெல்லாம் கிழக்கு வெளுக்க வேண்டிய முறைப்படி, கிழக்கு வெளுக்காது. ஆகவே, அவர்கள் வெளியில் வந்து வானத்தைப் பார்ப்பார்கள். அப்பொழுது நட்சத்திரங்கள் இருந்த இடத்திலேயே இருப்பதைப் பார்த்து, ஆச்சரியமடைவார்கள். இதனைப் பார்த்துப் பலவாறு எண்ணுவார்கள். குறிப்பிட்ட நேரத்திற்கு முன்னதாகவே எழுந்துவிட்டோமோ? தொழுகையைக் குறைத்துத் தொழுதுவிட்டோமோ? அல்லது கிராஅத்தைக் குறைவாக ஓதி விட்டோமோ? என்றெல்லாம் எண்ணுவார்கள்.

மீண்டும் தூங்கி வழக்கமாக எழுந்திருக்கும் நேரத்தில் எழுந்து தொழுவார்கள். மீண்டும் பொழுது விடியாமலிருப்பதைப் பார்த்து ஆச்சரியமடைவார்கள். அவர்களுக்குப் பயமும் உண்டாகிவிடும். அந்தந்த ஊரிலுள்ள தஹஜ்ஜத் தொழுகையாளிகள் மஸ்ஜிதுகளில் ஒன்று சேருவார்கள். அல்லாஹுத்தஆலாவிடம் அழுது, பிரலாபித்துக் காவல் தேடுவார்கள்.

அப்போது, ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களை இறைவன் சந்திரன் சூரியன் ஆகிய இரண்டையும் அனுப்புவான். அவர் அவற்றிடம் சென்று "நீங்கள் இருவரும் மேற்குத் திசையிலிருந்து உதயமாகவேண்டும். உங்களுக்குப் பிரகாசம் கிடையாது, என்று அல்லாஹுத்தஆலா கட்டளையிட்டிருக்கிறான்" என்று கூறுவார்.

அவ்விரண்டும் அழுகும். அவற்றின் அழுகைக் குரலை ஏழு வானங்களில் உள்ளவர்களும், அர்ஷைச் சுமப்பவர்களும் செவியேற்பார்கள். இதற்குள் தஹஜ்ஜத் தொழுவர்களும் அழுது பிரார்த்தனை புரிவார்கள்.

அல்லாஹ்வை மறந்த மற்றவர்கள் தங்கள் மறதியிலேயே இருப்பார்கள். அச்சமயத்தில் அவ்விரண்டும் பிரகாசமின்றி மேற்குத் திசையில் உதயமாகும். அதாவது கிரணம் தீண்டும்போது அவைகள் பிரகாசமில்லாதிருப்பது போல் பிரகாசமில்லாமல் மங்கலாக உதயமாகும்.

இதனைப் பார்த்து உலக மக்கள் அழுவார்கள். நல்லோர்களது அழுகை பயன்படும்.அவர்களது அழுகை வணக்கமாகக் கணிக்கப்படும் ஃபாஸிக்குகளுக்கு அவர்களது அழுகை பயன்படாது. அவர்களுக்கு அதை வியாகூலமாக (கவலை, கலக்கம், துக்கம், மயக்கம்) எழுதப்படும்.

ஆகவே, அவ்விரண்டும் நடுவானத்திற்கு வந்தவுடன் ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அவற்றை மடக்கி மீண்டும் மேற்குத் திசையை நோக்கும்படி திருப்பி விடுவார்கள். ஆகவே, அவ்விரண்டும் மேற்குத் திசையில் பாபுத் தவ்பா என்னும் தவ்பாவின் வாசல் வழியாக மறைந்து விடும்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இவ்விபரத்தைக் கூறியவுடன், ஹளரத் உமர் ஃபாரூக் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் "தவ்பாவுடைய வாசல் என்பது என்ன?" என்று கேட்டார்கள்.

அதற்கு, நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "உமரே! அல்லாஹுத்தஆலா மேற்குத் திசைக்கு அப்பால் (மகுரிபுக்கப்பால்) தவ்பாவின் வாசல் என ஒரு தலைவாசலைச் சிருஷ்டித்திருக்கிறான். அதற்கு இரண்டு தங்கக் கதவுகள் இருக்கின்றன. ஒரு கதவிலிருந்து மறு கதவு வரை வாகனக் காரனுக்கு நாற்பது வருடத்துத் தூரம் இருக்கிறது. அல்லாஹுத்தஆலா சிருஷ்டிப்பொருள்களைப் படைத்த காலத்திலிருந்து, சூரியன் மேற்குத் திசையில் உதயமாகிய அந்தக் காலம் வரை அத்தலைவாசல் திறந்தே இருக்கும். மேற்குத் திசையில் சூரியன் உதயமாகி மேற்குத் திசையிலேயே மீண்டும் மறைந்தவுடன், அக்கதவுகள் இரண்டும் மூடிக் கொள்ளும். அவ்விரு கதவுகளுக்கு மிடையில் எவ்விதமாக இடைச்சந்தும் இருக்காது'.

இத்தலைவாசல் அடைக்கப்பட்ட பிறகு, அடியார்கள் செய்யும் தவ்பா ஒப்புக் கொள்ளப்படமாட்டா. பாவிகளது நற்செயல்களும் அப்புறம் அங்கீகரிக்கப்பட மாட்டாது. ஆனால் அதற்கு முன்னர் நற்செயல்களை செய்து கொண்டிருந்தவர்கள் அப்புறமும் நற்கரியைகளைச் செய்தால் அவைகள் அங்கீகரிக்கப்படும் இதனை குறித்து தான்

உமது றப்பின் அத்தாட்சிகளிற் சில வருகிற நாளில் எந்த ஆத்மாவுக்கும் (அத்தாட்சி வருவதற்கு) முன்னர் அது ஈமான் கொண்டதாக, அல்லது தன்னுடைய ஈமானில் நன்மையைச் சம்பாதித்ததாக இருக்கவில்லை (யே அந்த ஆத்மாவுக்கு) அது ஈமான் கொள்வது பயன்படாது என்று இறைவன் கூறி இருக்கிறான் என்று கூறினார்கள்.

இச்சமயத்தில் ஈமான் கொள்வதை அல்லாஹுத்தஆலா அங்கீகரிக்கமாட்டான் என்பதற்குக் காரணமென்னவெனில், அச்சமயம் உலகம் முடிவடைவதற்குரிய கடைசி வேளை, அல்லாஹுத் தஆலா பாவிகளை வேதனை செய்யும் வேளை. அவ்வேதனைகளைப் பார்த்த பின் ஈமான் கொள்வது, மனப்பூர்வமாக ஈமான் கொள்வதாக இல்லை. வேதனைக்கு அஞ்சி ஈமான் கொள்வதாகவே இருக்கிறது.

"நம்முடைய வேதனையை அவர்கள் பார்க்கும்போது, அவர்கள் ஈமான் கொள்வது அவர்களுக்குப் பயனளிக்கத்தக்கதாக இல்லை (குர்ஆன் 40:85 ) என்று இறைவன் கூறி இருக்கிறான். ஆகவே, மனப்பூர்வமாகச் செய்யாத காரியம் இறைவனால் அங்கீகரிக்கப்படமாட்டாது.

தவிர, மேற்குத் திசையில் சூரியன் உதயமாகி சூரியன் மறையும் அக்காலத்திற்குப் பிறகு பிறந்த குழந்தைகள், உதயமாகுவதற்குச் சில காலத்திற்கு முன் அல்லது உதயமாகும் வருடத்தில் பிறந்த குழந்தைகள் சன்மார்க்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டிய பருவ வயதை அப்புறம் அடைந்து, ஈமான் கொண்டால், அவர்களது ஈமான் அங்கீகரிக்கப்படும்.

https://m.facebook.com/story.php?story_fbid=4681196805244875&id=100000638059513&mibextid=Nif5oz

https://m.facebook.com/story.php?story_fbid=2042481789344499&id=100007480923921&mibextid=Nif5oz

தஜ்ஜால் வருவதற்கு ஏழு வருடங்களுக்கு முன் மஹ்தீ அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தோன்றுவார்கள், சூரியன் மேற்குத் திசையில் உதயமாகுவதற்குப் பத்து வருடங்களுக்கு முன் தஜ்ஜால் வருவான்.

இமாம் மஹ்தீ வருவதற்கு முன் கியாமத்து நாளுக்குரிய வேறு பல அடையாளங்களும் தோன்றும் என்று இமாம் ஸுயூத்தீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறி இருக்கிறார்கள்.

'அல்லாஹுத்தஆலா மனிதனது நஃப்ஸையும் இருதயத்தையும் ஈமான் என்ற வித்தை விதைப்பதற்கும், அது முளைப்பதற்கும்,வளர்வதற்கும் தகுதியான பூமியாக ஏற்படுத்தி இருக்கிறான் இதனைக் குறித்து நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "தண்ணீர் கீரையை முளைக்கச் செய்வது போல, "லாஇலாஹ இல்லல்லாஹு " என்பது இருதயத்தில் ஈமானை முளைக்கச் செய்கிறது" என்று கூறி இருக்கிறார்கள்.

ஆகவே, "அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹு, வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் ரசூலுல்லாஹி " என்று மனிதன் மனதார நம்பி, நாவால் உரைப்பதுதான் வித்தாக இருக்கிறது. இவ்வித்தை விதைப்பதற்குரிய காலம் இவ்வுலகத்தில் உயிருடன் இருக்கும் காலமாகும். மறுஉலகமல்ல.

இதனைக் குறித்துதான், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "இந்த உலகம் மறு உலகின் விவசாய பூமி' என்று கூறி இருக்கிறார்கள். ஆகவே, இவ்வுலகிலேயே ,ஈமான் கொள்ளாமல்,மறு உலகிற்குச் சென்றபிறகு ஈமான் கொள்வதும், அவனது ஈமானில் ஒரு நன்மையைச் சம்பாதிப்பதும் பயன்படாது என்று தாவீலாத்துன்னஜ்மிய்யா என்ற சிரந்தத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

**அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 222**
**(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 139 )**

اِنَّ الَّذِيْنَ فَرَّقُوْا دِيْنَهُمْ وَكَانُوْا شِيَـعًا لَّسْتَ مِنْهُمْ فِىْ شَىْءٍ اِنَّمَاۤ اَمْرُهُمْ اِلَى اللّٰهِ ثُمَّ يُنَـبِّـئُـهُمْ بِمَا كَانُوْا يَفْعَلُوْنَ

நிச்சயமாக எவர்கள் தங்களுடைய மார்க்கத்தை (தம் விருப்பப்படி பலவாறாகப்) பிரித்து, பல பிரிவினர்களாகப் பிரிந்து விட்டனரோ அவர்களுடன் (நபியே!) உமக்கு எவ்வித சம்பந்தமுமில்லை; அவர்களுடைய விஷயமெல்லாம் அல்லாஹ்விடமே உள்ளது - அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றைப் பற்றி முடிவில் அவனே அவர்களுக்கு அறிவிப்பான். (குர்ஆன் : 6:159)

"யூதர்கள் தங்களுடைய மார்க்கத்தில் பல பிரிவுகளை ஏற்படுத்தி 71 பிரிவினராகப் பிரிந்தனர். அவர்களில் ஒரு கூட்டத்தினரைத் தவிர்த்து மற்றவர் நரகிற்கே செல்வர்.
இவ்வாறே கிறிஸ்தவர்களில் 72 கூட்டத்தினராகப் பிரிந்தனர். அவர்களில் ஒரு கூட்டத்தினரைத் தவிர்த்து மற்றையோர் நரகிற்கே செல்வர்.
என்னுடைய கூட்டத்தினர் 73 பிரிவினராகப் பிரிவர் அவர்களில் ஒரு கூட்டத்தினரைத் தவிர்த்து மீதமுள்ளவர் நரகிற்குச் செல்வர்" என்று பெருமானார் (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்.
"அந்த ஒரு கூட்டத்தினர் யாவர்? அல்லாஹ்வின் தூதரே!" எனக் கேட்கப்பட்டது.
''நானும் எனது தோழர்களும் எந்தப் பாதையில் இருக்கிறோமோ அதிலிருப்பவர்" என்று பதிலளித்தார்கள்.
(இவர்கள் தாம் 'ஸுன்னத்துவல் ஜமா அத்'தைச் சேர்ந்த பரிசுத்தா கொள்கையுடைய கூட்டத்தினர் என அழைக்கப்படுகின்றனர்.) (அறிவித்தவர்: ஹள்ரத் அபூஹுரைரா (ரலி) நூல்கள்: அபூதாவூது, திர்மிதி, இப்னுமாஜா முதலியன.)
இவ்வசனத்திற்கு பெருமானாரின் இந்த வாக்கே விளக்கமாக அமைந்துள்ளது.
அல்லாஹ்வும், அவனுடைய தூதரும், அவர்களுடைய போதனைகளின் படி நடக்கும் அறிஞர் பெருமக்களும், எடுத்துக் கூறுகிற உண்மையான மார்க்கத்தில் சிலர் தங்களுடைய புதுப்புதுக் கொள்கைகளை உலக ஆதாயத்திற்காக புகுத்தி விடுவர். ஒன்றும் அறியாப் பொதுமக்களை ஏமாற்றித் தங்களுடைய புதிய மார்க்கத்தில் சேர்த்து விடுவர். இப்படியே பல பிரிவுகளை உண்டாக்கி விடுவார்கள்.
ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொரு கூட்டத்தினர் தோன்றி இஸ்லாத்தின் அடிப்படை கொள்கைகளுக்கு மாறான வழி கேடான பல கொள்கைகளைப் புகுத்திப் பல பிளவுகளை ஏற்படுத்தியதும், ஏற்படுத்திக் கொண்டிருப்பதும் வரலாற்றுப் பிரசித்தமான விஷயங்களாகும்.
நபி (ஸல்) அவர்களைத் தலைவராக அல்லாமல் ஆரம்பிக்கப்படும் புதுப்புது கூட்டத்தின் தலைவர்கள் மற்றும் அதன் ஆரம்ப காலமே நம்மால் புரிந்து கொள்ள முடியும். இது கேடுகெட்ட கூட்டம் என்று.
ஆனால், அவை அனைத்தும் அப்போதைக்கப்போது அடிபட்டு விடுகின்றன. அதனைப் புகுத்தியவர்களும் அழிந்து விடுகின்றனர். முடிவில் உண்மையான இஸ்லாமியக் கொள்கையே நிலை பெறுகிறது. இதனைக் கடைப்பிடிப்போரே சுவனம் செல்பவர்கள். இதனைக் குறித்தே நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் அறிவிக்கையில், 'என்னுடைய கூட்டத்தினரில் ஒரு சாரார் சத்தியத்தின் படி நடந்து மிகைத்தவர்களாக இருப்பர் என்று கூறியுள்ளார்கள்.
(அறிவித்தவர்: ஹள்ரத் முகைரா பின் ஷுபா (ரலி), நூல்: புகாரீ)
யூத, கிறிஸ்துவ, இஸ்லாமிய பிரிவினை கூட்டங்கள் இது நாள் வரையிலும் 71, 72, 73 பிரிவு தானா ? அதற்கும் மேல் எண்ணிக்கையில் பிரியாதா ?
என்றால், பிரியும். புதுப்புது கொள்கைகள் கொண்ட இயக்கங்கள் தலையெடுக்கும்போது, ஏற்கனவே பிரிந்திருந்த பழைய கூட்டங்களில் ஒன்று, கொண்ட கொள்கையையும் , ஏற்றுக் கொண்ட தலைவனையும் விட்டுப் பிரிந்து வலுவிழந்து, செயலற்றுப் போகும். எப்போதுமே 71, 72, 73 கூட்டங்கள் மிகைக்காமல் எப்போதுமே இருக்கும். காரணம் பொய்யா மொழியான நபிமொழி உண்மை அல்லவா !
இவ்விதமாகத் தங்களுடைய மார்க்கத்தைப் பிரித்து யார் பல பிரிவினராய் ஆகிவிட்டனரோ அவர்கள் நபியே! உம்மைச் சேர்ந்தவர்களல்லர். எந்த ஒன்றிலும் அவர்களுடன் நீர் சேர்ந்தவருமல்லர். அவர்களுக்கும் உமக்கும் எத்தகைய சம்பந்தமும் கிடையாது. ஏனெனில் நீரும் உம்மைச் சார்ந்தோரும் அல்லாஹ்வின் வழியில் செல்கிறவர்கள், அவர்கள் ஷைத்தானின் வழிநடப்பவர்கள்.
அவர்களுடைய காரியமெல்லாம் அல்லாஹ்விடமே இருக்கின்றன. அவர்களை எப்படி அடக்க வேண்டும். எத்தகைய தண்டனை கொடுக்க வேண்டும்? எப்போது கொடுக்க வேண்டும் என்பன அவனுக்குத் தெரியும். அது மட்டுமின்றி, அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றின் தவறுகளை மறுமை நாளிலும் அவர்களுக்கு அவன் நன்றாக உணர்த்தி விடுவான்.

ஆகையால், நீங்கள் அப்பிரிவினரைப் பொருட்படுத்தாமல், உங்களுக்கு அறிவிக்கப்பட்ட நன்மைகளை நீங்கள் செய்து கொண்டே இருங்கள்.

شَرَعَ لَكُمْ مِّنَ الدِّيْنِ مَا وَصّٰى بِهٖ نُوْحًا وَّالَّذِىْۤ اَوْحَيْنَاۤ اِلَيْكَ وَمَا وَصَّيْنَا بِهٖۤ اِبْرٰهِيْمَ وَمُوْسٰى وَعِيْسٰۤى اَنْ اَقِيْمُوا الدِّيْنَ وَ لَا تَتَفَرَّقُوْا فِيْهِ كَبُـرَ عَلَى الْمُشْرِكِيْنَ مَا تَدْعُوْهُمْ اِلَيْهِ اَللّٰهُ يَجْتَبِىْۤ اِلَيْهِ مَنْ يَّشَآءُ وَيَهْدِىْۤ اِلَيْهِ مَنْ يُّنِيْبُ

நூஹுக்கு எதனை அவன் உபதேசித்தானோ, அதனையே உங்களுக்கும் அவன் மார்க்கமாக்கியிருக்கின்றான்; ஆகவே (நபியே) நாம் உமக்கு வஹீ மூலம் அறிவிப்பதும், இப்ராஹீமுக்கும், மூஸாவுக்கும் , ஈஸாவுக்கும் நாம் உபதேசித்ததும் என்னவென்றால்: “நீங்கள் (அனைவரும்) சன்மார்க்கத்தை நிலை நிறுத்துங்கள், நீங்கள் அதில் பிரிந்து விடாதீர்கள்” என்பதே - இணைவைப்போரை நீங்கள் எதன் பக்கம் அழைக்கின்றீர்களோ, அது அவர்களுக்குப் பெரும் சுமையாகத் தெரிகிறது - தான் நாடியவர்களை அல்லாஹ் தன் பால் தேர்ந்தெடுத்துக் கொள்கிறான் - (அவனை) முன்னோக்குபவரை அவன் தன்பால் நேர்வழி காட்டுகிறான். (குர்ஆன் : 42:13)
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: " நபிமார்களாகிய நாங்கள் தந்தைவழிச் சகோதரர்கள் ஆவோம். எங்களின் மார்க்கம் ஒன்றுதான் (அறிவிப்பாளர் அபூஹுரைரா (ரலி) நூல் புகாரி 3443 )

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 223

(விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 140 )

مَنْ جَآءَ بِالْحَسَنَةِ فَلَهٗ عَشْرُ اَمْثَالِهَا وَمَنْ جَآءَ بِالسَّيِّئَةِ فَلَا يُجْزٰٓى اِلَّا مِثْلَهَا وَهُمْ لَا يُظْلَمُوْنَ

எவர் ஒருவர் (ஒரு) நன்மையைச் செய்கிறாரோ அவருக்கு அதுபோல் பத்துப் பங்கு (நன்மை) உண்டு; எவர் ஒருவர் (ஒரு) தீமையைச் செய்கிறாரோ அதைப்போன்ற அளவுடைய கூலியே கொடுக்கப்படுவார் - அவர்கள் அநியாயம் செய்யப்படவும் மாட்டார்கள். (குர்ஆன் : 6:160)
'எவர் ஒரு நன்மையைக் கொண்டு வருகிறாரோ அவருக்கு அது போன்ற பத்து இருக்கிறது'- என்பதற்கு ஒரு நன்மையான காரியத்தைச் செய்தவருக்கு கியாமத்துநாளில், அக்காரியத்திற்குரிய நற்பயனைப் பத்து மடங்கு அதிகமாகப் பெருக்கிக் கொடுக்கப்படும் என்பது கருத்து,
தவிர, ஒன்றுக்குப் பத்து என்று இந்த ஆயத்தில் குறிப்பிட்டிருப்பதில் பத்துக்கு அதிகமான நன்மைப் பயன் கிடைக்கமாட்டாது. பத்து மட்டும்தான் கிடைக்கும் என்பது கருத்தல்ல. ஒருவர் ஒரு நன்மையான காரியத்தைச் செய்தால், அதற்குரிய நன்மைப் பயனை மட்டும் கொடுக்காமல், அதிகமான நன்மைப் பயன்களைக் கொடுக்கப்படும் என்று கருத்துக் கொள்ள வேண்டும். என இமாம்கள் கூறி இருக்கிறார்கள்.
ஏனெனில், ஒரு நன்மைக்கு 70 மடங்கு அதிகமான நற்பயன் அளிக்கப்படும் என்றும், 700 மடங்கு அதிகமான நற்பயன் அளிக்கப்படும் என்றும், இதற்கு மேலும் அதிகமான நற்பயன் அளிக்கப்படும் என்றும் ஹதீஸ், தலீல்களில் கூறப்பட்டிருக்கின்றது.
குர்ஆனில் , (நபியே!) அல்லாஹ்வுடைய பாதையில் தங்களுடைய பொருளைச் செலவு செய்கின்றவர்களுடைய (பொருளின்) உதாரணம், ஒரு வித்தின் உதாரணத்தை ஒத்திருக்கின்றது. அ(ந்த வித்)து ஏழு கதிர்களைத் தந்தது. ஒவ்வொரு கதிரிலும் நூறு வித்துக்கள் (ஆக எழுநூறு வித்துக்கள் அந்த ஒரு வித்திலிருந்து உற்பத்தியாயின.) அல்லாஹ், தான் விரும்பியவர்களுக்கு (இதை பின்னும்) இரட்டிப்பாக்குகின்றான். ஏனெனில், அல்லாஹ் (வழங்குவதில்) மிக்க விசாலமானவனும், மிக அறிந்தவனுமாகவும் இருக்கின்றான்.(குர்ஆன் : 2:261)
நாம் ஒருவரிடத்தில் "நீர் எனக்கு இதனைச் செய்தால், அதனைப் பார்க்கினும் பத்துமடங்கு செய்வேன்" என்று கூறுவது வழக்கம். இவ்வாறு கூறும்போது ஒன்றுக்குப் பத்துச் செய்ய வேண்டும் என்ற எண்ணிக்கையை நாம் கருதுவதில்லை. ஒன்றுக்கு ஒன்று மட்டும் செய்யாமல் அதிகமாகவே செய்யவேண்டும் என்று நாம் கருதுகிறோம். இதுபோலவே, இந்த ஆயத்திலும், ஒருவர் ஒரு நன்மையைச் செய்தால், அவருக்கு அது போன்ற பத்து உண்டு என்று சொல்லப்பட்டிருக்கிறது.

தவிர, இவ்வுலகில் ஒருவருக்கொருவர் செய்துள்ள அக்கிரமங்களைக் குறித்து கியாமத்துநாளில் வழக்கேற்படும். அவ்வாறு வழக்கேற்பட்டால், அவர் செய்த நன்மையிலிருந்துதான் வழக்காளிகளுக்கு ஈடு செய்யப்படும். இந்நிலை ஏற்பட்டால், நன்மையை இழந்து வெறுங்கையாக ஆகிவிடாமலிருப்பதற்காக, இறைவன் தனது அடியார்கள் மீது கிருபை கூர்ந்து, ஒரு நன்மைக்குப் பத்து மடங்கு நற்பயனை அளிப்பதாகக் கூறி இருக்கிறான். ஆகவே, ஒரு நன்மை எதிரிக்கு ஈடு செய்யப்பட்டால், அதற்குரிய ஒரு பயன் மட்டும்தான் எதிரிக்கு ஈடுகொடுக்கப்படும். பாக்கி ஒன்பது நற்பயன் அதனைச் செய்தவருக்குக் கொடுக்கப்படும். இதனைக் குறித்து, "ஒருவருடைய ஒற்றைகள், அவனுடைய பத்துகளைப் பார்க்கினும் மிகைத்துவிடுகிறதே அவனுக்கு ''வைல்" என்னும் கேடு உண்டாவதாக" என்று ஹதீஸில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஹதீஸில் ஒற்றைகள் என்று கூறியது தீமைகளையும், பத்துகள் என்று கூறியது நன்மைகளையும் குறிக்கும்.
கிரியைகள் ஆறு வகைப்படும். வாஜிபாக்கி வைப்பவைகள் இரண்டு சரிக்குச் சரியானவை, நன்மைக்கு நன்மை, ஒரு நன்மைக்கு பத்து. ஒரு நன்மைக்கு எழு நூறு.வாஜிபாக்கி வைப்பவைகள் இரண்டு என்பதற்கு விபரம்
1. ஒருவர் அல்லாஹ்விற்கு எப்பொருளையும் இணையாக்காமல் இருக்கிற நிலையில் மரணிப்பாராயின், அவர் சுவர்க்கத்தில் பிரவேசிப்பார்.
2 அல்லாஹ்விற்கு இணைவைப்பவராக இருக்கிற நிலையில் ஒருவர் மரணிப்பாராயின், அவர் நரகம் புகுவார்.
3. சரிக்கு சரி என்பதற்கு விபரம் ஒருவர் ஒரு தீமையைச் செய்வாராயின், அத்தீமைக்குரிய தீமைப்பயன் மட்டும்தான் அளிக்கப்படும்.
4. நன்மைக்கு நன்மை என்பதற்கு விபரம் ஒருவர் ஒரு நன்மையான காரியத்தைச் செய்ய வேண்டும் என்று உள்ளத்தில் நினைக்கிறார். அவரது அந்த எண்ணத்தை அல்லாஹுத்தஆலா மட்டும்தான் அறிகிறான். வேறு யாருக்கும் இது தெரிவதில்லை. இவ்வாறான நல்ல எண்ணத்திற்கு நிகராக ஒரு நற்கூலி கொடுக்கப்படும்.
5. ஒரு நன்மைக்குப் பத்து என்பதற்கு விபரம் ஒருவர் ஒரு நன்மையான காரியத்தைச் செய்ய எண்ணி, அதனை அமுல்படுத்திவிடுவாராயின், அப்படிப்பட்ட நல்ல காரியத்திற்கு பத்துமடங்கு நன்மைப்பயன் அளிக்கப்படும்.
6. ஒரு நன்மைக்கு எழு நூறு மடங்கு நன்மைப்பயன் என்பதற்கு விபரம் ஃபீஸபீலில் செலவு செய்யப்படும் பணத்திற்கு ஒன்றுக்கு எழுநூறு மடங்கு நன்மைப்பயன் அளிக்கப்படும்.
நன்மைக்குப் பத்து !
நன்மை, தீமைகளைப் பிரித்தறிவிக்கும் அரும் பணிகளை செய்யக்கூடிய நன்மக்களாலும், அதை ஏற்றுக் கொண்ட நன்மக்களாலும் அவர்களும் மனிதர்கள் என்ற ரீதியில் சில நேரம் தவறிழைத்து விடும் சூழ்நிலைகள் ஏற்பட்டு விடுவதுண்டு. அதனால் பதியப்படும் பாவத்தால் அவர்களுடைய முந்தைய தியாகங்கள் அடிபட்டு விடாமல் இருப்பதற்காக அவர்களின் மீது கருணை கொண்ட அல்லாஹ் அதை ஒன்றாக மட்டுமேப் பதியச்செய்தான்.6:160. நன்மை செய்தவருக்கு அது போன்ற பத்து மடங்கு (பரிசு) உண்டு. தீமை செய்தவர், தீமை அளவே தண்டிக்கப்படுவார். அவர்கள் அநீதி இழைக்கப்பட மாட்டார்கள்.
தீமைக்கு ஒன்று !
நற்காரியங்களுக்கு பதியப்படும் ஒன்றுக்குப் பத்து என்ற அளவே தீயகாரியங்களுக்கும் பதியப்பட்டால் மக்களில் யாரும் அதை அநீதி என்று சொல்லப்போவதில்லை ஒன்றுக்கு ஒன்று கணக்கு சரிதான் என்றே கணிப்பர்;. உலகில் நற்காரியங்களை விட தீயகாரியங்களே மிகைத்திருப்பதால் தீமைக்கும் ஒன்றுக்கு பத்து மடங்குகளாக்கினால் தீமைகள், நன்மைகளை முந்தி விடும் அதன் மூலம் சுவனம் தடுக்கப்பட்டால் அது அவனுக்கு இழைக்கப்படும் அநீதி என்று அனைத்து மக்களின் மீதும் அளப்பரிய அன்புள்ளம் கொண்ட அல்லாஹ் தொலைநோக்கு சிந்தனையுடன் அதை ஒன்றாக மட்டுமேப பதிகிறான்.
அந்த ஒன்றையும் செயலிழக்கச் செய்வதற்கான அல்லாஹ்வின் சலுகை !
நிரந்தரமான சுவனத்தின் இன்பத்தை அனுபவிப்பதற்காக அந்த ஒரு பாவமும் அவருடன் நிரந்தரமாக தங்கி விடாமல் அதையும் செயலிழக்கச் செய்வதற்காக அதன் பின்னர் செய்யும் நன்மையைக் கொண்டு அதை அழித்து விடுவதாகவும் பலஹீன மனிதனின் மீது கருணை கொண்ட நிகரற்ற அன்புடையோன் அல்லாஹ்

மேலும் ஒரு மகத்தான சலுகையை வழங்குகிறான். ...நன்மைகள் தீமைகளை அழித்து விடும். இது படிப்பினை பெறுவோருக்குப் படிப்பினை. 11:114.
அந்த ஒன்றையும் தடுத்துக் கொள்வதற்கான அண்ணலாரின் அழகிய உபதேசங்கள்.
நீ எங்கிருந்தாலும் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்! ஒரு தீங்கைத் தொடர்ந்து நல்லதை செய்துகொள்! அந்த நன்மை தீங்கை அழித்துவிடும், மக்களிடம் நற்குணத்துடன் நடந்துகொள் என்று இறைத்தூதர் (ஸல்)அவர்கள் கூறியதாக அபூதர் மற்றும் முஆத் இப்னு ஜபல்(ரலி)ஆகியோர் அறிவிக்கின்றனர்.நூல்: திர்மிதி.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 224
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 141)

قُلْ اِنَّنِىْ هَدٰٮنِىْ رَبِّىْۤ اِلٰى صِرَاطٍ مُّسْتَقِيْمٍ دِيْنًا قِيَمًا مِّلَّةَ اِبْرٰهِيْمَ حَنِيْفًا‌ وَمَا كَانَ مِنَ الْمُشْرِكِيْنَ

நிச்சயமாக, எனது றப்பு எனக்கு நேரான பாதையை அளித்தான். (அதாவது) செவ்வையான மார்க்கத்தில் தவறான மார்க்கங்களை விட்டுச் சாய்ந்தவராக இருக்கிற இப்ராஹீமுடைய மார்க்கத்தில் என்னைச் சேர்த்திருக்கிறான். மேலும், அவர் முஷ்ரிக்குகளில் உள்ளவராக இருக்கவில்லை என்று நீர் கூறுவீராக.(குர்ஆன் 6:161)
ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அரபியராலும், யூதர், கிறிஸ்துவர் போன்ற இதர சமூகத்தாராலும் மதிக்கப்பட்டும், போற்றப்பட்டும் வந்தார்கள். தவிர, ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களது மார்க்கத்திலேயே இருப்பதாக ஒவ்வொருவரும் தங்களைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தனர். ஆதலால், ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் முஷ்ரிக்காக இருக்கவுமில்லை. தவறான மார்க்கத்தை விட்டு ஒதுங்கி,நேரான மார்க்கத்தில் அதாவது அல்லாஹுத்தஆலாவின்
வஹியின்படியே நடந்தார்கள் என இங்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது.
மேலும், இந்த ஆயத்து யூதர் கிறிஸ்துவர் முஷ்ரிக்குகள் ஆகியவர்களது எண்ணத்தை மறுப்பதாகவும் இருக்கிறது. யூதர்கள் ஹளரத் உஜைர் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அல்லாஹ்வின் புதல்வர் என்றும், கிறிஸ்தவர்கள் ஹளரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை அல்லாஹ்வின் புதல்வரென்றும் கருதுவதால், கொள்கை சம்பந்தப்பட்ட வரையில் முஷ்ரிக்குகளாய் இருக்கிறார்கள். அறபியர் விக்கிரகங்களை வணங்குவதால் கிரியாம்சையில் முஷ்ரிக்குகளாக இருக்கிறார்கள்.
அல்லாஹுத்தஆலா தனது அடியார்களுக்கு சட்ட திட்டங்களை ஏற்படுத்தி இருப்பதற்கு, அதாவது அவன் ஏற்படுத்தி இருக்கிற ஷரீஅத்தில் எழுதிக் கோர்வை செய்யப்பட்டிருக்கிறது என்ற கருத்தின் படி, அதற்கு "மில்லத்" என்று பெயர். தவிர, அந்த ஷரீஅத் யாருக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிறதோ. அவர்களது வழிபாட்டைக் கவனித்து அதற்கு தீன் என்று பெயர்.

"யூதம்
எபிரேயர்களின் மூதாதையர்களில் ஒருவரான ஆபிரகாம் யூத மதத்தை நிறுவினார். மேலும் யூத மத கோட்பாடுகள் மோசேயால் விளக்கப்பட்டது. ஏகத்துவ மதமான யூத மதம் பிறந்து சுமார் 4000 ஆண்டுகள் கடந்துவிட்டது. யூத மதம் சுமார் 15 மில்லியன் யூதர்களைப் பின்பற்றுபவர்களைக் கொண்ட ஒரு சிறிய மதமாகும். ஜெருசலேம் அதன் புனித நகரமாக உள்ளது. யூத மதம் 12 சந்திர மாதங்களைக் கொண்டுள்ளது. அவை 29 மற்றும் 30 நாட்களுக்கு இடையில் மாறி மாறி வருடத்திற்கு 353, 354 அல்லது 355 நாட்களை கொண்டிருக்கும்.
யூதர்களின் கூற்றுப்படி கடவுள் ஒருவரே. கடவுள் பிரபஞ்சத்தின் படைப்பாளராக மட்டுமல்ல, ஒவ்வொரு யூதனுடனும் தனிப்பட்ட உறவைக் கொண்டவராகவும் பார்க்கப்படுகிறார். அவர்கள் ஒரு மீட்பரை, உலக ஆட்சியாளரைத் தேடுகிறார்கள். அவர்கள் சொர்க்கம் இருப்பதை நம்பினாலும், இந்த கிரகத்தில் இறந்த யூதர்கள்

எங்கு செல்ல வேண்டும் என்பதை கடவுள் தீர்மானிப்பார் என்று அவர்கள் நம்புகிறார்கள். யூத மத சட்டத்தின் அடிப்படை விதி பத்து கட்டளைகள். ஹலக்கா என்பது யூத நம்பிக்கையின் மதச் சட்டமாகும்.

ஹீப்ரு பைபிளின் ஐந்து தொகுதிகளில் (தனக்) தோரா மிகவும் மதிக்கப்படுகிறது. கடவுள் தோராவை சினாய் மலையில் வைத்து மோசேயிடம் கொடுத்தார். யூத வாய்மொழி மற்றும் எழுதப்பட்ட உரையான டால்முட் ஒரு முக்கிய இடத்தை வகிக்கிறது. ஹீப்ரு என்பது வலமிருந்து இடமாகப் படிக்கப்படுகிறது. ஜெப ஆலயம் என்பது யூத மத இடமாகும், அங்கு யூதர்கள் வழிபடவும் பிரார்த்தனை செய்யவும் கூடுகிறார்கள். இந்த ஜெப ஆலயங்களுக்குள், ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஒதுக்கப்பட்ட இடங்களை ஒரு பகிர்வு பிரிக்கிறது. ஒரு யூத ரப்பி பிரார்த்தனை சேவையை வழிநடத்துவார். மேலும் சனிக்கிழமை ஓய்வு, பிரதிபலிப்பு மற்றும் விருந்தோம்பல் நாளாக அனுசரிக்கப்படுகிறது, இது சப்பாத் என்று அழைக்கப்படுகிறது.
யூதர்களின் ஒரே கோவிலான ஜெருசலேம் கோவில் இரண்டு முறை அழிக்கப்பட்டது. ஜெருசலேமில் மூன்றாவது கோவில் என்பது “சாலமோனால் கட்டப்பட்ட மற்றும் நியோ-பாபிலோனிய பேரரசால் அழிக்கப்பட்ட முதல் கோவிலையும், சைரஸின் அனுமதியுடன் கட்டப்பட்ட மற்றும் ரோம பேரரசால் அழிக்கப்பட்ட இரண்டாவது கோவிலையும் அடுத்து மூன்றாவது கோவிலை நிர்மாணிப்பதற்கான ஒரு அனுமான குறிப்பு” ஆகும்.
கிறிஸ்தவம்
கி.பி 30 இல் ஜெருசலேமில் இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டதே கிறிஸ்தவத்தின் தோற்றம் ஆகும். இயேசு சிலுவையில் அறையப்பட்ட பிறகு, அவருடைய சீடர்கள் அவரை மீட்பர் என்று தழுவினர். 2.3 பில்லியன் பின்தொடர்பவர்களுடன், கிறிஸ்தவம் உலகின் மிகவும் பிரபலமான மதமாகும், இது 2000 ஆண்டுகளுக்கு முன்பு இயேசுவின் போதனைகளின் அடிப்படையில் நிறுவப்பட்டது.
இயேசு கிறிஸ்து கடவுளின் மகன் என்று கிறிஸ்தவர்கள் நம்புகிறார்கள். மனிதகுலத்தை பாவத்திலிருந்து மீட்க கடவுள் தம்முடைய குமாரனை அனுப்பினார் என்றும், இயேசு சிலுவையில் அறையப்பட்டு, மரித்து, மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார் என்றும் அவர்கள் நம்புகிறார்கள். பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்ட மீட்பர் இயேசு என்று அவர்கள் நம்புகிறார்கள். பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவர்கள் மூவரும் ஒரே தெய்வீகமாக இருப்பது திரித்துவம் என்று அழைக்கப்படுகிறது. திரித்துவம் பற்றிய கருத்து கடவுளைப் பற்றிய ஒரு முக்கியமான கிறிஸ்தவ வலியுறுத்தலாகக் கருதப்படுகிறது. கடவுள் பிரபஞ்சத்தைப் படைத்தார் என்று அவர்கள் நம்புகிறார்கள். கேனான் என்பது கிறிஸ்துவ நம்பிக்கையின் மதச் சட்டமாகும்.
கிறிஸ்தவர்கள் கடவுளுடன் தனிப்பட்ட உறவை வளர்த்து கொள்ள விரும்புகிறார்கள் மற்றும் இரட்சிப்புக்கான செயல்களை விட விசுவாசத்தை நம்புகிறார்கள். அவர்கள் கடவுளின் இயல்பை படிப்பதையும், சொர்க்கமும் நரகமும் இருப்பதாகவும், பைபிள் கடவுளால் எழுதப்பட்ட செய்தி என்றும் நம்புகிறார்கள். அவர்கள் சம்பாதிப்பதில் பத்தில் ஒரு பங்கை சமூகத்திற்கு வழங்க வேண்டும். பைபிள் ஒரு புனித நூலாகும், இது இரண்டு பகுதிகளாக பிரிக்கப்பட்டுள்ளது: பழைய ஏற்பாடு மற்றும் புதிய ஏற்பாடு. பழைய ஏற்பாடு யூதர்களுக்குப் புனிதமான புத்தகம், புதிய ஏற்பாடு கிறிஸ்தவர்களுக்குப் புனிதமான புத்தகம். பலிபீடம் கட்டப்பட்டுள்ள தேவாலயத்தில் கிறிஸ்தவர்கள் கடவுளை வணங்குகிறார்கள். கத்தோலிக்க வழிபாடு பாதிரியார்களால் வழிநடத்தப்படும், மற்ற அனைத்து கிறிஸ்தவ குழுக்களும் போதகர்களால் வழிநடத்தப்படும். ஞாயிற்றுக்கிழமை வழிபாட்டுக்கு உரிய நாளாகும்.
இஸ்லாம்
கிபி 610 மற்றும் 632 க்கு இடையில், முகமது இஸ்லாமிய மதத்தை நிறுவினார். இஸ்லாம் உலகின் இரண்டாவது பெரிய மதமாகும், 1.9 பில்லியன் பின்பற்றுபவர்கள் உள்ளனர். இது சுமார் 1400 ஆண்டுகளுக்கு முன்பு குர்ஆன் போதனைகளின் அடிப்படையில் நிறுவப்பட்டது. இது அனைத்தும் அரேபியாவில் தொடங்கியது, இஸ்லாமிய

நம்பிக்கையைப் பின்பற்றுபவர்கள் முஸ்லீம்கள் என்று அழைக்கப்படுவர். எல்லாம் வல்ல ஒற்றை கடவுள் அல்லாஹ் என்று முஸ்லீம்கள் நம்புகிறார்கள். இஸ்லாமிய நாட்காட்டியில் 12 பிறைகளுடன் 354 நாட்கள் உள்ளன. குர்ஆன் முஸ்லீம்களின் புனித புத்தகம், அது அவர்களின் நம்பிக்கைகள் மற்றும் செயல்களுக்கு அடிப்படையாக செயல்படுகிறது. குர்ஆன் அல்லாஹ்விடமிருந்து வெளிப்பட்டது என்று நம்பும் முஸ்லீம்கள் குர்ஆனை மிகவும் மரியாதையுடன் நடத்துகிறார்கள். உண்மையான குர்ஆன் அரபு மொழியில் எழுதப்பட்டு இடமிருந்து வலமாக வாசிக்கப்படுகிறது. மசூதி என்பது முஸ்லீம்களின் வழிபாட்டுத் தலமாகும். அவர்கள் 5 மணி நேர தொழுகைக்காக மசூதியின் தூபிக்கு வரவழைக்கப்படுவார்கள். வெள்ளிக்கிழமை பிரார்த்தனைக்கு உரிய நாளாகும். ஷரியா என்பது இஸ்லாமிய நம்பிக்கையின் மதச் சட்டமாகும். முஸ்லீம் வழிபாட்டாளர்கள் மசூதியில் இமாம் தலைமையில் பிரார்த்தனை செய்கிறார்கள்.
அல்லாஹ்வைத் தவிர வேறு கடவுள் இல்லை என்றும், முஹம்மது கடவுளின் தூதர் என்றும் நம்புவது, ஒரு நாளைக்கு ஐந்து வேளை பிரார்த்தனை செய்வது, ஒருவருடைய வருமானத்தில் ஒரு பகுதியை நன்கொடையாக வழங்குவது, தர்மம் செய்வது, ரமலானில் நோன்பு நோற்பது, வாழ்நாளில் ஒருமுறையாவது மக்காவுக்குச் செல்வது ஆகியவை முஸ்லீம்களின் முதன்மைக் கடமைகளில் அடங்கும். ஒரு ரபி யூத பிரார்த்தனைகளையும், ஒரு பாதிரியார் கிறிஸ்தவ ஜெபங்களையும் நடத்துகிறார். ஆனால், இஸ்லாத்தில் பிரார்த்தனைகளை வழிநடத்துவது என்பது பொதுவாக மற்ற இரண்டு மதங்களை போல ஒரு தனிநபரின் முழு பொறுப்பை காட்டிலும் சமூக பொறுப்பாக கருதப்படுகிறது."

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 225
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 142)

பண்டையய அரபியர்களின் கடவுட் கொள்கையைப் பற்றிய தொகுப்பு :-
அரபிகள் ஒருபோதும் கடவுள் நம்பிக்கையற்றவர்களாய் இருந்ததில்லை. ஆனால் ஏகனும், எவர் தயவும் – தேவையும் அற்றவனுமான இறைவன் தன்னைப் பற்றி எவ்வாறு குறிப்பிடுகின்றானோ, அந்தப் பொருளில் இறைவனை அவர்கள் புரிந்து கொண்டிருக்கவில்லை! அவனுக்கு இணை கற்பித்துக் கொண்டிருந்தார்கள். இறைவனை எப்படி கண்ணியப்படுத்த வேண்டுமோ அவ்வாறு கண்ணியப் படுத்தாதவர்களாகவும், எவ்வாறு அவனை வணங்கிட வேண்டுமோ அவ்வாறு வணங்காதவர்களாகவும் இருந்து வந்தார்கள். தமது முன்னோர்களில் நல்லடியார்களாகவும், கண்ணியத்திற்குரியவர்களாவும் திகழ்ந்தவர்களுக்கோ, அல்லது வானவர்களுக்கோ நினைவுச் சின்னங்களாகத் தாம் வடித்த சிலைகளை இறைவனுக்கு இணையாக்கிக் கொண்டிருந்தார்கள். வானவர்களை இறைவனின் பெண்மக்கள் எனக் கருதிக் கொண்டிருந்தார்கள். சில சமயங்களில் அந்தச் சிலைகளை மறந்துவிட்டு இந்தத் தேவைதைகளை வணங்கிக் கொண்டிருப்பார்கள்.
اَفَرَءَيۡتُمُ اللّٰتَ وَالۡعُزّٰىۙ

நீங்கள் (ஆராதிக்கும்) லாத்தையும், உஸ்ஸாவையும் கண்டீர்களா?

(அல்குர்ஆன் : 53:19)
وَمَنٰوةَ الثَّالِثَةَ الۡاُخۡرٰى

மற்றும் மூன்றாவதான “மனாத்”தையும் (கண்டீர்களா?)

(அல்குர்ஆன் : 53:20)

1) ‘நக்லா’ என்ற இடத்தில் ‘உஜ்ஜா’ என்ற சிலை இருந்தது. இதுவே குறைஷிகளுடைய சிலைகளில் மகத்துவம் மிக்கதாக இருந்தது.

ஷைபான் கிளையினர் அந்தச் சிலையின் பூசாரிகளாக இருந்தனர். மக்காவில் வெற்றிப் பணிகள் முடிந்து முழு அமைதி நிலவிய பின்பு (ஹிஜ்ரி 😎ரமழான் மாதம் முடிய ஐந்து நாட்கள் மீதமிருக்கும்,
நபி (ஸல்) காலித் இப்னு வலீதை முப்பது வீரர்களுடன் அந்தச் சிலையை உடைத்தெறிய அனுப்பினார்கள். அதை உடைத்து வந்த காலிதிடம் "ஏதாவது அங்கு கண்டீர்களா?" என்று நபி (ஸல்) கேட்க, அவர் "நான் எதையும் காணவில்லை" என்றார்.
"அப்படியானால் நீ அதனைச் சரியாக உடைக்கவில்லை. திரும்பச் சென்று அதனை உடைத்து வா!" என்று அனுப்பி வைத்தார்கள்.
நபி (ஸல்) அவர்களின் இப்பேச்சைக் கேட்டு வெகுண்டெழுந்த காலித் (ரழி) வாளை உருவியவாறு தனது தோழர்களுடன் உஜ்ஜாவை நோக்கி பறந்தார். அச்சிலையருகே சென்றவுடன் தலைவிரி கோலமாக நிர்வாண நிலையில் கருத்த பெண் உருவம் ஒன்று காலிதை நோக்கி வந்தது.
அங்குள்ள பூசாரி உஜ்ஜாவின் பெயரைக் கூறி சப்தமிட்டு அழைத்தான். காலித் (ரழி) தன் முன் தோன்றிய அவ்வுருவத்தை இரண்டாகப் பிளந்தார். பின்பு நபியவர்களிடம் திரும்பி வந்து நடந்த நிகழ்ச்சியை விவரித்தார்.
"ஆம்! அதுதான் உஜ்ஜா. இனி, உங்கள் ஊர்களில் யாரும் அதனை வணங்குவதிருந்து நிராசையடைந்து விட்டது" என நபி (ஸல்) நவின்றார்கள்.
2) 'குதைத்' என்ற ஊரருகே 'முஷல்லல்' என்ற இடத்தில் 'மனாத்' எனும் சிலை இருந்தது. அதனை 'அவ்ஸ்", 'கஸ்ரஜ்", 'கஸ்ஸான்' மற்றும் சில குலத்தவர் வணங்கிக் கொண்டிருந்தனர்.
அதனை இடித்து வர ஸஅத் இப்னு ஜைத் அஷ்ஹலி (ரழி) அவர்களின் தலைமையில் இருபது பேர் கொண்ட படையை இதே மாதத்தில் நபி (ஸல்) அனுப்பினார்கள். ஸஅது (ரழி) அங்கு சென்றபோது அங்குள்ள பூசாரி "நீ எந்த நோக்கத்தில் வந்திருக்கின்றாய்?" என்று வினவ "மனாத்தை உடைக்க வந்துள்ளேன்" என்று பதிலளித்தார். "நீ விரும்பியதைச் செய்து கொள்" என பூசாரி மறுமொழி கூறினார்.
ஸஅது அச்சிலையருகே வந்தபோது கருநிற பெண்ணொருத்தி தலைவிரி கோலமாக மார்பில் அடித்துக் கொண்டு வெளியேறி வந்தாள். அதைக் கண்ட பூசாரி "மனாத்தே! நீ உன்னைக் காப்பாற்றிக் கொள்! இதோ உனது எதிரிகள் உன்னை ஒழித்துக் கட்ட வந்து விட்டனர்" எனக் கூக்குரலிட, ஸஅது (ரழி) அச்சிலையை வெட்டிச் சாய்த்தார்.
ஆதார நூல் : ரஹீக் (முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கை வரலாறு) பக்கம் 457
சிலைகளையோ அல்லது தேவதைகளையோ எதை வணங்கிய போதும் அவையெல்லாம் தம்மை இறைவனிடம் சமீபிக்கச் செய்பவை என்கிற நம்பிக்கையிலேயே வணங்கி வந்தார்கள். இது பற்றித் திருக்குர்ஆனில்..
''அல்லாஹ்விடம் எங்களை மிகவும் நெருக்கமாக்குவார்கள் என்பதற்காகவே தவிர இவர்களை வணங்கவில்லை'' (என்று கூறுகின்றனர்) (திருக்குர்ஆன், 39:3).
இறைவன் மீது அரபியர்கள் நம்பிக்கை கொண்டிருந்ததுடன் (பார்க்க: 29:61,63 ஆகிய வசனங்கள்) அவனுக்கு இணையும் கற்பித்துக் கொண்டிருந்தார்கள். அது அவர்களின் சமயச் சடங்குகள், மத ஆச்சாரங்கள், சித்தாந்தங்கள் அனைத்திலும் காணமுடியும். அவர்கள் தமது குழந்தைகள், கால்நடைகள், விவசாய மகசூல்கள் ஆகியவற்றில் ஒரு குறிப்பிட்ட விகிதாச்சாரத்தைத் தமது தெய்வங்களுக்கென ஒதுக்கி வந்தார்கள்.
சில சமயங்களில் அவர்களின் தெய்வங்கள் மீது அவர்கள் கொண்டிருந்த பக்தியானது அவர்களின் ஆண் குழந்தைகளை அவற்றிற்காக நரபலி கொடுத்திடவும் அவர்களைத் தூண்டியது. அவர்களின் இந்தச் சீர்கேடுகளையும், குழப்பங்களையும் பற்றித்தான் திருக்குர்ஆன், அல்அன்ஆம் அத்தியாயத்தின் வசனங்களில் பின்வருமாறு சுட்டிக்காட்டுகிறது.
6:136. ''அல்லாஹ் உண்டாக்கிய விளைச்சலிலிருந்தும், கால்நடைகளிலிருந்தும் அல்லாஹ்வுக்கென ஒரு பாகத்தை ஏற்படுத்தினார்கள். இன்னும் அவர்களின் எண்ணப்படி இது அல்லாஹ்வுக்கு என்றும், இது எங்களுடைய இணை தெய்வங்களுக்கு என்றும் சொல்கிறார்கள்; அவர்கள் தங்கள் தெய்வங்களுக்கென்று குறிப்பிட்ட பாகத்தில்

எதுவும் அல்லாஹ்வுக்குச் சேர்வதில்லை அல்லாஹ்வுக்கு ஆகியிருப்பது அவர்கள் தெய்வங்களுக்குச் சேரும் என்றும் சொல்கிறார்கள். அவர்கள் செய்யும் இம்முடிவு மிகவும் கெட்டதாகும்.''
6:137. ''இவ்வாறே இணை வைப்போரில் பெரும்பாலோருக்கு, அவர்களுடைய குழந்தைகளையே கொலை செய்வதை அவர்களுடைய தெய்வங்கள் அழகாக்கி வைத்துள்ளன. அவர்களை நாசப்படுத்தி, அவர்களுடைய மார்க்கத்தையும் குழப்பத்திலாக்கிவிட்டன. அல்லாஹ் நாடியிருந்தால் அவர்கள் அப்படிச் செய்திருக்க மாட்டார்கள். எனவே (நபியே!) நீர் அவர்களையும், அவர்களுடைய பொய்யான கூற்றுக்களையும் விட்டு விலகி விடுவீராக.''
6:138. ''இன்னும் அவர்கள் (தம் கால்நடைகளைக் குறிப்பிட்டு); ஆடு, மாடு, ஒட்டகம், விவசாயத்தில் காணும் இந்த விளைச்சல் ஆகியவற்றை நாம் விரும்புபவர்களைத் தவிர வேறு யாரும் புசிப்பது தடுக்கப்பட்டுள்ளது'' என்று கூறுகின்றனர். மேலும் சில கால்நடைகளைச் சவாரி செய்யவும், சுமைகளைச் சுமந்து செல்லவும் பயன் படுத்துவது தடுக்கப்பட்டுள்ளது என்றும், இன்னும் சில கால்நடைகளை அறுக்கும்போது அல்லாஹ்வின் பெயரைக் கூறக்கூடாதென்றும், அல்லாஹ்வின் மீது பொய்யாகக் கற்பனை செய்து சொல்கிறார்கள். (அல்லாஹ்) அவர்களுடைய பொய்க் கூற்றுகளுக்காக அவர்களுக்குக் கூலி கொடுப்பான்.''
6:139. ''மேலும் அவர்கள், ''இந்தக் கால் நடைகளின் வயிற்றில் இருக்கும் குட்டிகள் எங்கள் ஆண்களுக்கு மட்டுமே சொந்தம். அவை எங்கள் பெண்களுக்குத் தடுக்கப்பட்டுள்ளன; அவை செத்துப் பிறந்தால், அவற்றில் அவர்களுக்கும் பங்கு உண்டு'' என்றும் கூறுகிறார்கள். அவர்களுடைய (இந்தப் பொய்யான) கூற்றுக்கு அவன் தக்க கூலி கொடுப்பான்; நிச்சயமாக அவன் பூரண ஞானமுடையோனும், (யாவற்றையும்) அறிந்தவனுமாக இருக்கின்றான்.''
6:140. ''எவர்கள் அறிவில்லாமல் மூடத்தனமாக தம் குழந்தைகளைக் கொலை செய்தார்களோ, இன்னும் தங்களுக்கு அல்லாஹ் உண்ண அனுமதித்திருந்ததை அல்லாஹ்வின் மீது பொய் கூறி (ஆகாதென்று) தடுத்துக் கொண்டார்களோ, அவர்கள் வழிகெட்டு விட்டனர், நேர்வழி பெற்றவர்களாக இல்லை.''
மேலும் அவர்கள் தம்மை இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய மார்க்கத்தின்படி நடப்பவர்களென்றும், தம்முடன் அரபு தீபகற்பத்தில் வசிப்பவர்களான வேதம் கொடுக்கப்பட்ட யூத, கிறிஸ்தவ சமுதாயத்தவர்களைவிடத் தாமே நேர்வழியில் நடப்பவர்களென்றும் நம்பிக் கொண்டிருந்தனர்.
யூதர்கள் உஸைர் அலைஹிஸ்ஸலாம் அவர்களை இறைவனின் குமாரர் என்றும், கிறிஸ்தவர்கள் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை இறைவனின் குமாரர் என்றும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். (பார்க்க: 9:30 வசனம்)
இவர்களுக்கு மத்தியில், இறைவனுக்கு ஈஸா, உஸைர் அலைஹிஸ்ஸலாம் ஆகியோரைவிட மிக நெருக்கமாவர்களாக அவர்கள் நம்பிக் கொண்டிருந்த வானவர்களையும் - தேவதைகளையும் அவர்கள் வணங்கி வந்ததால் தம்மை யூத, கிறிஸ்தவர்களைவிட அதிக நேர் வழியில் இருப்பதாகக் கருதிக்கொண்டிருந்தார்கள். மொத்தத்தில் அவர்கள் தம்மை வேறெந்த சமூகத்தையும் விட மிக்க நேரான வழியில் இருக்கும் சிறந்த சமுதாயமாகவே கருதி வந்தனர்.
இதற்கிடையில் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இஸ்லாத்தை அறிமுகப்படுத்தி, ''இப்றாஹீம் (அலைஹிஸ்ஸலாம்) அவர்களின் உண்மையான மார்க்கம் இதுதான்'' எனக் கூறினார்கள். ''இல்லை! நாங்கள் இருப்பதுதான் இப்றாஹீம் நபியின் மார்க்கம், எனவே நாங்கள் அதை விட்டுவிட்டு முஹம்மதைப் பினபற்றத் தேவையில்லை!'' என அவர்கள் கூறினார்கள்.
எனினும் முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) கூறும் இறைவனுக்குத் தாம் தலைவணங்குவதாகவும், அதற்காக தங்கள் தெய்வங்களுக்கு முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) தலைவணங்க வேண்டுமென்றும், அவர்களின் தெய்வங்களைப் பற்றியும் - அவர்களின் வணக்க வழிபாடுகள் பற்றியும் முஹம்மது (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) எவ்விதக் குறையும் கூறக்கூடாது என்றும், முஹம்மதும் இதுபற்றி எந்த நிபந்தனையும் விதிக்கலாம் என்றும் ஒரு சமாதான உடன்பாட்டுக்கு முயற்சி செய்தார்கள்.

அவர்களின் சித்தாந்தங்களிலும், சிந்தனைப் போக்குகளிலும் ஒரு தெளிவில்லாத குழப்பநிலை இருந்ததும், பல தெய்வ வழிபாடுகளுடன் இறைவனையும் அவர்கள் ஏற்றுக்கொண்டிருந்ததும், முஹம்மதுக்கும் அவர்களுக்குமிடையிலுள்ள தூரம் அதிகமில்லை என அவர்களை நினைக்க வைத்தது. ஒரு நகரத்தை இருபகுதிகளாகப் பிரிப்பதைப் போலவும், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து எல்லைத் தகராறுகளைத் தீர்த்துக் கொள்வது போலவும் இந்தப் பிரச்சினையை அவர்கள் கருதியதற்கு இதுவே காரணமாக இருந்தது. இந்த ஐயத்தைப் போக்கவும், போலிச் சாக்குப் போக்குகள் கூறித் தட்டிக் கழிப்பதற்கு அறவே வழியில்லாமல் ஆக்கவும் இரு வணக்கங்களுக்கும், இரு நெறிகளுக்கும், இரு வழிகளுக்கும், இரு சித்ததாந்தங்களுக்கும் இடையிலுள்ள இடைவெளி இட்டு நிரப்ப முடியாதது என்பதைத் தெளிவுப்படுத்திடவே உறுதியான வார்த்தைகளுடனும், வலியுறுத்தல்களுடனும், மீண்டும் மீண்டும் ஒன்றைத் திரும்பத் திரும்பச் சொல்லும் தோரணையில் இந்த அத்தியாயம் அருளப்பட்டது.

இது அத்தனை சச்சரவுகளுக்கும் ஒரு முடிவுகட்டி விடுகிறது. அத்தனைப் பேச்சுக்களுக்கும் ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிடுகிறது. ஏகத்துவத்திற்கும், ஏகத்துவ மறுப்புக்குமிடையிலுள்ள வேறுபாட்டை நன்கு தெளிவுபடுத்தி விடுகிறது. சிறிய, பெரிய எல்லாப் பிரச்சினைகளுக்கும், விவாதத்திற்கும் அறவே இடமில்லாதவாறு எல்லைக் கற்களை மிகத் தெளிவாகப் பதித்து விடுகிறது.
109:1. ''(நபியே!) நீர் சொல்வீராக: நிராகரிப்போரே!''
109:2. ''நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்கமாட்டேன்.
109:3. ''இன்னும், நான் வணங்குகிறவனை நீங்கள் வணங்குகிறவர்களல்லர்.
109:4. ''அன்றியும், நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்குபவனல்லன்.
109:5. ''மேலும், நான் வணங்குபவனை நீங்கள் வணங்குபவர்கள் அல்லர்.
109:6. ''உங்களுக்கு உங்களுடைய மார்க்கம், எனக்கு என்னுடைய மார்க்கம்.''
இந்த அத்தியாயம் முழுவதும் மறுப்புக்கு மேல் மறுப்பு, உறுதிக்கு மேல் உறுதி, வலியுறுத்துலுக்கு மேல் அழுத்தமான வலியுறுத்தல் என்று மறுப்பது, உறுதிப்படுத்துவது, வலியுறுத்துவது ஆகியவற்றுக்கான அனைத்து முறைகளும் கையாளப்பட்டுள்ளன.
109:2 ''நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்கமாட்டேன்.''
எனது வணக்கம் உங்கள் வணக்கமாகாது! எனது வணக்கத்திற்குரியவன் உங்களால் வணங்கப்படுபவையாய் ஆகமாட்டான்!
109:3. ''இன்னும், நான் வணங்குகிறவனை நீங்கள் வணங்குகிறவர்களல்லர்.''
உங்கள் வணக்கம் எனது வணக்கமாகாது! உங்களால் வணங்கப்படுபவை எனது வணக்கத்திற்குரியவனாகமாட்டா!
109:4. ''அன்றியும், நீங்கள் வணங்குபவற்றை நான் வணங்குபவனல்லன்.''
அத்தியாயத்தின் முதல் வாக்கியமான வினைச்சொல் வாக்கியத்தின் கருத்தே பெயர்ச்சொல் வாக்கியத்தால் இங்கே மீண்டும் வலியுறுத்தப்படுகிறது. இறைவனைத் தவிர உள்ள ஏனையவற்றை வணங்காத பண்பு என்னில் ஊறிப்போய் விட்ட, நீடித்த நிலைத்த பண்பாகி விட்டிருக்கிறது என்பதை இந்த வாக்கியம் மிகச் சிறப்பாக உணர்த்துகிறது.
109:5. ''மேலும், நான் வணங்குபவனை நீங்கள் வணங்குபவர்கள் அல்லர்''.
எவ்வித ஐயத்திற்கும், சந்தேகத்திற்கும் இடமில்லாதவாறு அத்தியாயத்தின் இரண்டாவது வாக்கியத்தையே மீண்டும் வலியுறுத்துவதற்காக இந்த வாக்கியம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. ஒன்றை மீண்டும் மீண்டும் தெரிவிப்பது, வலியுறுத்திச் சொல்வது ஆகியவற்றின் அனைத்து வகைகளையும் கையாண்டு இந்தக் கருத்து இங்கே தெரிவிக்கப்பட்டப் பிறகு எந்தவிதமான சந்தேகத்திற்கும் இடமில்லாது போய் விடுகிறது.

இறுதியாக, சந்திக்கவே முடியாத அந்தப் பிரிவு, ஒப்புவமையே இல்லாத அந்தக் கருத்து வேறுபாடு, இணையவே முடியாத அந்த இடைவெளி, கலக்கவே முடியாத அந்தப் பாகுபாடு பின்வருமாறு சுருக்கமாகத் தெரிவிக்கப்பட்டு விடுகிறது.

109:6. ''உங்களுக்கு உங்களுடைய மார்க்கம், எனக்கு என்னுடைய மார்க்கம்.''

நான் இங்கேயும் நீங்கள் அங்கேயுமாக நாம் நின்று கொண்டிருக்கிறோம். இந்த இடைவெளியைக் கடப்பதற்கு எந்த வழியுமில்லை, எந்தப் பாலமுமில்லை. முழுமையானப் பொதுவான இடைவெளி, தெளிவான நுட்பமான பாகுபாடு ''கொள்கைகளே'' நம்மிருவருக்குமிடையில் இருக்கின்றன.

அடிப்படைக் கொள்கையில் வேறுபாடு, அடிப்படைச் சிந்தனையில் வேறுபாடு, வழிப்பாதையின் இயல்பில் வேறுபாடு, சன்மார்க்கத்தின் ஏதார்த்தத்தில் வேறுபாடு இத்தனை வேறுபாடுகளுடன் எந்தப் பிரச்சனையிலும் நடுவழியில் இணைவது என்பது இயலாத ஒன்றாகும். எனவே இத்தகைய அடிப்படையானக் கருத்து வேறுபாட்டின் எல்லைக் கற்கள் தெளிவுப்படுத்துவதற்கு இது போன்ற தயவு தாட்சண்யமற்ற கொள்கைப் பிரகடனம் இன்றியமையாததாகும்.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 226
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 143)

**قُلْ اِنَّ صَلَاتِىْ وَنُسُكِىْ وَ مَحْيَاىَ وَمَمَاتِىْ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَۙ**

நீர் கூறும்: “மெய்யாக என்னுடைய தொழுகையும், என்னுடைய குர்பானியும், என்னுடைய வாழ்வும், என்னுடைய மரணமும் எல்லாமே அகிலங்களின் இறைவனாகிய அல்லாஹ்வுக்கே சொந்தமாகும்.

(குர்ஆன் : 6:162)

لَا شَرِيْكَ لَهٗ وَبِذٰلِكَ اُمِرْتُ وَاَنَا اَوَّلُ الْمُسْلِمِيْنَ

“அவனுக்கே யாதோர் இணையுமில்லை - இதைக் கொண்டே நான் ஏவப்பட்டுள்ளேன் - (அவனுக்கு) வழிப்பட்டவர்களில் - முஸ்லிம்களில் - நான் முதன்மையானவன் (என்றும் கூறும்). (குர்ஆன் : 6:163)

ஒரு முஸ்லிமின் நல்வாழ்வு எப்படியிருக்க வேண்டுமென்பதை இவ்விரு வசனங்களும் தெளிவாக எடுத்துரைக்கின்றன. அவனுடைய சர்வ செயல்களும் அல்லாஹ்விற்காகவே இருக்கும்படி அவனுடைய மனத்தைப் பக்குவம் செய்து கொள்ளுதல் அவசியமாகும். இக்கருத்தை தனது நபியின் மூலம் இறைவன் இவ்வசனங்களில் எடுத்துரைக்கிறான்.

என்னுடைய தொழுகை அல்லாஹ்விற்காகவே. ஏனெனில், அவன் எனது எஜமான்; நான் அவனுடைய அடியான். அவன் வணக்கத்திற்குரியவன். நான் அவனை வணங்க வேண்டியவன். என்னுடைய வணக்கங்களில் தலையாக இருப்பது தொழுகையாகும்.' அதனை தான் அவனுக்காகவே நிறைவேற்றுகிறேன்.

என்னுடைய பலி(குர்பானி)யும் அவனுக்காகவே. என் மீது அவன் ஹஜ்ஜு வணக்கத்தை கடமையாக்கியுள்ளான். அதன் பெயரால் பல கிரியைகளை அவன் உத்தரவுப்படி அவனுக்காகச் செய்கிறேன். அதில் முக்கியமாக இருப்பது ஆடு, மாடு, ஒட்டகம் ஏதாவதொன்றை அவன் பெயரால் அவனுக்காக நான் பலியிட (குர்பானி செய்ய) வேண்டியதாகும்.

ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது: அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுப் பெருநாளன்று இரு செம்மறியாட்டுக் கிடாய்களை குர்பானி கொடுத்தார்கள்.

அவ்விரண்டையும் அறுக்கும் போது, "வஜ்ஜஹ்த்து வஜ்ஹிய லில்லதீ ஃபதரஸ் ஸமாவாத்தி வல்அர்ள ஹனீஃபன் வ மா அன மினல் முஷ்ரிகீன். இன்ன ஸலாத்தீ வ நுசுகீ வ மஹ்யாய வ மமாத்தீ லில்லாஹி ரப்பில் ஆலமீன், லா ஷரீக்க லஹு வபி தாலிக உமிர்த்து வ அன அவ்வ லுல் முஸ்லிமீன்" என்று ஓதினார்கள்.

(அதன் பொருள்; வானங்களையும் பூமியையும் முன்மாதிரியின்றிப் படைத்த இறைவன் பக்கமே உண்மை வழி நின்று என் முகத்தை நான் திருப்பிவிட்டேன். நான் இணைவைப் போரில் ஒருவன் அல்லன், என் தொழுகை, குர்பானி வழிபாடு, என் வாழ்வு, என் மரணம் (ஆகிய அனைத்தும்) அனைத்துலகங்களையும் படைத் துப் பரிபாலிக்கின்ற அல்லாஹ்வுக்கே உரியவை அவனுக்கு இணை (துணை)இல்லை இவ்வாறு எனக்கு கட்டடையில் பட்டுள்ளது நானே முஸ்லிம்களில் முதலாமவன் ( நூல்: அபூதாவூத், இப்னுமாஜா, முஸ்னது அஹ்மது )
இணைவைத்து வணங்கிக் கொண்டிருப்போர் தங்களுடைய பிராணிகளை, தங்களின் விக்கிரகங்கள் பெயரால் பலியிடுகின்றனர். இவ்வாறு நான் ஒருபோதும் செய்ய மாட்டேன் நான் அவனையே வணங்குகிறேன் ஆகையால், அவன் பெயரால் அவனுக்காக அவன் அனுமதித்த பிராணிகளைப் பலியிடுகிறேன்.

என்னுடைய வாழ்வும், என்னுடைய மரணமும் அவனுக்காகவே. என்னுடைய ஜீவிய காலத்தில் நான் செய்யும் நன்மைகளுக்கு என்னுடைய மரணத்திற்கு பின்னர் அவனே கூலி வழங்குகிறான். அதனை நான் பெறுவதற்கு இவ்வுலகில் நான் ஜீவித்திருக்கும் பொழுது அவனே எனக்கு உதவி செய்யவேண்டியவன். ஆகவே, இரு நிலைகளிலும் நான் அவனுடைய உதவியையே பெற வேண்டியவனாக இருக்கின்றேன்.
இம்முறையில் என்னுடைய வாழ்வும் மரணமும் முன்னர் கூறப்பட்டவையும் மற்றும் என்னுடைய எல்லா காரியங்களும் அனைத்துலகங்களின் இரட்சகனான அல்லாஹ்விற்கே உரியன. அவனிடமே நான் என்னை முழுமையாக ஒப்படைத்து விட்டேன்.
அவனுக்கு அவனுடைய உள்ளமையிலும் அவனுடைய இலக்கணங்களிலும், அவனுடைய செயல்களிலும், அவனுக்காக அவனுடைய படைப்புகள் செய்ய வேண்டிய வணக்கங்களிலும் எந்த ஓர் இணையும் கிடையாது. எவரும் அவனுக்கு இவற்றில் கூட்டாளியாகவும் இல்லை.
அவன் ஏகநாயன்: வணக்கத்திற்குரியவன்; நிலையானவன்; அழிவில்லாதவன்' என்று அவனை நான் விசுவாசம் கொண்டுள்ளேன். இந்த ஏகத்துவக் கொள்கையில் மீதே நான் இருக்கவேண்டுமென்று ஏவப்பட்டுள்ளேன். அம்முறையில் அவனுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்தவர்களில் நான் முதன்மையானவனாக இருக்கின்றேன். அவன் எதனைச் செய்கிறானோ அதனை நான் பொருந்துகிறேன் " என நபியே! நீர் கூறுவீராக
இதன் மூலம் ஒவ்வொரு முஸ்லிமின் எண்ணமும், சொல்லும், செயலும் எப்படி இருக்க வேண்டுமென்பது தெளிவாக எடுத்துரைக்கப்படுகிறது. இவ்வாறு வாழ்கிற ஒருவர் அல்லாஹ்வை விட்டு வேறு ஒருவரைத் தனது இரட்சகனாக ஆக்கிக்கொள்ள முடியுமா? முடியவே முடியாது

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 227
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 144)

قُلْ اَغَيْرَ اللّٰهِ اَبْغِىْ رَبًّا وَّهُوَ رَبُّ كُلِّ شَىْءٍ وَلَا تَكْسِبُ كُلُّ نَـفْسٍ اِلَّا عَلَيْهَا وَلَا تَزِرُ وَازِرَةٌ وِّزْرَ اُخْرٰى ثُمَّ اِلٰى رَبِّكُمْ مَّرْجِعُكُمْ فَيُنَبِّئُكُمْ بِمَا كُنْـتُمْ فِيْهِ تَخْتَلِفُوْنَ
“அல்லாஹ்வை அன்றி மற்றெவரையாவது நான் இறைவனாக எடுத்துக் கொள்வேனா? எல்லாப் பொருள்களுக்கும் அவனே இறைவனாக இருக்கின்றான் - பாவம் செய்யும் ஒவ்வோர் ஆத்மாவும் தனக்கே, கேட்டைத் தேடிக்கொள்கிறது; ஓர் ஆத்மாவின் (பாவச்)சுமையை மற்றோர் ஆத்மா சுமக்காது. பின்னர், நீங்கள் (அனைவரும்) உங்கள் இறைவன் பக்கமே திரும்பிச் செல்ல வேண்டியதிருக்கிறது; அப்போது நீங்கள் பிணங்கி விவாதம் செய்து கொண்டிருந்தவை பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான்” என்று (நபியே!) நீர் கூறும். (குர்ஆன் : 6:164)
நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களுடைய எதிர்களில் வலீதுபின் முகையரா என்பவரும் ஒருவர். அவர் ஒரு தினம் முஸ்லிம்களை நோக்கி "எனது வழியை நீங்கள் பின்பற்றுங்கள். உங்களுடைய பாவச் சுமைகளை நான் சுமந்து

கொள்கிறேன்" என்று கூறினார். அச்சமயத்தில் இவ்வசனம் இறக்கப்பட்டுள்ளது. [அறிவித்தவர் ஹளரத் இப்னு அப்பாஸ் (ரலி) நூல்கள்: காஜின், அஹ்ஸன் முதலியன)
எதிரிகளின் நோக்கம் என்னவென்றால், முஸ்லிம்களையும் தாங்கள் வணங்கும் தெய்வங்களை வணங்குமாறும் அவற்றினிடமே உதவி தேடுமாறும் செய்துவிட வேண்டுமென்பதுதான்
இவ்வாறு கூறுகின்றவர்களை நோக்கி நபியே! நீர் கூறும்: அல்லால்லாதவனையா எனக்கு இரட்சகனாக நான் தேடுவேன்? அது ஒருபோதும் நடவாத காரியம் அவனேதான் எல்லாவற்றினுடைய இரட்சகன். எல்லாவற்றையும் அவனே படைத்தான். அவனே எல்லோரையும் இரட்சித்துக் காப்பாற்றி வருகிறான். அவனுக்கு எதுவும் இணையாக இல்லவே இல்லை.
ஒருவரின் குற்றத்தை வேரொருவர் சுமக்க முடியாது
அல்லாஹ்வினுடைய விரோதிகள் கூறுவது போல் பிறருடைய குற்றத்தை வாரும் சுமந்து கொள்ள முடியாது. எல்லோருடைய ஆத்மாவும் பாவம் செய்யும் பொழுது அதற்கும் பாதகமானதையேயல்லாது வேறு எதையும் அது சம்பாதித்துக் கொள்வதில்லை. அது செய்ததன் தீமைப் பலன் அதைத்தான் சாருமே தவிர பிறரைச் சாராது. அன்றியும் பாவத்தைச் சுமக்கிற ஓர் ஆத்மாவானது மற்றோர் ஆத்மாவின் பாவச் சுமையை சுமக்காது. ஒருவர் செய்த குற்றத்திற்காக இன்னொருவர் பிடிக்கப்படவுமாட்டார்.
இது பற்றி இறைவன் பிறிதோர் இடத்தில் கூறும்பொழுது, "நிராகரித்துக் கொண்டிருப்போர், விசுவாசம் கொண்டவர்களை நோக்கி. "எங்களுடைய வழியை நீங்கள் பின்பற்றுங்கள் உங்களுடைய குற்றங்களை நாங்கள் சுமந்து கொள்கிறோம்" என்று கூறுகின்றனர். ஆனால் அவர்களுடைய குற்றங்களிலிருந்து எதனையும் அவர்கள் சுமக்க முடியாது, நிச்சயமாக அவர்கள் பொய் கூறுகிறவர் என்று கூறுவது கவனிக்கத்தக்கது ( குர்ஆன் 29:12 )
ஒருவருடைய குற்றத்தை வேறொருவர் சுமந்து கொள்வதாக கூறுவதெல்லாம் வெறும் ஏமாற்று வார்த்தைகளே தவிர எவரும் அப்படி கமந்து கொள்ளவே முடியாது, ஒருவருக்காக மற்றவர் சாப்பிட்டு விட்டால் அந்த ஒருவரின் வயிறு நிறைந்து விடுவதில்லை. ஒருவருடைய வியாதிக்கு மற்றொருவர் பரிகாரம் செய்வதில்லை. இவ்வாறே ஒருவருடைய சுமையை மற்றொருவர் சுமந்து கொள்வதும் இல்லை.
பின்னர் மறுமைநாளில் உங்களுடைய இரட்சகனின் பால் நீங்கள் அனைவரும் மீள வேண்டும். இவ்வுலகில் பலதரப்பட்ட கொள்கைகளையும், மார்க்கங்களையும் கடைப்பிடித்து நீங்கள் எதில்
கருத்து வேறுபாடு கொண்டு பிளவுபட்டுக் கொண்டிருந்தீர்களோ அவைப்பற்றி அல்லாஹ் உங்களுக்கு அறிவிப்பான். அப்பொழுது நீங்கள் எதையும் மறைக்கவோ மறுக்கவோ முடியாது.

## அறிவியல் ரீதியாக அல்குர்ஆனின் விரிவாக்கம் 228
## (விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - கால்நடைகள் 145)

وَهُوَ الَّذِىْ جَعَلَـكُمْ خَلٰٓـئِفَ الْاَرْضِ وَرَفَعَ بَعْضَكُمْ فَوْقَ بَعْضٍ دَرَجٰتٍ لِّيَبْلُوَكُمْ فِىْ مَاۤ اٰتٰٮكُمْ اِنَّ رَبَّكَ سَرِيْعُ الْعِقَابِ وَاِنَّهٗ لَـغَفُوْرٌ رَّحِيْمٌ
அவன் தான் உங்களைப் பூமியில் பின்தோன்றல்களாக ஆக்கினான்; அவன் உங்களுக்குக் கொடுத்துள்ளவற்றில் உங்களைச் சோதிப்பதற்காக, உங்களில் சிலரைச் சிலரைவிடப் பதவிகளில் உயர்த்தினான் - நிச்சயமாக உம் இறைவன் தண்டிப்பதில் விரைவானவன்;. மேலும் அவன் நிச்சயமாக மன்னிப்பவன்; மிக்க கருணையுடயவன். (குர்ஆன் : 6:165)
முஹம்மது (ஸல்) அவர்களின் கூட்டத்தினரே! உங்களுக்கு முன்னரிருந்தவர்களைப் போக்கி விட்டு அவர்களுக்குப் பதிலாக அல்லாஹ் தான் உங்களை இந்த பூமியின் பிரதிநிதியாக ஆக்கினான். அவர்களுக்குப் பின்னர் நீங்கள் தோன்றியிருக்கிறீர்கள். இதில் நீங்கள் வாழ்ந்து வளப்படுத்துகிறீர்கள். உங்களுடைய நபி முஹம்மது (ஸல்) அவர்கள் இறுதித்தூதராக வந்திருக்கிறார்கள். இனிமேல் எந்த நபியும் தோன்றி ஒரு தனிக்கூட்டத்தைக் கொண்டு வரப்போவதில்லை.

இவ்வாறாக அவன் உங்களைப் படைத்து உங்களில் சிலருக்கு சிலரை விட பதவிகளை உயர்த்தினான்.படைப்பிலும், பதவியிலும், சிறப்பிலும், சக்தியிலும், பொருளாதாரத்திலும், அறிவிலும், ஆற்றலிலும் சிலரை விட சிலருக்கு உயர்வை அளித்திருக்கின்றான்.
ஒருவர் அழகாக இருக்கிறார்; ஒருவர் அழகற்றவராக இருக்கிறார்; ஒருவர் செல்வந்தராக இருக்கிறார்; ஒருவர் ஏழையாக இருக்கிறார்; ஒருவர் அறிஞராக இருக்கிறார்; ஒருவர் அறிவற்றவராக இருக்கிறார். ஒருவர் பலசாலியாக இருக்கிறார், ஒருவர் பலவீனமாக இருக்கிறார். இப்படி எத்தனையோ வகைகளில் ஏற்றத்தாழ்வுகள் மனிதருள் இருக்கின்றன.
உங்களில் ஒருவர் மற்றவரைக் கொண்டு படிப்பினைகளை பெற்று அல்லாஹ்வுக்கு, அவன் கொடுத்தவற்றில் நன்றியுடன் நடந்துகொள்கிறீர்களா அல்லவா! என்று உங்களை அவன் சோதிப்பதற்காகவே இத்தகைய நிலைகளை மனிதர்களில் ஏற்படுத்தியிருக்கின்றான்.
அவனுடைய இந்த சோதனையில் நீங்கள் வெற்றி பெற்று அவனுக்கு நன்றியுடன் நடத்து கொண்டால், அவன் மேன்மேலும் உங்களுடைய பதவிகளை இம்மை, மறுமை இரண்டிலும் உயர்த்திக் கொண்டேயிருப்பான்.
அவனுக்கு மாறுசெய்யும் பட்சத்தில் நிச்சயமாக உமது இரட்சகன் வேதனை செய்வதில் விரைவானவன் என்பதையும் மறந்து விடாதீர்கள். இம்மையிலேயே கூட அவன் ஏதாவது ஒரு வேதனையைக் கொண்டு உங்களைத் தண்டித்து விடுவான்.
ஆனால் எவர் தம்முடைய தவற்றை உணர்ந்து மன்னிப்புக் கோருகிறாரோ அவரை நிச்சயமாக அவன் மிகவும் மன்னிக்கிறவன். அவருக்குக் கிருபை செய்து காப்பாற்றுவதில் நிகரற்ற அன்புடையவன்.
பெருமானார் (ஸல்) அவர்கள் இதனை அறிவிக்கையில், "அல்லாஹ் தன்னுடைய படைப்புகளைப் படைத்த பொழுது இவ்வாறு எழுதி தனது அர்ஷில் வைத்து விட்டான்!''
"அல்லாஹ்வுடைய கிருபையானது அவனது கோபத்தை மிகைத்து விட்டது" என்று கூறியுள்ளார்கள். (அறிவித்தவர்: ஹளரத் அபூஹுரைரா (ரலி) நூல்கள்: புகாரீ, முஸ்லிம்)
''என்னுடைய கிருபையானது என்னுடைய கோபத்தை மிஞ்சி விட்டது" என்று அல்லாஹ் அறிவித்ததாக பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (அறிவித்தவர்: ஹள்ரத் அபூதர்ரு ரலியல்லாஹுத்த ஆலா அன்ஹு)
அல்லாஹ் தன்னுடைய பேரருளை நம்மனைவருக்கும் தந்தருள்வானாக. (ஆமீன்)
இவ்வத்தியாயமான ஸூரத்து அன்ஆம் தொடக்கத்தில் இறைவன் தனக்குரிய புகழைக் கொண்டு ஆரம்பித்து, இதன் முடிவில் தன்னுடைய கிருபையின் உயர்வைக் கூறி முடிப்பது இவ்வத்தியாயத்தின் தனிச் சிறப்பாகும்.

விஞ்ஞானத் தப்ஸீர் - ஸூரத்து அன்ஆம் - (கால்நடைகள்) விஞ்ஞான விரிவாக்கம் இத்துடன் நிறைவு பெற்றது.

- ரஹ்மத் ராஜகுமாரன்

